# திருவிளையாடற் புராணம்
## வசனகாவியம்.



B. இரத்தினநாயகர் ஸன்ஸ்,
நெ. 41, வெங்கட்ராமய்யர் தெரு,
மிண்ட் பில்டிங் போஸ்டு, சென்னை.

உ

திருச்சிற்றம்பலம்

திருவாலவாய் என்கிற மதுரையில்

எழுந்தருளிய கடவுளது

# திருவிளையாடற் புராணம்

(64-படங்கள் அடங்கியது)

இஃது

அருணாஜல முதலியார் அவர்களால்

பதிப்பித்து வழங்கிய பிரதிக்கிணங்க,

அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தர முதலியார் அவர்களால்

பரிசோதிக்கப்பெற்றது.

வெளியிட்டோர் :

B. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்

திருமகள் விலாச அச்சகம்,

சென்னை - 79.

இதன் விலை] 1992 [ரூ. 50—00



# முகவுரை

கடவுளருளாலே தெளிந்த நந்திதேவரிடத்திலே அன்புடனே கேட்டுத் தெளிந்து சனற்குமார முனிவர் வேதவியாச முனிவருக்குச் சொல்ல, அந்த வேதவியாச முனிவர் சூதமுனிவருக்குச் சொன்ன பதினெண் புராணங்களிலே ஒன்றாகிய காந்தபுராணத்தில் சங்கர சங்கிதையில் சொல்லப்பட்டதான திருவாலவாய் மகிமை யென்கிற வடநூலைத் தமிழாலே பாடுமென்று மதுரையிலுள்ள பெரியோர்கள் சொல்லக்கேட்டு பாடுவோமென்று, மறவாமற் கொண்ட இந்த உறுதியை அநித்தியமான பிறவியானாலும் பெரியோரருளாலே பாடி முடிப்போமென்று மனந்தேறி நகர்ச்சிறப்பு, தீர்த்தச்சிறப்பு, மூர்த்திச் சிறப்புகளாகிய மூன்றும், அந்த மூர்த்தியின் அருள் விளையாடல் அறுபத்துநான்கும், அருச்சனைக்கிரம மொன்றும், ஆக அறுபத்தெட்டு படலமும் விருத்தச்செய்யுள் வகையாக நான் பாடுகின்றேன். ஆனாலும், சோமசுந்தரக்கடவுள் பாடிய கவிக்கும் குற்றஞ் சொன்ன கல்விச்சங்கத்தார் வாழ்ந்திருந்த மதுரையிலுள்ளவர்களுக்கு என்னுடைய வெள்ளறிவினாலே சொல்லுகிற பாடல்களில் குற்றங் காண்பது அரிதன்று. ஆகிலும் நீரைப்பிரித்து அன்னமுண்கின்ற பால்போல இந்தச் சோமசுந்தரன் சரிதத்தை யொப்புக் கொள்ள வேண்டும். எப்படியென்றால், அக்கினி சாவினாலே உரிசைகண்ட தசையானது தேவர்கள் உண்ண அமுதமானாற்போலே சான்றோர் கழகத்திலே சென்று நன்மையாகித் திருவாலவாய்க் கடவுள் செவியினிடத்தும் சிறியேன் பாடின இந்தப் பாடல்களும் நுழைந்து அங்கீகரிக்கலாகும். இன்னும் கடலிலே நீரையுண்டு அந்த நீரிலுள்ள உவர்ப்பைப் போக்கி நன்னீராக்கின மேகம்போல சொல்லிலக்கணமும் பொருளிலக்கணமும் தெரிந்தோராகிய பெரியோர்கள் ஒரு நன்றியு மில்லாத என்னுடைய புன்சொற்களிலுள்ள குற்றங்களைப் போக்கித் திருவாலவாய்க் கடவுளுக்கு மகிழ்வு தோன்றச் செய்வார்கள். இன்னும் நீ இதுவும் அல்லவென்று வேதங்களும் உண்மை சொல்ல மாட்டாமல் அன்மைச் சொற்களாலே துதித்து இளைக்கும்படியான இந்தச் சோமசுந்தரக்கடவுள் திருவிளையாடல்களுக்கு என்

னுடைய புன்சொற்கள் முடிவு காட்டுமோ? காட்டாது. ஆனாலும் இந்தத் திருவிளையாடலைப் பாடுவேனென்னும் ஆசையானது என் சொல்வழி கேட்டு நில்லாமையால் நானென்ன செய்வேனென்று,

அறுகாற்பீ டத்துயர்மா லாழிகடைந் தமுதைபரம் கேற்று மாபோல
அறுகாற்பே டிசைபாடுங் கூடன்மான் மியத்தையருந் தமிழாற் பாடி
அறுகாற்பீ டுயர்முடியார் சொக்கேசர் சந்நிதியி லமரர் சூழும்
அறுகாற்பீ டத்திருந்து பரஞ்சோதி முனிவனரங் கேற்றி னானே.

ஆகையாலே, சோமசுந்தரக்கடவுள் அங்கயற்கண் அம்பிகையோடு திருக்கோயில்கொண் டெழுந்தருளியிருக்கும் இம்மதுரை க்ஷேத்திரத்திற்குப் பல புராணங்களிருப்பினும் அவற்றுள் மிகவும் சிறப்புடையது பரஞ்சோதி மஹாமுனிவர் இயற்றிய திருவிளையாடற் புராணமேயென்று பண்டிதரொவ்வொருவராலும் ஒப்புக்கொள்ளப் பட்ட விஷயமாம்.

இதனை சுத்தப்பிரதியாய் அச்சிட்டிருப்பதால் ஒவ்வொருவரும் எமது ''திருமகள்'' பதிப்பைப் பார்த்து வாங்கக் கோருகின்றனம்.

B. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்.




## 1-வது மதுரைக் காண்டம்

## 2-வது கூடற் காண்டம்



## 3-வது திருவாலவாய்க் காண்டம்

(பொருளடக்கம் முற்றிற்று.



# சிறப்புப்பாயிரம்

## நாராயணசாமிப்பிள்ளை அவர்களால் இயற்றிய

நிலைமண்டில வாசிரியப்பா

பூமகள் குளிர்நிறம் பூமகளொடு வெனத்
தேமல ரலங்கள்பூண் டேமலர் தரும்பே
ருந்திநின் றெரீஇ யுந்திநீர் நாப்பணின்
றருந்தவம் பலதா னருந்தநல் லின்பம்
புரிந்ததாற் றேவர் புரிந்தடி போற்றச்
செழித்தநா னிலத்துச் செழிய ருட்டின்கண்
உலக முண்டாம்போ துலவிய தெனமலர்க்
கடம்பு நிரம்பிய கடம்புதி தொன்றங்
கிருக்க வதின்கண் ணெழிற்சிவ பெருமான்
புரந்தடி யாரைமுப் புரந்தனை யெரித்துப்
பண்ணிய லருந்தமிழ் புண்ணிய தொண்டர்
கண்ணிய முத்திக் கண்ணியங் குறவைத்
தனிக்குங் கண்ணுத லளிக்குல முழக்கும்
கொன்றையஞ் சடையன் கொன்றுழல் கூற்றை
யுதைத்தவ ணிலிங்க வுருவுறு சோம
சுந்தர னெனப்பே சுந்தரப் பெயர்புனைந்
தந்தர வாணர்க் கந்த மிலாவருள்
செய்திள வாளைகள் செய்யிடம் விட்டம்
பரமிட மாகப் பரந்தொளிர் மீன்களை
நேர்ந்துநம் பொதுப்பெயர் சேர்ந்தன வன்றி
யின்று நரிக்குமே னின்துறை வனவோ
வென்றகங் கரித்து வன்றனி விசையால்
எதிர்வரு மசங்கண் டதிர்புலி பாய்ந்தாங்
கெழுந்துட லெஃகம் விதித்தவை யுதிர்க்க
வரம்பை கமுகின் வரம்பிலா முத்தோ
டுதிர்வன வாம்வளக் கதிர்பொர வெழுந்த
துழனியோய் விலாத கழனிசூழ் மதுரைவாய்
எட்ட வுயிர்க்கரு ளெட்டெட் டாகும்
திருவிளை யாடன் முன்செய் தவச்சரிதையைக்
காந்தத் தீசசங் கிதையிற் கழறப்
பட்டதாந் தெய்வ பாஷையைத் தென்சொலிற்
கற்றவர் வியக்கவும் மற்றவர் நயக்கவும்
உலகொழுக் கொடுசெய் யுள்வழக் கறியவும்
பத்தியின் விளக்க மித்திர னெனவும்
முத்தியை யடைவா னுத்தியிஃ தெனவும்

சித்தியின் றெளிவுஞ் சுத்தியின் விரிவும்
தத்துவப் பிரிவுஞ் சத்துவக் குணனும்
முப்பொருட் பாகுபா டிப்பரி செனவும்
பொருளின் குணமும் அருளின் வணமும்
சூரகதப் பண்பும் அரனது நண்பும்
பலவிர தத்தின் பலனு மின்னனவும்
முயக்க வுயிர்க்குப் பயக்கப் பாடல்கள்
உடலி லுயிரெனப் படலந் துட்படப்
பெருங்காப் பியமா யிருங்காப் புளதாய்
நாலா வதான நூல்யாப் பாலே
செய்தழ கொருபது மெய்பெற வமைத்துப்
புராணப் பெயர்நிறீஇப் புரா தனமான
விரசித வரங்கிற் பரதநாட் டியன்பால்
தவம்பல புரிந்து தவநனி யுயர்ந்த
பரஞ்சோதி மாமுனி பாடலை விளங்கத்
தமிழ்ப்புல வருக்குத் தகும்பொரு ளுதவிச்
செழிப்புறு வசனப் பொழிப்புரை செய்வித்
தருள் விளையாட லுருவெலாங் காண
வாங்காங் கொருபடம் பாங்கா வமைய
வோவிய ஜனக்கொண் டோவியஞ் செய்வித்
தொழூதா வெழுத்தி லியைவித் தனன்முகைக்
கஞ்ச முல்லை காவிய சோகம்
மதிகன் னல்கிளி மாவிருள் கடல்வண்
டொழுக்கு கொங்கைபல் லொண்முலைக் கண்டாள்
முகந்தோளிணை தேமொழி கூந்தல்விழி
உரோம வொழுக்குக் கொத்திலம் யாமே
என்றகங் கறுவித் தென்றலந் தேரோற்
குதவிசெய் துணையா யொத்துத் தனித்த
அற்ற நோக்கி யந்நலார் வருந்தச்
செய்யுஞ் செய்ய செய்யமர் தொண்டநன்
னுடுசேர் மயிலை நகரம்வாழ் நீதன்
திருவளர் தெய்வக் கயிலையங் கிரியிற்
குருமணி யிழைத்த மருவுபொற் சபையில்
பருமணி குயிற்றிய பதுமா தனத்தின்
திருமணக் கோலஞ் சிறந்ததே போலும்
பவளமும் பச்சையும் பதித்தது போலும்
தவளநீ றணிந்து துவளவைத் ததுபோல்
கதிர்மதி யிரண்டு மொருகண மதனில்
முகிர கிரணத்தின் மிளிர்வதே போலும்
மங்கைமா துமையுடன் வரிசைய தாகச்
சங்கரர் கொலுவாய்த் தழைத்த மண்டபத்திற்

கயிலை காவலனு மியல்புள நந்தி
செங்கையிற் பிரம்புகொண் டங்கெதிர் நிற்கக்
கின்னர ரிசைக்கக் கெருட கந்தருவர்
பன்மறை வேதர் பக்தர்கள் முனிவர்
மாலய னிந்திரன் வசுக்களுந் திக்குப்
பாலரு மொருங்கே பரவிநின் றேத்திச்
செயசெய வென்று தெண்டனிட் டிறைஞ்சக்
கயமுகன் முருகன் கைதொழு தேத்த
அந்தச் சமயத் தடிதொழு தயனு
மெந்தையே புவியுயி ரெல்லாந் தழைக்க
முந்தவெள் ளன்மை மிக்கா ளொருவனைத்
தந்தரு ளென்னத் தயாபர னேக்கி
யிருபிறப் பாள ரியற்றிய தவத்தால்
கருமுகில் வண்ணன் கலையிலொன் றவர்க்கே
வுதவுவ னதனு னுதகதீ ரத்துன்
மதியெனப் படியே வாய்ப்ப னென்றருள
அத்திறஞ் சின்னு ளகன்றபின் கங்கை
நித்தில மொதுக்கு நீள்கரை பிளக்க
மகுட முப்புரிநூல் மார்பினி லிலங்கப்
பகடுபூண் டொழுகும் பலபத் திரன்கை
அலாயுதங் கொண்டிவ் வகிலத் துதித்துக்
குலாவுதண் கங்கை குலத்தினி லுதித்த
மரபாளன் றன்னை மயன் கண்டுசீறிக்
கரவினு லெய்யக் கருமுகி லண்ணல்
அருளிய நல்வரத் தான் மரபாளன்
வெருவிலா தெழுந்து வெகுளிமேற் கொண்டு
மதங்கொடு மீறிய மயன்றனைத் துரத்தி
யதம்படத் தன்கை யலாயுதத் தடக்கிப்
பொன்னுல கேற்றிப் புரந்தரன் முன்ன
ரன்னவன் மரபுதன் னடிமைய தாகக்
கொண்டபின் மகபதி குமரியோ டளகைத்
திண்டிறற் குபேரன் செல்வியை மணந்து
வெள்ளை யானை வெண்ணிலாக் கவிகை
துள்ளு மெழுபரி சுடர்விடு புட்பகஞ்
செங்கு வளைத்தார் சிறப்பெல்லாம் பெற்று
மங்கைய ரிருவர் மருங்கில் வீற்றிருக்கப்
பூமிசை வந்துபல் புதல்வரைப் பெற்றுக்
காமிய மெல்லாங் கருதிய தியற்றப்
போதா யனர்குலப் புரோகித ராகி
வேதாக மத்தின் விதி வழுவாது
சவள முதலாஞ் சாந்திகள் கழித்துந்

தவள நீருடன் தரித்துமுப் புரிநூல்
பள்ளிக்கு வைத்துப் பலகலை நூலின்
தெள்ளிமை யனைத்தும் தேர்ந்தனர் பின்னர்
சிறுவர் தமக்குத் திருமணங் காண்பான்
நறுமலர் மார்பன் நளகூபரன்றன்
பெண்களைத் தமது புத்திரர்க் கிசைத்துக்
கண்களி கொளமணங் கண்டரு ளென்று
மாசறு குலத்து மரபாளன் கேழ்க்க
ஈசனுக் கன்ப னிசைந் தருள்செய்து
நன்மணம் புரிந்து நான்மறையவர்க்குச்
சொன்னமோ டாடை துலங்க வளித்தவர்
ஆசிகள் கூற வர னருளாலே
மாசிலாச் சுகத்தில் வாழவொருநாள்
அயன்முத லிமையோர் அந்தரத் திழிந்து
புயவலி பேசிப் பூமி பாலகநீ
நாரணன் வரத்தா னதிக்கரை யுதித்துத்
தாரணி யுயிர்க்கெலாந் தாயெனப் பெற்ருய்
கங்கைதன் மரபி லிங்கு வந்தமையால்
துங்க வேளாள தொல்குல னுனைப்
பலபத் திரன்கைப் படைக்கலம் பெற்று
நிலமுற்று நின்கை நேர்மையி னுகக்
குவலைய மெலாமுன் கொழுவளப் படுத்தித்
திவலை யெலாமுஞ் செய்வயல் நிறுத்தி
வெள்ளன் மையினல் வேந்தர் வேதியர்க்கு
உள்ளன்பு கூர வுவகையி னருத்தி
மந்தர முயர்மகா மேரு கோலதாய்
சந்திர சூரியர் தட்டதாய் நிகழ
அட்ட நாகங்களு மழகிய நாணதாய்
இட்ட தராசுக் கிணையிலா நடுநிலை
புண்ணிய பாவ மிரண்டையு நிறுக்கும்
கண்ணிய னீயே கதிக்கென வருளி
அளக்கும் படியே ஆதி சத்தியாந்
துளக்கமில் சத்தியம் தொல்படி யாகவும்
மாத்துரை கல்லே மகபதி நாடாம்
பாத்துரை சீவர்கள் பசும்பொன் னுகவும்
அதினதின் தேகமே அடல்மெழு காகவும்
சதுமறைப் படிநீ தக்கவ னுனைய்
கோக்களே தெய்வக் குலவடி வாகவும்
நீக்கமி லாத நிலைமையாற் காக்கப்
பூவை சியத்தொழில் பிரமம தாகக்
கோவை சியத்தொழில் கொள்கை யுருத்திரன்

தனவை சியத்தொழில் சாந்தமா லாயினை
மூவருந் தானுய் முயற்சியி லுயர்ந்தனை
முத்தொழில் புரியும் முயற்சியும் பெற்றே
அத்திறல் வசிய னுக்கமும் பெற்றுப்
பூமக ளுனது புண்ணியத் தளவாம்
கோமக னுனது கொழுநுதிப் பெறுவன்
தேவர் நாந் தந்த தசாங்கமோ வென்னில்
மேரு மலேயே வேங்கட மாகவும்
நச்சிய வெழுபா னென்பது நாடதாகவும்
கச்சியமே கம்பமே கடிநக ராகவுங்
செங்கு வளைத்தார் சீர்புயத் தாகவும்
பொங்கிய மும்மதம் பொழியயி ராவதம்
ஓதுவெம் பரியே யுச்சைச் சிரவம்
ஆதுலர் வரவறை கூவிய முரசமும்
ஊழி புரண்டு முறைபிற ழாதவன்
மேழி யிழைத்து விளங்குப தாகையும்
சீரர சாளும் செங்கோல் கெடாம
லேர்தனை நடத்து மெழில்தாறு கோலே
அகிலாப் புகழை யடைதிநீ யென்று
பலவித வாசிகள் பகர்ந்தவ ரேக
உந்தியி லுதித்தோ னுரைவழு வாதுதன்
மைந்தர் நூற்றுவர் வழிமர புற்றோர்
தனையரீ ராறு சகத்திர கோத்திரர்
அனையவர் தனைய ரளவிலா தவர்க்கு
இல்லறம் வழுவா தியற்றிய வண்ணம்
எல்லையில் ஞால மெங்கணும் பரவத்
தரணியைப் பகிர்ந்து தந்தன ரவற்றில்
வரநதி பாவி வளமெலாங் கொழிக்கும்
கச்சிகா ளத்தி கழுமலே வேங்கடம்
உச்சி செங்கழுநீ ருதவிய தணிகை
நீர்மலி நந்தி நிதியெலா முதவும்
வாரிதி பெண்ணை வளந்திகழ் மண்டலம்
பெற்றனர் தண்டகன் பிழைபடா தளவும்
முத்தமிழ்க் குக்கான் முனைசிர மீந்தும்
செட்டி பழிக்காச் செந்திப் புகுந்தும்
கட்டிய வாடை களைந்திர வலர்க்கு
முட்டிடா தளித்து மூழ்கிநீர் புனைந்துந்
துட்டமாங் கலியின் தூறைக்க ளைந்தும்
இல்லையென் பவர்க்கு இல்லையென் மறுக்குஞ்
சொல்லை யுரைக்கத் துணிவு பெருமை
கொல்லரா வாயகை கொடுத்துயிர் துணியும்

வல்ல ராய்ப்புகழ் வாய்மைபெற் றுயர்ந்துஞ்
சூலி முதுகிற் சுடச்சுட வன்னம்
பாலமிர் துடனே படைக்கவி சைந்தும்
கோடி கொடுத்துக் கொண்ட பீதாம்பர
வாடையைக் கீறி அரசெதிர் காட்டியுஞ்
செந்தமிழ்க் காகச் சிவிகை சுமந்து
முந்திய முனையமு தாக்கி யளித்தும்
வண்டமிழ்ப் புலவன் மனத்தயல் பறிந்தோன்
உண்டது கக்கிச் சடையிடை வைத்தும்
மார்தனி லுதைத்த மாகவி பாதம்
சீர்பெறப் பொன்னின் சிலம்புசெய் தளித்தும்
மும்மண் டலத்து பூவரச ருந்தன்
செம்பொன் மர்டஞ் சேர்ந்தினி திருக்கச்
சிறைதனில் வைத்துச் செந்தமிழ்க் கிரங்கிக்
குறைதவிர்ந் தவரவர் கூட லுக் கேகப்
பசும்பொன் னுடையா பரணமுங் கொடுத்து
விசும்புளோர் போற்ற வீற்றிருக் கின்றோர்
கற்புறு முமைசெய் கச்சியிற் றவத்தைப்
பொற்புடன் காவல் பூண்டமை யதனுல்
கச்சிகா வலரெனுங் கன்னிகா வலரெனும்
உச்சித மான வுயிர்ச்சியும் பெற்றே
அங்குறை காளி அருளுடன் மகிழ்ந்து
செங்கு வளைத்தார் சிறப்புட னளிக்க
உமையுடன் கயிலை யுற்றர னருகே
அமையுட னிருக்க ஆங்கவ ரருளால்
கடுக்கையு முருத்திர சாதன கவசம்
அடுக்குள பூபதி ஆன்கொடி யளவில்
விருதுகள் கொடுக்க வேண்டிய பெற்றுப்
பருப்பத குமரிதன் பாகனை வணங்க
அவரவர் மண்டலத் தகலுமென் றருளத்
தவறிலா விடையெனத் தரையிசை வந்து
முக்கணுன் கயிலை முதற்கண நாதன்
மிக்க தொண்டிரன் விரும்பியாண் டதனுல்
தொண்டர நாடரத் துலங்கிய சின்னுள்
தண்டகன் காக்கத் தவறிலா தவன்பேர்
கொண்டன தண்டக மண்டல மெனவும்
ஆண்டவவ் வரக்கன் ஆரியன் றனக்கே
ஈண்டிய தீமை யிழைக்க முனிந்தவர்
காஞ்சிர மலிந்த காடாச் சபிக்க
வாஞ்சைவிட் டந்நகர் வாழ்க்கையை நீங்கி
நலந்திகழ் துளுவ நாட்டைச் சென்று

கலந்தவ ருடனே காணியாண் டிருக்கச்
சுக்கிர னறைந்த சூளகன் றமையால்
தக்கநல் வேளார் தங்களைத் தேடி
ஆதண்டச் சோழ னழைக்கத் தொல்காணி
மாதண் டகத்தை வந்துகாத் தாண்டார்
அன்பொடு துளுவநா டாண்டுவந் தமையால்
இன்பொடு துளுவவே ளெனப்பெயர் பெற்றார்
ஆதண்டச் சோழ னணுகிவெம் போரில்
மோதுண்டு பின்னிட முனைந்தெதி ரிட்டுக்
குவளை மார்பினர் குறும்பறுத் தவர்கைச்
சவளவா யுதத்தைச் சமைத்துத் தோரணமாய்
வேந்தன்முன் வந்து வெற்றியை யுரைக்கப்
போந்த நல்லாடைப் புகழுட னளித்தே
அன்புடன் தழுவி ஆசனத் திருத்தி
மண்புக ழமைச்சும் மண்டலத் தலைமையும்
தோரணஞ் சமைத்த சூக்ஷியால் சவள
காரணப் பெயருங் களிப்புடன் பெற்றனர்
இத்திற முடைய மெய்த்தவ மரபில்
செங்கதிர் போல விங்குவந் துதித்தோன்
புத்தியி லூகி வெற்றியிற் குபேரன்
அண்டலர் தங்கள் மிண்ட னுத்தண்டன்
தொண்ட மண்டலத் தொல்காணி யாள்வோன்
நவமணி மதிலுஞ் சிகர கோபுரமும்
செம்பொன் மாளிகையும் பண்புட னிலங்கும்
நகர மோரேழிற் பகர்காஞ்சி யோடும்
மயிலைமா நகரு மியலுடன் படைத்தோன்
அளகையைத் தன்னிட வளவினில் வைத்தோன்
பிச்சை பூபதிதன் னிச்சையா நம்பினுன்
தவத்தினி லுதித்த சற்குல தீபன்
சின்ன முத்தியப்பன் நல்ல முத்தியப்பன்
இன்னவர் முன்வரு மேத்த முத்தியப்பன்
வெளியப் பன்முதல் மெய்ப்புதல் வர்களைத்
தெள்ளிய சிரஞ்சீவி யாகவே படைத்தோன்
சந்ததி யெனவே தராதல புகழும்
பெருமைய னிலமலைப் பெற்றிய ஞெளிர்பிர
மோத சந்த்ரோதயம் புகன்றவற் கொப்போன்
சங்கமால் கொளவுயர் சங்கப் பொருடந்
தாதரிப் போனர னன்பனென் றவன்போன்
மதனுட றவிர்த்து மகிழ்வுற வைத்தோன்
கஞ்சத் திருவரைக் கைக்கொண் டொருவரைப்
பாரா வமலன் பகைகலி சிறிய

உலோப மிவைதன் னெ்னல ரெனவொறுத்
தீகை யொழுக்க மிரங்குத ருங்கல்
நலமிவை யதிக நண்பராக் கொண்டோன்
துன்பொடு வந்தோ ரின்பொடு மேகத்
தன்போ லிலரெனத் தானம் வழங்குவண்
கையன் மெய்யன் செய்யன் றுய்யன்
சிவனடி யார்வரிற் சேவித் தீரெட்
டுபசாரஞ் செய் துளமகிழ் விப்போன்
இசைத்திரு முகமெண் டிசையவ ரறிந்து
துண்ணென் விடுத்துச் சுகக்கட லாழ்ந்தோன்
என்னுரைக் கடங்கா மன்னுறு புகழோன்
வைத்திய நாத வள்ளல் மகிழும்
பௌத்திர னெழிற்சுப்ப ராயவேள் பயந்த
புத்திர னருணா சலபுரந் தானே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.

---

( ) இப்பிறைக்குள் அடங்கியவை திருமயிலைப் பள்ளுவிலிருந்து சேர்க்கப்பட்டது.

# திருவிளையாடற் புராணம்

## காப்பு

கலி விருத்தம்

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

உரை ; சித்தி விநாயகக் கடவுளுடைய சிவந்த பொன்போலும் அரிய திருவடிகள், சத்தியாகியும் சிவமாகியும், ஒப்பில்லாத பர முத்தியுமாகிய பரமசிவத்தை வாழ்த்த, சுத்தியாகிய சொல்லையும் பொருளையும் அருளா நிற்கும்.

## பாயிரம்

### வாழ்த்து

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக வரங்க ளின்ப
நல்குக வுயிர்கட்கெல்லா நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க.

உரை : வேத விதிப்படி செய்துவருகின்ற யாகம் குறைவில்லாமல் நடந்துவரக் கடவது. (அவற்ருல்) காலந்தப்பாமல் மேகமானது நீர் சுரந்து மழைபொழியக் கடவது. (நீரருமையால்) உலகமெங்கும் வளங்கள் பெருகக்கடவன. (அவ்வளங்களால்) தருமங்கள் விர்த்தியடையக் கடவன. (அத்தருமங்களால்) உயிர்களுக்கெல்லாம் இன்பம் உண்டாகக்கடவது. (இப்பேற்ருல்) நான்கு வேதங்களின் சம்பந்தத்தையுடைய சைவ சமயமானது எல்லாச் சமயங்களுக்கு மேலானதாக நிலைபெற்றிருக்கக் கடவது. (இவை மாறுபடாமல்) நடத்தவல்ல அரசனது செங்கோல் நீடூழி வாழ்கக்கடவது.

### நூற்பயன்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

திங்களணி திருவால வாயெம் மண்ண
நிருவிளையாட் டிவையன்பு செய்து கேட்போர்
சங்கநிதி பதுமநிதிச் செல்வ மோங்கித்
தகைமைதரு மகப்பெறுவர் பகையை வெல்வர்
மங்கலநன் மணம்பெறுவர் பிணிவந் தெய்தார்
வாழ்நாளு நனிபெறுவர் வானு டெய்திப்
புங்கவரா யங்குள்ள போக மூழ்கிப்
புண்ணியராய்ச் சிவனடிக்கீழ் நண்ணி வாழ்வார்,

உரை : சந்திரனை அணிந்த திருவாலவாயில் வீற்றிருக்கும் எம்மிறைவனாகிய சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய திருவிளையாடல்களை அன்புடன் வழிபட்டுக் கேட்பவர்கள் சங்க நிதியையும் பதும நிதியையு முடைய குபேர சம்பத்தைப் பெற்று புகழாலோங்கி விவேகமுள்ள புத்திரர்களையும் பெறுவார்கள். பகையை வெல்வார்கள். மங்கலமாகிய விவாகஞ்செய்து கொள்ளப் பெறுவார்கள். வியாதி வந்தடையப்பெறார்கள். பூரணாயுள் உடையவர்களாவார்கள். (இவ்வாறு இம்மைப் பயனாகிய போகங்களை அனுபவித்து) அதற்கு மேல் சுவர்க்க லோகத்திற்போய்ச் சேர்ந்து தேவர்களாகி அவ்விடத்திலுள்ள போகங்களை அனுபவித்துச் சிவபுண்ணியமும் உள்ளவர்களாகிப் பரமசிவனுடைய திருவடி நிழலில் பொருந்திப் பேரின்பத்தை அனுபவித்துக்கொண்டு நீடூழியாக வாழ்வார்கள்.

———

## கடவுள் வணக்கம்

### சிவபெருமான்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

வென்றுளே புலன்களைந்தார் மெய்யுணருள்ளந் தோறுஞ்
சென்றுளே யமுத மூற்றுந் திருவருள் போற்றி யேற்றுக்
குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி
மன்றுளே மாறி யாடு மறைச் சிலம்படிகள் போற்றி.

உரை : உட்புலன்களைந்தையும் வென்று நீக்கினவர்களுடைய உண்மையை யுணர்ந்த உள்ளந்தோறுஞ் சென்று அவர்கள் அறிவினில் பேரின்பமாகிய அமுதத்தைச் சொரிகின்ற திருவருளுக்கு வந்தனம். வெள்ளிமலைபோன்ற ரிஷபாரூடராய் வந்து தரிசனங் கொடுத் தருளுகிற திருவருட் கோலத்திற்கு வந்தனம். வெள்ளியம்பலத்தில் மாறி யாடிய வேதமாகிய சிலம்புகளை யணிந்த திருவடிகளுக்கு வந்தனம்.

### சிவசத்தி

வேறு

கரும்புமுதல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி
யுத்தரியத் தொடித்தோள் போற்றி
கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி
இரும்புமனங் குழைத்தென்னை யெடுத்தாண்ட
வங்கயற்க ணெம்பி ராட்டி
அரும்புமிள நகைபோற்றி யாரண நூ
புரஞ்சிலம்பு மடிகள் போற்றி.

உரை : இரும்பைப்போல் கடினமாகிய மனதைக் குழையச் செய்து, (ஆணவத்தி லழுந்திக் கிடந்த) அடியேனை எடுத்தாண்டு கொண்ட எம்பிராட்டியாகிய மீனுட்சி யம்மையாருடைய வண்டுகள் இசை பாடுகின்ற மனந் தங்கிய பூமாலை யணிந்த அழகிய கூந்தலுக்கு வந்தனம். உத்தரீயமும் தொடிகளும் அணியப்பட்ட தோள்களுக்கு வந்தனம். வில்லைப்போல் வளைவா யிருக்கும் புருவங்களுக்கு வந்தனம். திருஞான சம்பந்த சுவாமிகளுக்கு ஞானப்பால் சுரந்தருளிய பொற்கலசம் போன்ற திருத்தனங்கட்கு வந்தனம். பிரகாசிக்கின்ற புன்னகைக்கு வந்தனம். வேதமாகிய நூபுரங்கள் ஒளித்துக் கொண்டிருக்கும் திருவடிகளுக்கு வந்தனம்.

### பரமசிவம்

கலி நிலைத்துறை

பூவண்ணம் பூவின் மணம்போலமெய்ப் போதவின்ப
மாவண்ண மெய்க்கொண் டவன்றன்வலி யானை தாங்கி
மூவண்ண றன்சந்நி திமுத்தொழில் செய்ய வாளர்
மேவண்ண லன்னுன் விளையாட்டின் வினையை வெல்வாம்.

உரை : பூவினிறமும் பூவின் வாசமு மபேதமாய் நிற்றல்போலச் சச்சிதானந்தமே திருமேனியாக் கொண்ட சிவபிரானுடைய சத்தியின் ஏவலைப் பெற்றுப் பிரம்மா விஷ்ணு ருத்திரர்களாகிய திருமூர்த்திகளும் தம் சந்நிதியில் சிருஷ்டி திதி சங்கார மென்னும் முத்தொழில்களையுஞ் செய்ய அசைவற்றிருக்கும் கடவுள் அந்தக் கடவுளுடைய திருவிளையாட்டினுல் எமது வினையைக் களைவாம்.

### சிற்சத்தி

இதுவுமது

அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லா
அண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறியதாயி னுனும்
அண்டங்க ளுள்ளும் புறம்புங் கரியாகி னுனும்
அண்டங்க ளீன்ற டுணையென்ப ரறிந்த நல்லோர்.

உரை : அண்டங்க ளெல்லாம் அணுத்தன்மையை யடையும்படி பெரிதானவனும் அணுக்களெல்லாம் அண்டங்களின் தன்மையை அடையும்படி சிறிதானவனும் அவ் வண்டங்களினுள்ளும் புறம்புஞ் சாக்ஷியாக நின்றவனும், அண்டங்களை யெல்லாம் பெற்ற உமையாளுடைய கணவனென்று வேதாகமங்களை யுணர்ந்த பெரியோர்கள் சொல்லுவார்கள்.

### சொக்கலிங்கமூர்த்தி

கலி விருத்தம்

பூவி னுயகன் பூமக னுயகன்
காவி னுயக னுதிக் கடவுளர்க்
காவி நாயகன் னங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி யேத்துவாம்.

உரை : தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமதேவனுக்கும், லட்சுமி நாயகனாகிய மகாவிஷ்ணுவுக்கும், கற்பகச் சோலை சூழ்ந்த பொன்னுலகத்துக் கிறைவனாகிய தேவேந்திரனுக்கும் இவர்களே யன்றி மற்றுமுள்ள தேவர்களுக்கும் உயிர்போ லிரா நின்ற முதற்கடவுளாயும், மீனாட்சியம்மையின் நாயகராகியும் விளங்கா நின்ற சொக்கநாத சுவாமியின் சிவந்த நிறமுள்ள திருவடிகளைத் தோத்திரஞ் செய்வாம்.

### அங்கையற்கண்ணம்மை

அறுசீரடி யாசிரிய விருத்தம்

பங்கயற்க ணரியபரம் பரனுருவே தனக்குரிய படிவ மாகி
யிங்கயற்க ணகனுலக வெண்ணிறந்த சராசரங்க ளின்றுந் தாழாக்
கொங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண் டியன்மகள்போற் கோலங் கொண்ட
அங்கயற்க ணம்மையிரு பாதப்போ தெப்போது மகத்துள் வைப்பாம்.

உரை : பிரமதேவனும் காணுதற்கரிய பரமசிவனுடைய திருமேனியே தனக்குரிய திருமேனியாகக் கொண்டு, இடமகன்றதாகிய உலகங்களையும், அளவற்றவிண்ணுலகங்களையும் ஆன்மகோடிகளையும் தனக்குப் புறம்பாகத் தோன்றும்படி யீன்றும், தாழ்வுபடாத கோங்கரும்பை யொத்த திருத்தனங்களையும், இருள்போலக் கருமை நிறம் பெற்று மலர்சூடிய அளகபாரத்தையுமுடைய குமரியாகிய மலயத்துவச பாண்டியராசன் புத்திரியாகத் திருமேனி கொண்டுவந்த மீனாட்சியம்மையின் செந்தாமரை மலர் போன்ற இரண்டு திருவடிகளையும் எக்காலத்தும் மனதிற் கருதுவாம்.

### சபாநாயகர்

உண்மையறி வானந்த வுருவாகி யெவ்வுயிர்க்கு முயிராய் நீரின்
றண்மையனல் வெம்மையெனத் தனையகலா திருந்து சராசரங்க ளீன்ற
பெண்மையுரு வாகியதன் னானந்தக் கொடிமகிழ்ச்சி பெருக யார்க்கும்
அண்மையதா யம்பலத்து ளாடியருள் பேரொளியை யகத்துள் வைப்பாம்.

உரை : சச்சிதானந்தமே திருமேனியாகக் கொண்டு எல்லா வுயிர்களுக்கு முயிராகி நீரினிடத்திலிருக்கும் குளிர்ச்சியைப் போலவும் தீயினிடத்திருக்கும் வெப்பத்தைப் போலவும் தம்மை விட்டு நீங்காமலிருந்து சராசரமாகிய உயிர்களை யெல்லாம் பெற்ற பெண் வடிவமாகிய தம்முடைய ஆனந்தக்கொடி யென்னும் சிவகாமியம்மைக்கு மகிழ்ச்சி பெருகத்தக்கதாக யாவருக்கும் எளிதாய்ப் பொன்னம்பலத்தில் நடனஞ் செய்தருளும் சோதி சொரூபமுள்ள நடேசமூர்த்தியை எமது சித்தத்தில் வைத்துச் சிந்திப்பாம்.

### சோமசுந்தரக் கடவுள்

சடைமறைத்து கதிர்மகுடந் தரித்துநறுங் கொன்றையந்தார் தணந்துவேப்பந்
தொடைமுடித்து விடநாகக் கலனகற்றி மாணிக்கச் சுடர்ப்பூ ணேந்தி
விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதிமரு மகனாகி மீன நோக்கின்
மடவரலை மணந்துலக முழுதாண்ட சுந்தரனை வணக்கஞ் செய்வாம்.

உரை : சடைமுடியை மறைத்து ஒளிநிறைந்த ரத்தின மகுடந் தரித்து, வாசனைதங்கிய கொன்றைப் பூமாலையை நீக்கி வேப்பம் பூமாலையை அணிந்து, விஷத்தையுடைய சர்ப்பாபரணங்களை களைந்து பிரகாசம் பொருந்திய ரத்தினபரணங்களைப்பூண்டு, ரிஷபக்கொடியை விட்டு மீனக்கொடியை யேந்தி, மீனுட்சியாகிய தடாதகைப் பிராட்டி யாரைத் திருக்கல்யாணஞ் செய்தருளி மலயத்துவச பாண்டியராஜன் மருமகனுகிச் சௌந்தரப்பாண்டிய னென்னும் பெயரும் பெற்று உலகங்களை யெல்லாம் ஆண்ட சோமசுந்தரக் கடவுளை வணங்குவாம்.

### தடாதகைப்பிராட்டியார்

*செழியர்பிரான் றிருமகளாய்க் கலைபயின்று முடிபுனைந்து செங்கோலோச்சி*
*முழுதுலகுஞ் சயங்கொண்டு நிறைகொண்டு நந்திகண முனைப்போர்சாய்த்துத்*
*தொழுகணவற் கணிமணமாலிகைசூட்டித் தன்மகுடஞ் சூட்டிசெல்வந்*
*தழைவுறுதன் னரசளித்த பெண்ணரசி யடிக்கமலந் தலைமேல் வைப்பாம்.*

உரை : பாண்டியர்குலத் தலைவனுகிய மலையத்துவச பாண்டியன் புத்திரியாய்த் திருவவதாரஞ் செய்து, வேதாகம முதலாகிய கலைகளை யெல்லாம் ஓதியுணர்ந்து, மகுடாபிஷேகஞ் செய்யப் பெற்றுச் செங்கோல் செலுத்தி உலகங்களை யெல்லாம் வென்று திறைவாங்கித் திருக் கயிலைக்குச் சென்று நந்திகணங்களைப் போரில் ஓடச்செய்து ஜெயம் பெற்றுப் பிரம விஷ்ணுக்கள் முதலாகிய தேவர்களெல்லாந் தொழுகின்ற தன் கணவனுகிய கயிலாசபதிக்கு மணமாலை தரித்து தன் மகுடத்தையுஞ் சூட்டிச் செல்வமிகுந்த தன் அரசாட்சியையுங் கொடுத்த பெண்ணரசியாகிய தடாதகைப்பிராட்டியின் திருவடித் தாமரை எம்முடைய சிரசின்மேல் தரித்துக் கொள்வாம்.

### வெள்ளியம்பலவாணர்

*பொருமாறிற் கிளர்த்தடந்தோ ளொருமாறன் மனங்கிடந்த புழுக்க மாறி*
*வருமாறிற் கண்ணருவி மாருது களிப்படைய மண்ணும் விண்ணும்*
*உருமாறிப் பவக்கடல்வீழ்ந் தூசலெனத் தடுமாறி யுழலு மாக்கள்*
*கருமாறிக் கதியடையக் காண்மாறி நடித்தவனைக் கருத்துள் வைப்பாம்.*

உரை : போர்செய்யு முறைமையில் கிளர்ச்சி யுறுகின்ற தோள் களையுடைய வொப்பில்லாத இராஜசேகர பாண்டியன் மனதிலுண்டாகிய வருத்தம் நீங்கவும், வருகின்ற ஆற்றுவெள்ளம்போல அம் மன்னவன் கண்ணிலிருந்து ஆனந்தவெள்ளம் மாருமல் பெருகிக் களிப்படையவும், மேலேறுவதும் கீழிறங்குவதுமாகிய ஊசலைப்போல் தேவரூபங் கொண்டு சுவர்க்க முதலாகிய பதங்களிற் செல்வதும், பின்னும் இவ்வுலகத்தே மனித உருவ முதலாகிய உருவங் கொண்டு வருவதுமாகிய பிறவிக் கடலிற் ஆழ்ந்து மனந்தடுமாறி உழலுகின்ற மனிதர்கள் அப்பிறவியை நீங்கி மோக்ஷ மடையவும், கால்மாறியாடிய சோமசுந்தரக் கடவுளை இருதயத்தில் கருதுவாம்.

## த க்ஷி ண மூ ர் த் தி

*கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி*
*வல்லார்க ளுல்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய்*
*எல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச்*
*சொல்லாமற் சொன்னவரை நினையாம நினைந்துபவத் தொடக்கைவெல்வாம்.*

**உரை :** (வேதவுருவாகிய) கல்லால மரத்தின் நிழலில் வீற்றிருந்து நான்கு வேதங்களும் ஆறங்க முதலாக எல்லாக்கலைகளையும் கற்ற கேள்வி வல்லவர்களாகிய (சனகர், சனந்தன , சனாதனர், சனற் குமாரர்) என்னும் முனிவர்களுக்கு வாக்குக்கெட்டாத பரிபூரணமாய் வேதங்களுக் கெட்டாததாய் எல்லாப்பொருள்களுமாய் அப்பொருள்க ளல்லாததுமாய் இருந்த உண்மையை அது நிர்விகாரமா யிருந்தது போலத் தாமும் அசைவறவிருந்து காட்டி வாக்கினாற் சொல்லாமல் குறிப்பாற் சொல்லிய தக்ஷிணாமூர்த்தியைத் தற்போத வழியிற் சிந்தி யாமல் திருவருள் வழிநின்று சிந்தித்துப் பிறவித் தொடர்ச்சியை வெல்லுவாம்.

## சித்தி விநாயகர்

*உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுறுதி யாகத்*
*தள்ளரிய வன்பென்னுந் தொடர்பூட்டி யிடைப்படுத்தித் தறுகட் பாசக்*
*கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணை யென்னும்*
*வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு வினைக டீர்ப்பாம்.*

**உரை :** எமது உள்ளமாகிய கூடத்தில் மனவுறுதியாகிய கட்டுத் தறியை நாட்டித் தள்ளக்கூடாத அன்பென்னுஞ் சங்கிலியை உறுதி யாகப்பூட்டி அதனிடத்தில்கட்டிக் கொடிய ஆணவமல சம்பந்தமான கள்ளவினையை யுடைய சீவபோதமாகிய கவளங் கொடுக்க அதனைக் களிப்புடன் உண்டு கிருபையாகிய மதவெள்ளத்தைப் பொழிகின்ற யானையாகிய சித்தி விநாயகரைத் தியானித்து வருகின்ற வினைகளை யொழிப்பாம்.

## சு ப் பி ர ம ணி ய ர்

*கரங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப் பெருங்கடலுங் கலங்கக் கார்வந்*
*துறங்குசிகைப் பொருப்புஞ்சூரப் பொருப்பும் பிளப்பமறை யுணர்ந்தோராற்*
*அறங்குலவு மகத்தழலு மவுணமட வார்வயிற்றி னழலுமுள [றும்*
*மறங்குலவு வேலெடுத்த குமரவேள் சேவடிகள் வணக்கஞ் செய்வாம்.*

**உரை :** ஒலிக்காநின்ற அலைகளையுடைய கரிய கடலும் கருமை நிறமுள்ள அவுணராகிய பெரியகடலுங் கலங்கவும், மேகம் வந்துறங் கும்படியான சிகரத்தை யுடைய கிரவுஞ்ச மலையும் சூரனுடைய மார் பாகிய மலையும் பிளக்கவும், வேதங்களை யுணர்ந்தோராகிய பிராமணர் கள் செய்கின்ற வேள்வித் தீயும், அவுணமாதர்கள் வயிற்றிலுண் டாகும் தீயும் சிகைவிட்டெரியவும், வீரமே விளக்கிக்கொண் டிருக்கும்

ஞானசக்தியாகிய வேலாயுதத்தை திருக்கரத்தில் எடுத்தருளிய சுப்பிரமணியக் கடவுளின் சிவந்த பாதங்களைப் பணிவாம்.

## சரஸ்வதி

பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்துப்
    பத்திபடப் பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்து சுவையொழுகி
    யணிபெற முக்கண் மூர்த்திதாளிற்
றொழுதகன்ற வன்பெனுநார் தொடுத்தவங்கள்
    சூட்டவரிச் கரும்புந் தேனுங்
கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தா
    னடிமுடிமேற் கொண்டு வாழ்வாம்.

உரை: குற்றம் நீங்கிய பெயர்ச்சொல் - வினைச்சொல் - இடைச்சொல் - உரிச்சொல் என்னும் நால்வகைச் சொற்களாகிய மலர்களை யெடுத்துப் பத்தியுறப் பரப்பி எட்டுத் திசைகளிலுஞ் சென்று மணம் வீசி மதுர மொழுகி அலங்காரம் பொருந்த அகன்ற அன்பாகிய நாரினுல் மாலையாகத்தொடுத்துத் திரிநேத்திரங்களையுடைய சோமசுந்தரக் கடவுள் பாதங்களில் பணிந்து தரிப்பதற்கு, கோடுகள் பொருந்திய சுரும்பென்னும் வண்டுகளும் தேனென்ற வண்டுகளும் குடைதலால் மலர்ந்த இதழ்களையுடைய வெண்டாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் சரஸ்வதியின் திருவடிகளை எமது முடிமேல் சூட்டிக்கொண்டு வாழ்வாம்.

## திருநந்திதேவர்

### வேறு

வந்திறை யடியிற் றாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றாக்கி
அந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கும்
நந்தியம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்.

உரை: (கயிலங்கிரியில் வந்து) பரமசிவனுடைய திருவடிகளில் வணங்குகின்ற தேவர்கள் (நெருக்கங் கொள்ளாத வண்ணம்) அவர்களுடைய கிரீடங்களில் பந்திபந்தியாகப் பதித்திரா நின்ற ரத்தினங்கள் சிந்தும்படி தம்முடைய கையிலிருக்கும் பிரம்பினுல் அடித்து அந்திப் பொழுதிலும் பகற் பொழுதிலும் அடியார்கள் திருவலகிடும்படியான குப்பையாக்குகின்ற எம்முடைய பெருமானுகிய திருநந்திதேவருடைய திருவடித் தாமரை மலர்களை முடிமேல் தரித்துக் கொள்வோம்.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர்

கடியவிழ் கடுக்கை வேணித் தாதைபோற் கனற்கண் மீனக்
கொடியனை வேல நோக்கிக் குரையிரந் தனையான் கற்பிற்
பிடியன நடையாள் வேண்டப் பின்னுயி ரளித்துக் காத்த
முடியணி மாடக் காழி முனிவனை வணக்கஞ் செய்வாம்.

உரை: வாசனை மிகுந்த கொன்றைப் பூமாலை யணிந்த சடைமுடியையுடைய தமது பிதாவாகிய பரமசிவன் மீனக்கொடியோனாகிய மன்மதன் எரியும்படி தீக்கண்ணாற் பார்த்துப் பின்பு அவன் மனைவியாகிய ரதிதேவி வந்து வணங்கி முறையிட்டு வேண்ட, அந்த மன்மதனுக்கு உயிர் கொடுத்து ரக்ஷித்தருளியது போலத் தாம் எழுந்தருளியிருந்த திருமடத்தில் சமணர்களிட்ட தீயை யேவி அந்தத் தீயாகிய சுரவெப்பத்தில் மீனக்கொடியையுடைய பாண்டியன் வருந்தச் செய்து அதன் பின்பு அவன் மனைவியாகிய கற்புள்ள பெண் யானையி னடை போன்ற நடையுடைய மங்கையர்க்கரசியார் வந்து வணங்கிக் குறையிரப்பத் (திருவுள மிரங்கித் திருநீற்றுப் பதிகமோதிப் பாண்டியன் மேல் விபூதியைத் தடவி வெப்பநோயை நீக்கி) அவனுயிரைக் கொடுத்துக்காத்த சிகரங்கள் பொருந்திய மாளிகைகள் நெருங்கிய சீர்காழியில் திருவவதாரஞ் செய்த ஆளுடைய பிள்ளையாரை வணங்குவோம்.

### திருநாவுக்கரசு நாயனார்

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா லஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறு வஞ்சக ரிட்ட நீல
நிலப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனும் கடலு நீந்த பிரானடி வணக்கஞ் செய்வாம்.

உரை: பார்வதி தேவியை இடப்பாகத்தில் வைத்தருளிய பரமசிவனுடைய பஞ்சாக்ஷரப் புணையினால், மிகுந்த பாபச்செயல் மாறாத சமணர்கள் கல்லிற் கட்டியிட்ட பெரிய கருங்கடலையும், யாவர்க்கும் நீந்துதற்கரிய எழுபிறப்பாகிய கடலையும் எளிதில் நீந்திய ஆளுடைய வரசுகள் திருவடிகளை வணங்குவோம்.

### சுந்தரமூர்த்தி நாயனார்

அரவக லல்கு லார்பா லாசைநீர்த் தவர்க்கே வீடு
தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பானாள்
இரவினிற் றூது கொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம்.

உரை: மாதர்களிச்சையை நீக்கினவர்களுக்கே மோக்ஷந் தருவோமென்று அளவில்லாத வேதங்களில் சொல்லிய பரமசிவனைப் பரவை நாச்சியாருடைய ஊடலைத் தீர்க்கும் பொருட்டுப் பேய்களும் நித்திரை செய்யத்தக்க அர்த்தராத்திரியில் தூது போகும்படி அனுப்பிய ஆளுடைய நம்பிகளது இரண்டு திருவடிகளையும் எம்முடைய சிரசின் மேல் தரித்துக் கொள்வோம்.

### மாணிக்கவாசக சுவாமிகள்

எழுதரு மறைக டேறா விறைவனை யெல்லிற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமே லேறத் துளும்புகண் ணீருண் மூழ்கி
யழுதடி யடைந்த வன்ப ரடியவர்க் கடிமை செய்வோம்.

உரை: எழுதற்கரிய வேதங்களால் இத்தன்மையனெனத் தெரியப்படாத பரமசிவனைப் பகற்பொழுதிலும் இராப்பொழுதிலு மாகிய ஆறுகாலத்தும் நாள்தோறும் இடைவிடாது பூசைசெய்து தொழுத கைகள் தலையின் மேலேற வைத்துக்கொண்டு (துதி செய்து) அன்பினால் பெருகாநின்ற ஆனந்தக்கண்ணீருள் மூழ்கி ஆற்றுமை யால் அழுது திருவடி நிழலில் சேர்ந்த அன்பராகிய திருவாதவூரரின் அடியவர்களுக்கு யாம் அடிமை செய்வாம்.

சண்டேசநாயனர் முதலிய திருத்தொண்டர்கள்

வேறு

தந்தைதா ளொடும்பிறவித் தாளெறிந்து நிருத்தரிரு தாளைச் சேர்ந்த
மைந்தர்தாள் வேதநெறி சைவநெறி பத்திநெறி வழாது வாய்மெய்
சிந்தைதா னரனடிக்கே செலுத்தினராய்ச் சிவானுபவச் செல்வராகிப்
பந்தமாந் தொடக்கறுத்த திருத்தொண்டர் தாள்பரவிப் பணிதல் செய்வாம்

உரை: தம்முடைய பிதாவின் தாள்களுடன் பிறவித்தாளையும் வெட்டித்தறித்து நடனமூர்த்தியாகிய பரமசிவனுடைய திருவடிகளைச் சேர்ந்த சண்டேச நாயனருடைய பாதங்களையும், வைதிகநெறியிலும் சைவநெறியிலும் பத்தி மார்க்கத்திலும் மாறுபடாமல் நடந்து மன வாக்குக் காயங்களின் செய்கைகளாகிய சிந்தித்தல், துதிசெய்தல், பூமாலைத் தொடுத்தல் முதலாகிய தொண்டுகளைப் பரமசிவனது திரு வடிக்கே செலுத்திச் சிவானுபவம் பெற்றிருக்கும் மற்ற அடியார் பாதங்களையும் பணிந்து போற்றி செய்வோம்.

முதனூல் வழி

வேறு

அண்ணல்பாற் றெளிந்த நந்தி யடிகள்பாற் சனற்கு மாரன்
உண்ணிறை யன்பி னுய்ந்து வியாதனுக் குணர்த்த வந்தப்
புண்ணிய முனிவன் சூதற் கோதிய புராண மூவா
றெண்ணிய விவற்றுட் காந்தத் தீசசங் கிதையின் மாதோ:

உரை: பரமசிவனிடத்தில் உபதேசம் பெற்றுக்கொண்ட நந்தி தேவரிடத்தில் சனற்குமார முனிவர் உள்ளத்தில் நிறைந்த அன்பினால் உபதேசக் கிரமமாக ஓதியுணர்ந்து வியாசமுனிவருக்குப் போதிக்க, அந்தப் புண்ணிய சொரூபராகிய வியாசமுனிவரானவர் சூதமுனிவ ருக்கு அருளிச்செய்த புராணங்கள் பதினெட்டாம். எண்ணப்பட்ட அந்தப் பதினெண் புராணங்களில் ஒன்ருகிய காந்தத்தில் சொல்லப் பட்ட சங்கர சங்கிதையில்,

நூல் செய்ததற்குக் காரணம்

அறைந்திடப் பட்ட தாகு மாலவாய்ப் புகழ்மை யந்தச்
சிறந்திடும் வடநூ றன்னைத் தென்சொலாற் செய்தி யென்றிங்
குறைந்திடும் பெரியோர் கூறக் கடைப்பிடித் துறு யிந்தப்
பிறந்திடும் பிறப்பி னெய்தப் பெருதுமென் றுள்ளந் தேறு.

உரை : திருவாலவாய் புகழ்ச்சி சொல்லப்பட்டதான அந்தச் சிறப்புற்றதாகிய சமஸ்கிருத புராணத்தைத் தமிழ்ப் புராணமாகச் செய்யென்று அந்த ஸ்தலத்தில் வாசமாயிருக்கும் பெரியோர்கள் சொல்ல, அவ் வார்த்தையை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு ஆன்மலாபத்தை யிந்தப் பிறப்பில் அடையப் பெறலாமென்று மனந் தெளிந்து.

### மொழி பெயர்த்த விதம்

திருநகர் தீர்த்த மூர்த்திச் சிறந்தமூன் றந்த மூர்த்தி
அருள்விளை யாட லெட்டெட் டருச்சனை வினையொன்றாக
வரன்முறை யறுபத் தெட்டா மற்றவை படலமாக
விரிமுறை விருத்தச் செய்யுள் வகைமையால் விளம்ப லுற்றேன்.

உரை : தலவிசேஷம், தீர்த்தவிசேஷம், மூர்த்தி விசேஷம் என்பன மூன்று. அந்த மூர்த்தியானவர் கிருபையினால் செய்தருளிய திருவிளையாடல் அறுபத்துநான்கு. அருச்சனை வினையொன்று ஆக அறுபத்தெட்டு வரன்முறையாம். அந்த வரன் முறைமைப்படி அறுபத்தெட்டுப் படலமாக அமைத்து விரிமுறையாக விருத்தமாகிய செய்யுட் பேதங்களால் சொல்லத் தொடங்கினேன்.

### அவையடக்கம்

நாயகன் கவிக்குக் குற்ற நாட்டிய கழகமொந்தர்
மேயவத் தவத்தி னோர்க்கென் வெள்ளறி வுரையிற் குற்றம்
ஆயுமா றரிதன் றேனு நீர்பிரித் தன்ன முண்ணுந்
தூயதிம் பால்போற் கொள்க சுந்தரன் சரிதந் தன்னை

உரை : சோமசுந்தரக் கடவுள் திருவாய்மலர்ந்தருளிய "கொங்குதேர் வாழ்க்கையஞ் சிறைத்தும்பி" என்ற திருப்பாசுரத்துக்குக் குற்றங் கூறிய சங்கப் புலவர்கள் பொருந்திய அம்மதுரை நகரிலிருப்பவர்க்கு என்னுடைய வெள்ளறிவினால் சொல்லும் சொற்களில் குற்றம் ஆய்வது அரிதல்ல வானாலும் (நீரையும் பாலையும் ஒன்றாகக் கலந்து வைத்தால்) அன்னப் பக்ஷியானது நீரைப் பிரித்துவிட்டு பாலை மாத்திரம் உண்பதுபோல் (குற்றங்களை நீக்கிவிட்டுச் சோமசுந்தரக் கடவுள் சரித்திரமாகிய திருவிளையாடலை மாத்திரம் ஏற்றுக்கொள்ளக் கடவார்கள்.

### கலிநிலைத்துறை

சுவைக்கொ முந்தழ லுச்சுவை கண்டவூ னிமையோர்
சுவைக்க வின்னமு தாயின துளக்கமில் சான்றோர்
அவைக்க ளம்புகுந் தினியவா யாலவா யுடையார்
செவிக்க ளம்புகுந் தேறுவ சிறியனேன் பனுவல்.

உரை : பிளவுடன் சிகைவிட்டெரிகின்ற அக்கினி தேவனுடைய நாவினால் உருசியைக்கண்ட ஊனானது, தேவர்கள் உண்ண இனிதாகிய அமுதம்போலாகின்றது. அதுபோல், கல்வி யுணர்ச்சியில்லாத எளியேன் சொல்லிய பாடல்கள் உறுதிப்பாட்டினையுடைய சான்றோர்

அவையினிடத்துச் சென்று குற்றங்களெல்லாம் நீங்கி மதுரமுள்ளவைகளாய்ச் சோமசுந்தரக்கடவுளுடைய திருச்செவிகளிடத்துச் சென்று அடைவனவாகும்.

பாய வாரியுண் டுவர்கெடுத் துலகெலாம் பருகத்
தூய வாக்கிய காரெனச் சொற்பொரு டெளிந்தோர்
ஆய கேள்வியர் துகளறுத் தாலவா யுடைய
நாய ஞர்க்கினி தாக்குப நலமிலேன் புன்சொல்.

உரை: மேகங்கள், பரந்த சமுத்திர நீரையுண்டு அந்நீரிலுள்ள உப்பினைக் கெடுத்து உலகத்தா ரெல்லாரும் உண்ணத் தக்கதாகப் பரிசுத்தமாக்குதல்போல், சொற்பொருள் தெளிந்தவர்களாகிய சான்றோர்கள் கல்வி நலமில்லாத என்னுடைய புன்சொல்லில் உண்டாகிய குற்றங்களை நீக்கிச் சோமசுந்தரக் கடவுளுக்கு இனிதாகச் செய்வார்கள்.

அல்லை யீதல்லை யீதென மறைகளு மன்மைச்
சொல்லி ஞற்றுதித் திளைக்குமிச் சுந்தர ஞடற்
கெல்லை யாகுமோ வென்னுரை யென்செய்கோ விதனைச்
சொல்லு வேனெனு மாசையென் சொல்வழி கேளா.

உரை: இதுவல்ல இதுவல்லவென்று வேதங்களும் அன்மைச் சொல்லினுல் துதிசெய்து இளைப்பதே யன்றிக் காணக்கூடாத சோமசுந்தரக் கடவுளுடைய திருவிளையாடலைச் சொல்லுதற்கு என்னுரையானது அளவுபடுமோ? படாது, என்னும் எண்ணத்தினுல் நான் சும்மா இருந்தாலும் இதனை யான் சொல்லுவேனென்று என் உள்ளத்தில் உண்டாகின்ற ஆசையானது யான் சொல்லு மார்க்கத்தைக் கேட்கவில்லை; ஆதலால் நானென்ன செய்வேன்.

### அரங்கேற்றிடம்

அறுகாற்பீ டத்துயர்மா வாழிகடைந் தமுதையரங் கேற்றுமா போல்
அறுகாற்பே டிசைபாடுங் கூடன்மான் மியத்தையருந் தமிழாற் பாடி
அறுகாற்பீ டுயர்முடியார் சொக்கேசர் சந்நிதியி லமரர் சூழும்
அறுகாற் பிடத்திருந்து பரஞ்சோதி முனிவனரங் கேற்றி ஞனே.

உரை: ஆதிசேஷனுகிய சயனத்தில் பள்ளிகொண்டிருக்கும் திருமாலானவர் திருப்பாற்கடலைக் கடைந்து அதிலுண்டான அமிர்தத்தை அரங்கேற்றிய முறைமைபோல், பெண் வண்டுகள் இசை பாடும்படியான சோலைகளையுடைய திருவாலவாயின் மான்மியத்தை அரிதாகிய தமிழினுற்பாடி அறுகினுற் பெருமை யோங்கிய திருமுடியை யுடையவராகிய சொக்கநாதசுவாமி சந்நிதியில் தேவர்கள் சூழ்ந்திருக்கும் அறுகாற் பிடத்திலிருந்து பரஞ்சோதி முனிவர் அரங்கேற்றினுர்.

பாயிரம் முற்றிற்று.

---

## மதுரைக் காண்டம்

# பாண்டித் திருநாட்டுப் படலம்

கலிநிலைத்துறை

கறைநி றுத்திய கந்தர சுந்திரக் கடவுள்
உறைநி றுத்திய வாளினுர் பகையிரு ளொதுக்கி
மறைநி றுத்திய வழியினல் வழுதியாய்ச் செங்கோன்
முறைநி றுத்திய பாண்டிநாட் டணியது மொழிவாம்.

உரை: விஷத்தை வைத்த கண்டத்தையுடைய சோமசுந்தரக் கடவுளானவர் பாண்டிய ராசனுகி உரையிற் பூட்டும் வாளாயுதத்தினுலே பகைவராகிய இருள் சேராவண்ணந் துரத்தி வேதத்தில் தம்மாற் சொல்லப்பட்ட முறைமைப்படி செங்கோல் முறை நிலை நிற்கச் செய்த பாண்டியநாட்டின் சிறப்பினைச் சொல்லுகின்றோம்.

முழங்குகின்ற சத்தத்தையுடைய மேகங்கள் தேவர்கள் தலைவனுகிய சிவபெருமானுடைய திருவெண்ணீறு தரித்த திருமேனியைப் போல் வெண்ணிறங்கொண்டு சென்று, சமுத்திரத்தின் நீரையுண்டு, பலவுயிர்களுக்கும் துன்பம் போக்குதற்கு அந்தத் தெய்வநாயகன் நல்லருள் சுரந்தாற்போல முழங்கு நீர் தானே ஒழுகும்படி கொண்டு ஆகாயத்திலெழுந்து வாயைத் திறந்து ஒல்லென இடித்துச் சூரியன் ஒளி மழுங்க மின்னலாகிய பக்கத்து வாளை உருவி நின்று வானவில்லைக்கொண்டு நீண்ட அம்புகளைக் கோடைகாலத்தின் மேலே பொழிந்து வெவ்விதான பெரிய சண்டை செய்து பகையைத் தீர்ப்போம்யாமென்று எண்ணி வருகிறதுபோல ஆகாயமெல்லாம் நெருங்கி அகத்திய முனிவருடைய உயர்ந்த பொதிய மலைக்கு மேலே உயர்ந்து முழங்கி அப்படி முழங்குகின்ற மேகங்கள் நீண்ட கோதண்டபாணியான இராமனுனவன் அன்பு கனிந்த குணத்துடனே திருவாலவாய்க் கடவுள் முடிமேலே பரிசுத்த நீரைக்கொண்டு திருமஞ்சனம் செய்வது போல நீரைப் பெய்து பின்னும் அந்தச் சோமசுந்தரக்கடவுள் திருமுடிமேலே பரிசுத்த தண்ணீரைக் கொண்டு அபிஷேகஞ் செய்த இந்திரனையு மொப்பான கறுத்த மேகங்கள் அந்த இந்திரன் எம்பெருமானுடைய முடிமேல் அருச்சனை செய்கிற கையினின்றும் பத்திர புஷ்பங்கள் சிதறினுப்போலே அந்த பொதிய மலைமேலே பலவித மணிகள் தெரித்து சிந்தவந்து கவிழ்ந்து பொழியலாயின. அப்படி பொழிகிறதினுலே தெளிந்த நீரையுடைய சமுத்திரத்தை மேகலையாகத் தரித்த பூமிதேவி யிடத்திலே பிறந்த பலவகைப்பட்ட உயிர்களுக்கெல்லா மனமிரங்கி அவள் கொங்கையாகிய முகட்டிலிருந்து ஒழுகுகின்ற பால்போல் அந்த உயர்ந்த மலைமுகட்டிலிருந்து இழுமென்ன மோசையுடனே தூங்கும் வெள்ளருவி கீழே விழுவதாயின. அப்படி கருநிற மேகமாகிய ரவிக்கையை யணிந்த சிகரமாகிய கொங்கையிலிருந்து

வெள்ளருவியாகிய தீம்பாலொழுக அகன்ற சுனையென்னும் உந்தியையும் மூங்கிலென்னும் ஒப்பில்லாத மேன்மை பொருந்திய தோள்களையுமுடைய பொதியமலை மலையாகிய ஒரு பெண் பெருகுதலையுடைய குளிர்ந்த தாமிரபர்ணி என்னும் ஒரு பெண்பிள்ளையைப் பெற்றுள் போலக் கரைந்து விழுகின்ற வேகத்தையுடைய தாமிரபர்ணி ஆருகிய பிள்ளை முல்லைநிலத்திலே ஒல்லென்று தவழ்ந்து மதுரம் பொருந்திய பாலையு முண்டுகொண்டு திண்ணிய தோள்களையுடைய மல்லர்கள் மேகம்போலே முழக்குகின்ற பம்பையின் நல்லோசையைக் காதினிடத்துவிழக் கேட்டு மெதுவாக காலின்வழி சென்று மருத நிலங்களெல்லாம் விளையாடல் செய்துகொண்டு வாழைமரமே மெல்லிய தொடைகளாகவும் மாமரத்தி னிளந்தளிரே நிறமாகவும், தென்னங்குரும்பையே தனங்களாகவும், வஞ்சிக்கொடியே துவளும் இடையாகவும், கூந்தற்பனையே வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலாகவும், தாமரை மலரே ஒளியையுடைய சந்திரனையொத்த முகமாகவும் கொண்டு நிரம்பி நீளுகின்ற தாழைகளே வேலியாக நெய்தனிலத்தைச் சூழ்ந்த சோலைகளுந் தங்கி பல மலர்களாகிய மாலைசூடிப் பால்போலும் நுரையாகிய போர்வை போர்த்துக்கொண்டு பொதிய மலைச் சந்தனத்தேய்வும் கஸ்தூரிச்சேறும் பூசிப் பொன்னும் மணியும் முத்தும் பூண்டு பொருநையாகிய பெண் கடலாகிய தனது மகிழ்வுக்குரிய புருடன் மார்பைத் தழுவிக்கொண்டு கூடியது, அப்படி அந்தப் பொருநையாறு சிவபூசையாகிய அடிமைத் தொழில் செய்கிறவர்கள் போல விரைவிலே தாவி இருகரையிலும் உள்ள சிவாலயங்களெல்லாஞ் சென்று முல்லைநிலத்திலுள்ள பஞ்ச கௌவியமும் தேனும் அலையாகிய கையினாலே மொண்டு வீசி நல்ல கஸ்தூரியும் சந்தனமும் பூசி வாசம் பொருந்திய புஷ்பங்களைத் தூவிக்கொண்டு பின்னும் அந்த வெள்ளமானது சிவபெருமானுக்குப் பிச்சையிட்ட முனிவர்கள் பத்தினிகள்போல அரும்பாகி மலர்கின்ற மன்மதபாணங்கள் அலைதரவும் பொன்னிறங்கொண்டு பிரலாபித்து வாலன்னத்தை யேந்தி இரு கைகளிலுஞ் சங்குகள சிந்தி மருங்கிலே சூழ்ந்த காஞ்சியையுந் தள்ளி வரம்பு கடந்து சென்று பொதிய மலையிலுள்ள மணிகளும் பொன்னும், வைரமும், குழையும் கரைகளுள்ள மருதநிலமாகிய பெண்ணுக்குப் பூட்டி அரைபட்ட அகிலும் சந்தனமும் பூசி நல்ல அமுதமூட்டி அலைகளுள்ள பொருநையாருனது பக்குவமாகக் கண்டு வளர்க்கின்ற செவிலித்தாய்போல் வளர்த்து வேத முதலாகிய கலைகளெல்லாம் நீலமணிபோலுங் கண்டத்தையுடைய கடவுளே எங்கும் நிறைந்த பரம் பொருளென்றும் பூதிசாதன நெறியே வீடென்றும் சொல்லுவது தெரிந்துந் தெரியாதவர்கள் புத்திபோலக் கலங்கி அந்த முறைப்படியே வீட்டினுண்மை தெரிவித்தவர்கள் போல அந்த ஆற்று வெள்ளந் தெளிந்து வேதத்தின் வழியே உண்டாகிப் பிரிந்த அறுபத்துநான்கு கலைஞானங்கள் போல துறைகளெல்லாம் சொல்லுகின்ற பல வாய்க்கால்களும் சோலைகளும் குளிர்ந்த வயல்களும் கொம்பிலே கட்டின

தேன்கூடுடைந்து அழிகிறதுபோ லோடுகிற ஓடைகளும் எவ்விடங் களிலு மோடி வெள்ளியம்பலவாணருக்கு அன்பானவர்களுடைய நிறைவு கெடாத மனத்தன்புபோல நிரம்பி இழிவானவர்கள் கைப் பொருளானாலும் இகபரத்தாசைகளை விட்ட யோகிகள் கைவசமானால் அந்தப் பொருள் பரிசுத்தமாய் இழிவு நீங்கினாற்போல உவர்க்கடலின் நீரையுண்டு அந்த உவர்ப்பைப் போக்கி மேகம் பொழிந்த நீரானது மண்ணுலகத்தார்க்கும் விண்ணுலகத்தார்க்கும் அமிர்தமேயாம். அழி வில்லாத சத்தியொருத்தி தானே ஐந்து தொழில்களுஞ் செய்ய வெவ்வேறு திருநாமங்களைத் தரித்துக் கொண்டாற்போல் கடலின் நீரொன்றே ஆறு, கால், குளம், கிணறு, குண்டு அகழ், கிடங்கு என்று பெயர்கள் மாறி அறிவில்லாத பெருமை பொருந்திய பயிர்களை யெல்லாம் வளர்க்கலாயிற்று, அப்படிப் பொருநையாற்று வெள்ளம் பெருகினபோது மருத நிலத்திலுள்ள உழவர்கள் எருது மாடுகளையும் ஆனெருமைகளையும் பொன்னேரிலே பூட்டி பெற்ற தாயானவள் மனங்கனிந்து வாயாலே பாடுகிற தாலாட்டுக்கு மனமகிழ்கின்ற பிள்ளை போல அவற்றிற்குச் சந்தோஷம் பெருக வளமிகுந்த மருதநிலத்து ராகம்பாடி மனவலியை வென்ற முனிவர்கள் ஜெயித்தவைகளான விஷயங்களிலே சுழலுகின்ற இந்திரியங்கள்போல ஏவல்செய்ய உழுது பரம்படித்தல் முதலான ஆள்வேலைகளிலே மூண்டு அந்த ஆள்வினைக் கருங்கான் மள்ளர்கள் பலநிறமான ரத்தினங்களைக் கோத்தாற்போலப் பல நிறங்களையுடைய மாடுகளைக் கட்டிக் கலப்பைகளின் கொழுமுகத் திரும்புகள் வெளுக்கப் பூமிதேவியின் உடம்பைக் கிழித்த படைச்சார லின் வழியே அந்த உடம்பிலிருந்து உதிரம்பெருகியதுபோல நெருப்பு மயமாக மாணிக்கங்கள் விளங்க பூமிதேவியின் உடம்பைக் கிழிக்கிற கொழுமுனைதேய உழுகிறவர்களும் தண்ணீரை வாய்க்கால் வழியே பாயச்செய்து சேறு பண்ணுகிறவர்களும் தெய்வத்தை வணங்கி நல்ல செந்நெல்களை விதைத்து நாற்றுகச் செய்கிறவர்களும் பிடுங்கி அந்த நாற்றை நடுகிறவர்களும் பகைவர்போல விரோதஞ் செய்கின்ற களை யைக்களைந்து வளரச்செய்து விளைவு தோன்றச் செய்கின்றவர்களுமாக உழத்திகள் பழிக்கப்படுகிற மதுவைக் குடித்துச் சிவந்த வாயில் வார்த் தைகள் தடுமாற வியர்வைகள் முகத்திலுண்டாக நகையுந் தோன்றக் கண்கள் சிவந்துபிறழ கூந்தலும் மெல்லிய இடையிலுடுத்தின வஸ்தி ரங்களும் அவிழ மனத்திலே மிகப் பெரிய களிப்பைத் தருதலால் அவர் கள் குடித்த மதுவானது நாயகரோடு கூடின பெண்களாகச் செய்தது. அப்படிக்களித்த இசைப்பாட்டை வெல்வதான மாதுரியச் சொற்கள் சொல்கின்ற உழத்தியருடைய பவளம்போலும் வாய்க்கு உட்பகை யானவை செவ்வல்லிமலர்களென்றும் அப்பெண்களுடைய கண்களுக் குப் பகையானவை அழகியதாய் வாசம் பொருந்திய கருங்குவளை மலர்களென்றும் நீலமலர்களென்றும் அப் பெண்களது அழகிய முகத்துக்கு எந்தக்காலத்தும் வலிய பகை தாமரை மலர்களே யாமென் றும் சினந்து போக்குதல் போலக் களைகளைப் பிடுங்கி யெறிவார்கள்,

பின்னும் உழவர்கள் அந்த உழத்தியர் முகத்தையும் கால்களையும் கைகளையும் போல்வன தாமரை மலர்களென்றும் அப் பெண்க ளுடைய வாள்போலுங் கண் போல்வது கருங்குவளையென்றும் பவளம் போலும் வாய் செவ்வல்லி மலரென்றும் எண்ணுமல், அரசன் ஏவின படியே தண்டிப்பவர்கள் தமக்குறவாகி அரசனுக்குப் பகைவராளுல் எண்ணுது தண்டித்தல்போல அவ்வகை மலர்களை யெல்லாம் களைந் தெறிந்தார்கள். அப்படிப்பட்ட வயல்களிலே, நெற்பயிர்கள் குற்றந் தீரக் கற்றவர்கள் செய்த நூலின் பொருள்போல நெல் உள்ளடங்கி அந்த நூற்பொருளை அளவு செய்து சொன்ன கருத்துரைபோல அந்த நெல்லினது வளருங் கருவானது வெளியே தோன்றுவதாய் அளவ மைந்த கல்வி கல்லாத சவிஞரைப்போல நிமிர்ச்சிக்கொண்டு அந்த நூலின் உரைப்போலப் பின்பு விரிந்து கற்பிணியுடைய பெண்கள் போலத் துவளுதலாயின. அன்பால் மிகுந்த பத்தியை விதைத்துச் சந்தோஷமாகிய நீரைப் பாய்ச்சுகின்ற சிவனடியார்களுக்கு ஆனந்த வடிவான சிவபெருமானருள் விளைவதுபோல வலியான மிகுந்த கருங் கான்மள்ளர்கள் நாள்தோறும் அந்தப் பயிர்கள் வளருந் திறங்கண்டு அவை விளைகிற நன்னிலத்தைக் குற்றந்தீரக் காத்தலாலே அந்தக் குளிர்நடு நறுவிய நெற்பயிர்கள் விளைவதாயின. அகன்ற நிலவேறு பாடுகளின் இயலும் பருவமும் தெரிந்து உழவர்கள் தகுதியாகத் தொழில் முயற்சி செய்ய மதனநூலிற் சொல்லுகின்ற நான்கு வகைப் பெண்கள் குணமும் பக்குவமுந் தெரிந்து கூடுகிற புருடர்களுக்கு இன்ப மிகுதியாக விளைகின்ற காமசுகத்தைப்போல பசிய பயிர்களெல் லாம் விளைய உழவர்கள் கோணி வளைந்த பிறைவடிவாகச் செய்திருக் கிற அரிவாளைக் கையிற்கொண்டு வளைந்த கால்களையுடைய வரிவண் டுகள் பாடியெழ முட்களைத் தண்டிலேகொண்ட தாமரை நிலங்களோடு கூட வெண்ணெல் செந்நெல்களை வெவ்வேறே அரிந்து கட்டுக்கட்டிப் பெரிய களத்திலே அழகிய பொன்மலைபோல வரிசை வரிசையாகப் பெரிய நெற்போர்கள் செய்து, பின்பு அடித்த வைக்கோலைக் கற்றை யாகக் களைந்து தூற்றி, நெல்லைக் குவித்து ஊருக்குக் காணியான தெய்வத்துக்கும் அநாதிகளுக்கும் தக்கபடியே செலவு செய்து பின்பு அளந்து கணக்குச் செய்து ஆறிலொருபங்கு அரசர் கடன் கொடுத்து மற்ற ஐந்து பங்கையும் வண்டியின்மேலேற்றிக் கொண்டுபோய் தென் புலத்தார் குலதெய்வம் விருந்து ஒக்கல்களுக்கு உண்ணக் கொடுத்துத் தாமு முண்பார்கள். சாற்றைக் காய்ச்சின கரும்புக்கட்டி - எள்ளு - சாமை - கொள்ளு - சோளம் - தாமரை - ஆருக மதத்தைப் பெர்ழி கின்ற உயர்ந்த யானையின் விலாப்புடைபோலே பருத்த வாழைக் குலை - அவரை தினை வெவ்வேறு வகையான பயறுகள் இப்படிப் பட்ட புன்செய்யில் விளைகின்ற பலவகைப் பண்டங்க ளெல்லாம் பொதிமாடுகளிலும் வண்டிகளிலும் ஏற்றிப் பெரிய நிலம் பள்ளமாகக் கொண்டு போவார்கள். சந்நியாசிகள் சிவனடியார்கள் பசிக்கு நல்ல உணவும் வலிய தீவினையால் வந்த நோயைத் தீர்க்கும் மருந்

தும் உடம்பில் குளிர்தீரக் கெட்டி வஸ்திரமும் இருக்க இடமும் இன்னம் வேண்டியவைகளும் கொடுத்து, இயல்புடைய மூவர் நல் வழி நடந்து செய்யுந் தருமத்துக்கு வரும் விக்கினங்களைப் போக்கி, அரிய வீடு சேர்விக்க வல்லவர்களாய் எப்போதும் சிவனடியார்களைக் கண்டால் பிள்ளைகளின் மேல் வைத்த மறதியில்லாத அன்பும், ராஜ புத்திரர்களைக் கண்டாற்போல் பயமுங்கொண்டு கூசி பாதங்களை வணங்கி, இன்சொற்கள் சொல்லி அவர்கள் இச்சைப்படி நடந்து மனக் குறிப்புத் தெரிந்து பணிவிடை செய்வார்கள், பின்னும் வேத முதல்வ ஞகிய சிவபெருமானடியார்கள் செல்லும் வழியில் நின்று தடுத்து கூட்டிக்கொண்டுபோய் ரசம்பொருந்திய முக்கனிகளும் தேன் கலந்த பாலுடனே புத்துருக்கு நெய் நிறையவார்த்த செம்பொன்னிறமாகிய புழுங்கல் அரிசியாலே நிரம்பின சோற்றைக் குறைதீர உண்டு உங்க ளுக்கு வேண்டிய பொருள்களெல்லாம் கொள்ளுங்களென்று அமுது செய்விப்பார்கள். இதையல்லாமல் அந்தப் பாண்டிநாட்டின் பெரு மையை எப்படிச் சொல்லலாகுமென்ருலும் அந்தப் பெரிதான தமிழ் நாடாகிய பெண்ணுக்கு அங்கங்கே அவயங்கள்போல விளங்கு கின்ற ஊர்கள் அணியச்செய்த பொன்னுலாகிய ஆபரணங்களே கோயில் - மடம் - தருமசத்திரம் - தண்ணீர்ப்பந்தல் - அன்னசத்திரம் என்று வடிவு வேறுபட்டிருக்கின்றன.

(திணைமயக்கம்) நல்ல குளங்களின் நீர்வேலியாகச் சூழ்ந்த இந்த நாட்டுக்குள்ளே குறிஞ்சி நிலம் - முல்லை நிலம் - மருதநிலம் - நெய்த நிலம் ஆக நான்கு நிலங்கள் அதிகமாயிருக்கின்றன. ஆனுலும், அந்த நிலங்களிலுள்ள பொருள்கள் பதினுன்கும் ஆற்றினுலும் பல காரணங் களாலும் ஒரு நிலத்திலிருந்து மற்றொரு நிலத்துக்குப் போய்க் கலக்கிற பொருள் வகையைச் சொல்லத் தொடங்குகின்ரோம். அவையாவன: கொல்லைகளிலே பசுக்களை மேய்க்கிற இடையர்கள் தழைத்த கொத்துக்களையுடைய குருந்தமரத்தில் ஏறி விரைவிலே அகில் மரத் திலே படர்ந்த மிளகுக் கொடிகளின் பெரிய கொத்துகளை ஆடுகள் தின்னமுறித்துச் சிந்துவார்கள். வேடருடைய சிறு பெண்கள் முல்லை யரும்புகளைச் சோருக அதனேடு தேனைக் குழம்பாகக் கலந்து முத்துக ளாலே கட்டின சிறு வீட்டினிடத்திலே தோழிப் பெண்களுடனே விளை யாடுவார்கள். கன்றுடனே களிவண்டுகள் வாயில் மொய்க்க நல்ல ரசமுள்ள கரும்புகளை மென்றுகொண்டு பொன்னிறமுள்ள மலர்களைச் சிந்துகிற வேங்கைமரத்தின் நிழலிலே எருமைக் கடாக்கள் தூங்கும். மலையிலே இளமையாகிய திணைக்கதிரை மேய்ந்து தின்று மருதமரத் தின் அழகிய நிழலிலேபோய் முறம் போலும் காதுகளையுடைய யானை கள் தமக்குப் படுக்குமிடமாகத் தூங்கும். கரைமேலே மோதுகின்ற தெளிந்த அலைகள் வீசுகின்ற சங்குகள் வேடருடைய சிறு பெண்கள் கட்டி விளையாடுகிற சிறு வீடுகளிலே புகுந்து குலைக்க அந்தச் சிறு பெண்கள் கோபங்கொண்டு பகைவர்போல அடிக்க அந்தச் சங்குகளி

லிருந்து தெறித்த மணிகளை வலையருடைய இளமைபொருந்திய தனங்களையுடைய சிறு பெண்கள் முத்துடனே கோத்துக் கொள்ளுவார்கள். முல்லை நிலத்து வண்டுபோய் முல்லைராகத்தை மருதராகம் கற்ற வண்டுக்குக் கற்றுக் கொடுத்து அங்கேதானே மருதராகத்தைத் தானும் கற்றுக் கொள்ளும். கொல்லைகளிலே மேய்கிற பசுவின் மடியிலே வாளைமீன் மோதி அந்தப் பசு தனது இளங்கன்றென்று மனமிரங்கி விரைவில் சுரந்தூற்றுகின்ற பால்வெள்ளத்திலே துள்ளி விளையாடும். இரும்பைப்போலும் கொம்புகளையுடைய இளமையான புன்னைமலரில் தேனைக் குடித்து நல்ல பருவத்தையுடைய வண்டுகள் செவ்வழிப் பண்ணைப் பாணர்போற்பாட, அதற்கு வெகுமானம் கொடுப்பவர் போலக் கொன்றை மரங்கள் மலராகிய பொன்னைச் சிந்த அலைகளையுடைய பெரிய கடலானது சங்குகளை யெடுத்துச் சக்கரக்கடவுள் கையிலிருக்கின்ற சங்கு போலத் தங்கி யிருக்கக் காயா மரத்தின்மேல் வீசும். தென்னமரத்தில் முற்றிப்பழுத்த நெற்றுக்கள் உதிர்ந்து பலாமரத்தினுடைய முட்புறக் கனியை யுடைத்துச் சிந்தின தேனானது நெய்தனிலத்து உவர்க்கேணியிலே பாய்ந்து அதன் உவரைப் போக்கும். தேன்வழிகின்ற பூமடலையுடைய தாழமரத்துப் பூவினிழலைக் கொக்கென்று நினைத்து அதற்கு வேறான தாமரைப் பூவிலே புகுந்து கெண்டை மீன் மறைந்து கொள்ளும். ஆறாக ஓடுகின்ற உப்பங் கழியில் புலால் நாற்றத்தைப் பொறுக்கமாட்டாமல் சோர்ந்து வளைந்த தாழை சோற்றைக் கக்க, அதுகண்டு துணிந்து வாந்தி செய்கிறதென்று சொல்லுவார்போல செவ்வல்லி வாய்மலர்வன. அதைக் கண்ணுற் காட்டுவது போன்ற கருங்குவளை மலரோடு கூடிப் பழிக்கிறவர்கள் போல நகைத்து முல்லை அலர் தூற்றுகின்றன துள்ளுகின்ற சேல்போலுங் கண்களையுடைய வலைச்சிகள் சுறுமீனோ டுண்ணக் கள்ளு வாங்கவும், புளியங்காய் - தினை - அவரை - கொள்ளுகள் வாங்கவும், கிழங்கு-தேன்-நல்ல சுவையையுடைய கரும்புக்கட்டி எள்ளுகள் வாங்கவும், பண்டமாற்றாக சரிக்குச் சரியாய் முத்துகளை அளந்து கொடுப்பார்கள். பயனில்லாமையின் மிகுகின்ற ஐம்புலன்களாகிய பகையைவென்று உயிர்களுக்கெல்லாம் அன்பாகிய புதிதாக மிகுகின்ற குடையாலே நிழலைச்செய்து மெய்யாகிய செங்கோல் செலுத்திச் சிவத்தியானத்தில் மிகுகின்ற பரஞானமாகிய மெய்யான செல்வத்துடனே கூடியிருந்து தவமாகிய அரசாட்சி செய்கின்றது. குளிர்ந்த தமிழ் தோன்றுதற்கிடமான பொதியமலை, வானயாற்றைப் பொருந்தி உயர்ந்த பொதியமலையே மூன்று கண்களையுடைய ஞானநாயகனான பரமசிவன் அந்த மலைமேல் கவிந்து கொண்டிருக்கிற மேகமே அசைகின்ற வாயையுடைய யானையை யுரித்த தோல், அந்த மேகத் துளிகளே அந்த யானையினிரத்தம், வளைந்த இந்திரவில்லே, அந்த யானையின் இரத்தம் பொருந்திய கொம்பேபோ லிருக்கின்றது. சுனையும் அதனது அகன்ற கரையும் பொன்னைக் காய்ச்சித் தோய்க்கின்ற தண்ணீரும் அந்த நீரைக் கொண்டிருக்கிற மண் பாத்திரமுமாக

அந்தக் கரையின் சுற்றுப்புரத்தில் வண்டுகள் மொய்க்கச் செங்காந்தள்பூ மலர அந்த மலர்மேல் மிகவும் இளையதான வேங்கை மரத்தின் கொம்பிலே பூமலர்ந்து அந்தப்பூ உதிர்ந்து கிடக்கிறது. கரிகள் சூழ நெருப்பும் காய்ச்சப்படுகின்ற பொன்னும்போ லிருக்கின்றன. தேவர்கள் வாய்க்குணவாக வேதவிதிப்படி பொரிகளைச் சொரிந்து பசுவின் நெய்யை மொண்டு வார்த்து காருகபத்தியம்-தக்ஷணாக்னியம்-ஆகவனியமாகிய மூன்றக்கினி காரியங்களையுஞ் செய்து முடிப்பவர்களைப்போல் ஆழமான பள்ளங்களிலுள்ள நீரிலே பூத்த செங்குவளை மலர்மேலே தழைத்த கொம்புகளையுடைய குங்குமமரம் வண்டுகள் ஒலிக்கப் பழைய மலர்களை உதிர்த்துப் புதிய தேனைச் சிந்துகின்றது. வேடர்கள் தங்கள் சீறூரிலே அகில் மரங்களிலும், சந்தன மரங்களிலும் நெருப்பையிட்டுக் கொளுத்தி அவைகளைப் பிடுங்கி யெறிந்து நெருப்புப்போற் சிவந்த பவளங்களையும் முத்துகளையும் பொறுக்கியெறிந்து, அந்த நிலத்திலே மலைநெல்லை விதைத்து புள்ளைகளையுடைய முகத்திலே கொண்ட பெரிய யானைக் கொம்புகளாலே வேலி சூழக் கட்டிப் பகையென்னுங் களைகளில்லாமல் அந்தப் பெரிதான பயிரை வளர்ப்பார்கள். ஆகாசவாசிகளுக்கு இனிதான அமுது செய்விக்கிறவர்கள் ஓமகுண்டத்திலே நிரம்பியதான நெருப்பினது செழிய புகை வளைகின்ற அந்த பொதிய மலையிலே புலால் நாறுகின்ற வேலையுடைய குறிஞ்சி நிலமாக்கள் காட்டிலே நெருப்பிட அந்த நெருப்பாலுண்ணப்படுகிற கறுத்த அகிற்புகையும் அந்த வேள்விப் புகையுடனே கூடி நிரம்பும், கூட்டமான மேகங்கள் சிந்துகின்ற மணிகளையும், மூங்கில்கள் சிந்துகின்ற மணிகளையும், அருவிநீர் சிந்துகின்ற மணிகளையும், விரிந்த தலையையுடைய நாகத்தினது வெயிலை வீசுகின்ற சிவந்த மணிகளையும், தினைப்புனத்தில் மேய வருகின்ற கூட்டங்கொண்ட மான்களும் குருவிகளும் ஓடிப்போக அவைகளின்மேல் விழும்படி குறத்திகள் கவண்கல்லாகக் கொண்டு வீசுவார்கள். உலகமெல்லாம் திருமாலின் திருவுருவைப்போலிருக்கின்றது. அப்படிப்பட்ட உலகத்திலே பாண்டிநாடு அத்திருமாலின் உந்தியிற் பூத்த செந்தாமரை மலர்போலிருக்கிறது. அந்த நாட்டிலே பொதியமலை அந்தத் தாமரை மலர்மே னீண்ட பொகுட்டுப்போன் றிருக்கின்றது. இந்த மலைமேலிருக்கின்ற அகத்திய முனிவர் அந்தப் பொகுட்டிலே மேவியிருக்கிற நான்முகன்போ லிருக்கின்றனர். அந்த அகத்தியனாலுண்டான முத்தமிழும் வேதங்கள் போன்றன. இன்னம் பொதிய மலையே ஒப்பில்லாத மேருமலையாகவும் தேவர்களும் வந்து நீராடுகின்ற குளிர்ந்த பொருநையாறே அந்தப் பொன்மலையான மேருவைச் சூழ்ந்து வருகிற சாம்பூனத நதியாகவும் அந்தப் பொருநையாற்றைச் சூழ்ந்திருக்கிற நிலமெல்லாம் சாம்பூனதயாறு சூழ்ந்த போக பூமியாகவும் விளங்குகின்றது. தண்ணிய முத்தமிழுஞ்சிறந்து விளங்குகின்ற திருவாலவாய் மதில் சூழ்ந்த மதுரையே சிவபுரமென்று சொல்லலாமானால் அந்த மதுரைக்கு வெளியிலே விளங்குகின்ற ஊர்களெல்லாம்

இந்திரன் பிரமன் வீரங் கொண்ட சக்கராயுதக் கடவுள் முதலான தேவர்களுடைய தருமங்கள் விளங்குகின்ற உலகங்களின் வடிவைப் போலிருக்கின்றன. இன்னமும் துவளுகின்ற நுண்ணிய இடையைக் கொண்ட பெண்களுடைய அழகிதான கொங்கைமேற் பூசி நீக்கின குங்குமக் கலவையும் கஸ்தூரி கலந்த மயிர்ச்சாந்தும் கூடின தெளிந்த அலைகளையுடைய பொருநையாறு வாசம் வீசுவதே யல்லாமலும் அந்த ஆற்றின் பக்கமெல்லாம் விளைந்த செந்நெற்களும் கரும்புகளும் அந்த வாசம் நாறுகின்றன. சந்தனமெல்லாம் பொதிய மலையிலே யுண்டாகின்றன. முத்துக்கள் அந்தப் பொதிய மலையிலிருந்து வருகின்ற பொருநையாற்றிலே உண்டாகின்றன. தருமங்களெல்லாம் அந்த நதி சூழ்ந்த ஊர்களிலே உண்டாகின்றன. வேத விகிதமான பத்திகள் அந்த ஊர்களில் இருக்கிறவர்கள் புத்தியிலே யுண்டாகின் றன. விடத்தைக் கொண்டும் அழகு பெற்ற நீலகண்டக் கடவுளும் தென்றிசையில் உள்ளவர்களெல்லாம் வந்து கண்டு சேவிக்க வெள்ளி யம்பலத்திலே எழுந்தருளி மகிழ்ந்து திருநடனஞ் செய்கின்றனன். அப்படி யாடுகிறபோது அந்த ஆடுதலினு லுண்டாகின்ற இளைப்புத் தீர சந்தனவாசம் வீசுகின்ற மந்தமாருதம் திருமுகத்தில் வீசிக் குளிர்ச்சியாகவும் முத்தமிழையும் திருச்செவிகளாற் கேட்கவு மல் லவோ, பின்னும் அந்த இடபவாகனக் கடவுளாகிய சிவபெருமான் பாணினி மகா முனிவருக்கு முன்னுளிலே வடமொழிக் கிலக்கணஞ் சொன்னுற் போலவே அகத்திய மகா முனிவருக்குத் தென்மொழிக்கு இலக்கணமுஞ் சொல்லி அந்த வடமொழிக்குச் சரியானது தென் மொழியே யென்று உறுதிப் படுத்தியதான தமிழென்கிற ஓர் இளம் பெண்ணுக்கு ஆடும் இடமென்று சொல்லத்தக்கது பாண்டி நாடல் லவோ. இன்னம் நெற்றியிலும் கண்களையுடைய பெரிய கடவுளும் கல்விச் சபையாரோடு கூடியிருந்து பண்ணின் இசைகள் பொருந்தத் தெரிந்தும் ஆராயப்பட்ட இந்தப் பசிய தமிழ் இது அல்லாத சில நிலங்களிலே இலக்கண வரம்பில்லாமல் வழங்குகின்ற பாஷை களைப்போல பதினெட்டு பத்தொன்பது என்கிற கணக்கிற் சேரக் கிடந்ததாக எண்ணிச் சொல்லக்கூடுமோ? கூடாதெனலாயிற்று. எப்படியென்றுல்? தொண்டர்களுக்கு நாதனுன கடவுளைத் தூது போகச் செய்ததும், முதலை விழுங்கின பிள்ளையை மீள அழைத்த லும், எலும்பைப் பெண் வடிவாகச் செய்ததும், வேதங்கள் சாத்தி வைத்த கதவைத் திறந்ததும் அழியாத தன்மையுடைய தமிழ்ப் பாஷையா? அல்லாமல் வேறு நிலங்களிலே வழங்குகின்ற பாஷையா? சொல்லுங்கள். மழைபெய்யாத வெப்பத்தினுலே விளைவுகுறைந்தாலும் அரசர்கள் நீதிகோணிச் செம்மை தப்பினுலும் தரித்திரமாகிய நோய் வந்து கெடுத்தாலும் சிவனிடத்துப் பொய்யில்லாத பத்தியொன்றும் நிறைவு குறையாமல் தங்களை விற்றுனுலும் அந்தப் பாண்டிய நாட்டி லுள்ளவர்கள் தருமஞ் செய்வார்கள். உலகங்களையெல்லாம் பெற்றவ ளாகிய தேவர் முகங்களிற் சிறந்த திலகம் போன்ற நாயகியும், பரஞ்

சோதியான கடவுளும் உக்கிர குமாரனும் ஆகிய மூன்று தலைவர்களா லும் நீதி நடத்தின நாடு இந்தப் பாண்டிநாட்டை யல்லாமல் கடல் சூழ்ந்த உலகத்திலே வேறே யொருநாடும் உண்டோ? கிடையாது. அப்படியே விண்ணுலகத்திலும் கிடை யாதென்க.

பாண்டித் திருநாட்டுப் படலம் முற்றிற்று.

---

# மதுரைத் திருநகரப் படலம்

---

கலிநிலைத்துறை

மங்க லம்புனை பாண்டிநா டாகிய மகட்குச்
சங்க லம்புகை தோளிணை தடமுலை யாதி
யங்க மாம்புறந் தழுவிய நகரலா மனைய
மங்கை மாமுக மாகிய நகர்வளம் பகர்வாம்.

உரை : மங்கலத்தை யிடையருது பூண்ட பாண்டிநாடாகிய பெண் ணுக்குப் புறத்திலிருக்கும் நகரங்களெல்லாம் வளையல்கள் அசை கின்ற கைகள், தோளிணைகள், பெரிய தனங்கள் முதலாகிய அவய வங்களாம். அத்தன்மையுள்ள பெண்ணின் பெருமை பொருந்திய முகமாகிய மதுரை நகரத்தின் வளப்பத்தைச் சொல்லுவோம்.

அப்படிப்பட்ட சிறப்புப்பொருந்திய பாண்ட நாடாகிய பெண்ணுக் குத் திருப்பரங்குன்றும் திருக்கொடுங்குன்றும் கொங்கைகள். திருச் சுழியல் உந்தி. திருக்குற்ருலம் வயிறு, திருவேடகம் செங்கை. திருப் பூவணம் மேனி. திருநெல்வேலியாகிய வேய்வனம் திரண்டதோள். மதுரையே திருமுகம். இன்னம் அந்தப் பாண்டிநாடு குற்றமில்லாத பெருமை பொருந்திய பூமிதேவியின் மார்பிலே கிடந்து பிரகாசிக்கப் படுகிற ஒளியையுடைய மாலையே போலும், அந்தப் பாண்டி நாட்டி லுள்ள ஊர்களெல்லாம் அந்த மணியின் மேற்பக்கங்க ளெல்லாம் கோத்திருக்கிற ஒளியையுடைய பெரிதான ரத்னங்களையே போலும். மதுரைமாநகரம் இந்த இரத்தினங்களின் நடுவிலிருக்கும் பதக்கத் தின் பெரிதாகிய நாயகரத்னத்தையே போல்வதாகும். இன்னம் அந்த மதுரையானது திருமகளுக்கு ஒரு செந்தாமரைக் கோயி லாகவும், திருமால் மருமகளான சரஸ்வதிக்கு வெண்டாமரைக் கோயிலாகவும், ஞானத்தைத் தருகிற சிவசக்திக்கு ஒப்பற்ற யோக பீடமாகவும், பெருமை பொருந்திய பூமிதேவிக்கு நெற்றியிலிட்ட திலக மாகவும் விளங்குகின்றது. அஷ்ட திசைகளையும் ஆகாயத்தையும் மூடு கின்ற இருளை விழுங்கி வெள்ளையான ஒளியைக் காட்டுகின்ற வீடுகள் உயர்ந்திருக்கிற தோற்றமானவை அந்த மதுரையில் மிகுந்த இதழ்களை யுடைய வெண்டாமரையி லிருக்கிற சரஸ்வதி பீடத்தை ஒத்திருக்கின் றன. அல்லாமலும் புகழ்மகளிடத்தையும் ஒத்திருக்கின்றன. மதுரை யைச் சூழ்ந்த குளிர்ந்த வயல்களிலே நெற்பயிர்க ளெல்லாம் கரும்பு

கள் போலவும், கரும்புகளெல்லாம் நீண்ட கமுகுகள் போலவும் கூட்டமாகப் பெரிதா யிருக்கிற கமுகுகள் ஒலிக்கின்ற சத்தத்தை யுடைய தென்னமரங்கள் போலவும், அப்படி வளர்ந்திருக்கின்ற பொன்னிறமுள்ள அழகு பொருந்திய குலைகளையுடைய தென்ன மரங்கள் மேகபடலமாகிய பந்தலைத் தாங்கிக்கொண்டு நிற்க நிறுத்தின கால்கள் போலவும், இப்படி ஒன்றற்கொன்று அதிகமாக உயர்ந்திருக்கின்றன. நிழலையும் மலர்களையு முடைய சோலைகள் சிவந்த வாயும் கறுத்த கெண்டைபோலும் கண்களையுமுடைய தடாதகைப் பிராட்டியார் இந்திரனைக் கோபித்து வென்று கொண்டுவந்த ஆகாயத்திலுள்ள தருக்கூட்டங்களே மிகுந்த வாசம் வீசி மகிழ்ந்து வெவ்வேறு வகையான பலபலங்களையும் கேட்டவர்களுக்குக் கொடுத்து உயர்ந்து நிற்கின்ற தோற்றந்தையே ஒத்திருக்கின்றன ஒல்லென்னும் சத்தத்தையுடைய கதிர்கள் பொருந்திய செந்நெற் பயிர்கள் பக்கமெல்லாம் சூழ்ந்து வளர, மெல்லிதான இலைகளையுடைய பசிய கொடிகளினாலே சூழ்ந்து கட்டப்பட்டு நிற்கிற கமுக மரமானது இருள் போற் கறுத்த கண்டத்தையுடைய கடவுளுக்கு அழகிதான திருவிழாவில் தருப்பைக் கயிற்றால் சூழ்ந்து கட்டப்பட்டிருக்கிற அழகிய துவஜஸ்தம்பத்தை ஒத்திருக்கின்றது. தெய்வத்தன்மையையுடைய வேதங்கள் தெரிந்த பிராமணர்களால் சிவந்த கைகளை விரித்துக்கொண்டு வாயால் மந்திரங்களைச் சொல்லிக் கேட்க அவர்களுக்குப் பொன்னும் தாரை நீரும் கொடுக்கின்றவர்களைப்போலக் குளிர்ந்த தேனைக்குடித்து வண்டுகள் பாடுகின்ற தாமரை மலர்மேலே செருந்திமரம் அதிகமாக மலர்களையும் தேனையும் சிந்துகின்றது. வாசனை வீசுகின்ற தாமரையாகிய படுக்கை வீட்டில் பெட்டையுடனே கூடி ராஜ அன்னம் நல்ல விவாகஞ் செய்துகொள்ள அதற்குத் தாமரைத் தடாகமானது அலையாகிய வளையலணிந்த கைகளாலே சிறுதுளிகள் பொருந்திய பசிய இலையாகிய மரகதமணித் தட்டினாலே முத்தாலாத்தி சுற்றுகின்றது கரும்பாலையாகிய யந்திரங்கள் இரும்புபோலும் தோள்களுடைய வேளையாட்கள் அதட்டி மாடுகளை ஓட்டி வாயில் கொடுக்கிற கரும்பைத் தின்று இடியேறுபோலச் சத்தித்து இனிய சாற்றிலே வண்டுகள் சுற்றிக்கொண்டு பாட சாற்றைச் சிந்தி வெவ்விதமான கோபாக்கினி தோன்றுகின்ற கண்களையுடைய யானைகள்போ லிருக்கின்றன. ஆழமாகிய நீரிலே முழுகிச் சிறகுகளின் உள்ளும் புறம்பும் பாசியைப் பூசிக்கொண்டு எழுந்து செல்கின்ற வெள்ளை நிறமான அன்னத்தை அதன் பெட்டையானது கண்டு கறுத்த அன்னமென்று தன்னுடைய ஆசையால் மிகுந்த மனத்தை வேறுபாடு செய்து துன்பப்பட, அது கண்ட அந்த ஆண் அன்னம் சிறகுகளை நன்றாயுதறி பழைய வெண்ணிறத்தைக் காட்டி அது உள்ளன்பு கொள்ளச் செய்து தானும் ஆசையுடனே தழுவிக்கொண்டு கூட்டில் போய்ச் சேரும். அங்குள்ள சோலைகளின் மரத்தளிர்களைச் சூரியனுடைய ஒரு வண்டிலையுடைய தேரை இழுத்துக்கொண்டு போகிற கண்களிமையாத ஏழு பச்சைக் குதிரை

கள் நாவைநீட்டி மேய்கின்றன. குளத்துத் தாமரை மலர்களைப் பனி வாடச் செய்வதுபோல பிரசித்தமான யாகத்திலே யுண்டாகிற புகை சென்று கற்பகநாட்டில் பரவி அங்குள்ள மலர்களை வாடச் செய்கின்றது. அந்த மதுரை மதிலைச் சூழ்ந்த அகழ்க் கிடங்கானது எங்கும் விளங்குகின்ற திருவாலவாய்க்குள்ளான எமது கடவுள் திருவருளாலே புண்ணிய தீர்த்தமாக வந்து எழுவகைக் கடல்களும் நிற்கின்றவற்றைக் கண்டு சுழலுகின்ற தெளிந்த அலைகளையுடைய பெரும்புறக் கடலும் வந்து இந்தப் பெரிதான மதுரைக்கு வெளியே சூழ்ந்து கிடக்கின்றதுபோ லிருக்கின்றது. முள்ளால் வெட்டுகின்ற வாளை மீனையும் அடிக்கடி யெழுந்து உடலைப் பரப்பிக்கொண்டு மேய்கின்ற ஆமையையும் கொண்டு தினந்தோறும் மலர்கின்ற மலர்களையுடைய அகழ்க் கிடங்கையும் வாள் கேடயம் கொண்டு விளங்குகின்ற சூத்திரப் பாவைகளைக் கொண்டு ஆகாசத்தை யளாவிய மதிலையும் பார்த்தால் அவ்விரண்டும் ஒருமித்து எதிர்த்துச் சண்டை செய்கிறதுபோ லிருக்கின்றது. இரக்கமில்லாத கொடிய யமனைப்போல முதலைகள் கிடந்து தொந்தரவு செய்ய ஆழ்ந்த அந்த அகழ்க்கிடங்கில் இவ்வுலகத்தார் யாராகுலும்விழுந்தால் தெளிந்தநிலாவையுடையசந்திரனை மாலையாக முடித்த கடவுளுக்கு ஒப்பாகச் சில தெய்வங்களை எண்ணினவர்கள் இருண்ட நரகத்தில் வீழ்ந்து கரையேறினாலும், அந்தக் கிடங்கினின்றும் கரையேறமாட்டார்கள், குமிழம்பூ மலர்ந்த ஒரு செந்தாமரை மலரையுடைய கொடியிலே தோன்றின கோங்கரும்புகளாலே சிந்தலான பரஞானத்தை உண்டுகக்கினதாக வாயில் வந்த தமிழ் வேதத்தைத் தெரிந்து வைதிகநிலையுடனே சைவசமய நிலையையும் நிலைபெறச் செய்த அமுதம்போலும் வெள்ளை அலைகளையுடைய வைகையாறும் அந்த மதுரைக்கு ஒருபக்கத்து அழகா யிருக்கின்றது. குஞ்சுகளும் பெட்டைகளும் சேவல்களும் ஆகிய அன்னங்கள் நீங்காதிருக்கிற தேன்பொருந்திய தாமரைகள் பூத்திருக்கிற அழகினாலே பார்த்தவர்கள் கண்ணும் மனமும் திரும்பாதபடி காவலைச் செய்து ஓங்குகின்ற வண்டுகள் ஒலிக்கிற குளிர்ந்த அகழ்க்கிடங்கு இப்படி யிருக்கின்றது. இனி மதிலின் சிறப்பைச் சொல்லுகின்றோம்.

அந்த மதுரை மதிலை மூடிக்கொண்டு மேகங்களிலிருந்து தவழ்கின்றது வெவ்விதான கோபத்தையுடைய அழகிய சர்ப்பமானது தன்னுடலில் பொருந்திய தோல் உரிகிறதற்கு நெளிகிறதுபோ லிருக்கிறதினாலே ஆகாசத்தை யளாவிய காவலான மதிலானது அந்த மதுரேசருடைய கைக்கங்கணமான பாம்புதான் என்பது நிச்சயமே. திரிபுரத்தை யெரித்த பொன்மலைதானே கோபுரமாக வேத முடிவைக் கடந்த கடவுள் சௌந்தர பாண்டியனாக இருந்தரசாளுகிறதினாலே இன்னமும் பகைவர் வலியை வெல்ல வேண்டினால் அவருக்கு வில்லாய் உதவிசெய்து அவராலே வேண்டிய வரங்களைப் பெறுவதற்கு முன்னே நிற்கிறதுபோ லிருக்கிறது. விஷத்தை யுடைய பாம்புகள்

விழுங்கி உமிழ்கின்றதுபோல் வருந்தி வேகத்தையுடைய சூரியனும் சந்திரனும் தடைபடும்படி திக்குகளையும் அண்ட கோளத்தையும் கடந்து நீண்டு விசாலித்திருக்கிற கோபுரங்கள் தமக்குவிட்ட நிலை வழியாக வாயிலாலே சூரியனையும் சந்திரனையும் விடுகின்றன. கொம்மைகளை வொழுங்காகக் கொண்டு மதுரையைச் சூழ்ந்திருக்கிற அந்த மதிலை மகர மீன்களையுடைய கடலென்று நினைத்து யானைகள்போல மேகங்கள் வந்து நீர் குடிக்கத்தக்க அகழியினது அலையாகிய துதிக்கையினாலே தொட்டுத் தடவிக் கல்லும்படியாகப் பெருகுகின்ற நீரையுடைய வைகையாறு பொருந்தினல் அல்லது வேறொரு பகைவர் சேனைகள் வந்து செய்யப்படுகிற முறையை யுடையதோ அந்தமதில்? அன்று சூரியன் தேர் செல்லும் வழியைத் தடை செய்யும்படியான இந்த மதிலுக்கு வெளியே விரைவிலே சூழ்ந்துகொண்டு பகைவர்கள் வளைந்தபோது எதிர்த்துச் சண்டை செய்து வெல்லுதற்கு வீரர்களும் வேண்டுமோ? வேண்டுவதில்லை; அந்த மதிலுக்குறுப்பான சூத்திரப் பாவைகளே வெல்ல வல்லன. ஆகையால் அந்த மதிலிலுள்ள சூத்திரப் பாவைகள் செய்கிற வீரத்தைக் கொஞ்சம் சொல்லுகின்றோம்.

சில பொறிகள் மழுக்களை எறிகின்றன. சில விஷநீர் தோய்த்த கூரிய வாள்களை வீசுகின்றன. சில மூன்று தலையையுடைய சூலங்களை வீசுகின்றன. சில கைவேல்களை வீசுகின்றன. சில சக்கரங்களை நெருப்புச் சிந்த வீசுகின்றன. சில யெமனுக்கு நேரான் எழுக்களை வீசுகின்றன. சில கப்பணங்களை விஷாக்கினிபோல் வீசுகின்றன. சில வலிதாக நீண்ட கொழுக்களை வீசுகின்றன. சில கெர்ச்சிதஞ் செய்து கயிற்றைக் கடைவிரலிலே கோர்த்துக்கொண்டு கல்லைக் கவணில் வைத்து வீசுகின்றன. விஷத்தைக் கக்குகின்ற துவாரம் பொருந்திய கூர்மையாகிய பற்களையுடைய பாம்புப் பொறிநாவை நீட்டிக் கடிக்கும். மலைப்பாம்புப் பொறி வெவ்விய கோபங்கொண்ட குகைபோலும் வாயைத் திறந்து விக்கவிக்கச் சண்டை செய்கிறவர்களை விழுங்கும். யானைப் பொறியானது கொடிதாகிய இருப்புலக்கையை வீசி எதிரே வருகிறவர்கள் தலைகளை உடைக்கும். வெவ்விய ஐம்பொறிகளிலும் அதிக வேகங் கொண்டு புலிப்பொறி சென்று அமுக்கும். அசட்டை செய்து ஏறுகிறவர்களைக் குதிரைப் பொறியானது மார்பு ஒடிய உதைத்துப் பள்ளமாகிய அகழியிலே விழத்தள்ளித் திரும்பும் உருண்டகல் இரும்பு முலைகளைக் கொண்டெறிந்து உடலைச் சிந்தும், கொள்ளிவாய்ப் பசாசு வாயைத்திறந்து நெருப்பை உமிழச் சில பேய்கள் தலைகீழாகத் துள்ளியாடுகின்றன. சில பேய்கள் கைகள் கொட்டுகின்றன. சில கூளிகள் தோளைத் தட்டுகின்றன. கட்டிய சங்கிலிகளை முறித்திழுத்துக்கொண்டு திரிகிற சிங்கப் பொறிகள் சங்கிலி பிடித்த கை காயமாகச் செய்து மகிழும். சில பகைவர் தலைகளைத் திருகி உடலை நெருக்கும். சில நிற்கிற மரங்களிலே கொழுந்துவிட் டெரிகின்ற செழிய நெருப்பைக் கொளுத்திச் சுழற்றும். சில எதிரே

கற்களை உருட்டி விட்டுக் கொல்லும்: சில ஒல்லென்று குப்பல் குப்ப லாகக் கடுமையான கல்வருஷத்தைப் பொழியும். சில பகைவர் கிட்டினால் காய்ச்சிய மணலைக் கொட்டும்: சில ஈயத்தை உருக்கி மழைபோற் பொழியும். சில இரும்பு வட்டுக்களை வீசும். சில உருக்கு வட்டுக்களை வீசும். சில செம்பை நீராகப் பெருகக் காய்ச்சி ஊற்றும். சில விடுகிற ஆயுதங்களையெல்லாம் முந்திப் பிடித்து விட்டவர்களை அந்த ஆயுதங்களே கொல்லக் கர்வங்கொண்டெறியும். சில தாமிருக் கிற வீட்டுடனே நடந்துகொண்டு போய்ப்போய் துடிமுரசுகளுடனே பல வாத்தியங்களையும் முழங்கிக்கொண்டு திரும்பும். சில உருண்டோடு கிற தேர்மேலேறிச் செலுத்திச் சொரிகின்ற பாணங்களை மழைபோற் பொழியும். வெறிகொண்டு திரிகின்ற ஐம்பொறிகளை வென்றாலும் வெல்லுதற்குக் கூடாத மாறுகொண்ட பலத்தை யுடையனவாகத் தேவர்கள் நகரங்களை யெல்லாம் தனது மனத்தாலே நிலைபெறச் செய் கின்ற தேவதச்சன் செய்யவும் அருமை யுடையனவாகச் சிற்பிகள் செய்வனவான பொறிகளென்கிற சூத்திரப் பாவைகள் செய்யும் காரி யங்கள் இத்தன்மையனவாம். இனி யென்னுல் அலங்காரஞ் செய் திருக்கும் மதுரை வீதிகளினுடைய சிறப்பைக் காட்டுதும்.

திருவிழா நீங்காதிருக்கிற வீதிகள் கரும்புகளும், மாலைகளும், கதம்பப்பொடிகளும், காந்தி பொருந்திய ரத்தினாபரணங்களும், குண்ட லங்களும், சாம்பிராணிப் புகைகளும், கர்ப்பூர தீபங்களும், பூரண கலசங்களும் கொண்டு பெருகுவதான அன்பு கொண்ட நாயகர்கள் வருதலைப் பார்த்து அன்பு உள்ளே பெருகி விரும்பும் கற்புடைய மக ளிரை பொய்யாயிருந்தன. சந்திரகாந்தக் கல்லாலே செய்திருக்கிற மாளிகைகள் விஷந்தங்கிய நீலமணிபோலுங் கண்டத்தையுடைய கட வுள் ஆனந்த வடிவமாக நிற்கிற செவ்விய் பாதநிழலைக் கிட்டினவர்க ளுடைய குணத்தைப்போல கடலிலிருந் தெழுகின்ற சந்திரனுக்கு முன்னே அந்தச் சந்திரனது வெண்மை பொருந்திய கிரணம் படுத லாலே தெளிந்த நீரை ஒழுக விட்டுக்கொண்டு நிற்கின்றன. மலைக்கு நேராகப் பளிங்குக்கல்லாலே செய்து வரிசையா யிருக்கின்றன. உப் பரிகைகளெல்லாம் அந்த உப்பரிகைகளி னிழலிலே பலவகையான சராசரங்களும் கூடி நிற்கின்றன. எப்படியென்றால்: வெள்ளியம் பலத்திலே சோதிசொருபமாய் நிறைந்து திருநடனஞ் செய்கின்ற மலர்போலும் திருவடி நிழலிலே புகுந்து ஒருமித்து வேறுபாடில்லாமற் கலந்த பல உயிர்களைப்போல மிகவும் இளையதான பசுவின் கன்று கடித்துத் தின்றே புல்லின் குப்பலைக் கழித்துக் காலிலே கட்டின கயிறு அற்றுப் போகத் துள்ளித் தூரத்தேபோய் மரகதமணியாலே செய்திருக்கிற சித்திரகூடத்தில் வீசுகின்ற பசிய ஒளிக்கொழுந்தை யும் நாவாலெட்டி வளைத்துப் பறித்து மென்று வாயை அசைத்துக் கொண்டு நிற்கும். சிறுத்திருக்கிற கண்களையுடையனவாய் காற்றை வீசுகின்ற செவிகளை யுடையனவாய் குயிற்றுலிறுகின காலகளையுடை

யனவாய்க் கொம்புகளையுடைய யானைக் கூட்டங்கள் செல்லுகிற வழியும் குறுகிப் பிடிக்குளடங்கி நுண்ணிதான இடையைத் துவளப் பண்ணி எழுகின்ற கொங்கைகளையுடைய மான்போலுங் கண்களைக் கொண்ட பெண்கள் செல்லுகின்ற வீதியும், வண்டுகள் மொய்த்துக் கொண்டு கிடக்க மான்மதம் வீசும். (மான்மதம் - பெரிதானமதம் கஸ்தூரி) மாட வரிசைகளும், மேடை வரிசைகளும், மாளிகை வரிசைகளும், நாடக சாலைகளும், அவ்வூர்ப் பெண்களுடைய சிறிதான கால்களிலே பூசிய செம்பஞ்சுக் குழம்பு படுவதேயல்லாமல் மன்மதனை ஒப்பான புருஷர்கள் தலைகளும், இதழ்களையுடைய மலராலே செய்த மாலையணிந்த மார்புகளும், பெரிய இரண்டு தோள்களும் படும் பகைவர் மார்பிலே இரத்தஜலம் பெருகக் குத்துகின்ற கொம்புகளும், முதுகணிகளும், செங்கண்களும், மயக்கமுங்கொண்ட யானைகளின் பனைமரம் போலுந் துதிக்கைகளிலும், வேதசாஸ்திரங்களின் அருமையாய்ச் செவ்விதான அர்த்தங்களைத் தெரிந்தவர்களுக்கு அரிய பொருள்களையும் கொடுக்கிற புண்ணிய புருஷர்களுடைய சிவந்த கைகளிலும் தானநீரா ரொழுகுகின்றன. (தான நீர்-மதசலம்; தாரை நீர்) மிகப் பெரிதான ரத்தினங்களை வரிசைப்படி பதித்து இருட்கூட்டங்கள் சிதறும்படி பிரகாசிக்கச் செய்த பொன்மயமான நிலாமுற்றங்களும் எங்கும் தெரிய முழங்குகின்ற பெரிய வாத்தியங்களி னோசையைக்கொண்ட செம்பொன்மயமான நாட சாலைகளும் அரிதாகிய மின்னுதலைக் கொண்ட பயோதரங்களைத் தாங்கிக்கொண்டு கொடிகளாடுதலையுடையன. (பயோதரம்-மேகம்; கொங்கை) (கொடி - துகிற்கொடி; மருங்கு) பலங் கொண்ட புயங்களையுடைய புருஷர்கள் மார்பின்மேல் ஆபரணங்கள் விரிந்த ரவிக்கையைப் பூண்ட கொங்கைகளையுடைய பெண்கள் பிணங்கிக் காலை நீட்டி மோதும்போது அதிலணிந்த சிலம்புகளொலிக்கு மொலிக்கு முந்தி அந்தப் புருஷர்கள் அணிந்த தேன் பொருந்திய மாலைகளிலே ஒலிக்கின்ற வண்டுகள் வருந்திக் கத்துகின்ற பெரிய ஒலி முழங்கும். அவ்வூர்ப்பெண்களுடைய சந்திரன்போல்வனவான முகங்களும் குளங்களும் குழைகளை யுடையன. (குழை-குண்டலம்; சேறு) மை பூசிய கண்களும் வீடுகளும் கொடியன, (கொடியன - கொடுமையை யுடையன; கொடிகளையுடையன) கைகளும் திணைமலர்களை யுடைய சோலைகளும், சத்திக்கின்ற ஒளிகொண்ட வண்டை யுடையன. (வண்டு-வளையல்; தும்பி) சம்பங்கி நெய் வாசனை கொண்ட கூந்தல்களும் வீதிகளும் நீளறனெறியைக் கொண்டிருப்பன. (அறநெறி - கருமணல் நடுவே வகிர்ந்திருத்தல்; தருமநெறி) பூவும் சந்திரன் தவழுகின்ற வீடும் மணஞ்செய்தலையுடையன. (மணம்-வாசம்; கலியாணம்) பூவும் குளிர்ந்த நீர்த்துறைகளும் தும்பிகள் முழுகி யாடுதலை யுடையன. (தும்பி-வண்டு; யானை) சூழ்ந்த சோலைகளும் பெண்களும் அலர் தூற்றுதலை யுடையன. (அலர் தூற்றுதல் - பூவைச் சிந்தல்; பழி சொல்லுதல்) அன்னம் வளர்ந்த குளங்களும் வீடுகளும் முறை படுதலில்லை. (அன்னம்-புள்; சோறு) பிணங்கின பெண்கள் எறிந்து

ட்ட ஆபரணங்களும் அம்மனையுடனே பந்தாடினவர்கள் நித்த ஆரங்களும் காலாலே சிற்றிலைக் குலைத்தலுடனே கோபித்துக் கண் களிலே ததும்புகின்ற முத்துக்கள் சிந்த வாடினவர்கள் எறிந்த முத்து மாலைகளுமே குப்பைகளாகின்றன. அடியார்கள் ஈடேற பெரிதான மாணிக்கமும் வரியையுடைய வளையலும் விற்கும் விற்றுத் திரிந்தவ ருடைய மெய்யான வேதமும் சுமக்கமாட்டாமல் வேருக நின்று பிதற் றுதலாகச் சிவந்த பாதமலர்களைச் சுமக்கும்படி தவஞ் செய்துள்ள வீதிகள், ஐயா! என்னுடைய சொல்லளவிலடங்குதலாமோ? அடங்கா. தோரண வரிசைகளென்கிற அரைநூன் மாலை சூழ்ந்த நிலைகொண்டு நீண்ட தேராகிய அல்குலையும் பூரணகும்பங்களாகிய கொங்கைகளையு முடைய ஒப்பில்லாத மங்கலயாகிய பெண்ணானவள் மாலையாகக் கொண்ட ஆரங்களைத் தூக்கிச் சந்தனம் அகில்களை திமிரக்கொண்டு பாலியில் சிருடையதான மூலையாகிய வெண்ணகை செய்து விற்றிருக் கின்ருள். சந்திரனைப் பஸ்பமாக்கிச் சேறுபண்ணிப் பூசினாற்போல் விளங்குகின்ற வெண்மையான மாட வரிசைகள் விபூதி பூசுவாரான அடியார்களுடைய மெய் வேடத்தைக் கொண்டனவாகி மிகவும் கண் களைக்கொண்டு சொக்கலிங்கக் கடவுள் திருவிழாவைத் தரிசிப்பதற்கு இருக்கிறதுபோல் நெருங்கி யிருக்கின்றன. தேர்களி னொலியும் கடி வாளத்துடனே பாய்கின்ற குதிரைகள் அனுமானிக்கின்ற வொலியும் குதிரைகளுக்குப் பூண்ட கிண்கிணி மாலைகளினொலியும் தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவிகள் ஒலிக்கு மொலியும் முழங்குகின்ற துதிக்கையை யுடைய யானைகளின் பெரிய வொலியும் இன்னம் எல்லா வொலிகளுங் கூடி அதிகரிக்கும் ஒளியே யல்லது, காதல்கொண்ட மணி மாடங்களையுடைய மதுரையில் எக் காலமும் மேகங்கள் முழங்கினாலும் அந்த வொலி காதுகளில் விழாது. இழிந்த சாதியார், உயர்ந்த சாதியார், வயதில் மூத்தவர்கள், இளைய வர்கள், தீராத வியாதி கொண்டு சாகிறவர்கள் ஆகிய இவர்களில் யார் வந்து கண்டாலும் தங்கள் கண் வலைக்கு அகப்பட்டு மனமுருகு கிறவர்கள் பொருளைக்கொண்டு எள்ளுக்குள் எண்ணெயைப்போல அளவு செய்து காட்டிப் பழிக்கப்படுகிற போகத்தை விலை செய்கின்ற பரத்தையர் வீதிகளின் புனைவுஞ் சொல்வோம்.

எப்படியென்ருல், உண்மையான அன்புள்ளவர்களைப் போலத் தம்மை விரும்பினவர்களுக்குப் போகிக்கச் செய்கிற தங்கள் பொய் யான சுகத்தை எல்லாருக்கும் வெளியாகத் தெரிவிக்கிறவர்களாக அந்த மையிட்ட கண்களையுடைய பரத்தையர் மன்மதனுடைய இரகசியார்த்தங்களை ஒழுங்காக நன்ருய்ச் சுவரிலே சித்திரங்களாக எழுதிவைத்துப் பலரும் அறியச் செய்வார்கள். அழகிதான ஒளியை வீசுகின்ற ரத்தினாபரணங்களணிந்த மார்பே பலகையாகவும் தெளிந்த முத்துமாலையாகிய அருவியைப் பொழிகின்ற மலைபோலுங் கொங்கை யாகிய சூதாடு கருவிகளைப் பதியவைத்து விளையாடி வென்றும் காமுக

ரைக் கூடித் தங்களுடைய வடுவகிர்போலுங் கண்ணுகிய வேல் மார் பிலே தைக்க வீணை வாசித்தலாகிய சூதாடி வென்றும் காமுகர் கையிலுள்ள பொருள்களைக்கொள்ளுவார்கள். ஆகாயத்திலே விளங்கு கின்ற சந்திரனைத் தொடும்படியான வெண்மையான நிலாமுற்றத் திலே குளிர்ந்த பனி நீரிலே தோய்த்த மல்லிகை மாலைகளைத் தொங் கக் கட்டி யிருக்கிற தூங்கு மஞ்சத்தின் மேலே புருஷரைக் கொண்டு மன்மதனும் ஆசைகொண்டு வரும்படி பலவிதமான இரா கங்களைப் பாடிக் காமுகருயிரை வெகுமானமாகக் கொள்ளுவார்கள். விருப்பத்தைத் தருகின்ற குரும்பை போலும் ஸ்தனங்களிலே யிருந்து சிந்துகின்ற சந்தனமும் கூந்தலிலிருந்து சிந்துகின்ற அரும்பாகி மலருகின்ற மாலைக ளின்பராகப் பொடியும் வண்டுகளுண்டு எச்சி லாகி வீதிகளிலே செல்லுகின்ற குதிரைக் கால்களாலே தூளாகிப் போய் ஆகாயத் தரம்பைகள் உடலும் பெரிய கூந்தற்காடு கொண்ட சுபாவ வாசனையை மறைத்துவிடும். ஆலவாயுடையானென்றும், அங்கயற்கண்ணி யென்றும் சோலைகளிலே வாழுகின்ற குயில்போல் வசனிக்கிற பரத்தையர்கள் சொன்னபடியே முழுதுஞ் சொல்லு கின்ற பால் வேண்டுகிற கிளிகளும் நாகணவாய்ப் புள்ளும் பலதரமும் ஆசிரியன் சொல்லுகின்ற நூலை விரும்பிச் சந்தை கூட்டிச் சொல்லு கின்ற பிராமணப் பிள்ளைகளை ஒப்பாயின. பொருமையைச் செய்கிற மருட்சி பொருந்திய வேல்போலும் கண்களைக் கொண்ட பரத்தைக ளுடைய அழகிய விரல்கள் செல்லுகின்ற நல்ல தந்தியின் ஓசையும், சிவந்த வாயிலுண்டாகிற தித்திப்பைத் தருகிற குரல் ஓசையும், தம் மிலே ஒன்றுபட்ட தன்மையாய்ப் புருஷர்கள் காதாகிய வாய்க்கால் வழியே ஓடி விருப்பத்தைச் செய்கிற காமமாகிய பசும் பயிர் விளையும் படி வளர்க்கும் கண்ணறிவு முதலான ஐந்தறிவும் விரும்பும்படி முதிர்ந்த காமத்தில் தேவர்களே யல்லாமல் எல்லாப் பற்றுகளையும் அறவே யொழித்த துறவிகளும் விழுந்து வேண்டவும், அமுதத்தை முழுதும் வெறுக்கவும், பெரிதான குலத்தையுடைய கற்புடைய மகளிர் போல் தங்கள் உறவின் வழியாக்கி சுகத்தை விற்கிற அழகு பொருந் திய பரத்தைகள் இருக்குமிடம் இப்படிப்பட்டது. குற்றமற்ற மெய்க் குணமும் கங்கா குலத்தில் உற்பவித்த சிறந்த குடிப்பிறப்பும் பிரா மணர் க்ஷத்திரியர் வைசியர்கள் ஏவின வேலையைக் கேட்டுச் செய் கின்ற ஒழுக்கமும் மந்திரிகளாய் அரசருக்கு நன்மையைச் செய்கிற தொழிலும் குறையாமற் கொண்ட மேழிச் செல்வராகிய வேளாளர்க ளுடைய அழகிய வீதிகளை இனிச் சொல்லுகிறோம்.

வரும் விருந்தை எதிர்கொண்டு கண்டு உபசார வார்த்தைகள் சொல்லுகிற சத்தமும், பின்பு சமீபத்திலிருந்து அறுசுவை யுண்டியும் உண்ணச் சொல்லிப் பிரிய வசனங்களை நன்ருகச் சொல்லுகிற சத்த மும், காண்டிகை விருத்தி யுரைகளைக் கொண்ட தமிழ் ஆராய்ச்சி செய்யும் ஓசையைக்கேட்டுச் சந்தோஷ மிகுந்து பாட்டுக்கு வெகுமான

மாக அதிக திரவியங்களைக் கொடுக்கும் சத்தமும் அலையெழுகின்ற சமுத்திரத்தை வானர வீரர் அடைத்த சத்தம் போலவும், கடலையே ஒலியால் அடங்கச் செய்வனவுமாம். உண்டவர் உண்டு செல்ல உண்கின்றவர் அங்கேயிருந்து உண்டுகொண்டிருக்க, நல்ல போசனங்கள் சமைத்துப் பின்னும் விருந்தினர் வருகிறதை எதிர்கொண்டு பார்த்து விதைகளை யெல்லாம் புலங்களிலே விதைத்து நீர்க்கு வருந்தி வானைப் பார்க்கிற ஓரேருழவனைப்போல் வாடி நிற்பார்கள்; ஆகாயமும் திக்குகளும் பரவியிருக்கிற கீர்த்தியும் மோக்ஷத்தை விரும்புகின்ற ஞானமும் குறையாத நன்மையும் தயிரியப் படுத்தலும் கேட்டுக் கொடுத்தலும் கேளாது கொடுத்தலும் அன்புடைமையும் ஒப்புரவும் தகுதியமைந்த நண்புடைமையும் மானமுமாகிய இவைகளைத் தவஞ் செய்து பெற்ற பிள்ளைபோல் வளர்க்க வல்லவர்கள் நம்மிடத்தில் வந்து ஒரு சரக்கு வாங்கக் கேட்டால் அந்தப் பண்டம் நம்மிடத்தில் இல்லையாயின் அந்தச் சரக்குக்கு இனமான மற்றொரு உள்ள பொருளைச் சொல்லித் தடுத்தும் அல்லது கேட்ட பொருள் நம்மிடத்து உண்டானுல் விலை குறித்துக் கண்டித்துக் கொடுத்தலிலும் பேசும பேச்சிலும் இலாபங் கொள்ளவல்ல வைசியருடைய பழையதான குலங்கள் இருக்கும் வீதியை இனிச் சொல்லக் கடவோம்.

நீலரத்தினத்தினுல் செய்த முன்பரப்புத் திண்ணைமேலே பளிங்கினுலே நிழல் தெரியும்படியான சுவர் சாய்த்தெடுத்து ஒளிவீச வெள்ளை வைரமணியால் விளங்கத் தூண்கள் வரிசையாக வைத்து மேலே அழகிய வெள்ளை நிலவை வீசுகின்ற மணிகளைப் பதித்த வெண்மாடங்கள் மாலைபோல வகைவகையாகப் பீடங்களும் இட்டுச்செய்திருக்கின்றன. அந்தச் செட்டித்தெருவு கடல்படு திரவியங்களும், அலைகளையுடைய நன்னீரைக் கொண்ட நாடுபடு திரவியங்களும், அளவில்லாத பசுக்களைக் கொண்ட காடுபடு திரவியங்களும், பூமியைக் கீண்டு கொண்டு நின்று ஆகாசத்தை அளாவுகின்ற மலைபடு திரவியங்களும், வர வரக் கொண்டு நிரம்பியிருக்கின்றன. அவைகளை விற்கும் வெண்மாடங்கள் (மாடம்: வீடு; கடை) நீலநிறமாகச் சூழக் கட்டின கம்பிளிமேலே ஒளிவிடுகின்ற பவள மாலையும், பொன்னரிமாலையும், தெளிந்த நிலாவைப் பொழிகின்ற பருத்த முத்து மாலையும், ரத்தின மாலையும், பசுமையான மரகதமாலையும், இந்திர வில்லினிறப் பிரிவுபோல் விரிவாகத் தொங்கவிட்டிருக்கின்றன. நக்ஷத்திரங்களும் குளிர்ந்த சந்திரனும் சூரியனும் மற்றை ஒன்பது கிரகங்களும் குளிர்ந்த ஆகாசத்தை விட்டுக் குடிபுகுந்தாற்போலப் பிரகாசங் கொண்டு இராப்பகலின் ஒளியை மழுங்கச் செய்கிறதினுலே வர்த்தகர்கள் ஆளுகின்ற பாத்திரங்கள் விற்கின்ற பீடத்தையுடைய கடைகள் சுவர்க்க லோகத்தை ஒப்பாயிருக்கின்றன. பல நிறங்களையுடைய மிகவும் பெரிதான விலைகொண்ட பட்டுகளெல்லாம் அங்கிருக்கின்றன. அப்படிப்பட்ட பட்டுகளுக்கும் மேலான விலைகொண்ட பருத்திகளும் அங்கிருக்கின்றன. எந்த நிலங்களி

லுள்ள அரும் பொருள்களும், பதினேழுநிலத்து வர்த்தகர் தங்குகின்ற விடுகளும், பெறுதற்கரிதான எல்லா விளைப் பொருள்களும் அங்கிருக்கின்றன. இந்த வர்த்தகருடைய சிறுபெண்கள் மரகதத்தாலே அம்மிகளும், ஒளி பொருந்திய வைரத்தினுலே உலக்கைகளும் வெள்ளியால் உரல்களும், அடுப்புக்கு அகில் விறகும், பனிநீரே உலை நீராகவும், முத்துக்களே அரிசியாகவும் சிவந்த ரத்தினங்களே நெருப்பாகவும் மற்றைப் பாத்திரங்களெல்லாம் செம்பொன்னுலும் கொண்டு சிறு வீடு கட்டி விளையாடுவார்கள். குற்றமில்லாத செம்பொன்னுலே கெட்டியான நிலையும் கதவும் வைரத்தினுலே தாட்பாளும் பொருந்தி யிருக்கிறது. அந்தச் செட்டிகள் கடைவாயிலும் என்று சொல்லலானுல் சந்தேகம் தீர்ந்த பேரறிவினர்களும் அந்தச் செட்டிகளுடைய செல்வத்தின் வளமையை இப்படிப்பட்டதென்று அளவு செய்து எப்படிச் சொல்லலாகும்? அந்தச் செட்டித் தெருவிலே நெருப்பினது சிறு பொறியை ஒப்பான சிவந்த ரத்தினங்களும், ஒளி வீசுகின்ற வரிகளையுடைய பொன்வண்டுக் கொப்பான மரகதமும், முத்தும், பிரகாசத்தில் மிகுந்த வயிரமும், விலை மதிக்கக்கூடாத பவளமும் சிந்திக்கிடக்கிறதினுலே கழிந்து போகிற நாளொன்றுக்கு அரிப்புக்காரர்கள் கைக்கப்படுவன விதத்திற் கிரண்டாயிரம். படர்ந்திருக்கிற ஆலமரத்துப் பக்ஷிகள்போல இலாபங் கொள்ளும் பொருட்டுப் பதினெட்டுத் தேசத்தரசர்களும் பேசுகின்ற சொற்கலப்பாகிய பரிசுத்தம் பொருந்திய மாயாகாரியமான ஒலியை யல்லாமல் ஆகாசமாகிய முதற் காரணத்தாலாகிய காரியவோசை யென்கிற தொனியாகவும் கடை வீதிகளிருக்கின்றன. (மாயாகாரிய வொலி-பதினெண் பாஷைகள்) நீங்குதலில்லாத பலவேறு வகையான பொருள்களும் ஏழுலோகமும் பிறவும் வழுவுத லில்லாத பலவேறு வகையான கலைகளும், முறைப்படியே வகைசெய்து கிட்டி வேண்டினவர்கள் கொள்ளத்தக்கபடி பகர்ந்து கொண்டு கெடுதலில்லாத வேதம்போன் றிருக்கின்றன. அந்தக் கடை விதிகள். (இதுபோல் சிலேடைகளெல்லாம் கேட்டுணர்க.) எட்டுத்திக்கும் புகழுகின்ற மதுரையைத்தானே சிவலோகமாகக்கொண்டு முக்கட் கடவுளாகிய சிவபெருமான் அரசாண்ட முறைமைக்குத் தகுதியாகத் தகுந்த தோழனுனவனும், அளகாபுரியும் கூடியிருக்கிற பொலிவை அவ்வூர்ச் செட்டித்தெரு ஒப்பாயிருக்கும். ஒரு வண்டிலையுடைய சூரியன் உலகத்தில் இருளைப் போக்குகிறதுபோல ஆக்ஞா சக்கரத்தினுலே பாபங்களாகிய இருளைப் போக்கி நீதி செலுத்தி மல்ல யுத்தஞ் செய்கின்ற பெரிய புஜபலங்கொண்டு பகைவரைக் கொல்லுகின்ற சினமும் வெற்றியுங் கொண்ட அரசர்களுடைய சிறந்த பெரிதான வீதிகளின் சிறப்பை இனிச் சொல்லக் கடவோம்.

கடல்களின் அலைகளை யெல்லாங் கொண்டு வந்து குதிரையாகச் செய்து கால்களிலே பொருந்தக் கட்டி நிறுத்தி யிருக்கிற லாயங்கள் அனேகம். அருவிக ளொலிக்கும் ஓரறி வுயிராகிய மலைகள் யெல்

லாம் கொண்டுவந்து மரங்களை பொடிக்கிற யானைகளாக நிறுத்தி யிருக்கிற சாலைகளநேகம். (மரம்-கட்டுத்தறி யெனவுமாம்) மழுக்கள்-வச்சிராயுதம்-வில்-அம்பு-முத்தலைச் சூலங்கள் - சக்கரம் - வேல் - கப்பணம் - கலப்பை - எழுத்தடிகள் - கத்திகள்-கேடயம் - தண்டாயுதம் முதலான ஆயுதத்த கூட்டங்களுடனே வீரலட்சுமியானவள் வாசஞ் செய்கிற சிலம்பக்கூடங்கள் அநேகம். துவாரம் பொருந்திய கல்லைத் திருமால்போலக் கையிலே கொண்டு சுழற்றியும், சிவந்த மண்ணைப் பூசிக்கொண்டு வருகிற யானையைப்போற் பாய்ந்து மல்ல யுத்தங்கள் செய்தும், தங்கள் புஜபலந் தெரியும்படி கத்திகளுடனே கேடயங்கள் வீசியும், வெற்றிகொண்ட குமாரர்கள் பழகுஞ் சண்டைகள் செய்கிற கூடங்களநேகம். ஒளி விளங்குகின்ற நீலமணி மாடங்களும், சிவந்த மணிகளாற் செய்த சிகரங்களையுடைய வீடுகளும், குற்றமில்லாத பொன்னுலாகிய மாடங்களும், சந்திரகாந்த மாடங்களும், ஆக இப்படித் துல்லியமாக விளங்குகின்ற மாடங்களின் நீண்ட வரிசைகள் மதுரையாகிய பசுமை பொருந்திய ஆபரணங்களையுடைய ஒரு பெண்பிள்ளை பூண்டு கொண்டிருக்கிற நவமணிக் கோவைபோல் விளங்குகின்றன. வாசம் விரிந்த கூந்தலையுடைய பெண்களுடைய பெருத்த இளமையான கொங்கைகளாலே குத்தப்பட்ட மலைபோல் அகன்ற மார்பிற் புண்ணை அல்லது முதுகிலே புண்படாமலும் தமக்கு அன்பில்லாமலும் கீர்த்தி மிகுந்த மானவழியே சென்று ஒளி பொருந்திய கத்தி கேடயங் கொண்டு அளவில்லாத வித்தைகள் பயின்றிருக்கிற வீரர் கூட்டம் பொருந்துவதே எந்த யிடங்களிலும் காணத்தக்கது. மேகங்கள் மின்னலைக் கத்தியாக வீசி அதிகமாக சண்டையில் மூண்டாற்போல் வெள்ளைக் கொம்புகளை நீட்டி ஒன்றற்கொன்று உடம்பிலே அழுந்தக் குத்திக்கொண்டு அந்த மேகங்கள் வாய்விட்டிடித்தாற்போல ரத்த ஜலம்பெருக, லட்சுமியும் விரும்புகின்ற மார்பையுடைய வீரர்கள் அப்படிப் பொருதுகின்ற யானைச் சண்டை விடுவார்கள். செலுத்துகின்ற சாரதிகள் மனமும் தங்களுக்குப் பின்னாகக் கட்டுப்பட்டு இழுத்துக்கொண்டு தாண்டிச் செல்லுகின்ற குதிரைகள் ஒரு வண்டில் பூண்ட சூரியன் தேரைப் பார்க்கிலும் அதிக விரைவாக உருண்டோடுகிற அந்தத் தேர்களின் உருளைகளிலே சூழ்ந்திருக்கிற பசும்பொன் கட்டுகள் தேயப் பூமிதேவியின் யுடலைக் கிழித்துக் கொண்டு தூரதிசைகளிலே போய்த் திரும்புவதாய்ச் செல்வத்தாற் சிறந்த இரதத்தைச் செலுத்துவார்கள், புருஷர்களுடைய நெருக்கத்திலே சிந்துகின்ற கலவையும், பெண்களுடைய கொங்கைகளிலிருந்து சிந்துகின்ற சந்தனமும், கூந்தலில் அவிழ்ந்து விழுகின்ற பூமாலைகளும், விசிறிகளாலே தூவுகின்ற செம்பொடி நீரும், தோன்ற நறுவிரைத் தேனுடனே கூடி யெழுந்து போய்ச் சிவந்த தூள்கள் ஆகாயத்தின் வயிறெல்லாம் மறைக்க வெல்லும் குதிரைகளிலேறியும் நடத்துவார்கள். தங்களுயிரைக் குறித்து எவ்வளவு நினையாதவர்களாய்க் கர்வமும் மானமு மிழுக்கப் பகைவர் முனைமேல் எதிர்ந்து செய்

கிற சண்டையைப்போல, ரத்தம்போற் சிவந்த நிறத்தைக் கொண்ட பறிக்கு மலரைப்போலுங் கொண்டையையுடைய சேவற் சண்டை இளைய ஆட்டுச் சண்டை விட்டு அந்த வெவ்விதமான சண்டை வேடிக்கை பார்த்துக்கொண்டு நிற்பார்கள். அக்கோழிகள் ஆடுகளுக் குண்டாகின்ற காயங்களைக் கொலையென் றெண்ணுர்கள். பெற்ற தாய்மார்களுக்கு முத்துக்கொப்பான மிக்க பேதைப் பருவப் பெண்கள் பெரிதான நீரையுடைய வைகை யாற்றில் தோன்றுகிற வெள்ளை முத்துகளாலே செய்த சிறு வீடுகள் நடக்கிறபோ தழிய அதற்குக் கோபங் கொண்டு பார்த்துக் கண்ணீராகிய முத்துக்க ளுதிர எறிந்த ஒளி மணிமாலைகள் தடுக்கத் தெளிமுத்துப்போல நகைத்துக்கொண்டு செல்லப் பிள்ளைகள் வீதிகளிலே சிறு தேருருட்டுவார்கள். கொடி களிலே மேகங்கள் சஞ்சரித்துலாவுகின்ற அந்தப் பெரிதான மதுரா புரிக்குள் வடகீழ்திசையில் முடிமேலே வேப்பம்பூ வாசம் வீச, தேன் விரிகிற ஆத்திமாலையும் பனைமாலையும் மடிமேல் வாசம் வீசப் பாண்டி யர்கள் பாரம்பரியமாக அரசாக்ஷி செய்கிற இடிபோலும், பேரிகை ஓயா தொலிக்கின்ற முகவாயிலையுடைய எழு நிலைமாடக் கோயிலிருக் கின்றது. உண்மையாகச் சொல்லுகின்ற மெய்ஞ்ஞானிகள் உண் டென்று சொல்லுகின்ற தர்மார்த்தகாமமோக்ஷங்களை இல்லையென்கிற வஞ்சகர் நாவை யறுக்கும் ஆயுதமாக மெய்க்கடவுளாலே சொன்ன வேதப் பிரமாணங்களைக் கண்டு மனந்தெளிந்து பரிசுத்தர்களாய் மோக்ஷத்தை விரும்புகின்ற செல்வரான வேதியரிருக்கு மிடமான வீதியை இனிச் சொல்லக் கடவோம்.

தருப்பைக் கயிறு இடையிலே விளங்க பொன்னிறத்தைக் கொண்ட தாமரை மலர் மாலை குடுமியிலே தொங்கி யசைய வஸ்திரம் செருகுதலுடனே முன் கொய்ததும் தொங்க பஞ்சி நூலாற் செய்த முப்புரி நூலின் மான்றோலுங் கூடின மார்பும், பலாசக்கோல் கையிலே கொண்டு குறைவில்லாமல் நான்கு வேதங்களும் கற்றவர்கள் நிலை களே வீடுகளெல்லாம் அக்கினி ஹோத்திரஞ் செய்கிற பிராமணர்க ளுடைய சிறு பிள்ளைகள் பழகுகின்ற தெய்வ வேதத்தை நாவிலே உருச் சொல்லிக் கொண்டிருக்க, அது கேட்டுக் கிளிகள் மாத்திரமோ கற்றுக் கொள்வன, அவற்றிற்கு வேருகவுள்ள பூவைகளும் கற்றுக் கொண்டு தேவருலகத்தி லிருக்கிற புதிய மந்தாரச் சோலைகளி லுலாவு கின்ற கிளிகளுக்கெல்லாம குற்றந் தீரக் கற்றுக் கொடுக்கும். வேதங் களும் வேதாங்கங்களும், தரும சசஸ்திரங்களும் புராண பேதங்களான நூல்களும் தெரிந்தவர்களாலும், பிறமதங் களையவல்ல வாதமும், பிறர் மதமேற் கொண்டு மறுத்தலும், தன் மதத்தை நிலை நிறுத்தவல்ல ஞானமு முடையவர்களாலும், கழகமெல்லாம் நிறைந்திருக்கின்றன. (கழகம்-கல்விச்சபை) உறியிலேயடங்கின கமண்டலத்தைக் கையிலே கொண்டு காவிக்கல்துவைத்த வஸ்திரமுடுத்திக் கீழே ஊருகிற உயிர்க ளுடைய கொலைக்கு அஞ்சி நடக்கிற நடையும், அஞ்ஞானம் போக

வெட்டுகின்ற ஒளியைக் கொண்ட மழுவாள் போலக் கோவணமுல ரக் கட்டின தண்டமும் கொண்டு வேதாந்தப் பொருளை யல்லாமல் வேறொன்றையும் நம்பாத பெரிய தவத்தினர்க ளிருக்கிற மடங்களே எவ்விடமும் விளங்கும். அடுப்பிலுண்டாகி யெழுகிற புகையும், மேல் வீடுகளில் வாசத்துக் கிடுகிற அகிற்கட்டைகளின் புகையும் யாகசாலை களிலே உண்டாகிக் கிளம்புகிற புகையும் ஒன்ருய்க்கூடி விரிந்த சூரிய னுடைய பிரகாசத்தை மறைக்க, அப்போது இராக்காலம் வந்த தென்று எல்லாரும் தங்கள் செய்தொழிலை விட்டு விடுவதாலே உமா தேவியானவள் தேனெழுகுகின்ற கொன்றைமாலையைத் தரித்த கடவு ளுடைய கண்களை மூடின காலம்போ லிருக்கும். தெய்வத்தன்மை யான திருநீறே பாய்மரமாகவும் ஐந்தெழுத்தே கப்பலாகவும் கொண்டு வெப்பத்தையுடைய அழுக்கான இருவினையைக் கொண்ட தேகத்தை யெடுத்து உழலுகின்ற பிறவிக் கடல்களேழையுங் கடந்து பரமேஸ் வரனுடைய பாதமலராகிய கரையைச் சேருகின்ற சைவ மாதர்க ளிருக்கிற மடங்களையுடைய ஒப்பில்லாத வீதிவளத்தை இனிச் சொல்லக் கடவோம்.

எவ்விடங்களிலும் சிவபூசை செய்து இகபர போகங்களை அடை வார்கள். எவ்விடங்களிலும் சிவனடியார்களைப் பூசை செய்து எழு வகையான பிறவிகளுந் தீர்த்துக் கொள்வார்கள். எவ்விடங்களிலும் சிவாகமங்களைக் கேட்டு இனிவரும் ஆகாமியங்களைத் தடைசெய்வார் கள். எவ்விடங்களிலும் சிவவடிவைத் தியானித்து இருண்ட மும்மலங் களைத் தீர்த்துக் கொள்வார்கள். அழிவில்லாத கடவுள் சொன்ன சிவாகமங்கள் நூருயிரமும் ஆராய்ந்து அவ் வாகமங்களில் சிறந்த தாகிய விதியினுலும் விலக்கினுலும் தம்முடைய பாதங்களை அடைந்த அடியார்கள் அப்பியாசிகளுடைய பாசங்களை யறுத்து வீட்டை யருளு கின்ற போதகாசிரியர்கள் பலருண்டு. (போதகக்காட்சி-போதிக்கு மறிவு) வேதங்கள் பொதுவென்றும் ஆகமங்கள் சிறப்பென்றும் சிவனுலே பிரித்து முறையாகச் சொன்ன விதி விலக்குகளாகிய வாக்கி யங்களும் முடிவிலே சொல்லுகின்ற வீடும் ஒன்று இரண்டு என்கிற பிணக்கில்லாமல் அமைந்திருக்கிற குறைவில்லாத சிவயோகிகள் கூட்டங்களும் அனேகம். குழலிசையும் தும்புரு நாரதர் பாட்டிசை யும், ஆடிச் சுழலுகின்ற கொம்புபோலும் பெண்கள் ஆடலின்ஒலியும், திருஞானசம்பந்த சுவாமிகளும் திருநாவுக்கரசு சுவாமிகளும் ஸ்ரீசுந்தர மூர்த்தி சுவாமிகளுமாகிய சைவசமயாசாரிகள் திருவாய்மலர்ந்தருளிய தமிழ் வேதமாகிய தேவாரங்களின் ஒலியும், திருவிழாக்களின் பெரிய ஒலியும், வேதவொலியும், திக்குகளெல்லாம் செவிடுபட முழங்கும் பேரிகையொலியும், ஓயாமல் எல்லாருக்கு முன்னவனுகிய சொக்கலிங் கக்கடவுள் கோயிலில் விளங்குகின்றது. மடக்குதலில்லாமல் ஆகாயத் தைப் பிளந்து மேலே வளர்ந்த வெள்ளை விடைமேல் அழகருடைய வெள்ளியம்பலம் விளங்கியெழுகின்ற வெண்சோதியின் நீட்டமானது வளைந்து வெண்மையான சந்திரனை மாலையாகத் தரித்த சிவபெருமா

னுடைய ஸ்ரீ கயிலாயமானது மூன்றுலகங்களும் ஒடுங்கும் காலத்தில் உயர்ந்த உயர்ச்சியை ஒப்பாயிருக்கின்றது. தேனைச் சுரந்து துளிர்த்து மலர்களையும் சிந்தி வண்டுகள்பாட இலைகளால் திரப்பிச்சோமசுந்தரக் கடவுகளுக்கு ஒரு புறத்தில் நின்று விரிகின்ற கடப்பமரமானது பெருகிக் கண்ணீர் சிந்தப் பல மலர்களைத் தூவித் துதித்து வேண்டி நின்று அருச்சனை செய்கின்ற இந்திரனை ஒத்து விளங்குகின்றது. வருந்துதலைச் செய்கின்ற தீவினை வெப்பந்தீர வுயிர்களுக் கெல்லாம் பாத நிழலைக் கொடுக்கும் கடவுளுக்கு நீண்ட நிழலைச் செய்கிற மலர்களையுடைய கடப்பமரத்தில் குழலிசைபோல பாடுகின்ற வண்டுகள் கற்பக விருட்சத்திலுள்ள தேனைக் கொண்டு வந்து தொடுத்துக் கொதிப்பைச் செய்கிற காமத்தையுடைய மெல்லிய பெட்டை வண்டுகளினுடைய பிணக்காகிய நோயைத் தீர்க்கும். நீர் நிரம்பின கடல் அதுவன்று இதுவே யென்னும் அகழியும். மேகங்கள் சஞ்சரிக்கிற சக்கிரவாளகிரி அதுவன்று இதுவேயென உயர்ந்த மதிலும், எட்டாயிருக்கிற பருவதங்கள் அவைகள் அல்ல இவைகளேயென அமைத்த கோபுரங்களும், பொன்மலை அதுவன்று இதுவேயென விளங்குகின்ற ஆகாயத்தி லிருந்திறங்கின இந்திர விமானமுங் கொண்டது மதுரை. வேதாந்தங்களும் சந்தேகந்தீர மெய்ப்பொருள் விளங்குகின்ற நாதாந்தமும் கடந்ததாகிய ஒரு நடுநிலைப் பொருளாகிய மரத்தை பக்தியுள்ளவர்களாய்த் தியானிக்கிறவர்களுடைய பெரிய தவம் கொடுக்கின்ற பயனைப் போலப் பலவளங்களும் தழைத்திருக்கின்றன, ஐம்பொறிகளுக்கும் ஊட்டுகின்ற பலவகைப் போகங்களும் அதிகமாகச்செறிந்து கொண்டிருக்கின்ற தன்மையினாலே அந்த மதுரையி லிருக்கிறவர்கள் செவ்வையான சிவந்த சடையிலே பிறையை முடித்த நிருமலக் கொழுந்தாகிய சிவபெருமானுடைய வாசனை கொண்ட அன்றலர்ந்த மலர்போலும் பாதத்தைச் சேர்ந்து வீடு பெற்றவர்கள்போல் மகிழ்ந்திருப்பார்கள். அந்த முத்தற் கடவுள்தானே அங்கிருந்து அரசாண்டதினாலே அந்த மதுரை பதுமநிதியைத் தந்தது. அந்தப் பதுமநிதி பல பொருள்களும் நிறைந்த செல்வத்தைத் தந்தது. அந்தச் செல்வம் பல வகைத் தருமமென்று சொல்லுகிற மின்னைத் தந்தது. அந்த மின் நன்மை பொருந்திய புகழைத் தந்தது. எழுவை வென்ற தோள்களையுடைய சிவலோகமென்று எல்லாருந் துதிக்க நிலைகொண்ட இந்த மதுரையில் மேலுலகத்திலும் சிறந்த நன்மையைக் கொண்ட பல செல்வங்களும் இருக்கின்றவற்றை அதிசயித்துப் பார்த்து மனத்தில் பொறுமை தீராமையினாலே தேவர்கள் இன்னமும் கண்ணுறங்காமல் விழித்துக்கொண்டே யிருக்கிறார்கள். வாசனை விரிந்த வேப்பமாலை யணிந்த உக்ரபாண்டியன் வெற்றிவேலை விட்டுக் கடலை வென்றதும் தலையை யுடைத்து இந்திரன் கர்வம்போக வென்றதும், மேகங்களுக்கு விளங்கிட்டதும், பொன்மலையை வென்றதும், இந்த மதுரையாகிய இடவலிமையா லல்லவோ? ஆம். எங்கும் நாக்குகளும் எங்குங் கண்களும் ஆக எங்கும் தங்கிய பெரிய சோதியை யல்லாமல் இந்த வொப்பற்ற

மதுரைச் செல்வத்தை ஆயிரம் கண்ணுள்ள இத்திரனும் ஆயிரம் நாவுள்ள ஆதிசேஷனும் பார்க்கவும் சொல்லவுங் கூடுமோ? கூடாது. புண்ணியத்தைச் செய்கின்ற உலகத்தார் அந்தப் புண்ணியத்தினலே வருகிற போகங்களைக் கொண்டு மகிழ்வடைகிற உலகம் சுவர்க்கலோக மென்று சொல்லுவார்கள். எப்போதும் புண்ணியத்தைச் செய்கிற உலகமும் அந்தப் புண்ணியத்தால் வருகிற போகங்களைக் கொண்டு மகிழ்வடைகிற உலகமும் மதுரைமா நகரமே யல்லது வேறில்லை. கனிந்த இராகம்போலும் சொல்லையுடைய பெண்கள் தந்தி யிசைப் பாட்டினலே தேவருண்கிற கனிந்த அமுதத்தையும் வெறுக்கும்படி காதைத் துளை செய்தூட்ட வுண்டும், பெண்களில் அமுதம் போலச் சிறந்தவர்களுடைய பெருமை பொருந்திய ஆடலைப் பார்க்க கண்களை விட்டும் அளவில்லாத பேர்கள் இப்படிப் பொழுது போக்குவார்கள். கலவியே காரணமாகப் பிணங்கிக் கண்ணீரிலே மூழுகின பெண்கள் பிணக்குத் தீருஞ் சமயம் பார்த்துப் புணர்முலைப் போகத்தை அனுபவித்தும், நித்த அநித்தமாகிய பொருள்களைக் கண்டு செவ்வையான தருமமும் தானமும் கற்றோர்கள் கைகளிற் கொடுத்தும் கணக்கில்லாதவர்கள் இப்படிப் பொழுது போக்குவார்கள். மீன்போலும் கண்களையுடையவளது நாயகனை எதிர்ப்பட்டும் மூன்றுகாலமும் வந்தனை செய்தும் பரமசிவன் பூசையைக் கிரமப்படி செய்தும் வேதங்கள் முடிவு செய்தும் அறியப்படாதவன் செய்த திருவிளையாடல்களைக் கேட்டும் தியானித்தும் அடியார் பூசை செய்தும் இப்படியும் பலரும் பொழுது போக்குவார்கள். கற்கவேண்டிய நூல்களைக் கற்றும் அவைகளைக் கேட்டும் அந்த நூல்களின் கருத்து மனதுக்குத் தோன்றச் சொல்லிலக்கணம் பொருளிலக்கணங்களை யெண்ணியும் தம்மைக் கேட்பவர்களுக்குப் போதித்து மனத்திலுள்ள சந்தேகங்களைத் தீர்த்தும் இராக்காலம் வந்தபோதும் பகற்காலம் வந்தபோதும் சச்சிதானந்தமாகிய அதிசய வெள்ளத்தில் மூழ்காமல் முழுகி இப்படியும் சிலர் பொழுது போக்குவார்கள் தனக்கு ஒப்பும் உயர்வும் இல்லாத ஒருவனே காவியத்துக்குத் தலைவனாக முன்னோர்கள் சொன்னதெல்லாம் அந்த காவியத் தலைவர்களுக்கெல்லாம் உபசாரமாக வல்லவோ? அப்படி மெய்யாகத் தனக்கு ஒப்பும் உயர்வும் இல்லாத கடவுளே சௌந்தர பாண்டியனாக இந்த மதுரைக்கு அரசனானான். அதனாலே இந்தக் காவியத்துக்கும் தலைவனானான் என்பது உபசாரமன்று மெய். இந்தக் காவியத் தலைவனது பெரிய குணத்தை மற்ற அரசர்கள் தேவர்களைப் போல மதித்துப் புகழ்ந்து சொல்லக்கூடுமோ? கூடாது. ஏனென்றால், அவனது ஆணைப்படியே நடக்கின்றது இந்த லோகமென்றால் எப்படி அவன் பண்பைச் சொல்ல மாட்டுவேன் ஆனாலும் இனி அந்த ஆதியங் கடவுள் விளையாடின திருவிளையாடல்களின் வரலாற்றை வரிசையாகச் சொல்லத் தொடங்குவேன்.

மதுரைத் திருநகரப் படலம் முற்றிற்று.

———

# திருக்கயிலாயப் புகழ்ச்சி

கலிநிலைத்துறை

வரங்க டந்தரு ளெனமுது வானவர் முனிவோர்
கரங்க டந்தலை முகிழ்ந்திடக் கருணைசெய் தவிச்சை
யரங்க டந்துரை உணர்வெலாங் கடந்தரு மறையின்
சிரங்க டந்தவ னிருப்பது திருக்கயி லாயம்.

உரை: வரங்கள் அளித்தருளுமென்று அயன் முதலிய முதிய தேவர்களும் முனிவர்களும் கைகளைத் தமது சிரங்களின்மேற் குவித்து வைத்துக்கொண்டு துதிசெய்யக் கிருபை செய்து பாசவலியைக் கடந்து மனவாக்குகளையுங் கடந்து அரியவேதத்தின் சென்னியையுங் கடந்து பரமசிவன் வீற்றிருப்பதற்கு இடமாயிருப்பது திருக்கயிலாய மென்னுந் திருமலை.

இந்திராதி தேவர்கள் பதவியும் தாமரைப் பூவில் வாசஞ் செய்யும் பிரமனது பதவியும் சக்கராயுதத்தையுடைய திருமாலினது பதவியும் ஆகிய விவையெல்லாம் நாசமுறுங்காலத்தும் தான் நாசரகிதமாய் ஊழிதோறும் அம்மலை வளரா நிற்கும். பின்னும் அரம்பையர்கள் நடனஞ் செய்யும் ஒலியும் வீணை முதலிய நரம்புக் கருவிகளின் ஒலியும், மத்தள முதலிய தோற் கருவிகளின் ஒலியும், அநேகம் யானைகள் வீறிடும் ஒலியும், அருவியாற்றின் ஒலியும் நீங்காமல் ஆகாயத்திலும் திக்குகளிலும் சென்று நிரம்பி நிற்கும். பின்னும் அவ்விடத்தில் இருக்கும் மஹரிஷிகளுக்குப் பரமசிவன் தனது சாருப்பியத்தைத் தருவதுபோல விபூதி பூசியிருத்தலாலும் அந்தப் பரமசிவனைத் தன் னகத்தே கொண்டு அசைவில்லா திருத்தலாலும் பெருகிவரும் நீரை யுடைய கண்களாலும் அத் திருக்கயிலாய மலையும் தனதுருவத்தை விரித்தாற் போலக் கல்லென் றொலித்து வருகிற அருவியாற்றை யல்லதுவேதாந்த முடிவில் விளங்குகின்ற பரஞ்சோதியைத் தரிசித்து வளருகிற மகரிஷிகள் கண்களும் ஆனந்தக் கண்ணீராகிய ஆற்றைக் கொண்டு வளரும். பின்னும் கோட்டுப்பூ-நிலப்பூ-நீர்ப்பூ-கொடிப்பூ ஆகிய நால்வகை மலர்களைக் கொண்டு உள்ளங் கனிந்து வருகிற பாடல்களாகிய பூக்களைக் கொண்டு நமது கடவுளாகிய சிவபெருமா னுடைய திருவடிகளிலே அருச்சிக்கின்ற மஹரிஷிகள் கூட்டங்களும் ஒரு பக்கத்தில் சூழ்ந்திருக்கப்படும். பின்னும் யானைகளும் புலிகளும் படங்களையுடைய பாம்புகளும் தங்கள் முன்னோர்களாகிய ஐராவத முதலியனவும், வியாக்கிரமபாதரும் பதஞ்சலியாரும் போற்றுதலான திரிநேத்திரதாரியான மெய்யான தபோதனர்களை நினைத்து பத்தி பண்ண மேலுலகமும் இவ்வுலகமும் புகழத்தக்கது.

# புராண வரலாறு

எப்பொழுதும் அளவில்லாத பெருமையையுடைய அந்த வெள்ளி மலைமேல் நீலகண்டனுகிய தேவரைக் காத்த அந்தப் பரமசிவன் கோயிலுக்குமுன்னே சிவதீர்த்தங்களில் சிறந்ததா யிருக்கும் தீர்த்தக் கரையில் சந்திரகாந்தக் கல்லில் நவரத்தினங்களைப் பதித்து தேவதச்சனுல் செய்த ஆயிரக்கால் மண்டபம் ஒன்றுண்டு. அந்த மண்டபம் நக்ஷத்திரங்களுடனே பூரணசந்திரன்வந்து தரிசனஞ் செய்வதற்குச் சமயம் பார்த்துக்கொண்டிருப்பதுபோல விளங்கும். அதில் வேங்கையாசனத்தின்மேல் பதினெண்புராணமும் அருளிச்செய்த சூதபுராணிகர் எழுந்தருளி யிருந்தார். அப்போது அந்தச் சிவதீர்த்தத்தில் வந்து ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தன முதலிய அநுஷ்டானங்களைச் செய்து சந்திரசேகரனைத் தியானித்துத் துதித்துக்கொண்டு சம்புபத்தன், சதாநந்தன், உத்தமன், மகோதரன், உக்கிரவீரியன், பிரசண்டன் முதலான முனிவர்களெல்லாரும் பரமசிவனிடத்து மிகுந்த அன்பினரான சூதபுராணிகரை வணங்கித் துதித்து ஒரு காரியத்தை வினவுவா ராயினர்.

வேதம், ஆகமம், புராணம், ஸ்மிருதி முதலாகச் சொல்லுகின்ற சாஸ்திரங்களின் நிச்சயார்த்தம உலகங்களை யெல்லாம் பெற்ற பார்வதி சமேதனே பரமென்று ஆராய்ந்தறிந்த பெருமையையுடைய மெய்ஞ்ஞான மஹரிஷியே! உமக்கு நாங்கள் சொல்லிக்கொள்வதொன்றுண்டு. அதென்னவென்றுல்? மேரு - மந்தரம் - கயிலாயம் - ஸ்ரீசைலம் முதலான இடபவாகனத்தின் மீதேறுகின்ற சிவலோகத்தை யுடையவன் வாசம்பண்ணுகிற தலங்கள் அநேகம். எல்லாரும் அழிவில்லாத போகத்தையும் மோக்ஷத்தையும் அடையச் செய்வனவென்று அந்தத் தலங்களின் காரணமும் மகிமையும் எங்கள் மனதுக்கிசைய அருளிச்செய்தீர். அப்படி ஐயம், திரிபு, அறியாமை ஆகிய குற்றங்கள் போக நீர் அருளிச்செய்தும், நாங்கள் சிற்றறிவுடையவர்களாகையால் தெரிந்திலோம். இன்னமும் நாங்கள் மயக்கத்தை யுடையோமாக இருக்கிறதினுலே அந்த மயக்கந் தீர அருள் செய்யவேண்டும். அதாவது, சிவஸ்தலங்களுக்குள்ளே சிறந்த தலமும் சிறந்த தீர்த்தமும் வேண்டினேருக்குப் போக மோக்ஷங்களை அருளுகின்ற மூர்த்தியும் ஆக வேதாந்தங்களின் அறிவுக் கெட்டாதிருக்கிற பரஞ்சோதியுடைய ஒரு தலத்தைச் சொல்ல வேண்டுமென்றுர்கள். அப்படியவர்கள் சொன்னபோது அவர்களுக்கு முன்னே முகமலர்ச்சியாய் சூதபுராணிகரும் சிவஸ்தலங் களுக்குள் விசேடமானதை ஆராய்ந்து பரமசிவனுடைய தலங்களில் கேட்டவுடன் மோக்ஷத்தைத் தருவதாகிய ஒரு தலமுண்டு. அதாவது: பதினெண்புராணத்திலொன்றுகிய ஸ்காந்தம் ஆறுசங்கிதையை யுடையது. அவ்வாறும்

சனற்குமாரரும் - சூதரும் - சங்கரரும் - விஷ்ணுவும் - பிரமாவும்-சூரிய னும் தங்கள் தங்கள் பெயரினுற் சொல்லப்பட்டன. அவற்றில் சங்கர சங்கிதையைப் பரமசிவன் பார்வதிக்குச் சொல்லும்போது அவள் மடியிலிருந்து குமாரக்கடவுள் நன்ருகத் தெரிந்தார். அவர் தம்மை வழிபடுகின்ற அகத்திய முனிவருக்கு உபதேசித்த நாள்முதல் அகத் திய சங்கிதை யென்று பெயராயிற்று. அந்த அகத்திய சங்கிதை பரமசிவனுடைய திருவடி நிழலாகிய பேரின்ப வீட்டைத் தருவதாகிய ஒரு தலத்தை விசேடித்துச் சொல்லுகிறது. அப்படி விசேஷித் துச் சொல்லுகிற தலம் எதுவென்ருல் திருவாலவா யென்றெருவர் சொல்ல, கேட்டவுடனே மோக்ஷத்தைத் தருவது என்றருளிச்செய்த சூதபுராணிகரை முமுக்ஷுக்களாகிய முனிவர்க ளெல்லோரும் அந்தத் தலத்தை இன்னதென் றருளிச்செய்ய வேண்டுமென்று பிரார்த் திக்க வியாசர் மாணுக்கராகிய சூதமுனிவர் முறையாகச் சொல்லத் தொடங்கினுர்.

பிரமதேவன் சாஸ்திரோக்தப்படி அசுவமேதயாகம் செய்ய வேண்டி, இறக்க முத்தியைத்தரும் காசியினிடத்தில் தனது புத்திர ருடனே முன்னெருகாலத்தில் அகத்தியன் - வியாசன் - நாரதன்-சன கன் - சனந்தனன் - சனற்குமாரன் - கௌதமன் - பராசரன் - வாம தேவன் - வான்மீகி - வசிஷ்டன்-சுகன் முதலான முனிவர்களுடனே சென்று பத்து அசுவமேதயாகம் முடித்து யாகஞ் செய்வித்த அம் முனிவர்களுக்குச் செய்யும் உபசாரங்களெல்லாஞ் செய்து சத்திய லோகத்துக்குப் போனபின்பு அந்த முனிவர்க ளெல்லோரும் காசி விசுவநாத சுவாமியைத் தரிசித்து வணங்கிப் பின்பு அங்குள்ள முத்தி மண்டபத்தில் தர்மார்த்த காம மோக்ஷங்கள் சனகாதிகளுக் கருளிச் செய்த தக்ஷிணுமூர்த்தி சந்நிதியிலிருந்து நாரத மகாமுனிவரைப் பார்த்து தலம்-தீர்த்தம்-மூர்த்தி என்கிற மூன்றுஞ் சிறந்தனவாகிய ஒரு சிவஸ்தலத்தைச் சொல்லியருளவேண்டு மென்ன, அந்த நாரத பகவான் கலைஞானங்க ளெல்லாந் தெரிந்த சனற்குமாரரிடத்தில் தெரிந்துகொண்டவர் வேதவியாச ராதலால் அவரிடத்தில் வந்தனை வழிபாடுடனே கேளுங்களென, அந்த வேதவியாசர் சுப்பிரமணிய ரிடத்தில் வேதாகமங்களெல்லாம் தெரிந்து கொண்டவர் அகஸ்திய ராதலால் அவரைக் கேளுங்களென்ன, அம் முனிவர்கள் அகஸ்திய யரை வணங்கி, வாதாபி வில்வலனைக் கொன்ற தருமஸ்ரூபியாய் விந்தகிரியை யடக்கின தலைமலையே! அலைகடலைக் குடித்த கிருபைக் கடலே! அருமையான முத்தமிழைப் பொழிந்த மேகமே! தராசு முனைபோலே தென்திசையைச் சமமாகச் செய்த ஆதாரமே! என ஆயிரம் வேதம்போலத் துதிசெய்து மூவகைச் சிறப்புள்ள ஒரு சிவஸ் தலத்தை அருளிச்செய்ய வேண்டுமென்ன, அவர் முகமலர்ந்து மாக னந்தன் என்னும் மறையவனும் அவன் மனைவியும் மக்களிருவரும் மூன்ருும் யுகத்தில் பாவத்தாற் கோழிகளாய்ப் பிறந்து முத்தி மண்ட பத்தில் வந்து முத்தியடையவரென்ற சேவல்களையும், கணபதியையும்,

முருகக் கடவுளையும், தக்ஷிணாமூர்த்தியையும் வணங்கி அங்கயற் கண்ணியையும் சோமசுந்தரக் கடவுளையும் தியானித்துச் சமாதிகூடி ஆனந்த பரவசமாகி உமாதேவிக்கும் பரமசிவன் அருளிச் செய்த சங்கரசம்ஹிதையை எனக்குச் சுப்பிரமணியக்கடவுள் உபதேசித்தார். அந்தச் சங்கரசம்ஹிதையில் செய்யக் கூடாத தவங்களெல்லாஞ் செய்து மனந்தெளிந்து மிகவும் அருமையாகப் பெறுகின்ற மோக்ஷத்தை எளிதாகக் கேட்டவுடனே பெறச்செய்யும் ஒரு தல முண்டு. அது மூன்று சிறப்பு முள்ளது. எல்லாச் சிவஸ்தலங்களி லுஞ் சிறந்தது. வேதார்த்தமாகி விளங்குகின்ற பரமசிவம் அரு ளுருக்கொண்டு அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்தருளின திரு வாலவா யென்னுந் தலம் மண்ணுலகில் சிவலோகமென்று சொல்லப் படும். அம் மூவகைச் சிறப்புமுள்ள தலமகிமையை முருகக் கடவுள் எனக்குச் சொல்லியபடியே சொல்லுகிறேன். முனிவர்களே! நீங்கள் பராமுகமின்றிக் கேளுங்களென்று சொல்லத் தொடங்கினர்.

திருக்கயிலாயப் புகழ்ச்சியும், புராணவரலாறும் முற்றிற்று.

---

## ஸ்தல விசேடம்

---

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

நாட்டமொரு மூன்றுடைய நாயகனுக் கன்புடையீர் நயந்து நீவிர்
கேட்டதல மீண்டுரைத்த திருவால வாயதனுட் கிளைத்துப் பொன்னந்
தோட்டலர்தா மரைமுளைத்த தொருதடமுஞ் சுந்திரச்செஞ் சோதிஞான
ஈட்டமென முளைத்த சிவலிங்கமுமொன் றுமுன்வின்னுமிசைப்பக் கேண்மின்.

உரை: திருநேத்திரங்களையுடைய சிவபெருமானுடைய அன்பு நிறைந்த முனிவர்களே! விரும்பி நீங்கள் கேட்டதலம் இப்போது நாம் கூறிய திருவாலவாயாம். அத்தலத்தில் கிளைத்துப் பொன் னிறம் வாய்ந்த இதழ் அலர்ந்த தாமரை முளைத்த ஒரு தடாகமும், அழகிய சிவந்த சோதி மயமாகிய ஞானக்கூட்டம் போலத் தோன்றி யருளிய சிவலிங்கமொன்று மிருக்கின்றன. இன்னமுஞ் சொல்லு வேன் கேளுங்கள்.

திருநேத்திரதாரியாகிய பரமசிவனுக்கு அன்புள்ள முனிவர்களே! நீங்கள் விரும்பிக் கேட்ட தலம் இப்போது சொன்ன திருவாலவாயே யாம். அந்தத் தலத்தில் பொன்போலும் நிறத்தையுடைய இதழ்க ளுடனே மலர்ந்த தாமரைத் தடாகமும், அழகிய சிவந்த சோதியான ஞானசந்திரன்போல உண்டாகிய ஒருசிவலிங்கமும் உண்டு. அந்தத் திருவாலவாய்க்கு நிகரான ஒருதலமும், தெய்வீகமான மணம் பரிமளிக் கின்ற பொற்றாமரைத் தீர்த்தமும், அந்தத் தீர்த்தத்தின் பக்கத்தில் ஞானரூபமாய் விளங்குகின்ற சோமசுந்தரக் கடவுள்போல் இகபர போகமும், அழியாத வீடும், தருகின்ற கடவுளும் திரிலோகத்தினு

மில்லை; இது சத்தியம். தலம், தீர்த்தம், மூர்த்தி என்னு மூன்றில் முன்னர், தலமான்மியத்தைச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன். எப்படியென்றால், எல்லா வுலகங்களிலும் புண்ணிய க்ஷேத்திரங்களே அதிகம்; அந்தப் புண்ணிய க்ஷேத்திரங்களிலும் சிவக்ஷேத்திரம் அதிகம்; அந்தச் சிவக்ஷேத்திரங்களிலும் அறுபத்தெட்டுச் சிவஸ்தலங்க ளதிகம்; அந்த அறுபத்தெட்டிலும் பதினாறு தலங்கள் அதிகம்; அந்தப் பதினாறிலும் நான்கு தலம் அதிகம். அவையாவன: சிதம்பரம், காசி, காளத்தி, திருவாலவாய் ஆகிய இந்த நான்கினும் திருவாலவாய் அதிகம். எப்படி யென்றால்: சிதம்பரம் தரிசிக்க முத்தி, காசி அந்த நின்று இறக்க முத்தி; காளத்தி பூசிக்க முத்தியைக் கொடுக்கும்; திருவாலவாய் என்று கேட்டவுடனே இகபர போக மோக்ஷங்களைக் கொடுக்கும். இதை யல்லாமல் பரிபூரணமா யெங்கும் நிறைகின்ற பரமசிவம் சிவஸ்தலங்களையெல்லாம் உண்டாக்குதற்காக முன்னே இந்தத் திருவாலவாயை யுண்டாக்கி அதில் வாசஞ் செய்தருளினார். ஆதலால் திருவாலவாயெனக் கேட்டவர்களே அறத்தைப் பெறுவார்கள். திருவாலவா யென்று தியானித்தவர்களே பொருளைப் பெறுவார்கள். திருவாலவாயில் சோமசுந்தரக் கடவுளைத் தரிசித்தவர்களே இன்ப நலத்தைப் பெறுவார்கள். திருவாலவாயில் எப்பொழுதும் வசிப்பவர்களே மோக்ஷவீட்டைப் பெறுவார்கள். இன்னமும் கங்கா நதி சூழ்ந்து வருகிற காசி முதலிய ஸ்லங்களில் வசிப்பவர்க்கு, முன்னே சீவன் முக்தியைக் கொடுத்துப் பின்பு விதேகமுத்தியையும் கொடுக்கும் ஆதலால் மகிமைபால் திருவாலவாயே அதிகம். இந்தச் சீவன் முத்திபரமாகிய திருவாலவாய்க்கு நிகரான தலங்கள் எந்த லோகங்களிலும் இல்லை. அதற்கதுவே ஒப்பாகும். ஆதலால் இந்தத் தலத்தைவிட்டு வேறு தலங்களில் சென்று தவவிரதங்களைச் செய்பவர், கையிற் கிடைத்த பாற்சோற்றைவிட்டுப் புறங்கை நக்குகின்றவர்களை ஒப்பாவார். ஆகையால் இந்தத் தலமகிமையைச் சொல்ல வல்லவர் யாவர்? ஒருவருமில்லை.

இன்னும் வேறு தலங்களிற் சென்று அசுவமேதம், வாசபேயம், சோடசாகம், அக்கினிட்டோமம்' இராஜசூயம் முதலிய யாகங்கள் செய்து முடித்த பலனும், தெரிசபூர்ண முதலிய விரதங்கள் செய்த பலனும், என், நெய், அன்னம், கன்னி, குதிரை, தேர், யானை, வீடு, பசு, வெள்ளி, பொன். ஆபரணம், வஸ்திரம், விளை நிலம், அடிமை முதலிய தானங்கள் செய்த பலனும், காசி முதலிய ஸ்தலங்களில் வாசம் பண்ணிய பலனும், கங்கை, யமுனை, சரஸ்வதி, காவிரி, கிருஷ்ணை, துங்கபத்திரி, பாலி, தாம்பிரபரணி முதலான தீர்த்தங்களாடின பலனும், இந்தத் திருவாலவாயில் எப்போதும் வாசஞ் செய்கிறவர்களுக்குக் கிடைக்கும். இன்னம் வேறிடங்களில் செய்த பிரமஹத்தி, திரவிய சோரம், கள்ளுண்ணல், குருபத்தினியைப் புணர்தல் முதலிய பாவங்களெல்லாம் இந்தத் தலத்தில் வந்து வசிப்பவர்களுக்

குத் தீரும். வேறு தலங்களில் மாசந்தோறும் செய்த சந்திராயண விரதபலன் இத்தலத்தில் ஒரு ராத்திரி யுண்ணும் உணவினு லுண்டாகும். வேறு தலங்களில் ஒருமாதப் பட்டினியால் வரும் பலன், இந்தத் தலத்தில் ஒரு நாள் பட்டினியால் உண்டாகும். வேறு தலங்களிற் சென்று நான்கு மாதம் விரதஞ் செய்யும் பலன், இந்தத் தலத்தில் அநுஷ்டிக்கிற ஒரு அஷ்டமி விரதத்தாலுண்டாகும். வேறு தலங்களிற் சென்று ஆறுமாதஞ் செய்யும் விரதபலன், இந்தத் தலத்தில் ஒரு சோமவார விரதத்தாலுண்டாகும். வேறு தலங்களில் ஒருவருஷம் ஆகாரமில்லாமல் செய்கிற விரதபலன், இந்தத் தலத்தில் ஒரு மகா சிவராத்திரி விரதத்தால் உண்டாகும். இன்னும் இந்தத் தலத்தில் இந்திரிய நிக்கிரகஞ் செய்து மூன்று காலமும் திருப்தியாக உண்டு சுகித்திருந்தாலும், வாயுபக்ஷணம்பண்ணிச் செய்கிற பெரிய தவத்தை யுடையவனுவான். இந்தத் தலத்தில் யாராகிலும் பிராமணருக்கு ஒரு சுயம்பாகமும், தவசிகளுக்கு ஏதேனும் பிக்ஷையுங்கொடுத்தால், வேறு தலங்களிற் செய்த சோடச மகா தான பலனைப் பெறுவார்கள். இன்னமும் எக்காலமும் எல்லாத் தலங்களிலும் வாசம் பண்ணின பலனும், எல்லாத் தீர்த்தங்களிலும் ஸ்நானஞ் செய்த பலனும், பலவிதமான பூசை செய்த தவப்பலனும், பலவகைத் தவத்தால் வரும் பலனும், பலவகை மந்திரசெபம் பண்ணின பலனும், பலவகை நூல்களைக் கேள்வியால் ஆய்ந்துணர்ந்த பலனும், பலவகை யோக ஞானங்களை அனுஷ்டித் தடங்கிய பலனும், இந்தத் திருவாலவாயில் எப்போதும் வசித்திருப்பவர்கள் பெறுவார்கள். ஆதலால் இந்தத் தலமகிமையைத் தெரிந்து கொள்ளுவது பரமசிவமே என்பதனுலே இரு வினையை யொழிக்க வேண்டுபவன் இந்தத் தலத்திற் சென்று வாசஞ் செய்ய வேண்டும்.

முன்னொரு காலத்தில் பிரமதேவன் கயிலாய முதலிய தலங்களெல்லாம் ஒரு தட்டிலிட்டு, இந்தத் திருவாலவாயை ஒரு தட்டிலிட்டு நிறுத்துப் பார்க்கும்போது திருவாலவாய் மிகவும் கனமாக விருந்ததைக் கண்டு உலகத்தில் சிறந்த தலம் இதுவே யென்று புகழ்வானுன். இந்தத் தலப் பெருமையைச் சொல்ல வல்லவர்கள் யார்? பின்னும் நல்லோர்கள் இந்தத் தலத்துக்குப் பெயர் சிவநகரம். கடம்பவனம், ஜீவன்முத்திபுரம். கன்னிபுரம், திருவாலவாய், பூலோக சிவலோகம், சமஷ்டி விச்சாபுரம், கூடல், துவாதசாந்தத்தலம் என்று காரணங் கொண்டு சொல்லுவார்களெனத் தல விசேடத்தைச் சொன்ன அகத்தியருக்கு முன்னிருந்து கேட்ட முனிவர்கள் மிகவும் அதிசயத்தை யடைந்து, ஐயா! தலப் பெருமையை நன்ருகச் சொன்னீர். நாங்கள் கேட்டுத் தேகமெடுத்த பிரயோசனத்தை இன்று அடைந்தோம். இனி தீர்த்த விசேடத்தை அருளிச்செய்ய வேண்டுமென்ன, முறையே சொல்லத் தொடங்கினர்.

ஸ்தல விசேடம் முற்றிற்று.

---

# தீர்த்த விசேடம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கன்னகன் குழுமி மாடக் கடிபொழி லால வாயின்
அன்னலம் பெருமை யாரே யளப்பவ ரவிர்தன் முத்த
வெண்ணகை யுமையா ளன்பு விளமுகச் செல்வி போலத்
தண்ணறுங் கமலம் பூத்த தடப்பெருந் தகைமை சொல்வாம்.

உரை: இடமகன்ற சிகரங்கள் பொருந்திய வீடுகளையுடைய வாசனைத் தங்கிய சோலைகள் சூழ்ந்த திருவாலவாயில் வீற்றிரா நின்ற சோமசுந்தரக் கடவுளுடைய பெருமையை எவர்கள் அளவிட்டுச் சொல்லத்தக்கவர்கள்? பிரகாசமுற்ற முத்தம்போல வெண்மையாகிய நகையையுடைய மீனுட்சிதேவியின் அன்பு விளைகின்ற திருமுகத்தின் அழகினைப் போலக் குளிர்ச்சி பொருந்திப் பரிமளியாநின்ற தாமரை மலர் பூத்த தீர்த்தத்தினது மிகுந்த பெருமையைச் சொல்லுகின்றேம்.

நதிகளுக்கெல்லாஞ் சிரேஷ்டமாகிய கங்கை, காவிரி முதலிய நதிகளும், இந்த நதிகளுக்கு வேறுருவமாகிய நதிபதி யென்கிற ஆற்று நீர், ஊற்றுநீர். மேகநீர் கூடிய கடலும் மற்ற தீர்த்தங்களும் மேகங் களும் உண்டாவதற்கு முன்னே தம்மை அபிஷேகம் பண்ணுவித் தற்குச் சோமசுந்தரக் கடவுள் தாமே உண்டு பண்ணிய தீர்த்தம். அதெப்படி யென்றுல்: அந்தச் சோமசுந்தரப் பெருந்தகையார் ஆதி காலத்தில் தமது சச்சிதானந்த சுவரூபத்துக்குத் தக்க திரிநேத்திர மும், அரவாபரணங்களும், சந்திரசேகரமும் சூலமும், கபாலமும், அங் கயற்கண்ணி யமர்ந்தபாகமும் விளங்க, விடைத்தேவர்மீ தெழுந்தருளி விநோதமாகப் பின்னு முன்னும் பக்கங்களிலும் நந்திதேவர் முதலிய கணங்கள் சூழச் சென்று தமது திருமேனி ஒளியினுலே எட்டு திக்கும் விளங்கப் பாதாள லோகமும், சுவர்க்க லோகமும் பிரமலோகமும், விஷ்ணுலோகமும், அதற்கு மேலாகிய தமது சிவலோகமும், உலாவி விளையாடித் திரும்பும்போது. இந்திரனும், பிரமனும், விஷ்ணுவும் முன்னே வந்து வணங்கித் துதிக்க அவர்களுக்கு வெறுப்பில்லாத இன்பத்தைக் கொடுத்துப் பின்பு தமது லோகத்திற்கு வந்து தம்மை நீங்காத கணங்களுக்குத் திருவருள் செய்து இலிங்கத்தி லெழுந்தரு ளும்போது நந்திதேவர் முதலிய சிவகணத் தலைவர் எல்லோரும் வணங்கி அநேக வகையால் துதித்துக் கேட்டுக் கொண்டதாவது: சுவாமி! இந்த இலிங்கசுவரூபத்துக்கு அபிஷேகம் பண்ணவும் அடி யேங்களெல்லாம் ஸ்நானம் பண்ணிப் பரிசுத்தராகவும் உலகத்தில் தீர்த்தங்களும் நதிகளுமில்லை ஆதலால் இம்மை மறுமைப் பலன்களைத் தருவதாக ஒரு தீர்த்தம் இவ்விடத்தில் உண்டுபண்ண வேண்டு மென்று பிரார்த்திக்க, அவர்கள் நிமித்தம் அந்த இலிங்கத்துக்கு அடுத்த தென்கீழ்த் திசையில் தனது முத்தலைச்-சூலத்தை யூன்றினுர்.

...ன்றுமளவில் பெரிய பூமியையும் நாகலோகத்தையும் பிரமனது அண்ட கடாகத்தையும் கிழித்தது. அப்படிக் கிழித்தவழியே பெரும் புறக் கடல்போல நீர்பெருக, அப்பெருக்கு அதிகப்படாமல் தமது திருக்கரத்தால் அமைத்துப் பின்பு தமது சடையிலிருக்கிற தெய்வீகமான சுத்த ஜலத்தைத் தூவிக் கலந்து மகா தீர்த்தமாகச் செய்து சுவாமியானவர் நந்திதேவர் முதலானவர்களைப் பார்த்து இந்த மகா தீர்த்தத்தை எல்லாத் தீர்த்தங்களுக்கு முன்னே நாம் உங்கள் பொருட்டு உண்டாக்கினதால் ஆதி தீர்த்தமென்றும், இனி யுண்டாகுந் தீர்த்தங்களுக்கெல்லாம் மேலா யிருந்ததினால் பரம தீர்த்தமென்றும், இதில் மூழ்கினோர் நல்ல மங்கலத்தைப் பெறுதலினால் சிவதீர்த்தமென்றும், ஞானத்தைத் தருதலால் ஞானதீர்த்த மென்றும், மோக்ஷத்தைத் தருதலால் மோக்ஷதீர்த்த மென்றும் இதற்குப் பெயர்கள். இன்னும் இதில் மூழ்கித் தருப்பணஞ் செய்து தானங் கொடுத்து அவ்விடத்திலிருந்த ஸ்ரீ பஞ்சாட்சரத்தைத் தியானத்துடனே செபித்து நம்மிடத்தில் வந்துவணங்கி வலஞ்செய்து துதித்து எம்மைச் சந்தோஷிப்பித்தோர்கள் தேக மெடுந்ததினால் அடைய வேண்டிய பலன் எதுவோ, அதை அடைவார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை.

இந்தத் தீர்த்தத்தினாலே எம்மை அபிஷேகஞ் செய்யில் பதினாலு உலகத்திலுமுள்ள மிகுந்த பெருமையையுடைய எல்லாத் தீர்த்தங்களினாலும் அபிஷேகஞ்செய்த பலனுண்டாகும். இத் தீர்த்தத்தில் வந்து மூழ்கி இங்கே விளங்குகின்ற நமது ஸ்வரூபமாகிய இலிங்கத்தை உங்கள் மனத்தில் அன்பு பெருகப் பூசை செய்யுங்களென்று தேவதேவனாகிய சிவபெருமான் தாமும் அதில் மூழ்கிக் கணங்களையும் மூழ்குவித்து அநாதியாகிய அந்தப் பரிசுத்த இலிங்கத்தில் பிரவேசித்தார். அப்படிப்பட்ட பெருமையினாலே நந்திதேவர் முதலாயினோர் விதிப்படி அந்தச் சோமசுந்தரக் கடவுளின் திருமுடிமேல் அபிஷேகஞ் செய்து குற்றமறப் பூசித்து மனத்தில் அபேட்சித்தனவெல்லாம் பெற்றார்கள். ஆதலால் அந்த ஞானதீர்த்தத்தைக் கண்டால் பாவங்களெல்லாம் நசிக்கும். இஷ்டகாமியங்க ளெல்லாங் கிடைக்கும். மனம் பொருந்த அதில் மூழ்கும்போது முழுக்கொன்றினுக்கு உலகத்திலுள்ள தீர்த்தங்க ளெல்லாவற்றிலும் மூழ்கின பலனுண்டாகும். தேகத்தை மண் முதலியன கொண்டு சுத்திசெய்து வருண சூக்கும மந்திரத்தைச் செபித்து மூழ்கினால் பரிசுத்தமான பெரிய தீர்த்தங்களெல்லாவற்றிலும் மூழ்கி வேதப்பிராமணர்களுக்குத் தானங்களெல்லாங் கொடுத்த பலனைத் தரும்.

பின்னும் இந்தத் தீர்த்தத்தை நினைவின்றித் தீண்டினாலும் பாவத்தினின்று நீங்கிப் பெறுதற்கரிய வீட்டைப் பெறுவார்கள். இது சத்தியம். எப்படியென்றால்: (நினைவின்றித் தொட்டாலும் நெருப்புச் சுடாமல் விடுமோ? விடாது) அது போலவாம். யாவராயினும்

அதில் மூழ்கினோர் ஜீவன் முத்தி பெறுவர். அதில் முழுகிப் பெறும் பலனுக்கு, வருண மந்திர முதலிய மந்திரங்களைச் சொல்லிப் பெரிய சிவஞானத்தைத் தருகிற ஸ்நானத்தைச் செய்து பெறும் பலனெல்லாம் ஒப்பாகா. அதில் ஸ்நானமுஞ் செய்து திருவாலவாயுடையனை யும் வணங்குபவன் மேலான மோக்ஷத்தையு மடைவான். பலவித நூல்களிலுஞ் சொல்லிய பரிசுத்தங்களுக் கெல்லாம் மேலான பரிசுத் தனுமாவான். இன்னும் சிவனிடத் தன்பில்லாத பாவியானாலும் அதில் முழுகினோன் சுவர்க்கத்தை யடைவான். அன்புள்ளவனாய் முழுகித் தேவர் முதலாயினோர்க்குப் பிரீதியாகிய அரிசி, எள்ளு முத லியவற்றால் தருப்பணம் இவைகள் பொருந்தச் செய்தவன் அன் புடனே எல்லா வேள்விகளுஞ் செய்த பலனடைவான். இன்னும் இந்த ஞான தீர்த்தத்தில் முழுகிக் கரையிலிருந்து செய்கிற விரதம், பூசை, தானம், தருமம், ஓமம், தவம், செபம், தியானங்கள், மற்ற தீர்த்தக்கரையில் இருந்து செய்கிற இவைகளுக்குக் கோடிபங்கதிக மாகும். இன்னும் ஜன்ம நக்ஷத்திரத்தில் அந்தத் தீர்த்தத்தில் முழுகினால் இனிவரும் பிறவிப்பிணி யொழியும். சித்திரை, கார்த் திகை மாசி ஆகிய மாதங்களில் இதில் முழுகிப் பிதுர்களுக்குப் பிண்டங் கொடுத்தவர் தாங்கள் முழுகிக் கிடக்கிற பிறவிக் கடலி னின்றுங் கரையேறுவர். பின்னும் அதில் முழுகிப் பிதுர்க்களது மனமாசு தீரச் செய்யத்தக்க கடனைச் செய்தவர்கள் எத்தனை எள்ளுத் தானம் பண்ணினாலும் ஒவ்வோரெள்ளுக்கு ஆயிரம் வருஷமாக அத்தனை யெள்ளுக்கும் அத்தனை ஆயிரம் வருஷம் அவர்களை விண் ணுள வைப்பாராவார். இன்னும் மூன்று லோகத்திலுள்ள தீர்த் தங்களெல்லாம், ஆதிதீர்த்தமென்னுங் காரணத்தால் வணங்கத்தக்க இந்தத் தீர்த்தத்தில், எக்காலமும் முழுகி அந்தத் தீர்த்தத்தினாலே எக்காலமுஞ் சிவனைப் பூசிப்பவர்கள் இந்தப் பிறவிக்கடலைக் கடந்து மோக்ஷக்கரையைச் சேருவார்கள். இன்னும் விடக்கூடாத நித்திய வேள்வியும், பெரிய விரதங்களும், தானங்களும், தவங்களும், தரும பலன்களும் எல்லாம் இந்தத் தீர்த்தக்கரையிலிருந்து சிவார்ச்சனை பண்ணுவோருக்குக் கொடுக்கும் புண்ணியத்தில் கோடியி லொன் றுக்கு மொப்பாகா. இன்னும் முற்பிறப்பில் பிறவிகள்தோறும் நியமமாக நல்லொழுக்கத்தைக்கொண்டு மெய்யான விரதமும், தான மும், தவமுஞ்செய்து பரிசுத்தராய்ச் செவ்வையான நல்வழியிலே நின்ற சித்தருக்கே அல்லாமல் இப்பிறப்பிற்சென்று நித்தியம் ஸ்நானஞ் செய்ய இந்தத் தீர்த்தங் கிட்டாது.

இன்னும் அமாவாசைத் தினமும், மாதப் பிறப்பும், கிரகண புண்ணிய காலமும், விதிபாத யோகமும் ஆகிய இந்த நாள்களில் இவைகள் புண்ணியகாலமென்று கருதி முழுகித் திதிகளும், தருப் பணங்களும் தானங்களும் செய்தல், வேதம் ஓதுதல் ஆகிய இவை களின் தொகை ஒன்றிற்கொன்று அதிக பலன். அம் முறைப்படி

நூருயிர நூருயிரம் ஓரனந்தமாகும். இன்னும் சித்திரை ஐப்பசி இம்மாதப் பிரவேசகாலத்தில் இதில் முழுகினுல் ஒரு பதினுயிரம் பங்கதிகமாம், ஆடி தை இம்மாதப் பிரவேசங்களில் முழுகினுல் இருபதினுயிரம் பங்கதிகமாம். சோமவாரத்தில் அமாவாசை வருவது தெரிந்து முழுகி வேதமோதுதல் முதலியவற்றைச் செய்தால் அளவில்லாத பங்கதிகமாகும். இன்னும் பிரயாகையில் தைமாத முப்பதும் முழுகிப் பெறுகிற பலன் இதிலொரு நாள் முழுகுகிறவன் பெறுவான். இன்னும் விரதசீலத்தைக் கொண்டு விடாமல் ஒருவருஷம் இதில் முழுகி அங்கயற்கண்ணியையும் சோமசுந்தரக் கடவுளையும் பூசிப்பார்களானுல் மலடிக்கும் நல்ல பிள்ளைப்பேறுண்டாகும். இன்னும் எட்டுத் திக்கிலுமுள்ள ஆறு குளங்களாகிய தீர்த்தங்களெல்லாம் இந்தத் தீர்த்தத்தில் கோடியிலொரு பங்குக்கு ஒப்பாகா. இதைக் கண்டால் தருமம், தொட்டால் அர்த்தம், அள்ளினுல் காமம், முழுகினுல் மோக்ஷம் உண்டாகும். ஆதலால் அந்தப் பரமசிவன் பெயரிட்ட காரணங்களை யல்லாமல் இன்னமும் இந்தப் பரிசுத்தமான தீர்த்தத்திற்குப் பெயர்கள் சுவாமி சடையிலிருக்கிற கங்காசலங் கலந்ததனுலே சிவகெங்கை யென்றும், எல்லாத் தீர்த்தங்களுக்கும் உத்தமமாய் விளங்குதலினுலே உத்தம தீர்த்தமென்றும், பொன்னிறமான தாமரை மலர்ந்ததினுலே பொற்ருமரை யென்றும், பாபமென்கிற விறகுக்கு அக்கினியாகித் தருமத்தைக் கொடுப்பதினுலே தரும தீர்த்தமென்றும், அருத்தத்தைத் தருதலினுலே அருத்த தீர்த்த மென்றும். காமத்தை யீவதினுலே காமதீர்த்த மென்றும் மோக்ஷத்தை யருளுவதினுலே மோக்ஷதீர்த்த மென்றும் விளங்கும். இன்னும் இந்த ஸ்தல விசேஷமும் தீர்த்த விசேஷமும் சொல்லக் கேட்டவர்கள் யோகமும் மோக்ஷமும் பெறுவார்கள்.

தீர்த்த விசேடம் முற்றிற்று.

---

# மூர்த்தி விசேடம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

ஆலவா யலர்ந்த செம்பொ னப்புயப் பெருந்தீர்த் தத்தின்
மேலவாம் பெருமை தன்னை விளம்புவா ரெவரே யங்கண்
நீலமா மிடற்று முக்க ணிராமய னறிவா னந்த
மூலமா விலிங்க மேன்மை முறையினு லறைய லுற்ரும்.

உரை: திருவாலவாயில் மலர்ந்த பொற்ருமரைத் தீர்த்தத்தின் மேலாகிய பெருமையை யெல்லாம் சொல்லத்தக்கவர்கள் யார்? அந்தத் திருவாலவாயில் வீற்றிரா நின்ற காளகண்டத்தையும், திரிநேத்திரங்களையும் உடையவனுய் நிராமயனுகிய சோமசுந்தரக் கடவு

ளுடைய ஞானனந்தமயமாகிய பெருமை பொருந்திய மூல லிங்கத்தின் மேன்மையையும் முறையினுல் சொல்லுகிறேம்

மஹாமேருவும், வெள்ளிமலேயும் மந்தரமும், கேதாரமும், காசியும் ஆகிய தலங்களில் பராபரமான இலிங்கங்கள் உண்டாகுமுன்னே இந்தக் கடம்பவிருக்ஷத்தினடியிலே யுண்டாகிய இந்தச் சிவலிங்கம் அந்தத் தலங்களிலுள்ள இலிங்கங்களெல்லாம் பின்பு அருட்குறியாகிய இதினின்று கிளைகள்போல உண்டாயின. இந்த விரண்டு காரணத்திறைலும் இந்தத் திவ்வியமான இலிங்கம் மூலலிங்கமென்னும் பெயராய்ப் பிரகாசிக்கும். இந்த மகாலிங்கத்தில் முப்பத்திரண்டு இலக்ஷணமுள்ள மந்திர ஸ்வரூபியான அழியாத அழகையுடையவன் இடப்பாகத்தில் உமையவருடனே கூடி அழகாக எப்போதும் விளங்குகின்ற பெருமையைக் கண்டு சோமசுந்தரப் பெருமானென்று தேவர்கள் அழகிய திருநாமம் இட்டனர்.

உலகமெல்லாம் விபாபியாய்ச் சிறந்து விளங்குகின்றவன் அறப்பெருங் கடவுளாகிய சோமசுந்தரனுதலாலே, அரிமர்த்தனபாண்டியன் கைப்பிரம்பாலடித்த அடித்தழும்பு திரிலோகமும் படலாயிற்று என்று சொல்வதாகிய சமஷ்டி ரூபமான சோமசுந்தரனைத் தரிசித்தவர்கள் மற்றத் தலங்களிலுள்ள வியஷ்டி லிங்கங்களைத் தரிசித்த பலனைப் பெறுவார்கள். எப்படியென்றல் வேரிலே கொட்டிய ஜலம் மரத்தின் கிளைகளெல்லாஞ் சென்று தழைக்கச் செய்வதுபோலாகும். அந்தப் பரமசிவன் இந்தத் தலத்திலே யல்லாமல் எந்தத் தலங்களிலும் அறுபத்துநான்கு திருவிளையாடல்களைச் செய்ததில்லை; ஆதலாலவனுக்குச் சமானமும் அதிகமும் ஆன சிறப்பும்பெற்ற உத்தமன் எந்த வுலகினுமில்லை. அவனதிகமான தெப்படியென்ருல், மலேகளில் சிறந்தது மகாமேரு, விருக்ஷங்களிற் சிறந்ததுகற்பகவிருக்ஷம், யாகங்களிற்சிறந்தது அஸ்வமேதயாகம், தானங்களிற் சிறந்தது அன்னதானம், மனிதர்களிற் சிறந்தவர்கள் ஆதி சைவப் பிராமணர்கள், தெய்வங்களிற் சிறந்தவன் சந்திரசேகரன், விரதங்களிற் சிறந்தது சோமவாரவிரதம், மந்திரங்களிற் சிறந்தது ஸ்ரீ பஞ்சாட்சர மந்திரம், மணிகளிற் சிறந்தது சிந்தாமணி, தருங்களிற் சிறந்தது சிவதருமம், சற்பாத்திரங்களிற் சிறந்தவர்கள் சிவனடியார்கள், பசுக்களிற் சிறந்தது காமதேனு, தீர்த்தங்களிற் சிறந்தது பொற்ருமரைத் தீர்த்தம், இலிங்கங்களிற் சிறந்தது சோமசுந்தர இலிங்கமே. முதலும் முடிவும் இல்லாதவனுய் எங்கும் நிறைந்தவனுய் எல்லார்க்கும் பிறப்பும் வீடுந் தருகிற பராபரச் சோதிதானே, தன்னை வணங்குவோர்க்கு இகபர போக மோக்ஷங்களை யருளுதற்கு இந்தச் சோமசுந்தரனுகிய இலிங்கத்திலே வேதங்கள் போற்ற எழுந்தருளி யிருப்பான். இந்தச் சுயம்புலிங்கத்தை அதின் வேருகிய இலிங்கங்களெல்லாம் தினந்தோறுந் தரிசித்துச் செல்லத்தக்க நிருமல சோதியான பெருமையினுலே இந்த உத்தம லிங்கத்தைத் தரிசித்தவர்கள் வாக்குமனமும் ஒடுங்கத் தம்முள்ளே களங்கமற

விளங்குகின்ற சிவபரஞ்சோதியைத் தரிசித்தவராவார்கள். இன்னமும் இந்த ஒப்பற்ற சுயம்புவை நேரே கண்டு வணங்கினவர்கள் பாவங்களெல்லாம் நெருப்புப் பொறிபட்ட பஞ்சுபோலவும், கோபம் பற்றிய தவம் போலவும், நல்ல மருந்து தின்ன வியாதிபோலவும், உலோபகுண முண்டாக உத்தம குணம் போலவும், சூரியனுதயமாக இருள் போலவும், பெருங்காற்று வீச மேகங்கள் போலவும், சிங்கங் கோபிக்க யானை போலவும், வச்சிராயுதந் தாக்க மலைகள் போலவும், காமந் தோன்ற புத்தி போலவும், சிவஞானந் தோன்ற அஞ்ஞானம் போலவும், கருடன் சீறப் பாம்பு போலவும், செருக்குத் தோன்ற கல்வி போலவும் கெடும். ஜீவன் முக்தி புரேசனைக் காலையில் தரிசித்தால் நான்கு கடலாலுஞ் சூழப்பட்ட உலகமெல்லாம் தானஞ் செய்த பலனுண்டாகும்; மத்தியானத்தில் தரிசித்தால் சற்பாத்திரத்தில் ஆயிரங் கபிலைப் பசுத் தானம் பண்ணின பலனுண்டாகும். மாலையில் தரிசித்தால் கோடி பசுத்தான பலன் உண்டாகும். அர்த்தசாமத்தில் தரிசித்தால் அஸ்வமேத பலனுண்டாகும். இப்படிப்பட்ட அதிக பலனுண்டாவது தெரிந்து சமஷ்டி விச்சாபுரேசனைக் காலை யுச்சி மாலை அர்த்த சாமம் ஆகிய காலங்களெல்லாம் வணங்கித் துதித்துப் பூசிக்க அன்பரான பரிசுத்த சீலர்கள் சஞ்சித பாவங்களெல்லாந் தீர்ந்து நிர்மல சித்தராய்க்கெடாத சிவஞானத்துடனே ஐஸ்வரியமும் பெருகப் பேரானந்தத்தில் மூழ்கி ஆணவ காமிய மாயைகளை நீக்கிப் பரமசிவனுடைய திருவடி நிழற்கீழ் வாழ்வார்கள். தரும சிவரூபியாகிய திருவாலவாயானுடைய திருநாமத்தைக் காதாற் கேட்டால் பத்துப் பிறவிகளிற் செய்த பாவங்கள் போம். நினைந்தால் நூறு பிறவிகளிற் செய்த பாவ நோய் நீங்கும். ஆலவாய்ப் பெருமானை வணங்குவோம் என்று வீட்டினின்றும் வெளியே வந்தால் ஆயிரம் பிறவிகளிற் செய்த தீராத பாவங்களெல்லாந் தீரும். அப் பெருமானைத் தரிசித்தவர்கள் ஆயிரம் அஸ்வமேதயாக பலனைப் பெறுவார்கள். உருத்திரசூக்தம் என்னும் மந்திரத்தால் தவத்தையுடைய தேவர்கள் தொழுதற்கரிய நாயகனைத் துதித்தவர்கள் ஒரு கணத்திற்கு ஆயிரம் இராஜசூய யாகஞ் செய்த பலனைப் பெறுவார்கள். இன்னும் சமஷ்டி வடிவாகிய அந்த இலிங்கத்தைக் குடங்கையளவாகிய நீரால் அபிஷேகஞ் செய்து பூசித்தவர்கள் மற்றத் தலங்களிலுள்ள இலிங்கங்களை யெல்லாம் சைவாகமத்திற் சொன்னபடியே சோடசோபசாரமும் வழுவாமல் அபிஷேகஞ் செய்து பூசித்த பலனைப் பெறுவார்கள். இன்னும் அவ்வாலவாய்ச் சுந்தரனை அப்படியே பஞ்சாமிர்தம், பஞ்சகௌவியம், தேன், பழம், சந்தனம் முதலிய கலந்து குளிர வாசனைத் திருமஞ்சனத்தால் அபிஷேகஞ் செய்து விதிப்படி பூசித்தவர்கள் பாபங்களெல்லாந் தீர்ந்து தர்மார்த்த காம மோட்சங்களைப் பெற்று வாழ்வார்கள். இன்னும் சோடசோபசாரத்தினுலும் வாசனைத் திருமஞ்சனத்தால் அபிஷேகஞ் செய்ய வல்லவர்கள் நூறாயிரம் அஸ்வமேதயாகஞ் செய்த பலனைப் பெறுவார்கள். இன்னும் வாசமிகுந்த கஸ்தூரி, மிருதுவாகிய குங்குமம், சந்தனம்

முதலிய கலந்தணிந்தவர்கள் தேவரம்பைகளுடனே வாசக்கலவைகள் பூசிக்கொண்டு இன்பத்தில் மூழ்கி வாழ்வார்கள். நறுமலர் ஒன்றால் அத்திருவாலவாயான் திருமுடிமேல் அருச்சித்தோர் அன்னியஸ்தலங்களில் நூறு சுவர்ண புஷ்பத்தால் அருச்சித்த பலனைப் பெறுவார்கள். அச் சுந்தரருக்கு ஒருதரம் தூபங் கொடுப்பவர்கள், தாங்கள் மனோ வாக்குக் காயங்களால் தெரிந்து செய்த குற்றங்கள் ஆயிரத்தி னின்று நீக்குவார். திருவமுது நிவேதிப்போர் சோறு ஒன்றிற்கு யுகமொன்றாகச் சிவலோகத்தை யடைந்து நிறைந்த போகத்துடன் வாழ்வார்கள். தாம்பூல முகவாசமுங் கொடுத்தவர்கள் நூறுகோடி தேவ வருஷம் சிவலோகத்தில் வாழ்வார்கள். ஒரு கற்பூரதீபம் கொடுப்பவர்கள் சிவசாரூபத்தைப் பெறுவார்கள். திருமஞ்சன மெடுக்கக் குடமும் கொண்டு அபிஷேகஞ்செய்யக் கலசமும், வாசப்புகை கொடுக்கத் தூபகலயமும், தீபக்காலும், மணியு முதலியவைகளையுங் கொடுப்பவர் செய்தபாவம் நீறாகப் பேரின்பக்கடலுள் மூழ்குவார்கள். சோமசுந்தரக் கடவுள் சந்நிதிமுன்னர் பல வாத்தியங்களும் ஒலிக்க ஆடல்பாடல் செய்விப்பவர்கள் செல்வக்களிப்பை யடைந்து மேகம் போல் பலவாத்தியங்க ளொலிக்கத் திரிலோகங்களும் வணங்கத் தேவரம்பைகள் ஆடக்கண்டு இராஜபோகத்தைப் பெறுவார்கள். ஒருமுறை அஷ்டாங்கத்துடனாவது பஞ்சாங்கத்துடனாவது வணங்குவோர் நமதொரு சொங்கோல் செலுத்தி அரசர்கள் வணங்க இருப்பார்கள். சந்நிதிமுன் செய்யும் ஓமம், மந்திரம், தானம் ஆகிய இவைகள் அணுவளவானாலும் மேருவளவாகும். ஆதவால் இவ் விலிங்கத்தின் பெருமையை யாராலே சொல்லிமுடியும். என்னால் தெரிந்தளவு சிறிது சொன்னேன். இந்தத் தலத்துக் கொப்பான ஒரு தலமும், இந்தத் தீர்த்தத்துக் கொப்பான ஒரு தீர்த்தமும், இந்த இலிங்கமூர்த்திக் கொப்பான ஒரு மூர்த்தியும் திரிலோகத்திலு மில்லை. இனி அந்த மூர்த்தித் திருநாமங்களைச் சொல்லுகிறேன் கேளுங்கள் :

கருப்பூர சுந்தரன். கடம்பவன சுந்தரன், கலியாணசுந்தரன், அபிராம சுந்தரன், சண்பக சுந்தரன், மகுடசுந்தரன், மான்மதசுந்தரன், பழியஞ்சுசுந்தரன், சோமசுந்தரன் ஆலவாய்ச் சுந்தரன், நான்மாடக்கூடல் நாயகன், மதுராபுரேசன், சமஷ்டி விச்சாபுர நாதன், ஜீவன்முத்திபுர நாதன், பூவுலக சிவலோகாதிபன், கன்னிபுரேசன், மூல இலிங்கம் என்று சொல்லப்படும். இன்னும் அந்த இலிங்கத்துக்கு அநேகந் திருநாமங்களுண்டு. கீழேழுலகம் உருவ முளைத்தெழுந்த அந்த இலிங்க ஸ்வரூபமே ஆதாரமாக அமர்ந்து அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்த சச்சிதானந்த ஸ்வரூபனது பெருமையை எங்கள் ஆசாரியனாகிய முருகக்கடவுள் சொன்னபடியே சொன்னேனென்று அகத்தியர் சொல்லக்கேட்ட முனிவர்கள், ஐயா கிருபைக்கடலே! அக் கடவுள் திருவிளையாடல் அறுபத்துநான்கென்றீர்; அவ்விளையாடல்கள் யாவர் நிமித்தமாக எந்தக் காலங்களில்

செய்யப்பட்டன? அவைகளெல்லாம் எங்களுக்குத் தெளியக் கிரமப் படி சொல்லவேண்டும் என்று கைகுவித்துத் தோத்திரஞ் செய்து பிரார்த்திக்க அகத்திய முனிவர் சொல்லத் தொடங்கினர்.

மூர்த்தி விசேடம் முற்றிற்று.

---

# பதிகம்

---

தேவேந்திரனுடைய பழியைத் தீர்த்த திருவிளையாடலும் வெள்ளை யானையின் சாபத்தை யொழித்த திருவிளையாடலும், பாண்டியராசன் காடுவெட்டி நகரமுண்டாக்கிய திருவிளையாடலும், மீனாட்சியான தடாதகைப் பிராட்டியார் வேள்வித் தீயினிடமாகத் திருவவதாரஞ் செய்து பூமியாண்ட திருவிளையாடலும், பரமசிவன் அந்தத் தடாதகைப் பிராட்டியைத் திருமணங்கொண்டருளி முடிபூண்டு பூபாலனஞ் செய்த பெருமை பொருந்திய திருவிளையாடலும், வியாக்கிரபாத முனிவரும், ஆதிசேஷ அவதாரமாகிய பதஞ்சலி முனிவரும் வணங்க வெள்ளியம்பலத்தில் நடனஞ்செய்த திருவிளையாடலும், பலம்பொருந்திய தோள்களையும் ஆழ்ந்த வயிற்றினையுமுடைய ஒரு பூதத்துக்கு அன்னமலையைத் தந்தருளிய திருவிளையாடலும், பின்னும் வருத்துகின்ற பசி நோயானது கெடும்படி அப்பூதத்துக்கு அன்னக்குழி அழைத்துக் கொடுத்துத் தண்ணீர் தாகத்துக்காக அலைகின்ற நீரையுடைய வையைநதியை அழைப்பித்து உண்பித்த திருவிளையாடலும், காஞ்சனமாலைக்காக ஏழுகடலையும் அழைத்த திருவிளையாடலும், தேவேந்திரனுடைய ஆசனத்திலிருந்த மலயத்துவசபாண்டியனை மறுபடியும் பூமியில் வரும்படி அழைத்த திருவிளையாடலும், சௌந்தரியத்தையுடைய உக்கிரகுமாரன் திருவவதாரஞ் செய்த திருவிளையாடலும், வளைதடி, பிரகாசம் பொருந்திய வேலாயுதம், செண்டு என்னும் இவைகளைத் தன் பிதாவினிடத்தில் உக்கிரகுமாரன் பெற்றுக்கொண்ட திருவிளையாடலும், அவன் அந்த வடிவேலைச் சமுத்திரத்தின் பெருமை கெடும்படிவிட்ட திருவிளையாடலும், பின்னும் அவ்வரசன் தேவேந்திரனுடைய மகுடத்தை வளைதடியெறிந்து அழித்த திருவிளையாடலும், பொன்மலையாகிய மகமேருவை உக்கிரகுமாரன் செண்டினால் அடித்து நிதியெடுத்த திருவிளையாடலும், முனிவர்களுக்கு சோமசுந்தரக்கடவுள் சொல்லுதற்கரிய வேதப் பொருளை உபதேசஞ் செய்தருளிய திருவிளையாடலும், மாணிக்கம் விற்ற திருவிளையாடலும், பழமையாகிய மதுரை நகரத்தின்மேல் வருணன் ஏவிய சமுத்திர நீர் வற்றும்படி தொலைத்த திருவிளையாடலும், அந்த ஒப்பற்ற பழமையாகிய மதுரையானது நான்மாடக் கூடலான திருவிளையாடலும், வட்டமாக முடித்த சடையையுடைய சித்தமூர்த்தியாய் விளையாடியதாகிய ஒப்பற்ற திருவிளையாடலும், கையில் மழுவைத் தரித்த சோமசுந்தரக் கடவுளாகிய அந்தச்

சித்தமூர்த்தியானவர் கல்லானைக்குக் கரும்பு தின்னக்காட்டிய திருவிளையாடலும், உள்ளத்திற் பொருந்திய வஞ்சனையினுல் சமணர்கள் விட்ட யானையைக்கொன்ற திருவிளையாடலும், அன்பு கொண்ட கௌரியினிடத்தில் விருத்தனுங் குமாரனும் பாலனுமான திருவிளையாடலும், சிவந்த திறமுள்ளதாகிய கான்மாறியாடிய திருவிளையாடலும், பழியஞ்சிய திருவிளையாடலும், தாயை மயக்கத்தினுல் சேர்ந்த புத்திரனுடைய மாபாதகத்தை நீக்கிய திருவிளையாடலும், மதிக்காமல் குருவின் பத்தினியை விரும்பிய சீஷனை வாள் சண்டையிற் கொன்ற திருவிளையாடலும், பொய்யை மேற்கொண்ட சமணர்கள் விடுத்த படத்தையுடைய நாகமெய்த திருவிளையாடலும், அவர்கள் விடுத்த மாயப் பசுவைக் கொன்ற திருவிளையாடலும், தரும விடையையே குதிரையாகச் செலுத்தி மெய்க்காட்டிட்ட திருவிளையாடலும், மீனக் கொடியையுடைய பாண்டியராசனுக்கு உலவாக்கிழி கொடுத்தருளிய திருவிளையாடலும், வணிகருடைய தேன்பொருந்திய மலரணிந்த குழலையுடைய மாதர்கள் மனதைக் கவர்ந்து வளையல் விற்ற திருவிளையாடலும், பகைக்காநின்ற வீரமுள்ள வேல்போன்ற கண்களையுடைய மாதர்களுக்கு அட்டமாசித்தி உபதேசித்த திருவிளையாடலும், ஒரு சோழராஜன் பொருட்டுத் திருமதில் வாயிலைத் திறந்து மூடி விடையிலச்சினை வைத்த திருவிளையாடலும், ஒரு சோழராஜன் நிலையான பகை கொண்டு போர் செய்ய அந்தப் போர்க்களத்தில் பாண்டிய ராஜன் பொருட்டுத் தண்ணீர்ப் பந்தல் வைத்த திருவிளையாடலும், பொன்னனையாள் பொருட்டு இரசவாதத் தொழில் செய்த திருவிளையாடலும், காவிரிப்பூம் பட்டினத்துக்கு அரசனுகிய சோழராஜனை மடுவில் தள்ளிப் பாண்டியனுக்கு வீரவெற்றி யருளிச்செய்த திருவிளையாடலும், மனத்துயரங் கெட உலவாக் கோட்டையை அடியவர் பொருட்டு ஒரு வேளாளனுக்கு அருளிச்செய்த திருவிளையாடலும், மாமனுகத் திருவருள் வடிவங் கொண்டு வந்து வழக்குரைத்து ஒரு வணிகனுக்குப் பொருள் கொடுத்தருளிய திருவிளையாடலும், முனிவும் ஒளியுந் தங்கிய வேலாயுதத்தையுடைய வரகுணபாண்டியற்குச் சிவலோகங் காட்டியருளிய திருவிளையாடலும், யாழ்ப்பாணருக்கு அடிமையென்று திருமுடிமேல் விறகு சுமந்து பகை தணியச்செய்த திருவிளையாடலும், அந்த யாழ்ப்பாணருக்குச் சேரராஜனிடத்திற் செல்லும்படி திருமுகங் கொடுத்துப் பொருள் கொடுப்பித்த திருவிளையாடலும், அந்த யாழ்ப்பாணர் யாழ் வாசிக்க மழைபெய்து கொண்டிருக்கும் அர்த்த ராத்திரியில் பொற்பலகை அருளிச் செய்த திருவிளையாடலும். அந்த யாழ்ப்பாணர் மனைவிக்கு நேரிட்ட இசைப் பகையை வெல்ல இராஜ சபையிலடைந்த திருவிளையாடலும், அந்த யாழ்ப்பாணருக்கு அடிமையாக வேடங்கொண்ட சோமசுந்தரக் கடவுள் பன்றியாகிப் பன்றிக் குட்டிகளுக்குப் பால் கொடுத்து உயிரைக் காப்பாற்றிய திருவிளையாடலும், வெற்றி பொருந்திய பன்றிக் குட்டிகளை மந்திரிகளாகச் செய்த திருவிளையாடலும், கரிக் குருவிக்கு வலிமையுண்டாகும்படி உபதேசஞ்

செய்த திருவிளையாடலும், நாரைக்குத் தயவுடனே கிருபாநோக்கம் வைத்து அருளாகிய முத்தியை அருளிச் செய்த திருவிளையாடலும், கூடல் நகரத்தைச் சித்தராகிய சோமசுந்தரக் கடவுளுடைய திருக் கரத்தில் அணிந்த கங்கணமாகிய நாகம் போய் வளைந்து திருவால வாயாக்கிவந்த திருவிளையாடலும், சுந்தரனென்று பேரெழுதிய கூர் மையான பாணத்தைப் பிரயோகஞ் செய்து சோழனுடைய யுத்தத் தைத் தொலைத்த திருவிளையாடலும், சங்கப்புலவருக்கு அழகிய பொற் பலகையை அருளிய திருவிளையாடலும், கவிபாடித் தருமிக்குப் பொருள் கொடுப்பித்த திருவிளையாடலும், பகைகொண்ட நக்கீரரைக் கரையேற்றி அருளிய திருவிளையாடலும் அகஸ்தியமுனிவரிடம் இயற் றமிழ் தெரியும்படி அனுப்பிய திருவிளையாடலும், ஊமையாகிய ஒரு புத்திரனால் சங்கப்புலவருடைய கலகத்தை நீக்கிய திருவிளையாடலும், கொன்றைமாலை யணிந்த சோமசுந்தரக் கடவுளானவர் இடைக் காடருடன் சென்று வடவாலவாயில் வீற்றிருந்த திருவிளையாடலும், சமுத்திரத்தில் வலை வீசி மலர்கள் பொருந்திய வகிர்ந்து திருத்திய அளகத்தையுடைய உமையவளை விவாகஞ் செய்த திருவிளையாடலும், திருவாதவூரில் திருவவதாரஞ்செய்த பரிசுத்தமுள்ளவராகிய மாணிக்க வாசக சுவாமிகளுக்கு வாசனை பொருந்திய காலத்தில் மலர்ந்த செந் தாமரை மலரையொத்த திருவடிகளை முடியிற் சூட்டுதலாகிய திரு வடி தீக்ஷைசெய்து உபதேசஞ் செய்த திருவிளையாடலும், நரிகளைக் குதிரைகளாக்கிய திருவிளையாடலும், குதிரைகளை நரிகளாக்கிய திரு விளையாடலும், சர்ப்பாபரணம் பூண்ட சோமசுந்தரக் கடவுளானவர் மண்சுமந்து தம்முடைய அருமைத் திருமேனியின் மேல் பிரம்படி யைத் தாங்கிய திருவிளையாடலும், பாண்டியனைத் தீப்போல் வருத்துகின்ற கொடிய சுரநோயைத் தணித்த திருவிளையாடலும், சமணர்களைக் கழுவிலேற்றிய திருவிளையாடலும், சாக்ஷியாக வன்னி மரம், கிணறு, இலிங்கம் இம்மூன்றையும் அழைத்து ஒரு வணிக மாதைக்காத்த திருவிளையாடலும் என்பனவாம். இவை தொகையால் அறுபத்து நான்கு திருவிளையாடல்களாம். முடிவில்லாத வினைக் கூட்டஞ் சேர்தற்கு மார்க்கமாகிய அஞ்ஞானம் நீங்கிய முனிவர்களே! எக்காலத்தில் எவர் பொருட்டாகச் செய்தருளியதென நீங்கள் கேட்ட படியினால் மோற்சொல்லிய கிரமமாகவே இந்தத் திருவிளையாடல்களை விரித்துச் சொல்லுகிறேனென்று மனதிலுண்டாகிய அன்பென்னும் வெள்ளமானது மடையுடைந்து பரவத்தக்கதாகச் சோமசுந்தரக் கடவுளுடைய திருவடிகளைத் தியானித்து அளவில்லாத ஆனந்தம் மேலிடச் சொல்லுகின்றார்.

பதிகம் முற்றிற்று.

---

முதலாவது

# இந்திரன் பழிதீர்த்த படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மின்பயில் குலிசப் புத்தேள் விருத்திரா சுரனைக் கொன்ற
வன்பழி விடாது பற்றக் கடம்பமா வனத்தி லெய்தி
என்பர வாரம்பூண்ட விறைவனை யருச்சித் தேத்திப்
பின்பது கழிந்து பெற்ற பேற்றினை யெடுத்துச் சொல்வாம்.

**உரை :** பிரகாசம் பொருந்திய வச்சிராயுதத்தையுடைய தேவேந்திரனனவன், விருத்திராசுரனைக் கொன்ற வலிய பழியானது விடாமற் பற்ற அது தீரும்படி பெருமை பொருந்திய கடம்பவனத்திற் சென்று, எலும்புகளையும் சர்ப்பங்களையும் ஆரமாக அணிந்த சோமசுந்தரக் கடவுளை அருச்சித்துத் துதிசெய்து, பின்பு அந்தப் பழியை நீங்கப்பெற்ற வரத்தினை எடுத்துச் சொல்லுகிறோம்.

கிரேதாயுகத்தில் இந்திராணி மணாளனாகிய தேவேந்திரன், பஞ்சதருவின் நிழலிலே சிங்காதனத்திலிருந்து, அரம்பை முதலானவர்களது ஆடலினும் பாடலினும் ஆசைகொண்டு பார்த்துங் கேட்டும் சந்தோஷ சாகரத்தில் மூழ்கி யிருக்கும்போது, அவ்விடத்தில் சர்ப்பங்களை ஆபரணமாகத் தரித்த சிவபெருமானேயென்று சொல்லத்தக்க தம்முடைய ஆசாரியராகிய வியாழபகவான் எழுந்தருள, அவரைக் கண்டு வணங்காமல் அந்த அரம்பை முதலானவர்களின் மோகத்தில் மூழ்கியிருப்பதைக் கண்டு அந்த வியாழபகவான் போய்விட, பின்பு இந்திரனுடைய செல்வம் சிறிது குறைய, அது தெரிந்த இந்திரன் நமது ஆசாரியரைக் கண்டு வணங்காத குற்றத்தினாலே இப்படிப் பட்ட கேடுவந்ததென்று துக்கித்து, அவரிருப்பிடத்திற் போய் பார்த்துங் காணாதவனாய் மூன்று லோகங்களுந் தேடி ஆசாரியர் எங்கே போயிருப்பா ரென்று சந்தேகித்த மனத்தோடு பிரமலோகம் போய்த் தேடி, அங்குங் காணாமல் பிரமாவை வணங்கித் துதித்து நடந்த செய்திகளைச் சொல்லக் கேட்டு பிரமதேவன் ஆசாரியனை யிகழ்ந்தபாவம் கொழுந்து விட்டு வளர்ந்து பீடிக்க வருவது உள்ளே தெரிந்து ஆசாரியனைக் காணுமளவும் நீ துவட்டா புத்திரனாகிய மூன்று தலையையுடைய விச்சுவவுருவ னென்பவன் அசுரனானாலும், செய்கையினாலும் அறிவினாலும் சிறந்தவனா யிருத்தலால் அவனைக் குருவாகக்கொண்டு உன் காரியங்களை நடத்திக் கொள்ளென, அந்தப் பிரமாவின் வஞ்சனையை யறியாமல் அவரை வணங்கி மீண்டு, மிகுந்த பக்தியுடனே அந்த விச்சுவவுருவனைக் குருவாகக்கொண்டு, அவன் செய்யும் வஞ்சனைகளறியாமல், சுவாமி! ஒரு யாகஞ் செய்யவேண்டுமென்று அவனைக்கொண்டு செய்விக்க அவன்

தேவர்களுக்கு நன்மையுண்டு பண்ணுவதாக வெளியிற் சொல்லி உள்ளே கபடமாய் அசுரர்களுக்கு நன்மை வரும்படி தனக்குக் கேடு வருவது தெரியாமல் யாகஞ்செய்ய, அவன் மனத்திலொன்று வாக்கி லொன்றுமாகச் செய்கிறதை இந்திரன் ஞானதிருஷ்டியால் தெரிந்து, கோபங்கொண்டு தன் வச்சிராயுதத்தினுலே அவன் மூன்று தலைகளை யும் உடைத்துத் தனித்தனி கழுகும், பருந்தும், காகமுமாகப் பறந்து போகச் செய்து, அவனிரத்தத்தைப் பைசாசங்கள் குடிக்கும்படி செய் தான். அதனுல் விரைந்து பிரமஹத்தி இந்திரனைப் பற்றியது. அந்தப் பிரமஹத்தியைத் தேவர்கள் ஸ்திரீகள் மேலும், ஜலத்தின் மேலும் மரத்தின் மேலும், மண்ணின் மேலும் சாரும்படி செய்ய, அந்தப் பிரமஹத்தியை யேற்றுக்கொள்கிற நால்வரும் எங்களுக்கு இது விமோசனமாவது எப்படி யென்ன? பெண்களுக்கு மாதவிடாயும், நீருக்கு நுரையாயும், மரத்துக்குப் பிசினுயும், மண்ணுக்கு உவர்ப் பாயும் கழியக்கடவதென்ன, அந்த நால்வரும் இப்படி கழித்துக் கொண் டிருப்பதினுலே எங்களுக்கு என்ன பிரயோசன முண்டாகு மென்ன? பெண்கள் கர்ப்பமுண்டாகிப் பெறுமளவும் கணவரைக் கூடி வாழவும், நீர் இறைக்க ஊழிப்பெருகவும், மரம் வெட்ட வெட்டத் தழைக்கவும், மண்தோண்டினகுழி தானே அடைபடவும், ஆக இந்த நன்மைகளைக் கொடுத்தனர். பின்பு இந்திரன் தனக்குச் சம்பவித்த பெரும்பழி தீர்ந்து விளங்குகிறது தெரிந்து, துவட்டாவானவன் தனது குமாரனை இந்திரன் வச்சிராயுதத்தா லெரிந்து கொன்ருனே யென்று கோபங்கொண்டு பெருமூச்சுவிட்டு நாணங்கொண்டவனுய் பழிக்குப் பழி வாங்க நினைத்து, ஒரு கொடிய வேள்வியைச் செய்ய, அந்த வேள்விக் குண்டத்தில் அக்கினிச் சுவாலைப்போல்தோன்றுகின்றசெம் மயிர் அண்டமுகட்டைப் பொருந்த புகை தோன்றப் பெருமூச் செறிந்து கண்களிலே கோபாக்கினி சிந்த அர்த்தசந்திரன் போலும் கோரைப்பல்லைக் கடித்துத் திக்குகளும் ஆகாயமும் செவிடுபடச் சிரித்துக் கொடிய விஷத்தைப் போலே விருத்திராசுரன் தோன்றி னதைக் கண்டு, அவனை நீ போய் இந்திரனுடனே சண்டையிட்டு அவனைக் கொண்டுவா வென்றனுப்பினுன். அந்த விருத்திராசுரன் வடவாக்கினி போலக் கொதித்து வர இந்திரனும் வெள்ளை யானையின் மீதேறிப் பாவமும் புண்ணியமும் எதிர்த்தாற்போல இருவரும் எதிர்த் துப் போர் செய்யும்போது விருத்திராசுரன்மேல் இந்திரன் தன் வச்சிராயுதத்தை ஓங்கி வீச, அவன் கோபங்கொண்டு ஒரு இருப்புலக் கையைக் கொண்டு ஓங்கித் தோளிலடிக்க இந்திரன் மூர்ச்சை யாயினுன். உடனே மூர்ச்சை தெளிந்து, இந்தக் கண்டகனுடனே போர் செய்ய வலியற்ருேமென் றெண்ணிப் பிரமலோகத்துக்குப் போய்ப் பிரமாவுடனே தான் பட்ட துன்பத்தைச் சொல்ல, அந்தப் பிரமதேவன் அவ் விந்திரனை அழைத்துக் கொண்டுபோய் மகா விஷ்ணுவிடத்திற் சொல்ல, அவர் ஆலோசித்து இந்திரனை நோக்கி உன்னுடைய வச்சிராயுதம் மிகவும் பழையதாய்ப் போனதினுல் பகை

வரைக் கொல்ல மாட்டாது. வேறே புதிதாக வச்சிராயுதம் வேண்டும் அது கிடைக்கும் வகையைச் சொல்லுகிறேன் கேள்.

முற்காலத்தில் திருப்பாற்கடல் கடையும்போது தேவர்களும் அசுரர்களும் ஆயுதங்களோடு வருதல் கூடாது என்று அவர்கள் ஆயுதங்களைத் ததீசி முனிவரிடத்தில் கொடுத்து வரச் செய்தேன். பின்பு நெடுங்காலம் கடல்கடைந்து கொண்டிருந்ததனுலே ஒருவரும் வந்து அவ்வாயுதங்களைக் கேட்கவில்லையென்று அந்தத் ததீசிமுனிவர் அவ்வாயுதங்களை யெல்லாம் தம்முடைய ஞானவலியால் விழுங்கினதினுலே அவ் வாயுதங்க ளெல்லாம் ஒன்ருகித் திரண்டு அம் முனிசிரேஷ்டர் முதுகந்தண்டாயிருக்கின்றன. அது இப்போது வச்சிராயுதமாகும், நீ போய்க் கேட்குமுன்னே அந்தக் கிருபாசொரூபியான முனிவர் கொடுப்பார். நீ போய்க் கேளென்ன ; இந்திரன் தேவர்களுடனே விரைவில் அம் முனிவரிடம் போக முனிவர் கண்டு அன்புடனே முகமலர்ந்து உபசரித்து ஆசீர்வதித்து நீங்கள் மிகவும் இளைத்து வந்தீர்கள்; நடந்த சவிஸ்தாரமென்ன? ஒளியாமற் சொல்லுங்களென்ன, இந்திரன் சுவாமி! நான் எண்ணிவந்தது தேவரீர் இல்லையென்னுமல் அருளவேண்டியது, அதுவோ! அசுரர்களை யழித்து எங்கள் குடிகளை இரக்ஷிப்பது. அது வேண்டி இந்தத் தேவர்களுடனே தேவரீரை நாடி வந்தேன். அது என்னவென்ருல் உமது சரீரத்தில் உள்ளதென்று சொல்ல, எல்லாமுணர்ந்த அந்த முனிவர் சூரியனைக் கண்ட தாமரை போல முகமலர்ந்து, நாய் நமதெனவும், நரி நமதெனவும், தாய்தந்தை நமதெனவும், யமன் நமதெனவும், வியாதியும் பேயும் நமதெனவும் மனத்தி லெண்ணுவதுபோல நாமும் நமதென்று எண்ணப்படுகிற இந்தச் சரீரம் யார்க்குத்தான் சொந்தமாகும். பாம்புத் தோலும், பறவைக்கூடும், தானென்று சொல்லத்தக்கவோ ? அதுபோற் கூத்தாடிகள் போலப் பஞ்சேந்திரியங்கள் வாழுகிற தேகத்தை நானென்று எண்ணத் தக்கதோ? நடுவு நிலைமையும் அருளுடைமையும் இல்லாத அசுரர் கெடவும், அவர்களாலே துன்பநோயைக் கொண்ட நீங்க ளெல்லோரும் சுகத்தையடையவும், இந்திரனே எனதுடம்பைக் கொடுத்து அறத்தையும் புகழையும் யான் பெறுவனேயானுல் இதைவிட நான்கொண்ட வுடம்பாலடையும் பிரயோசனம் வேறே யாதென்று சிவபக்த சிகாமணியாகிய முனிவர்பெருமான் அந்தக்கரணங்க ளொருமித்து எழுகிற கருத்து அறிவையீர்க்க நின்று பிரமநாடியாகிய வழியைக்கொண்டு கபாலங்கீண்டு விமானமேறி, மோக்ஷலோகம்போய் வாழ்ந்திருந்தார். பின்பு அந்த முனிவராகிய வள்ளல் கொடுத்த ஆயுதங்களெல்லாங் கூடிய முதுகந்தண்டைச் சத்துருக்களை யழிக்கத்தக்க வச்சிராயுதமாகச் சமைத்து விசுவகர்மன் ஆசீர்வதித்துக் கையிற் கொடுக்கப்பெற்று மின்னலுடனே விளங்கிய மேகம்போல இந்திரனுனவன் வஞ்சனையால் வென்றுபோன விருத்திராசுரனைக் கொல்லுதற்கு நால்வகைச் சேனைகளும் புடைசூழ்ந்து

வரச் சென்று விருத்திராசுரனை யெதிர்க்க அவனும் வடவாக்கினி யானது மலைபோலோங்கிக் கொதித்து வந்தாற்போலக் குரோதத் துடனே தனது சேனைகள் சூழ யுத்தஞ் செய்ய ஆரம்பித்தான்,

அப்போது தேவசேனு வீரர்கள்மேல் அசுரசேனு வீரர்கள் நெருங்கி இடியேறுபோலக் கர்ச்சிந்துத் தங்கள் சாமர்த்தியத்தைச் சொல்லுகையில் வில்லையெடுத்து நாணேறிட்டுக் குணத்தொனி செய்து பாணவருஷங்களை அளவில்லாமற் பொழிந்தார்கள். சிலர் கையிலுள்ள வேல் சக்கரம் முதலிய ஆயுதங்களை விட்டார்கள். அதற் குத் தேவர்கள் நெருங்கி மலைபோலுந் தோள்களைத் தமது கைகளாற் கொட்டி இடசாரி வலசாரியாகக் குதித்துக் கேடயங்களை நீட்டி மோதி அண்டம் வெடிக்கக் கர்ச்சனை செய்து வாளாயுதங்களா லோங்கி அசுரரை வெட்டினுர்கள். அப்போது கால்களுந் தோள்களும் அறு பட்டுப் பிரவாகமாக ஓடுகிற இரத்த வெள்ளத்தில் சிலரமுந்தினுர்கள். சிலர் யுத்தகளத்தையும் தும்பைமாலையும் விட்டோடினுர்கள். சிலர் அகன்ற மார்பு பிளந்து விழ்ந்தார்கள். சிலர் தலைகள் அறுபட்டு யமலோகத்தை யடைந்தார்கள். இப்படி அசுரசேனை மாள, அவ் வாறே கால்களுடனே வீரக்கழலும் தலைகளுடனே முடிகளும், தோள் களுடனே வீரமும் கொண்டு தும்பைமாலைசூடி யுத்தம் செய்தலும், வாள்களுடனே கைகளும், மார்புகளுடனே கவசங்களும் சவுரியத் துடனே ஆண்மையும் அற்று தேவர்களிலும் சிலர் குறைந்தார்கள். சமுகுகளும் பருந்துகளுங் கூடிச் சரிந்து விழுகிற குடர்களைப் பற்றி யிழுக்கவும், சிந்துகிற உதிரத்தைக் குடித்துப் பேய்கள் சிரித்துப் பாடவும், குறைத்தலை முண்டங்களெழுந்து எங்குங் கூத்தாடவும் பிண மலைகள் நிறைந்து பூமி மறையவும், அண்டம் உடையவும், இப்படி இரு திறத்துச் சேனைகளும் போர் செய்து மாளப் பின்னும் தங்களால் கூடியவரையில் யுத்தஞ்செய்து அளவிறந்தவர் மாளக்கண்டு தேவேந் திரனும், விருத்திராசுரனும் கோபங்கொண்டு தெய்வாஸ்திரங்களைப் பிரயோகித்துப் போர் செய்யும்போது இந்திரன் அக்கினியாஸ்திரத் தைப் பிரயோகித்தான். அதை விருத்திராசுரன் வருணுஸ்திரத்தைப் பிரயோகித் தறுக்க, உடனே இந்திரன் வாய்வாஸ்திரத்தைப் பிரயோகித்தான். விருத்திராசுரன் நாகாஸ்திரத்தைப் பிரயோ கித்து விலக்கினுன். இந்திரன் நாகாஸ்திரத்தை விட விருத் திரன் கருடாஸ்திரத்தை விட்டு விலக்கினுன். இந்திரன் மோகனுஸ் திரத்தை விட, விருத்திரன் ஞானுஸ்திரத்தை விட்டு விலக்கிப் பின்னுந் தேவாஸ்திரங்களை விடக்கண்டு மானமுங் கோபமும் மூண்டு தேவர்கள் தலைவன் வச்சிராயுதத்தை எடுத்தவுடனே அவுண வீரன் பாய்ந்து முற்காலத்தில் மைநாக பர்வதம் முழுகி மறைந்தது போலச் சமுத்திரத்தில் விழுந்து மறைந்தான். கூடவே இந்திரனுங் குதித்துத் தேடி அவனைக் காணுமல் பிரமதேவனிடத்திற் போய் நடந்த செய்திகளைச் சொல்ல அப்பிரமன் அந்த விருத்திரன் மாளும்

படியான ஆலோசனை செய்து அகத்திய முனிவரிடத்தில் அனுப்ப இந்திரன் பொதியமலைக்கு வருவதுகண்டு முனிசிரேஷ்டர் இந்திரனை ஆசீர்வதித்து வந்தகாரியம் என்னவென்று கேட்க இந்திரன் எல்லாந் தெரிந்த உமக்கு நான் சொல்லுவதொன்றுமில்லை. ஆனாலும் விருத்திரனென்னும் அரசன் என்னோடு யுத்தஞ்செய்து ஜெயிக்க மாட்டாமல் கடலில் மறைந்து போனதினால் இனி யவன் மாய்ந்து போகவும் எங்கள் துன்பந் தீரவேண்டியுந் தேவரீரிடத்தில் வந்ததென்ன, அகத்திய முனிவர் சச்சிதானந்த சொரூபியான வெள்ளியம்பலத்தானது ஊழிச் செந்தீ வடிவினை மனத்துட்கொண்டு விருத்திரன் மறைந்திருக்கிற சமுத்திரத்தை உள்ளங்கையில் உழுந்தளவாகக் கொண்டு ஆசமன்யஞ் செய்தார். சிவனடியார்கள் முத்தொழிலுஞ் செய்ய வல்லவரென்றால் அகத்திய முனிவருக்கு இது ஒரு பெரிதோ! தீவினையால் தேடிய செல்வம்போல், நீரில்லாமல் கடல் வற்றிப்போக, அக்கடலிலே ஒரு மலையில் தனக்குச் சம்பவிப்பது இன்னதென் றறியாமல் தவஞ் செய்யும் விருத்திரனை இந்திரன் கண்டு புதிய வச்சிராயுதத்தால் அவன் தலையைத் துணித்தான். துணித்தவுடனே இந்திரனைப் பிரமஹத்தி பற்றிக்கொண்டு உம்மென்று மார்பைத் தட்டிக் கோபித்தெழுந்து கர்ச்சித்து போர்க்கு வாவென்று, வாயை மடித்துப் பல்லைக் கடித்து, அவன்மேலே விழுந்து அழுது, சிரித்துச் சீறிக் கணப்பொழுதேனும் நீங்காமல் வருத்த, அதைக் கண்ட இந்திரன் மிகவும் பயந்து ஈசானிய திசையில் ஒரு குளத்திலிறங்கி ஒரு தாமரைத் தண்டுக்குள் புகுந்து ஒளித்தான். அப்போது கற்பகநாடு அரசனில்லாதிருக்கப் பூலோகத்தில் நகுஷனென்பவன் அசுவமேதயாகஞ் செய்து முடிக்கக் கண்டு தங்களுக்கு அரசனில்லாமையால் தேவரெல்லாங் கூடி அந்த நகுஷனுக்கு மகுடஞ்சூட்டி இந்திரனாகக் கொண்டார்கள். அப்போது இந்திரனாக வந்த அந்த நகுஷன் இந்திராணியைக் கொண்டுவாருங்களென்னப் பக்கத்துள்ளோர் இந்திராணிக்குப் போய்ச் சொல்ல, அவள் தங்கள் ஆசாரியராகிய பிரகஸ்பதி பகவானுக்கு முன்பு போய் நின்று எனக்கு நாயகனிருக்க வேறொருவன் என்னைத் தனக்கு மனைவியாக்கிக் கொள்ளுவது தருமமோ? சுவாமி! என்ன, அதற்கு வியாழபகவான் சத்தரிஷிகள் தாங்கச் சிவிகைமேல் வருவானாகில் அவனே இந்திரன். அவனே யுனக்கு மணவாளனுமென்ன, அதற்கு இந்திராணி சம்மதித்து அப்படிப்பட்ட மேன்மையான சிறப்புடனே என்னிடம் வருகவென்று நகுஷனுக்குத் தூதனுப்பினாள். அப்போது, நகுஷன் சிவிகை தாங்கி வருகிற மகாரிஷிகளை மதியாதவனாய்ப் பின் வருவதுந் தெரியாதவனாய், இந்திராணி போகத்தை அனுபவிக்க மிகுந்த மோகத்தால் விரைந்து செல்லவேண்டிச் சர்ப்ப (சீக்கிரம்) ஏகுங்களென்ன, முன்கொம்பு தாங்கிச் செல்லுகிற அகஸ்தியர் முனிந்து நீ சர்ப்பமாகக் கடவையென்று சாபமிட, உடனே அவன் சர்ப்பமாகி, அற்பரானவர்க்குச் செல்வமல்லது பகை வேறுண்டோ வென்கிறபடியே அழிந்துபோனான்,

பின்பு தேவர்கள், தேவருலகம் அரசனில்லாமல் வருந்துகின்றதே சுவாமியென்று தங்களாசாரியனாகிய வியாழபகவானை வணங்கிச் சொல்ல, வியாழபகவானும் குளத்தி லொளித்திருக்கிற இந்திர னிடம்போ யழைக்க, அவன் தங்கள் ஆசாரிய ரழைக்கிறாரென்று தெரிந்து கொடும்பழி கொள்ளப்பட்ட ரூபத்துடனே வந்து வணங்கி என்னை வருத்துகின்ற இந்தப் பிரமஹத்தி நீங்குவதெப்படி? சொல்லு மையாவென்ன, வியாழபகவான் பூலோகத்திற் சென்றாலல்லது நீங் குதலில்லை. அது தீர்வதற்காக நீவேட்டையாடவருகிறவனாய்ப் பூமியில் வாவென்று. ஈசனுக்குச் செய்தகுற்றத்தை ஆசாரியன் தீர்க்கவேண் டும். ஆசாரியனுக்குச் செய்த குற்றத்தை அவ்வாசாரியனே தீர்க்க வேண்டு மென்கிறபடி தன்னால்வந்த தோஷத்தைத் தானே தீர்க்கும் வழி சொல்ல; இந்திரன் ஆசாரியனும் தேவர்களுந் தன்னைச் சூழ்ந்து வரக் குதிரைமேல் ஏறிக்கொண்டு பூலோகத்திலிறங்கிப் பரமசிவனது சுயிலாயத்தை முன்னே வணங்கிக்கொண்டு தென்திசை நோக்கி வரு கிறவன் கங்கை முதலிய அளவிறந்த தீர்த்தங்களிளெல்லா மூழ்கிக் காசி-காஞ்சி-கேதார முதலிய சிவஸ்தலங்கள் யாவும் வணங்கியும், விருத்திரனைக் கொன்ற பாவம் விடாமல் கேதுவால் விழுங்கப்பட்ட சந்திரன்போல ஒளிமழுங்கிக் கடம்பவனத்தின் எல்லையைச் சமீபித்த வுடனே, தொட்டபழி விட்டுப்போக மிகுந்த தலைச்சுமையோடு வந்த வன் அந்தச்சுமை நீங்கினவன்போல அளவிறந்த சந்தோஷத்தை யுடையவனாய்த் தனதாசாரியருக்குத் தெரிவிக்க, அவர் இவ்விடத்தில் நல்ல தீர்த்தமும் தலமும் நாம் தரிசிக்கக்கடவோ மாதலால் சிலரை விட்டு அவைகளை விசாரியென்ன; அவ்விடம் விட்டு அப்பாற் போகும் போது கற்றறிவில்லாத மந்திகள் அருவி நீரில் முழுகி அவ்வருவி வீசிய மணிகளைக் கொண்டுவந்து பாறைமேல் சிவலிங்கமாக வைத்து அருவிநீரால் அபிஷேகஞ்செய்து, கரிய விரல்களால் மலர்களைப் பரித்துவந் தருச்சனைசெய்து பழங்களை நிவேதித்துப் பூசிக்கவும், யாளி யும் யானையும் புழக்கையால் ஒரு துறையிலே நீரைமுகந்து ஒன்றற் கொன்று ஊட்டியூட்டிப் பருகவும், புலிமுலைப்பாலை மான்கன்றுகள் பசிதீரப் பருகி மகிழவும், வெய்யலில் வெறுநிலத்தில் பாம்புக்குட்டிகள் கிடந்து வருந்தக் கண்டு கருடன் தனது சிறையைவிரித்து நிழலைத் தரவும், அதுகண்டு அக்கருடனாலே பாம்புக்குட்டிகள் வருந்துகின் றன, ஐயோவென்று பெண்குரங்குகள் சங்குகளாலே நீரை முகந்து வந்து அவைகளினுடல் குளிரச் சொரியவும், மயில்கள் பெட்டையோடு கூடியிருக்கும் மணவறையில் பாம்புகள் மாணிக்கங்களைக் கக்கி விளக்கு வைக்கவும், குயில்கள் ஓமென் றொலிக்க, கிளிகள் ஸ்ரீ பஞ்சா க்ஷரத்தை அதனோடு சேர்த்துச் சொல்லப் பூவைகள் குருவுபதேசங் கேட்பதுபோலக் கேட்டு மகிழவும், இவ்வாறாக மிருகங்கள் பக்ஷிகள் செய்யும் செய்கையை கண்டு இந்திரன் ஆச்சரியமடைந்து புளகாங் கிதனாய் மனமகிழ்ச்சியோடு செல்லும்போது, ஒற்றர்கள் மீண்டுவந்து வணங்கிப் பால் குடிப்பவனுக்கு அப்பாலோடு தேனைச் சொரிந்தாற் போல மகிழ்ச்சிமேல் மகிழ்ச்சிபெருகச் சொல்லத் தொடங்கினர்.

ஐயா! எந்த லோகத்திலும் எக்காலத்திலும் நாங்கள் காணாத வதிசயங்களும் விசேஷங்களும் இந்தக் கடம்பவனத்திலே இன்று கண்டு மகிழ்ந்தோம். அதாவது: ஒரு பரிசுத்த த்டாகக் கரையின் அருகே ஒரு கடம்ப விருக்ஷத்தினிழலிலே ஒப்பில்லாத சோதிருப மான ஒரு சிவலிங்கம் விளங்குகின்றதென்று சொல்ல, காதுகளில் அமுதஞ் சிந்தியதுபோலக் கேட்டு, அவ்வொற்றர் வழிகாட்டச்சென்று திரிகரணமும் ஒருமித்துத் தனது பாவத்தை நீக்கித் துன்பத்தைப் போக்க முளைத்தெழுந்த சிவலிங்கத்தின்மேல் அன்பு பற்றி ஈர்க்கத் தலைமேற் கைகுவித்துச் சென்று காடுமூடிய அத் தீர்த்தத்தையுங் கண்டு கடம்பவனத்துட் புகுந்து;

அருவாகி யுருவாகி யருவுருவுங் கடந்துண்மை யறிவா னந்த
உருவாகி யளவிறந்த வுயிராகி யவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப் பூவின்
மருவாகிச் சராசரங்க ளெவைமுந்தன் னிடையுதித்து மடங்க நின்ற
கருவாகி முளைத்தசிவக் கொழுந்தையா யிரங்கண்ணுங் களிப்பக் கண்டான்.

அருவமாகியும், உருவமாகியும், அருவுருவமாகியும், இவைகளைக் கடந்த மெய்யறிவானந்த உருவாகியும், அளவிறந்த உயிராகியும், அந்த உயிர்களுக்கு ஒப்பற்ற அறிவாகியும், பூவினிடத்திலிருக்கும் வாசனையைப் போலச் சராசரங்களெல்லாம் தன்னிடத்தில் தோன்றி ஒடுங்க நின்ற கருவாகி முளைத்த சிவக்கொழுந்தைத் தன் ஆயிரம் கண்களுங் களிக்கும்படி தரிசித்துச் சாஷ்டாங்கமாக விழுந்து பணிந்து ஆனந்தக் கண்ணீர் பெருக பேரின்பக்கடலுள் முழுகி, வாய் குழற உடல் நடுங்க அன்புருவாகிய இந்திரனானவன் சிவபெருமான் அருச்சனைக்கு வேண்டுவன வெல்லாங் கொண்டு வரும்படி சில ரைத் தேவலோகத்துக்கு அனுப்பி, விசுவகருமனை ஒரு விமானம் அமைக்கச் சொல்லி, அந்தத் தீர்த்தக் கரையிற் சென்று சிவார்ச்சனை செய்வதற்குப் பத்திரபுஷ்பங் கிடையாது தேடும்போது சிவ பெருமான் திருவருளாலே அந்தத் தீர்த்தத்தில் உதயகால சூரியனைப் போல் பொன்னிறத் தாமரை மலரக்கண்டு, அன்பு மிகுதியால ஆனந்தக் கூத்தாடி மகிழ்ந்து அதற்குப் பொற்றாமரைத் தீர்த்த மென்று பெயரிட்டு, அதில் ஸ்நானஞ் செய்து அம் மலரைப் பறித்துத் தன் பிறவிப் பிணிக்கு மருந்தாகிய சிவலிங்கத்தினிடத்தில் வந்து, நெருங்கிய காடுகள் வெட்டி நிலந்திருத்தி வரும்போது சிவலிங் கத்தின்மேல் சூரியகிரணம் பட மனம் வருந்தித் தனது குடையை நிழல் செய்வதாக வைக்க எண்ணுகையில், சூரிய மண்டலம்போல விஸ்வகர்மனால் அனுப்பப்பட்ட எட்டு யானைகள் சுற்றிலும் தாங்க, அதற்குமேல் முப்பத்திரண்டு சிங்கங்களும், அறுபத்துநாலு தேவ கணங்களுந் தாங்க சிருஷ்டித்த அந்த இரத்தின விமானத்தைச் சாத்தி, இந்திரனானவன் அஷ்டமூர்த்தமாய் விளங்குகின்ற பரமேஸ் வரனுடைய பூசனைக்கு வேண்டிய பொன்னுடையும், இரத்தின பரணங்களும், மணம் பொருந்திய சந்தனமும், கங்காதீர்த்தமும

தூபதீபங்களும், திருப்பள்ளித் தாமமும், தூங்காவிளக்கும் பஞ்ச கௌவியமும், பழமுந் தேனும், திருவமுதும் கொண்டுவரப் பின்னும் பொற்றாமரை தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிப் பவநோயை யொழிக் கத்தக்க திருவெண்ணீறு தரித்து, உருத்திராக்ஷ மாலிகை யணிந்து, அன்பு வடிவாய் அருள் வடிவாகி அரவாபரணங்களை யணிந்த பசு பதியை அந்தப் பரமசிவம் அருளிச் செய்து சைவாகமப்படி உண்மையான அன்பும் பெருகப் பூசை செய்து ஆனந்தக் கடலுள் மூழ்கிப் பூமியிற் படிய அஷ்டாங்க பஞ்சாங்க விதிப்படி வணங்கி, திரிகரணமும் ஒன்றுபட்டு வலஞ்செய்து தேகங் கம்பித்துத் தண்ட னிட்டுக் கூத்தாடித் தனது தோளின் மாலைமிதக்க ஆனந்தக்கண்ணீர் பெருகி நின்று அடங்காம லதிகரிக்கத் தொழுது நின்று,

அங்கணா போற்றி வாய்மை யாரணா போற்றி நாக
கங்கணா போற்றி மூல காரணா போற்றி நெற்றிச்
செங்கணா போற்றி யாதி சிவபரஞ் சுடரே போற்றி
எங்கணா யகனே போற்றி யீறிலா முதலே போற்றி

யாவையும் படைப்பாய் போற்றி யாவையுந் துடைப்பாய் போற்றி
யாவையு மானாய் போற்றி யாவையு மல்லாய் போற்றி
யாவையு மறிந்தாய் போற்றி யாவையு மறந்தாய் போற்றி
யாவையும் புணர்ந்தாய் போற்றி யாவையும் பிரிந்தாய் போற்றி.

இடருறப் பிணித்த விந்தப் பழியினின் றென்னை யீர்த்துன்
அடியினைக் கன்ப ருக்கு மருங்கடல் போற்றி சேற்கண்
மடவரன் மணாள போற்றி கடம்பமா வனத்தாய் போற்றி
சுடர்விடு மான மேய சுந்தர விடங்க போற்றி.

பூசையும் பூசைக்கேற்ற பொருள்களும் பூசை செய்யும்
நேசனும் பூசை கொண்டு நியதியின் பேறு நல்கும்
ஈசனு மாகிப் பூசை யான்செய்தே னெனுமென் போத
வாசனை யதுவு மான மறைமுத லடிகள் போற்றி.

என்று துதித்த தேவேந்திரனைப் பரமசிவம் கிருபைக் கண்ணால் பார்த் தருளி இனிதான குறுநகை தோன்ற, இந்திரனே! உனக்கு வேண்டி யது யாது சொல்லென்ன, இந்திரன் விரைவில் வணங்கித் தலைமேற் கைகுவித்துச் சுவாமி! தேவரீர் எழுந்தருளி யிருக்கும் க்ஷேத்திரத் தின் எல்லைக்குச் சமீபமாக நான் வரும்போது தீராத பழியும் முற் பிறப்பில் நான் செய்த பாபங்களுந் தீர்ந்து தேவரீரது திருவடியைத் துதித்து பூசை செய்யத் தக்கவனான இதிலும் சிறந்த பேறு வேறே யாதிருக்கின்றது. ஆதலால், இன்னமும் தேவரீர் திருவடித் தாம ரையை எக்காலமும் இந்தப்படியே பூசித்து உமது அடியாருள் யானும் ஒருவனாக வேண்டியது இதுவே அடியேன் வேண்டத்தக்க தென்று திருவடியில் விழுந்து சேவிக்க இந்திரனுக்குப் பரமசிவம் கிருபை கூர்ந்து இருதுக்களிற் சிறந்த வசந்தருதுவும், மாதங்களிற் சிறந்த சித்

திரை மாதமும், நக்ஷத்திரங்களிற் சிறந்த சித்திரை நக்ஷத்திரமும், திதிகளிற் சிறந்த பூரணையும் கூடிய சித்திரை மாதம் சித்திரை நட்சத்திரம் பௌர்ணமி தோறும் வந்து நம்மை அருச்சனை செய்வாயானால், வருடம் முந்நூற்றறுபத்தைந்து நாளும் அருச்சனை செய்த பலன் கிடைக்கும். ஆதலால், நீ சொர்க்கலோகத்துக்குப் போய் நன்மையான பல போகங்களையும் அனுபவித்த பின்பு, மலபரிபாகம் பிறக்க பிரம விஷ்ணு முதலிய பெரிய பதவிகளின்மேலாசையும் மற்றவைகளும் மறக்கும்படி நாம் மோக்ஷந் தருகிறோமென்று திருவாய்மலர்ந்தருளிப் பெருங்கருணை நிரம்பித் திருவருள் செய்ய இந்திரன் புளகாங்கிதனாய் முடிமேல் கைகுவித்து வணங்கி எழுந்து கண்ணீர் ததும்பப் பலமுறை துதித்து ஆனந்தக்கூத்தாடிச் சுவாமி திருவடியை விட்டுப் பிரிய அஞ்சினவனாய்ப் பின்பு பரமசிவத்தின் அருளாகிய ஆக்கினையை நினைத்துப் பிரியாத விடைபெற்றுச் சுவர்க்க லோகத்தைச் சேர்ந்து இருபுறத்திலும் அமர மங்கையர் சாமரம் வீச, பஞ்சதருக்களும் பூமழை பொழிய தேவர்கள் முடிகளை யடிகளிற் சூட்ட, இந்திராணி போகத்தை யனுபவித்து மார்புந் தோளும் பூரித்துத் தேகம் காம வெள்ளத்தில் முழுக, உள்ளம் சோமசுந்தரக்கடவுளது கிருபை வெள்ளத்தில் முழுகப் பழையபடியே சுவர்க்கலோகத்தில் நீதி செலுத்திக்கொண் டிருந்தான்.

இந்திரன் பழிதீர்த்த படலம் முற்றிற்று.

---

இரண்டாவது

## வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலம்

கொச்சகக் கலிப்பா

மட்டவிழும் கொன்றைச் சடையான் மகவானைத்
தொட்ட பழியின் றொடக்கறுத்த வாறிது
பட்டமத வேழம் பரனைப் பராய்முனிவன்
இட்டகொடுஞ் சாபநீத் தேகியவா றோதுவாம்.

உரை: தேனையுடைத்தாய் மலருகின்ற கொன்றைப் பூமாலை யணிந்த சடைமுடியையுடைய சோமசுந்தரக் கடவுளானவர் தேவேந்திரனைப் பற்றிய பழியின் தொடர்ச்சியை நீக்கி யருளிய திருவிளையாடலைச் சொல்லி நெற்றிப் பட்டத்தையுடைய மதயானையாகிய ஐராவதமானது சோமசுந்தரக் கடவுளைத் துதிசெய்து துருவாச முனிவரிட்ட கொடிய சாபத்தை நீங்கித் தேவலோகத்திற்குப் போன சரித்திரமாகிய திருவிளையாடலை இனிச் சொல்லுகிறோம்.

ஜனன வாசனையை யொழிக்கத்தக்க காசியென்னும் திருப்பதியில், துருவாச மகாமுனிவர் பழைய ஆகமப்படியே தமது பெயர் விளங்கச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து சந்தோஷத்துடனே அருச்

சித்துத் துதிக்கும்போது பரமசிவன் தமதருளால் தனது திருமுடி மேலிருக்கும் ஒரு தாமரை மலரை விழச்செய்ய, அதனைத் தனது கையை விரித்துத் தாங்கிக் கண்களிலும் தலையிலும் மார்பிலும் அணைத்துத் தேகம் பூரித்து மிகுந்த மெய்யன்பு அதிகரிக்க அவ் விடம் விட்டுத் தேவலோகத்துக்குப் போகும்போது, இந்திரன் சங்கநீ தொனிக்க, அசுரரை ஜயங்கொண்ட பிரதாபத்தினுலே தனது பெரிய பட்டணத்தில் தேவர்களாகிய சேனுசமுத்திரம் ஆரவாரிக்க, மங்கலவாழ்த்தும் வேதங்களும் முழங்க, நான்கு திக்கிலும் வாத்தி யங்கள் கல்லென்றொலிக்க, அரம்பை முதலியோர் அமிர்தரசஞ் சிந்துகின்ற பாடல்களை காதிற் புகட்ட, வரிசையாய்ச் சாமரங்கள் வீச, ஐராவதத்தின்மேல் பவனி வர, அவ்விடத்தில் தேவர்கள் நெருங்கி வந்து வேறுவேறு கையுறைகள் கொடுத்துக் கைகள் குவித்துக் கண்டுகொள்ள, அங்ஙனம் வந்த துருவாச முனிவரும் குற்றமில்லாத ஆசீர்வாதஞ் செய்து தமது கையிலிருந்த தாமரை மலரை நீட்ட இந்திரன் அளவிறந்த செல்வச்செருக்கால் மதியாமல் ஒரு கையை நீட்டி அதனை வாங்கி மதயானைத் தலைமேல் வைக்க, அந்த யானை மணம் பொருந்திய அம் மலரைத் துதிக்கையால் தள்ளிக் காலால் மிதித்துத் தேய்த்தது. அதைக்கண்ட துருவாச முனிவர் காம தகனனைப்போல் நெருப்புப்பொறி சிதறப் பார்த்துக் கோபித்துத் தேவர்கள் அஞ்சியோட ஆலகால விஷத்தை யுண்ட பரமசிவனைப் போல நின்று, சிவனடியார்கள் அருவருத்துத் தள்ளிய செல்வச் செருக்கினை யுடையாய், என்னசெய்தாய்?தேவர்கள் கையுறையையே நன்கு மதித்தாய். பரமசிவனது திருமுடிமேல் சாத்திய தாமரை மலரை மதியாமல் யானை மிதித்துத் தேய்க்க அதன் தலைமேல் வைத் தாயே! அடா புத்தியீனனே! மகாவிஷ்ணுவின் பெருமையும், பிரமா வின் பெருமையும், தேவர் வணங்க வாழும் உன் பெருமையும், சமுத் திரத்தில் தோன்றிய விஷத்தைப் பானம் பண்ணின பரமேஸ்வரனைப் பூசித்த சிவபூசையின் பலனென்று எண்ணினுயில்லை, உயர்ந்தயானை மேல் வருகிற இந்திரா! உன் தலையானது பாண்டியரில் ஒருவன் வளை யால் சிதறக் கடவது. உன்னுடைய நான்கு கொம்பினையுடைய வெள்ளையானையும் காட்டானையாகக் கடவதென்று சபிக்கத் தேவர்கள் அம் முனிசிரேஷ்டரின் பாதத்தை வணங்கி, ஜிதேந்திரியராகிய பெரியவரே ! எங்களரசனும் வெள்ளை யானையும் அபராதிக ளானபடி யால் நீர் சபித்த சாபத்தை இனி விமோசனஞ் செய்ய வேண்டு மென்று குறையிரந்துருகினுர்க்கு மனமிரங்கித் துருவாச முனிவர் சாப விமோசனஞ் செய்ததாவது: மனவாக்குக் கெட்டாத பரமசிவம் அருளிய சேஷத்தை நித்தித்த பாவம் பரிகாரத்தாற் போகாது. ஆனுல் தலையளவு வந்தது முடியளவாகத் தக்கது. உனது யானையும் காட் டானையாய் நூறு வருஷங் கழித்த பின்பு பழைய வடிவாகத் தக்க தென்று பிறிது சாபம் நியமித்தபடி, இந்திரன் மகுட பங்கமானது பின்பு சொல்லுகிறேம்,

அது நிற்க, அங்கு நின்ற வெள்ளையானை தேவலோகத்தை விட்டு மதிகலங்கி நிலமலைபோல் மண்ணுலகில் வந்து காட்டானைக் கூட்டத்தோடு கூடி மிருக சஞ்சாரமாய் வேடர்கள் திரிகிற காடும், முல்லை வனங்களும், ஆற்றைச் சார்ந்த காடும் குறவர்கள் தங்கள் தெய்வத்தோடு சஞ்சரிக்கிற மலையும் திரிந்தலைந்து, நூறு வருஷமும் கழியப் பின்பு காட்டோடு நெருங்கிய தெய்வீகமான கடம்ப வனத்தில் வந்து பரமசிவனது திருவருள் பெறுங்காலம் நேரிட்டதனால், பொற்றாமரை தீர்த்தத்தைக் கண்டபோது தன் பழைய வடிவு தோன்ற அத் தீர்த்தத்தில் முழுகியபோது பழைய வடிவமும் பரமசிவத்தினது கிருபா நோக்கமுந் தோன்றிப் பரமானந்த வடிவமாகிய சிவலிங்கமும் எதிர் தோன்றக் கண்டு வணங்கி அந்தத் தெய்வநாயகனைப் பூசிக்க, அன்பு தோன்றி துவாரம் பொருந்திய துதிக்கையினாலே தீர்த்தத்தைக் கொண்டு வந்து திருமஞ்சனஞ் செய்து, தேனொழுகா நின்ற திருப்பள்ளித்தாமமும் சாத்தி, அரவாபரணத்தை அணிந்த வேணியினை யுடைய பரமசிவத்தை அருச்சித்துப் பூசிக்க; அதனது உள்ளத்தி லுண்டாகிய அன்பினை யறிந்த அப் பரமசிவம் வெள்ளையானையை நோக்கி, நீ இங்குவந்த காரணம் என்ன? உனக்கு வேண்டும் வரம் யாது? சொல்லுவாயென்று கேட்க, இத் தெய்வயானையானது உள்ளத்தில் அன்பு மிகுந்து வணங்கி, முன்னே தனக்குச் சம்பவித்ததும், இங்கு வந்த முறைமையும் கிரமமாகச் சொல்லி என் தந்தையாகிய தேவரீரை யடையப்பெற்ற எனக்கு இனி ஒரு குறையுண்டாகுமோ? எம்பெருமானே! தேவரீரைத்தாங்கிய இவ்வெட்டு யானைகளோடு அடியேனும் ஒன்பதாக உமது திருவடியைப் பிரியாது உமது சந்நிதானத்தில் இந்த விமானத்தை முதுகிற் சுமக்க வேண்டுமென்னும் அன்பு என்னுள்ளத்தில் பொருந்துதலினால் அதுவே வேண்டுமென்று இடையறாத அன்பினால் இவ்வாறு சொல்லச் சிவபெருமான் தேவலோகத்தையாளுகிற இந்திரன் நம்மிடத்து மெய்யன்பு உடையவனாதலால் நீ அங்குச் சென்று அவனைத் தாங்கி யிருப்பதே நமக்கு மிகுந்த சந்தோஷமென்று பின்னும் அதற்கு வேண்டிய வரங்களைத் தந்து விடை கொடுத்தருளினார்.

பரமசிவத்தினிடத்துச் செலவு பெற்றுக்கொண்டு வணங்கிச் செல்லும் வெள்ளையானை அச் சிவலிங்கத்துக்கு மேற்றிசையை யடைந்து தன் பேரால் ஒரு தடாகமும், அதன் பக்கத்தில் சிவலிங்கத்தையும், கணேசனையும் பிரதிஷ்டை செய்து, அவற்றை அருச்சித்து நீங்காத அன்பும் தானுமாக அங்கிருக்குஞ் சமயத்தில் அச்செய்தியை அறிந்த இந்திரன் தூதுவரை யழைத்து எம்முடைய யானையைக் கொண்டு வாருங்களென்று அனுப்ப, அத் தூதுவர் விரைவில் வந்து அழைக்க நான் வருகிறேன் நீங்கள் முன் செல்லுங்களென்று அனுப்பி விட்டுத் தான் அங்குநின்று எழுந்து அதற்குக் கீழ்திசையில் ஓரிடத்தில் வந்து தனது பேரால் ஓர் ஊரை நியமித்து அதில்

இந்திரேச்சுர மென்ன இந்திரன் பேரால் ஒரு சிவலிங்கம் ஸ்தாபித்துப் பூசித்து அங்கிருக்க; இந்திரன், யானை இன்னும் வந்ததில்லை யென்று பின்னும் மனத்தினும் வேகமாகச் செல்லுகின்ற தூதுவரை விட, அவர்களோடு ஐராவதம் தேவலோகத்தை அடைந்து இந்திரனை வணங்கிக் காட்டிலும் கடிய மலையிலும் பலநாள் துன்பநோயுற வந்த சாபம், பரமசிவனைக் கண்டு நீங்கியதும், மற்றக் காரியங்களையும் சொல்லி உயர்ந்த திக்கு யானைகளின் இனத்தினின்றும் நீங்கிய தெய்வயானை இன்பத்தை யுடையதாக வீற்றிருந்தது.

மேற்றிசையில் ஐராவத க்ஷேத்திரத்திலுள்ள தீர்த்தத்தில் மூழ்கி ஐராவதப் பிள்ளையாரைத் தொழுது, ஐராவதேச்சுரத்துக் கடவுளைப் பணிந்தவர் சாபத்தொடர்பினும் பாபத்தொடர்பினும் நின்று நீங்குவர். ஐராவதமென்னும் யானை சென்ற வழியே போய் வைகை நீரின் முழுகி அதற்குத் தென் கரையிலுள்ள இந்திரேச்சுரன் திருவடியை வணங்குவோர் இப்பிறப்பில் தரும முதலாகிய மூன்றால் வரும் பயனை யடைந்து மறுபிறப்பில் இந்திரபதவி முதலிய அரிய பதவி யெல்லாம் பெற்றுச் சுவர்க்க லோகத்தில் முழுகிப் பின்பு அதிக வெறுப்புத் தோன்ற மனச்செவ்வையினால் உண்டாகிற பேரின்பமாகிய சிவ கதியை அடைவார்கள்.

வெள்ளையானைச் சாபந்தீர்த்த படலம் முற்றிற்று.

---

மூன்றாவது

## திருநகரங் கண்ட படலம்

---

கலிநிலைத்துறை

தான வாறிழி புகர்முகத் தடுகரி சாபம்
போன வாறுரை செய்துமேற் புதுமதி முடிமேல்
வான வாறினன் கடம்பமா வனமுது நகரம்
ஆன வாறது தனைச்சிறி தறிந்தவா றறைவாம்.

உரை: மதநீராறு பெருகா நின்ற புகர் முகத்தினையுடையதாய்ப் பகைவரைக் கொல்லுகின்ற ஐராவதமென்னும் யானையின் சாபம் நீங்கின திருவிளையாடலைச் சொல்லி, இனிப் பிறையை யணிந்திருக்கும் சடைமுடிமேல் ஆகாய கங்கையை யுடைய சோமசுந்தரக் கடவுளானவர் வீற்றிரா நின்ற பெருமை பொருந்திய கடம்பவனமானது பழமையான நகரமாகிய திருவிளையாடலைச் சிறிது தெரிந்தமட்டிற் சொல்லுகிறோம்.

இனிமையாகிய ஏழிசைகளையும் தமது கண்டத்திலே யுடைய வண்டுகள் கின்னரம்போலப் பாடுகின்ற கடம்பவனத்தின் கீழ்த்திசையில் தென்னர் சேகரனென்றும், மன்னர்சேகரனென்றுஞ் சொல்

லப்படுகின்ற குலசேகரப் பாண்டியன் அரசாக்ஷி செய்யும் மணவூரில் வைசியர்களில் ஒருவனாகிய தனஞ்சயனென்பவன் திரவியந் தேடுதல் போலச் சிவார்ச்சனை முதலிய சிவதருமங்களையும் தேடுகிறவனாய்ச் சிவனிடத்தில் சிறந்த மெய்யன்பு உடையவனாய் அவ்வூரிலிருந்து மேற்குத் திக்கில் சென்று பெரிய வர்த்தகஞ்செய்து, பின்பு தன்னூருக்குத் திரும்பும்போது பழையதாகிய பிறவிக்கடலின் கரை தெரியச் செய்து அடியார்கள் துன்பத்தைத் தீர்க்கும் பரமேஸ்வரன் எழுந்தருளியிருக்கும் கடம்பவனத்தின் வழி வரும்போது, சூரியன் அஸ்தமித்த காலமாக, நெருங்கிய இருளில் தனியனாய்ச் சிவநேசத்தை யுடைய அவன், நான்கு கொம்புள்ள மதயானைகள் பிடரிமேற் றாங்குதலால் ஆயிரங் கிரணங்களாலே எட்டுத்திக்கிலுமுள்ள இருளைப் போக்கி விளங்குஞ் சூரியனைப்போல, அவ்வனத்தி னிருளைப்போக்கி விளங்குகின்ற இந்திரவிமானத்தை நேரே கண்டு, சமீபத்தில் வந்து அந்தச் சோதிவிமானத்தி லெழுந்தருளிய பரமசிவத்தைத் தரிசித்து வணங்கி ஆனந்தம் நிரம்பின நெஞ்சினனாய் அவ்விடத்தே தானே அன்றிரவைக் கழிக்க எண்ணி அங்கிருக்கும்போது, அன்றிராத்திரியில் சோமவாரமாகையால் தேவர்களெல்லாம் அங்குவந்து பார்வதி சமேதராகிய பரமசிவனது திருவடிகளை வணங்கிச் சிவராத்திரிபோல அன்றிராத்திரி நான்கு சாமத்திலும் அக்கடவுளுக்கு உவப்பாக அருச்சனை செய்துகொண்டிருக்க, அங்கே தேவர்கள் வந்ததும் அருச்சனை செய்வதும் இவையெல்லாம் அடியாரன்பிற் கெளியவராகிய நீலகண்டத்தையுடைய சிவபெருமானது கிருபாநோக்கத்தால் திரிபுண்டர தாரியாய்ச் சிவபக்தி-பரிபாலகனான தனஞ்சயன் கண்டு, சிவார்ச்சனைக்கு வேண்டிய வாசனைத் திரவியங்களைத் தேவர்களிடத்திற் கொடுத்து அர்ச்சனை செய்யச்செய்து இந்திரன் தங்கள் தெய்வமாகிய பரமசிவத்தை வணங்கி அருகினிலிருக்க, அப்பெருமானைப் பூசித்த தேவர்கள் பாபராசியும் இருளும்போய் விடியக் குற்றமில்லாத தனஞ்சயன் ஒருவரையுங் காணாதவனாய் அந்த விமானத்தின்மேல் ஒப்பற்று விளங்குகின்ற சிவலிங்கத்தை மாத்திரங் கண்டு, மிகவும் ஆலோசிக்குஞ் சிந்தையுள்ளவனாய் ஆச்சரியப்பட்டு, அப்பெருமானுடைய திருவடியின் கீழே வணங்கி யெழுந்து இரண்டு கைகளையுந் தலைமேற்குவித்துப் பிரதக்ஷிணஞ் செய்து, ஒருவிதத்தில் தன்னூருக்குப்போக மனந்துணிந்து, மிகுந்த பக்தியோடு சிவபெருமானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வந்து, அவ்வூரரசனாகிய குலசேகரபாண்டியன் அரண்மனைக்குச் சென்று, சத்துருசிங்கமான அவனை வணங்கி, அவன் முன்னே நின்று, எட்டுத் திக்கையும் ஜெயம்கொண்ட ஆக்ஞா சக்கரத்தையுடைய அரசர் பெருமானே! நேற்று அந்தக் கடம்பவனத்து வழியாய் நான் வர்த்தகஞ்செய்து வரும்போது பொழுது போயிற்று. அப்போது நான் கண்ட அதிசயமாவது: அன்றிராத்திரிக்கும் எனது பிறவிக்கும் முடிவுண்டாகச் சூரியமண்டலத்தைப்போல் விமானமும் அதில் ஒரு சிவலிங்கமும் கண்டேன், அந்த லிங்கத்தை

இராத்திரிமுழுவதும் தேவர்கள் வந்து அருச்சனை செய்து போனார்கள், நானும் விடியுமளவுங் கண்டிருந்து அக்கடவுளிடத்தில் விடைபெற்றுத் திரும்பிவந்தேன் என்று சிவநேசம் பெருகிச் சொல்ல, அதைக் கேட்ட குலசேகரபாண்டியன், பரமசிவனுடைய திருவடிகளையும் தனது இரண்டு கைகளையும் தலைமேல் வைத்து, உள்ளத்தில் அதிக அன்பும் ஆச்சரியமும் நிரம்ப இருக்கும்போது, சூரியன் அஸ்தமித்தான்.

அன்றிராத்திரி அவ்வரசன் கனவில் இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம், தத்துவதரிசனம் ஆகிய இவற்றையருளும் பரமசிவமே ஒரு சித்தராகிவந்து, ஓ பாண்டியனே! அந்தக் கடம்பவனத்தைக் காடுபோக்கி நாடுநகரமாகச் செய்யக் கடவை யென்று தெரியச் சொல்லி மறைந்தருள, குலசேகரபாண்டியன் விடியற்காலத்தில் கண்விழித்துக் கனவில் சித்தவடிவாய் வந்த கடவுளுக்குச் செய்யுங் காலை நியதியெல்லாமுடித்து, அரசாட்சியில் வந்து மந்திரிகளுக்கும் பெரியோர்களுக்கும் இராத்திரி தான்கண்ட கனவின் விசேஷத்தையும், நேற்றுத் தனஞ்செயனென்னும் வர்த்தகன் சொல்லிய விசேஷத்தையும் சொல்லி, அவர்களும் சந்தோஷித்துச் சொல்லத் தெரிந்து கொண்டு, மந்திரிகளுடனே புறப்பட்டுக் கடம்பவனத்துக்கு வந்து பொற்றாமரைத் தீர்த்தத்தில் மூழ்கி, இந்திர விமானத்திலிருக்கும் சிவபெருமானுடைய சந்நிதியின் முன்னே தலைமேற் கைகுவித்து அன்பு பின் தள்ளவும், முன்பு அருட்கண்ணீர் பெருகவும், என்புருகவும் நின்று,

சரண மங்கையோர் பங்குறை சங்கர சரணம்
சரண மங்கலமாகிய தனிமுதல் சரணம்
சரண மந்திர வடிவமாஞ் சதாசிவ சரணம்
சரண மும்பர்க ளுயக பசுபதி சரணம்.

ஆழி ஞாலமே வாசையு மமரர்வான் பதமேல்
வீழு மாசையும் வெறுத்தவர்க் கன்றிமண் ணுண்டு
பீழை மூழ்கிவா ளரகொடு பிணிபடச் சுழலும்
ஏழை யேங்க ளுக்காவதோ வென்றநின் கருணை.

சூள தாமரைச் சென்னியுந் தொடத்தொட் டீண்ட
நீள விவுளக் கம்பில மாயினு நீயே
மூள வன்புதந் தெங்குடி முழுவதும் பணிகொண்
டாள வேகோயிக் கானகத் தமர்ந்தனை யென்று.

தோத்திரங்கள் செய்து, பெருகிய அன்பு இரண்டு கண்ணின் வழியிலும் ஒழுகுவதுபோல ஆனந்தக்கண்ணீ ரொழுக, சிவாநந்தக் கடலின் மூழ்கி மெய்யன்போடு பிரதக்ஷிணஞ் செய்து, வெளியே வந்து ஒருபுறத்திருந்து உத்தரவு செய்தபடியே மந்திரிகளேவலால் காடுவெட்டுவோர்கள் வந்துகூடிக் கொடுவாள், கோடரி கொண்ட கையினராய்க் காடுவெட்டத் துணிந்து வெட்டும்போது, இருண்டவனங்களெல்லாம் வெட்டுண்டு மெய்ஞ்ஞானிகளுள்ளம்போல் வெளியாய்ச்

செம்மை யுற்றது. இனி பாண்டியன் நகர் செய்வதெப்படி என்று மந்திரிகளோடு ஆலோசிக்குஞ் சமயத்தில், அரசன் மகிழ, இரவில் வந்தபடியே விபூதி தூளிதராய்ப் பாதம் பூமியிற் படச் சித்த வுருவ மாக வந்து தோன்றித் தாம் முன்பு சொன்ன முதனூல் - வழிநூல் - சார்புநூற்படி வழுவாமல் நல்ல கோயில்-மண்டபம்-கோபுரம்-பட்ட ணம் இவைகளை இன்ன இன்னபடி செய்கவென்று விடை கொடுத் தருளி யுடனே மறைய, அப்படி மறைந்த சர்வ வியாபகரான சிவ பெருமானுடைய திருவடியில் நிறைந்த பேரன்புடைய பாண்டியன், உலகத்தில் சிற்ப சாஸ்திரங்கள் தெளிந்தவர்களாலே சிவபெருமான் கட்டளையின்படியே கோயில் வேத பாராயணஞ் செய்கிற மண்டபம், அருத்தமண்டபம், சபாமண்டபம், அறுகாற்பீடிகை, நிருத்தமண்டபம், உற்சவ மண்ட பங்கள், வேள்விமண்ட பங்கள், திருமடைப்பள்ளி, சுற் றிலுந் தேவர் சந்நிதிகள், வலப்புறத்தில் உமாதேவியார் கோயில், மாளிகைகள், சுற்றுமதில்கள், கொடிகள் கட்டிய நெடிய மாளிகைகள், சந்திரனைப் போலப் பிரகாசிக்கிற வீடுகள், செய்குன்றுகள் செம் பொற் கோபுரங்கள், பெரிய மதில்கள், அகழிகள், சித்திரங்க ளெழுதிய வீதிகள், மேடைகள், உற்சவ வீதிகள், சாளரங்கள், பெரிய வீதிகள், நாற்சந்தி, முற்சந்தி அம்பலம், சபை, மேடை, நாடகசாலை, முனிவர்வீதி, பிராமணவீதி, அரசர்வீதி, வைசியர்வீதி, வேளாளர்வீதி, சூத்திரர்வீதி, யானைக்கூடம். தேர்ச்சாலை, குதிரைச்சாலை, பள்ளிக் கூடம், அன்னசத்திரம் முதலிய எல்லாஞ் செய்வித்து, கயம் கீழ்நீர்க் கிணறு, பூவோடை, குளம், பொய்கை, நத்தவனம், பூஞ்சோலை, துடைவை, உய்யானம் இவைகளும் அந்நகருக்கு அழகாகச் செய்வித் துக் குலசேகர பாண்டியன் தனக்கும் அரண்மனை முதலியவைகள் ஈசானதிசையில் செய்வித்துக்கொண்டு அப் பட்டணத்துக்குச் சாந்தி செய்ய ஆலோசிக்கும்போது சோமசுந்தரக் கடவுள் தெரிந்து வெளி வந்து தமது பொன்னிறமான சடையில் முடித்த சந்திரனது புத்தமு தத்தைச் சிந்தினர். அவ்வமுதஞ் சென்று அறிவுருவமான சிவபெரு மான் பாதத்தை அடைந்தவர்களைச் சிவமயமாக்கினாற்போல, அந்தப் பட்டணத்தைச் சாந்தி செய்து தன்போற் பரிசுத்தமாக்கியது, மதுர மயமானதினால் அதற்கு மதுராபுரியென்று பெயருண்டாயிற்று.

பின்னும் பாண்டியன், கீழ்த்திசையில் ஐயனாரும், தென்றிசையில் சப்தமாதரும், மேற்றிசையில் விஷ்ணுவும், வடதிசையில் துர்க்கையும் காவலாக நிலைபெற நிறுத்தி, யானைப் பிடரியில் பொன்மலை யிருந்தது போல விளங்குகிற கோயிலில், மதுரேசனைச் சாஸ்திரோக்தமா யர்ச் சனை செய்வதற்குப் பொய்யில்லாத வேதாகமப்படி நடக்கவல்ல பெரி யோர்களாகிய ஆதிசைவர்களைக் காசியிலிருந்து வருவித்து மதுரையில் நிலைபெறச் செய்வித்து, உத்தம குலத்தினராகிய நால்வகைக் குடி களும், உயர்வுந் தாழ்வுமாகக் கலந்த புறக்குடிகள் மூன்றும், வேத நெறி பிசகாமல் மநுநீதிப்படி நடக்க, வைதிக தருமமும், சைவதரும

மும் சிறக்கப் பூமிதேவியின் முகத்திலே திலகமிட்டாற்போலப் பட்டணத்தை வளஞ்செய்து, அன்றுமுதல் பாண்டியன் மங்கள வாத்தியங்கள் முழங்க, நல்ல சுபதினத்தில் குடிபுகுந்து பரமசிவனது கோயில் மூன்று அங்கமும் குறைவுபடாமல் பூசை நடக்க, விஷ்ணுவைப் போலக் குலசேகரபாண்டியன் அரசாட்சி செய்து, சிலகாலத்துப் பின் மலயத்துவச பாண்டியனைப் பெற்று வளர்த்து அவனுக்குப் பட்டங் கட்டி ஒருநாள் சிவபெருமான் திருக்கோவிலிற் சென்று வணங்கி மூவலஞ் செய்து ஒப்பிலாத பேரின்பமாகிய அருணிழலெய்தி ஒன்றியொன்று நிலையில் நின்றனன்.

திருநகரங் கண்ட படலம் முற்றிற்று.

———

நான்காவது

# தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம்

———

கலி விருத்தம்

கன்னியொரு பங்கினர் கடம்பவன மெல்லாம்
நன்னகர மானது நவின்றுமுல கீன்ற
அன்னைமக ளாகிமல யத்துவச னுக்குந்
தென்னனிடை வந்துமுறை செய்ததுரை செய்வாம்.

உரை: பார்வதியை ஒருபாகத்தினுடைய சோமசுந்தரக் கடவுள் வீற்றிருக்கும் கடம்ப வனமெல்லாம் நல்ல நகரமாகிய திருவிளையாடலைச் சொன்னோம். இவ்வுலகங்களை ஈன்ற தாயாகிய மீனாட்சியம்மையானவள் மலையத்துவசனென்னும் பாண்டியனிடத்தில் புத்திரியாகத் திருவவதரித்து முறைசெய்தளித்த திருவிளையாடலை இனிச் சொல்லுகிறோம்.

மனுதர்ம சாஸ்திரமானது சந்தோஷித்துத் தன் வழியே நடக்கும்படியாகச் செங்கோல் செலுத்துகின்ற பரிசுத்தனான மலயத்துவசனென்று வெற்றிமாலையால் அலங்கிருதனாய் கனிந்த அமுதம்போலும் கிருபைக் கிருப்பிடமாய் காணுதற்கு நல்லவனாய் வடமொழிக் கடலுந் தென்மொழிக் கடலுங் கடந்து மன்மதன்போலும் வடிவுள்ளவனாய், காமவிதைமுளைக்கிற நிலம்போலும் பதினாயிரம் மனைவியருள்ளவனாய், சூரிய குலத்திற் பிறந்த சூரசேன மகாராஜன் குமாரியான காஞ்சனமாலையை விவாகஞ் செய்துக்கொண்டு, சோமசுந்தரக் கடவுளைத் திரிகாலமும் வந்து சேவிக்கும் செயலைக் கற்றவனாய், அநேக காலம் பிள்ளையில்லாமல் அநேக தருமங்களைச் செய்து வேதாகமப்படி தொண்ணூற்றொன்பது அஸ்வமேத யாகமுஞ் செய்து முடிந்தபின்,

இந்திரன் வந்து இன்னும் ஒரு யாகத்தையுஞ் செய்து முடிப்பாயானல் எனது பதவி நொடியளவில் மாறுமாகையால் அது செய்ய வேண்டாமென்று தடுத்து, நீ நல்ல காரியத்தை செய்யத் தொடங்கினதாலே அதற்குத் தகுதியாக உலகமெல்லாம் மகிழும்படியான பிள்ளையைத் தருகிற யாகத்தைச் செய்தால் நல்ல பிள்ளையைப் பெறுவாயென்று புத்திர காமேஷ்டி யாகஞ் செய்யச் சொல்லிப் போயினன்.

பின்பு வேப்பமாலையை யணிந்த மலயத்துவச பாண்டியன் அந்த யாகத்துக்கு வேண்டியவைகளெல்லாம்கொண்டு அந்த நியமத்துக்குத் தகுதியான தனது தேவியான பொன்மாலையுடனே யாகசாலையிலிருந்து இந்திரதிக்கை நோக்கி வைதிகர்கள் சொல்லிய சடங்கின்படி உதாத்தம், அநுதாத்தக் கிரமமான மந்திரங்களும், ஆகுதிகளுக்குரியவைகளுஞ் சேரச்சொல்லி வேள்வி வளர்க்க, அந்த வேள்வியில் புகை ஆகாசமும் பூமியும் திசைகளும் பரவிப் போர்வைபோல மறைக்கப் பின்னும் குடங்குடமாக நெய்யும் பொரியும் சமித்துக்களும் தேவர்களுக்குப் பிரீதியாக தேவாமிர்தம்போல ஆகுதி கொடுத்துப் பரமசிவன் திருவாய்மலர்ந்தருளிய வேதவாக்கியப்படியே நெய் நிரம்பப் பெய்து வேள்வியில் அக்கினியை அதிகப்படுத்தும்போது, பாம்பலங்காரப் பரஞ்சோதி தனியாகவும், இமவான் மனைவியாகிய மேனை தலை குனியவும், மலயத்துவச பாண்டியன் வலதுதோள் துடிக்கவும் பொன்மாலை கொங்கைகள் ததும்பித் தீம்பால் வெள்ளம் பெருகவும் இடக்கண் துடிக்கவும், இந்தப் பாண்டிநாடே யல்லது எந்நாடும் மகிழ்ச்சி பெருகவும் சைவமுதலிய தவமார்க்கங்களுயரவும், பாபங்கள் கெடவும், புண்ணியங்கள் வளரவும், தெய்வ வேதங்களும், தெய்வ துந்துபியும் திசைகளெல்லாம் முழங்கவும், தேவரம்பைகள் கூத்தாடவும், அந்த மதுராபுரியி லுள்ளவர்கள் திரிகரணங்களும் வேறுபடாமல் தங்களை யறியாத ஆநந்தத்தை யடையவும், பதினெண் பாஷைகள் வழங்குகிற நாடுகளில் தமிழ்நாடே சிறப்பையடையவும், தமிழ்நாட்டு மூவேந்தரில் பாண்டியர்கள் மென்மேலான பெருமையடையவும், அக்கினிதேவன் இதுவரையிலுஞ் செய்த தவப்பயனை யடையவும், மாந்தளிர்போல நெருப்புக் கொழுந்து வீசுகிற அந்த யாககுண்டத்தில் நெருங்கிய தளிர்களையுடைய ஒரு வாசனைக்கொடி அநேக விதழ்களை யுடைய தாமரை மலரை அப்பொழுது மலர்ந்துகொண்டு முளைத் தெழுந்தாற் போல உலகத்தில் தருமத்தின் வழியிற் சென்றோருக்கு இகபரபோக வீட்டையருளும் அம்மையார் சூழியக்கொண்டை வட்டமதியின் மாசு போலவும், அதிலே தொங்கவிட்ட முத்துமாலை அந்தச் சந்திரனிலிருந்து வருகிற கிரணத்தைப் போலவும், அமுதம்போலவும் இனிய குதலை மார்பின் வழியே யொழுகி முத்துமாலையோடு விளங்கச் சூரியப் பிரகாசத்தை வென்று பவளமாலிகை ஒளி வீச, சிறிய இடையிற்சூழ்ந்த சிற்ருடையும், நவரத்தின மேகலையும் அசைய காதிற்குண்டலமும் குதம்பையும் இருளைப் போக்கிச் சிறிய தோள்

கனைத் தொட்டாடத் தெளிந்த வமுதம்போல மழலைச் சிந்த இள நகைதோன்ற மூன்று வயதுள்ள மூன்று ஸ்தனங்களோடுங் கூடிய பெண்பிள்ளையாகிச் சராசரங்களை யெல்லாம் பெற்ற உலகமாதா வாகிய உமையவள் திருவவதாரத்துச் சிறிய தளிர்போலும் மெல்லடியி லணிந்த சிறியமணிச்சிலம்பும், சதங்கையும் ஒலிக்க, நல்லகொடிபோ லசைந்து தளர் நடையிட்டு இளமுறுவல் தோன்ற பெண்ணுகப் பிறந்து பெரும் பயனைப் பெற்ற பொன்மாலை மடியில் வந்து ஒரு பெண் குழந்தையா யிருந்தனள்.

அப்படியிருக்க பிள்ளையைச் செவ்வாய் வெளிருமலும் முலைக்கண் கருகாமலும், கருங்கண் பசவாமலும், பத்து மாதந்தாங்கி வயிறு வருந்தாமலும், பெற்றுக்கொண்ட காஞ்சனமாலையானவள் எடுத் தணைத்து உச்சிமோந்து வாய் முத்தங்கொண்டு பார்வதியைப் பெற்ற மேனைப்போல மகிழ்ச்சி யடைந்தாள். பராசத்தி, ஆதிசத்தி, இச்சா சத்தி, ஞானசத்தி, கிரியாசத்தியாய் உலகங்களையெல்லாம் படைத்தும் காத்தும் அழித்தும் மறைத்தும் அநுக்கிரகித்தும் தனது வடிவு வேருகி வாக்குக்கும் வேதத்துக்கும் எட்டாத ஒப்பற்ற காரணியான வள் திருமகளாய் வர, இந்தப் பாண்டியன் செய்த தவமோ போது மானதன்று, இந்திரியாந்தக் கரணங்களெல்லாங் கட்ந்து ஆனந்த வெள்ளமாகிய பரஞானமே வடிவாகவுடைய ஒரு பெண்பிள்ளை யானுள். அப்படியவள் பிள்ளையான கிருபையையும், தன் மனைவி செய்த தவப்பேற்றையும் மலயத்துவசன் ஆலோசியாமல் நான் பிள்ளையில்லாமல் அநேக காலம் வருந்தி அரிய தவங்களைச் செய்து பின்பு பிள்ளைப் பேறுண்டாக இந்த யாகத்தைச் செய்தேன். இந்த யாகமும் ஐயோ ஒரு பெண்குழந்தையைத் தந்தது. அந்தப் பெண் குழந்தையும் ஸ்தனங்கள் மூன்றுள்ளதாய் என் பகைவர் நகைக்கவா யிற்றென்று துன்புறும்போது, சிவனருளாலே ஆகாயத்தினின்று 'இராஜனே! உமது குமாரியைக் குமாரனுக வெண்ணிச் சடங்குகளெல் லாந் தப்பாமல் வேதவிதிப்படிசெய்து தடாதகை யென்று திருநாம மிட்டு உனது முடியும் சூட்டக் கடவை. சூட்டின பின்பு குமாரிக்கு நாயகன் வரக் காணும்போது நடுஸ்தனம் மறைந்துபோம். நீ கிலேசி யாதே' என்று ஓர் வாக்கு உண்டாயிற்று.

அவ்வசரீரி வாக்கைக் காது நிரம்பக்கேட்டு அன்பும் மகிழ்வும், உள்ள நிரம்பவும், உலகமெல்லாம் திரிகரணங்க ளொருமிக்கவும், ஆனந்தக்கண்ணீர் உடல் நிரம்பவும், கடவுளைத் துதித்து யாகத்தை முடித்தெழுந்து மனைவியோடு யாகசாலையை விட்டு, இருபுறத்திலும் வாத்தியங்கள் ஒலிக்கத் தனது அரண்மனையிற்சென்று மங்கலவாத்தி யத்துடனே எதிர்கொள்பவர் முகத்தில் மகிழ்ச்சி பெருக, இராஜரீகஞ் செய்யும் மண்டபத்தில் சிங்காசனத்தின் மேலிருந்து கற்றுக் கேட்டு வல்லரான வைதிகர்கள் கையில் சுவர்ணமழையைப் பெய்து மற்றெல் லாருக்கும் அவர்கள் போதும் போதுமென்னக் கொடுத்து மான் மழு

வேந்திய பெருமானுடைய சந்நிதானத்துக்கு அதிக சிறப்புகள் பெருக திருவிழாச் செய்வித்துப் பின்னும் சிறையில் கிடப்பவரைச் சிறை நீக்கி, ஏழுவருஷம் குடிகளிடத்தில் வாங்குகிற வரிப்பொருளை விடு வித்து, அயல்வேந்தரிடத்துக் கொள்ளுந் திறையைவிட்டு, ஆயத் துறைப் பொருளையும்விட்டு, கோயில்களும் தருமசத்திரங்களும் பெருகச் செய்யுங்களென்றும், சத்துருத் துவேஷங்களையும் விடுங்களென்றும் வள்ளுவனாலே பறையறையச்சொல்லி பொக்கிஷசாலையைத் திறந்துவிட்டுப் பலரும் வேண்டியவளவிற் கொள்ளக்கடவரென்று ஆடையாபரண முதலிய வெகுமதிகளைச் செய்து, இராசவீதியெல்லாம் சந்தோஷமாய் எண்ணெய்விழா சுண்ணவிழா முதலிய ஆடச்செய்து, அந்த மதுராபுரியேயன்றி எல்லாப் பட்டணங்களும் சந்தோஷிக்க, மலயத்துவச பாண்டியன் பெருங்களிப்படைந்து, கடவுளருளியபடியே தன் பிள்ளைக்குச் சாதகர்ம முதலிய கிரியைகளெல்லாஞ் செய்வித்து, தடாதகைப்பிராட்டியா ரென்று திருநாமமிட்டு, வேதங்களும் உண்மையைக் காணக்கூடாத தேவியை இமவானையும் மேனையையும் போல வளர்த்துக் களிக்குங் காலத்தில்,

பிரமாண்டங்களெல்லாம் சிறுவீடாக விளையாடுகிறவளான உலக மாதா இப்போது தடாதகையாய் மழலைப்பிள்ளைகளுடனே வீதியில் வந்து மணலாலே சிறுவீடு கட்டி மணற்சோருக்கித் தன்னேடொத்த பிள்ளைகளுக்கு விருந்திட்டும், முருகவேளும் வாய்வைத் தருந்தாத தனது இளமுலைப்பாலைப் பாவைக்குக் கொடுத்தும், பொன்மாலையை மகிழச்செய்தும், தோழிமார்கள் கண் களிகூர அவர்கள் கற்க ஆடிக் காட்டுகிறவள்போல கழங்கு பந்து அம்மானைகளாடியும், இருவினை யாகிற கயிறுபூட்டி மேலுலகமும் கீழுலகமும் சென்றுவர நம்மை ஆட்டுகிறதுபோல முத்துவடம் பூண்ட ஊசலாடியும், இனித் தனது தந்தைக்கு மகிழ்ச்சி செய்வாளாய் மெய்யான வேதங்களும் அறுபத்து நான்கு கலைஞானங்களுந் தெரிந்து, யானை, இரதம், குதிரை ஏற்றங்களும், தனுர்வேதமும் தெளிந்து வருகிறதைக் கண்டு மலயத்துவச பாண்டியன் வேதவேதாந்தங்களெல்லாம் மேகலையாக இடையில் தரித்த தனது சிறுமகளுக்கு மகுடஞ் சூட்டுவதற்கு நல்ல நாள் நியமித்துத் திசைகளுக் கெல்லாம் ஓலைப்போக்கி அரசர்களை வருவித்துப் பட்டணமெல்லாம் திருவிழாவாக அலங்கரித்துச் சுமதியாகிய மந்திரியால் அபிஷேகத்துக்கு வேண்டுவன வெல்லாஞ் சேகரித்து மங்கல வாத்தியங்கள் முழங்க யானையின் தலைமேற் பொற்குடங்களில் கங்கை முதலிய தீர்த்தங்களெல்லாம் நிரப்பிப் பூசித்து மந்திராக்கினி வளர்த்தி அமுதம் நிவேதித்துச் செம்பொன்னாலும் இரத்தினங்களாலுஞ் செய்த சிங்காசனத்தை விசுவாசத்துடனே பூசித்துத் தெய்வத்தைத் துதித்துத் திருமுடியை மதயானையின் மேல் வைத்துப் பட்டணப்பிரவேசஞ் செய்து பூசித்து, இரத்தினங்களாலே ஐந்து தலைகளும் பொன்னால் உடலுமான நாகப்படங்களைப் பரப்பிக் குடை

போற் கவியச் சிங்காதனத்தின்மேல் வைத்துத் தடாதகைப் பிராட்டியாரைச் சுவர்ண கும்பத்தால் நன்னீர் அபிஷேகஞ் செய்வித்துத் தேவர்கள் மந்தாரைப் பூமழை பொழிய, முனிவர்கள் மங்கல ஆசி சொல்ல, தெய்வரம்பைகள் போல்வார் நடனஞ் செய்ய, ரிஷிபத்தினிகள் பல்லாண்டு பாட, வேதங்கள் முழங்க மாணிக்கக்கிரீடஞ் சூட்டிக் காருண்ணிய ரூபியான தடாதகைப் பிராட்டியாருக்குத் தனது அரசாட்சியும் மந்திரி முதலியோர் தமது காரியங்களைச் செய்யவும், செங்கோல் கொடுத்துப் பூரணச் சந்திரன்போலும் வெள்ளைக்குடை நிழல் செய்யவும், அர்த்தச் சந்திரக் கிரணங்கள்போல இரண்டு பக்கத்திலுஞ் சாமரவும் வீசவும், தேவர்கள் பூமழை பொழியவும், வெள்ளிமலைமேல் சூரிய னுதயமானதுபோல வெள்ளை யானைமேலேற்றி வேப்பமாலையணிந்து பெண்ணரசியை மங்கள வாத்தியங்கள் முழங்க நகரைவலஞ் செய்வித்து அசரீரி சொல்லக்கேட்ட அப்போழ்திலும் இப்போது திருமகள் விளங்குகிற செல்வியை நோக்கிப் பேரானந்தம் அதிகரித்துப் பின்பு சிலநாள் கழித்து வீரலட்சுமி கொண்டாடத் தன்றோள்களாற் சுமந்த உலகத்தை யெல்லாம் தன் மகளுக்குக் கொடுத்து மலயத்துவசன் வானுட்டைப் பெற்றுன்.

பின்பு தேனிற் சுவைபோலவும் பூவில் மணம்போலவும், பரமசிவன் இடப்பாகத்தை விட்டு நீங்காத நமது தாயாகிய தடாதகைப் பிராட்டியார் தந்தைக்கு அந்திய காலக் கடன்களெல்லாம் வழுவாது செய்து, பின்பு இரத்தின சிங்காதனத்தின் மேலிருந்து உலகமெல்லாம் ஒரு குடை நிழலில் ஆள்வாளாய் உலகத்தரசர்கள் வணங்க உலகத்தை மநுநீதி வழுவாமற்காத்து, மலயத்துவச பாண்டியன் சுவர்க்கலோகஞ் சென்றபின்பு பரமசிவன் தமது உள்ளத்தில் மதிக்கின்ற அரச அன்னம்போலப் பாண்டியன் பெற்ற கன்னிப் பெண்ணரசியான தடாதகைப் பிராட்டியார் ஆக்ஞாசக்கரஞ் செலுத்திய பெருமை எப்படி யென்றுல், சூரியனுதயமாக ஐந்து நாழிகைக்கு முன்னே நாகசுர முதலிய நல்லிசை கேட்டு எழுந்து திருமஞ்சனமாடி, தங்கள் அரசகுலத்துக்குத் தக்க நித்திய கருமானுஷ்டானங்களும் தேவபூசையும் குறைவின்றி முடித்து மெய்ஞ்ஞானிகள் சூழ்ந்துவர சிவபெருமான் எழுந்தருளிய திருக்கோயிலுக்குப் போய்க் கடவுளை விதிப்படி வணங்கி மீண்டும் தன்தரண்மனையில் அரசாட்சி செலுத்துங் கொலு மண்டபத்தில் புஷ்பங்களா லலங்கிருதமான இரத்தின சிங்காதனத்தின்மேல் அமுதத்தாற் செய்த பாவைபோலிருந்து அனிந்திதையும் கமலினியும் உலகக் கன்னிகைகளாக வந்து அடைப்பையும் காளாஞ்சியுந் தாங்கவும், சரஸ்வதி லட்சுமியும் அப்படியே உலகக் கன்னிகைகளாகவந்து சாமரம் வீசவும், கண்ணப்பநாயனுர் அருச்சித்த மலர்கள் போலச் சோழன் சேரன் முதலிய அரசர்கள் தங்கள் முடி மாலை பாதத்தில் விழ வணங்கி அருளினபடி ஏவல் செய்யவும். கத்தி கேடயங்கள்கொண்டு குவிந்தகையினராய்ச் செகதீஸ்வரியான தடாதகைப் பிராட்டி எப்போது கிருபா நோக்கஞ் செயவாளோ வென்று இமை

யாமற் பார்த்து, அவள் பார்க்கும்போது இரண்டு கையுங் குவித்துப் பிழைத்தோமென்று வாய்பொத்தி உழையர்கள் ஏவல் செய்யவும் கஞ்சுகிகள் அவன் மராடராஜன், அவன் கருநாடராஜன், இவன் விராடராஜன், இவன் குருநாட்டரசன், இவன் சேரன், இவன் சோழன் என்று ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும் பிரம்பாற் குறித்துக் காட்டவும், செந்தமிழும் வடநூலும் முடிவு தெரிந்தவர்களும், வேத சாஸ்திர முதலிய கலைஞானந் தெரிந்தவர்களும், ஆறு சமயநூல் தெரிந்தவர்களும், இருவகைப்பற்று விட்டவர்களும், சைவமாதர்களும், மெய்ஞ்ஞானத்தால் அஞ்ஞானத்தை வென்ற வீரர்களும், சமுகத்தி லிருந்து நன்றாகத் தெளிவிக்கும் ஆசாரியர்களும், பஞ்சாங்கத்தால் முக்காலமுந் தெரிந்த புரோகிதர்களும், பின்னனுபவமும் முன்னனு பவமுந் தெரிந்து நடத்தும் சுமதி முதலிய மந்திரிகளும் சூழ்ந்திருக்கப் பிராமணர்கள், தொழிலாளிகள், தேவஸ்தான பூசை, தருமசத்திரம், விரோத மில்லாத குடிகள் முதலானவர்களை மந்திரிகளாலே தெரிந் தும் ஒற்றர்களாலே யறிந்தும், யாதேனுங் குறைவுண்டானல் தண்டித்துத் தீர்த்தும், உத்தேசம் லக்ஷணம் பரீக்ஷை என்னும் மூவகையாலே நியாயநூலை அநுசரித்து முறைப்படி கண்டித்துக் கிரமத்தினிறுத்தித், தார்க்கீகர்கள் தர்க்கஞ் செய்யுங் கூட்டத்தில் மகிழ்ச்சிக் கொண்டும், மகாவிஷ்ணு முதலிய தேவர்கள், தங்கள் வலிமையாற் கடைந்தெடுத்த அமுதமெல்லாம் வாரி அஞ்ஞானந் தீரக் கற்ற வித்வான்கள் பொழிவது போலக் கவிகளுண்டாக்கி ஊட்ட காதுகணிரம்ப வுண்டும் பிராமணர்கள் சைவர்கள் பெரியோர்கள் எல் லாருக்கும் சுயம்பாகிகள் தேவாமிர்தத்தையும் வெறுக்கச் சமைத்த முல்லையரும்பு போன்ற அன்ன முதலிய நால்வகை யுண்டியுங் கொடுத்து, அவர்கள் சொல்லும் உபசாரமாகிய விருந்துண்டும், மத்தி யானகாலத்தில் புராணிகர்களாலே பதினெண்புராணங்கள் கேட்டும், மநு முதலிய தருமசாஸ்திரங்கள் கேட்டும், பின்பு சித்திரப் பிரதமை போல நாடகப் பெண்களாடலும் பாடலும் கேட்டும், இவ்வாறு முன் னோர்கள் செய்த தரும பரிபாலனமும், வேறே தருமங்களும், யாக வகைகளும் செய்வித்தும், செல்வமுங் கல்வியும் தனக்கிரு கண்களாக வளர்ந்து வருகிறாளென்று சொல்வது பெரிதோ? மும்மூர்த்திகளாலே, முத்தொழிலையும் நடத்துகிறாளென்று சொல்வதும், ஆதிமத்தியானந்த ரகிதையான தேவி புகழுக்கு ஈடன்றென்றால் புல்லறிவினனாகிய என் னாற் சொல்லமுடியுமோ? முடியாது. தடாதகைப் பிராட்டியார் கன்னி யாக விருந்து அரசாட்சி செய்ததினாலே அந்நாட்டுக்குக் கன்னி நாடென்று பெயராயிற்றென்று அகத்தியமுனிவர் சொல்ல, முனிவர் கள் கேட்டு மனங்களித்து ஐயா! முன்னே தக்கன் செய்த தவத்தாலே தாக்ஷாயணியாகவும், பருவதராஜன் செய்த தவத்தாலே பார்வதியாக வும், வேதாந்தங்களுக்கும் எட்டாத தேவி அவதரித்தாள். இங்கு மனிதனாகிய மலயத்துவசன் மகளென்று பிறக்க வேண்டிய காரண மென்ன சொல்லியருள வேண்டுமென்ன.

அதற்கு அகத்திய மகாமுனிவன் கேளுங்கள் முனிவர்களே ! முற்காலத்தில் விச்சுவாவசு என்னும் விஞ்ஞையன் பெண்ணுகிய விச்சாவதி என்பவள் பார்வதியிடத்துப் பக்தியுள்ளவளாய் வருகிறவள் ஒருநாள் தந்தையை வணங்கி, ஐயா ! நான் பார்வதியைப் பூசித்து ஈடேற வேண்டுகிறேனுகையால் அந்த உமையவள் மந்திரத்தை எனக்கு உபதேசியுமென்று, தந்தையால் உபதேசிக்கப்பெற்றுப் பின்னும் ஐயா ! நான் உமையைப் பூசிக்க இவ்வுலகிற் சிறந்த தலம் யாதென்று கேட்க, தந்தை உலகத்தில் பெரியோர்கள் எப்போதுஞ் சஞ்சரிப்பதாய்த் துவாத்சாந்த மென்றும் பூலோக சிவலோக மென்றும் சொல்லத்தக்கது மதுரை. அதுவோ திரிலோகங்களிலும் சிறந்த சத்திபீடம் அறுபத்து நான்கிற்கும் முதற்பீடம். வேண்டினேருக்குப் போகமும் வீடும், சித்தியும் தரத்தக்கது. பின்னும், இரவும் பகலும் சுவர்க்கலோகத்தில் கதவடையாமல் தேவர்கள் வந்து பூசித்து உமாதேவி அருளுகின்ற சித்தியால் வினையை வெல்வார்கள். அதுவுமல்லாமல் என் தந்தை முதல் ஐந்துபேர்கள் பூசித்து அந்த மதுரையில் நல்ல வரங்களெல்லாம் பெற்ருர்கள். சராசரங்களெல்லாம் பெற்ற அங்கயற்கண்ணம்மை தன்னைப் பூசிப்போர்க்கு வேண்டிய இகபர போகங்களைக் கொடுத்துப் பேரருள் செய்து விளங்குகிருளென்று சொன்ன தந்தையை வணங்கி, அவரனுமதி பெற்றுக்கொண்டு, ஒரு பூங்கொடிபோல் நடந்து காடு, மலை, ஆறுகள் கடந்து நமது ஆதிபராபரையினுடைய பரிபூரண கிருபை தங்கிய அந்த மதுரையில் வந்து பெண்யானை நீராடுதல்போல, பொற்ருமரைக் குளத்தில் மூழ்கி, வேதக்கொழுந்தாகிய கடவுள் இடப்பாகத்தில் எழுந்து படர்ந்த பொன்மலை வல்லியாகிய அங்கயற்கண்ணியை வணங்கித் தைமாதம் தொடங்கிப் பகலுணவு, இராத்திரி போஜனம் அல்லாது கிடைத்த சோறு, இலை - காய்-கனி - கிழங்கு - மா - எள் முதலிய உணவுகளும் சந்திராயணம் பஞ்சகௌவியம்-பால்-நன்னீர் - தருப்பை - மேனுனிநீர், வாயு இவைகளைப் புசித்தும், பட்டினி கிடந்தும், இப்படிப் பன்னிரண்டு மாதகாலம் விரதங்கள் செய்து இளைத்து, மேல்வரும் தைமாதத்தில் சந்நிதிக்குப் போய்ச் சேவித்து நின்று. மாந்தளிர்போலும் திருவடிகளையும், இருமணிக்கோவை சூழ்ந்த மின்போலும் இடையையும், நூலிழையும் நடுப்புகுதாத திருக்கொங்கைகளையும் வரிசையாய்ப் பொன் வளையல்களணிந்த செங்காந்தள் மலர்போலும் திருக்கைகளையும், திருமங்கிலியக் கழுத்தையும், பூர்ணசந்திரன் போலும் திருமுகத்தையும், வண்டுகள் இன்னிசை பாடுகின்ற இருண்ட திருக்குழற் கற்றையையும், இப்படிப் பாதாதிகேச பரியந்தம் தேவியைத் தியானித்து விநாயகக்கடவுளைத் துதித்துக் கைகுவித்து, இளஞ்சூரியன் போலும் நிறத்தையுடைய மகமல் பட்டால் அளவுக்கிசையத் தைத்த செம்பொன்மயமான கவசத்தை அவிழ்த்து, முல்லைப்பூ மாலையை முடிவிற் சூட்டிச் சுரைப்பத்தர் பின்னே தோன்ற, பிடரியில் பூங்கோதையைப் பொருந்திய வீணையைத் தோள்மேலணைத்து, மீன்போலும் கண்களை

யுடைய விச்சாவதி தந்திகளை முறுக்காணிகளால் சுதிகூட்டிப் பண் விளங்கத் தெரித்துப் பாடத் தொடங்கினுள். எப்படியென்ருல்,

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

ஒளியா ருலகின் றுயிரனைத்து மீன்போற் செல்வி யுறநோக்கி
அளியால் வளர்க்கு மங்கயற்க ணன்னே கன்னி யன்னமே
அளியா விமவான் றிருமகளா யாவி யன்ன மயில்பூவை
தெளியா மழலைக் கிளிவளர்த்து விளையாட் டயருஞ் செயலென்னே.

அண்டக் குவைவெண் மணற்சிறுசோ ருக்கித் தனியே விளையாடுங்
கொண்டற் கோதாய் படியெழுத லாகா வுருவக் கோலமே
கொண்டற் குடுமி யிமயவரை யருவி கொழிக்குங் குளிர்முத்தால்
வண்டற் குதலை மகளி ரொடும் விளையாட் டயரும் வனப்பெண்ணே.

வேத முடிமே லானந்த வுருவாய் நிறைந்து விளையாடும்
மாத ரரசே முத்தநகை மானே யிமய மடமயிலே
மாத ரிமவான் றேவிமணி வடந்தோய் மார்புந் தடந்தோளும்
பாத மலர்சேப் புறமிதித்து விளையாட் டயரும் பரிசென்னே.

இப்படி விச்சாவதி மீனுட்சியை விஞ்ஞானத்தால் தோத்திரஞ் செய்ய, ஆழ்ந்த மெய்யன்பாகிய வலைக்குள் அகப்படுகின்ற அங்கயற் கண்ணம்மையாகிய காருண்ணியரூபி சூழியக்கொண்டை முடித்த சிறிய திருமுடியும் கொவ்வைக் கனிபோலும் திருவாயில் மழலையமுதஞ் சிந்த மூன்று வயது பச்சிளம் பெண்பிள்ளை வடிவாய்ச் சந்நிதி முன்னே வேண்டும் வரமருள நின்ருள்.

அப்படி வந்துநின்ற மூன்று வயது குழந்தையை விச்சாவதி சாஷ்டாங்க வந்தனஞ் செய்ய, அவளை லோகமாதாவானவள் பார்த்தருளி, விச்சாவதியே! நீ வேண்டியதென்ன? சொல்லென்று கேட்க, அதற்கு விச்சாவதி, தாயே! எக்காலத்தும் உமது பாதகமலங்களினிங்காத பரிபூரண பக்தியை அருளவேண்டுமென்ன, அப்படியே தந்தேன். இன்ன முனக்கு வேண்டியதென்ன?, தாயே! இப்போது நான் கண்ட பிள்ளைவடிவாய் என்னிடம்வந்து அருள்சுரந்து மடியிலிருக்கத் திருவுள்ளஞ் செய்யவேண்டுமென்று வணங்க, சிவபரம்பரையாகிய தேவி சம்மதித்து விச்சாவதியே! நீ மலயத்துவச பாண்டியனுக்கு மனைவியாகப் பிறந்து வரும்போது நான் பிள்ளையாய் உன் மடியில் வந்திருப்பேனென்று அருள் செய்ய, அப்படியே விச்சாவதி பொன் மாலையாய் வந்தகாலத்து மதுரை மீனுட்சி தடாதகைப் பிராட்டியாக அவதாரஞ் செய்தாளென்று தம்மைக் கேட்ட முனிவர்களுக்கு அகத்தியமுனிவர் அருளிச்செய்ய அதை அம்முனிவர்கள் உள்ளபடி நன்ரு யறிந்தார்கள்.

தடாதகைப் பிராட்டியார் திருவவதாரப் படலம் முற்றிற்று.

---

ஐந்தாவது

# திருமணப் படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தரைபுகழ் தென்னன் செல்வத் தடாதகைப் பிராட்டி தானே
திரைசெய்நீர் ஞாலங் காத்த செயல்சிறி துரைத்தேன் றெய்வ
விரைசெய்பூங் கோதை விடையவன் மணந்து பாராண்
டரசுசெய் திருந்த தோற்ற மறிந்தவா றியம்ப லுற்றேன்.

உரை: இவ்வுலகத்தார் புகழாநின்ற மலயத்துவச பாண்டிய ராசன் புத்திரியாகிய தடாதகைப்பிராட்டியார் அலையை வீசுகின்ற நீரையுடைய கடல் சூழ்ந்த பூலோகத்தைக்காத்த திருவிளையாடல் சிறிது தெரிந்தமட்டிற் சொன்னேன், இனித் தெய்வமணங் கமழு கின்ற பூமாலையணிந்த அளகத்தையுடைய அந்தத் தடாதகைப் பிராட்டியைக் கயிலாசபதியானவர் திருமணங் கொண்டருளிப் பூமியையாண்டு அரசுத் தன்மையை நடத்திக்கொண் டிருந்த திரு விளையாடலை அறிந்தமட்டில் சொல்லுகிறேன்.

இவ்விதமாக அகஸ்தியமுனிவர் சொல்லிப் பின்னுஞ் சொல்லு கிறார். கேளுங்கள் முனிவர்களே! லோகமாதாவானவள் பெண் ணரசியாகி ஆக்ஞாசக்கரம் பகையிருளைப் போக்க வெள்ளைக்குடை யாகிய சந்திரன் குளிர்ந்த நிழலைக் கொடுக்க, மனுநீதிப்படியே பெரிய உலகங்களெல்லாம் தனியரசு நடாத்திவருங் காலத்தில் திரு விடை இளைத்து மறையவும், செம்பொன் மலைபோலக் கொங்கைள் வளரவும், கரிய கூந்தல் நள்ளிருளை வெல்லவும், வீணைபோல் கொஞ்சு தலைச் சொல்லும் இனிய நகையையுமுடைய பெண்ணரசிக்குத் திருக் கல்யாணகாலம் நேரிட்டதாயிருக்க, அந்தக் குளிர்ந்த சந்திரனைக் கொண்ட கொம்புபோன்ற தடாதகையைப் பெற்ற பொன்மாலையான வள் கண்டு, நிறையப் பூத்து வளைந்த கொம்பு போன்ற உனக்குக் கன்னிப்பருவம் பழுக்குங்காலம் வந்தும், இன்னும் கல்யாணம் கூடா திருக்கின்றதே யென்று கிலேசித்துச் சொல்லக்கேட்ட பிராட்டியார் கூறுவாள்.

தாயே! நீ நினைத்த எண்ணம் கூடுங்காலம் வரும்போது கூடும், இப்போது நீ கிலேசிக்க வேண்டாம் நான் சென்று எட்டுத் திசை களும், சமுத்திரத்தாற் சூழ்ந்த தீவுகளும், எனது விஜயம் நிலைபெறச் செய்து வருகிறேன், நீ இங்கிருக்கக் கடவையென்று தடாதகைப் பிராட்டி விரைவில் எழுந்து வந்து சபை கூடக்கண்ட அரசர்களும் மந்திரியர்களும் மற்ற யாவருங் கூடிப் பிராட்டியின் திருவுள்ளந் தெரிந்து தாவுகின்ற குதிரைகள் கட்டிய தேரைக் கொண்டுவந்து சாரதி நிறுத்த, அத்தேரில் உலகங்களுக்குள்ள இடையூறு தீர எழுந்

தருளிச் சங்க முழங்கவும், அஷ்டாதச வாத்தியங்கள் முழங்கவும் வாள்வீரர்கள் வேள்வீரர்களாகச் சில பெண் படைகளும் தேரேறிச் சூழ்ந்துவரச் சதுரங்க சேனைகளும் சூழ, மீனக்கொடியும், புலிக்கொடியும், விற்கொடியும், பீலிக்குடைகளும், சாமரங்களும் வேப்பம்பூ மாலை யணிந்த தேவி தேரைச் சூழ்ந்துவர, வெண்கொற்றக் குடை நிழலைச் செய்ய, வேதங்கள் முழங்க, பக்கத்தில் வியாழபகவானை யொத்த சுமதி யென்னும் மந்திரி கையிற் பொற்பிரம்பை நீட்டிச் சதுரங்க சேனைகளுஞ் செல்லச் சேவகஞ் செய்துவர இந்திரலோக முதலான லோகங்களிலுள்ள செல்வங்களெல்லாங் கொள்ள நினைத்துக் கெஜபதி முதலிய வடதிசை அரசர்கள் புஜபல மடங்க வென்று அவ்வரசர்களாலே தேவர் முதலிய சேனைகளும், ஊழியப் பெண்களும், இன்னும் பல பொருள்களுந் திறையாகக் கொடுக்கக்கொண்டு, வேறே பகைவரில்லாமையால் திக்குப்பாலகர்களை வெல்லக் கருதி, இந்திரதிசையிற் சென்று அவன் சேனைகளோ டெதிர்த்து, இந்திரன் சூடிவந்த தும்பைமாலை யற்று, அவனது கருவபங்கமாய் ஊழியப் பெண்களும், சதுரங்க சேனைகளும், சிந்தாமணியும், கற்பக முதலியவுந் திறையாகக் கொடுக்கக்கொண்டு, அப்படியே மற்றத் திக்குப் பாலகரையும் வென்று அவர்கள் கொடுக்குந் திறைகளைக் கைக்கொண்டு, ஈசான்யதிக்கிற் சென்று கைலாயத்தைச் சமீபித்துத் தமது சதுரங்க சேனைகளின் முழக்கமும், பல வாத்தியங்களின் முழக்கமும் முன் சென்று பரமசிவத்துக் குரைக்க நெருங்கி, மலைகளோடு மலைகள் மோதிச் சண்டை செய்வதுபோல யானைகள் கர்ச்சித்துப் பாயவும், முதுகில் அம்புறாத் தூணிகட்டி அம்புகள் பூட்டிய வில்லுடனே வீரர்கள் இடிபோல் முழங்கிச் சூழ்ந்து கொண்டார்கள்.

அதுகண்ட காவலாளர்கள் திருநந்திதேவரது சந்நிதியிற் போய்ச் சொல்ல, அப்போது நந்திதேவர் சிவபெருமானுடைய திருவுள்ளந் தேர்ந்து, பிராட்டி சேனைகளின்மேல் ஜெயம் பொருந்திய சிவகணங்களை யனுப்ப, இரண்டு சேனைகளும் கடலும், கடலும்பொருதாற் போலக் கண்களில் நெருப்புப் பொறி சிந்த வெகுண்டு, சூலங்கள் - மழுக்கள் - தோமரங்கள் - சக்கரங்கள் - பிண்டிபாலங்கள்-மழுக்கள் - வாளாயுதங்கள் - தண்டாயுதங்கள் - கலப்பைகள் - வேலாயுதங்கள் முதலிய ஆயுதங்களை எறிந்து ஊழிகாலத்துக் கடல்போல் வீரர்கள் கர்ச்சித்து எறிவனவும், செலுத்துவனவும், பிரயோகிப்பனவு மாகிய படைகள் சில இரத்தத்தில் முழுகி வெளிப்படுவனவும், தப்பிப் போவனவும், பட்டு முறிவனவும், வினைக்கொத்த போகம்போலாகக் காண வந்த தேவர்களின் வாகனங்களில் அன்னமுங் கருடனும் பறந்து ஓடிப் போயின. சிலர் வாகனங்கள் ஆயுதங்களா லழிந்து, எமனது எருமைக்கடாவைத் துர்க்கை பலிகொண்டதுபோல, ரத்தத்தைக் கக்கின. அப்போது சுவாமி தரிசனத்துக்கு வந்த விஞ்சையரும் அவர் மனைவியரும் இவ் வனர்த்தத்தைக் கண்டு பயந்து வேறு

வழியிற் சென்றனர். சந்திராஸ்திரம்-சூரியாஸ்திரம்-அக்கினியாஸ்தி ரம்-வருணாஸ்திரம்-நாரசிங்காஸ்திரம் - சரபாஸ்திரம்-வாயுவாஸ்திரம்-நாகாஸ்திரம் இவைகளை இருதிறத்தவரும் ஒன்றற்கொன்று மாறாக விட்டுப் போர் செய்யும்போது திருநந்திதேவரைச் சேர்ந்த கணங்கள் முறிந்தோட, தடாதகைப் பிராட்டியார் புற்றினின்றும் அரவஞ் சீறி வந்ததுபோல் வில்லில் நின்றும் பாண வருஷங்களை வருஷித்துக் கணங்கள் கையிலுள்ள அஸ்திர சஸ்திரங்களை யெல்லாம் அறுத்து அவர்களை நிராயுதராக்க, அவர்கள் மலைகளை வாரிப் பிராட்டியார் சேனைகளின்மேல் விடுக்க அவைகளை யெல்லாம் வச்சிராயுதத்தாலே அறுத்துப் பொடியாக்கித் தண்டாயுதத்தா லவர்களை யடக்க, அவர்க ளெல்லா முறிந்தோடிப் போனார்கள். அண்டங்களையும் சராசரங்களை யும் உண்டுபண்ணி அவைகளில் எங்கும் வியாபித்திருக்கிற தேவியின் பெருமையை யாராலே சொல்லி முடியும்.

ஆதலால் கணங்கள் ஆயுதங்களுமற்று, விமானங்களு மழிந்து அணிந்த மாலைகளும் உதிர்ந்து, போர் செய்ய மூண்ட புஜவலியுங் கெட்டு, கோபமுங் குலைந்து, வீரநகையு மிழந்து, வீரசிங்கம் போன்ற நடையும் தளர்ந்து, நிற்கிற நிலையைத் திருநந்திதேவர் கண்டு எல்லா ரையும் அடிமையாகவுடைய சிவபெருமானுடைய திருவடியில் வணங்கி இவைகளைத் தெரிவிக்க கங்காதரரான கடவுள் செவியுற்று புன்னகைசெய்து தருமஸ்வருபமாகிய சிவந்த கண்களையுடைய இடப வாகனத்திலேறி, வலிய வில்லும் ஜயந்தைத்தருகிற தேவாஸ்திரங்களை யும் கைக்கொண்டு, யுத்தகளத்துக்கு வந்து பூதவீரர்களோடு போராடி ஜயங்கொண்டு, இனி யார் வந்தாலும் ஜயங்கொள்ள வல்லேனென்று பெண் சிங்கம்போல் நிற்கிற தேவி திருவடிவையும் சேவகத்திரத்தை யுங் கண்டார். அவர் கண்டபோதே வீரக்கழலணிந்த ஒப்பற்ற திரு வடியும், பாம்பாலிறுக்கி யுடுத்தின புலித்தோலும், வெற்றி மழுவைக் கொண்ட திருக்கரமும், திருவெண்ணீறணிந்த அழகிய முந்நூன் மார் பும், சிவந்த ஜடைக்கற்றையும், தன்னையே பார்க்கின்ற கிருபா திருஷ்டியுங் கொண்டு விளங்குகின்ற தனது வலப்பாகத்தைத் தடா தகைப்பிராட்டியுங் காணக் கண்டவுடனே தனது மூன்று முலைகளி லொருமுலை மறைந்தது. மறையவே உள்ளத்தில் நாணம் - மடம் - அச்சம் தோன்றி, வளையும் பூங்கொம்புபோல் துவண்டு துவண்டு பழைய அன்பு வந்து தங்க, கூந்தலவிழ்ந்து பிடரியிற்றெங்க, மீன் போலுங் கண்கள் புறவடியை நோக்கக் காற்பெருவிரலால் நிலத்தைக் கல்லிக்கொண்டு மின்னலைப்போல் நின்றாள்.

அப்படி நிற்கிற தடாதகைப் பிராட்டிக்காக முன்னே ஆகாச வாக்காகக் கடவுள் கூறிய திருவார்த்தைத் தெரிந்த மந்திரியாகிய சுமதிதேவிதிருவடியை வணங்கித் தாயே இந்தக் கொன்றைமாலையை யணிந்த செஞ்சடைக்கடவுளே உமக்கு மணவாளர் என்று சொல்ல, அப்போது சிவபரஞ் சோதியானவர் அன்பு மிகுந்து தடாதகையை

நோக்கிப் பெண்ணே ! நீ திக்குவிஜயம் செய்ய என்று புறப்பட்டாயோ அன்றுதொடங்கி நாமும் மதுரையைவிட்டு உன் கூடவே திரிகிறோம். இனி உன்னை வேதவிதிப்படி விவாகஞ் செய்துக்கொள்ள இனி வருகிற திங்கட்கிழமை நல்ல சுபமுகூர்த்தத்தில் உன்பட்டணம்வந்து சேருகிறோம். நீ முன்னே செல்லக் கடவையென்று விடைகொடுக்க; அப்படி விடைதந்த நாயகர்மே லன்பையும் உயிரையும் வைத்துப் பெண்படைகள் சூழ மலைபோலுந் தேர் மேற்கொண்டு பலவாத்தியங் களும் கடல்போல் முழங்க, வழியில் அநேக மலைகளும் காடுகளும் ஆறுகளும் கடந்து சந்திரகுல தீபம்போல் மங்கல மெதிர்கொள்ள, மதுராபுரியில் வந்து இந்திரசெல்வம் நிறைந்திருக்கின்ற மாளிகையில் வந்திருந்தனள்.

பின்பு மந்திரிகள் திருக்கல்யாண விசேஷங் கண்டெழுதி எங்கும் திருமுகங்க ளனுப்பிக் கலியாணத்துக்குத் தக்கபடி பட்டணம் அலங் கிருதமாக வேண்டுமென்று யானைமேல் மணமுரசறைவிக்க, அந்தக் கலியாண முரசு கேட்டவுடனே பட்டணத்திலுள்ளவர்கள் அளவிறந்த மகிழ்ச்சியடைந்து, தெய்வத்தைத் துதித்து வணங்கித் தேகம் புளகாங் கிதங் கொள்ள, அழகிய பெண்களை அலங்கரிப்பதுபோலப் பட்ட ணத்தை யலங்கரிக்கத் தொடங்கிக் கழித்தெறிந்த மாலைகளும், சந்தன முதலியனவுமாகிய குப்பைகளை நீக்கிக் குளிர்ந்த பனிநீரைத் தெளித்து வீதிகளிலுள்ள புழுதி யடங்கச்செய்து, ஆடவரும் மகளிரும் பாண்டிய குமாரியாகிய தடாதகைப் பிராட்டியாருக்குத் திருக் கலியாண மென்கிற பெருங்களிப்பால், குண்டலங்கள் - வளையல்கள்- கண்டிகைகள் முதலியவை கழன்றுவீழ்வன தெரியாமல், அலங்காரஞ் செய்வாராகி, ஒருவரை யொருவர் முகூர்த்தமென்று என்று விசாரிப் பார். சிலர் சோமவாரமென்று சொல்வார். அப்படிச் சொல்லு வோரை சிலர் விரைவில் வந்து தழுவிக்கொள்ளுவார்கள். சிலர் அளவிறந்த சந்தோஷத்தால் மகிழ்ந்து நிற்பார்கள். சோமவாரம் இன்னும் ஆறுநாள் அதை ஆறு யுகமாக வெண்ணிக் காலங்கழிப் பார்கள் சிலர். முன்னே நமக்குத் தோள்கள் துடித்தது; தடாதகைப் பிராட்டியார் திருமணக்கோலங் காணத்தானோ வென்பார்கள் சிலர். சிலர் சுவர்களைச் சுண்ணச்சாந்தால் புதுக்கிச் சித்திரங்களெழுதித் தெற்றிகளுக்குக் குங்குமக்குழம்பு பூசி, முளைப்பாலிகைகளும் பூரண கலசங்களுந் திண்ணைகளில் வரிசையாக வைத்து வாயில்களுக்கு நேரே தோரணங்கட்டி, வீதி முழுதும் நடைப்பந்தலிட்டு, பாளைகள் குலைகளுடனே கமுகுகளும் வாழை கரும்புகளும் நிறுத்தி, நிலைக்கண் ணாடிகள் வரிசையாக வைத்து, கொடிகள் கட்டி, பனிநீரிறைத்து, பூத்தூவி நிலவிளக்குகள் வைத்து, மலர்மாலைகளைத் தொங்கக்கட்டி, நவரத்தினமாலைகளும் தொங்கவிட்டு, யானைகளுக்குச் சித்திரங்களா லலங்கரித்த முகபடாமணிந்து, குதிரைகளுக்குக் கழுத்தணி-காலணி, கலணைகளால் அலங்கிர்தஞ்செய்து, தேர்களை யலங்கரித்து, மாணிக்கத்

தீபங்கள் வைத்து, பட்டணத்தை இவ்விதமாக அலங்கரித்தும் பட்டணத்திலுள்ளவர்கள் புதிய வாபரணங்களை யணிந்தும், சந்தனம்-பன்னீர்-குங்கும களபகஸ்தூரி திமிர்ந்தும், கண்களுக்கு மையிட்டும், பாதங்களிற் செம்பஞ்சுக் குழம்பு பூசியும், சிலம்பு முதலியவையணிந்தும், கின்னர மிதுனம்போல விரலியர் பாடிப் பரிசுகள் பெற்றும், களியாட்டங்கொண்டும், பிராமணப் பெண்களும் அரசர் கன்னிகைகளும் வந்து பொன்மாலையைச் சோபனம் விசாரித்தும், பிராட்டியார் திருமணக்கோலங் கண்டும், வரிசை பெற்றுக்கொண்டும் போவாராக யானைத் தலைகளின்மேல் கங்கை முதலிய தீர்த்தங்களைப் பொற்குடங்களில் நிரப்பிப் பட்டுவஸ்திரங்களால் மூடி, மங்களவாத்திய முழங்கக் கொண்டுவரவும், அவரவர்களும் தங்கள் தங்கள் வீட்டில் கலியாணம் போல அறுசுவை உணவுகள் சமைத்துச் சந்நியாசி முதலானவர்கள் எதிர்கொண்டு வணங்கி உபசரித்தும், இவ்வாறாக அலங்கரித்தார்கள்.

தடாதகைப் பிராட்டியார் இந்திரனை ஜயித்துக் கொண்டுவந்த விமானம் போலவும், தங்கள் இராஜகுமாரியென்று தரிசிக்கவந்த மலைகள் போலவும் சுற்றிலுந் தேவர்களை நிறுத்திப் பளிங்காற் செய்த யானைகள் நீலரத்னத்தாற் செய்த யாளிகளைச் சுற்றுரங்களில் நிறுத்திப் பளிங்காற்செய்த சுவரில் மரகதச்சாளரங்கள் வைத்து ஆயிரம் பவளத் தூணிறுத்தி அதன்மேல் வைத்த இந்திரநீலப் பொதிகை மேல் பொன்னுத்தரங்களிட்டு ரத்னவிட்டங்கள் பரப்பி, இப்படிச் சந்திரகாந்தக் கற்களால் வேத வேள்வி மண்டபஞ்செய்து முத்திறுைப் பாளைகளும், மரகதத்தாற் பச்சிலைகளும், பவளத்தால் பழங்களும், வெள்ளியால் அடியும், உள்ளதாகக் கமுகுகள் நாட்டி மரகதத்தால் வாழைகள் நிறைத்தும், அதைச் சுற்றிலும் வண்டுகள் பாடத் தேன்கள் சிந்தத், தென்றல் சாளரவழியில் வீசப் பலவித பூமரங்களைச் சோலைபோல வைத்தும், யாகசாலையும், வேதியும் குண்டமும் விதிப்படியமைத்தும், கண்ணுடி முதலிய அஷ்டமங்கலங்கள் வைத்து வாசனைச் சந்தனத்திலே குங்குமப்பூ கலந்து சவ்வாது கஸ்தூரியும் சேர்த்துக் குழப்பி நிலமெழுகி, இருபுறத்திலும் பாவைகள் மாணிக்கத் தீபங்களேந்தச் சூரியமண்டலம்போல் விளங்கவும், ஆகாயத்தில் நக்ஷத்திரம் பூத்ததுபோல நவரத்னங்களால் மேற்கட்டி கட்டியும், கோயிலுக்கு முன்னே ஆகாயத்தையளாவப் பந்தலிட்டும், முனைதெளித்துப் பொற்பாலிகைகள் வைத்தும், பிரமா முதலான தேவர்களுக்குத் தகுந்த பிரப்பம்பாய் விரித்து, மேலே செம்பொன் மயமான ரத்தினக் கம்பளம் விரித்தும், சிவகணங்கள் இருக்கச் சுற்றிலும் ஆசனங்களிட்டும், நடுவில் கற்பகத்தரு வேண்டியன வெல்லாம் கொடுக்க, வயிரமணியாலே செய்த சிங்கத்தின் பிடரியில் பொன்னுலாகிய பலகையைப் பொருந்தப் பரப்பிச் சதுரமாகத் தூண்கள் பச்சைமணியால் நிறுத்திப் பளிங்கினுல் உத்திரமிட்டுப் பவளத்தினுலே கொடுங்கை கூட்டி,

இப்படியாக மூன்றடுக்குப் பவளக்கூடம் வைத்த விமானம் பல ரத்னங்களாலும் விளங்க, சாஸ்திரப்படி அங்கங்கள் நாலும் கால்களாக முதலெழுத்து பொற்பீடிகையாக வேதசாஸ்திரங்கள் எல்லாம் முத்துக் கோத்த ஊஞ்சற் கயிருக, நமது நாயகன் பிராட்டியோடு எழுந்தருளியிருப்பதற்கு ஒரு சிங்காசன ரூபங்கொண்டு நின்றுற்போல நவரத்ன கசிதமான ஆசனஞ் சமைத்து, இந்திரன் கொடுத்த கற்பகமானது பொன்வஸ்திரங்கள், பொன்னுபரணங்கள், பஞ்சாமிர்தம், அறுசுவையுண்டி, சந்தனம் பன்னீர், புஷ்பம் முதலியன வெல்லாம் கொடுக்க, சிந்தாமணி சிந்தித்தன வெல்லாம் உதவ, இப்படி இந்திரலோகமும் தோற்க அலங்கரித்து நிற்கச் செய்தனர்.

அப்பால் பாண்டியராஜன் புத்திரியான பிராட்டி திருமணவோலே எங்கும் போய்ச்சேர, அரசர்கள் எதிர்கொண்டு வாங்கி வணங்கித் தங்கள் மணிமுடிமேல் ஓலையை வைத்துக் கொண்டு அது கொண்டுவந்த தூதருக்கு வஸ்திராபரணங்கள் வெகுமதிசெய்து, சந்தோஷம் முன்னே செல்ல, மனத்திலும் வேகமாய்ப் பிரயாணப்பகடு கொங்கர்-சிங்களர்-பல்லவர் - வில்லவர்-கோசலர் -பாஞ்சாலர் - வங்கர்-சோனகர்-சீனர் - சாளுவர்-மாளவர் - காம்போசர் - அங்கர் - ஆரியர் - நேரியர் - அவந்தியர்-வைதர்ப்பர் -கங்கர்-கொங்கணர்-விராடர்-மராடர்-கருநாடர் - குருநாடர் - கலிங்கர் - சாவகர் - கூவிளர் - ஒட்டியர்-கராடர் - கந்தாரர்-குலிங்கர் - கேகையர் - விதேகர் - பௌரவர்-கொல்லர் - கல்யாணர் - தெலுங்கர் -குர்ச்சரர் - மச்சரர் - மிலேச்சர் - செஞ்சையர் முதலான தேசாதிபதிகளெல்லாம் பூமி தாங்கமாட்டாமல் முதுகு நெளிக்கச் சேனேகளோடு கூடிப் பலவரிசை வளங்களுடனே வந்து தடாதகைப் பிராட்டியாருக்குத் தெரிவிக்க அருள் செய்தபடியே தருமந் தழைத்து அருள் பழுத்து, சிங்காதனத்தின்மேல் விளங்குகிற கொடி போன்ற பாண்டியராஜ புத்திரியைக் கண்டு கண்களிகூர்ந்து, முடிமாலே திருவடியில் விழ வணங்கி, அருளின்படி அவரவர்கள் இருக்கை சென்றிருக்கப் பின்பு மலேவளம் - காட்டுவளம் - நாட்டுவளம் - கடல்வளம் முதலியனவெல்லாம் நிறைந்து மதுராபுரியெல்லாம் மங்கள வாத்தியங்கள் முழங்கிக் கொண்டிருந்தன.

இது நிற்க. அங்கே கயிலாயத்தில் வேத வரம்பைக் கடந்த கடவுள் தனது ஏகநாயகியான தடாதகைப் பிராட்டியார் போர் செய்வதைவிட்டு மதுரைக்குத் திரும்பினபின்பு பரமசிவம் உயிர்களுக்கெல்லாம் தாமே போகங்களேக் கற்பிக்கிற நியதி தெரிந்து நந்திதேவரானவர் இந்திரன், விஷ்ணு, பிரமன், உருத்திரக் கூட்டங்கள் வரவேணுமென்று சங்குகன்னன் முதலிய சில கணுதிபர்களே அனுப்ப அவர்கள் போய்த் தேவேந்திராதி தேவர்களுக்குத் திருமணச் சோபனஞ் சொல்ல, அவர்கள் பேரன்பு பின்தள்ளத் தசவுருத்திரர்களும், அவர்களேச் சேர்ந்த பூதகணங்களும், சதவுருத்திரர் களும், அவரைச் சேர்ந்த பூதகணங்களும், புத்தியட்டகரும்

நூறுகோடி வுருத்திரர்களும், பசுபதி வுருத்திரர் முதலான அஷ்ட் மூர்த்திகளும், நீலலோகிதர்களும், ஏகாதசவுருத்திரர்களும், வயிரவரும், விஷ்ணுவும், பிரமனும் இந்திரன் முதலிய திக்குப் பாலகர்களும், அஷ்ட வசுக்களும், சத்தமருத்துக்களும், அச்சுவினி தேவர்களும், துவாதசாதித்தர்களும், சந்திரனும், வியாக்ரமபாதரும், பதஞ்சலியும்,உபமன்னியபகவானும், அகஸ்திய முனிவரும், சனகாதிகளும், வாமதேவரும், சுகரும், வியாசரும், நாரதரும், சத்தமாதர்களும், சித்தரும், விஞ்சையரும், இயக்கரும், கின்னரரும், தெவரிஷிகளும், யோகிகளும், உரகரும், நிருதரும், அசுரரும், பூதவேதாள கூளிகளும், அரம்பையரும், வருஷங்களும், அயநங்களும், பருவங்களும், மாதங்களும், பக்ஷங்களும், ஐம்பொழுதும், யோகங்களும். கரணங்களும், இரவும், பகலும், நாழிகையும் விநாடி முதலிய சிறு காலங்களும், கடலும், நதியும், திக்குகளும், அஷ்டகுல வரைகளும், திக்குயானைகளும், மேகங்களும் இடியும், மின்னலும், பஞ்ச பூதங்களும், மந்திரங்களும், புவனங்களும், தத்துவங்களும், கலைஞானங்களும், வருணங்களும், நிலைகளும், வேதங்களும், தந்திரங்களும், சமய நூல்களும், தர்மார்த்த காம மோக்ஷங்களும். சரியை கிரியை யோகஞானங்களும், சதுஷ்பாதமும், அஷ்டசித்திகளும் அண்டங்க ளுடைபடும்படி வாத்தியங்கள் முழங்கச் சிவகணங்கள் முதலிய யாவரும் வெள்ளை மலைக்குச் சமீபத்தில் வந்து தங்கள் தங்கள் வாகனத்தை விட்டிறங்கி வணங்கிச் சிவநாமங்களைத் துதித்துப் பரமசிவமாகிய தேனை வண்டுகள்போல மொய்த்துச் சூழ்ந்திருந்தனர்.

அப்போது திருநந்திதேவர் பிரம்புகொண்டு அடித்துச் சந்தடி விலக்கிச் சிவபெருமானுக்குத் தெரிவிக்கச் சுவாமி யருளினாலே வந்து காண்பவரில் சிலருக்கு வார்த்தை சொல்லியும் சிலருக்கு நகை முகங் காட்டியும், சிலரை கண்ணுற் பார்த்தும், சிலர்க்குத் திருமுடி யசைத்தும், இப்படி யுபசரித்துத் தாம் ஒரு மண்டபத்திற் சென்று மணக்கோலஞ் செய்துக்கொள்ள நினைத்த குறிப்பறிந்து, குபேரனானவன் மிகுந்த அன்பும் ஆதரவுங்கொண்டு வேதங்களும், பிரமா, விஷ்ணு முதலிய தேவரிஷிகளுந் தொடமுடியாத திருமேனியைத் தன் கையாற் றொட்டுப் பட்டுவஸ்திரத்தைக் கொய்து, பின் கோவணஞ்சாத்தி, முன் கொச்சம் வைத்து, அதன்மேல் இரட்டைப் பொன்னரைஞாணால் இறுக்கிச் சிகையில் திவ்விய புஷ்பங்களை யணிந்து, கற்பகமலரோடு சிகழிகை முடித்துத் திருநீறணியுந் திருமேனியில் பனிநீர் கலந்து குழைத்த சந்தன கஸ்தூரிகளைப் பூசிச் சூரிய சந்திரர்போல் விளங்க இரண்டு செவிகளிலும் பொற்குண்டலமணிந்து தோளின் மேலசையவும் நீலகண்டத்தில் கண்டிகைதரித்து, முப்புரிநூலணிந்த மார்பிலே முத்துமாலையும் இரத்தின மாலைகளையுஞ் சாத்தி, நான்கு திருத்தோள்களிலும் கேயூரங்க ளணிந்து, யானைத்தோலை நீக்கிப் பொன்னுத்தரியமணிந்து, பவுத்திர முதலிய மோதிரங்கள் விரல்களுக்கிட்டு, உடுத்த

கோவணத்தின்மேல் ஐந்தலை நாகம்போலத் தொங்கச் சரிகை வஸ்திரத்தைச் சூழக் கட்டித் திவ்யபுஷ்பமாலைகள் கழுத்திலணிந்து சிலம்பும் வீரக் கழலும் திருவடிகளிலணிந்து ஆனந்தித்து நிற்க, இந்திரன் முதலிய தேவர்க்கெல்லாம் அழகு செய்விக்கும் சோமசுந்தரக்கடவுள், தாமும் அழகு செய்துக்கொண்டு தேவர்கள் பூமழை பொழியக் கும்போதரன் முதுகின்மேல் ஸ்ரீ பாதங்களை வைத்து மால்விடை மேலேறி ஆகாசவாசிகள் பஞ்சவாத்தியங்களும் முழக்கிச் சூழ, அரக்கர் இயக்கர் பூதர்கள் மங்கல வாத்தியங்கள் முழக்கிக்கொண்டு வர, விஞ்சையர்கள் தாளம்போட, கந்திருவர் வீணை வாசிக்க, தேவரம்பைகள் நடனஞ்செய்ய, ஆயிரஞ் சிங்கங்கள் முழங்கினாற்போலப் பானுகம்பன் ஆயிரம் வாயினாலும் சங்கத்தொனி செய்ய, வாணாசுரன் ஆயிரங் கைகளாலும் மத்தள முழக்க, தேவரிஷிகள் கைகொட்டி ஆனந்தக் கண்ணீரொழுகக் கணாதிபர்களுடனே ஆடிப் பாடிச் சூழ, இந்திரன் அரதனக் காளாஞ்சி கொண்டதொரு புறத்தில் வர, ஈசானன் ஒரு புறத்தில் அடப்பை தாங்கிவர, வாயுபகவான் விசிறி விசற அக்கினி சாம்பிராணிப் புகை கொடுக்க, வருணன் கெண்டிகை சுமந்துவர, நிருதி கண்ணாடி கொண்டுவர, குபேரன் அடிக்கடி சுவர்ண மழை பொழிந்துவர, தண்டியடிகள் சேவகஞ் செய்ய, கொடிகளுக்கரசாகிய விடைக்கொடிபுடைபெயர்ந்தாட, குண்டோதரன் சூலந்தாங்கிவர, பதினெட்டாயுதங்களும் சூழ்ந்துவர, புட்பநந்தன் வடமொழிப் பாடல்கள் பாட, அவரது நிழல் வடிவமான ஆலாலசுந்தரர் திருமாலையும் விபூதியுங் கொண்டுவர, அன்னவாகனத்திலேறி பிரமன் வலப்புறத்திலும், கருடவாகனத்திலேறி விஷ்ணு இடப்புறத்திலும், கைகுவித்துத் துதித்து வர வெள்ளிமலைமேல் வந்தாற்போல இடப வாகனத்தின்மே லெழுந்தருளி மதுராபுர வீதியில் வருமுன்னே,

தேவர்க டேவன் வந்தான் செங்கண்மால் விடையான் வந்தான்
மூவர்கண் முதல்வன் முக்கணெம் பெருமான் வந்தான்
பூவல ரயன்மால் காணாப் பூரணன் வந்தான்
யாவையும் படைப்பான் வந்தா னென்றுபொற் சின்ன மார்ப்ப.

தேவர்க்கெல்லாந் தேவன் வந்தான்; செங்கண்மாலாகிய ரிஷப வாகனத்தை யுடையவன் வந்தான், மும்மூர்த்திகளுக்கு முதல்வனா யிருப்பவன் வந்தான்; திரிநேத்திரங்களையுடைய எம்பிரான் வந்தான்; தாமரை மலரில் வீற்றிரா நின்ற பிரமதேவனும் மகாவிஷ்ணுவும் காணாத எங்கும் பூரணமா யிரா நின்ற பழையோன் வந்தான்; எல்லா உலகங்களையும் படைப்பவன் வந்தானென்று பொன்னாலாகிய சின்னங்க ளொலிக்கவும் பெண்ணரசியாகிய தடாதகைப் பிராட்டியார் வாயிலில் மந்திரிகள் முதலான அரசர்களும் சேனைகளும் கடவுள் சுந்தர பாண்டியனாக வருகிறதை எதிர்கொண்டு வணங்க, இந்திர லோகமென்று அதிசயிக்கத்தக்க மதுராபுரிக்குள் முகவாயில் கடந்து மாட வீதியை வலமாக வரும்போது, பொன் கொம்புபோலப் பெண்

களும், தோழிகளும் வந்து கூடிக் குமிழம்பூ, கோங்கம்பூ, காந்தட்பூ, அசோகப்பூ என்கிற பல மலர்களும் பூத்த நந்தவனம்போல மொய்த்து, மேகலைகளும், வளையல்களும் நீங்கள் கடவுளின் மணக் கோலங் கண்டால் எம்மை விட்டுவிடுவீர் சொன்னேம் சொன்னேம் என்று தடுப்பதுபோல சப்திக்க, கால்களிலே சிலம்புகள் ஆரவாரிக்க தாமரைக்காடு பூத்த கருணைக்கடலைப் பாதமுதல் முடியளவும் கண்டு கைகளைத் தலைமேற் குவித்து இந்தத் தடாதகைப் பிராட்டியார் என்ன தவத்தைச் செய்தாளோ? இந்தச் சுந்தரனை யணையவென்பார் கள் சிலர், அப்படியே சொல்லத்தகும் இந்தச் சோமசுந்தரக் கடவு ளுக்கு மென்பார்கள் சிலர். இந்த மதுரை என்ன தவத்தைச் செய் ததோ? இந்தத் திருக்கல்யாணத்தைக் காண நாம் என்ன தவத்தைச் செய்தோமோ? மலயத்துவசபாண்டியன், பெருது பெற்ற திருமகள் மணக்கோலத்தைக் காணுது போயினனே! இங்கே கோலம் வருகிற குமகன் கன்னியி னழகுக்கேற்ற அழகனே என்பார்கள் சிலர். இந்தச் சுந்தரனே மதுரைக்கரசன் வேறில்லை. ஆயினும் இந்த நங்கைக்கேற்ற நம்பியைப் பொருந்தச் செய்த மந்திரி சுமதி நல்ல தந்திரவான். கன்னியே அல்லது பொன்மாலை இப்படி மகளுக்கேற்ற மாப்பிள்ளை கிடைக்கச்செய்த தவமே தவம் என்று இடையிலாடையை நெகிழ்த்துக் கொங்கைகளைக் கசிக்கிப் பூசின சந்தனத்தை உதிர்த்துக் கொண்டு நாணி நிற்பார்கள் சிலர்.

கூந்தலை அவிழ்த்து விட்டு வாரிக்கூட்டி முடிக்கும்போது உடம் பெல்லாம் மன்மதபாணம்பட்டு நடுங்குவார்கள் சிலர். குளிர்ச்சியான மலர்கள் அம்பாய்த் தைக்கின்றனவே யென்று தலையிற் சூடின நீல மாலையையும், முறுவலாகிய முல்லை மாலையையும், மன்மத பாணங்க ளென்று வெறுத்து ஒருவர்க்கொருவர் முகம் பாராமல் தலைகளைக் குனிந்துகொண்டு, உடம்பெல்லாம் பொன்னிறப் பசலை படரக்கண்டு, கடவுள் விடைமே லழகனுய் வீதியிலே போகாமல் நமது மனங்கள் மேலும் செல்லலாமோ? இதுவோ சடைக்கொன்றை மாலையாகும் என்பார்கள் சிலர். சந்திரன் அக்கினிபோல சுடலாமோ? கடவுள்தலை மேலிருந்தால் அவரைச் சுடாதோ? கங்கா நீர் அந்தச் சூட்டை மாற்றுமல்லவா என்று கலை வெட்கம் கருத்து நிறம் எல்லாம் வெவ் வேருய் உலையிலிட்ட மெழுகுபோலக் கடவுள் பவனியைக் கண்டு, மெய்யன்பர் போன்றனர் சிலர். நன்றி மறந்தவர்போல வளை, தொடி, வஸ்திரம் நீங்கச் சிலம்பு கலங்க, ஒருத்தி விடைமே லழகனைக் கண்டு முப்புரத்தை யெரித்த நகையும், காமனை யெரித்த கண்ணும் என்னைச் சுடாது விடுமோ வென்ருள். இன்னுமொருத்தி உருவெளியாகத் தோன்றுகிற கடவுளை ஆலிங்கனஞ் செய்து நாணினுள். ஒருத்தி தேவர்கள் பிழைக்க நஞ்சுண்டு கறுத்ததன்று கண்டம், தமது நெஞ்சு இரும்பென்று தெரிய வைத்த குறி யென்ருள். ஒருத்தி இந்தச் சுந்தர னுக்கு முன்னே தூதுபோன என் மனம் ஏனின்னம் வரவில்லை

யென்று வருந்தினுள். ஒருத்தி முன்னே காமனையெரித்த கண்ணுலே பாராமல் ரக்ஷித்தீரேயானுல் புகழுண்டு, இல்லாவிட்டால் பெண் பழி பெருகுமென்ருள் ஒருத்தி இந்த விடையழகன் என்னைக் கடைக் கண்ணுலும் பார்க்கவில்லை யென்று ஒருவனைப் படத்தில் எழுதிக் கொடென்று கேட்க அவன் இவனழகை எழுத முடியாதென்ன மயங்கினுள். ஒருத்தி வலப்புறத்தில் பிரமனும், இடப்புறத்தில் விஷ்ணு வும், விண்ணேர் மண்ணேர்கள் சூழ்ந்து வரவும் காணுமல் சிவயோகி களைப் போல எங்கும் மான் மழுவேந்தின கடவுளாகக் கண்டாள். இடபம் விரைந்து செல்லக்கண்டு முன்னே ஒருத்தி பார்க்க ஓடும் போது மேகலை யவிழ்ந்து காலிற் சிக்கித் தடுமாறி விழுந்தாள். ஒருத்தி அத்துடனே விலங்கிட்டதுபோல நடந்தாள்.

இப்படி விடைமேல் வருகிற ஆனந்தத் தேன்கடலைக் கண்ணுற் பருகி, உடை, கலை, வளை நெகிழ்வது தெரியாமல், பெண்களெல்லாம் மயங்கி, எழுதின சித்திரங்கள்போல் காமவெள்ளத்தில் முழுகிநின்று கடவுளென்று தெரியாமல் தழுவ நினைத்து, அவர்கள் உதிர்த்தவை களும், தேவர்கள் சிந்தின மலரும், வீதி நெருங்க, அரசிலையாலும் தருப்பையாலும் பொற்கலசத்து நீரில் தோய்த்துப் பிராமணர்கள் வீச, அந்தப் பிராமணப் பெண்கள் ஆலாத்தி சுற்ற, அஷ்ட மங்கலங் களும் பெண்கள் தாங்கக் கற்பூரதீபமும் வலஞ்செய்து காளமும் முரசு முழங்கச் சந்நிதானத்துக்கு முன்னே வந்தவுடனே வைதிகர்கள் வேதஞ்சொல்லத் திருநந்திதேவர் கையைப்பற்றி வாகனத்தை விட் டிறங்கி, இருபுறத்திலும் வந்து நின்ற பிரமன் கையையும் விஷ்ணு கையையும் பிடித்துக்கொண்டு வேதமாகிய பாதுகைமேல் பேரின்பத் தைத் தந்தருளுகின்ற திருவடிகளை வைத்து, கீழே விரித்திருக்கிற நடைபடாத்தின்மேல் நடந்து மந்தார மழை பொழிய உள்ளே எழுந் தருளுமளவில், பொன்மாலையானவள் மங்கிலியப் பெண்களுடனே எதிர்கொண்டுவந்து, பொன்குடத்தில் நிரப்பியிருந்த கங்காசலத்தை மங்கிலியப் பெண்கள் வார்க்கச் சிவபெருமானது பாதங்களை விளக்கி, அந்த நீரைத் தலைமேல் தெளித்துக் கொண்டு, ஈரம் போகப் பாத கமலங்களை வெண்பட்டாலே துவட்டிப் பனிநீராட்டிக் கஸ்தூரிச்சேறு பூசி, மந்தார மலரா லருச்சித்துத் தலைமேல் இருகைகளையுங் குவித்துக் கொண்டு ஒதுங்கி ஒருபக்கத்திலே நின்று, சுவாமி! அருமையாக நான் பெற்ற பெண்ணரசியைத் திருமணம் புரிந்து இந்தப் பாண்டி நாட்டையும், என் கன்னியையும், தேவரீர் வசஞ் செய்துகொண்டு ஆள்வீராக வென்று துதிக்க, அதற்கு உள்ளே நகையை யுடையராய் மருமகனுன சோமசுந்தரக்கடவுள் மங்களவாத்திய முழங்கத் திருக் கலியாண மண்டபத்தில் வந்து வேதங்கள் முழங்கச் சிங்காதனத்தி லெழுந்தருளியிருந்து, சுற்றிலும் நின்ற பிரமன், விஷ்ணு, ருத்திர கணங்கள், தேவர்களானவர்களை யெல்லாம் தகுந்த ஆசனங்களி லிருக்க அருள்புரிந்து, எல்லாரையும் பூமிதாங்க முன்கலியாணத்தில்

அகத்தியரைப் பொதிகையி லிருக்கச் செய்ததுபோலே, இப்போது வடக்கிலிருக்கச் செய்தானேவென்னத் தமதருளாலே நிரம்பியிருக்கத் திருக்கலியாண முகூர்த்தகாலம் வருமளவும் பெண்களாடல் பாடல்க ளாலே பொழுது போக்குதலா யிருந்தார்.

பின் தடாதகைப் பிராட்டியாரை ஒரு ரத்ன சிங்காதனத்திலிருத் திக் கஸ்தூரி யணிந்து குங்குமச்சேறு பூசி, வாசனைத் திருமஞ்சனத் தால் அபிஷேகஞ் செய்து, முரசுஞ் சங்குமுழங்க, மெல்லியபட்டாடை சாத்தி, ராஜகுலத்துக்குத் தக்கபடி வேதப்பிராமணர்களுக்கு வேண் டிய தானங்கள் கொடுத்துப் பின்பு திருமகளும் கலைமகளும் தங்கள் தவப்பயன் பலித்ததாக மகிழ்ந்து, பிராட்டியினது அனிச்சப்பூவிலும் மென்மையான பாதங்களுக்குச் செம்பஞ்சுக் குழம்புபூசிக் கூந்தலுக்கு மயிர்ச்சாந்தம் வழிய வார்த்துக் கொங்கைகளில் பனிநீரிலே குழைய சந்தனம்பூசிக் கால்களிற் சிலம்பணிந்து, பாதசாலமுங் கிண்கிணியும் புலம்ப, முப்பத்திரண்டு கோவையான இரிசிகையும் இருபத்தொரு கோவையான கலாபமும், பதினன்குகோவையான பருவமும், எட்டுக் கோவையான மேகலையும் இரண்டு கோவையான காஞ்சியும், ஒரு பூங்கொம்பிலே வண்டுகள் புலம்புகிறதுபோலப் பூட்டிக் காந்தளில் வண்டுபோல மணியாழி விரலுக்கிட்டு, கைகளில் வைரக் கடக மணிந்து, தோளில் கேயூரம் பூட்டி, மரகதமாலை - செம்பொன்மாலை - பவளமாலைகளை, மேருவைச்சூழ்கிற நவக்கிரகங்கள்போல முலைகளைச் சூழவணிந்து, காதிலே குண்டல முதலியன அணிந்து, மேகத்துக்குஞ் சந்திரனுக்கும் நடுவே இந்திரவில்லைப்போல நெற்றிப்பட்டங்கட்டிப் புஷ்ப மாலைகளாலே கூந்தலை யலங்காரஞ்செய்து திவ்யாபரணங்க ளெல்லாம் விளங்க அணிந்து, சுந்தரக் கடவுளுக்கு மிகவும் மகிழ்வு தோன்றச் சிங்காரித்துக் கலைமகளும் மலர்மகளும் சோபனமென்று வாழ்த்தி, இருகைகளையும் அவ்விருவருந் தாங்க எழுந்தபோது, வாத்தி யங்கள் முழங்கிச் சங்கந் தொனிக்க, பூமழை பொழிய, சாமரை வீச பல்லாண்டு பாட, வேதவாத்தியங்கள் முழங்க, இந்திராணி அடப்பை தாங்க, திலோத்தமை கண்ணாடி கொள்ள, விந்தை சந்தடி விலக்க, அரம்பை காளாஞ்சி தூக்க, ஊர்வசி விசிறிவீச, மேனகை கொடிக ளேந்த, சந்தன கந்தகளப கஸ்தூரி பனிநீர் இரைக்க, தூபதீபங் கொடுக்க, சோபனங்கள் பாட, புஷ்பங்கள் பரப்பின பூம்படாத்தின் மேலே பாடகக் கால்களைப் பையப்பைய வைத்துச் சரஸ்வதியும் லட்சுமியும் கைபற்றித் தொடர, செல்வங் கல்விபெற வேண்டினவர்க் கிதுவே சமயமென்று சிலம்புகள் சொல்ல, நடந்து துவண்டு அன்பு மிக்கிருந்த பெருமானுக்கருகே பிடரிமேலே தலையைச் சாய்த்துக் கொண்டு இருந்தருள, அந்த ரத்ன பீடத்திலே சுந்தரப்பாண்டிய னென்கிற கடவுளோடிருந்த தடாதகையைக் கண்டவர்கள், மேருமலை மேலே கற்பகத்தருவைச் சேர்ந்த பச்சைக்கொடிபோ லிருக்கின்ற தென்று புகழ, பண்ணுமிசையும், நீருங்குளிர்ச்சியும், பாலும் சுவையும்

பூவும் வாசமும், வெவ்வேறு வடிவு கொண்டிருந்தாற்போல, அம்மையும் அப்பனுமிருக்க, எல்லோரும் கடவுளடி நீழலிற் கலந்தது போலக் கலந்து மகிழ்ந்திருந்தார்கள்.

அப்போது மகாவிஷ்ணு பொற்கலசத்தின் நீராலே சிவபரஞ்சோதி பாதம் விளக்கிப் புஷ்ப சந்தனங்க ளணிந்து, தூபதீபங் கொடுத்துப் பூசித்துப் பிரமன் முதலானவர்க ளெல்லாம் பாததீர்த்தங் கொள்ள, அவ்விடத்தே நின்ற மகாவிஷ்ணு கடவுள் கையிலே பிராட்டி கையை வைத்து, மந்திரங்கள் சொல்லித் தாரை நீர் வார்க்கத் தேவர்களெல்லோரும் பூமழை பொழிய. அரம்பைகளாட விஞ்சையர் கீதம்பாட அரகரவென்று சிவகணங்கள் சொல்லப் புளகாங்கிதராய்த் திருக்கலியாணமென்கிற ஆனந்தக்கடலிலே எல்லோரும் முழுகினுர்கள். பின்னும் தேவர்களும் முனிவர்களும் ஆசீர்வதித்து முறைப்படி சேஷையிட்டு, உலகத்துக்கெல்லாம் தாயுந் தந்தையுமான இவ்விருவரும் அருள் விளையாட்டாலே இப்படிக் கூடக்கண்டோமென்று கொண்டாடிப் பொற்கலசத்திலே காமதேனுவின் பால், கற்பகக்கனி, நெய், கருப்புக்கட்டி, தேன் இவற்றைக் கலந்து, கடவுளை அமுது கொண்டருளச் சொல்ல, கடவுளும் மனமகிழ்ந்து அது செய்தருளி நகைக்கப் பெண்களெல்லாம் மங்களம்பாட, பிரமதேவன் தன்னுடைய புத்திரர்களுடனே யிருந்து நெய் முகந்து வார்த்து வேள்வி வளர்க்க, அந்தத் தெய்வாக்கினி வலஞ் சுழித்தோங்க, வேதங்கள் முழங்க, சங்கங்களூத சாஸ்திரப்படி சடங்குகளெல்லாஞ் செய்து திருமங்கிலியஞ் சாத்திப் பிராட்டி கையைப்பற்றி அக்கினியும் அக்கினி வளர்ப்பவனும் ஆகுதி கொள்கிறவனுந் தானேயான பரமயோகி திருக்கலியாண நிறைவுபெற்றுத் தன் பத்தினியாருடனே பொரி முகந்து செந்தீயிற் பெய்து வேதப் பிராமணர்களுக்குத் தக்க தானங்கள் செய்து, அக்கினியை வலம் வந்து, மணாட்டி பாதத்தை அம்மி மேலே யெடுத்துவைத்து, அருந்ததியை நோக்கி வேதவிதிப்படி தப்பாமல் வேள்விச் சடங்குகளெல்லா முடித்து, இப்படி உலகத்தார் தெளியப் புருடனும் பெண்ணுமாகி மணவறைக்குள்ளே செல்ல, அந்த அழகுண்ட மனிதருங் கண்களிமையாமல் ஐயன் மணக்கோலங் காண்கிற தேவர்கள் போலாக உயர்ந்தவர் தாழ்ந்தவரென்கிற பேதமில்லாமல் கடவுளருளாலே நிறைய,மணவறையிலிருந்து கலியாணமண்டபத்தில் வந்து, பிரமன் முதலானோர்க்கெல்லாஞ் சிறப்புகள் செய்து, அவரவர் தங்கள் தங்களிடங்களுக்குச் செல்ல விடை கொடுத்தனுப்பி, அரசர்களுக் கரசுசெய்து காட்டுவான்போலச் சௌந்திர பாண்டியனென்கிற திருநாமங்கொண்டு அரசாட்சி செய்யத் திருவுள்ளமாய்க் கருணை பூத்து, விடைக்கொடியே மீனக்கொடியாகவும், பாம்பாபரணமே பொன்னுபரணமாகவும், கொன்றை மாலையே வேப்ப மாலையாகவும், புலித்தோலே பொன்வஸ்திரமாகவும், மதிமுடியே வயிர முடியாகவும், மதுராபுரியில் சோமசுந்தரக்கடவுள் பாண்டியனாகி வீற்றிருக்க, அவர்

திருவிளையாடலுக்குத் தகுதியாய்ச் சங்குகன்னன் முதலாகிய கணபதி பர்கள் தாங்களும் உருமாறி ஏவல் செய்துகொண் டிருந்தார்கள். பின்பு சௌந்தர பாண்டியனான கடவுள் அரசர் சிவபூசை செய்வது வேத விதிதா னென்பதை நிலைநிறுத்த அந்த மதுரை நடுவிலே கோயிலுண்டாக்கிச் சிவலிங்கமும் நிலைபெறச்செய்து, இம்மையே நன்மை நல்கு மிறையென்று பெயரிட்டுப் பூசைசெய்து கடம்பவனத் துக் கடவுளை மூன்றுகாலமும் போய்த் தொழுது கொண்டு உலகமெல் லாம் தமது செங்கோல் செல்ல, மனிதருக்கு அரசனாகவும், பகைவருக் குச் சிங்கமாகவும், பெண்களுக்கு மன்மதனாகவும், நிலமகளுக்குத் திரு மாலாகவும் விளங்கினர். முனிவர்களே! சாதன சதுட்டயந்தெளிந்தவர் களுக்குச் சச்சிதானந்தமான பரதத்துவமாகிய கடவுள் பூசித்த சிவ லிங்கப் பெருமையை யாராலே சொல்லி முடியும்.

திருமணப் படலம் முற்றிற்று.

---

ஆறுவது

## வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

உலகிய னிறுத்து வான்வந் தொருபரஞ் சுடர்வான் றிங்கட்
குலமணி விளக்கை வேட்டுக் கோமுடி கவித்துப் பாராண்
டிலகுறு தோற்ற மிதான் முனிவர ரிருவர் தேற
அலகிலா னந்தக் கூத்துச் செய்தவா றறைய லுற்றும்.

உரை: ஒப்பற்ற பரஞ்சுடராகிய சுவாமியானவர் உலகத்தினிடத் தில் அரசியலை நிலைநிறுத்தும் பொருட்டுச் (சௌந்தரப் பாண்டியராக வந்து) பெருமை பொருந்திய சந்திரகுலத்திற்குத் தீபம்போன்ற தடாத கைப் பிராட்டியாரைத் திருமணஞ்செய்து இராஜகிரீடந் தரித்து உல கத்தையாண்ட பிரகாசம் பொருந்திய காட்சி இம்மட்டும் கூறினோம். (இனிப்) பதஞ்சலி வியாக்கிரபாதர் என்னும் முனிவர்கள் இருவரும் மனந்தேறும்படிக்கு அளவில்லாத ஆனந்தத் தாண்டவமாடிய வர லாற்றைச் சொல்லத் தொடங்கினோம்,

சோமசுந்தரக் கடவுளாகிய பாண்டியன் மீனாட்சி தேவியைத் திருக்கலியாணஞ் செய்தபின், அத் திருமணத்திற்கு வந்த பூலோகத் தரசர்களையும், தேவர்களையும், இருடிகளையும், மற்றவர்களையும், போஜ னஞ்செய்ய வாருங்களென்று அழைக்க யாவரும் விரைந்து சென்று பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, தங்கள் தங்கள் நித்ய கர்மானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு வந்தார்கள். அப்பொழுது வியாக்கிரபாதரும், பதஞ்சலி முனிவரும் வந்து சோமசுந்தரக்கடவுளை வணங்கித் துதித்துத் திருச்சிற்றம்பலத்துளாடும் தேவரீரது திருநட

னத்தைத் தரிசித்து உண்பது அடியேங்களுடைய நியமமென்ன அதற்கு அந்த நடனத்தை இந்த விடத்துச் செய்கின்றோம். உலக மெல்லாம் உருவமாகிய ஒரு புருடனுக்குத் திருச்சிற்றம்பலம் இதய மாகும். இந்த மதுரை துவாதசாந்தமாகும் என்று கடவுள் அருளிச் செய்ய, ஐயனே! அப்புருடனுக்கு மற்றை அங்கங்க ளெவையென்று அவ்விருவருங் கேட்க, அதற்கு இறைவன் அரைக்குமேல் ஏழுலக மென்றும், அரைக்குக்கீழ் ஏழுலகமென்றும், அப் புருடனுக்குச் சொல்லுகின்றதால் இந்தத் தரையினிடத்து அந்தத் தேவஸ்தல முண்டு; அவற்றைச் சொல்லப்புகின் அளவுபடாதாகையால் அவற் றுள் சில ஸ்தலங்களைச் சொல்லுகின்றோம் கேளுங்கள், அப் புருட னுக்குத் திருவாரூர் மூலாதாரம், திருவண்ணாமலை சுவாதிட்டானம், திருவானைக்கா மணிபூரகம், நீங்களிருவரு மிருந்து தரிசிக்கின்ற ஸ்ரீ சிதம்பரம் அநாகதம். திருக்காளத்தி விசுத்தி, காசி ஆக்ஞை, கயிலை பிரமரந்திரம், இம் மதுரை துவாதசாந்தமாகும். ஆதலால் அவற்றுளீ ததிகமாகும். எப்படியென்றால், எவற்றினுக்கும் இஃது முன்னர்த் தோன்றினதாலென்று அருளிச்செய்து, கடவுள் அவ் விருவரோடும் ஆலயத்துட் சென்றார்.

அப்பொழுது தனது கிருபையால் நீங்கிவந்த தன்னைத் தேடிக் கொண்டு கயிலாயமலை வந்ததோ! அல்லது இடபம் தன்னுருமாறி அம்பல வுருவமாகி வந்ததோ! அன்றிச் சந்திரமண்டலந் தானோ வென்று யாவரு மதிசயிக்க, இந்திர விமானத்தின் கீழ்பால் வெள்ளி யம்பலம் உண்டாக சோதிமயமாகிய சூரியனுனவன் திருப்பாற் கட லின்மீது தோன்றினாற்போல, அந்த வெள்ளியம்பலத்தினிடத்து மாணிக்கப் பீடிகையொன்று தோன்றிற்று. அத்தன்மையாகிய பீடத் தின் மீது தனதாயிரம் கரங்களினுதும் மெள்ள நெருங்கிய இருளை விழுங்காநின்ற கோடி சூரியர் ஏககாலத்தி லுதயஞ் செய்ததுபோல் சோமசுந்தரக் கடவுள் மனமுதலிய அந்தக் கரணங்களுக் கெட்டாத ஞானப்பேரொளி வடிவமாகத் தோன்றி, எதிராக விருக்கின்ற சிவ கணங்கள் மொந்தையென்னும் வாத்தியமும் மத்தளமு மடிக்கத் திரு நந்திதேவர் குடமுழாவென்னும் வாத்திய முழக்க, திருமால் இடக்கை என்னும் வாத்தியம் ஒலிக்க, நாரதர், தும்புருவர், கந்திருவர் சாஸ்திர விதிப்படி பாட, பஞ்சதுந்துபியும் சமுத்திரகோஷம்போல் ஒலிக்க, நாமகள் சுருதிகூட்ட, பிரமன் சாமவேதத்தை யாழிற்பாட, சந்தி ரன் பக்கத்தில் நெருங்கி யிருக்கும் நக்ஷத்திரங்களைப்போல் தேவர்கள் தூற்றும் புஷ்ப வருஷம் எங்கும் போர்ப்ப, கடல் போன்ற நிறத் தினையுடைய முயலகன்மீது வடவாமுகாக்கினிபோலுங் கண்கள் பிதுங்க, முதுகு நெரிய வலது தாளையூன்றி, கரிய கடலிலே முளைத்த சூரியனைப் போலத் தோன்றி நின்று, பொழியா நின்ற செங்கமல மலர் கூம்பினாற் போலத் தூக்கித் திருநடனஞ் செய்யும் தாமரை மலர்போன்ற தாளும், எட்டுதிக்கையுங் கடந்துள்ள பத்துத் திருக்

கரங்களும், அவற்றில் பலம் பொருந்திய ஆயுங்களும், தேவ மகளிரது மங்கிலிய சூத்திரத்தைக் காத்த நீலகண்டமும், சங்கக் குழையணிந்த காதுகளும், செவ்வானம் போன்ற சடையும், அழகு பொருந்திய திருவெண்ணீறும். திருநேத்திரமும், அரவக்கச்சும், ஆதிவராகத்தின் முளைபோன்ற பல் பிரகாசிக்கின்ற மார்பும், அஞ்சனந்தீட்டிய கரிய கண்களையுமுடைய அங்கயற்கண்ணம்மை பூங்கொடிபோல ஒதுங்கி நிற்கும் பக்கமும், அவ் வங்கயற்கண்ணி மேல் வைத்த திருப்பார்வையும், புன்முறுவலுந் தோன்ற ஆடும் போது, சடையிலிருக்கிற கங்கை யலம்பும் ஓசையும், தரித்த கொன்றைமாலையில் வண்டுகளாரவாரிக்கும் ஓசையும், மங்கல வாத்தியங்களி னோசையும், வேதமந்திர வோசையும், செங்கையினின்றும் ஆடாநின்ற மழுவாகிய, அக்கினியி னோசையும், திருவடியிற் றரித்த சிலம்பினது ஓசையும், எவ்விடங்களிலும் நிரம்பி அன்பர்களது இரண்டு காதுகளிலும் அமுதத்தைச் சொரிய மலரகிதனுகிய சோம சுந்தரக் கடவுள் திருநடனஞ் செய்தார்.

அதை நிருத்ததரிசனஞ் செய்துண்ணு நியமம் பூண்ட இருவருங் கண்டு இரண்டு கைகளையுங் கூப்பி முடியின்மீது வைத்துத் திருவடியில் வீழ்ந்து, ஆயிரம் வேதங்களையும் நாவாரப்பாடி, பரமானந்தக் கடலில்மூழ்கி அன்புருவமாயினர். இவ்விருவர் நிமித்தமாக ஆண்டவனது திருநடனத்தை முனிவரும், சுந்திருவரும், தேவர்களும், தானவர்களும், கிம்புருடர் முதலிய தேவர்களும் கண்டு வணங்கிப் பேரின்பத்தில் மூழ்கினர்கள். திருக்கலியாணத்திற்குவந்த மனிதர்களும் காணப் பெற்றார்கள். பதஞ்சலி மகாமுனிவர் அளவில்லாத வானந்த மீறி மனத்தினிடமெல்லா நிரம்பிமேலே வழிகின்றதுபோல மார்பிற் பூசிய திருநீறு கரைந்திடப் பொழிகின்ற கண்ணீருள் நனைந்து இரு கரங்களையும் குவித்து நாதனைப் பாடத்தொடங்கி,

பராபர முதலே போற்றி பத்தியில் விளைவாய் போற்றி
சராசர மாகி வேருய் நின்றதற் பரனே போற்றி
கராசல வுரியாய் போற்றி கனக வம்பலத்து ளாடும்
நிராமய பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

ஒன்றுகி யைந்தா யையைந் துருவாகி வருவாய் போற்றி
இன்றுகிச் சென்ற நாளா யெதிர்நாளா யெழுவாய் போற்றி
நன்றுகித் தீய தாகி நடுவாகி முடிவாய் மன்றுள்
நின்றுடும் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

அடியரேம் பொருட்டு வெள்ளி யம்பலத் தாடல் போற்றி
பொடியணி தடந்தோள் போற்றி புரிசடை மகுடம் போற்றி
கடியவிழ் மலர்மேன் சுந்தற் கயல்விழி பாதம் போற்றி
நெடியநற் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

என்று இப்படித் தோத்திரஞ் செய்த பதஞ்சலி மகா முனிவரையும் வியாக்கிரபாத முனிவரையும் வெள்ளியம்பலத்தி னிடத்துத் திரு

நடனஞ் செய்தருளிய சோமசுந்தரக்கடவுள் நோக்கிக் கிருபை கூர்ந்து உங்களுக்கு வேண்டிய தென்னென்று கேட்க அவர்கள் கடவுளது திருவடியை வணங்கி, எம்பெருமானே! இந்தத் திருநடனத்தை இவ்விடத்து என்றுஞ் செய்தருளி யாவர்க்கும் பந்தபாச மறும்படி கிருபை செய்ய வேண்டுமென, ஐயன் கன்னிநாடு செய்த தவப்பேற்றை யடையும்படி அவ்வாறு தந்தனமென்ன, பின்னும் பதஞ்சலி பகவான், என்னையனே! இந்த நிராமய பரமானந்த நிருத்த தரிசனத்தைக் கண்டவரெல்லாம் பூமியினிடத்து வந்து பிறவாமல் ஒப்பற்ற மோக்ஷத்தை யடைய வேண்டுமென்று வணங்க, பகவானும் அவ்வாருகுகவென் றருளிச்செய்ய சிவகணங்கள் சந்தோஷ மிகுதியால் ஆரவாரித்தார்கள், கைகோர்த் தாடினுர்கள். தேவர்கள் மலர் மாரி பெய்தார்கள். முனிவர்கள் ஆனந்தக் கண்ணீர் பொழிந்தார்கள். சரீரம் மயிர்க்குச் செறியப் பட்டார்கள். அவ்விரு முனிவரையும் தழுவிக் கொண்டார்கள். அநித்யமாகிய பஞ்சபூதமும் ஐம்பொறிகளும் ஐம்புலனும் இவை முதலிய தத்துவமும் முப்பத்தாறும், மாயையும் இருவினைகளும், அஞ்ஞான விருளுமாகிய இவற்றிற்கு வேருகித் தனித்த யோகிகளுள்ளத்தும் பரிபூரணமாக நிறைந்து ஆடிய ஒப்பற்ற பெரிய திருநடனத்தைத் தரிசித்தவருக்கு இகபர யோகங்களைக் கொடுத்து, அம் மதுரையின் கண்ணுறைகின்ற பெருமான் திருநடனத்தை திருவாதிரைத் தினமுதல் பின்வருந் திருவாதிரை வரையில் பரிசுத்தமான பொற்றாமரைத் தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து தரிசித்து, அவ்விடத் தினிதாக வமர்ந்திருந்து நூற்றெட்டு தரம் ஸ்ரீ பஞ்சாட்சரத்தைச் செபித்து, அம்மதுரையில் வசிக்கின்றவர்கள் நினைத்த வரங்களை யெல்லாம் பெறுவார்கள்.

வெள்ளியம்பலத் திருக்கூத்தாடிய படலம் முற்றிற்று.

---

ஏழாவது

# குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம்

கலிநிலைத்துறை

பன்ன கேசனு மடுபுலிப் பாதனும் பணிய
மின்னு வார்சடை மன்னவன் வெள்ளிமன் றுடல்
சொன்ன வாறிது பசித்தழல் சுடவொரு பூதம்
அன்ன மாமலை தொடுத்தவா றெடுத்தினி யறைவாம்.

உரை: பதஞ்சலி முனிவரும் வியாக்கிரபாத முனிவரும் வணங்கப் பிரகாசம் பொருந்திய நீண்ட சடையினையுடைய சுவாமியாகிய சௌந்தர பாண்டியரானவன் வெள்ளியம்பலத்துள்ளே நின்று திருக்கூத்தாடிய திருவிளையாடலைச் சொன்ன வகை இதுவரைக்குமாம். இனிமேல் ஒப்பற்ற பூதமாகிய குண்டோதரனுனவன், உதராக்கினியானது

கொளுத்த பெரிதான அன்னமலையை எடுத்துண்ட வகையைச் சொல்லுவோம்.

கன்னியர்க் கரசியாகிய மீனாக்ஷிதேவி திருமணத்துக்காகத் தம் வீட்டின் கண் வந்த மின்னல்போன்ற சடையினையுடைய மாதவர்கள், அந்தணர் மற்றவர்கள், எந்நிலங்களிலுமுள்ள அரசர்கள், யாவர்க்கும் முறையே பொற்பாத்திரத்தால் அறுசுவைகளையுடைய போனகத்தை யுண்பித்துப் பூசத்தக்க சந்தன முதலியவும், உடுக்கத்தக்க பட்டாடை முதலியவும், அணியத்தக்க ஆபரண முதலியவும், தாம்பூலமும் மற்று முள்ளனவும், முறைப்படி கொடுத்துபசரித்து, ஐம்பத்தாறு தேசத் தரசர்களும் மற்றவர்களும் செல்லுனரைச் செல்லவிடுத்து இருக்குஞ் சமயத்தில்,

சமையற்றொழிலில் வல்லவர்கள் வந்து தேவியினது திருவடியை வணங்கி அம்மணி! அடியரேம் சமைத்த அன்னத்தில் ஆயிரத்தி லொருபங்குஞ் செலவானதில்லை இனி யாங்கள் செய்யக்கடவது யாதென? பிராட்டி அங்கனின் றெழுந்து பெருமான் முன்னர் வந்துபணிந்து ஒருபக்கத்தி லொதுங்கிநின்று, சுவாமி! தங்களோடு முப்பத்து முக்கோடி தேவர்களும் இங்கெழுந்தருளுவா ரென்பது கருதிப் பொருத்தமான இனிய சுவையோடுங் கூடிய அன்னம் அளவற்றதாக ஆக்கி உண்டு மிகுந்தது எவ்வளவென்று சொல் லில், இமயமலை போலும் அன்னமும், அதற்கமையச் சமைத் துக் கொட்டிய கறிகள் அவ்விமயமலையை யடுத்துச் சூழ்ந்திருக் கும் சிகரங்களையுடைய மலைகளும்போன் றிருக்கின்றன என்று சொல்ல, அதைக்கேட்ட எம்பிரான் தேவியாரிடத்துப் பொருந் திய அன்பினுல் ஒரு திருவிளையாடலைச் செய்ய நினைத்தோ அன் றித் தனக்குக் குடைபிடிக்கும் பூதகணத்தலைவனது ஆற்றலை யாவரு மறியும்படிச் செய்யவோ அறிந்தேமில்லை. அம்மையை நோக் கிச் சிறிது புன்முறுவல் செய்து, மூவேந்தரிற் சிறந்த பாண்டி யனது பெறுதற்கரிய மகள் நீ. அன்றியும் தேவருலகத்துள்ள பஞ்ச தாருவும் உனது பணியைச் செய்யப் பெற்று இவ்விடத்தி லிருக்கின் றன. உனக்கு அருமையாய்ப் பெறத்தக்கது யாது? பிறருடைய செல்வங்களெல்லாம் நின்னதல்லவோ? ஆதலால் அளவற்ற நின் செல்வத்தின் பெருமையை நாமறியச் செய்வித்தாற் போலு மிருக் கின்றது. நீ செய்வித்த விருந்தினை யுண்ண நம் கணத்தினுள் பசி யாற் களையடைந்தவராகி யொருவரையுங் காணேம். முல்லையரும் பைப்போலும் தந்தங்களை யுடையாய் அதற்கு யான் செய்யத் தக்க தென்னென்றார்? பின் சமீபத்திலே நின்ற குண்டோதரன் வயிற்றி னிடத்து வடவாக்கினியைப் பிரவேசிக்க நினைத்தார். அது வயிற்றி னிடத்துவந்து எரிபசியாகப்பொருந்தி விடமுண்டவனைப்போல உடல் சோர்ந்து வியர்த்து, ஆவியொடுக்கமுற்று, ஐயனே! பசியினுல்வருந்து கின்றேனென்ன, அதைக் கேட்ட சுவாமி அம்மையைப் பார்த்துக்

குடைபிடிக்கும் இந்தக் குறிய தாளையுடைய பூதத்துக்கு ஒரு பிடி சோறிடுங்கள் ; அப்புறஞ் சொல்லுகிறேனென, சுவாமியை வணங்கி, நல்லதென்று போக, பூதமும் உடனே தளர்ந்த நடையினை யுடைய தாய்க் கண்கள் புகைந்து, வாய் வறண்டு போக, இராஜகன்னிகை யின் ஏவலினுல் ஏவலர் அப்பசிநோய்கொண்டவனை இட்டுக்கொண்டு போய்ச் சோற்று மலைமுன் விட்டார்கள். உடனே அப்பூதம் அச் சோற்று முன்னின்றதைக் கண்டார்கள். அதை யெடுத்து உண்ட தையும், அங்கிருந்த சோற்றையும் ஒருவருங் கண்டாரில்லை. அதை யறிந்த சில தோழிகள் கைகளை நெறித்து அதிசயப்பட்டார்கள். சிலர் திடுக்கிட்டு மயங்கினுர்கள். சிலர்கண்களை மூடிக்கொண்டு ஓடினுர்கள் பின்பு அப்பூதம் நொய் முதலியவற்றைப்போக்கி, முனை யொடியாமற் சமைத்த அன்னமும், பாற்கறியும், பொறிக்கறியும் இனிய பயறினுற் செய்த கறியும், பின்னும் பலவகைக் கறிகளும், பாலும் தயிரும், நெய்யும், தேனும் ஆகிய அளவில்லாதனவற்றை மிடாக்களோடு எடுத்து வாயில்விட் டுண்டான்.

பின்னும் பலவகைப் பழக்குவியல்களும். பலகாரங்களும், கரும்பு களும், தேங்காய்களும், இவைகளன்றி வேகாத அரிசி காய்களின் வருக்கம் முதலியவற்றையும் எடுத்துண்டு, அளவற்ற நவதானிங் களையுமெடுத்து வாயிலிட்டுண்டான். இவ்வளவு மிகுதியானபொருள் களையும் தனது பருத்த குறிய கையினுல் வாரித் தனது பெரியவயிற்றி னிடத்தி லிடவும், நெய்த்துடுப்பால் நெய்யை யெடுத்துவிட்டு ஆகுதி பண்ணிய ஓமாக்கினியைப்போல மிகுந்து நவத்துவாரங்களிலும் தீபாக்கினி கொளுத்த, அதைக் கண்ட அங்கயற்கண்ணம்மை அதி சயமடைந்து, தனதிடத் தன்புள்ள நாயகனுக்கு முன்னர்ச்சென்று, நாணத்தோடு விளங்கா நின்ற மலர்களையுடைய குழலைத் தோளின் மீதிருத்தித் தளர்ந்து நிலத்தைக் காலாற் கிழித்துக்கொண்டு நின்ற னள். சோமசுந்தரக்கடவுள் தேவியினது நிலைமையைக் கண்டு அறி யாதவர்போலக் கேட்கத்தொடங்கி, நான் அனுப்பிய பூதம் உண்டு மிகுந்ததுண்டா யிருக்குமானுல், இன்னம் பூதங்களை யனுப்பி உன் மனது சந்தோஷிக்கும்படி உண்பிப்பேனென்று சொல்ல, தேவி ஐயனே! நீங்களனுப்புவித்த பூதத்துக்கு அங்குள்ள வெந்த பொருள்களையும், வேகாத பொருள்களையும் உண்டு பசியடங்கவில்லை. இன்னும் கொடிய பூதவீரரை அனுப்புவீராகில் இவ்வுலகம்யாவையும் எடுத்து வயிற்றினிடத்துவைப்பரே. ஆதலால், உமக்கு உகாந்தகால உருத்திரனென்னும் பெயர் தெளிவாகத்தோன்றும் என்று சொல் லிக்கொண் டிருக்கும்போது, மூன்றும் பிறைபோன்ற பல்லினையும் குகைபோன்ற வாயினையுமுடைய பூதம், தீபாக்கினியானது தன்னைச் சுட, அதனுல் வருந்திக் கடவுளுக்கு முன்பாக வந்து, வெள்ளியம்பலத் தில் நடனஞ்செய்த சோமசுந்தரக் கடவுளே! எம்பிராட்டி சமைத்து வைத்திருந்த அன்னம் முதலியவைகள் இமயமலைகள்போலு மிருந்

தன. அதனை யெடுத்து யானுண்டும், என் பசி தணிந்ததில்லை. இரந்தவர்க்குக் கொடுத்துண்ணுதவர் வயிறுபோல் எரிகிறதென்று சொல்ல, இழிந்தவர்களது திரிபுரத்திலிட்ட தீயானது மிகுந்த பசி யுருவமாகி அடியேனது வயிற்றினிடத்துக் குடியாகப் புகுந்ததோ வென்று கையோடு கையடித்து அண்டங்கள் வெடிபடக் கதறுவன். ஐயோ வென்று புலம்புவன். பெருமூச்சு விடுவன். உயிர் நீங்கியதுபோலத் தளருவானு யிருந்தனன்.

குண்டோதரனுக்கு அன்னமிட்ட படலம் முற்றிற்று.

---

எட்டாவது

## அன்னக்குழியும் வையையு மழைத்த படலம்

கலிநிலைத்துறை

வேத நாயகன் பாரிட வேந்தனுக் கமையா
ஓத னுதிக ளருந்திய தன்மையீ துவையும்
போத ராமையா லமைவுறப் போனகக் குழிதந்
தோத மாநதி யருந்திய செய்தியு முரைப்பாம்.

உரை: பூதகணத் தலைவனுன குண்டோதரனுக்கு (வயிறு) நிரம்பாத போசன பதார்த்த முதலானவைகளை உண்பித்த தன்மை இது வரைக்குமாம். (இனிமேல்) இவைகளும் போதாமையால் வேதங்களுக்குநாயகராகியசோமசுந்தரக்கடவுள் (குண்டோதரனுடையவயிறு) நிரம்பும்படியாக அன்னக்குழியையும் கடலை யொத்த பெரிதாகிய வையையும் வரவழைத்து உண்பித்த செய்தியையுஞ் சொல்லுவாம்.

இடபவாகனத்தையுடைய சோமசுந்தரக்கடவுள் பின்பு தடாதகையைப் பார்த்து உள்ளே நகைத்து, மிகுந்த பசியையுடைய குண்டோதரன் பொருட்டு அன்னத்தைத் தருகின்ற புவனமாதைத் தம்முள்ளத்திலே நினைத்தனர். அவர் நினைக்கு முன் வந்து, நான்கு பெரிய திசைகளிலும் உள்ள தயிர்க்கடலும் மத்தியில் பூமியைக் கிழித்துக்கொண்டு, ஊற்றுக நான்கு கிடங்காகி யெழுந்ததுபோல மாறுபடுதலில்லாத சுவையினையுடைய இனிய தயிரும், வெள்ளிய நெற்சாதமும், நாலு குழியிடத்திலும் பொங்கிமேலெழுந்தன. சிறந்த சந்திர குலத்திற் பிறந்த பாண்டியன் மருமகனுகிய சோமசுந்தர பாண்டியன் அந்தப் பெருவயிற்றினையுடைய பூதத்தைப் பார்த்து, உன் பசி தணிய உண்ணென்று உத்தரவு செய்ய, அப் பூதத்தலைவன் அந்தத் தயிர்க்கிடங் கருகில் அலைகடல் கலக்கு மத்தெனத் தனது கைகளை யுள்ளேவிட்டு எடுத்தெடுத்து வாயிலிட்டு உண்டிட, வேதநாயகனது திருவடியிற் பக்தி வைத்து, மோக்ஷத்தை யடைந்தவர்கள் பழவினைத்தொடர் போயதுபோலப் பசிநீங்கி, அவ்வன்னத்தை யெடுத்து

ஒழியாமல் வாயி லிட்டுண்டதால் உடம்பெல்லாம் வயிருகி வீங்கிஞன். பூமி கிழியும்படி மலேபோல் விழுந்தான். மூச்சுவிடக் கூடாமல் நிலத்திற் புரண்டவனுகித் தாகத்தின் பொருட்டு நீரை விரும்பி, அவ்வூரில் நீருள்ள குளம் ஏரிகளைத் தேடுகிறதற்கு எழுந்து, தம் முயிரை யொத்த கணவரைப் பிரிந்த பெண்கள்போல் அன்று மலர்ந்த நீலோற்பல மலர்களும், தாமரை மலர்களும் வாடும்படி தடாகங்களும், ஏரிகளும், குளங்களும் வறள, வாயை வைத்துக் கிணறுகளிலுள்ள நீர்களும் பசையறக் குடித்தும், தாகத்தைச் சகிக்கக் கூடாதவனுய்வருந்திக் கங்கையைத் தம்முடைய சடையிலேயுடைய சிவபெருமானது பாதத்தைக் கருதி யிரங்க, நாதனும் தனது திருமுடியின் கணுள்ள கங்கையைப் பார்த்து நிறைந்த நீரலேகளை மாலிகையாக வுடைய கங்கையே! நீயே யிந்த அகழியாற் சூழப்பட்ட மதிலேயுடைய மதுரையினிடத்து மிகுந்த நீர்ப்பெருக்கை யுடைய ஆருகச் சீக்கிரமாக வரக்கடவாயென்று கட்டளையிட, உடனே அக்கங்கையானவள் சடையைவிட்டு நீங்கி ஒரு வார்த்தை சொல்லத் தொடங்கினுள். என்னெனில் முன்னெரு காலத்தில் பகீரதன் பொருட்டு ஒரு தீர்த்தமாய்ச் சென்று, அதில் மூழ்குகின்றவர்கள் குற்றம் பொருந்திய தீவினைத் தொடக்கறுத்துச் செல்லென்று பணித்தீர். இன்றும் ஒரு நதியாக வெனச் சொல்லுவீராகுல் என்னைத் தரிசித்தவர்களும், மூழ்கினவர்களும், கையாலேனும் பரிசித்தோர்களும், பவத்தொடர்ச்சியின் பற்றுவிட்டுத் தேவரீரிடத்துப் பக்தியும், கல்வியும், ஞானமும், வீடும் பெறும்படி பணித்தருளக் கடவீரென்று சோமசுந்தரக் கடவுளிடத்து வரம் பெற்றுக்கொண்டு, மிகுந்த வேகமோடெழுந்து பெரிய நதியாக ஆகாயத்தினின்று மிழிபவளாமென வரத்தொடங்கினுள்.

மகமேருவை வில்லாக வளைத்த சிவனது முடியின்கணுள்ள கங்கையானவள் வளைத்த அலேகளாகிய கையையும், முத்துக்களாகிய தந்தங்களையும், நுரைகளாகிய வஸ்திரத்தையும், கொடியாகிய மருங்கிலேயும், கருமணலாகிய அளகத்தையும், சேல்களாகிய விழிகளையும், பெற்று வருபவள் வாசனை பொருந்திய அகில் விருக்ஷங்களையும், பொரியரையினையுடைய வேங்கை மரங்களையும், பிரகாசம்பொருந்திய இரத்தினங்களையுடைய மலேகளோடு அரைபடவும், பெரிய கிளைகள் அலறிடவும், அடியோடு விரைவில் அகழ்ந்து சத்திக்கின்ற செருப்புக் காலினையுடைய, குறிஞ்சிநில மரங்களது சிறிய வீடுகளையும் அடியோடு தோண்டி கரைகளிற் படும்படி யெறிந்து காற்றைப்போல மிகுந்த விசையோடு வந்து பெட்டை மானேடு ஆண் மான்களையும் பெண் யானைகளோடு ஆண் யானைகளையும் வாரிக்கொண்டு பிரிவில்லாத பெருமரக் காடுகளை அடியோடு போர்த்துக் கருங் குரங்குகள் வயிற்றிலணைத்த குட்டிகளோடு தங்களைத் தழுவிய ஆண் குரங்குகளையும், அவைகள் வாசம்பண்ணுகின்ற மரக்கூட்டங்களோடும், குறிஞ்சிநில மக்களது கொடிய கணைகளோடு வில்லுகளையும், தினைப்புனத்தி

லமைந்த பரனோடு கவண்களையும் வாரிக்கொண்டு வருகின்ற, அவ் வாற்றின் அலைகள் நெடிய மலைகளை அடியறும்படி மோதுகின்றன. அவற்றை யகழ்கின்றன. பள்ளமான மடுவை மேடாக்குவன, கிளைகளை யுடைய மர வரிசைகளைத் தலைகீழாக இடிகரைதோறு நடுவன, கடலி னோரத்திலுள்ள பெரிய பூமியை யிருபிளவுபட வருவன, மிகுந்த ஒலியினை யுடையன, பெரிய மரங்களைத் தோண்டுகின்ற மிகுந்த வலி யினை யுடையன, வயிரமில்லாத மரங்களை முறிப்பன, இரத்தினங்களை யெடுத்து வீசுவன, வேகமாய்ச் செல்லுகின்ற யானை மதங்களோடு வண்டுகளை யிழுத்துச் செல்வன, நுரைகளாகிய முகபடாத்தை யுடையனவாகியும் வருதலினால்- அவ்வாறு யானையை யொத்திருந்தது.

நீண்ட பிலத்திலே செல்லுகின்ற நிலைமையை யுடையனவாயும், நிருமலனாகிய பரமசிவனது சந்திரனை யணிந்த திருமுடியின்மீது ஆடு கின்ற செயலினை யுடையனவாயும், பிரகாசத்தை யுமிழா நின்று அரிய மாணிக்கங்களைத் தன் தலையிலுடையனவாயும், நீண்டுவளைந்த நடை யினை யுடையனவாயும் நிறை நிறைவான குறுகிய பல கால்களினா லோடுகின்ற வகையினை யுடையனவாயு மிருத்தலால், வளைந்த வுடலை யுடைய பாம்பென்று சொல்லும்படியாகவும் வராநிற்கும். இவ்வாறு வரும் நதியானது கல்வித் தேர்ச்சி யில்லாதவர் செய்த கவிபோலக் கலங்கி கல்வி கேள்வியில் வல்லவர்கள் செய்த கவிபோல் பல சிறப் பாகிய துறைகள் தோன்றப் பொருந்திச் செல்லுகின்ற வழிகள் தோறும் பொருளாழ்ந்து தெளிந்து தேயத்திலுள்ள யாவரும் விரும்பி அப்பயனைக் கொள்ளும்படித் தங்கிற்று.

வண்டுகளது ஒலி நீங்காத மலர்களுடைய சடையினின்றும் வந்த நதியைச் சோமசுந்தரக்கடவுள் கண்டு பிளவுபட்ட வாயைத் திறந்து கொண்டு என் விடாய் தணிந்தே னில்லையென வெம்பி வீழ்ந்த குண் டோதரனை அவ்வாற்றினிடத்துவிட, அவன் அவ்வாற்றை யடுத்து அதனுள்ளிறங்கி வலியோடுந் தனதிரண்டு கைகளையுந் தூக்கிக் கரை களிலேற நீட்டியோடும் புனலைத் தடுத்து மலைபோலுயரும் புனலை வாயைத் திறந்து தன் தாகவிடாயும் மேகமும் வெட்க உண்டு மகிழ்ச்சி கொண்டு, பரமசிவன் திருமுன்னர் வந்து அவரது திருவடியை வணங் கிக் கூத்தாடிப் பாடி ஆரவாரித்து அளவற்ற கீதங்களைப் பாடினான். பாட்டின் பொருளாகிய பரமசிவன் அவ் வீரனது பாடலைக் கேட்டு மகிழ்ந்து அவ்வையை நதியாற் சூழப்பட்ட மதுரையை அரசாண்டிருந் தனன். பரமசிவனது சடையினின்று வந்ததால் அந்நதிக்குச் சிவ கங்கையென்றும் அக் கடவுளது வுருவந் தெளிந்தோர்க்கு ஞானந் தருதலால் சிவஞானதீர்த்த மென்றும், காற்றைப் பார்க்கிலும் வேக மாக வருவதால் வேகவதி யென்றும் கிருதமாலை யென்றும் பெயராகும்.

அன்னக்குழியும் வையையு மழைத்த படலம் முற்றிற்று.

---

ஒன்பதாவது

# எழுகட லழைத்த படலம்

கொச்சகக் கலிப்பா

முடங்கன்மதி முடிமறைத்த முடிதென்னன் குறட்கன்னக்
கிடங்கரொடு நதியழைத்த கிளர்கருணைத் திறனிதுமேல்
மடங்கல்வலி கவர்ந்தான்பொன் மாலைபடிந் தாடவெழு
தடங்கடலு மொருங்கழைத்த தன்மைதனைச் சாற்றுவாம்.

உரை :— வளைவான இளம்பிறையினைத் திருமுடியினிடமாக மறைத்த மணிமுடியினையுடைய சௌந்தரபாண்டியர் குண்டோதர னுக்கு அன்னக் குழியையும் வையை யாற்றையும் வரவழைத்த பிர காசம் பொருந்திய திருக்கிருபைத்திறம் இது வரைக்குமாம். இனிமேல் நரசிங்கக் கடவுளினது பலத்தைச் (சிம்புள் வடிவமாய்க்) கவர்ந்து கொண்ட சோமசுந்தரக் கடவுளானவர் காஞ்சனமாலையார் ஸ்நானஞ் செய்ய விசாலம் பொருந்திய எழுகடலையும் ஒருமிக்க வரவழைத்த தன்மையினைச் சொல்லுவாம்.

உவமை சொல்லுதற்கரிய பரம்பொருளானவர் பாண்டியனுருவ மாகி உலகமெல்லாந் தமது வெண்கொற்றக் குடையின் நிழலிலிருந்து செங்கோல் செலுத்துநாளில், மெய்ஞ்ஞானமாகிய அரும்பொருளை யுணர்ந்த இருடிகளும் முனிவர்களும் வரன்முறையாகச் சந்தித்து வரும்போது, வேதமுனிவராகிய கௌதமரும் வந்துகண்டு திரும்பிப் போகுங்காலையில், கற்பினை யுடைய காஞ்சனமாலை யரண்மனையிற் புகுந்தார். அப்போது காஞ்சனமாலை அவரது வரவை யேற்று உப சார வார்த்தைகளைச் சொல்லிப் பொன்னாசனமிட்டு வணங்கி அவரை நோக்கி, ஐம்பொறிகளையும் வென்று அளவுபடாத நான்கு வேதத்தின் முடிவில் விளங்கா நின்ற பொருள் பரமசிவமென் றறிந்த சுவாமிகளே! நீக்குதற்கரிய பிறவித் துன்பத்தை நீக்குதற்குக் காரண மான தவத்தை அடியாளுக்கு அனுக்கிரகம் பண்ணவேண்டுமென, கருணைக்கடலாகிய முனிவர்சிகாமணியானவர் காஞ்சனமாலையை நோக்கி, அம்மா! நீ செய்த தபோபலத்தாலே இவ்வுலகத்தை யெல் லாம் பெற்று வளர்த்த தடாதகைப் பிராட்டியாருக்குத் தாயானாய், பரமசிவனே உனக்கு மருமகனாகும் சிறப்பைப் பெற்றாய், வெற்றியை யுடைய மலயத்துவசபாண்டியனுக்கு மனைவியானாய் இப்படிப்பட்ட நீ யறியாத தவம் இவ்வுலகத்தில் யாரறிவார்? ஆயினும் சொல்லு கிறேன் கேள்.

மானதமென்றும், வாசிகமென்றும், காயிகமென்றும் குற்றமற்ற தவங்கள் மூன்றாம். இவற்றுள் மானதமாவது தருமஞ் செய்தலினும், தானஞ் செய்தலினும் மனம் வைத்தலும், தயை - பொறுமை -

உண்மை - சிவனைத் தியானித்தல் - பஞ்ச விந்திரியங்களை யடக்குதல் முதலிய அனந்தமாம். இவைகளை மனத்தாற் செலுத்தலாம். வாசிக மாவது ஸ்ரீ பஞ்சாட்சரமோதல், தருமநூலோதல், பஞ்ச சாந்தி ஓதல், வேதஞ்சொல்லும் சதவுருத்திரந் தோத்திரஞ் செய்தல், பெரிய தருமங் களைக் குற்றமறவெடுத் தோதல் முதலநந்தம். இவை வாக்காற் செய்த லாம். காயிகமாவது: பரமசிவனை யருச்சனை செய்தல், ஆலயத்தை வலஞ் செய்தல், எதிரினின்று வணங்குதல், கடவுள் வாழா நின்ற பல திருப்பதிகளைப்போய் வணங்குதல், திருப்பணி செய்தல், கங்கை முத லிய தீர்த்தயாத்திரை செய்தல், இவை முதலிய பல. இவை காயத்தாற் செய்தலாம். இம்மூன்றில் காயிகமே சிறந்தது. இப் புண்ணியங்களுக் குள் தீர்த்தயாத்திரையேயதிகம். அவற்றினும் கங்கைமுதலிய தீர்த்தங் களில் தனித்தனியாகப் போய் ஸ்நானஞ் செய்த லதிகம். இவற்றினும் இந்நதிகளெல்லாம் வந்து சேரும் சமுத்திரஸ்நான மதிகம் என்று முனி வர் சொல்லக் காஞ்சனமாலை சமுத்திர ஸ்நானஞ் செய்யத் துணிந்து, தன் மகளாகிய தடாதகைப் பிராட்டியாருக் குரைக்க, அப் பாண்டியர் தவக்கொழுந்தாகிய அங்கயற்கண்ணம்மையர் இது செய்தியைப் பெரு மானுக்குச் சொல்லுவேனென்று சென்று, பெருந்தகையாகிய அரசர் பெருமான் திருமுன்னர் அன்னம்போல் நின்று, அன்று குண்டோதர னுக்கு அன்னக் குழியையும் ஆற்றையு மழைத்த கிருபைக் கடலே! என் தாய் இப்பொழுது கடலாட விரும்பினளென்று சொல்லி யிரந் தாள். கடவுள் தன் தேவியின் திருமொழியைக் கேட்டுக் கடலொன்றோ எழுகடலையும் இம் மதுரையுள் வரும்படி கூவி யழைப்போமென்று சொல்லி அவற்றை நினைத்தார். உடனே அம்மதுரைக்குக் கீழ்த்திசை யில் ஒரு குளத்தில் எழுவகைப்பட்ட நிறத்தோடு சுரிந்த முகத்தினை யுடைய சங்கங்கள் வாய்திறந் தொலிக்கவும், வெள்ளிய நுரைகள் ததும்பவுரு மச்சங்கள் பாய, முத்துகளை யெடுத்தெறியும் நிரையான அலைகள் அண்டமுகடு வரையிலெழும்ப எழு கடலும் ஆரவாரித் தெழுந்து அவற்றைக் காணும் அந் நகரிலுள்ளார் நடுங்க கலியுக முடிவில் பிரமாவின் படைப்பு மாறும்படி யெழுந்ததெனக் கொதித் தெழுந்த கட லானது சர்ப்பாபரணராகிய பரமசிவனது ஆக்ஞையால் அவனடிகளைச் சென்றடைந்தவர்க ளடங்கியதுபோல் அடங்கிற்று. பொற்றாமரைத் தீர்த்தமானது, தன்னிறம் எழுகட லினது ஒப்பற்ற நிறத்தோடு கலந்து பொலிவு பெற்ற மின்னலைப் போலும், விளங்கு கின்ற சடையானது தாழ வெள்ளியம்பலத்து நடனஞ் செய்யும் பரம சிவனது நிறத்தைப்போல எட்டு வண்ணத்தோடும் விளங்கியது.

எழுகட லழைத்த படலம் முற்றிற்று.

---

பத்தாவது

# மலயத்துவசனை யழைத்த படலம்

கலி விருத்தம்.

எழுகட லழைத்தவா றியம்பி னோமினிச்
செழுமதி மரபினோன் சேணி ழிந்துதன்
பழுதில்கற் பில்லொடும் பரவை தோய்ந்தான்
அழகிய திருவுரு வடைந்த தோதுவாம்.

உரை: எழுகடலழைத்த வகையினைச் சொன்னோம்; இனிமேல் செழுமையான சந்திரகுலத் தரசனாகிய மலயத்துவச பாண்டியன் இந்திரபதவி விட்டிழிந்து தனது மனைவியராகிய குற்றமற்ற கற்பினை யுடைய காஞ்சனமாலையாரோடும் எழுகடலிலே ஸ்நானஞ் செய்து பரமேசுரது அழகிய சாருப பதவியாகிய திருவுருவ மடைந்ததைச் சொல்லுகின்றோம்.

சோமசுந்தர பாண்டியன் தடாதகைப் பிராட்டியாரோடும் எழுந் தருளி வந்து அவ்வெழுகடலின் பக்கத்திலுள்ள சந்தனம்-மரவம்-மந் தாரம்-மாவகுளம்-பாடலம் இவைகள் கலந்துள்ள நந்தவனத்தில் ஒரு சிம்மாசனத்தின்மீது எழுந்தருளி யிருந்து, முறுக்கவிழந்த மல்லிகை-முல்லை - சண்பகம்-இம்மலர்களை இளைஞரும் சேடியர்களும் கொய்து கொடுக்க அவைகளை வாங்கி மோந்து, ஆசை வேறுபாடின்றி யிருக் குங் காலத்தில், சுந்தர பாண்டியர் தன் காதலியை நோக்கி உன் பொருட்டாக எழுகடலையும் இந்நகரின்கண் அழைத்தனம். நின்னன் னையை இவ்விடத்து வந்து ஸ்நானஞ் செய்ய அழைப்பாயென தடாதகைப் பிராட்டியாரும் போய்த் தாயைக் கொணர்ந்து குளத்தி னிடத்து வரக் காஞ்சனமாலை புராணநூல் தேர்ந்த முனிவர்களை நோக்கிச் சமுத்திர ஸ்நானஞ் செய்யும் விதியாதென? குற்றமற்ற கற்பினையுடையாய்! நாயகன் கைத்தலத்தைப் பிடித்துக் கொண்டா வது, புத்திரன் கையைப் பிடித்துக் கொண்டாவது அதுவு மில்லை யேல் பசுவின் கன்றின் வாலைப் பற்றிக் கொண்டாவது, சமுத்திர ஸ்நானஞ் செய்தல் முறைமையென; அம்முனிவரது வாய்மையைக் கேட்ட காஞ்சனமாலை முற்பிறப்பில் குறைவரத் தவஞ் செய்யாத கொடியபாவியாகிய எனக்குக் கொழுநனும் குமரனுமில்லையே, இனிப் பெற்று மூழ்குவது பசுவின் கன்றலால் வேறுண்டோவென்று தடாத கைப் பிராட்டியைப் பார்த்துச் சொல்ல, பிரமபதத்தையும் விரும்பின வர்க்குக் கொடுக்கும் நாதனது உயிர்த்துணையாகும் நாயகி, தன் னுயிர்க் கிழவனாகிய பரமசிவத்தை யடைந்து வணங்கித் தன் அன்னை யின் குறைமொழியைச் சொல்ல, மன்னவன் இந்திரனோடு கூட விருக் கின்ற மலயத்துவச பாண்டியனைத் தன்னுடைய மனதில் நினைக்க, அப்பாண்டியன் மகமேருவை வில்லாகவுடைய பெருமானது திருவுள்

னத்தை யுணர்ந்து, சிறையையுடைய மலைகளையெல்லாம் அழித்தவனுகிய இந்திரனது ஆசனத்தை விட்டுத் தேவவிமானத்தின் மீது எழுகடலினிடத்துக் கிருபையையுடைய இன்பவடிவம்போன்ற பரமசிவத்தைப் பெண் பேற்றினுலே கண்பேறடையும்படி யெதிராகக் கண்டு மருமகனுகிய கடவுளை வணங்கும்பொருட்டு வருமுன்னே மாமனென்ற முறையால் தனது தாமரைபோன்ற கையை யமைத்து பெண்கொடுத்த பாண்டியனை எதிராகத் தழுவிக்கொண்டு, திருவுள்ள மகிழ்ந்து, கிருபையோடு பார்த்து, உன்மாட்டன்புள்ள பத்தினியோடு கடலாடச் செல்கவென, மலயத்துவச பாண்டியனும் முன்பிறப்பிற் செய்த தவத்தாற் பெற்ற பெண் அன்னம்போலும் மீனுட்சி தேவியானவள் எதிரே வந்து தன்னைத் தழுவ, தானுந் தழுவி இமய பருவதராஜனைப்போலக் குறைவற்ற மகிழ்ச்சியை யடைந்து, குளிர்ந்த தேன்போலுஞ் சொல்லையுடைய உனது திருக்கலியாணத்தைக் காணத் தவஞ் செய்தேனல்ல னென்னுந் துக்கமுண்டா யிருந்தது. அது இந்தச் சந்தோஷமென்கிற தேனை வண்டைப்போல வுண்டு மறந்தே னென்றுன்.

அப்பொழுது நிறைந்த கற்பினையுடைய காஞ்சனமாலை தூரத்திற் சென்ற தன்னுயகன் சிலநாள் சென்று வரக்கண்டவள் போல நாணுற்று, எதிராக வந்து வணங்கி, மேகம்போன்ற அளகத்தையுடைய காஞ்சனமாலை பவித்திரத்தை யுடையவளாய்ப் பஞ்சாட்சரத்தை யோதி, முனிவரது வேதநூற் சங்கற்ப விதிப்படி தன் துணைவனது கையைத் தன் கையாற்பற்றி மனக்களிப்போடு எழுகடலினும் ஸ்நானஞ் செய்தாள். செய்து கரையேறிக் கொன்றைப்பூவை முடியிலே தரித்த பரமசிவனது கிருபா நோக்கம் பெற்று, இனி தாய்மார்கள் கருப்பத்தில் தங்காதவண்ணம் உமைபாகரது அருள்வடிவத்தை யடைந்தார்கள்; அடைந்த மாத்திரத்தில் காளகண்டமும்-சதுர்ப்புயமும்-நெற்றிக் கண்ணும் பெற்றுப் பூவுலகத்தார் கண்டு அதிசயிக்க விளங்கினுன். அப்பொழுது ஆகாயத்தினின்றும் வழுக்கி விழுந்த சூரியனைப்போலப் பரமசிவன் வாழாநின்ற உலகத்தினின்றும் பூமியின்கண் ஒரு தெய்வவிமானம் இறங்கி யிருந்தது. அந்தத் தெய்வவிமானம் வந்தவுடனே, மும்மூர்த்தி ஸ்வருபமாகிய பரமசிவனது பணியால் பாண்டியன் நங்கையோடும் தேவர்கள் தொழ விமானமீதேறினுன். அக்காலத்தில் தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். தேவதுந்துபி மேகம்போல் முழங்கிற்று அப்பொழுது விமானம் ஆகாயத்திலெழுந்தது. தேவதுந்துபிகள் ஒலித்தன. ஹரஹரவென்னுமொலியெங்கு மொலித்தது. தொழுகின்ற தவத்தினையுடைய முனிவர்களேத்த தேவர்கள் வணங்கச்சிவனது கயிலாயத்தை நோக்கிச்செல்லுகின்ற அவ்விருவரும் முன்பு தனது பாண்டிய வுருவமாயிருந்து உலகத்தை முறையாகச் செங்கோல் கைக்கொண்டு பின்பு தன்னுருவத்தைத்தந்த மருமகனும் மகளாகிய தடாதகைப் பிராட்டியாரும் மீன்

டும் பொன்னூற் செய்த சிகரத்தையுடைய அரண்மனையிற் புகுந்து இருக்கக் கண்டார்கள். பழவினையால் சரீரமுறை, தப்பிப் பிறவியை யடைந்த மனிதர்போலப் பழைய வுருவமாறி உலக மாதாவாகிய அன்னையை மகளாகவும் பெற்ற அப்பனே மருமகனாகவும் வர, யான் யாவருக்குஞ் செய்தற்கரிய தவந்தானென்ன செய்தேனென்று சொல்லிக் கன்றை விட்டுப் பிரிந்த பசுவைப்போல ஐயனது சத்திக்கின்ற வீர கண்டாமணி பொருந்திய திருவடியை விடாதுபற்றி பொருந்திய அன்பானது பின்னின்று இழுக்க மனத்தோடு இரண்டு கண்களும் சென்று முட்டி யடிக்கடி திரும்பிப் பார்த்துக்கொண்டு, மலையையொத்த இந்திர விமானத்தைக் கும்பிட்டுக்கொண்டு செல்வராயினர். புவலோகங் கடந்து போய் புண்ணியருக்களவற்ற போகத்தை யுண்பிக்கின்ற சுவர்க்கலோகங் கடந்துபோய், மகாலோகம் சனலோகம் கடந்து, அதற்குமேலுள்ள தவலோகங் கடந்து, சத்தியலோகங் கடந்து, தண்ணிய துளபமாலையை யுடையோனது நவலோகங் கடந்து, உலகங்களுக்கு நாயகமாகிய சிவலோகத்தை யடைந்தார்கள். பின்பு அறக் கொடியாகிய தடாதகை, இறைவனுகிய அரசனை அடிவணங்கித் தன்னைப் பெற்றவர்களுக்கு வேதப் பொருளினது வடிவை யளித்த கிருபையினாலே மனத்தின்கண் அடங்காத மகிழ்ச்சியானது வாய் கொள்ளாமற் புலப்படுவதென இரண்டு திருச்செவிக்கும் செங் குமுதத்திற் பொதித்த தீந்தேனை நிறைவிப்பதுபோல, பல முறையால் துதிசெய்து வணங்கிச் சொல்லத்தொடங்கினாள். அளவற்றதேவர்க்கும் மற்ற யாவர்க்கும் பாலைச் சுரந்தளிக்கின்ற தேவர்களது நாட்டிலுள்ள புண்ணிய காமதேனுவின் இளங்கன்றுக்குக் குறைவேது? என்னிமித்தம் என்னைப் பெற்ற தாய் விரும்பியது ஒரு கடலே. இந் நகரத்தின்கண் எழுகடலையும் வரவழைத்தீர். என்னைப் பெற்றவள் ஸ்நானஞ் செய்யும்பொருட்டுத் தேவருலகத்திலிருந்து அவள் கணவனையும் அழைத்து உமது வடிவத்தைக் கொடுத்து மேலான மோக்ஷ வுலகத்தையுந் தந்தீர். அன்றியும் பாண்டியரது மரபு அழிந்ததென்னும் பழியுண்டாகாமல் பொன்போலும் விளங்காநின்ற மலரைச் சூடிய முடியைத் தரித்துச் செங்கோல் நடத்தி வருகின்றீர். இனிமேலும் இந்நிலைமைக் கிடையூறு மில்லையன்றேவெனத் தலைவி யியம்ப, கடவுள் தம்மிறைவி யுட்கருத்தை மனதிற்கொண்டு மகிழ்ந்திருந்தனர்.

மலயத்துவசனை யழைத்த படலம் முற்றிற்று.

---

பதினோராவது

# உக்கிரபாண்டியன் திருவவதாரப் படலம்

கலிநிலைத்துறை

மன்ன வன்குல சேகரன் றிருமகன் மனைவி
தன்னொ டுங்கட லாடிய தகுதியீ தந்தத்
தென்ன வன்றனித் திருமக டிருவுளங் களிப்ப
உன்ன ருந்திற னுக்கிர னுதித்தவா றுரைப்பாம்.

உரை :—அரசர்களுக் கரசனாகிய குலசேகர பாண்டியனுடைய சிறப்புப் பொருந்திய புத்திரனாகிய மலயத்துவச பாண்டியன் தன் மனைவியான காஞ்சனமாலையோடும் கடலில் ஸ்நானஞ்செய்த செய்தி இதுவாகும். இனி அந்த மலயத்துவச பாண்டியனுடைய ஒப்பில்லாத பெருஞ் செல்வமாகிய தடாதகைப்பிராட்டியார் திருவுள்ளங் களிப் படைய நினைத்தற்கரிய வெற்றிபொருந்திய உக்கிரகுமார பாண்டியன் திருவவதாரஞ் செய்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

சந்திரசூடனாகிய சோமசுந்தரக்கடவுள் உலகத்தினிடத்து அள வில்லாத நாட்கள் தம்முடைய திருவடி நீழல்போல யாவருக்கும் குளிர்ச்சி பொருந்திய சந்திரன் போன்ற வெண்கொற்றக் குடையினால் நீழலைச் செய்து அருளோடு செங்கோல் நடாத்தி உள்ளே விளங்கும் உயிர் தாமாகி முறைசெய்து நடத்திவரு நாட்களில் திருமாலும் வேத முதலிய சாஸ்திரங்களாலுங் காணுதற்கரியவனும் அன்பர்க் கெளிய வனுமாக விருக்கும் பெருமை யாவர்க்குந் தெரிய மிகுந்த வன்பினைக் கொண்ட சிந்தையினையுடைய மலயத்துவச பாண்டியனுக்கும் அவன் மனைவியாகிய காஞ்சனமாலைக்கும் ஆசைக்குரிய மகளென வுமையைத் தந்து, அதற்குப் பொருந்தத் தாமும் மருமகனாகி உலக முழுதுந் தன் வெண்கொற்றக் குடைக் கீழடங்கி யிருக்க முறைசெய்து மூன்றரசர் களுக்குள் சந்திரகுலமாகிய பாண்டியர்குடி பெருமையை யடையச் செய்ததுபோல இன்னும் பெறத்தக்கதாகிய ஓர் குறையைத் தீர்க் கும் பொருட்டு ஒரு காரியத்தைச் செய்தலும், அக் காரியத்தை விட்டு விடுதலும், நினையாத வேறொரு காரியத்தைச் செய்தலுமாகிய நன்மை - தீமை - விருப்பு - வெறுப்பு இவைகளை இயல்பாகவே யொழித்த மாயாவிலாசத்தின் தன்மையை யாவரெடுத்துச் சொல்லத் தக்கவர்கள்? இவ்வித இந்திரஜாலவித்தை காட்டுவார் போலத் தம் மிடத்து அக்கினிக் கண்ணினின்று முற்பவித்த குமாரக் கடவுளைக் கருப்பமடையாது, அளவற்ற வுயிர்களையும் உலகத்தையும் பெற் றெடுத்த தாயாகிய சுந்தர வல்லியினிடத்துத் தோன்றும்படி சிந்தித் தார். அப்பொழுது அக் குமாரக்கடவுளினது வரவுக்கேற்பச் சேடியர் களும் மற்றவர்களும் அம்மையை வணங்கித் தாயே நின் உருவத்திற்

குத் தக்கபடி கருவுருவனப்புச் சிறப்பும் மாதந்தோறுஞ் செய்யும் மனை வினையும் யாங்கள் காண ஆசை மிகுதியு முடையேம் என்றார்கள். தேவி யவ்வாறேயாகிக் கரியம்மணிகளாகிய சிகரத்தையுடைய பொன் மலைபோலுந் தோற்றத்தினையுடைய கொங்கைகள் அமுத நிரம்பிய இரண்டு செப்பினை யொத்ததாக, அக் கொங்கைகளைச் சுமந்து தேய்ந்த மருங்குலு முண்டென்று தோன்ற அருள் முதிர்ந்தாற் போன்ற நாவினுக்கு இனிய சுவைகளையுடைய உணவுகளை யுண்ண வேண்டு மென்னும் ஆசைமிக, அவ் வாசையை யறிந்த கணங்கள் அம்மை விரும்பிய போகபூமி யமுதும், நாகலோக வமுதும், பொன் னகர வமுதும், விருப்பமடங்கக் கொண்டுவந்து கொடுத்தார்கள். புண்ணியத்தையுடைய முனிவர்களும் வேதபாராயணராகிய பண்டிதர் களும் வந்து அரசனுக்குச் செய்யப் பொருந்திய சடங்குகளை அம் மதுரையிலுள்ள முதியோர் கலியாண வெள்ளத்திலே மூழ்க மாதந் தோறுஞ் செய்விக்க, அக் கன்னிநாடானது செய்த புண்ணியத்தால் உண்டாகிய பயனை அடையவும், துறந்தவரது உள்ளத்திலுள்ள களங் கம் நீங்கவும், சோமவாரமும், திருவாதிரை நட்சத்திரமும் செய்த சிவ பூசையின் பயனை யடையவும், வியாழபகவானாகிய குரு வந்து அழகா கக் கேந்திரமேறி நிற்கும் நல்ல லக்கினம் வாய்ப்ப, நான்கு வேதங் களும் தாமே முழங்க, தேவர்கள் மந்தார மலர்மாரி பொழியத் திசை கள்தோறும் தேவமாதர்கள் நடனஞ் செய்ய, தேவதுந்துபி ஐந்தும் சப்திக்க, துர்க்கையும் - இலக்குமியும் - நாமகளும் செருக்கடைய, அந் தணர் மகிழ்ச்சி மிக, முனிவர்கள் வளர்க்கு முன்னர் மந்திரத்தை யுடைய யாகாக்கினி தானே வலஞ்சுழித் தெழுந் தாரவாரித்தாட, அட்டதிக்கு யானைகளும் ஆதிசேடனும் பாரத்தினாலுண்டாகிய இளைப்பு நீங்க, இந்திரன், மகமேருவாகிய தெய்வம், வருணன் இவர்க ளுக் கிடதுதோள் துடிக்க பரமசிவனும் உமையுங்கொண்ட கோலத்துக் கேற்பக் குழந்தையானது உதய சூரியனைப்போலவும், அக்காலத்துதித்த குமாரவேளைப்போலவும் வேப்ப மாலையையுடைய பாண்டியன் செல்வப்புத்திரியாகிய தடாதகைப் பிராட்டியாரிடத்தில் தோன்றியது. தோன்றினவுடனே எம்பிராட்டி அப்பிள்ளையை யெடுத்து, உச்சிமோந்து மார்போடு தழுவித் தன் நாயகன் கையிற் கொடுத்து, மீண்டுவாங்கித் தன் திருமுலைப்பாலாகிய வெள்ளத்தைக் குமுதம்போன்ற வாயில் விடுத்துண்பித்து, அவ்வாறு வளர்த்து வருங் காலத்தில், திருமாலும் - பிரமனும் - இந்திரன் முதலிய தேவர்களும் - முனிவர்களும்-மற்றவர்களும் தத்தம் பத்தினிகளோடும் அரசனரண் மனைக்கு வந்தார்கள். சேரனும் சோழனும் வடக்கின் கண்ணுள்ள அரசர்களும், குறுநிலமன்னரும் தங்கள் சேனைகள்சூழ கடல்கள் பொங்கி வருவதுபோல் வந்தனர். அவர்கள் வந்து அரசனையும் தேவி யையும் முறையால் வழுத்திவாழ்த்தி, மானையுமழுவையும் நீத்த பாண் டியனும், தேவியுமாகிய இவர்களது திருமுகக் கருணைபெற்று அவர்க ளது திருவடியை வணங்கித் தம்மூர் செல்லும் அவர்களிற்சிலர் பாண்

டியர்களுக்கெல்லாம் பெருமானாகிய சோமசுந்தரப் பாண்டியரிடத்துக் கந்தனே வந்தா னென்பார்கள். சிலர் குற்றமற்ற கற்பினை யுடையாளது பாக்கிய மென்பார்கள். சிலர் இவனது அழகினால் மன்மதனும் பெண்மையை விரும்புவா னென்பார்கள். சிலர் இவன் செங்கோலினது ஆக்ஞை எழுகடலாற் சூழப்பட்ட இவ்வுலக மாத்திரமோ? ஏழுலகத்தையுங் காக்கு மென்பார்கள். சிலர் இக் குழந்தையினது தோற்றம் மனிதர்கள் செய்த தவமோ? அன்றித் தென் தேசத்திலுள்ளவர்கள் செய்த தவமோ? அன்றித் தேவர்கள் செய்த தவமோ? அன்றி யாகங்களுக்குரிய பூசுரர்கள் செய்த தவமோ? அன்றிக் கேள்வியினுடைய முனிவர்கள் செய்த தவமோ? என்பார்கள். இவ்வாறாகத் தம்மி லொருவர்க்கொருவர் வினாவி மிகுந்த மகிழ்ச்சியோடு சென்றார்கள். அந்நகரத்தில் அவ்வவர்கள் வீடுகள்தோறும் பெண்கள் கல்யாணத்துக்கு அலங்கரித்துக்கொள்ளும் ஆபரணங்களைத் தரித்துக் கொண்டு மங்கலவாத்தியங்கள் ஆரவாரிக்கப் பட்டணமெங்கும் பொங்கியோடும்படி நெய்விழாக் கொண்டாடவும் கேள்வி நிரம்பிய மறையோர்க்குக் கொடுத்த தானவெள்ளம் கடலைக் கிழித்துக்கொண்டு சென்றது. இன்னும் அத்தானவெள்ளமானது இறைத்த வாசனைச் சுண்ணங்களையும், பொரிகளையும், வெள்ளையரிசியையும், குப்பைகளையும் நீர்ச் சிவிறிகளாலிறைத்த குளிர்ந்த பனிநீரையும், சந்தனத்தையும், எண்ணெயையும், கஸ்தூரிச் சேற்றையும், பசை யில்லாமல் வாரியெடுத்து இடமகன்ற பட்டினமெங்கும் கழுவியது.

இவ்வாறு அந்நகரமெங்கும் களிக்கச் சோமவாரம் திருவாதிரை நட்சத்திரம் ஆகிய இந்த நல்ல நாளில் குருகேந்திரித்த பரிசுத்தமாகிய லக்கினத்தில் பிறந்த சோமசுந்தர பாண்டியனது பிள்ளைக்குச் சாதகர்ம முதலிய அரசர்க்குரிய வேத ஒழுங்கின்படி செய்வித்து வருணன்-இந்திரன்-மகமேருவாகிய மலையரசன் முதலிய சத்துருக்களது வீரஞ் சிந்த, அவர்களது செருக்கை யழித்து அச்சந் தோற்றுவித்தற்குரிய காரணத்தால் அக்குமாரனுக்கு உக்கிரவருமனென்று நாமகரணஞ் செய்து, நான்காமாதத்தில் சந்திமிதிப்பித்து, ஆறுமாதத்தில் அன்ன மங்கலம் பயிற்றுவித்துப் பதின்மூன்றும் மத்தியில் சௌளவினை முடிப்பித்து, ஐந்தாமாண்டில் நூலினது முறை தெரிந்து பூணுநூற் கல்யாணஞ் செய்விக்கப், பின்னர் பதநிரை, பாழிச்சாகை என்னும் உறுப்பினையுடைய பெரிய வேதங்களையும், சாஸ்திரங்களையும், தநுர்வேதமும், வாள்வித்தையும், யானையேற்றம், குதிரையேற்றம், மற்றவையும் பிரகஸ்பதிபகவான் வந்து கற்பித்தார். குருமுகத் தறிய வேண்டு மென்னும் கொள்கையால், ஒருமுறை கேட்டு அறுபத்து நான்கு கலைஞானங்களும் ஒருமிக்கத் தெளிந்து, பரமசிவனல்லது மற்றொருவராலும் அறிவிப்பதற்குக் கூடாததலால் பாசுபதாஸ்திரத்தைப் பரமசிவனிடத்தில் தெரிந்துகொண்டான்; அளவில்லாத கலைகளை யெல்லாம் எட்டாமாண்டில் கற்று, மிக்க வலிவுடையோனாகிக் கு

வரைத் தொழுது போற்ற வல்லவனாகி அவர்கள் மகிழ்ச்சியோடும் அணிந்துகொள்ளத்தக்க ஆபரணமாகி வெற்றிச்செல்வத்தையுடைய இடபத்தை யொத்த இளைஞர்களோடு திருவிளையாடல் செய்வானாகிச் செம்புள்ளி முகத்தினையுடைய மதத்தயானைகளை யொன்றோடொன்று தலையால் முட்டிப் போர் செய்து வென்றும், ஆட்டுக் கடாக்களோடு ஆட்டுக் கடாக்களைச் சண்டைக்கு விட்டுப் போர் செய்து வென்றும் வகிர்தலைப் பொருந்திய உச்சிக்கொண்டையையுடைய கோழிச்சேவல் களை யொன்றோடு ஒன்றைப் போர் செய்யவிட்டு வென்றும், காற்றிலும் கடிய வேகத்தையுடைய குதிரைமீதேறி நெடுந்தூரம் போய்த் திரும்பி யும், எமனைப் பார்க்கிலுங் கொடிய சீற்றத்தையுடைய யானைமீதேறிச் செலுத்தியும், வையை யாற்றிலும் சோலைகளிலும் தடாகங்களிலும் சென்று விளையாடி இன்பத்தை அனுபவித்தும், வேல் வல்லமையையு முடைய பாலியர்களோடு மல்லயுத்தஞ்செய்து வென்றும், பொதிய மலையிற் சென்று வேட்டையாடியும், அம்மலையிலுள்ள முனிவர்கள் ஆசிர்வாதஞ் சொல்ல அவர்கள் க்ஷேமங்களை விசாரியும் அவர்கள் கொடுத்த கனி முதலிய விருந்துகளைக் கையிற்பெற்றுச் சந்தோஷித்து மீண்டும் இவ்விதமாகப் பதினைந்தாண்டு கழிய, பதினாறுமாண்டில் சூரபத்மனை ஜயித்த தங்கள் கடவுளே யிவனென்று கருதி, வில்லை யுங் கூரிய வேலையுங் கைவிடாமற் காப்பது போலக் கச்சணிந்த ஸ்தனங்களையுடைய மாதரும் அவர்களது மாவடுபோன்ற கண்களும் தன்னிடத்து மொய்க்க, கூரிய நுனியையுடைய வேலாயுதத்தை யுடைய உக்கிரவர்மன் இத்தன்மையனாகத் தாதையாகிய சோமசுந்தர பாண்டியன் குமாரனுடைய தாமரை மலர்போன்ற அழகினையுடைய தாகிப் பார்ப்பவரது கண்களையும், மனங்களையும் கிரகிக்கத்தக்ககாந்தி யினையும் உடையவனாகி இலக்கணநூற் சொல்லியபடி திரண்டு நீண்ட கணைக்காலினையும், வட்டந் தோன்றாத செழுமையான முழந்தாளினை யும், தொங்குகின்ற வாயினையும், ஈரம் பொருந்திய கதுப்பினையும் உடைய பெரிய யானையினது துதிக்கையை யொத்த திரண்ட தொடை களையும், குறுகிய வயிற்றையும், தாழ்ந்த நாபியையும், அழகைக் காணும் குற்றமற்ற கண்ணாடிக் கொப்பான வாசனை பொருந்திய அகன்ற மலையைப்போலும் அழகினையுடைய மார்பையும், வீணைத் தண்டு போல் இணையொத்து நீண்டு தாழ்ந்த கைகளையும், மணம் பொருந்திய மலர்மாலை கிடந்தசையா நின்ற இரண்டு மேருவை யொத்த தோள்களையும், வலம்புரிச் சங்கத்தை யொத்த கண்டத்தை யும், இலக்குமி தங்கிய பொற்றாமரை மலர்போன்ற முகத்தையும், பொதுவாகப் பார்த்துப் பூமிதேவி செய்த தவப்பேற்றை யொத்தவ னது உருவத்தை யெல்லாம் நின்று நின்று உறுவத்தின் அழகினது நலத்தைச் சொல்லாநின்ற நூலளவையால் சோதிக்கத் தொடங்கி அவயவ வுறுப்புகளுள் உன்னத உறுப்பு ஆறு, நீண்ட உறுப்பைந்து, சூக்கும உறுப்பு ஐந்து, குறுக்க உறுப்பு நான்கு, அகல உறுப்பு இரண்டு, சிவந்த உறுப்பு ஏழு, ஆழ்ந்த உறுப்பு மூன்று, இவை அவ்

விலக்கணத்திற் றெருகுத்திருக்கின்றன. இவைகளை விரித்துரைப்பின் முப்பத்திரண்டு இலக்கண உறுப்புகளாம். அவையாவன, வயிறு - தோள்-நெற்றி-நாசி-மார்பு - கையடி இவையாறும் உயர்ந்திருப்பின் அவனிந்திரனுவான். ஒளியைக் கிரகிக்கின்ற கண் - கபோலம் -செங் கை-நாசி-நடுமார்பு இவ்வைந்தும் நீண்டிருக்குமாயின் நன்மை யுண் டாகும். தலைமயிர்-உடல்-விரற்கணு-நகம்-பல்-இவ்வைந்தும் சிறியதா யிருப்பின் ஆயுள்விருத்தி, கோசம்-கணைக்கால்-நா-முதுகு இந்த நான் கும் குறுகி யிருக்குமாயின் செல்வப்பெருக்காம். சிரம்-நெற்றி இவ் விரண்டும் அகன்றிருக்குமாயின் இதுவும் நன்ருகும். உள்ளங்கால் - உள்ளங்கை - கண்கள் - இதழ்க்கடை - அண்ணம் - நா - நகம் இவை யேழும் சிவந்திருப்பின் மிகுந்த வின்பமுண்டாகும். இசல்வலி-ஓசை-நாபி என்று சொல்லுகின்ற இவை மூன்றும் ஆழ்ந்திருப்பின் எவர்க் கும் மேலான நன்மை யுண்டாகுமென்று சோமசுந்தரர் மைந்தனது அழகு நிறைந்த இலக்கணத்தோடு நல்ல குணத்தையும் நோக்கி இவ் வுலகத்தைப் பொது நீக்கியாள வல்லவனுகி வாழுநாளில் மிகவும் வல் லவனுவனென்று தன் மனத்திலாய்ந்து இத்தகுதியான குணமிகுந்த தன்மையால் கீர்த்தி - நீதி - நல்லவுள்ளம்-உண்மை-பெருமை தெய்வ பக்தி-உலகுக்கெல்லாம் சந்தோஷத்தையுண்டுபண்ணுங் குணம் - சாந் தம்-உயிர்களிடத்தன்பு-ஈகை-கல்வி - ஜயித்தற் கரியாரை ஜயித்தல்-தேவர்களாலுஞ் செல்லுதற்கரிய தேயத்திலுஞ் சென்று அவர் களால் இடப்பட்ட திறையைக் கோடலும், சுமத்தற்கரிய உலகத்தை மாலைபோலப் புயத்திற் ருங்குதலும், சொல்லுதற்கரிய கீர்த்தி உல கெலாஞ் சுமப்ப வைத்தலும், என்று சொல்லப்பட்ட விவை முதலான வியற்கைக் குணமுடையவனுகி நன்றிசெய் துலகுக்கெல்லாம் தானெருவனே நாயகனுகி நிற்கத்தக்க இப்பிள்ளைக்குப் பின்பு பட்டாபி ஷேகஞ் செய்வோம். முன்பு திருமணஞ்செய்ய வேண்டுமென்று மந்திரிகளோடு ஆலோசிக்கத் தொடங்கினர்.

உக்கிரபாண்டியன் திருவவதாரப் படலம் முற்றிற்று.

---

பன்னிரண்டாவது

# உக்கிரகுமாரனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

உருக்குந் திறலுக் கிரகுமர னுதய மிதுவான் மதியுநதிப்
பெருக்குங் கரந்த சடைக்கற்றைப் பெருந்தேர்ச் செழியர் பிரானவற்குச்
செருக்குஞ் செல்வ மணமுடித்துச் செவ்வேல் வளைசெண் டளித்துள்ளந்
தருக்கு முடிதந் தரசுரிமை தந்த செயலுஞ் சாற்றுவாம்.

**உரை :** பகைவரைக் கெடுக்கும் வலிமைபொருந்திய உக்கிர குமார பாண்டியன் திருவவதாரஞ் செய்த வரலாறு இதுவாகும். இனி வெள்ளிய சந்திரனையும், கங்கைநதிப் பெருக்கையும் நெருங்கிய சடையையும் பெரிய தேரையுமுடைய சௌந்திரபாண்டியன் அந்த உக்கிர குமார பாண்டியனுக்குச் செல்வத்தா லிறுமாந்திருக்கும் திருமணத்தை முன்னர் முடித்துப் பின்பு பகைவருதிரந் தோய்ந்த வேலையும், சக்கரத்தையும், செண்டையுங் கொடுத்து மனத்தி லிறுமாப்பைத் தரத்தக்க திருமுடி தரித்துத் தமதரசுரிமையுந் தந்தருளிய திருவிளை யாடலைச் சொல்லுகின்றோம்.

சோமசுந்தர பாண்டியரானவர் தனதருமைப் புத்திரனுக்குத் திருக்கலியாணஞ்செய்ய அறிஞர்களோடும் மந்திரிகளோடுஞ் சூழ்ந்து குற்றமற்ற அழியாத செல்வமும், குலமும், குடியும், புகழும், நமதைய னுக் கிசைந்த குலத்தரசர் யாவரென்று ஆய்ந்து சொல்லுகின்றார். இனியபுனலாற் சூழப்பட்ட வடபுலத்தில் மணவூரென்னுந் திருநகரத் திற்கு வேந்தனாகிய சூரிய குலத்திற் பிறந்த சோமசேகரனென்று சொல்லுகின்ற கேள்வியையுடைய அரசனிடத்து இலக்குமியைப் போல அவதரித்த காந்திமதி யென்னுங் கன்னிகையைத் திருமணம் பேசவேண்டுமென்று சொல்லி யிருந்தார்.

அன்றிராத்திரி வெள்ளையானையின் பிடரியாற் சுமக்கப்பட்ட சிகரத்தையுடைய ஆலயத்தி லெழுந்தருளி சந்திரனைத் தரித்த சடையினையுடைய பெருமானானவர் சூரியகுல வரசனாகிய கைம்மாறு கருதாது கொடுக்கும் கையினையுடைய சோமசேகரனுடைய கனவில் எழுந்தருளிவந்து தேவர்களது கனவிற்கு மெட்டாத திருமேனியைக் காட்டி அன்னப்பக்ஷிகள் தங்கிய வயலாற் சூழப்பட்ட மதுரையி லெழுந்தருளிய சிவன் யாம். நீ யீன்ற பொன்னையனையாளை மதுரா புரியிற் கொண்டுபோய் மறுபட்டணத்தரசர்களது மணிமகுட மிடறித் தேய்ந்த வீரகண்டாமணியையுடைய சுந்தரபாண்டியனுடைய குமார னுக்குக் கொடுப்பாயென்று சொல்லி மீண்டார். உடனே அரசன் மனத்தாமரையும் முகத்தாமரையும் மலர்ந்து இரண்டு கண்களையுந்

திறந்து எழுந்து இரண்டுகையையுங் கூப்பிப் பரமசிவன் கருணையால் எளிதாக வந்த செயலை நினைத்து அன்பின் வெள்ளத்தில் மூழ்கிச் சூரியோதய காலத்தில் நித்தியகர்மங்களை முடித்துக்கொண்டு மந்திரிமார்களோடு நான்குவிதச் சேனைகளும் சூழ, பல வாத்தியங்களுமொலிப்பத் தனது திருமகளைச் சேடியர்களோடு தேரிலேற்றி மணக்கோலத்தோடு மதுராபுரியை நோக்கிப் புறப்பட்டு வருங்காலையில், சந்திரகுலவரசனாகிய பாண்டியன் சுற்றத்தாரும், மந்திரிகளும் நேற்று மணத்தைக் குறித்துப்பேசி, ஆலோசித்தபடியே மணவூர் நோக்கிப் போகும்வழியில் சோமசேகர வரசனையுஞ் சேனைகளையுங் கண்டு எம்முடைய தென்னர்பெருமான் குமாரனுக்கு உமது திருவைத் தரக்கடவீரென்று கேட்க, அவ்வரசன் கொன்றைமாலையை யுடைய பரமசிவன் தன் கனவின்கண் எழுந்தருளிவந்து குலமுங்குடியும் உரைத்த தன்மையை அவர்களுக் குரைத்துக் கலியாணத்துக்குச் சம்மதித்துரைக்க, அதனை அங்ஙனமிருந்த முதியோர் அறிவுடைய உழையர்களை விடுத்துச் சோமசுந்தர பாண்டியருக் கறிவித்து, மணவூரினின்றும் வந்த சோமசேகர அரசனோடு மதுரைப்பதியை வந்து சேர்ந்தார்கள். சூரியகுலத்தரசனாகிய சோமசேகரன் சந்திரகுலத்தரசனாகிய சோமசுந்தர பாண்டியனை எதிரே சென்று வணங்க, அவனைத் தழுவி உபசாரஞ் சொல்லி விடுதியிற் செல்ல அனுப்பிப் பாண்டிய னிருந்தனன். அதற்குமேல் அமைச்சர்கள் ஐம்பத்தாறு தேசத்தரசர்களுக்கும் திருமுகங்கள் அனுப்பிப் பட்டணத்திலுள்ளார்க்குக் கலியாண நாளை அறிவித்து, நகரத்தை யலங்காரஞ் செய்யும்படி மணமுரசாலறிவித்தனர். பட்டணத்திலுள்ளார் மாடங்களைப் புதுக்கிக் கமுக மரங்களையும், வாழை மரங்களையும் வீதிகளெங்கும் நீட நிரைத்துப் பாலிகைகளும், நிறை குடங்களும் வரிசை வரிசையாக நிறுத்தி அசைகின்ற கொடிகளுங் கட்டி அழகுக் கழகு செய்ததுபோல மாடங்கள் நெருங்கிய நகரத்தை மணகோலம் பெருகச் செய்வித்தார்கள். தென்றனுடன் திருமகளைத் தேவர்பெருமான் மணஞ்செய்யக் கலியாண வழகாக ஒரு நகரம் இதற்கொப்பும் அதிகமுமில்லாத வண்ணம் அன்று அழகு செய்தார்கள். இன்று தானே தனக் கதிகமென்று சொல்லும்படி அழகு செய்தார்கள். மாலையையுந் திருமுடியுந் தரித்த சோமசுந்தர பாண்டியரது கலியாணத் திருமுகத்தைச் சேரனும், சோழனும், மற்ற ஐம்பத்தாறு தேசத்தரசர்களுங் குறுநிலமன்னர் முதலானவர்களும் கண்டு, இரதகஜதுரக பதாதிகளோடு தங்கள் தங்கள் பட்டணங்களினின்றும் புறப்பட்டுச் சேனைகளாலுண்டாகும் தூளிப்படலமானது திக்குகளடங்க நிறைந்து கடலை மேடாக்கவும் பல வாத்தியங்களும் கடலொலிபோல ஒலிக்கவும் வந்து நெருங்கினார்கள். ஏகதண்டந் திரிதண்டத்தையுடைய சந்நியாசிகள் விருப்பத்தோடும் வந்தார்கள். வானப்பிரஸ்த ஆச்சிரமத்தையுடைய வானப்பிரஸ்த முனிவர்கள் தங்கள் தங்கள் பத்தினிகளோடும் வந்தனர். இந்திரன், பிரமன், திருமால் மற்ற தேவர்கள் பதினொண்

கணத்தர் யாவரும் வந்தனர். இவ்வாறு யாவரும்வந்து அரண்மனையிற் புகுந்து சிங்காதனத்தி லெழுந்தருளித் தடாதகைப் பிராட்டியாரோடும் கொலுவிருக்கின்ற கோலத்தைக்கண்டு துதித்து வணங்கவேண்டிய முறைப்படி வணங்கி வாழ்த்தினர்கள். சோமசுந்தர பாண்டியர் அவர்களுக்கு முறைப்படி சன்மானஞ்செய்து இருந்தனர். இனிப் பாண்டியன் திருமகனது திருக்கலியாணச் செய்தியைச் சொல்லத் தொடங்குவோம்.

சோமசேகரன் பெண்ணினுடைய அழகையெல்லாம் இராஜன் நோக்கி சந்தோஷிக்குங் கொள்கையைக் கண்டு, சொல்ல வல்லவன் அங்குள்ள யாவருக்கும் அப்பெண்ணினது அவயவ விலக்கணத்தை நூன்முறைப்படி சொல்லத் தொடங்கி, மிகவும் நீண்டு குறுகாதன வாகிப் பிளவுபடாத சடையிணையுடையனவாகித் தழைத்து சூற் கொண்ட மேகம் வண்டின் கணம் என்று சொல்லும்படியாகக் கறுத் துக் கடைகுழவாகி இயற்கைமணம் வீசிக் குற்றமற நெருங்கி நெரிந்து மெல்லென்று கண்டவர்களது உள்ளத்தையும் கண்களையும் கிரகிக் கத்தக்கதாய் நெய்த்து இருண்ட வாசனைபொருந்திய மலர்களைத் தரித்த அளகத்தையுடையவள் தன்னுயகனுக்கு இனிய வளப்பம் பொருந்திய செல்வமுண்டாக்குவாள். மதத்தையுடைய யானையினது மத்தகம்போலத் திரண்டுயர்ந்த சென்னியை யுடையாள். அவளது உள்ளத்தை மகிழ்விக்கும் கணவன் ஆயுள் நீண்டு உலகத்தையெல் லாம் அரசுசெய்ய வுரியவனுவன். எட்டாநாளுதிக்கின்ற குளிர்ந்த சந்திரன்போல மயிர் நரம்பகன்று தசைத்து மூன்று விரலளவு அகன்ற விளக்காகிய நெற்றியையுடையாள் தன் கணவனுக்கு நல்ல செல்வத்தோடு அழியாத ஆரோக்கிய முண்டாக்குவாள். கண்ணின் கடை சிவந்து பசுவின் பாலைப்போல் வெளுத்து நடுவிழி மிகவுங் கறுத்து அழகடைந்து இளமையுடையதாகிய இமை கருமயிரையுடைய தாகி யிருப்பன நன்று. கரிய புருவமானது வில்லையொத்ததாகித் தம்மிலிரண்டுமொதது இருந்தால் நன்று நாசியானது இருதொளை யும் அழகுகொள்ள வுருண்டு, எள்ளின் மலரானது தாமரை மலரின் மேல் பூத்ததுபோல இருந்தால் நன்று. வள்ளைக்கொடிபோல நீண்டு தாழ்ந்து இரண்டு செவியும் சுழி நல்லவாகி முன்னர் தள்ளியிருப்பின் மனோகரமாந் தன்மையால் நன்மை யுண்டாகும். விளக்கமாகிய கபோலம் வட்டமாகித் தசையையுடையதாய் உயர்ந்து கண்ணாடி மண் டலம்போலத் தெளிவான ஊற்றமுடையது நன்றென்று சொன்னான்.

பின்னும் கொவ்வைக்கனிபோன்ற இதழானது திரண்டு இரு பாகமுங் குவிந்து சிவந்த ரேகை யொழுங்காக விருந்தால், அம்மாது தன் தகப்பனுக்கு என்றும் நண்புருவாக விருப்பள். முப்பத்திரண் டென்று மெண்ணையுடையதாகி வெளுத்த பற்களானவை இடை வெளியில்லாததாகி நீண்டு மேலுங் கீழும் இரண்டு வரிசையும் செவ் வியதாக வளர்ந்து பசுவின் பாலைப்போல வெளுத்து விளங்கில் நன்

றென்பர் நூல்களை யாய்ந்தோர். மெல்லியதாய்ச் சிவந்து கோமள மான நாவினுள் இச்சித்த திச்சித்தபடியே விரைவில்வந்து பொருந்த நுகருவள். தசைபெற்று வட்டமாய் இரண்டங்குல வளவினையுடைய தாகிய அழகான மோவாய் இருப்பின் நன்றென்பர். அகவிதழை யுடைய தாமரைமலர்போல மணமுடையதாகி யிருமர்ந்து விளங்கா நின்ற சந்திரனையொத்த முகம் நன்று. சங்குபோன்ற கழுத்துத் தசைபெற்று நாலுவிரலினளவாகித் திரண்டு மூன்றிரேகைவரை யுண்டாயிருந்தால் அவள் கணவன் உலகத்தரசனுவன். மார்பி னிடந் தசையைப் பெற்றுப் பதினெட்டு விரலளவகன்று மயிர் நரம் பின்றி மிதந்திருந்தால் சிறப்பாம். மூங்கிலையொத்த தோளானது தசைப்பிடியாய் மயிரில்லாமல் எலும்பு தோன்ருமல் இளமையை யுடையவளானுல் நன்மையாம். செங்கையானவை நீண்டு உருண்டு சணுக்கள்பெற்று அடைவாகச் சிறுத்து இருப்பின் செல்வமோ டின்ப முண்டாம். வளவிய நகமானவை சிவந்து உருண்டு பார்ப்பவர் கண் களையும் மனத்தையுங் கிரகிப்பனவாய்ச் சரசரப்பின்றியிருப்பின் அவை நல்லவாம். உள்ளங்கையானது மிருதுவாகிச் சிவந்து இடைவெளி யகன்று நடுவிரலுயர்ந்து மங்கலமாகிச் சிலவரைகளில் நல்லவிலக்கண வரையிருந்தால் நன்மையாம். முத்துமாலைகளணிந்த தனங்கள் கடின மாகித் தசைபெற்று வட்டமாய் அரும்பையொத்தனவாகி இரண்டு மொத்து இறுமாந்து ஈர்க்கு இடையில் நுழையப்பெருது நெருங்கி யுள்ளன நன்ரும். அமர்ந்து உரோம வரிசைபெற்றுப் பக்கத்தில் மயிர் நரம்பகன்ற வயிற்றையுடையாள் உணவை விரும்பியபடி அனு பவிப்பவள், நாபியானது வலஞ்சுழிபெற்று ஆழ்ந்திருப்பின் அழியாத செல்வமிகும். இடையில் மயிர் நரம்பற்று இருபத்து நான்கு விரலள வாகி வட்டவடிவதாய்ச் சிறுகி மெலிவதாய் மத்தகம் ஆமையின்முதுகு போல உருவ மிரண்டும் நேரொத்திருந்தால் நிதம்பம் நன்ரும். இரண்டு தொடைகளும் மயிரென்பகன்று யானைத்துதிக்கையும், கையி னடியையும், வாழைத்தண்டையும் ஒத்திருக்கின் நன்மையென்று சொல்லுவர். முழந்தாளானவை அங்கமுண் மறைந்து வட்டமாய்த் தசையையுடையனவாய் இருப்பன நன்று. கணைக்காலானவை மயிர் நரம்பு தோன்ருத இரண்டுஞ் சமமாக வுருண்டு சிறுத்து அழகடைந் திருப்பின் நன்மையாம், புறவடிவானது நரம்பு என்பு தோன்ருமல் தசைபெற்று ஆமை முதுகுபோலத் திரண்டுயர்ந்து அழகுடையதாய் மங்களகரமாக விருப்பின் அம்மடந்தை அரசன் மனைவியாம். தாமரை மலர்போன்ற காலின் விரல்களுயர்ந்து பரிசுத்தமாய் அழ கினையுடையனவாய் கழுநீர் மலரினது மெல்லிய விதழ்களை நிரைத்து வைத்தாற்போல ஒழுங்காகத் திரண்டு வெண்மையாகிய நகமானது வெண்மதிப்பிளவு பொருந்தியனபோன்று மிருதுவாகிக் குற்றமறத் தசைந்தனவாயிருப்பின் உத்தமமாம். உள்ளங் காலானது தசைப் பிடிப்பும், மிருதுவும், சமமுமானுல் நன்ரும். அழகான தளிர்போலச் சிவந்து பிரகாசிக்கின்ற பொன்னைப்போல எப்பொழுதும் வியர்வை

யற்று மேனி அழகாக விருப்பின் செல்வமுண்டாகும். தேகமணம் பாதிரி - குவளை - தாமரை - மல்லிகை - சண்பகம் போன்றிருப்பின் நலமாம். சொற்கள் குயில் - கிளி - யாழ்போன்றிருப்பின் - பாக்கிய முண்டாகும் என்று கரிய கேசமுதல் பாதம் வரையில் மருங்குல் தோன்றுத கன்னிகையின் அவயவங்களெல்லாவற்றையும் வாக்கின் செல்வன நூலறிவால் ஒருங்கு சேர்ந்து இவ்வுலக மன்றித் தேவலோகத்திலும் இக்குயிலை யொத்த கன்னிகையினது அவயவ விலக்கணம் போலக் காணுத லரியதென்றான்.

அவ்விடத்து அதைக்கேட்டோர் யாவரும் உள்ளத்தில் சந்தோஷமதிகரித்தனர். அதன்பின்பு வாசனை மிகுந்த மலர் மாலையைத் தரித்த மயிர்முடியினையுடைய உக்கிரகுமாரன் மதத்த யானையினது பிடரியிற் சுமந்துவந்த வையையினது மேலான தீர்த்தத்தா லபிஷேகஞ் செய்யப்பட்டு, அலங்கார மண்டபத்திற் சென்று புது மலர்களைத் தரித்துக் கஸ்தூரி முதலிய வாசனை கலந்த சந்தனக்குழம்பு பூசி, முத்துக்களாற் செய்த மாக்ஷிமை பொருந்திய ஆபரணங்களைத் தேகமுழுதுந் தாங்கி விளங்கா நின்ற சோடச கலையோடுங் கூடிய சந்திரன்போல் வந்து மணத் தவிசின்மேல் பல வாத்தியங்கள் முழங்க விருந்தனன். அவ்வண்ணமாகவே ஸ்நானஞ் செய்து, அரியவாபரண முதலியவற்றை யலங்காரஞ் செய்வித்த கன்னிகையைக் கொண்டுவந்து நம்பியினது வலது பக்கத்தில் அழகுபெற விருக்க வைத்தார்கள். சோமசேகர இராஜன் தன் பத்தினியோடுமெழுந்து இவ்விருவரையும் பரமசிவனும் உமையுமாகப் பாவித்துக் கையில் நீர் நிரம்பிய கரத்தைக் கொண்டு, அம்மங்கலநீரால் நம்பியினது மலரடியை விளக்கி, மலர்மாலை தரித்து, அமுதூட்டிப் பின்பு தன் பெண்ணாகிய காந்திமதியின் கையைப்பற்றி நம்பியினது கையில்மேல் வைத்துத் தேவர்களறிய நல்ல நீரைவிட்டு மந்திரஞ் சொல்லிச் சூரியகுலவரசனாகிய சோமசேகரன் சந்திர குலத்தை விளக்கவந்த சோமசுந்தர பாண்டியன் குமாரனாகிய உக்கிர வருமனுக்கு இன்று என் குமாரியாகிய காந்திமதியைக் கொடுத்தேனென்று தத்தம்பண்ணிக் கொடுத்துப் பலம் பொருந்திய சிங்கத்தாற் சுமக்கப்பட்ட திண்ணிய காலையுடைய இரத்தின வடங்கள் மாட்டிய வயிர வூசல்களைந்தும், நன்றாகப் பதஞ்செய்த பஞ்சணைகளோடு அன்னத்தின் மிருதுவான இறகு பெய்த அணைகள் பத்தும், பவளவாயும், பசும்பொன் மேனியும், இந்திர நீல ரத்தினத்தாலமைத்த கண்களுமுடைய பாவை விளக்குகள் எட்டும், சமையலிடத்துக் குதவும் பாத்திரங்கள் நூறும், அழகிய பொன்னினாலும் மணியினாலுஞ் செய்த காளாஞ்சிகள் ஏழும், பொற்கவரிகள் எட்டும், கிரணங்களை யுமிழ்ந்து பிரகாசிக்காநின்ற பசும்பொன்னாற் செய்த கிண்ணவரிசைகள் சுற்றிலும் விளங்க மத்தியிற் நாட்டிய பொற்காலினோடு பிரகாசிக்கின்ற இரத்தினப் பாத்திரங்கள் நூறும், விலையுயர்ந்த முத்தாரத்தோடு பெட்டி ஆயிரமும், அரியவிலையுடைய மெல்லிய வஸ்திரங்களும், பட்டு

களும் வைத்திருக்கும் பெட்டிகள் முந்நூறும், அழுகத்காலே உருவமெழுதிய பிரதிமையையொத்த மாதர்கள் ஆபரணங்களோடு எழுநூற்றைவரும், பயிர் விளைவோடு மூன்று பெரிய ஊரும், இரண்டுகோடி செம்பொன்னும், தனது அரியமகட்கு வரிசையாகக் கொடுத்தனன்.

அப்பொழுது பல வாத்தியங்களு மரவாரித்தன; தேவர்கள் மந்தார மலர்மாரி தூர்த்தனர்; ஓமாக்கினி துள்ளி வலமாகச் சுழித்து ஓங்கினது; மங்கையர்கள் வாழ்த்துப் பாடினர்; அம்மணக்கைக் கண்டவர்கள் கண்கள் பெரும் பேற்றைப் பெற்றன; முருக்குடைந்த கடப்பமலர் மாலையை யணிந்த பரித்திரையுடைய இளங்காளைக் கொப்பாகிய உக்கிரவர்மன், முனிவர்கள் ஓமகாரியஞ் செய்ய, இனிய வாத்தியங்கள் முழங்கக் காந்திமதிக்கு மாங்கல்ய தாரணஞ் செய்த்து, அப்பெண்ணினது வளையல் பொருந்திய செங்கையைப் பற்றி வேத விதிப்படி மற்றக் கலியாணச் சடங்குகளெல்லாம் பூரணமாக நிறைவேற்றி, அளவுபடாத வளப்பத்தோடு சூரிய குல வரசனாகிய சோமசேகரன் குமாரத்தியை வேதவிதி விளங்கத் திருமணம் முடித்துச் சந்திரனும் நக்ஷத்திரக் கூட்டங்களும் சூழ்ந்து செல்லும்படியான ஆகாயத்தை யளாவிய இரத்தின மாளிகைகளையுடைய வீதியில் வலமாக உலாவ வருங்காலத்து, மின்னலுக்கொப்பாகிய பொற்றொடியை யுடையவர்களும், [illegible] பூஞ்சு சூட்டிய மெல்லி[illegible] அமயினார். இத்திறை பரணங்களை [illegible]டைய மூலையினரு, [illegible]திக்கிற இரத்தின [illegible]லை யுடையவரு மலர்மாலை யணிந்த கூந்தலையுடையவரும், அழகிய தாமரை யரும்பை யொத்த முலையுடைய மங்கையர்களுடைய கண்களும், மனமும் அவரிடத்துச் சுதாது நடக்க, நடந்து செல்லுகின்ற சுருங்கிய விடையை யுடையாகித் [illegible] [illegible]த் தொழுது வருவார்க்கு உக்கிரவர்மன் இங்கி அ[illegible] [illegible]ங் குலினது பாரத்தை நீக்குகின்றவன்போல் [illegible] [illegible]. தோளினது பாரத்தைக் கழிப்பவன்போல் [illegible]. மனத்தி நெருங்கிய பாரத்தைக் கழிப்பவன் [illegible] நிறை[illegible] [illegible]துச் சென்றான். அவ்வாறு செல்லுங்கால் கண்[illegible] [illegible]ள் [illegible] [illegible]னை யணிந்த முடியை மறைக்க சோமசுந்தர பண்[illegible]னைது [illegible] யிவனென்றால், யானையினது பிடரியிலிருக்கின்ற இளஞ் சிங்கம் போல அயல்வேந்தர்களது சேனைகள் தன்னைச் சூழவரும் பவனிக்கு ஒப்பேது? ஒப்புச் சொல்லுங் காலத்துத் தெய்வயானையை மணந்து வரும் இளையனாகிய முருகக்கடவுளது பவனியே ஒப்பாகும் என்றனர். இவ்வாறு பவனிவந்து இம்மையில் நன்மைதரும் கடவுள் ஆலயத்துட் சென்று பரமசிவத்தையும் அங்கயற்கண்ணம்மையையும் பணிந்து, மீண்டு அரண்மனையிற் சென்று தன்னைப் பெற்ற தாய் தந்தையர்களை முறையால் வணங்கினன்.

பின்பு திருமணத்துக்கு வந்தவர்களை அறுசுவையோடு முண்பித்து நானாவித வரிசைகளை அவரவர்க்குத் தக்கபடி செய்வித்து,

அவர்களுக்கு விடை கொடுத்துப் பின்பு தேவர்களுக்கும் விடை தந்து சுந்தரபாண்டியர் அரசு செய்திருந்த நாளில், தேன் பொருந்திய மலர் மாலையைத் தரித்த தருமனே உக்கிரகுமாரனே நீ கேட்பாயாக, இந்திரனும் கடலும் உனக்குப் பகைவர். மகமேரு செருக்குடையும், அப்பொழுது இந்திரன் முடிசிதற, இந்த வளையை எறி, கடலின்மீது இவ்வேலைவிடு, மகமேருவை இச்செண்டாலடி என்று அம் மூன்றையும் எடுத்துக் கொடுக்க, உக்கிரகுமாரன் பிதாவைத் தொழுது அம் மூன்று ஆயுதங்களையும் வாங்கச் சுற்றம் பொருந்திய இப்பதுக ஒப்பாக எதிராக நிற்கும் புதல்வனை உக்கிரபாண்டியனென்று அழைத்து, எவற்றிற்கும் முதலாகி வேதங்கள் முழங்க, பல வாத்தியங்களும் ஆரவாரிக்க முடிசூட்டித் தமது ஆக்கினையும் அரசுரிமையும் ஒப்பற்ற செங்கோலும் அவனுக்குக் கொடுத்து இராஜதந்திரத்தால் அரிய சுமதியென்னும் மந்திரியையும், முதுமையான பெருமை பொருந்திய நூலறிவினை யுடையோரையும் நோக்கி வாருங்கள் பெரியோர்களே! இவனைக் கண்களை இமை காப்பதுபோலும், அறிவைக் காக்கும் கல்விபோலும் காக்கக் கடவீர். இது உமமுடைய கடமை. இம மண்ணுடைசி இவனது என்று புதல்வனை அவர்களிடத்திற் சேர்த்துப் பின்பு கொடிய வேலாயுதத்தை யுடைய முருகக்கடவுளுக்கு ஒப்பானவனை வேறாக நோக்கி, ஐயனே! நான் இவ்வுலகத்தை நெடுநாளாகத் தாங்கி ரக்ஷித்தனன். இதுமுதல் நீ தாங்கி இந்தக் குற்றமற்ற மனத்தினை யுடையோரது சொல்வழி நடந்து நீயும் செங்கோல் செலுத்தி மிக்க செல்வத்தோடு பொலிவு பெற்றிருப்பாயாக வென்று சொல்லிப் பின்னர் தம்மிச்சையால் வேண்டிய இனிய வரட்படியங் கொள்ளத் தக்க முடிவில்லாத இன்ப மூர்த்தியானவர் சொல்லுதற்கரிய சிவ கணங்களையெல்லாம் பழைய வடிவமாகும்படி செய்து, தமதருட்டுணையாகிவந்த தடாதகைப் பிராட்டியாரோடும் பொன்னாற் செய்து விளங்காநின்ற நெடிய ஆலயத்துட்புகுந்து பொலிவு பெற்றிருந்தனர். அதன் பின்பு உக்கிரவர்மனென்னும் பெயரைத் தரித்த அரசபாண்டியர்களுட் சிறந்தவன், தெய்வத்தன்மையை யுடைய [illegible]களும் நல்ல தருமங்களும் வளர, இவ்வுலகத்தைத் தனதாக்கினையால் தாங்கிக் கொண்டிருந்தனன்.

உக்கிரகுமாரனுக்கு வேல் வளை செண்டு கொடுத்த படலம் முற்றிற்று

---

பதின்மூன்ருவது

# கடல் சுவற வேல்விட்ட படலம்

கலி விருத்தம்

வளையொடு செண்டுவேன் மைந்தற் கஞ்சுரும்
பளையவேம் பணிந்தகோ னளித்த வாறிதத்
தளையவிழ் தாரினுன் தனயன் வேலைமேல்
இளையவ னென்னவே லெறிந்த தோதுவாம்.

உரை: அழகிய வண்டுகள் சப்திக்கின்ற வேப்பமலர் மாலையைத் தரித்த சௌந்தர பாண்டியனுகிய பெருமான், தமது புத்திரனுக்குச் சக்கரத்தையும், செண்டையும், வேலையுங் கொடுத்தவித மிதுவாகும். இனி முறுக்கவிழ்ந்த மலர் மாலையைத் தரித்த அச்சௌந்தர பாண்டியனுடைய புத்திரனுகிய உக்கிரகுமார பாண்டின் சமுத்திரத்தின் மேல் சூரபன்மனுடைய வலிமையானது கெடும்படி வேலாயுதத்தை யெறிந்த குமாரக் கடவுளைப்போல வேலை யெறிந்த திருவிளையாடலைச் சொல்லுகின்ருேம்.

உக்கிரகுமார பாண்டியன் சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடையெங்கும் நிழலைச்செய்ய வீற்றிருந்து, அச்சமில்லாத மிகுந்த புண்ணிய வேள்விகளைத் தேவர்கள் சூழ்ந்து போற்றச் செய்துவரு நாளில், செய்தற்கரிய அசுவமேதயாகம் தொண்ணூற்ருறு செய்து நிறைவேறுமிடத்து, இந்திரன் உக்கிரபாண்டியன்மீது பொருமை கொண்டு கோபித்துப் பாண்டிநாடெல்லாம் வளமிகுந்து பொன்னுடு போலப் பொலிவு பெற்றிருப்பதால், இந்தப் பாண்டியன் வேள்வி செய்வதென்னென்று நினைத்து ஓர் உபாயத்தை யுன்னிச் சமுத்திர ராஜனையழைத்து நீ திடீரென்று பெரிய கடலாற் சூழப்பட்ட ஏழுலகத்தையும் ஒருமிக்க அழிக்கின்ற யுகாந்தகால வெள்ளத்தைப்போலக் கோபித்துப்போய், அரியகாவலையுடைய மதுரையை அழித்துவிடென்ருன். அதைக்கேட்ட சமுத்திரராஜனும் இதனுல் விளைவது தெரியாமல், பேய்களுங் கண்ணுறங்கும் நடுராத்திரியில், செழுமை பொருந்திய வயல்களாற் சூழப்பட்ட மதுரையைச் சூழ்ந்து அழித்துவிடுதலை நினைத்துப் பொங்கி அலைகளாகிய கரங்கள் அண்டகூடமெங்குஞ் சென்று ஆரவாரித்து அலைத்து யுகாந்தகாலத்தில் அலைத்தாரவாரிக்கும் வெள்ளமாய்ச் சந்திரமண்டலத்தை யெட்டி முட்டி வருகின்ற ஓரஞ்சன மலைபோல மண்ணுலகமும் விண்ணுலகமும் நடுங்க மரக்கலங்களையுடைய கடலாகிய வெள்ளம் மதுரைமீது வருகின்றசெயல், இராத்திரி காலத்தில் சந்திரன்மீது விஷம்பொருந்திய வாயினையும் கரிய வுடலினையும் உடைய ஒளிபொருந்திய இராகுவென்னும் பாம்பானது விழுங்கும்படி வருவதை யொக்கும். அல்லது கரியமேகம் அம்மதுரையை மூடிக்கொள்ள வருவதை யொக்குமென்று சொல்ல வரு

கின்ற கடல் வட்டமாகிய ஆமை கேடகமாகவும், வாளைமீன்கள் வீசுகின்ற வாள்களாகவும், மகரமீன்களே நெற்றிப்பட்டத்தை யுடைய யானைகளாகவும், பாய்கின்ற அலைப்பரப்புகளே தாவுகின்ற குதிரைகளாகவும், ஓடுகின்ற தோணிகளே இரதமாகவும் இத்தன்மையான சேனைகளோடு கடலானது பாண்டியன்மேல் சண்டைசெய்தற் கெழுந்ததை யொப்பாகும். இத்தன்மையாக வெழுந்து வந்த கடலானது மேகங்கள் கண்ணுறங்கு மதிலாற் சூழப்பட்ட நல்ல நகரத்திற்குக் கிழக்கே வந்து சேர்ந்த மாத்திரத்தில், வெள்ளியம்பலத்தில் திருநடனஞ் செய்கின்ற சோமசுந்தரக்கடவுள் அர்த்தராத்திரியில் சித்தராகி உக்கிரகுமார பாண்டியன் முன்னர் வந்து அவன் கனவில் புன்முறுவல் தோன்ற நின்று அருளிச்செய்கிறார்.

ஓ பாண்டியனே! உன் பட்டணத்தை யழிக்கக் கடல்வருகின்றது நீ விரைவாக வெழுந்துபோய் வெற்றிவேலைப் பிரயோகித்து ஜயமடையக் கடவாயென, கூப்பிய கையோடும் துதிக்கின்ற நாவினோடும், நித்திரையினின் றெழுந்து பேய்களு முறங்காநின்ற இரவில் தான் கண்ட கனவை யுணர்ந்து அரசன் பள்ளியினின் றெழுந்து பலவாயிலையுங் கடந்து மந்திரிகளோடு விரைந்து சமீபித்து, உலக மிறந்ததென்று சொல்ல, வருகின்ற கடலைக்கண்டு, அளவிறந்த வதிசயத்தை யுடையவனாகி நிற்கிற சமயத்தில், கனவிலே வந்த சித்தவேடத்தை யுடையவர் நனவிலும் வந்து அரசனுடைய நினைவைக் கண்டு, அப்பனே! காலதாமதஞ் செய்யவேண்டியதென்னை! உன்பேரில் கோபித்துக் கடலைப்போல வந்த சத்துருவைப் பெருமையும் வலியுங்கெடக் கூரிய வேலாயுதத்தை யெறிந்து உலகமுடிவைத் தீர்க்கக்கடவா யென்று சொல்ல, உக்கிரபாண்டியன் கையிலெடுத்த வேலாயுதத்தை வலமாகத் திரித்து எறிந்தபோது அவ் வேலினது முனையானது மடுத்தவுடனே அக்கடலானது சுஃறென்னும் ஒலியோடு பறந்து பெருமைகெட்டு அப் பாண்டியன் கணைக்காலி னளவாயினது. அழகிய வேத வேள்வியைத் தடுப்பதன்றி யுலகெலாஞ் சிந்த வேறான தந்திரத்தைச் செய்த இந்திரனுடைய ஏவலால் வந்த கடலானது வஞ்சகர்க்கு நன்றிசெய்து தமது வலி யிழந்தவரைப்போல வலியிழத்தல் என்று முள்ளதன்றோ?

புண்ணினிடத்தில் நுழைந்த வேலால் கடலைப் புறங்[illegible] கண்ட பாண்டியனிடத்து மண்ணிலே நின்ற சித்தர் ஆ[illegible] னிடத்து ஞானக்கண்ணினால் நிறைய[illegible] வடிவங்கொண்டு தடாதகைப்பிராட்டியா[illegible] கித் தோன்றி நின்றனர். அப்பொழுது [illegible] மும், மூன்றும் பிறையைத் தரித்த செவ்வானத்தை[illegible] சடையும் காளகண்டமும் தெரிசித்த உக்கிரகுமார பாண்டியன் [illegible] போடு பணிந்தெழுந்து பரவிய பெரிய அன்புந் [illegible] அஞ்சலி செய்தேத்தித் தரையிசை நடந்து செல்ல[illegible]

பஞ்சதுந்துபிகளும் ஆரவாரிக்க, சிவகணங்கள் வணங்கிச் சூழ. வேத கீதங்கள் அஷ்டதிக்கினுர் ததம்பித் தாக்கத் தேவர்களெல்லாந் துதிக்க ஆகாய மார்க்கமாக வந்து ஆலயத்தைச் சார்ந்தார். அப்போது அஞ்சலிசெய்து சேவித்து அருகாக வந்த அரசன் ஆலயத்தையடைந்து வணங்கி விடைபெற்று மாதர்கள் அட்டமங்கலந் தாங்கப் பார்த்து மேகங்கள் தவழா நின்ற சிகரங்களையுடைய அரண்மனையிற் புகுந்து வளைந்த மதில்சூழ்ந்த மதுரையையும் விளைகின்ற வயல்களையுடைய நகர முதலிய எல்லாவற்றையும் வெள்ளியம்பலத்துள் திருநடனஞ் செய்கின்ற நடராஜனுக்கே சேர்த்து உலகுக்கெல்லாம் ஆதாரமாக விருந்தனன்.

கடல்சுவற வேல்விட்ட படலம் முற்றிற்று.

---

பதினுன்காவது

# இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

மின்னவிர் மணிப்பூண் மார்பன் வேலையை வேலால் வென்று
பொன்னவிர் வாகை வேய்ந்த புகழுரை செய்தே நாக
நன்னக ராளி செம்பொ னகைமுடி சிந்த வந்த
மன்னவன் வளைகொண் டோச்சி வென்றதும் வகுத்துச் சொல்வாம்.

**உரை:** மின்னலைப்போலும் விளங்குகின்ற இரத்தின மிழைத்த ஆபரணத்தை யணிந்த மார்பையுடைய உக்கிரகுமாரபாண்டியன், கடலைத் தமது வேலால் வென்று அழகு பொருந்திய வெற்றி மாலையைத் தரித்த புகழைச் சொன்னோம். இனிச் சுவர்க்கலோகத் தரசனாகிய இந்திரனுடைய அழகிய பொன்முடி சிந்தும்படியாக அந்த உக்கிரகுமாரபாண்டியன் சக்கராயுதத்தை யெறிந்து வென்ற திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

உக்கிரகுமாரபாண்டியன் அரசு செய்திருக்கும் நாளில் நவக்கிரகங்கள் மாறி மழை பெய்யாது மறுப்பப் பயிர்கள் விளைவின்றிப் புல்விளது தலைகளுந் தீய்ந்து அழகிய மூன்று நாடும் வறுமையாற் றுன்பமடைய, மூவரசர்களும் அந்தத் துன்ப நீங்கும்பொருட்டு அகஸ்தியர் வசிக்கின்ற பொதிகமலை சென்று அகஸ்திய முனிவரைக் கண்டு தங்கள் நாட்டில் மழையில்லாமையால் துன்பமுற்ற செய்தியைச் சொல்லப் பரமசிவனுக் கன்பராகிய அம் முனிவர் கிரகங்களின் நிலையைக் குறித்துப் பார்த்து இனி மழையில்லை; யாதினுலென்றுல், சூரியன் செவ்வாய்க்குமுன் செல்லச் சுக்கிரன் பின்பு சென்று நடக்குஞ் செய்கையால், கடலாற் சூழப்பட்ட வுலகில், பன்னிரண்டு வருஷம் மழை யெய்யாதென்று நூல்கள் சொல்லுகின்றன. ஆதலால் மழை

பெய்விப்போனாகிய இந்திரனிடத்திற் சென்று கேளுங்களென, மூவரசர்களும் யாங்க ளிந்திரனிடத்தில் எவ்வாறு செல்வோமென. அதற்குக் குறுமுனிவர் சோமவாரவிரதம் நோற்று வெள்ளி மன்றவ னருளைப் பெற்று ஆகாயமார்க்கமாகச் செல்லுங்களென்று சொல்லி, அந்நோன்பின் விதியை அவர்க்குச் சொல்லத் தொடங்கினர்.

உத்தமமாகிய தேவர்களுக்குள்ளே பரமசிவன் உத்தமனானவன் உத்தமமாகிய சத்திகளுக்குள்ளே உருத்திராணி யுத்தமியாவள்; உத் தமமாகிய விரதங்களுக்குள்ளே சோமவார விரதம் உத்தமம். இப் படிப்பட்ட சோமவார விரதம் மந்தரம், காசி முதலிய பதிகளிலிருந்து நோற்றதினாலே யுண்டாகும் பலனிலும் மதுரையிலிருந்து நோற்றிடில் கோடிபங்கு அதிகமாம். இந்தச் சோமவார விரதம் அதிகமென்பது யாதினாலென்றால், சோமசுந்தரக் கடவுளுக்குரிய வாரமாதலால் அதிக மாகும். சூரியனிடத்துச் சந்திரனுன்றிய சோமவார விரதம் நோற் பவர்க்கு முன்சொல்லியதற் கதிக பேறுண்டாகும். இதனினும் நீதி யாற் சம்பாதித்த பொருளைக் கொண்டு அவ்விரதத்தை நோற்பவற்கு ஒன்று அனந்தமாக வளரும். நன்மைமிகுந்த இவ்விரதத்தை நோற் கத் தொடங்குநாள் யாவையெனில்: கார்த்திகைமாதம் மார்கழிமாதம் இவற்றிலும், அல்லது இரட்டிய தெரிசனஞ்சேர்ந்த மலமதி யொழித்து மற்றை மதியிலும் முந்தைபக்கத்தில் ஆதிவாரத்தில் இரவில் புசியாம லும், அயலிடத்தில் நித்திரை செய்யாமலும் இருந்து விடியற் காலையி லெழுந்து சோமசுந்தரக் கடவுளைச் சிந்தித்து, அன்றைத்தினஞ் செய் யத்தக்க கடனை முறையாக நிறைவேற்றிக் காம முதலிய குற்றங்கள் தன் மனதிலேருது நீக்கி பொற்றாமரைத் தீர்த்தத்தை யடைந்து கையில் பவித்திரந்தரித்து மனோவாக்குக்காய மொருமிக்கச் சங்கற்பஞ் சொல்லிச் சோமசுந்தரக் கடவுளை நினைத்து, உலகத்திலுள்ள தீர்த்தங் களிலெல்லாம் மூழ்கிய பலனை இத்தீர்த்தத்தி லுறுதியாய்த் தர வேண்டுமென்று தீர்த்தத்தில் மூழ்கித் தேகத்தில் திருவெண்ணீறு தரித்து, உருத்திராக்ஷமாலை விளங்க விதியோடு தரித்து வெள்ளை-மந் தாரம் - முல்லை - மல்லிகை - வெடிவாய்ச்சாதி - இருவாட்சி முதலிய வெள்ளிய மலர்களைக்கொண்டு கணபதியை முன்னர்ப் பூசித்து அவரை யாசித்துச் சங்கற்பஞ் சொல்லி ஆலயத்துட் சென்று உச்சி மேல் பன்னிரண்டு விரலுக்கு மேலுள்ள சத்திய ஞானானந்த தத்து வத்தை நினைத்துத் தானிறுவிய வடிவத்தை யுள்ளத்திற்கொண்டு பிரு திவி தத்துவமுதல் சிவதத்துவமீறான அத்துவித லிங்கத்தை ஆசன மூர்த்தியாகிய மூலவித்தை நூலின்விதியினாலும்மற்றவையாலும் பூசை செய்க. அவ்வாறு பூசை செய்யும்போது பஞ்சாமிர்தம் - பஞ்சகௌவி யம் - பஞ்சகனிகள் - செந்தேன் - சந்தனக்குழம்பு - புட்பநீர் - இளநீர் இவற்றா லபிஷேகஞ்செய்து, அழகிய வெண்பட்டுச் சாத்திக் கருப்பூரச் சுன்னம்-சந்தனம் வாசனைபொருந்திய மல்லிகை முதலிய வெண்மலர் மாலைசாத்தி இரத்தினாபரண முதலிய ஆபரணங்கள் தரித்துத் திருவடி

முதலிய அவயவத்தைப் பூசித்து மீனாட்சியையு மவ்வாறு ஈசனை நந்தெழுத்தைப் பெண்பாற் கிசைய வுச்சரித்து, பானியமும் நிவேதனஞ் செய்து, வாசனை பொருந்திய தாம்பூலந் தந்து, தூபமும் தீபமும் எண்ணிக்கையால் சுற்றி, கண்ணாடி முதலிய மற்றும் புண்ணியன் திருமுன்னர்க்காட்டி, வில்வத்தாற் பூசைசெய்து, புராந்தகனது இச்சா ஞானக் கிரியையாகிப் போந்த வில்வ மரத்தினடியி லடைந்து மூன்றுநாள் ஆகார நித்திரையின்றி ஹர ஹரவென்று முழக்கஞ் செய்வோருடைய பெரிய பஞ்சமா பாதகங்களும் மற்றப் பாதகங்களும் தீருமாதலால், வில்வம் விசேடமாகும். அவ்வில்வம் மடங்கி இகழ்சுருங்கல் வாடியுலர்ந்தது, மயிர்ச்சிக்குண்ணல், சிலம்பிக்கூடு, புழுக்கடி முதலிய குற்றமிருப்பினும் தோஷமில்லை, உத்தமமாகும். அவ்வில்வத்தைக் கரத்திற்கொண்டு ஈசனது நாமமாயிரமுஞ் சொல்லி அருச்சித்துநின்று, அடியேன் செய்யுங் குற்றங்கள் நாளுக்கு நாள் அநந்தமாகும். கொடிய விஷத்தை அமுதமாகக் கொண்டருளிய பெருமானே! அக்குற்றங்களையும் குணங்களாகக் கொண்டருளி. உலகத்தில் இன்னபடியென்று தெரிந்தெழுதுதற்கரிய திருவுருவத்தையுடைய உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய கருணைக் கடலே! காத்தருளுவீராக வென்று தமது முடிகள் பூமியிற் ஸ்ரேயத் திருவடியில் விழுந்து, மூன்று தரம் பிரதட்சணஞ்செய்து, வலியமனமானது கறைய நின்று, வேண்டிய வரங்களைக் கேட்க, நல்ல கலியாணப்பேறும, பிள்ளைப்பேறும், நல்ல வாக்கும், கல்வியும், பொன்னும், மனதுக் கினிய போகங்களும், பகைவரைச் சயித்தலும், அரசும், மற்றும் எண்ணியவைகளெல்லாம் தருவர். மூலகாரணமாகிய இவ்விலிங்கத்தைத் தீண்டப்படாத வேத முணர்ந்த வேதியர் முதலானவர்கள் இஷ்டலிங்கத்தை இந்த விதியால் அர்ச்சித்துச் சொல்லிய விரதத்தை நோற்கவேண்டும். அர்ச்சனைக்குரிய ரல்லாத சாதியார் பொருளுணர்ந்து ஆதிசைவரைக் கொண்டு பூசை செய்விக்க வேண்டும்.

ஒப்பில்லாத இந்தச் சோமவார விரதம் ஐந்து வகையினை யுடையது. அவை யாவையெனில்: மத்தியானத்தில் உணவில்லாமலிருத்தல், இரவி லுணவில்லாம லிருத்தல், இவ்விருபோதும் உண்ணாதிருத்தல், உறங்காதிருத்தல், சிவார்ச்சனை நாலு சாமத்திலுஞ் செய்தல் என்று சொல்லாநின்ற இவ்வைந்தும் ஒன்றினுக்கொன்று அதிகமாம். இவ்விரதங்களை நோற்குமளவு, ஒரு வருடம் - இரண்டுவருடம்-மூன்று வருடம்-பன்னிரண்டு வருடம்-ஆயுள் நாளளவுமாம். தன்னுயுளளவை யெண்ணி நோற்பவர் முன்னர் உத்தியாபனஞ் செய்து நோற்க வேண்டும். அவ்வருடக் கட்டளைக் கிறுதி கழிப்பது உத்தியாபனம், மடலவிம்மாலை, மண்டபங் குண்டமண்டலம் வகுத்து, உமாபதியை ஒளிபொருந்திய முப்பது கழஞ்சு வெள்ளியால் அழகாக நிருமிதஞ்செய்து உதயகாலையில் ஆசாரியன் சொல்வழி நித்திய கடனை முடித்து உச்சிமுத லந்திவரையில் புராணநூல் கேட்டு, மாலை முதல்

சாமமோர் நான்கும் உமாபதியைப் பூசைசெய்க. அப்பூசனை முடிவில் நூற்றெட்டுதரம் மூலமந்திரத்தை யுச்சரித்து, முறையினு லாகுதி முடித்துப் பின்பு ஆயிரநாமத்தையுஞ் சொல்லி, ஆயிரம் வில்வத்தைக் கொண்டு நாலுசாமமுஞ் சாத்தி, நல்ல ஸ்ரீ பஞ்சாட்சரத்தால் பஞ்சாக்ஷர வுருவமாகிய நாதனுக் கருக்கியங் கொடுத்து, அளவற்ற மூலமந்திரங்களாலும் மற்ற மந்திரங்களினுலும் ஒளியினையுடைய அக்கினி வளர்த்தி, ஓமஞ்செய்து, பூரணுகுதி செய்து, முடிவில்லாத கடவுளினுடைய வேள்வியை முடித்து, விடிந்தபின்பு நித்திய கர்மங்களை முடித்துப் பதின்மூன்று வாழையிலையில் வெள்ளிய அரிசி யிட்டு, இனிய நல்ல காய்கறிகளோடு பரப்பிப் பசுவின் பாலை நிறைவித்த பதின்மூன்று குடம் அந்த அரிசியின்மேல் வைத்துச் சிவனடிக்குரிய அன்பினையுடையராகிய அந்தணர்களை வருவித்துக் காதிலே அணியத்தக்க ஆபரணங்களும் அழகுபெற வணிவித்து, அவர்களை அன்போடு சிவனுக மதித்து, அருச்சனைசெய்து, அரிய தக்ஷணையோடு பாதத்தி லணியத்தக்க காப்பு, விசிறி, குடை, வஸ்திரம் முதலிய மேலான பல தானங்களைச் செய்து, பின்பு குருவைப் பத்தினியோடு ஆசனத்திலிருக்கச்செய்து, பொன்மயமான வஸ்திரம் - காதணி - கையணிகளு மணிந்து, மலரினு லருச்சனை செய்து, பரமசிவத்தை யடைந்து பூசனைசெய்த வடிவத்தோடு பொன் - பூமி - பதாதிகள்மற்றவையும், கொம்பிற்பூண அணிபுனைந்த கோதானமுஞ் செய்து, இவ்வாறு நிறைவேற்றி, ஆசானுத்தரவால் சிவனடிக் கன்பரோடும், ஒக்கலோடும் இருந்தமு தருந்துதல் தகுதியாகும்.

இவ்விரதத்தை முன்னர் திருமால்-பிரமன் - இந்திரன் முதலாகிய தேவர்களும், பதினெண் கணத்தரும், மனிதரும், அநுட்டித்துப் பெறுதற்கரிய போகத்தையும், வீட்டையும் அடைந்தார்கள். இவ்விரதத்தை நோற்பவர் பகையுந் துயரும் தீர்ந்து, ஆயிரம் பிறப்பில் தாஞ்செய்த தீவினை நீங்கி, எடுத்த தேகத்தில் சிவகதியடைவர். இவ்விரதத்தைச் சொன்னவர்களும், கேட்டவர்களும், மனைவியரும், மக்களும் பந்துக்களும் இன்பத்தோடு வாழ்ந்து தேவவருடம் பதினுலும் இந்திரன் பதத்தில் வீற்றிருப்பாரென்று அகஸ்தியமுனிவர் சொல்லிய முறைப்படி சோமசுந்தரன் விரதத்தை நோற்பராகி மூன்று அரசர்களும் அம்முனிவரிடத்து விடைபெற்றுச் சென்று, பொற்றாமரையில் மூழ்கிச் சோமசுந்தரக்கடவுளைப் பூசித்து வரம்பெற்று ஆகாயமார்க்கமாகச் சென்றுர்கள். இந்திரன் அது தெரிந்து அம் மூவருமிருக்க வேறே மூன்று சிங்காசனம் வரவழைத்துத் தனது சிங்காதனத்தின் கீழேயிட்டு வைத்தான். ஆகாய மார்க்கமாக வந்த மூன்றரசரும் பொன்னுலகமடைந்து இந்திரனிடத்துச் சென்றுர்கள். சென்ற மாத்திரத்தில் சேரனுஞ் சோழனும் இந்திரன் காட்டிய ஆசனத்தில் இருக்கப் பாண்டியன் இந்திரனிருந்த ஆசனத்திலேறி அவனேடு சமமாக வீற்றிருந்தான். இந்திரன் அதைக் கண்டு பொருமையடைந்து தனக்

குக் கீழேயிருந்த அரசர்கள் முகத்தைப் பார்த்து, உபசாரஞ் சொல்லி நீங்கள் இங்கு வந்த காரணமென்னென? இந்திரனே! எங்கனாட்டில் மழையில்லாமையால் வந்தோமென, அதற்கு இந்திரன் மகிழ்ந்து அவர்கள் நாட்டில்மட்டும் மழை பெய்யும்படி செய்து, அழகுமிகுந்த ஆபரணங்களும் வஸ்திரமும் வெகுமானமாகக் கொடுத்து, நீங்கள் போய் வாருங்களென்று அனுப்பி, அவர்கள் போனபின்பு இந்திரன், பாண்டியன் தன் சிங்காதனத்தில் தன்னோடு சமமாகத் தருக்கோடிருக்கின்றதையும், தனக்கு மழை வேண்டுமென்று கேளாம லிருப்பதுங் கண்டு, காரணந் தோன்றாமல், ஒரு விநயத்தை ஆலோசித்து, அவனுக்கு வெகுமானஞ் செய்கிறவனைப் போல, அளவிறந்தோரால் தாங்கப்பட்டுப் பாண்டியனது மலையையொத்த தோளினது ஆற்றல் கெடும்படியான ஓராரத்தைக் கொடுத்தான், அதைப் பாண்டியன் மாலைபோல் வாங்கிக் கழுத்திற் றரித்துக்கொண்டான். அதைக்கண்ட இந்திரன் மிகுதியு மதிசயப்பட்டு, இன்றுமுதல் பாண்டியனே! உன்னை ஆரந்தாங்கு பாண்டியனென்று இப்பூமண்டலத்தார் மதிக்கவென்று சொன்னான். அதைச் சிறிதுமெண்ணாது அங்கு நின்று இறங்கிப் பாண்டியன் தன் நகரம் வந்து சேர்ந்தான். பின்பு இந்திரன் ஆக்ஞையால் அவ்விரண்டரசர்களது நாடும் மழைவளம் பெருகியது. பாண்டியனாடு மாத்திரம் முன்போலவே யிருந்தது.

அவ்வாறிருக்கின்ற காலத்துள் ஒருநாள் பாண்டியன் வேட்டையாடும் பொருட்டு ஆகாயத்தை யளாவிய பொதியமலையில் சந்தனச் சாரலில் சென்று, அவ்விடத்திலுள்ள யானை, சிங்கம், பன்றி, புலி, கரடி, மான் முதலிய தீயமிருகங்களை வேட்டையாடி அவற்றைக்கொல்லுங்காலத்தில், அருவி நீரையுடைய அம்மலையில், புட்கலாவருத்தமுதலிய நான்கு மேகங்களும் இறங்கி மேய்தலைக்கண்டு, அரசனானவன் அம்மேகங்களைப் பிடித்து யானைகளைப்போலத் தளையிடுவித்துத் தன் வேட்டையில் அகப்பட்ட யானைகளைப்போலக் கொண்டுபோய்ச் சிறைச்சாலையி லிடுவித்தான். இந்திரன் அச்சமாசாரத்தைக் கேட்டு அக்கினியைப்போற் சீறிக் கடிய யுத்தத்தைக் குறித்து நினைத்து, வளைந்த கடல் வறக்கும்படி வேல்விடுத்ததும், கனமான ஆரத்தைத் தாங்கிய செருக்கும் மேகத்தைத் தளையிட்ட தருக்கும் நோக்கி, இவ்விடத்து ஒரு மனிததேகத்துக்கு இவ்வளவு வலியேதென்று, மிகுந்த மானமானது மேலிட்டுப் பாண்டியனது மதுரைப் பட்டணத்தைச் சூழ்ந்துகொண்டான். ஒற்றர்கள் அதனைக் கண்டு ஓடிப்போய் பாண்டியனை வணங்கி, நமது மதுரைப் பட்டணத்துப் புறத்தில் தேவர்களது சேனைகள் சூழ்ந்தன என்று சொன்ன மாத்திரத்தில் கோபமும் மானமும் மேற்கொண்டவனாகி சிம்மாசனத்தினின்று மிறங்கி மந்திரியை நோக்கித் தமது சேனைகளை விரைவில் யுத்தசன்னத்தமாகும்படி உத்தரவுசெய்து, தங்கள் யானைமீ தேறிக்கொண்டு விசாலமாகிய காவலையுடைய பட்டணத்தைக் கடக்குமுன்னே, வானவர் நெருங்கி ஆர

வாரித்துப் பல வாயுதங்களை யெடுத்துப் பாண்டியன் சேனைமீது வீசி யுகாந்த காலத்திற் சொரியும் மழையைப்போல பல பாணங்களை வில் லிற் கோத்து எய்தனர். அதனைப் பாண்டியன் சேனைகள் கண்டு, கோபித்து ஆரவாரித்துப் பலவிதமான படைக்கலங்களைக் குவை குவையாக வெடுத்துத் தேவர் சேனைகளின்மேல் தூர்த்தனராகி, அநேகபாணங்களை வில்லிற் கோத்துச் சோனைமாரிபோல அவர்கள் தேகத்தை மறைத்தார்கள். அதனால் தேவர்களிற் சிலர் தாள்கள் தறித்தன. சிலர் தலைகள் உடைந்தன. சிலர் தோள்கள் துணிந்தன. உதிர நீர் கடலிற்போய்ப் பாய்ந்தது. அக்களத்தில் பூதங்கள், கூளி கள், பருந்துகள் நெருங்கி வந்தன. இந்திரன் சேனைகள் முறிந்து போயின. அப் போர்க்களத்தில் குறைத்தலைப் பிணங்களாடின. போர்க்கள மழிந்தனவென்று பூதங்கள் பாடின. கூளிகளெல்லாம் துர்க்கையின் தாளைத் தலையிற் சூடின. பிணக்குவைகள் அண்டத்தை முட்டும்படி இரத்தவாருனது பூமியை மூடின. இந்திரனனவன் தனது வீரச்சேனைகள் மாண்டதைக் கண்டு அக்கினியைச் சொரியுங் கண் ணினனுய்ப் பஞ்சின் முன்னெரி போலப் பதைபதைத்துப் பாண்டி யனைத் தேவாஸ்திரங்களால் வெல்லக் கருதிப் பாண்டியன்மீது சூரி யாஸ்திரங்களைப் பிரயோகித்து ஆரவாரித்தான். அதனைப் பாண்டி யன் சந்திராஸ்திரத்தைப் பிரயோகித்து அவித்தான். இந்திரன் சிங் காஸ்திரத்தை விட்டு ஆரவாரித்தான். அதனைப் பாண்டியன் சரபாஸ் திரத்தை விட்டு அடக்கினுன். இந்திரன் மோகனுஸ்திரத்தை விட்டுக் கர்ச்சித்தான். அதனைப் பாண்டியன் ஞானஸ்திரத்தால் ஒழித்தான். அது கெட்ட பின்பு, இருவரும் மல்லயுத்தம் செய்யத் தொடங்கினர் கள். அவ்விருவரில் இந்திரன் பாண்டியன்மீது வச்சிராயுதத்தை வீசி ஆரவாரித்தான், பாண்டியன் கையிலிருந்த வளையைக் கழட்டி விரை வில் விடுத்தனன். அது வச்சிராயுதத்தைப் பொடிப்படுத்தி, இந்தி ரன் மகுடத்தைத் தள்ளிச் சிதைத்தது. சிதைத்த மாத்திரத்தில் நாணிப் பயந்து இந்திரன் ஓடிப்போய் சூரபதுமன் முதலிய அசுரர் களை யழித்த முருகக்கடவுளை யொத்த வல்மையுடைய இக்காளை எடுத்தெறிந்த இந்த நேமியானது நமது தலையைச் சிந்தாது மணிமுடி யைச் சிந்தியது சோமசுந்தரக் கடவுளினது பூசையின் பலனென்று பின்னும் போர் செய்வதற்காற்ருனகி ஓடிப் பொன்னுலகத்தை யடைந்து, பின்பு பாண்டியனுடைய நாட்டுக்கெல்லாம் மழை பெய்யும் படிச் செய்வேன். மேகங்களுக்கிட்ட தளையை நீக்கித் தரவேண்டு மென்று பாண்டியனுக்கு ஓலை யனுப்பினுன். அவ்வோலை கொண்டு வந்த தூதன் பாண்டியனது திருவடியில் வணங்கி ஒடுங்கி நின்று ஓலையை நீட்ட, அச்சபையி லுள்ளானெருவன் அவ்வோலையை வாங் கிச் சிங்கத்தை யொத்த பாண்டியன் முன்னர் வாசிக்கக் கேட்டுப் பாண்டியன் அவ்விந்திரன் சொல்லை நம்பாதவனுகி அம் மேகங்களைச் சிறையை நீக்கி விடாதவனுக விருந்தனன். அத்தருணத்தில் இந்திர னுக்கு நெடுநாளைய சினேகனுகிய ஒரு வேளாளன் அதற்கு நான்

பிணையென்று பாண்டியனிடத்து வந்து சொல்லி வணங்க, அப்பொழுது பாண்டியன் துன்பம் வந்து உயிர்க்கிறுதி வருங்காலத்தும் சத்தியந் தவருது காத்துக் குற்றங்களைப் போக்கி நடக்கும் நாலாமரபினனுகிய இவ் வேளாளனது உரையைப் பரமசிவனருளிய வேதம் போலக் கொண்டு சிறைக்களத்திலிருந்த மேகங்களை விலங்கைக் கழற்றி விடுத்தனன். அம் மேகங்களெல்லாம் யானைகளைப் போலத் திரும்பிப் போயின. பின்பு இந்திரன் ஏவலினுல் அக்கன்னி நாட்டில் மாதமும்மாரி பெய்து வாவிகளும் குளங்களும் ஆறுகளும்-மடுக்களும் நிரம்பித் தேனையுடைய நீலோற்பல மலருகின்ற வயலுஞ் செய்யும் செந்நெல்லும், கருப்பங் காடும், மலர்கள் மிகுந்த சோலைகளும் காவுகளும் பொலிவு பெற்றுச் சிறந்தன.

இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம் முற்றிற்று.

---

பதினைந்தாவது

## மேருவைச் செண்டாலடித்த படலம்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அண்டரஞ்ச வமருழ்ந்த வமரர்கோனை யரசர்கோன்
வண்டலம்பு மவுலிசிந்த வளையெறிந்து வெற்புறங்
கண்டவண்ண மின்னதன்ன கன்னிநாடன் மேருவிற்
செண்டெறிந்து வைப்பெடுத்த செயலுநன்கு செப்புவாம்;

உரை: போர் செய்த தேவேந்திரனைத் தேவர்க ளஞ்சும்படி உக்கிரகுமார பாண்டியன், வண்டுக ளொலிக்கும் வெற்றி மாலையைத் தரித்த மகுடஞ் சிதறச் சக்கரத்தை யெறிந்து முதுகுகாட்டச் செய்த திருவிளையாட லிதுவாகும். இனி அவ்வுக்கிரகுமார பாண்டியன் மகமேருவின்மேற் செண்டாயுதத்தை யெறிந்து அங்குள்ள சேம நிதியை யெடுத்த திருவிளையாடலையும் இனிது சொல்லுகின்ருேம்.

உக்கிரகுமார பாண்டியன் முன்னர் அகத்திய முனிவர் சொன்ன சோமவார விரதத்தை யன்றுமுதல் அனுஷ்டித்து வரும்போது அந் நன்மையால் நங்கையாகிய காந்திமதி வயிற்றில் நினைத்தற்கரிய ஜயத்தையுடைய ஒரு புத்திரன் பிறந்தான். ஜெயத்தைக் கொண்ட பாண்டியன் புத்திரனைப் பெற்ற காலத்துப் பல வாத்தியங்களும் முழங்கிப் பட்டணத்திலுள்ளார் களிப்படையும்படி திருவிழா முதலியவற்றைச் செய்து, இனிதாகவிருந்த பாண்டியன் ஜயந் தழைக்க, இந்திரன் ஜயந்தனென்னும் புத்திரனைப் பெற்ற காலத்தில் மனமகிழ்ச்சியை யடைந்ததுபோல மகிழ்வடைந்து, அப் பிள்ளைக்குச் சாதகாதி கர்மங்களைச் செய்து வீரபாண்டியனெனத் திருநாமஞ் சாற்றி, வேத முதலிய பல கலைகளையுங் கற்பித்து, யானையேற்றம்-

குதிரையேற்றம் - தேரேற்றம் இவை முதலியவும் பயிற்றுவித்து தநுர்வேத முதலிய ஆயுதங்களைப் பயில்வித்து, அகமகிழ்ந்திருக்கும் காலத்தில்,

நவக்கிரகங்கள் வக்கரித்ததால் மழையில்லாமல், நதிகளும் நீரின்றி வறண்டு உணவு விளைவில்லாமையால் உயிர்களெல்லாம் வாடும்படி பசியால் துன்புற, அரசனுக்கு அவற்றைக் காக்கும்பொருட்டு பொருளில்லாமையால் நாடெல்லாம் வருந்த, அப்பொழுது பாண்டியன், சபையிலுள்ள சோதிடரைப் பார்த்து இம்மழை யில்லாமைக்குக் காரணம் யாதென்று வினவ, கிரகங்களெல்லாம் சூரியனை யுற்று நோக்கி யிருத்தலால் ஓர் வருடம் மழை பெய்யாதென்று சொல்லினர். அதைக் கேட்ட பாண்டியன், பிள்ளைக்குற்ற நோயைக்கண்டு தாய் கலங்குவது போல, உயிர்களுற்ற நோயினால் வருந்தி, சந்திரசூடனாகிய சோமசுந்தரக் கடவுளிடத்துச் சென்று வணங்கி, இவ்வுலகம் இவ்வாறு வருந்துகின்றதே இதற்கென்ன செய்வேனென்று மிகவு மிரக்க முற்றுக் கண்ணீர் ததும்ப நின்று இரந்து வேண்ட, அதற்குக் காலகண்டராகிய சுவாமி காலத்தின் சமயங்களை நோக்கி இரக்கமில்லாதவர் போல ஒன்றுஞ் சொல்லாமலிருக்கப் பாண்டியன் அளவில்லாத துன்பக் கடலிலே வீழ்ந்து, அரண்மனையிற் சென்றான், அப்பொழுது சூரியன் அரக்கரது போர்க்கடலைக் கடந்து, மேற்கடலில் வீழ்ந்தான். பின்னர் பாண்டியன் தன் குடையின்கீழ் தங்கிய உயிர்களது பசி வருத்த மெல்லாம் தன் மனதிற் குடியாக விருத்தலால் முகம் வாடி, நீங்குதற்குரிய துன்பத்தில் மூழ்கிப் பூமியின்கண் துயின்றனன்.

அக்காலத்தில் வெள்ளியம்பலத்தி லெழுந்தருளிய பெருமான் சித்த வேடராய்ப் பாண்டியன் கனவில் வந்து வெற்றி பொருந்திய வேலாயுதத்தையுடைய அரசனே! இப்பொழுது மழை கிடையாது. அதனை வேண்டித் துன்பப்படாதே. மலைகளுக்கெல்லாம் அரசாயுள்ள மேருமலையினிடத்து ஒரு குகையில் அழிவில்லாததும் அளவில்லாததுமாகிய ஒரு சேமவைப்பு இருக்கின்றது. நீ அங்குச் சென்று அம்மேருவினது செருக்கடங்க உன் கைச்செண்டினாற் புடைத்து, உன் ஆக்ஞைக்குள்ளாக்கி அம்பொன்னறையை மூடிய பறையை விலக்கி நீ வேண்டுமளவுந் தோண்டி யெடுத்துக்கொண்டு, அப்பாறையை மீண்டு மடைத்து, நின்குறியிட்டு வரக்கடவாயென்று சித்த மூர்த்தியானவர் கூற பாண்டியன் விழித்துக்கொண்டு சூரியன் உதயமாகு முன்னர் காலைக்கடன்களெல்லாம் முடித்து அங்கயற்கண்ணி யின் கணவனை வலம்வந்து கடல்போன்ற சேனைகள் புடைசூழக் கோபுரவாயிலைக் கடந்து, கீழ்த்திசை நோக்கிப் பல வாத்தியங்கள் முழங்கச் சென்று, வெள்ளிய சாமரைகள் துள்ள, நான்மறையோர் ஆசீர்வாதஞ் சொல்ல, நாவலரேத்தப் பார்கிழிய திண்ணிய தேரைப் பாகர் நடாத்த, ஊர்ந்து பவளக்காற் பிச்சமும் பொற்காலையுடைய பலமணிக் கோவைகள் தொங்குகின்ற குடைகளும், முத்துக்கள்

கோத்த காலேயுடைய விருதுக்கொடிக்காடும்; யானைகளும் குதிரைகளும் பூமிதேவியின் சரீரம் துவளத் தேர்க்கூட்டங்களும், காலாள்களும் சூழ்ந்துவர, புலிக்கொடியும் விற்கொடியும் சூழ்ந்துவர, கயற்கொடியானது யானையின்மீது தோன்றிப் பெரிய ஆகாயத்தினது வயிற்றைக் கிழிக்க, தென்கடலானது வடபுலத்தை நோக்கிச் செல்வதுபோல, பாண்டியனது சேனைக்கடல் தண்டமிழையுடைய கன்னி நாட்டைக் கடந்து, காட்டு வழியைக் கொண்டுசென்று சோழராஜன் எதிர்கொண்டு செய்யும் உபசாரத்தை யேற்றுப் புன்னாட்டைக்கடந்து அதன்பின்பு தண்டகநாட்டைக் கடந்து தெலுங்கநாடகன்று, தாழை வேலியையுடைய கருநாடக நாட்டைக்கடந்து காடும் மலையும் நதிகளுங் கடந்து மாளவதேசத்தைச் சேர்ந்து, அங்கு நின்றெழுந்து நெருப்பு மயமான பாலைநிலவழியாகப்போய் விராடதேசத்தை யடைந்து, அநேகங் காடுகளும் மலைகளுந் தாண்டி, மத்திய தேசத்தைச் சார்ந்து அந்தப் பெரிய நாட்டை நீங்கிச் சிவனது சடையினின்றும் இறங்கிய தீர்த்தமாகிய கங்காநதியாற் சூழப்பட்ட ஸ்ரீ காசி நகரத்தையடைந்து, கங்கா நதியைக் கடந்து, கன்னெறியாகியமார்க்கமாக அநேக காதஞ் சென்ற பின்னர் சிங்கங்களும் யானைகளும் வழங்குதலால் மனிதர் வழக்கமில்லாத யிடங்களைக் கடந்து, ஆயிரம்யோசனை யளவுள்ளகாடு பொருந்திய குமரி கண்டத்தைக் கடந்து, அதுபோல எட்டுத் தடங்கெழு கண்டங்கொண்ட பாரதவருடங் கடந்து யாவையுமீன்றுடன்னை யீன்ற இமயபர்வதத்தைக் கடந்துபோக, மிகுந்த கிம்புருட கண்டஞ் சேர்ந்து, அதன்பின் ஏமகிரியை யடைந்து, அது பின் போகச் சென்று, அதன்பின் காணப்படுகின்ற அரிவருடத்தை யடைந்து, அதையுங் கடந்து அப்பாற்சென்று, நிடதமலையைக் கடந்து, பொன்மயமாகிய ஜம்புவிருக்ஷத்தின் கனியிருந்து சிந்தும் தேனாறு செய்கின்ற இளாவிரத கண்டத்தை யடைந்து, திரிபுரத்தை ஒருமிக்க அழித்த நாளில், வில்லாக வந்து நின்ற மகமேருவைப் பாண்டியன் கண்டு தனது சேனைகளை யெல்லாம் அதன்புறத்தில் நிறுத்திச்சென்று, தென்பக்கத்தில் சம்புநாவலின் கனியின்சாறு வலமாகத் தழுவியோடுகின்ற பன்னிரண்டுமாற்றுப் பொன்மயமாய் நிற்கும் பசிய புவனங்களையும் காடுகளையும் நோக்கிச் சுற்றிக்கொண்டு தென்பாகத்தில் வந்து சேர்ந்து அம்மலையரசனைப் பார்த்து, மலைகளுக்கரசே! எந்தையின் கையிலுள்ள வில்லே! உலகத்துக்காதாரமே! அளவற்ற ஆகாயத்திலூருகின்ற சூரியசந்திரரும், நவக்கிரகங்களும், நக்ஷத்திரங்களும் தழுவிச் சூழுகின்ற தெய்வதவரையே! மேலான தேவர்களுக்காலயமே! என்று பாண்டியன் அழைத்தலும் மலையரசன் வருதல் தாமதிக்க, அப்பொழுது பாண்டியன் நாணித் தன் கோபமும் மேருவின் செருக்குமாற ஆகாயத்தை யளாவிய அதனது சிகரத்தில் செண்டினாலடித்து நின்றான்.

அவ்வாறு அடிக்க அசைவற்ற மேருவானது அசைந்து, பொற்பந்துபோல் துடித்தது. சிகரபந்திகளுந் தேவர்கள் வசிக்கின்ற

மாடபந்திகளும் வெடித்தன. பானுமண்டலம் பிளந்து தூளாகிப் பூமியில் தெரித்தாற்போற் பலமணிகள் உதிர்ந்தன, அன்றியும் பக்கத்திலுள்ள மலைகளெட்டும், புறத்திற்றாழுவிக்கிடக்கும் செம்பொன்னேடைகள் ஓர் நான்கும், நான்கு கிடங்கரும், மலர்ந்து விசாலமான நான்கு மலர்ச்சோலைகளும், நான்கு விருக்ஷங்களும் சலித்தன. எசமானன் துன்பப்பட்டால் அவனை யடுத்தவற்குச் சந்தோஷமுண்டோ? பாண்டிய னடித்தபின்பு மேருவாகிய தேவன், தன் பக்கத்திலுள்ள மலைகளெட்டென்று சொல்லப்படைத்த வெண்டோளும், நான்கு முடியும், மேலேபொருந்தியவெள்ளிய பிரகாசத்தையுடைய ஒப்பற்ற குடையும், பெற்ற உருவத்துடனே எழுந்து நாணிவந்ததை, மிகுந்த கிருபையை யுடைய பாண்டியன் கோபந்தணிந்து பார்த்து, இவ்வளவு நேரந்தாமதித்ததற்குக் காரணமென்னென? அதற்கு மேருவாகிய தெய்வம் ஞானத்தையுடைய நம்பி! நீ கேட்பாயாக : அங்கயற்கண்ணியோடு பார்பாபரணத்தையுடை யபரமசிவத்தை, இந்தவுருவத்தைக்கொண்டு நாடோறுஞ் சென்று வழிபடுகின்ற நியமம் பூண்டேன். இன்றையதினம், ஐயனே! ஏந்திழை யொருத்தியின் காமமாகிய கடலில் மோகமாகிய சுழியிலகப்பட்டு, வெள்ளி மன்றுளாடிய பொற்பாதத்தை வழிபடுதல் மறந்து தாமதித்து நின்றேன். அனைய தீங்கின் நிமித்தத்தால் அடியும் பட்டேன். திருவடி பூசித்தலற்ற வரிய குற்றத்தை நீக்கினய். இதர்குக் கைம்மாறு என்னுற் செய்யத்தக்கது முண்டோ? அதுநிற்க, மணம் பொருந்திய பருத்த மலைபோன்ற மார்பை யுடையவனே! நீ வந்த காரியம் யாது? சொல்லுவாயென்று கேட்கப் பாண்டியராஜன் திரவியம் வேண்டி வந்தனனென்ருன். ஐயனே! உன்னுடைய தேசத்தோர்க் கேற்க உரைக்கப்படு மாற்றதாகிய செம்பொன் விளங்காநின்ற தித்திப்பாகிய மாமரத்தி னிழலிலே புதைபட்டுக் கிடக்கின்றது என்று, மேருவாகிய தெய்வந் தன் கையாற் சுட்டிக் காட்டியது.

அப்பொழுது பாண்டியன் பொன்னறைக்குச் சமீபத்திற் சென்று, அதனைமூடிய பாறையைநீக்கித் தனக்கு வேண்டியவளவு செம்பொன் எடுத்துக்கொண்டு, அறையை மூடிப் பின்னும் அதிலுள்ள பொன் தன்னதாகத் தன் முத்திரையிட்டு, மீண்டு தன்னுடைய சேனைகளோடு தென்திசை நோக்கிப் பாகன் தேரைச் செலுத்தப் பொன்னுகைவிளங்கும் மலையும் போகபூமியும் மற்றவைகளையும் கடந்து நன்மையைக் கொண்ட மனிதர்களிருக்கு நிலத்தில் வந்த காலத்தில், மாத்திமரும்-விராடரும்-மாளவரும்-தெலுங்கரும் ஆகிய அரசர்களும் மற்றவர்களும் தங்கள் தங்கள் பட்டணங்கடோறும் வரவு நோக்கித் தங்கள் சதுரங்க சேனைகளோடுஞ் சென்று உபசாரஞ் செய்யப் பெற்றுக் கன்னித்தமிழ் நாட்டைச் சேர்ந்தான். சேர்ந்து பொன்னுற் செய்த மதிலாற் சூழப்பட்ட செம்பொன் மயமான காவலையுடைய நகரத்திற்குச் சமீபனுகி, கோபுரத்தைக் கண்டு வணங்கத் தேரி

னின்றுமிறங்கி அஷ்டாங்க பஞ்சாங்கங்கள் பொருந்த வணங்கிஎழுந்து மதுரையைச் சார்ந்தான். சேர்ந்தவுடனே அறத்துறை அந்தணரும் துறந்தவர்களும் பரமசிவன் தாளைப்பற்றி மற்றவைகளை மறந்த சைவ பூதியரும் பரமனது கோயில் திறத்தின் வழிநிற்கும் தொண்டர்களும், திரண்டு வந்தெதிர்கொள்ள, முத்தினிறத்தினதாகிய வையை நதியை நீந்து நெடிய மதிலையுடைய வாயிலை யடைந்துள்ளே சென்று, வாசனை பொருந்திய அளகத்தையுடைய மாதர்கள் குங்குமம் பனிப்பச் சிந்திய மங்கலத்தையுடைய மறுகில் சென்று, வேதங்கள் சூழ்ந்திருக்கின்ற ஆலயத்துளடைந்து தங்கணாயகனைப் பிரதக்ஷணம் வந்து வணங்கி யெழுந்து துதித்து மீண்டு திங்களுருகின்ற சிகரத்தையுடைய செல்வத் திருமணிக்கோயிலை அடைந்து, பொன்மலைக் கடவுளீந்த புண்ணிய நிதியை நல்ல மலைக்கொப்பாகக் குவித்துப் பல குடிகளுக்கும் கொடுத்து அக்குடிகளைப் பாதுகாத்தும் பொதிய மலைக்குரிய அகத்தியன், தெய்வம், பிதுர்க்கள், ஒக்கல், விருந்து இவர்களைக் காத்துத் தருக்கினோடிருக்குநாளில் பஞ்சகிர்த்தியங்களையும் நடத்து மீசனுடைய ஆக்ஞையால் மாறுபட்ட கிரகங்களும் ஒழுங்காகச் செல்ல, பாண்டிய நாடெங்கும் மழைபெய்து மிகுந்த வளத்தைத்தர யாவரும் பிழைத்தலை யுடையவராகித் தழைத்திருந்தனர். உலகத்தை இம்முறையாகப் புரந்தளித்து ஆரம்பூண்ட பாண்டியன் தன் திருமகனுக்கு ஏழுலகமுமறிய வீரபாண்டியனென் றணிமுடி கவித்துத் தனதரசையளித்து நவ நிரதிசய பூரணவின்ப ஞானக்கண்ணை யருளிய மதுரைச் சிவனடி நிழலிற் பிரிவறப் பழைய தேஜசோடு நிறைந்து வீற்றிருந்தனன்.

மேருவைச் செண்டாலடித்த படலம் முற்றிற்று.

---

பதினொருவது

# வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்

---

எழுசீரடி யாசிரிய விருத்தம்

உலகம்பொரு தடந்தோ ளுக்கிரச் செழிய
 னுயரிய மேருமால் வரையைப்
பொலம்புரி செண்டாற் புடைத்துவைப் பெடுத்துப்
 போந்தரு ளடைந்தவா புகன்றும்
வலம்படு திணிதோள் வீரபாண் டியன்கோல்
 வழங்குநாண் மதுரையெம் பெருமான்
புலம்பொரு முனிவர் தேறநால் வேதப்
 பொருளுணர்த் தியதிறம் புகல்வாம்.

**உரை :—** திரண்ட கல்லைப்போலும் பெரிய புயத்தையுடைய உக்கிர குமார பாண்டியன் உயர்ந்த மகமேருமலையைப் பொன்னுலாகிய செண்டாலடித்து, நிதியை யெடுத்து அங்கு நின்று, மீண்டு சோம

சுந்தரக் கடவுளின் திருவருளைப் பெற்ற திருவிளையாடலைச் சொன்னோம். இனி வெற்றி பொருந்திய திண்ணிய தோள்களையுடைய வீரபாண்டியன் செங்கோல் செலுத்துங் காலையில் மதுராபுரியி லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுள், பஞ்சேந்திரியங்களையும் வென்ற கண்ணுவர் முதலிய முனிவர்கள் தெளிய, நான்கு வேதங்களின் உண்மைப் பொருளை யுணர்த்திய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

பிருதிவி முதலிய ஐந்து பெரிய பூதங்களும் தத்தம் நிலை திரிந்து பதினான்கா வடுக்கி வுலகொடும், அவன் மால் உம்பர்களது மேலான பதவிகளும் உதித்தபடியே ஒடுங்கும்படியான ஊழிகால முண்டாகச் செவ்விய பொருளைச் சொல்லுகின்ற வேதங்களும் அவ்வாறொடுங்கின போது, சூரியனுக்கு முன்பு மலராநின்ற தாமரைபோல் பரமசிவனது திருமுன் உலகம் மலர்ந்தது. அப்பொழுது முன்போலப் பின்னும் முத்தொழில் நடத்த பராபரன் திருவுளங்கொண்டு, போர் செய்தற்குக் காரணமான சக்ராயுதத்தையுடைய திருமாலைப் படைக்க அவரது நாபிக்கமலத்தில் வண்டுபோற் பிரமனுதித்து, மூவுலகத்தையும் வரன்முறையாகச் சிருஷ்டித்த காலத்தில், விஷத்தை யுண்டு தன்னைத் துதித்த வானவர்க்கு உயிர் கொடுத்த பரமசிவனது திருவாக்கினின்று பிரணவமுதித்தது. அதினின்றும் வேதம் பிறந்தன. அக்காலத்தில் நைமிசாரண்யத்தில் வசிக்கிற அருணிறைந்த முனிவர்களும், கண்ணுவர் கருக்கர் முதலிய மஹரிஷிகளுங்கூடி, அவ் வேதங்களின் பொருள் நிலை தெரியாது, உள்ளமும் முகமும் புலர்ந்தனராகியிருக்க, அப்போது இருண்ட மும்மல வலியை வென்றவராகிய அரபத்தர் என்னும் மஹரிஷி வந்தார். அப்படி வந்த மஹரிஷியை அங்கிருந்த மஹரிஷிகள் எதிர்கொண்டு வணங்கி வேறே ஆசனங் கொடுத்து உபசரித்த காலையில் அம்மறையவர் முனிவர்களை நோக்கி, நீங்கள் பந்தவேதனையும், விருப்பும் வெறுப்பும் நீங்கிய பண்பினையுடையவராயினர். அப்படிப்பட்ட நீங்கள் மனம் வேறுபட்டு முகம் வாடியிருக்குஞ் செய்தி யாதென? அதற்கம்முனிவர் மயக்கத்திற்குக் காரணமாகிய மாயை நீங்கினவனுகிய பரமசிவன் சொல்லிய வேதங்களைப் பயின்று அவற்றின் பொருளைச் சொல்லுகின்ற ஆசாரியன் இன்றி, இருளுண்டாகிய மனத்தை யுடையேமாக விருக்கின்றோம். ஐயனே! இதற்கென்ன உபாயமெனக் கேட்ட முனிவரை நோக்கித் தெளிந்த மனத்தையுடைய அரபத்தரென்னும் மஹரிஷியானவர், அவ் வேதங்களைச் சொல்லிய சிவபரஞ்சுடரே அருளுருவங் கொண்டு அவற்றின் பொருளையு முணர்த்துமன்றி, வேறே யென்ன வுபாயமிருக்கின்றது; சொல்லுங்களென்று சொல்லிச் செய்த தவத்தால் யாதேனும் பொருள் கிட்டுமே யன்றி வேறில்லை. அந்தத் தவமும் புண்ணியதலத்திற் செய்தாலன்றி சித்தியாகாது. அப் புண்ணிய தலத்தினும் பரிசுத்தத்தையுடைய சிவதலத்தினில் இயற்றில் பயனைத் தரும். அச்சிவ தலங்களிலும் அதிக புண்ணியதலத்திற் செய்யில், செய்கின்ற தவம் உடனே பயனைத் தரும்.

அந்தத் தகுதியான தலம் யாதெனில், உலகமும் அகிலமும் தன்னுடம்பான வித்தகன் சென்னிப் பன்னிரு விரலின்மேல் விளங்கிய தலம். அது ஜீவன்முத்தரால் அளவற்ற தானவர்கள் முனிவர்கள் முயன்று மாதவப் பயனடைந்து, மனத்திலுள்ள மாசகன்று வசித்தற் கிடமாமென்று அறநூல் சொல்லிய மதுரையாம். அந் நகரில் தெளிந்த ஆகாயத்தினின்றும் இறங்கிய ஒப்பற்ற இந்திர விமானத்தி லெழுந்தருளிய பரமசிவத்தின் அருகில் தென்பாகத்தில் முளைத்திருக்கின்ற பருத்த வடிவினையுடைய கல்லால விருக்ஷத்தினின்று நீங்காத முழுமுதலாகிய சிவத்தை வழிபடுகின்ற துறவோர்க்குக் கருணைமுக மலர்ந்து, அருங்கலை யனைத்தையும் தெளிவித்து விளங்காநின்ற அக் கடவுளே உங்கட்குத் தான் சொன்ன வேதத்தின் பொருளை யுணர்த்தும். ஆதலால், அந்நகரத்தில் அக்கடவுளின் திருமுன்பு அரிய தவமாகிய விரதங்களைச் செய்யுங்களென, அக் கடவுளினது அருளைப் போல்வந்த அம்மாதவன்பின். பரிசுத்தத்தையுடைய பெருமை பொருந்திய அம்முனிவர்களும் அங்கயற் கண்ணிபங்கனாகிய சோமசுந்தரக்கடவுள் வீற்றிருக்கின்ற மதுரைப் பதியிற் சென்று, ஆலயத்துட் புகுந்து, பொற்றாமரையில் மூழ்கிக் கரைகடந் துளவங்கடந்த அன்பு தங்களைத் தள்ள விரைவிற் சென்று, எட்டு வெள்ளை யானையினது பிடரியின் மேல் இருந்ததாகிய மேருமலைக்கொப்பான விமானத்தின் மேல் காணப்படுகின்ற கடவுளைக் கண்களாற் கண்டு, பேரின்பமாகிய சமுத்திரத்திலும் பூமியின்மீதும் விழுந்து, எழுந்து, கைகளைத் தலையின்மீது கூப்பிக் கரசரணங்கள் கம்பித்துக் கண்களினின்றும் அருவி நீர் பெருக வதின்மூழ்கி, வாய்குழறி பிரமனும் மாலும் இன்னமுந் தேருத காளகண்டத்தையுடைய வெள்ளியம்பலத்தில் திருநடனஞ் செய்கின்ற தேவநாயகனே! தேவர்கள் பிழைக்கும் பொருட்டு விடத்தையுண்டு, அமுதத்தை யவர்க்கருளிய உத்தமனே! போற்றி யென்றேத்தி, வேதத்தின் பொருளறியாதுள்ள மயக்கமடைந்து வாடுகின்ற எமக்கு, நீரே அந்த நிறைபொருளாகி நின்றீர், அதற்கு நீரல்லாற் பொருள் வேறு யாது? என்று இறைவனையும் இறைவன் பாகத்தி லிருக்கின்ற இறைவியையும் அம்முறையாக வேத்தி, முறையாக வலஞ் செய்து கல்லாலின் நிழலிலமர்ந்த மூர்த்திமுன் முனிவர்கள் வந்து, குளிர்ந்த பளிங்கை யொத்த திருமேனியும், பளிங்குமலையிற் பதித்த பவளத்தை யொத்த திருவடியும், சிவந்தமலர் போன்ற வாயும், முக்கண்ணும் தாமரை மலர்போன்ற நான்கு திருக்கரங்களும், வேத புத்தகமும், அமுத கும்பமும், உருத்திராக்ஷ வடமும், மெய்ஞ்ஞான முத்திரையும், தரித்திருக்கின்ற ஞானபோகன் முன் வணங்கி, எழுந்து துதித்து, வடநிழலி லமர்ந்த மறைமுதல்வனது ஞானத்தைத் தருகின்ற மநுவெழுத்தாகிய இருபத்திரண்டுந் திடமாக அரபத்தரால் தெளிந்து, கார்த்திகை மாதமுதல் மார்கழி மாதம் வரையில், தருப்பணம்-ஓமம் பார்ப்பன உண்டி. இவைகளை முப்போதுஞ் செய்து அடைவாக வுண்டு, நோற்கு மாதவர்முன் கல்லாலின் நிழலில் மோன

வடிவமாகிய முதற்குரவன், குற்றமில்லாத முப்பத்திரண்டு அவயவ விலக்கணத்தோடு பதினறு வயதான காளைப்பருவத்தை யுடைய மறையோனுகி, நீண்ட திரிபுண்டரம் நெற்றியிலுள்ள அக்கினிக் கண்ணை மறைக்கக் காணுகின்ற தகையினையுடையகண்டிகைசூழ்ந்து, தொங்குகின்ற காதில் அணிந்த குண்டலம் கௌவப்பட்டு பொன்னுலும் பல மணிகளாலு மியற்றிய ஆபரணங்கள் ஆகாயத்திற் சஞ்சரிக்கின்ற உதய சூரியனைக்கண்டு நகைத்து இருளையோட்ட, உத்தரியமாகிய வெண்பட்டு வலப்புறத்திலொதுங்க, வெண்மையாகிய முப்புரி நூலினேடு, முத்தமிடையிலே யிட்டுக் கோவைசெய்த உருத்திரரக்ஷ மணிவடம் வீசுகின்ற வொளியால், அடியார்களை மறைத்த மல பந்தமாகிய விருளையோட்டக் கண்டிகையணிந்த இருகரங்களிலும் இரண்டு தோளிலும் தரித்த மாலையானது விடத்தையுடைய வொளி பொருந்திய அரவாபரணத்தைப் பழிக்க, வெள்ளியவஸ்திரத்தாலாகிய கோவண மடித்துக் கட்டியதண்டில் அரிய பட்டிகை சுற்றப்பட்டு ஒளி மிக, பாதமாகிய மலரின்மீது வண்டுகள் பண்ணைப் பாடுவனபோல் அசையாநின்ற சிலம்புகள் சப்திக்க, அடியார்களுடைய உள்ளத்திலுள்ள மாசாகிய விருளைக்கெடுத்து அவர்கள் முடியில் சூட்டப்படுகின்ற தாமரைபோன்ற அடியின் புறத்தில் வெற்றி பொருந்திய வீர கண்டாமணி யொலிக்கக் குற்றமற்ற பவுத்திரம் வலதுகையிற் பிரகாசிக்க, ஞானநூலை யெழுதிய புத்தகம் இடக்கையிலிருந்து அழகு செய்ய, ஓதி யுணராமலறிந்து ஓலமிடுகின்ற வேதம் பாதுகைகளாகி இரண்டு பாதங்களாகிய மலர்களைத் தாங்க, தேனையுடைய தாமரைக்குள் சப்தியாநின்ற வண்டுகளின் ஒலிபோல நாவுமிதழும் புடைபெயர்ந்துள் எழாநின்ற வேதவொலி அடியார்களுடைய திருச்செவிகளாகிய வழியே சென்று, உள்ளமாகிய வயலிலே புகுந்து உவகையாகிய பயிரை வளர்க்க, குளிர்ச்சி பொருந்திய முத்தையொத்த பற்களையுடைய திருவாய் சிறிதரும்பப் பெரிய தவத்தையுடைய முனிவர்கள் காணும்படி வெளியே வந்து நாதமுடிவாகி அளவில்லாத நான்கு வேதங்களின் முடிவாகிய ஞானஸ்வரூபனய், எங்கும் பூரணமாக நிறைந்திருக்கின்ற புராணன் நின்றனன்.

வட்டமாகிய வெள்ளிய சந்திரனைக் கண்டு ஆரவாரிக்கின்ற சமுத்திரத்தைப்போல மாட்சிமை பொருந்திய சிட்டராகிய முனிவர்கள் காளைப்பருவத்தையுடைய தேசிக வுருவத்தை நோக்கி, நீங்காத சந்தோஷம் மேற்கொண்டு எமனைக் கோபித்த தாமரை மலர்போன்ற திருவடியைத் தங்கள் முடிக்கு அழகிய மலராகக் கொண்டு சேவித்து, அளவற்ற கலைகட்கெல்லா முறைவிடமாகிய வேதங்களின் வினைபொருளாகி நின்ற வேதியனே! சரணம் என்று துதித்து வணங்கிய அன்புபொருந்திய மனத்தினையுடைய முனிவரைத் தேசிகனுகிய கடவுள் நோக்கிச் செய்தற்கரிய தவத்தை யுடையீர்! உங்கள் விருப்பம் யாதென்று கேட்க, அவர்கள் வணங்கி அடியரேம் பிழைக்கும்படி

யாயும் உலகமெல்லாம் காக்கும்படியாகவும் அளவில்லாத வரத்தைத் தருகின்றவனே ! வேதத்திற்குப் பொருளருளிச்செய்ய வேண்டுமென் னக் கொடிய பாசங்களை நீக்குகின்றவனாகிய ஆசாரியன் அம்முனிவ ரோடு அழிவில்லாத லிங்கத்தின் முன் போய், வேதத்தின் பொருளைச் சொல்லத்தொடங்கி முனிவர்களே ! நீங்கள் கேளுங்கள், மிகுதியான அரிய வேதப் பொருள்களெல்லாம் இரகசியமாகும். இந்த வேதப் பொருளை யறிதலே கெடாத போகப்பயனுக்கும், வருத்துகின்ற பாச மாகிய பந்தத்தை நீக்குகின்ற வீட்டின் பயனுக்கும் கருவியாகும். உத் தமமாகிய சுயம்பு லிங்கங்களுக்குள் உத்தம்மான தகுதியையுடைய தாகி மேலாகிய தத்துவமாகும். இந்தச் சுந்தர சுயம்பு லிங்கமானது அழிவில்லாததாய் வேதங்களுக்கெல்லாம் நிதானமான பொருளை யுடையதாய், உண்மையானதாய்ப் பரிசுத்தமா யிரண்டற்றதாகிய சுயம்பிரகாசமாகும்.

அன்றியும், சாஸ்திரங்களைக் கற்றுணர்ந்த நல்லோர் நிறைபரா பரமென்றும், விஞ்ஞானமென்றும் நிராமயமென்றும், நூல்களாற் சொல்லப்படுகின்ற பரப்பிரமமாகும். இந்தப் பிரமத்தின் உருவமே ஏகமாகும். வேதமானது இதனது பொருளாகும். இந்தச் சுந்திர வடிவாய் இவ்விடத் துறைகின்ற சிவலிங்கமொன்றே யென்பார். ஆகையால், வேதமுமொன்றே அரிய அவ்வேதப் பொருளுமொன்றே. ஆனால் சாகையால் அது அநந்தமாகித் தழைத்தன. அச்சாகையெல் லாம் உவகையால் இவனையே துதிக்கும். உலக சிருஷ்டியாதி தொழில் நடத்தற்காக இந்த ஏகனாகிய பரப்பிரமத்தின் ஆக்ஞையால் பிரமன் முதலிய மூன்றுமூர்த்திகளாக அப்பிரமம் இருந்தது. அது பிரம னாகி, மூன்றுலோகத்தையும் படைத்த திருமாலாகி அவற்றை யள வில்லாமல் நிலைபெறச்செய்து முக்கணனாகி, அவற்றை யழித்து அம் மூவருக்குந் தலைவனாகி, மேலான ஆகாச சரீரியாய் முதலுமீறுமின்றி, அழிவில்லாத சோதியாகிய இந்தச் சுந்தர லிங்கத்தினின்றும், முதலில் ஆத்ம தத்துவமான பிரமன் பாகமும், நடுவில் விச்சாதத்துவமான விஷ்ணுவின் பாகமும், முடிவில் சிவதத்துவமான உருத்திரன் பாக மும் உதிக்கும். பேதப்பட்ட இம்மூன்றில் அளவில்லாத தத்துவங்க ளெல்லாம் உதிக்கும். இம்மூன்றினும் முறையாகச் சொல்லுதற்கரிய அகாரமும் உகாரமும் மகாரமும் ஆகிய அப் பிரணவம் உதித்திடும். இப்படிக்கு விந்து நாதத்தோடு உதிக்கா நின்ற விசாலமாகிய பிரண வத்தினின்றும் மூன்று பேதமாகிய பதத்தால் காயத்திரி பிறக்கும். இந்தக் காயத்திரி இரண்டு பேதமாகும். அந்தப் பேதம் யாதெனில், சமட்டி வியட்டி யென்று இரண்டாம். இவ்விரண்டும் இச்சித் தவைக்கெல்லாம் காரணமாகும். இத்தன்மையதாகிய இவை யிரண் டும், இவற்றுடைய அருள்வலியால் நான்கு வேதங்களையு மீன்றன. அந்த நான்கும் பின்னிவனது அருளினால் அளவில்லாதனவாயின. பிரணவமாகி மந்திரங்களும் அவ்வாறுண்டாயின. அப்பிரணவ

மந்திரத்தினின்றும் அகார முதலிய அக்ஷரங்களு முதித்தன. சொன்ன அவ்வக்ஷரத்தி னின்றும் சிவாகம நூலாகிய இருபத்தெட்டாகமங்களும் இந்தச் சிவலிங்கத்தின் நடுமுகமாகிய ஈசானியமுகத்தினின்றும் உதித்தன. கீழ்த்திசை முகத்தில் இருக்குவேதமானது இருபத்தொரு கிளையாகத் தோன்றிற்று. தென்பான் முகத்தினின்றும் இரண்டாம் வேதமாகிய எசுர்வேதம் நூற்றொரு கிளைகளோடு மெழுந்தது. வடதிசை முகத்தில் சாமவேதமானது ஆயிர முகத்தாலுதித்தது. குடதிசை முகத்தில் நான்கா மறையாகிய அதர்வண மானது ஒன்பதுருவோடு தோன்றி நடந்தது. அரியவேதம் நால்வகையாதலால் வருணங்களும் ஆச்சிரமங்களும் நான்கு வகையாம். அவ்வேதத்தின் தகைமையால் தருமகாண்டமும், யாகாதிகருமகாண்டமும் தோன்றின ; அந்த மறையும்; கருமநூலென்றும் ஞானநூலென்றும் இரண்டு வகையாம். கருமநூலானது இவனது அருச்சனைக்கு வேண்டிய காரியங்களை யுணர்த்தும், ஞானநூலானது இவனது உருவில்லா வுருவத்தை யுணர்த்தும். மரத்தினது வேருண்ட நீரால் கிளை தளிர்த்தாற்போல இம் முழுமுதலாகிய பரமசிவனுக்கு உண்பிக்கின்ற அமுது இவனுருவமாகிய தேவர்களுக்கும் பிறருக்கும் திருப்தியாகும். பரமனாகிய இவனது சகல நிஷ்களத்திருவுரு நித்திய நைமித்திகம் பிராயச்சித்தம் ஆகிய முத்தொழில்களுக்கும் உலகத்தார் விரும்பிய போகத்தையும் கதியையும் பெறும்படி இயற்றுகின்ற சிவார்ச்சனையாகிய வினைக்கும் காரணமாக விருக்கின்றது. இச்சிவலிங்கம் வேதம் பல முகங்களைக் கொண்டு அலறி வாயிளைத்து மயங்க வேறுபட்ட அகண்ட பூரணமாய் நிறைந்திருக்கின்ற பரப்பிரமமாகும். இச் சிவலிங்கத்தை நல்ல தருமநெறி வழாது செய்கின்ற பூசைமுறையினும், ஞானநெறியால் இப்பொருளை அருளினால் மயக்கற முயங்கும் அறிவினும் தெளியத்தக்கது. உங்களுக்கு நாமுரைத்த அறியவேதப் பொருள் பிறரா லறிதற்கரிதாகும். கருமத்தால் ஞானமுண்டாகும். அக்கருமத்தால் சித்தசுத்தி தரும். அதனாலே நீங்கியிருந்த சித்த சுத்தியைத் தருமம் நல்கும். அரிய அத்தருமத்தாலே சாந்தி யுண்டாகும். மாட்சிமை பொருந்திய அச்சாந்தியாலே அட்டாங்கயோகம் பிறக்கும் கிரியையாலும் - ஞானத்தினாலும் - சிவபக்தி-சிவபூசை சிவதரிசனம்-சிவலிங்க ஸ்தாபனம் செய்யில், பரமசிவனுக்குரிய அடியவர் பூசை, உருத்திர சின்னத்தைத் தாங்குதல் அரிய தேசிகனிடத்துப் பக்தி, இவை முதலிய யாவுந் தெரியலாகும். இம்மறை வழியால் வந்த மதங்களுக்கெல்லாம் வேதம் பிரமாணமாகும். அதன் வழியாகச் சென்று சொல்லா நின்ற தருமசாஸ்திரங்களெல்லாம் அவைகளுக்கு அனுகுணமாகும். இத்தன்மையாகிய முறையினால் ஸ்மார்த்தமென்று சொல்லப்படுவது. அந்த ஸ்மார்த்தஞ் சேர்ந்த துறைகள் வைதிகமென்று சொல்லப்படும். இந்தச் சுத்தமார்க்கத்தையே மேலாகச் சொல்லுவதாய்த் தெளிவைப் பெறுகின்ற போகத்திற்கும் வீட்டிற்கும் காரணமாகிச் சிவமயமாகின்ற வேதப் பொருளை மயக்கமற வுங்களுக்

குச் சொன்னேன். இந்தப் பொருளுக்குமேல் வேறு பொருளில்லை. இப்பொழுது நாம் உமக்குச் சொல்லிய இந்தப் பொருள்களெல்லாம் மயக்கமறத் தெளியக் கடவீர்களென்று பக்திவழி தவருத மாதவரது முதுகைக் கிருபையோடு தன் கையால் தடவிக் கிருபை முதிர்ந்து வந்தாற்போல் வந்த தேசிகனுனவன் இலிங்கத்துட் புகுந்து மறைந்தனன்.

வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம் முற்றிற்று.

---

## பதினேழாவது
# மாணிக்கம் விற்ற படலம்

---

கலிநிலைத்துறை

சுகந்த வார்பொழின் மதுரையெம் பிரான்றன் றுணைத்தாள்
உகந்த வாயது கண்ணுவ முனிமுத லோதும்
அகந்த லாதபே ரன்பருக் கருமறைப் பொருளைப்
பகர்ந்த வாறிது மாணிக்கம் பகர்ந்தவா பகர்வாம்.

உரை: நல்ல வாசனை பொருந்திய சோலைசூழ்ந்த மதுரையிலெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் இரண்டு திருவடிகளையும் விரும்பி ஆசையொழிந்த கண்ணுவர் முதலாகிய பேரன்பினையுடைய முனிவர்களுக்கு அரிய வேதத்தின் பொருளை யுணர்த்திய திருவிளையாடலிது வாகும். இனி மாணிக்கம் விற்ற திருவிளையாடலைச் சொல்லுகின்றேம்.

அக்காலத்தில் வீரபாண்டியனுக்குப் போகஸ்திரீகள் பெற்ற பிள்ளைகள் மன்மதனைப் போலவும் நெற்பயிருக்குக் களைகள் போலவும் வளர்ந்தார்கள். அப்படி இவர்கள் வளரப் பின்னும் வீரபாண்டியன் பட்டத்துக்குத் தகுந்த பிள்ளை வேண்டுமென்று தானும் தன் குல பத்தினியும் அங்கயற்கண்ணி மணாளனுகிய சோமசுந்தரக் கடவுளைக் குறித்து அஷ்டமி, சதுர்த்தசி, சோமவார முதலான விரதங்களை அநுஷ்டிக்க, அப்போது சோமசுந்தரக் கடவுளின் திருவருளாலே சிறிது காலத்துக்குப் பின் அருந்ததிபோலும் கற்புள்ள தேவி வயிற்றிலே. ஆலம்வித்தின் முளைபோல, உலகமெல்லாம் ஒரு குடை நிழலில் ஆளும்படி ஒரு புத்திரன் பிறக்க, அந்தப் பிள்ளைக்கு மிகுந்த சந்தோஷத்துடனே சாஸ்திரப்படி ஜாதகர்ம முதலான சடங்குகளெல்லாம் முடித்து, அந்தப் பிள்ளை வளருங்காலத்தில், வீரபாண்டியன் வேட்டையாடப்போய் விதிவசத்தாலே புலியால் கொல்லப்பட்டு சுவர்க்க லோகத்தை யடைய, அச்சமாசாரத்தை மதுரையிலுள்ள பெண்களெல்லாருங் கேட்டுக் கையால் மார்பி லடித்துக்கொண்டு, கொங்கையிலணிந்த சந்தனமழிய கண்களில்முத்துமுத்தாய் நீரொழுக அழுது பிரலாபிக்கிற சமயத்தில், இறந்த அரசனுடைய போகப் பெண்

கள் பெற்ற பிள்ளைகளானவர்கள், இதுதான் சமயமென்று யானை குதிரை மற்றும் ஆபரணங்களையும், திரவியங்களையும் இராஜ முடியையும் களவுசெய்து, மந்திரிப் பிரதானிகளுக்குத் தெரியாமல் ஓடி ஒளித்துக் கொண்டார்கள்.

பின்பு வீரபாண்டியன் உத்திரவின்படி நடந்துவந்த மந்திரி முதலானவர்கள் குலபத்தினி குமாரனைக்கொண்டு இறந்த அரசனுக்குச் செய்யவேண்டிய கருமங்களெல்லா முடித்துப் பின்பு அந்தப் பிள்ளைக்குப்பட்டங்கட்ட எண்ணங்கொண்டு, பொக்கிஷசாலையிற் புகுந்து நவரத்தின கிரீடத்தைத் தேடிக் காணுமல், திரவியங்கள் முதலிய சில பொருள்களையுங் காணுமல், திகைத்து வாடி, மனேவியாதியால் வருந்திக் கிரீட முதலிய பொருள்களை மாற்ருராகிய புத்திரர்கள் கொள்ளையடித்துக்கொண்டு போனுர்களென்று தெரிந்து, வேறே கிரீடஞ் செயலாமென்ருல் விலை அதிகப்படுமென்றும், உயர்ந்த ரத்தினங்கள் கிடைக்காவென்றும், அரசனில்லாமல் கடல்சூழ்ந்த உலகமெல்லாம் வருந்து மென்றும், இதற்கு நாம் என்ன செய்வதென்று ஆலோசித்துப் பின்னும் சோமசுந்தரக் கடவுள் செய்கை எப்படி முடியுமோ பார்ப்போமென்று, மந்திரிகள் அளவில்லாத கவலைகொண்டு மிகவுஞ் சிறியவனுன இராஜகுமாரனைக் கூட்டிக்கொண்டு அரண்மனையை விட்டு மஹமேருபோன்ற கோபுரவாசலுக்கு முன்னே வந்தார்கள்.

அப்போது அவர்களுக்கெதிரே சரிகைச் சோமனுகிய கோவணவுடை விசாலித்து விளங்கவும், பலவித ரத்தின மூட்டைகள் தோளிற் றெங்கவும், அளவில்லாத விலைபெற்ற தோள்வளையங்கள் பளபளென்று மின்னவும், முப்புரிநூல் வலம்பட விளங்கவும், இந்திரன் வில்லைப்போல நவரத்தினமாலை மார்பில் விளங்கவும், அழகான ரத்தின குண்டலங்கள் தோள்மேலசைந்தாடவும், வேதங்கள் கமழுகின்ற பாதங்கள் பூமியிற் படவும், பாண்டியர்களுக்குக்குலதெய்வமாய் அவர்கள் துன்பத்தை நீக்குதற்குச் சௌந்தரபாண்டியனுய் அரசாண்ட சோமசுந்தரக் கடவுள் ஒரு வர்த்தக வேடங்கொண்டு வந்து, எதிரே வருகிறவர்களைக் கண்டு, நீங்கள் என்ன காரணத்தினுலே வியாகுல சிந்தையாய் வருகிறீர்களென்று கேட்க, அந்த மந்திரிகள் முன்னே நடந்த சங்கதிகளைச் சொல்லக்கேட்டு, வர்த்தகராய் வந்த கடவுள், நீங்கள் ஏன் விசனப்படுகிறீர்கள். என்னிடத்தில் ஒன்பதுவகை ரத்தினங்களு மிருக்கின்றன. அவைகள் பதினுயிரங்கோடி பொன்விலை பெற்றவையென்று, அவைகளை வகைவகையாகக்காட்டுதற்குக்கிழக்கு முகமாயிருந்து, நீலவஸ்திரத்தை விரித்து நடுவிலும் கிழக்கு முதல் எட்டுத் திக்கிலும் முத்து முதலாகிய ரத்தினங்களைக் கொட்டி, இந்த இரத்தினங்கள் வலாசுரனுடைய தேக சின்னங்களென்று சொல்ல, மந்திரிகள் அந்த வலாசுரனென்பவன் யார் அவனுடைய தேகம் ரத்தினங்களானவிதம் எப்படிச் சொல்லுமென்று கேட்க, வணிகர் கூறுவார் : அந்த வலாசுர னென்பவன் முன்னுளிலே மூன்று மூர்த்தி

யும் தாமாக விளங்குகின்ற முக்கண் மூர்த்தியாகிய பரமசிவனுடைய பாதகமலங்களைப் பூசைசெய்த தவத்தினாலே, கடவுள் பிரசன்னராய் எழுந்தருளி உனக்கு என்ன வேண்டுமென்று கேட்க, அதற்கு வலாசுரன் தாழ்ந்து வணங்கி, ஸ்வாமி! நான் யுத்தத்திலே யாராலும் சாகாத வரமும், அல்லது விதிவலியால் நானிறந்தால் எனது தேகம் பற்றற்ற யோகிகளும் விரும்பத்தக்க இரத்தினங்களாகவும், கிருபை செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்க, அப்படியே கடவுள் அருள் செய்ய வரம்பெற்றவன். இவன் இந்திரனிடத்திற் சென்று சண்டைக் கழைக்க அவனுஞ் சம்மதித்து இருவருஞ் சண்டை செய்தபோது இந்திரன் வலனுடனே சண்டை செய்யமாட்டாமல் தோற்று ஓடிப் போய் இந்த வலவன் சாகாவரம் பெற்றவனாகையால் நம்மால் எக்காலத்திலும் வெல்லப்படான். இவனை உபாயத்தினாலே வெல்ல வேண்டுமென்று ஆயுதங்களில்லாமல் தேவர்களுடனே கூடிச் சென்று அசுரசிங்கமாகிய தலவனைக் கண்டு நடுங்கி, அசுரேந்திரா! உன்னுடைய ஜெயகீர்த்தி எல்லா லோகங்களும் விளங்குகின்றதனாலே உன்னிடத்தில் அதிக சந்தோஷமுண்டாயிற்று. அதனாலே உனக்கு வேண்டிய வரத்தைக் கேள். நான் தருகிறேனென்ன, வலாசுரன் கேட்டுக் கைகளைக் கொட்டி மேகத்தினிடிபோல நகைத்து. இந்திரா! நல்ல வார்த்தை சொன்னாய், எல்லாருஞ் சிரிக்க நீ எனக்கு முதுகு கொடுத்தோடச் செய்த ஜெயமும், அதனாலுண்டாகிய கீர்த்தியும், உன் பெருமையும் இப்போது நீ செய்த யுத்தத்தில் வெளியாயின. உன்னுடைய கீர்த்தி எங்கும் பிரசித்தப்பட்டது. இதைப் போலவே நீ கொடுக்கிற வரமும் நிலைநிற்குமல்லவா? ஆதலால் எனக்குக் கடவுள் கொடுத்த நல்ல வரமிருக்க உன்னிடத்தில் நான் பெறத்தக்கதுமுண்டோ? இனி உனக்கு வேண்டிய வரத்தைக் கேள் கொடுக்கிறேன். அப்படி நான் கொடாவிட்டால் உனைப்போல் சண்டையில் முதுகிட்டோடின அபகீர்த்தியை அடைவேன் என்றான். அப்படிச் சொல்லக் கேட்ட இந்திரன் அசுரேந்திரனாகிய வலனே! பரமசிவனுடைய வெள்ளிமலைச் சார்பில் ஒரு யாகஞ் செய்யப் போகிறேன். நீ அந்த யாகத்துக்குப் பசுவாய் வரவேண்டுமென்றான்.

அதுகேட்ட வலாசுரன் முன்னே ததீசி மகாமுனி உனக்குக் கொடுத்த முதுகெலும்பாகிய வச்சிராயுதத்தினாலே பெற்ற புகழுடம்பு போல் என்னுடம்பெல்லாம் நல்ல ரத்தினங்களாகச் சாகின்ற கொடையினாலும், அழியாத வீரத்தினாலும், புகழுடம்பு இரண்டாகுமல்லவா? ஆகையால் நீ எனக்குப் பகைவனில்லை. நண்பனானாய். நீ செய்யும் வேள்வியுணவைத் தேவர்களெல்லோரும் உண்பதினாலே தருமமும் புகழும் எனக்குண்டாக, யாகப் பசுவாக வேண்டுமென்கிறாய், அப்படியே யாகப்பசுவாவேன். கொடுப்பதே பெருமை; வாங்குதல் சிறுமை யல்லவோவென்று சம்மதித்து, வலாசுரன் இந்திரனை முன் போகச் சொல்லிப் பின்பு தன் குமாரனுக்குத் தன் அரசாட்சியைக்

கொடுத்து, வேதசாஸ்திரப்படி யாகப்பசுவாய், இந்திரன் செய்கிற யாகசாலையி னிடத்தில் வந்து நின்றான். அதுகண்டு இந்திரன் சொன்னபடி நடக்கவும்கொடுக்கவும் உன்னைப்போல தாதா உண்டோ வென்று கொண்டாட, வலாசுரன் பின்னும் அதிகமான களிப்பு கொண்டு, மேரு மலையுடனே எதிர்த்த விந்தமலைபோல் உயர்ந்து என்னை வேள்விக் கம்பத்தோடே கட்டுங்களென்று கிட்டி நின்றான். அப்போது அவனைத் தருப்பைக் கயிற்றால் சிலந்தி நூலாலே சிங்கத்தைக் கட்டினாற்போல யூபத்திற் கட்டி வாயை மூடி, மூச்சடங்கக் கொன்று மடித்தார்கள். மடிந்த வலவனாகிய வள்ளல், தேவர் புஷ்ப மாரி பொழிய, விமானத்தின் மேலேறிப் பிரமலோகஞ் சேர்ந்தான்.

பின்பு இந்திரன், வேதஞ் சொன்னபடியே அந்தப் பசுவினுடைய வபையை எடுத்து அக்கினியில் ஆகுதி செய்து, தேவர்களையும் உண்ணச் செய்து யாகத்தை முடித்தான். அந்தப் பசுவினுடைய இரத்தமெல்லாம் மாணிக்கங்களாகவும், பற்களெல்லாம் முத்துக்களாகவும், மயிரெல்லாம் வைடூரியமாகவும், எலும்பெல்லாம் வைரமாகவும், பித்தம் பச்சையாகவும், நிணம் கோமேதகமாகவும், தசை பவளமாகவும், கண்கள் நீலமாகவும், கபம் புஷ்பராகமாகவும், இப்படி நவரத்தினங்கள் உண்டாயின. இந்த ஒன்பதுவகை ரத்தினங்களும் சேர்ந்த இடங்களும், நிறங்களும், சாதிகளும், தெய்வங்களும், ஒளிகளும் குற்றங்களும் நன்றாய்ச் சோதித்துத் தேகத்தில் அணிந்து கொள்ளுகிறவர்கள் பெறும் பயனையும் கிரமமாகச் சொல்லக் கேளுங்கள்.

கிரேதாயுகத்தில் மக்கதேசத்திலும், திரேதாயுகத்தில் காளபுரத்திலும், துவாபரயுகத்தில் தும்பிரத்திலும் கலியுகத்தில் சிங்கள தேசத்திலும் மாணிக்கங்க ளிருந்தன. அந்த மாணிக்க மென்கிற பதுமராகம், ஒன்பதுவகை நிறம். அவையாவன: தாமரைப்பூ, மாதுளம்பூ, மாதுளம்விரை, நெருப்பு, செங்கழுநீர், மின்மினி, நாரத்தம்பழம், விளக்கு, இந்திரகோபம். இந்த நிறங்களைப் பொதுவாகவுடைய மாணிக்கங்களில் பிராமணஜாதி சாதரங்கம், க்ஷத்திரியஜாதி குருவிந்தம், வைசியஜாதி சௌகந்திகம், சூத்திரஜாதி காவாங்கம் என்று சொல்லப்படும். சாதரங்கத்துக்கு நிறம் பத்துவகை அவையாவன: தாமரைப்பூ, கருநெய்தற்பூ, சூரியனொளி, நெருப்பு, மின்மினி, மாதுளம்பூ, மாதுளம்விரை, மேகம், விளக்கு, இந்திரகோபம், குருவிந்தத்துக்கு நிறம் எட்டுவகை. அவையாவன : குன்றிமணி, முயலிரத்தம், விளாம்பூ, பலாசப்பூ, மஞ்சாடிப்பூ, செவ்வரத்தம்பூ, முள்ளிலவம்பூ, எரிபொன். சௌந்திகத்துக்கு நிறம் ஆறுவகை அவையாவன: இலவம்பூ, குயிலின்கண், அசோகன்றளிர், அவிர்பொன், செம்பஞ்சுவண்ணப்பூ, காவாங்கத்துக்கு நிறம் நால்வகை அவையாவன: குரவம்பூ, குசுப்பைப்பூ, செங்கல், கொவ்வைக்கனி இவ்வகை நிறங்களையுடைய பதுமராகங்களைப் பொதுவாகச் சோதிக்குமிடத்தில் கெட்டியாய் மேலே காந்தினால் உத்தமம். கீழே காந்தினால் மத்திமம்,

சுற்றுப்பக்கத்தில் காந்தினுல் அதமம் என்பார்கள். சாதரங்கத்தை அணிந்தவர்கள் வித்தியாதானம், கோதானம், கன்னிகாதானம், அன்னதானம் முதலான நல்ல தானங்களைச் செய்த பலனும், அசுவ மேத முதலிய யாகங்கள் செய்த பலனும் பெறுவார்கள். குருவிந்தத்தை யணிந்தவர்கள் உலகமுழுவதும் ஒரு குடை நிழலிலாண்டு வீரலட்சுமியிடனே கூடி வாழ்வார்கள். சௌகந்திகத்தை யணிந்தவர்கள் செல்வமும் கீர்த்தியும் பெறுவார்கள். காவாங்கத்தை யணிந்தவர்கள் வீட்டில் பாலும் மலைபோல நெற்குவியல் முதலான பல பண்டங்களும், ஐஸ்வரிய மிகுதியும் பெற்று வாழ்வார்கள். இகழத்தக்க குற்றங்களெல்லாம் போக்கிக் குணங்களெல்லாங் கொண்டு விளங்குகின்ற பதுமராகத்தை அணிந்தவர்களிடத்தில் முத்து முதலிய பல ரத்தினங்களும் வந்து பெருகும். லட்சுமியும் நல்ல செல்வமும் பாற்கடல்போலே பெருகும் வேறுநிறச் சார்பு, புள்ளி, புள்ளடி, கீற்று, தராசம் என்கிற ஐவகைக் குற்றங்களையும் போக்கி நல்ல குணங்களையுடைய ரத்தினத்தை அணியுமரசன் பகைவரை வென்று விஜயலட்சுமிக்குநேசனுவான். இன்னும் சிறியதேசத்தையுடையவனுனுலும் அவன் குடை நிழலி லொதுங்கிச் சகல பிராணிகளும் வாழும். அவனைப் பாம்பு, துஷ்ட மிருகங்கள், பிசாசு, பூதம், தாமத தெய்வங்கள், தரித்திரம், வியாதி, பாபக்கிரமங்கள், யமவாதை முதலிய உபத்திரவங்கள் சேராவாம். இன்னமும் கற்ருேர்கள் வயிரத்தையும், முத்தையும் பிராமணஜாதி யென்றும்; பள்ளத்தையும், மாணிக்கத்தையும் க்ஷத்திரியஜாதி யென்றும் ; புஷ்பராகத்தையும் வைடூரியத்தையும், கோமேதகத்தையும் வைசியஜாதி யென்றும் நீலத்தையும், மரகதத்தையும் சூத்திரஜாதி யென்றுஞ் சொல்லுவார்கள்.

இன்னும் முத்தையும் வயிரத்தையும் பச்சையையும் சாத்துவிக குணமென்றும், பவளத்தையும் மாணிக்கத்தையும் கோமேதகத்தையும் இராஜதகுணமென்றும், நீலத்தைத் தாமத குணமென்றுஞ் சொல்லுவார்கள். இப்படிப்பட்ட ரத்தினங்களை அளந்து கண்டு மதிக்குங் காலமாவன : ஞாயிற்றுக்கிழமையில் பதுமராகமும், திங்கட்கிழமையில் முத்தும், செவ்வாய்க்கிழமையில் பவளமும், புதன்கிழமையில் பச்சையும், வியாழக்கிழமையில் புஷ்பராகமும், வெள்ளிக்கிழமையில் வயிரமும், சனிக்கிழமையில் நீலமும் மதிக்கவேண்டுமென்பார்கள். ஞாயிறில் கோமேதகமும், திங்களில் வைடூரியமும் மதிக்கலாம். இந்த நவரத்தினங்களை விலை மதிக்கிறவர்கள் உள்ளும் புறமும் பரிசுத்தராய் நல்ல நடக்கையை யுடையவராயிருக்கவேண்டும். தாமரைப்பூ சாதிப்பூ, செவ்வாம்பற்பூ, கோடற்பூ, கொடிமல்லிகைப்பூ, நூற்றிதழ்த் தாமரைப்பூ, செங்கழுநீர்ப்பூ, கொக்கிரகம்பூ, மந்தாரப்பூ என்கிற ஒன்பதுவகை மலர்களையும், வண்டுகள் மொய்க்கத் தன் முடிமேலே சூடிப் பூமியை மெழுகி ஆசனமிட்டு நல்ல வஸ்திரத்தை விரித்து

மாணிக்கத்தை நடுவிலே வைத்து, முத்துமுதலிய எட்டு ரத்தினங்களை யும் கிழக்குதிசை முதல் எட்டுத்திசையிலும் வலமாக வரிசையாய்ச் சூரிய மண்டலாகிருதியாய் வைத்துப் பதுமராகம் முதலிய ரத்தினங்கள் ஒன்பதையும், சூரியன் முதலான ஒன்பது கிரகங்களையும், முன்னே சொன்ன தாமரை முதலிய மலர்களாலே அருச்சனைசெய்து சாஸ்திர விதிப்படி வழுவாமற்பூசை செய்யவேண்டும். இனி முத்து, தலசமென் றும் சலசமென்றும் இருவகையாய்ச் சங்கு, மேகம், மூங்கில், பாம் புத்தலை, பன்றிக்கொம்பு, வெண்ணெல், இப்பி, மீன்றலை, கரும்பு, யானைக்கொம்பு, இந்தப் பத்திடங்களிலும் பிறக்கும். சிங்கத்தின்கை, பதிவிரதைகள் கழுத்து, கொக்குத்தலை இந்த மூன்றிடங்களிலும் பிறக்கிற முத்துக்கள் அருமையாயிருக்கும். யானைக்கொம்பின் முத்து மாடப்புருவின் முட்டைபோலத் திரண்டு வெண்மையாயிருக்கும். மேகத்தின் முத்து இளஞ்சூரியன் நிறமா யிருக்கும். மூங்கில் முத்து மழைத்துளி நிறமாயிருக்கும். பாம்பின் முத்து நீல நிறமாயிருக்கும். பன்றிக்கொம்பின் முத்து இரத்த நிறமாயிருக்கும். நெல்லின் முத்து பச்சையாயிருக்கும். மீன்முத்து பாதிரிப்பூ நிறமாயிருக்கும். கரும்பின் முத்து பொன்னிறமா யிருக்கும். மூங்கில்முத்தும் அப்படி யிருப்பதுண்டு. வருணன்முத்து பால்நிறமா யிருக்கும். சூரியன் முத்து அக்கினி நிறமாயிருக்கும். விஷ்ணுவின் முத்து நீல நிறமாயிருக்கும். வாயுவின் முத்து ரத்த நிறமா யிருக்கும். யமன் முத்துப் பச்சை நிறமாயிருக்கும். இந்திரன் முத்து பொன் னிறமாயிருக்கும். நக்ஷத்திரம்போல் ஒளியும், உருட்சியும், அழுக்கில் லாமையும் கையிலெடுத்தால் கெட்டியும், பார்வைக்கு நன்ரு யிருத்த லும் படிகம்போ லிருத்தலுமாகிய ஆறு குணங்களுமுள்ள முத்துக் களை அணிந்தால் மூதேவியும் தரித்திரமும்விட்டு நீங்கும். லட்சுமியும் செல்வமும் ஆயுளும் பிரபலிக்கும்.

இனி ததீசிமஹா முனி எலும்பும், வலாசுரன் எலும்பும் கோசலன் முதலிய நாட்டில் விழுந்து கிடப்பன. குணத்திற் சிறந்தது. இலே சாய்த் தெள்ளிதாய், மதித்தால் விலை யதிக விலை யதிகமானதாய் மேம்பட்ட வயிரத்தைக் குறுநில மன்னனு மணிந்தால், குறையாத செல்வத்தை யடைந்து, பகைவரை வென்று உலகமெல்லாம் செங் கோல் செலுத்துவான், தரித்திரம், வியாதி மிருகங்கள் இவைகள் சேரா. அற்பாயுசு, பூதகணங்களால் வருத்தல் இவைகளுஞ் சேரா. ரத்தினங்களுக்கெல்லாம் வயிரத்தையே முதற்சாதி யென்று கற்ரேர் சொல்லுவார்கள். இந்த வயிரம் ரத்தினங்களுக்கெல்லாம் துவார மிடுதற்கும், தனக்கும் துவாரமிட ஊசியாகிறதினுலே ரத்தினங்களில் வயிரமே அதிகம். இனி வலாசுரனுடைய பித்தத்தைப் பக்ஷிகள் தமக்கிரையாகக் கவ்விக்கொண்டு பறந்தபோது, மூக்கினின்று சிதறி விழுந்த இடங்களே மரகதத்துக்குப் பிறப்பிடமாகும். இன்னமும் வினதை யென்பவள் அருணன் பிறந்த முட்டையோட்டைக் கருடன்

ஓரிடத்தில் பத்திரஞ் செய்துவைக்க, அந்த இடந்தப்பி ஒரு கடல் சூழ்ந்த தீவில் விழுந்தது. அது விழுந்த இடமும் மரகதத்துக்குப் பிறப்பிடமாம். இன்னமும், விஷ்ணு மோகினி வடிவாகச் சந்திர சேகரனுகிய பரமசிவன் பின்ருெடர்ந்து மந்தரமலை மட்டும் ஓட, பின்னே போன கடவுள், ஆண் சிங்கம்போலத் தொடர்ந்து சென்று, இந்திரியத்தை ஒழுகவிட, அக்காலையில் அரியர குமரன் பிறந்து காட்டுத் தெய்வங்களோடு கூடினன். அந்த விந்தினைக் கருடன் கவ்விப் பறந்து கடலிலும், துருக்க நாட்டிலும் பரவவிட்டதினலே அவையெலாம் கருடப் பச்சையாயின. அந்தக் கருடப் பச்சைக்குக் காடம், சுப்பிரம், காளம் என்று மூன்று குணங்களுண்டு. அவற்றில் அறுகம் புல்லி னிறமுள்ளது காடம், அந்தக் காடம் சகுணமென்றும் சதோடமென்றும் இரண்டு வகைப்படும். அவ்விரண்டில் சகுண மானது காடம், உல்லசிதம், பேகலம், பித்தகம், முத்தம்பிக மென ஆறு வகைப்படும். அவ்வாறில் காடம் புல்லி னிறமா யிருக்கும். உல்லசிதம் மெலிதா யிருக்கும். பேகலம் குளச்செந்நெலின் நிறமா யிருக்கும். பித்தகம் பச்சைக்கிளிச் சிறகினிறமா யிருக்கும். முத்தம் துளசி நிறமாயிருக்கும், பிதுகம் தாமரையிலையி னிறமாயிருக்கும் சதோட மானது தோடலேசாஞ்சிதம், துட்டம், தோடமூர்ச்சிதம், தோட லேசம், மந்ததோடமென் றைந்து வகைப்படும், அவ்வைந்தில் தோடலேசாஞ்சிதம் எலுமிச்சைத்தளிர் நிறமாயிருக்கும். துட்டம் அவரியிலை நிறமாயிருக்கும். தோடமூர்ச்சிதம் புல்லினிறமா யிருக்கும். தோடலேசம் தாமரையிலை நிறமா யிருக்கும் மந்ததோடம் மயிலிறகினிறமா யிருக்கும். இப்படிப்பட்ட பச்சை ரத்தினத்தை அணிவோர்கள் சதுரங்க சேனையுடனே ஆயுள்பெற்று வாழ்வார்கள்.

இனி வலாசுரனுடைய கண்களாகிய நீலம், பரமசிவனுடைய கழுத் தொளிபோல, இந்திர நீலம் மா நீலம் என்றிரண்டு வகைப்படும். இந்த இரண்டில் விச்சுவரூபினை இந்திரன் கொன்றகாலத்தில் அந்த பாவந் தீரச் செய்த அசுவமேதயாகத்தில் உண்டாகிய வாசனைப்புகை அதி கரித்து அந்த அசுவத்தின் இமையாத கண்களில் நுழைந்து கலங்கிச் சேறுபோல வழிந்தொழுகின இடத்தில் உண்டாகியதே இந்திர நீலமாம். சூரியன் மனைவியான சஞ்சையென்பவள் அவனுடைய வெப்பமான வுடலைத் தழுவமாட்டாமல் தன்னிழலைத் தானுக அவ னிடத்தி லிருத்திக் காட்டிலே சென்று தவஞ்செய்ய, அதை மந்திர சக்தியால் சூரியன் தெரிந்து பின்ருெடர, அவள் பெண் குதிரை வடி வாய் மறைய சூரியன் ஆண் குதிரையாகிக் காமம் பொருமல் இந்திரி யத்தை ஒழுகவிட, அவ்விந்திரியம் சிந்தினவிடமெல்லாம் உண்டாகிய நீலமே மா நீலமாம். இப்படிப்பட்ட நீலரத்தினத்தை அணிவோர்கள் மனிதர்களானுலும் தேவர்களென்று சொல்லப்படுவார்கள். இப்படிப் பட்ட நீலம் வெள்ளை கலந்திருந்தால் பிராமணஜாதி, சிவப்புக் கலந் திருந்தால் க்ஷத்திரியஜாதி, செம்பொன்னிறம் கலந்திருந்தால் வைசிய

ஜாதி, மிகவும் கறுப்பாயிருந்தால் சூத்திரஜாதியாம். இப்படி விளங்குகின்ற இந்திர நீலம் உலகத்தி லரிது. இந்த நீலம் பாற்குடம்போலப் பரிசுத்தமாய்ப் பதினாயிரம் பொன் விலைபெற்றதாயிருக்கும். இதை யணிவோர்கள் மங்களம் பெற்று வாழ்வார்கள். இனி வலாசுரனுடைய நிணங்கள் சிந்தினயிடத்தில் உண்டானவைகளைக் கோமேதகம் என்பார்கள். அது உருக்கிய நெய்த்துளி, தேன்றுளி, கோசலம் இவைகளி னிறத்தை ஒப்பாகச் சிவந்து பசும்பொன்னிறத்தையும் பெற்று மெல்லியதாய்ப் பரிசுத்தமாய்க் கெட்டியாயிருக்கும். அதை யணிந்தால் அஞ்ஞானமும் பாவமும் போம் பரிசுத்த முண்டாகும்.

இனி அந்த வலாசுரன் கபம் விழுந்தவிடத்தில் புருடராக முண்டாயிற்று. இன்னமும் மகாவிஷ்ணு வராக அவதாரங்கொண்டு குகை போலும் வாயைத் திறந்து சிரித்தபோது சிந்தின கபம் விழுந்தவிடத்தில் உண்டாயினதும் புருடராகமே. இந்தப் புருடராக ரத்தினம் பாரியாத்திர கிரியிற் கொடிமுடியாயிலங்கும் தெய்வமந்தர மால்வரைப் புறஞ்சூழ மேகலையாம். மயன் இந்தப் புருடராகத்தினாலே இந்திரனுக்குப் பட்டணமும், அரசிருப்பு மண்டபமும் உண்டு பண்ணினான். இந்த ரத்தினத்தை அணிவோர்கள் பகைவரைவென்று வெற்றிமாலை யணிவார்கள். இனி வலாசுரன் மயிரெல்லாம் வைடூரியமாய், இளாவிரத கண்டத்தில் கோரக்கம்-மகதம் - சிங்களம்-மலயம்-பாரசீகம் - திரிகூடம் முதலிய தேசங்களிலும், மற்றத் தீவுகளிலும் உண்டாயின. மேகம் இடிக்கும்போது கடலிலும் உண்டாகும். மூங்கிலிலை - மேகம்-மயிலின் கழுத்து, பூனைக்கண் இந்த நிறங்களை யுடையதாய்க் காணப்பெற்று, தெள்ளிதாய்க் கெட்டியாய், மெல்லியதாகி விளங்கும். இது அழகாய் வலப்புறத்தில் ஒளிவீசினால் பிராமணஜாதி, இடப்புறத்தில் ஒளிவீசினால் க்ஷத்திரியஜாதி, மேலே ஒளிவீசினால் வைசியஜாதி, கீழே ஒளிவீசினால் சூத்திரஜாதி ஆகிய இந்த வைடூரியத்தை நல்லோர்கள் பூசைபண்ணி அணிந்துகொள்ள வேண்டும். வலாசுரன் மாமிசம் வீழ்ந்த விடத்தில் பவளம் உண்டாயிற்று. இன்னமும் பிரமன் சத்தி வடிவமாகிய தென்புலத்தாரை உண்டாக்கும்போது, அவர்கள் உடலின் அழுக்குச் சிந்தின யிடத்திலும், மகாவிஷ்ணு மதுகைடவரைக் கொன்றபோது ரத்தம் சிந்தினவிடத்திலும் இந்திரன் மலைகளைச் சிறகு வெட்டினபோது ரத்தம் சிந்தின விடத்திலும் உண்டாயின. பவளம்-முருக்கம்பூ - பச்சைக்கிளிமூக்கு - செவ்வரத்தம்பூ-கொவ்வைக் கனி இவைகளி னிறமாயிருக்கும். திருகல் - கோணல் - புழுவரித்தல்-முகமொடிதல் இவைகள் குற்றம். இந்தப் பவளத்தை அதிகமாய்ப் பெண்களே யணிவார்கள். அணிந்தால் பிள்ளைப் பேறு முதலிய லாபங்களுண்டாகும். இன்னும் சூரியனைக்கண்டு நெருப்பைச் சிந்துகிற சூரியகாந்தக்கல்லும், சந்திரனைக் கண்டு நீரைச் சிந்துகிற சந்திரகாந்தக்கல்லும், நவரத்னங்களில் ஒன்றில் அடங்கும் என்று ரத்னங்

களின் வரலாற்று மரபைச்சொல்லி வர்த்தகராய் வந்த சோமசுந்தரக் கடவுள், வடதிசையைப் பார்த்துத் தோத்திரம் பண்ணி அர்ச்சனை செய்து, அந்தரத்னங்களைக் கைகள் நிறைய ஏந்தி, மதுரைக் கடவுளைப் பார்த்துக் கும்பிட்டு, உட்பார்வையாலே இந்த இராஜகுமாரனுக்கு அளவிறந்த ஆயுசும், செல்வமும் பெருகக் கடவதென்று வாழ்த்திக் கொடுக்க, இராஜகுமாரனும் இந்திர விமானத்தைப் பார்த்துக் கடவுள் திருவடிகளை வணங்கி, இரண்டு கையாலும் வாங்கிக் கொண்டான். கொடுத்த வர்த்தகர் மந்திரிகளையும் இராஜகுமாரனையும் முகமலர்ந்து பார்த்து, இந்த ரத்னங்களைப் பதித்த நவரத்தின கிரீடத்தைச் சூட்டி, அபிஷேக பாண்டியனென்று பெயரிடுங்களென்ன, அந்த மந்திரிகள் அந்த ரத்தினங்களுக்குள்ள விலை கொடுக்கத் தொடங்கி அந்த வர்த்தகரைப் பார்க்கக் காணுமல் மயங்கினுர்கள்.

அப்போது ஒருருவாய் வந்த வர்த்தகர், இடபவாகனத்தின்மேல் பார்வதி சமேதராய்க் கோயிலுக்குள் எழுந்தருளக் கண்டு, வந்த வர்த்தகர் இவரேயென்று பின்தொடர்ந்து சென்று, கடவுளை வணங்கி, இந்த ரத்தினங்களுக்கு விலைகொடுக்க எங்களால் முடியுமோவென்று துதித்து, எங்கள் உடல் பொருளாவி மூன்றுந் தேவரீராகையால் எம்பெருமானே! மேகஞ் செய்யும் உபகாரத்துக்குப் பிரதி உபகாரஞ் செய்வதுண்டோ? என்று பலதரம் துதித்துக் கோயிலை வலம்வந்து, அருள் பெற்றுக்கொண்டு, வேதப்பிராமணர்கள் ஆசீர்வதிக்க, அரசன் கோயிலுக்குள் எல்லாரும் வந்து சோமசுந்தரக்கடவுள் ஒன்பது கிரகங்களையும், நக்ஷத்திரங்களையுமே மணிகளாகச் செய்தாரோ! அல்லது அவர் அணிந்த பாம்பின் மணிகளோ! யாதென்று மதிக்கக்கூடும். இந்திரலோகத்திலும் இந்த இரத்தினங்கள் கிடையாவென்று ஆச்சரியப்பட்டு, மயனினும் சிறந்த கம்மாளர்களுக்கு மிகுந்தசிறப்புச்செய்து ராஜகுமாரனுக்கு நவரத்தின கிரீடம் செய்வித்துச் சாஸ்திரப்படி முடிசூட்டி, அபிஷேக பாண்டியனென்று பெயரிட்டழைத்துப் பட்டணப் பிரவேசம் வந்து, கடவுளையும் வணங்கி அபிஷேக பாண்டியன் சதுரங்க சேனைகள் சூழச் சத்துருக்களெல்லாம் வணங்க மனுநீதிப்படிப் பயிர்களை ரக்ஷிக்கிற மேகம்போல, உலகத்தை ரக்ஷித்து வருகிற காலத்தில், பழைய கிரீடத்தைத் திருடிக்கொண்டு போனவர்களைத் தேடிப் பிடித்துக்கொண்டு வந்து சிலர்விட, அவர்களிடத்தில் கொண்டுபோன பொருள்களெல்லாம் வாங்கிக்கொண்டு அரசாட்சி செய்தான்.

மாணிக்கம் விற்ற படலம் முற்றிற்று.

பதினெட்டாவது

# வருணன்விட்ட கடலை வற்றச்செய்த படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

கார்கெழு கண்டத் தண்ணல் கௌரியன் மகுடஞ் சூட
வீழ்கதிர் மணிக ளீந்த வியப்பிது விடையோன் சென்னி
வாழ்கரு முகிலைப்போக்கி மதுரைமேல் வருணன் விட்ட
ஆழ்கடல் வறப்பக் கண்ட வாடலைப் பாடல் செய்வாம்.

உரை: கரிய காளகண்டத்தையுடைய சோமசுந்தரக் கடவுள் அபிஷேகபாண்டியன் முடிசூடக் கிரணங்களையுடைய நவமணிகளைத் தந்த திருவிளையாடல் இதுவாகும். இனி இடபவாகனத்தையுடைய அச் சோமசுந்தரக்கடவுள் தமது சடைமுடியின்மேல் வாழும் புட்கலாவர்த்த முதலிய சப்தமேகங்களையுஞ் செலுத்தி மதுரையின்மேல் வருணனேவிய ஆழ்ந்த கடலை வற்றச் செய்த திருவிளையாடலைச் சொல்லுகின்ளும்.

அபிஷேகபாண்டியன் வெள்ளியம்பலக் கடவுளுக்குப் பல சிறப்புகள் செய்து, சித்திரை மாதம் சித்திரை நக்ஷத்திரத்தில். நெய் சந்தனக்குழம்பு முதலானவைகளால் அபிஷேகஞ் செய்வித்துப் பின்னும் கற்பூரத் திருமஞ்சனமாட்டிக் கடவுளைப் பார்த்து, என் கற்பூர சுந்தரனேயென்று கொண்டாடிப் பூசை செய்யுமளவும், இந்திரன் வந்து வருஷந்தோறும் தான் பூசை செய்யும் நாளானதினாலே காத்திருந்து, பின்பு தான் பூசை செய்து தன்னுலகத்துக்குப் போனான். அதைக் கண்ட வருணன் தனக்குள்ள நோய் தீருங்காலம் வந்ததினாலே, இந்திரன் முகத்தைப் பார்த்து இன்றையதினம் முகம் வாடியிருக்கவேண்டிய தென்னவென்று கேட்டான். அதற்கு இந்திரனும் மதுரைக் கடவுளைப் பூசைசெய்ய நான் இன்று போனபோது, பூசிக்கக் காலதாமதமானதினாலே எனக்குக் கொஞ்சம் வியாகூலம் உண்டாயிற்றென்ன, அதை வருணன் கேட்டு அந்த லிங்கம் அவ்வளவு சிறந்ததோவென்ன, அதற்கு இந்திரன் முன்னே என் சாபமும் ஐராவதத்தின் சாபமும் தீர்த்தவன் சோமசுந்தரக் கடவுளல்லவோ? இதுவரையிலும் உனக்குத் தெரியாதோவென்ன, வருணன் கேட்டு, அப்படியானால் தெய்வ வயித்தியராலும் தீர்க்கக்கூடாத என் வயிற்று நோயை அந்த சோமசுந்தரக் கடவுள் தீர்க்குமோவென்ன, இந்திரன் உள்ளே நகைகொண்டு, நீ சந்தேகித்துக் கேட்டது என்ன காரணமோ தெரியவில்லை. பிரம விஷ்ணுக்களாலும் தீர்க்கப்படாத பிறவி நோயைத் தீர்க்கவல்ல கடவுள் இந்தத் தேக வியாதியைத் தீர்ப்பது அருமையோ? அந்தக் கடவுள் திருவிளையாடலை நீ சோதித்துக் கண்டுகொள்ளென்ன; வருணன், இந்திரனே! இன்று உன்னிடம் நான் வரும்போது காமதேனுவும், அதன் கன்றும் முன்னே

வரக்கண்ட தன்மையினாலே இந்த நல்ல வார்த்தைக் கேட்டே னென்று சந்தோஷித்து, வெள்ளியம்பலக் கடவுள் திருவிளையாடலைத் தெரிந்து, தன் வயிற்று நோயைத் தீர்த்துக்கொள்ள ஆலோசித்துக் கடலைக் கூப்பிட்டு, நீ போய் மதுரை முழுதும் அழித்துவரக் கடவை யென்றனுப்ப, உடனே கடலானது கொதித்துப் பொங்கி,மரங்களை யொடித்து மலைகளைக் கல்லித் திசைகளெல்லாம் போக வீசி வீடுகளை யிடித்துத் தள்ளிப் பிரளயகாலத்தைப் போல அலைகளை வீசிக் கொண்டு வர, மதுரையிலுள்ள ஜனங்களும், தேவர்களும் வருணன் செய்த செய்கை தெரியாமல் பிரமகற்பத்தும் அழியாத இந்த மதுரா புரிக்கு இடையூறு வந்ததேயென்று கலங்கி, இது சொக்கநாதர் திரு விளையாடலோ! நாம் செய்த பாபந்தானோ! ஆலகாலமோ! ஊழிக் காலமோ! என்று மயங்கி நடுநடுங்க, அப்போது மண்ணுலகமும் விண்ணுலகமும் மறைய மூடுகிற இருளைப்போல் திரண்டு வருகிற வெள்ளத்தை அபிஷேகப் பாண்டியன் பார்த்துச் சோமசுந்தரக் கடவுள் பாதமேகதியென்று நடுங்கிச் சமுத்திரத்தில் தோன்றிய விஷத் தைக் கண்டு அஞ்சின விஷ்ணுவைப் போலவும், யமனைக் கண்டஞ் சின மார்க்கண்டேய முனிவரைப்போலவும் கலங்கிக் கடவுள் பாதத் தின் கீழே விழுந்து முறையிட, அப்படி முறையிட்ட அபிஷேக பாண்டியனுக்கு முன்னே நகை செய்து, பயப்படாதேயென்று சொல்லி மதுரைக்குச் சமீபத்தில் வந்த கடலை நீங்கள்போய் வற்றக் குடியுங்களென்று தனது ஜடையிலிருக்கின்ற நான்கு மேகங்களையு மனுப்ப, உடனே அந்நான்கு மேகங்களும் முழங்கிக்கொண்டு வந்து, பெருகி வருகிற கடல் முழுவதையும் உறிஞ்சிக் குடிக்க, அப்படி யுறிஞ் சினவுடனே, சிவபரஞ்சோதியே தெய்வமென்று தெளிந்தவர்கள் பிறவிக் கடல்போலப் பசையறவற்றிக் காய்ந்தது. அப்போது பட்ட ணத்திலுள்ள ஜனங்களும் தேவர்களும் பாண்டியனும் கடவுள் திரு விளையாடலென்று தெரிந்து, மிகுந்த சந்தோஷமாகிய கடலில் மூழ்கிப் பின்பு சுகமே வாழ்ந்திருந்தார்கள்.

வருணன்விட்ட கடலை வற்றச்செய்த படலம் முற்றிற்று.

———

மதுரைக் காண்டம் முற்றிற்று.

———

பத்தொன்பதாவது

# நான்மாடக் கூடலான படலம்

### சோமசுந்தரக்கடவுள்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல லிவையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங்கி டந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்
பாதங்க ணோவ வளையிந்த ணுதி பகர்வாரை யாயு மவரே.

உரை: நான்மாடக் கூடலென்னும் பதியில் திருவடிகள் வருந்த வீதியிற்போந்து வளையலும், விறகும், பிறவும் விற்றுவிளையாடினவர் யாவர் என்று விசாரிக்குமளவில், அங்ஙனம் விசாரிக்கும் பெரியோர், அப் பரம்பொருளைப் பெருநூலாகிய வேதங்கள் பூதங்களென்றும் அல்லவென்றும், புலன்களென்றும் அல்லவென்றும், கன்மேந்திரிய மென்றும் அல்லவென்றும், ஞானேந்திரியமென்றும் அல்லவென்றும், அந்தக்கரணங்களென்றும் இவைகளன்றி வேருக நின்ற மற்றத் தத்துவங்களென்றும் அல்லவென்றுங் கூறி இளைத்துத் தடுமாறும் பெருந்தகையை வஞ்சவெளியென்று கூறி திற்பர்.

### தடாதகைப்பிராட்டியார்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை யிடக்கண் ஞானப்
பெருமக ளுதற்க ணுக்ப் பெற்றுவான் செல்வங் கல்வி
அருமைவீ டளிப்பாள் யாவ வவளுயிர்த் துணைவன் காண
ஒருமுலை மறைந்து நாணி யொசிந்தபூங் கொம்பி னின்றாள்.

உரை: இலட்சுமியை வலக்கண்ணாகவும், சரஸ்வதியை இடக்கண் ணாகவும் ருத்திராணியை நெற்றிக்கண்ணாகவும் பெற்றுத் தம்மை யடைந்தவர்களுக்கு முறையே செல்வம், கல்வி, வீடு என்பவைகளைத் தந்தருளுகின்ற லோகமாதாவாகிய தடாதகைப் பிராட்டியார், தமது உயிர்த்துணைவராகிய சோமசுந்தரக்கடவுள் தம்மைக் கண்டமாத்திரத் தில் தமக்குரிய மூன்று ஸ்தனங்களில் ஒன்று மறைந்திட நாணத்தை யடைந்து வளைந்த பூங்கொடி யொத்து நின்றவராயினர்.

கதிர்மதி மிலைந்த வேணிக் கண்ணுதல் வருணனேய
அதிர்கடல் வறப்பச் செய்த வாடலீ தனையா னேய
முதிர்மழை யேழின் மேலு முன்னைநான் முகிலும் போக்கி
மதுரைநான் மாடக்கூட லாக்கிய வண்ணஞ் சொல்வாம்.

உரை :—குளிர்ந்த கிரணங்களை வீசுஞ் சந்திரனைத் தரித்த ஜடை முடியினையுடைய கண்ணுதலாகிய சிவபெருமான், வருணனால் விடப் பட்ட இரையுஞ் சமுத்திரமானது வற்றிப்போகும்படிச் செய்த திரு விளையாடல் இதுவாகும். இனி அந்த வருணன் ஏவிய முதிர்ந்த சப்த மேகங்களின்மீது எம்பெருமான் முன்னரேவியதுபோலவே நான்கு மேகங்களையும் போக்கி மதுரையை நான்மாடக்கூடலாக்கிய திருவிளை யாடலையும் கூறுகிறோம்.

அதைக்கண்ட வருணன் தனது செய்கை தப்பி, வெட்கப்பட்டு, இரண்டு கண்களுஞ் சிவக்கக் கொதித் தொழுகுகிற கோபாக்கினி யினாலே உடம்பெல்லாம் வெதும்பிக் கடல்களும் நதிகளும் வெந்து வற்றுதலாக, மானமும் பலமும் குறையாமல் அதிக கோபங்கொண்டு, சோமசுந்தரக் கடவுளுடைய திருவிளையாடலைத் தெளியாதவனாய்ப் பின்னும் ஏழு மேகங்களையும் அழைத்து, நீங்கள் கடல்களெல் லாம் வற்றக் குடித்து முழுங்கி, நீரைப் பொழிந்து, மதுரை முழு வதையும் விரைவிலே அழியுங்களென்றான். உடனே ஏழு மேகங் களும் கடல்களெல்லாம் வற்றி நிலந்தெரிய நீரைக்குடித்து உடம் பெல்லாங் கறுத்து, மின்னி, அஷ்டதிசைகளும் ஆகாசமும் செவிடு படவும், பாதாளமும் பூமியும் அஷ்டகுல பர்வதங்களும் வெடிபடவும், மஹாமேரு சாயவும், ஊழிக்காலத்தில் அண்டகடாகம் வெடிக்கிற சப்தம்போல முழங்கி, நெருப்பிடி விழப் பூமியைத் தாங்குகிற பாம்புகள் ரத்தினங்களைக் கக்கிக்கொண்டு உடம்புகளை நெளிக்கவும் திக்குகளினின்ற யானைகள் பயந்து நிலைகெடவும், பூசினிக்காய்கள் போலத் துளிகளும் திரண்ட பளிங்குத் தூண்கள்போலத் தாரை களுமாக நக்ஷத்திரங்களுடனே மீன்களும் துள்ளி விழவும் உலக மெல்லாம் மூடிக்கொண்டு உலகத்தை விழுங்க உருவங்கொண்ட விஷ்ணுவைப்போல ஆகாசம், திக்குகள், பூமி இவைகள் தெரியாமல் பார்க்குங் கண்களும் நுழையாமல் திரண்டு நவரத்தினங்களுஞ் சிந் தப் பிரசண்டவாயு மோத இப்படி மதுரையெல்லாங் கவிந்தபோது அபிஷேகப் பாண்டியனும், பட்டணத்து சனங்களும், உலகம் அழியுங் கால மிதுவேயென்றுமயங்கி நடுநடுங்கி, இன்னமும் மதுரேசனே காக்கக்கடவனென்று சோமசுந்தரக்கடவுள் திருவிளையாடலை யறிந்து கைகண்ட பாண்டியன் பட்டணத்து ஜனங்களுடனே விரைவிலே சந்நிதானத்துக்குப் போய், இந்திர விமானத்தில் விளங்குகின்ற கட வுளைவணங்கி, விஷ்ணுவாகிய விடபத்தை யுடையவரே! சமுத்திரத்திற் றோன்றிய விஷத்தைக் கண்டத்தில் தரித்தருளிய கடவுளே! கங்கை யைச் சடையில் தரித்தருளியவரே! எமனுடைய உயிரைக் கவர்ந்த திருவடியையுடையவரே! மேருவாகிய விற்படையை யுடையவரே! அடி யேங்கள் படுகின்ற துன்பத்தை யொழித்து ஆள்கின்ற நடையினை யுடையவராகி எங்களுக்கு இப்போது நேரிட்ட ஆபத்தினின்றும் விலக்கிக் காப்பாற்றவேண்டும் பெருமானே! என்று துதிக்கும்போது,

எக்காலமும் பாண்டியர்களுக்கு வருந் துன்பத்தைத் தீர்க்கும் சோம சுந்தரக்கடவுள், முன்போலவே நான்கு மேகங்களையும் பார்த்து இந்த மதுரையின் நான்கெல்லையிலும் சூழ்ந்து, நான்கு வீடாகிப் பொழிகிற ஏழுமேகங்களையும் விலக்குங்களென் றனுப்ப, உடனே வந்து நான்கு திக்குகளிலும் சூழவளைந்து, நான்கு மாடமாகிச் சந்துவாய் தெரியாமல் ஒருபெரிய குடிலாய், வீடுகள் கோபுரங்கள் முதலியனபோல நின்று அசையாமற்றாங்க, அந்த நான்கு மாடத்துள் சதுரங்க சேனைகளும்' பட்டணத்து ஜனங்களும், மற்ற சராசரங்களும், மந்திரிகளும் அரச னும், முன்னாளிலும் இந்நாளதிக சுகமாக வாழ்ந்திருந்தார்கள்.

அப்போதுயர்ந்த மலைமேற் பொழிவதுபோலப் பொழியும் துளி கள் உடைந்து தெரிக்க, ஏழு மேகங்களும், கடல்களும் வற்ற வாங்கித் தங்களுடல்களும் வற்றப்பெய்து வருணனும் நாணிநடுங்கி மிகுந்த பய மும் மானமும் மேன்மேலாகக் கருவமுங் குலைந்து, பின்னும் மனத் துள்ளே ஓர் மகிழ்வு தோன்றப் பொற்றாமரைத் தீர்த்தத்தின் கரை யணுகு முன்னே தன் வயிற்றுநோய் தீர்ந்து அதில் மூழ்கிப் பாசதர னை வருணன் மீளாத பேரன்புகொண்டு, கடவுளைப் பூசைபண்ண வேண்டித் திருவெண்ணீறு தரித்து, உருத்திராக்ஷ மாலிகை பூண்டு, கங்கை முதலிய நவநதிகளும் பொற்குடத்தில் திருமஞ்சனம் முகந்து கொடுக்கப் பூவுஞ் சந்தனமும் கஸ்தூரியும் ரத்தினாபரணங்களும் பசும் பொன்னுடையும் பிறவுங் கற்பகங் கொடுக்கப் பஞ்சாமிர்தமும் பஞ்சகௌவியமும், திருவமுதும், தூபம், தீப மிவைகளைக் காமதேனு கொடுக்க, அங்கயற்கண்ணி நாயகனைப் பூசித்துச் சகஸ்திர நாமார்ச் சனையும் முத்துமாலையுஞ் சாத்தி வணங்கி நிற்க, அந்தப் பூசையை மகிழ்ந்துகொண்ட முதற்கடவுள், வருணனே! உனக்கு வேண்டிய தென்னவென்ன, வருணன் சுவாமி! ஒருவிதத்தாலும் தீராத என் வயிற்றுநோய் இந்தத் தீர்த்தத்தில் மூழ்கித் தீர்ந்தேன், வேதங்க ளாலும் காணாத தேவரீரது பெருமையை நானோ காணவல்லேன். தேவரீரோ குற்றத்தைக் குணமாகக் கொள்ளவல்லீர். ஆனாலும் இந் திரன் இங்கு வந்து காலதாமதமாய் அர்ச்சனை பண்ணிவந்த சோர்வு கண்டு, இந்தச் சோர்வு உனக்கேன் வந்த தென்ன? அந்த இந்திரன் பாண்டியனாலே நேரிட்டதென்ன; பின்பு அவன் சொன்னபடியே நான் தேவரீரைச் சோதித்து, கங்கையையும், சந்திரனையும் திருமுடி யில் தரித்தருளிய கிருபைக் கடலே! அடியேனுக்குண்டாகிய வயிற்று நோயேயன்றி அநாதியே மாறுபட்டு வருகின்ற இருவினையும் ஆணவ மலத்தின் வலிமையுங் கெட, மோக்ஷமடைய வேண்டுதற்குச் சாதன மாயுள்ள மார்க்கத்தையும் பெற்றேன், இனி வேறே மந்திரமேன்? ஔஷதமேன்? ஒன்றும் வேண்டுவதில்லை. உண்மையாக ஆராய்கின் றவர்களுக்கு இந்தப் பரிசுத்தம் பொருந்திய பொற்றாமரைத் தீர்த்தமே அவர்களுக்கு உண்டாகிய எல்லாப்பிணிகளையும் தீர்க்கின்றதன்றோ? என்று துதித்து, அடியேன் முன்னே செய்த அபராதங்க ளிரண்டை

யும் பொறுத்தருள வேண்டுமென்று சில வரங்களும் வேண்டிப் பெற்றுக்கொண்டு, மேற்றிசைக் கடவுளாகிய வருணன் சென்றனன். அக்காலத்தில் வருணன் பெய்தமழையைத் தடுக்கக் கடவுளினது மின்னல்போல் விளங்கும் சடையினின்றும் நீங்கிய மேகங்கள் நான்கும் குன்றுபோல் உயர்ந்து நான்கு கூடமாகக் கூடினதினுலே அன்றுமுதல் மதுராபுரிக்கு நான்மாடக் கூடலென்றும் ஒரு பெயருண்டாயிற்று.

நான்மாடக் கூடலான படலம் முற்றிற்று.

---

இருபதாவது

# எல்லாம் வல்ல சித்தரான படலம்

கலிநிலைத்துறை

சத்த நான்மறைப் பொருள்வரை தள்ளுநீண் முடிமேல்
வைத்த கார்கணுன் மாடமாய் மதுரைமேல் வருணன்
உய்த்த மாரியைத் தடுத்தவா றுரைத்துமே றுயர்த்தோர்
சித்த ராய்விளை யாடிய செயல்சிறி துரைப்பாம்.

உரை; சத்தவடிவாகிய நான்கு வேதங்களின் பொருளளவைக் கடந்துள்ள சோமசுந்தரக் கடவுள் தம்முடைய நீண்ட திருமுடியில் மீது உலாவவைத்த மேகங்கள் நான்மாடக்கூடலாகி, மதுரையின்மீது வருணனேவிய மேகங்களைத் தடுத்த திருவிளையாடலைச் சொன்னேம். இனி இடபக்கொடியை யுயர்த்திய அச் சோமசுந்தரக்கடவுள் எல்லாம் வல்ல சித்தராக விளையாடிய திருவிளையாடலையுங் கொஞ்சம் சொல்லுகின்றேம்.

அபிஷேக பாண்டியனும் அந்தப் பாண்டி நாட்டாரும் உயர்ந்த செல்வத்தைப் பெற்று, வீட்டையும் அடையவேண்டி அந்த நான்மாடக் கூடலில் விளங்குகின்ற குணங்குறி கடந்த கடவுள், நீண்ட சடையும், பூணுநூன்மார்பும், பூசின விபூதி மேலணிந்த பொட்டும், இரண்டங்குலங்கள் தொங்கவிட்ட வெள்ளை முத்திரையும், தோலால் விரித்துத் தரித்த அரைஞாணும், விபூதிப் பொக்கணந் தொங்குகின்ற தோளும் படிகமாலையும் கையில் விளங்குகின்ற கட்டங்கமும், உதர பந்தனமும், வேங்கைத் தோலால் கட்டிய கோவணமும், புலித்தோலுடையும், இடத்தோளிலிட்ட யோகபட்டிகையும். பொற்பிரம்பும், பாதங்களிலணிந்த வேதகிண்கிணிகளும், உபநிடதமாகியபாதுகையும் பூண்டு, புன்னகையும், குறுவேர்வையு முகத்திலே தோன்றச் சச்சிதானந்த வடிவாகிய சித்தராய் வந்து கடைவீதி சித்திரகூடம், நாற்சந்தி, வீதி, சூளிகை, உபரிகை, மாளிகை வாயில், தெற்றி என்கிற விடங்களெல்லாம் திரிந்து, தெற்கே யிருப்பவர்போல வடக்கே போயிருப்பதும், கிழக்கே யிருப்பவர்போல மேற்கே போயிருப்பதும், எல்

லாருந் தேடிக் காணுதபடி, இந்திரஜாலமாக மறைந்தும் எல்லாருங் காணத் தூரத்திலிருக்கிற மலையைச் சமீபத்தில்வரச்செய்தும், சமீபத்திலிருக்கிற மலையைத் தூரத்தில் போகச் செய்தும் கிழவனைக் குமரனுக்கியும், குமரனைக் கிழவனுக்கியும், ஆணைப் பெண்ணுக்கியும், பெண்ணை ஆணுக்கியும், மலடியைப் பிள்ளைபெறச் செய்தும், கூன் - செவிடு - குருடு - ஊமை - முடம் இவைகளைத் திருத்தியும், இரும்பு செம்புகளைத் தங்கமாக்கியும், செல்வர் வீட்டிலுள்ள பொருள்களெல்லாம் எளியவர் வீட்டில் வரச்செய்தும், சிநேகர்கள் பகைக்கவும், பகைவரைச் சிநேகிக்கவும், எட்டிமரத்தில் மாங்கனி பழுக்கவும் இப்படி வித்தைகளாடி, நீர் வராதகாலத்தில் வைகையாற்றிலே நீரை வரச் செய்தும் வந்தநீரை வற்றச்செய்தும், நல்ல தண்ணீர் குளங்களையும் ஓடைகளையும் உவர்ப்பாகச் செய்தும், உவர்ந்த நீர்க்கிணற்றை நல்ல நீராகச் செய்தும், மாத்திரக்கோலை உயரவெறிந்து நிறுத்தி அதன் மேலூசியை நிறுத்தி, அதன்மேல் காற்பெருவிரலை யூன்றி ஆடியும், அந்த ஊசிமேற் றலையும் ஆகாயத்திலே கால்களுமாகச் சுழன்று கருடனைப்போலே பறந்து மேகத்தைப் பிடித்து இடியுடனே குடித்துப் பார்த்தவர்களுக் கதிசயந்தோன்ற அந்த நீரைப்பிழிந்தும் பழையபடி ஆகாயத்திலே போக மேகத்தைவிட்டும், இராக்காலத்தில்உண்டாகிற பொருள்களைப் பகற்காலத்திலே காணச்செய்தும், பகற்காலத்திலே உண்டாகிற பொருளை இராக்காலத்திலே காணச்செய்தும் அக்கினித் தம்பம் ஜலத்தம்பம், வாயுத்தம்பம் முதலிய விநோதங்களைச் செய்தும், பீளை யொழுகுகிற கண்களையுடைய கிழவனைப் பிரம்பினுலே தடவி யௌவன குமாரனுக்கி, ஈளைவாய்க் கிழவியை மங்கைப்பருவப் பெண்ணுக்கிக் கூடச்செய்து, கருப்பமுண்டாக விபூதி கொடுத்தும், அகர முதல் மூன்ருகிய ஆக்ருஷணமும், அதிரிஸ்யமும், அஞ்சனவித்தையும், வகரமுதல் மூன்ருகிய வசியம், வாதம், வயத்தம்பம் இவைகளைச் செய்தும், வேதசாஸ்திரங்களைத் தெரியாதவர்கள் நாவிலே விபூதி சிந்தித் தெரிந்தவராகச் செய்தும், பாண்டியன் மனைவிகளோடு சஞ்சரிக்கின்ற பூஞ்சோலையில், நீண்ட தென்னைமரத்தைப் பனைமரமாகச் செய்தும், மற்ற மரங்களையும், பக்ஷிகளையும், யானை முதலிய விலங்குகளையும், ஒன்றையொன்ருகச் செய்தும், தம்மைக்கண்ட புருஷர்கள் பெண்ணுகி யணைய வேண்டுகிற அழகிய வடிவங்கொண்டும், பாதாளலோகம் மேலுலகங்களிலுள்ள பொருள்களெல்லாம் மதுரையிலே காணச் செய்தும் இப்படி அநேக வித்தைகள் செய்து கொண்டுலாவுகின்ற சித்த யோகிகளுடைய திருவிளையாடலின் மேல் மனதைச் செலுத்திக் கண்கள் வாங்காமற் பார்த்துத் திகைத்துப் பிராமணர் முதலிய வருணத்தா ரெல்லோரும் தங்கள் தங்கள் செய்கைகளை மறந்து, இந்த வேடிக்கைகளைப் பார்த்திருப்பதை உழையராலே பாண்டியனும் தெரிந்து, அந்தச் சித்தரை அழைத்து வாருங்களென்று சிலரை யனுப்ப, அவர்கள்வந்து சித்தரைக்கண்டு அவர் செய்கிற வித்தைகளை அதிசயித்துப் பார்த்துக்கொண்டிருக்கப் பின்னும் பாண்டியன் மந்திரி

களை யனுப்ப. மந்திரிகள் வந்து சித்தரை வணங்கி அரசன் சபைக்கு வரவேண்டுமென் றழைக்க, அதற்கு எல்லாம்வல்ல சித்தர், அந்த அரசனாலே எமக்கென்ன பிரயோசனம்? நாம் வாரோமென்ன, மந்திரிகள் சென்று சித்தர் சொன்னதைச் சொல்ல, அதைப் பாண்டியன் கேட்டுக் கடவுளருளைப் பெற்று இம்மை, மறுமை இன்பங்களை வெறுத்த யோகிகள், இந்திரன், பிரமன், விஷ்ணு முதலியோர்களையும் மதியாரென்றால் என்னை இந்தச் சித்தர் மதியாதிருப்ப தருமையோ வென்றிருந்தான்.

எல்லாம் வல்ல சித்தரான படலம் முற்றிற்று.

---

இருபத்தொன்றாவது

## கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்

*கலிநிலைத்துறை*

*செல்லார் பொழில்சூழ் மதுராபுரிச் சித்த ரெல்லாம்*
*வல்லர் ராவரா டலையா ருரைசெய்ய வல்லார்*
*எல்லாரும் வியப்புற வித்தனிச் சித்த சாமி*
*கல்லானை தின்னக் கரும்பீந்த கதையுஞ் சொல்வாம்.*

உரை: மேகங்கள் சஞ்சரிக்கும் சோலைகள் சூழ்ந்த மதுரையின் கண் எல்லாம் வல்ல சித்தராகத் திருவிளையாடலைப் புரிந்தவரது மகிமையை யாவர் அளவிடத் தக்கவர்கள். இனி யாவர்களும் அதிசயிக்கும்படி இந்த ஒப்பற்ற சித்தசாமியானவர் கல்லானை கரும்பருந்தும்படி கொடுத்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

பின்பு அன்பும் பயமும் தோன்றி, அபிஷேகபாண்டியன் என்ன காரணம் பெரியோரை மதியாமல் இங்கு வரும்படி சொன்னேன். இனி நான் வரச்சொன்னது குற்றமானால், நானே போய்க் காணத்தக்கதென்று, அன்று தைமாசப் பிறப்பானதினாலே மதுரேசனை வந்து கண்டு சேவித்துச் சந்நிதானத்துக்குள்ளே பிரதக்ஷிணமாக வருவதற்கு முன்னே எல்லாம்வல்ல அந்தச் சித்தர், அரசன் குறிப்புத் தெரிந்து, முந்தி இந்திரவிமானத்துக்கு மேற்றிசையில் வந்திருக்கப் பிரதக்ஷிணம் வருகிற அரசனுக்கு முன்னே சந்தடி விலக்கி வருகிற சேவகர்கள், வேங்கைத்தோ லாசனத்தின்மேல் பஞ்சேந்திரியங்களையும் வென்ற கோலத்துடனே யோக பட்டத்தராய்க் கட்டங்கத்தி லேறிட்ட கையராய் வீற்றிருக்கின்ற சித்தரைக் கண்டு, கோலாலே தொட்டு எழுந்து அப்பாலேபோ அரசன் வருகிறாரென்று சொல்ல, உடனே பின்னே வருகிற பாண்டியன் சித்தரைப் பார்த்து, உம்முடைய ஊரேது? பேரேது? உமக்கு என்னென்ன தெரியும்? உமக்கு இப்போது வேண்டியதென்ன? சித்தரே சொல்லுமென்று

கேட்க. சித்தர், அப்பா! நாம் எந்த நாட்டிலும் எந்த ஊரிலும் சஞ் சரிப்போம். ஆனாலும் இப்போது ஆனந்தகானந் தொடங்கி இவ் விடங்களிலுள்ள சிவஸ்தலங்களெல்லாம் வணங்குந் தற்பரமாகி வந் தோம். நாமிருப்பது காஷ்மீர நாட்டிலுள்ள ஸ்ரீகாசியே. பரதேசி களே எமக்கு உறவினர். தினந்தோறும் வித்தையாடித் திரிகிற சித் தரேயாம். இந்த மதுரை இம்மையில் சீவன்முத்தியும், மறுமையில் விதேகமுத்தியும் தருவதாதலால், இங்கிருந்து எம்முடைய விளையாடல் களைக் காட்டி யிவர்களுக்கு வேண்டிய சித்திகளும் தருவோம். இன்ன மும் வேதமுதலிய கலைஞானங்களெல்லாம் தெரியும். அல்லாமலும் யாராருக்கு என்னபொருள்கள் வேண்டுமோ அவைகளையெல்லா மெங் கிருந்தாலு மழைத்துக்கொடுக்கிற எல்லாம்வல்ல சித்தரென்று பெயர் கொண்ட நாம் உன்னாலே பெறவேண்டிய பொருள் யாதிருக்கிற தென்று உள்ளுக்குள்ளே சிரித்தார். அதைக் கண்ட பாண்டியன் இந்தச் சித்தருடைய பெருமையும், களிப்பும், மதிப்பும் நான் கண்டறி கிறேனென்று ஆலோசிக்கும்போது, அங்கே யொருவன் யாவரும் கழுகென்று நினைக்கும்படி ஒரு பெரிய கரும்பைக் கையிலேகொண்டு சித்தர்முன்னே செல்ல, அதைக்கண்டு பாண்டியன் தன் கையிலே வாங்கிக்கொண்டு முன்னே நின்று, ஒய் சித்தரே! வல்லாரில் வல்லே மென்று மதித்திருக்கிற நீர் இந்தக் கல்லானை இதைத் தின்னும்படிச் செய்தீரானால் எல்லாம்வல்ல சித்தரும் நீரே; இந்த மதுரைப் பெரு மானும் நீரேயன்றி வேறே யாருண்டு. ஆகையாலே உம்முடைய மன தில் விரும்பிய பொருள்களெல்லாம் தருவேனென்று சொல்லக்கேட்டுச் சித்தர் பாண்டியனே வருக வென்று குறுநகைசெய்து உன்னாலே எமக்கு வேண்டிய தொன்றுமில்லை. நாமே உன்னுடைய தீரவேண்டி யவை தருவோம். ஆனால் உலகத்தில் தூரதேசங்களிலே சென்றாகி லும் ஒரு வித்தை கற்றுவந்தால் கற்றவன் எல்லோராலும் நன்கு மதிக் கப்பட்டுப் பெரும்பயனை யடைவான். நாமோ எல்லாந் தெரிந்தோ மாகையால் எமக்கொரு பொருளிலும் ஆசையில்லை. ஆனாலும் இந்தக் கல்லானை இந்தக் கரும்பைத் தின்ன நீ பார்ப்பாயாக வென்று கடைக் கண்ணாலே சைகைசெய்ய, உடனே அந்தக் கல்லானை மும்மதங்களும் மழைபோலொழுக மேருவும் நடுங்கும்படி முழங்கித் துவாரம் பொருந் திய கையை நீட்டிப் பாண்டியன் கையிலிருந்த கரும்பைப் பிடுங்கிக் கடைவழியே சிந்துகிற சாற்றில் வண்டுகள் வந்து மொய்க்க, மென்று தின்று குதட்டிச் சாறுகுடித்துக் கையூசலாடக் களித்துத் தன்னிழலைக் கண்டு சீறி நிமிர்ந்த உயிருள்ள யானையாய் நிற்கப் பின்னும் சித்தர் கடைக்கண் காட்ட, உடனே பாண்டியன் கழுத்தின் மாலையை எட்டிப் பறித்தது. அதற்குப் பாண்டியன் கண்கள் சிவந்து சித்த மூர்த்திகளைப் பார்த்துக் கோபங்கொள்ள சமீபத்திலிருந்த சேவகர் கள் கோபித்துச் சித்தரை அடிக்கத்தொடங்க, அப்போது சித்த சாமி குறுநகை கொண்டு, அடிக்கவந்தவர்களைக் கையால் நில்லுங்க ளென் றமைக்க, அந்தச் சேவகர்கள் வைத்த கால் பெயர்க்க மாட்

டாமல் சித்திரம்போ லசையாது நிற்க, அது கண்டு பாண்டியன் கோப மாறி அன்பு பெருகி அதிசயித்துச் சித்த சுவாமிகளுடைய திருவடி களிலே தனது திருமுடிபட வணங்கிப் பேதைனாகிய அடியேன் செய்த குற்றத்தைப் பொறுத்து இரட்சிக்க வேண்டுமென்று துதிக்க, அப் போது அன்புக்கிரங்குகின்ற கருணைக்கடலான கடவுள் சந்தோஷித் துப் பாண்டியனே உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்கக் கடவா யென்னப் பாண்டியன் வணங்கி, ஸ்வாமி! எனக்கு நல்ல புத்திரனுண் டாக வேண்டுமென்ன, அப்படியே அவனுக்கருள் செய்து முத்துமாலை யைப்பறித்த யானைமேல் கிருபாதிருஷ்டிசெய்ய, அந்த யானை கையை நீட்டி முத்துமாலையைக் கொடுக்கப் பாண்டியன் வாங்கிக்கொண்டு முன்னின்ற சித்தசுவாமியைப் பார்க்கக் காணுமல், யானையும் பழைய கல்லானையாய் நிற்கக்கண்டு பயந்து, இந்தத் திருவிளையாடல் செய்தது எங்களுக் குயிராகிய சோமசுந்தரக் கடவுளேயென்று சந்நிதிமுன் வந்து நின்று, சுவாமி! உம்மைச் சோதிக்கத்தகுமோ? அறிவீனனாகிய நான் செய்த குற்றத்திற்கு அபராதம் தருகிறேனென்று கொடுத்துக் கைகுவித்து நின்று,

கொச்சகக் கலிப்பா

வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தின்
நீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியாய்
ஆதியா யீறாய் நடுவா யவைகழிந்த
சோதியாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே.

நின்னான் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்
பன்னா ளருச்சித்தும் பாதந் தலைசுமந்தும்
உன்னாம வாசித்து முன்னையறி யேனென்று
சொன்னா லடியனேன் சோதனைத்தோ நின்னியல்பே.

பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினுஞ் சிறியதுமாய்
அரியதினு மரியதுமா யெளியதினு மெளியதுமாய்
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமா யவைகடந்த
துரியமுமாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே.

என்று இப்படித் தோத்திரஞ் செய்து அரண்மனைக்கு வந்து சோமசுந்தரக்கடவு ளருளின்படியே விக்கிரமன் என்கிற புத்திரனைப் பெற்று வெகுகாலம் பழையபடியே நீதி செலுத்திப் பின்பு விக்கிரம பாண்டியனுக்குப் பட்டங்கட்டி ஜிதேந்திரியனாய்ச் சித்தசாமி திருவரு ளுக்கத்தாலே யுண்டான பேரின்பத் தேனிலே விழுகின்ற வண்டு போலக் கலந்திருந்தான் அபிஷேகபாண்டியன்.

கல்லானைக்குக் கரும்பருத்திய படலம் முற்றிற்று.

———

## இருபத்திரண்டாவது

# யானை யெய்த படலம்

கலி விருத்தம்

கட்டவிழ் கடுக்கையர் கலானைகழை தின்ன
இட்டதிது பஞ்சவ னிடத்தமண ரேவி
விட்டமத யானைவிழ மேவலர் புரத்தைச்
சுட்டகணை விட்டுயிர் தொலைத்தமுறை சொல்வாம்.

உரை: முறுக்கவிழ்ந்த கொன்றைமலர் மாலையைத்தரித்த சோம சுந்தரக் கடவுள் கல்லானையானது கரும்பு தின்னும்படிச் செய்த திரு விளையாடலிதுவாகும். இனிப் பாண்டிய னிடத்தில் சமணர்கள் ஏவிய மதத்த யானையானது விழும்படி முப்புரங்களையு மழித்த பாணத்தை விட்டு அதனுயிரைப் போக்கிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்

அந்த அபிஷேகபாண்டியன் குமாரனான விக்கிரமபாண்டிய னானவன், எட்டுதிக்குந் தனது செங்கோல் செல்லத் திறைகொண்டு செல்வம் பெருகி வறுமைபோக, ஆக்ஞாசக்கரம் செலுத்திப் புத்தர் - சமணர் முதலிய புறச்சமயங்களைக் களைந்து வேதாகமப் பயிரை விளை யச் செய்து, உண்மையாகிய விதிப்படி பத்தியால் வரும்பயனை எல் லாரு மனுபவிக்க, மனுநீதி செலுத்தி இந்திரவிமானத்துக்கு வடபக்கத் தருகே கோயிலுண்டாக்கி அருவமு முருவமு நீங்கிவந்து விளையாடின சித்தமூர்த்திகளின் திருவுருவைப் பிரதிஷ்டை செய்து, திருப்பணி களுஞ் செய்துகொண்டு வருகிற நாளிலே, சூரியகுலத்திலே பிறந்த சோழனொருவன், வஞ்சகனாய்க் காஞ்சிபுரத்திலே சமணர் கோட்பாடு கொண்டு விக்கிரமபாண்டியனுக்கு விரோதியாய்ச் சோமசுந்தரக் கடவுள் திருவடித் தியானமே நிறைந்த மனத்துடனே வீரசிங்கம்போல் விளங்குகின்ற விக்கிரமபாண்டியனுடனே நேரே போர் செய்து வெல்லமாட்டாமல் வஞ்சனையினாலே ஜெயிக்க நினைத்து, அஞ்சனம் - கிரவுஞ்சம்-கோவர்த்தனம் - திரிகூடம் - காஞ்சி - குஞ்சரசையம் - ஏம கூடம்-விந்தமென்கிற எட்டுமலைகளிலும் வாசஞ் செய்கிற சமணாசாரி யர்களுக்கெல்லாம் ஓலையனுப்பி வரவிட, அங்கங்கிருந்த சமணர்க ளெண்ணாயிரம் பேரும் உடம்புபோல உள்ளமு மிருண்டு ஆத்திமாலை யணிந்த சோழன் வரவிட்ட ஓலைகளை வாசித்துத் தெரிந்து, அந்தந்த மலைகளைவிட்டு மேகங்கள்போ லிறங்கி, எல்லாரு மொருமித்துக் கூடி இருளானது திரண்டு வந்தாற்போலக் காஞ்சிநகர் வந்து சேர்ந்து, சோழன் அரண்மனைப் புறத்திலிருந்து அரசன் யேவலராலே அவனி ருக்குமிடத்திலே சென்று, சோழன் முடிமேலே மயிற்பீலியை வைத்து ஆசீர்வதித்து வாழ்த்த, அப்போது சோழன் அவர்களைப் பார்த்து வசிய முதலான ஆறு வித்தைகளிலும் வல்லோர்களே! இப்போது நீங்கள் அபிசாரஞ்செய்து பாண்டியனைக் கொன்றால் உங்களுக்கு என்

னுடைய நாட்டிலே பாதி கொடுப்பேன். நீங்கள் போய் அது செய்யுங்க ளென்றான்.

அதற்குத் தவத்தைச் செய்தும் அவத்தையே செய்யும் சமணர்கள் ஓமென வுடன்பட்டுப் போய், பாலியாற்றங் கரையிலே மூன்று காதவழி யகல நீளமாக யாகசாலை வளைத்து யோசனை யகலங் குழி கல்லி, எட்டுக் கோணமாக வேள்விக் குண்டஞ் செய்து எட்டுச்சாதி விறகிட்டு வேப்பநெய் கலந்து விஷசெந்துக்களின் மாமிசமும். மிளகுப் பொடியும், ஊற்றெண்ணெயும், அகன்றகுழி நிறையப் பெய்து, உயிர் கொல்லாத விரதிகள் உயிரைக் கொல்லுங் கொடிய பழிப்பைத் தருகிற வேள்வி செய்தார்கள். அப்படிச் செய்யும்போது காடுகள்-பொதும்பைகள் - நந்தவனங்கள் - சோலைகள் யாவும் கருகிப் பக்கத்திலுள்ள ஓடைகள்-வாவிகள்-குளங்களெலாம் வற்ற மேகங்களுந்தீயச் சுவாலை கொண்டு கிளம்புகிற நெருப்புக் குழியிலே யமனைப்போலவும், அஞ்சன மலையைப் போலவும், காற்று வீசுகின்ற காதுகளும், வாயிலே கிளைத்திருக்கிற கொம்புகளும், மாருதூறுகிற மதமும், ஊசலாடுகிற ஒற்றைக் கையுமாக விஷப்போற்சீறி, யார்க்கு மஞ்சாத ஒரு யானை யெழுந்தது. அந்த வேள்வி நெருப்புமவிய மும்மதமுஞ் சோரவந்த யானையை, நீ போய் பாண்டியனை மதுரையுடனே அழித்து வாவென்று எண்ணாயிரஞ் சமணர்களும் ஏவினார்கள். உடனே அந்த யானை ஈரமில்லாத நெஞ்சினராகிய சமணர்கள் துர்ப்போதனையினாலே, நல்ல ஞானமும் வைதிகானுஷ்டானமு மில்லாத சோழனுடைய சேனைகள் சூழ்ந்துவர, இடிபோல் முழங்கிப் பூமியுங் கிழியப் பாதாளத்திலே கால்கள் பதியவும், அண்ட முகட்டிலே தலை மோதவும், ஊழிக்காற்றைப் போலக் காதுகள் காற்று விசவும், அக்காலத்துக் கடல்போல் மதங்கள் பெருகவும், வடவாக்கினியைப்போலே கண்கள் நெருப்புமூளவும், இதன் மத நாற்றந் தெரிந்து திக்குயானைகளஞ்சவும் புறப்பட்டு, மேகத்தின் வயிற்றைக் கிழித்து அதனிடிகளைக் கீழே உதிர்த்தும், தான் முழங்குதலினாலே திக்குகளைச் செவிடாக்கியும், துவாரம் பொருந்திய துதிக்கையை நீட்டி, ஆகாயத்தை யளாவிய மலையைப் பிடித்து அதனைக் கடலிலே சுழற்றியும், உரல்போலுங் கால்களை யூன்றி யமன்போல் வருகிற யானையின் வரவைக் கண்டவர்கள் போய்ச்சொல்ல, விக்கிரம பாண்டியன் கேட்டு, மனஞ்சுழன்று கொதித்து யானைகள் தாங்குகிற இந்திர விமானத்தையுடைய கோயிலினுள்ளே போய்ச் சோமசுந்தரக் கடவுளை வணங்கித் துதித்து, இந்த யானையைக் கொன்று எங்களை இரட்சிக்க வேண்டுமென்று வேண்ட, அப்போது ஆகாயத்தினின்று ஒரு திருவாக்குண்டாயிற்று.

எப்படியென்றால், ஓ பாண்டியனே! நாம் ஒரு வில்வீரனாகி அனுப்பினவர்கள் பெருமை குறைய, அந்த யானையைக் கொல்வோம். நீ முன்னே சென்று இந்த நகருக்குக் கீழ்த்திசைப் புறத்திலே ஒரு அட்டாலை மண்டப முண்டாக் கென்ன, அது கேட்டுப் பாண்டியன்

உள்ளே பெருமகிழ்வு கொண்டு பொன்மயமான தூண்கள் திசைக்கு நன்னான்காகப் பதினறு தூண்கள் நிறுத்தி அட்டாலை மண்டபம் அதிக விரைவிலே செய்து முடிக்க, அந்த மண்டபத்தில் சோமசுந்தரக்கடவுளாகிய வில்வீரன் இருசெவிகளிலே சங்கக்குழை இரண்டு சந்திரர்போல விளங்க வணிந்து, பிரமனாகிய அன்னமுங் காணாத திருமுடியிலேமயிற்கலாபஞ்சூடி, இடையிலே செங்கச்சுக்கட்டி, உடை வாளு மிறுக்கி வேதங்க ளரற்றும் சிலம்பு முழங்க வீரகண்டாமணியும் முழங்காலின் கீழே கட்டி, அம்பறாத்தூணியும் முதுகின்புடை தோன்றக் கட்டித் தோளில் தரித்த வில்லுடனே பசிய வுருக்கொண்டு மன்மதனும் மயங்கும்படியான யௌவன பருவத்துடனே வந்தேறிப் பாண்டியன் இடுக்கண் தீர்க்க, யானை வருவதைப் பார்த்து, ஐந்து கூப்பிடு தூரத்தில் அது வர, வில்லைவளைத்து நாணேற்றிக் குணத் தொனி பண்ணிச் சிங்கநாதஞ்செய்து, இடக்கையிலே வில்லைக் கொண்டு நாரசிங்க பாணத்தைத் தொடுத்து, இடக்கால் முன்னே செல்ல, வலக்காதளவு வாங்கிவிட, அது சென்று அந்த யானையின் மத்தகத்தைக் கிழிக்க, உடனே அந்த யானை மேகம்போலக் குமுறிக் கீழே விழுந்திறந்தது. அது அப்படிச் செத்தபின்பு, திக்குயானைகள் தங்கள் பயந்தீர்ந்து நிலைநின்றன. கடவுள் காலால் உதையுண்டு விழுந்த யமன்போல வந்த யானை விழ, மார்க்கண்டேயரைப் போலப் பாண்டியன் காண, யானையின் கூட வந்தவர்கள் யமதூதர்போலப் பயந்தோட, இருள்முகத்திலே தோன்றின உதயசூரியன்போல அதன் நெற்றியிலே நின்று உதிரம் பெருகச் சோழனது கொடுங் கோலாகிய யானையைப் பாண்டியன் செங்கோலாகிய நாரசிங்க பாணம் கொல்லச் செத்த யானைமேல் கழுகு-பருந்து-காகம்-பேய்-பூதங்கள் மொய்க்கக்கண்டு, பாண்டியன் மனமகிழ்ந்து, கூடவந்த சமணர்களைச் சீற, உடனே அரசன் குறிப்பறிந்து வீரர்கள் சென்று அவர்கள் கையிலே கொண்ட தடிகளை முறித்துச் செம்புகளை உடைத்து, மயிற்பீலியையும், கட்டின பாயையும் கிழித்து வாய்க் கால்களிலே போகவிட்டு, மானங்கெடுத்துச் சிலரைத் துரத்தினர்கள். சிலர் அடிபட்டுத் தாங்கள் செய்த கபடமுங்கெட்டு பாவமும் பழிப்பும் மிகுந்து மழுங்கின தலையினராகிய சமணர்கள் வருந்தித் துக்கித்து உடுத்தின பாயும் கையில் செம்புமில்லாமல் ஓடிப்போனர்கள். பின்பு யானையைக்கொன்று அட்டாலை மண்டபத்திலே நின்ற விற்சேவகன் பாதங்களைப் பாண்டியன் தனதிருகையாலும் பற்றிக்கொண்டு சுவாமி! தேவரீர் இந்த வடிவாகவே இங்கிருக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்ள, அதற்குடன்பட்டுக் கடவுள் அவனுக்கு வேண்டிய வரங்களுங் கொடுக்கப் பாண்டியன் பரமசிவனைக் காலந்தோறும் வந்து வந்தனை வழிபாடுசெய்து கொண்டுவருகிறநாளில், இராஜசேகர னென்றொரு புத்திரனைப்பெற்று உலகத்தை ஆண்டுவந்தான். இது நிற்க; சோழன் அனுப்பின யானையாகிய மலையில் சரபவடிவு கொண்ட கடவுள் வில்வீரனய்விட்ட நாரசிங்கபாணம் தங்கிநின்றது,

முன்னே உலகத்தையெல்லாம் அழித்து மீளவு முண்டாக்குகின்ற உருத்திர சத்தியிற் சிலபெற்று, இரணியனை மார்புபிளந்த சிங்கத்துக்கு நாயகனை உரோமசமுனி வந்து தரிசித்து அநேக தவங்களைச் செய்து தன்பேராலே ஒரு தீர்த்தமு முண்டாக்கி மேலான பலனை யடைந்தான். பிரகலாதனும் வந்து தவஞ்செய்து வேண்டிய வரங்களைப் பெற்றான்.

யானை யெய்த படலம் முற்றிற்று

———

இருபத்திமூன்றாவது

## விருத்த குமார பாலரான படலம்

கலிநிலைத்துறை

*தழையு லாங்கைய ரேவிய தந்திமேல் விடைமேல்*
*அழகர் சேவகஞ் செய்தவா றறைந்தன மவரே*
*கிழவ னாகிப்பின் காளையாய்க் கிஞ்சுகச் செவ்வாய்க்*
*குழவி யாய்விளை யாடிய கொள்கையைப் பகர்வாம்.*

உரை: மயிலிறகாகிய தழையைக் கையிலே கொண்டிருக்கின்ற சமணர்கள் ஏவிய யானையின்மீது விடைமேலழகராகிய சோமசுந்தரக் கடவுள் சேவகஞ்செய்த திருவிளையாடலைச் சொன்னோம். இனி அந்தச் சோமசுந்தரப் பெருமான் கிழவனாகியும், குமரனாகியும், குழந்தையாகியும் விளையாடல் புரிந்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அதன்பின்பு விக்கிரமபாண்டியன் அரசாக்ஷிசெய்து வருங் காலத்தில் மதுரையில் விருபாக்க னென்றொரு பிராமணன், அவன் மனைவி அருந்ததிபோலுங் கற்புள்ள சுபவிரதை ஆகிய அவ்விருவருக்கும் பிள்ளையில்லாமல் அநேக புண்ணிய விரதங்களை அனுஷ்டித்துப் பின்பு சத்தமாதர்களிடத்தி லன்புகொண்டு மகா தவங்களைச் செய்து ஒரு பெண்பிள்ளையைப் பெற்றுக் கௌரி யென்கிற பெயரிட்டனர். அப்பெண் ஐந்துவயதில் தன் பிறவிப் பிணியைத் தீர்ப்பதற்கான உறுதிகொண்ட மனத்தையுடையவளாய்த் தன் தகப்பனை வணங்கி, ஐயா! இந்தப் பிறவி தீரும்படியான தெய்வமந்திரம் யாதென்று கேட்க, அதைக்கேட்ட அந்த விருபாக்கன் மிகவும் அதிசயித்து, அரிதான தவஞ்செய்து பெற்ற தன் மகளுக்கு மனக்களிப்புடனே தேவி மந்திரத்தை யுபதேசிக்க, அந்த மந்திரத்தைத் தன் பிதாவிடத்திலே தெளிந்து, நாக்குத் தழும்பேறச் செபித்து, முன்னாளிற்செய்த தவக்குறை நிறைவேறப் பிறந்த அவள் வளருங்காலத்தில், தகப்பனான விருபாக்கன் தனது தவப்புத்திரிக்குத் தகுந்த சைவாகமந் தெரிந்த பிரமசாரியனாய், வேதவித்தான மேம்பட்ட குலத்தவனாய், எக்காலத்தில் கிடைப்பானோவென்று மனத்துடனே சொல்லிக்கொண் டிருந்தான்.

அக்காலத்தில் அந்தப் பெண்ணுக்கு எட்டுவயதாய்க் கலியாணஞ் செய்யுங்காலம் வந்துகூட, அப்போது ஒருநாள் ஒரு வைணவப் பிரமசாரி வீடுகள் தோறும் பிச்சை வாங்கி உண்கிறவனாய், வேறோர் ஊரிலிருந்து அங்கே வந்து பிச்சை கேட்க, அவனைக்கண்ட விருபாக்கன் தன் மனையாளிடத்திலுஞ் சொல்லாமல், உறவினரையும் விசாரியாமல், அவனுக்குத் தான் வருந்தித் தவஞ்செய்து பெற்ற கௌரியென்கிற பெண்ணைக்கொடுக்கச் சம்மதித்துப் பயப்படாமல் தாரைநீரை அவன் கையில் வார்த்தான்.

அதுதெரிந்து அவன் மனைவியாகிய சுபவிரதையும், மற்ற சுற்றத்தாரும் பிச்சைக்கு வந்தவன் பெண்ணுக்கு மாப்பிள்ளை யானானென்று பெண்ணின் விதியும், பிரமசாரிப் பிராமணன் அதிர்ஷ்டமுங் கண்டு மனந்தளர்ந்து, இந்த விருபாக்கன் குலம்-கோத்திரம்-குடி-நலம்-ஒழுக்கம்-வித்தை-ஊர் முதலானவைகளை விசாரியாமல், எல்லாந்தெரிந்தவனாயிருந்தும், இப்படித் தத்தஞ் செய்தானல்லவோ? ஆனால் விதிவழியே மதிசென்றதென்று துன்புற்று, அங்கு பிச்சைக்கு வந்தவனின் குடிகோத்திரம் சூத்திரங்களெல்லாம் விசாரித்து நம்முடைய குலத்துக்குத் தக்கவனே, ஆனாலும் மாயோன் சொன்ன வைஷ்ணவ மதங்கொண்டு திரியும் குற்றமொன்றே யல்லது வேறே யாதொரு தோஷங்களு மில்லையென்று தெரிந்து இனித் தடை செய்வதெப்படியென்று கொடுக்கச் சம்மதித்தார்கள். அப்படித் தாயுஞ் சுற்றத்தாரும் சம்மதித்த பின்பு, வேதத்திலே சொல்லிய எட்டுவகைக் கலியாணத்தில் பிரமசரியமென்கிற முதற்கலியாணப்படி பெண்ணுக்கு ஆபரணங்கள் நிறையப்பூட்டி அக்கினிசாக்ஷியாய் அவனுக்கு விவாகஞ்செய்து கொடுத்தான். அதன்பின் நல்ல வரிசைகளுங் கொடுத்துத் தன் மகளை மாப்பிள்ளையினுடன்கூட அவனூருக்குப் போய்ச் சேர்ந்து வாழும்படி அனுப்பிவிட்டான். பின்பு பிச்சை வாங்கும் பிராமணன் மாப்பிள்ளைக்கோலமாய்த் தரித்திரனுக்குப் பொன்முடிப்புக் கிடைத்தாற்போல மனமகிழ்ந்து லட்சுமியைக்கூடி வருகிறவன்போலத் தன் மனையிற் போய்ப்புக, கொடிய சீலராய்ப் பொல்லாதவராய் வைஷ்ணவ மதங்கொண்டு நடக்கிற தாயுந் தந்தையும்பொருதவர்களாய் வந்தமணப்பெண்ணினுடைய சிவத்தியானமும் சைவாசாரமும் பார்த்து, வெந்திருக்கிற தங்கள் தோள்கள் போல மனமும் வெந்து, அந்தக் கௌரியை வேறாக வொதுக்கிவைத்து, அவளை விரும்பாதவர்களாய் நிந்தித்து வந்தார்கள். அப்படி நிந்தித்து வந்த மாமனும் மாமியும் ஒருநாள் தங்களுறவினரின் கலியாணமென்று வீட்டைப் பூட்டித் தனியே ஓரிடத்திலிருக்கச் செய்து தாங்கள் கலியாணம் நடக்கிற ஊருக்குப் போனார்கள். அப்படி அவர்கள் போனபின்பு, உள்ளழுக்கைப் போக்குவது திருநீறென்று உபநிடதங்கள் சொல்லத் தெரிந்தும், அது பூசாமல் மண் பூசுகின்ற வைஷ்ணவர்கள் வீட்டிலே தனியே யிருக்கிறவள், ஐயோ! எனது தோஷம்போக ஒரு சிவனடி

யாரையும் காணப்பெற்றிலேனே. இன்று என் கண்ணுக்குத் தோஷ முண்டாகின்றதே யென்று கவலை கொண்டவளாய்ச் சிவனடியார்க்கு அன்பு செய்யாத நெஞ்சே இரும்பு. அச் சிவனடியார்களுக்கு ஏவல் செய்து அவர்கள் குறிப்பின்வழி நடவாத தேகமே மரம். காது கண் முதலான வைந்தும் அவ்வடியார்கள் விஷயத்திலே செலுத்தா விட்டால் அவ்வுறுப்புகள் மரப்பாவை யுறுப்புகள். சைவ நெறியல்லாத தவநெறிகளெல்லாம் பவநெறியென்று தபித்துப் பின்னும் உயிர்களுக் கெல்லாம் உறுதி இகபரபோகம். அவ்விரண்டையுந் தருகிறவன் உயிர்களுக்கெல்லா முயிரான சிவன். அவனது ஞானம் பிறந்தவர் களுக்கு மனம் வாக்குக் காயங்களொத்த பத்திமார்க்கம் கிடைக்கும். அந்தப் பத்திவழியே நடக்கிறவர்களுக்குத் தியானவடிவு சிவனடியார் திருவேடமல்லவோவென்று துன்பப்படுகிறவ ளிடத்தில் அவள் நினைத்தபடியே சௌந்தரபாண்டியனாய் அரசாண்ட கடவுள் கௌரிக் கருள்செய்யுங் காலமிதுவேயென்று காதிலும்-கழுத்திலும்-மார்பிலும்-தலையிலும்-தோள்களிலும் - கைகளிலும் உருத்திராக்ஷங்கள் பூண்டு, தம்மைப்போலவே நெடுங்காலஞ் சென்ற ஒரு பெரிய பழைய புத்தக மூங் கக்கத்திலே கொண்டு; கெண்டைமீன் முள்ளுப்போல நரைத்த திரையும், முதிர்ந்ததிரைவுகளும், களைத்தநெஞ்சும், சரிந்த கோவணக் கட்டும், தலைநடுக்கமும் உத்தரியந்தரித்த திருத்தோளும், முப்புரிநூல் கிடந்தலையும் விபூதி யணிந்த மார்பும், விரித்தகுடையும், தடியை யூன்றக் குனிந்த நடையுங்கொண்டு தனியராய் வெகுகாலம் பட்டினி கிடந்து இளைத்தவர்போலே வருந்தி வாடி ஒரு கிழப் பிராமணராய் வந்து வீட்டிலே நுழைய, அதைக்கண்ட கௌரி, மிகுந்த அன்போடு எழுந்து மேலான பக்தியுடனே ஆசனமிட்டிருக்கச் செய்து கை குவித்து இந்தச் சிவவடிவைக் காண என்ன தவத்தை அடியேன் செய்தேனோவென்று கொண்டாட அதற்கு வந்த கிழப் பிராமணர், நான் மிகவும் பசித்து உன்னிடத்திலே வந்தேனென்ன, கௌரி எங்களவர்கள் வீடு பூட்டிக்கொண்டு போனார்களே நானென்ன செய்வேனென்ன, பிராமணர் நீ போய்க் கதவைத் தொடு பூட்டு விடு மென்ன, அப்படியே கௌரிபோய்த் தொடுமுன்னே பூட்டைத் திறக் கச் செய்து, பெண்ணே! சீக்கிரம் சமையலாக வேண்டுமென்ன, அப் போது பார்ப்பதியின் திருவடிகளில் அன்பைச் செலுத்துகின்ற கௌரியானவள் உள்ளே புகுந்து விரைவிலே சமையல் செய்து வெளியே வந்து செம்பிலே ஜலங்கொண்டு கொடுத்துச் சாப்பிட எழுந் தருளு மென்ன, எழுந்த பிராமணரின் பாதம் விளக்கி, அந்நீரை சிரசின்மேற் றெளித்துக்கொண்டு தன் மனமாசும் போக்கி, அவரை உள்ளே கொண்டுபோய் ஆசனத்தின் மேலெழுந்தருளப் பண்ணிப் பரிகலத்திலே முல்லையரும்பு போலுஞ் சோறும் - பருப்பும் - நெய்யும் பல பொரிக்கறிகளும் - பலகாரங்களும் - பழங்களும் - பரிமாறி உபசரித் தூட்ட, ஐயர் அமுதுண்டு பசி தீர்ந்து தேவாமிர்த முண்டவர்போலக் கிழத்தனம் போய் மன்மதாகிருதியாய், யௌவன குமாரனாய்க் கௌரி

காண எழுந்தருளி யிருந்தார். எப்படியெனில், விபூதிபோய் அது சந்தனமாகவும், உருத்திராக்ஷங்கள் போய் அவை பொன்னாபரணங்களாகவும், மூப்புப்போய் யௌவனமாகவும் விளங்குகின்ற தேஜோரூபத்தைக் கௌரி கண்டு நடுநடுங்கிக் கைகளை நெரித்துத் திகைத்து வேர்த்துக் கூசி ஒரு பக்கத்திலே ஒதுங்கி நின்றாள். அப்போது கலியாணத்துக்குப்போன வைஷ்ணவாபிமானிகள் திரும்பிவந்து தங்கள் வீட்டிலே நுழைய, உடனே பதினாறு வயதுள்ள பிராமணரானவர் நெற்றியிலே காட்டிட்டு ஒரு பச்சைப்பிள்ளை வடிவமாய் எழுதுதற்கரிய இருக்கு-யஜுர்-சாமம்-அதர்வணமென்னும் வேதங்களாகிய சிலம்புகள் புறத்திலே கிடந்து-சத்திக்க, அன்பர்களுடைய இருதயமென்னும் மலரோடையில் மலர்ந்து சிவானந்தமாகிய தேனைச் சிந்துகின்ற தெய்வத்தாமரையாகிய தன் சிற்றடியின் பெருவிரலைச் சுவைத்துக் கண்ணீர் ததும்பும்படியாக வாய்விட்டுக் கதறி யழுது அணையாகிய ஆடையிலிருந்தார், சர்வ லோகங்களையுஞ் சிருஷ்டித்துக் காத்தருளுகின்ற பெருமான்.

அப்படிக் கிடக்கிற சோமசுந்தரக் கடவுளாகிய பிள்ளையைக் கண்டு, மாமியானவள் இந்தப் பிள்ளை ஏதென்று கௌரியைக் கேட்க, கௌரி அம்மே! தேவதத்தனும் அவன் மனைவியும் இங்கே வந்து கொஞ்சநேரம் இந்தப் பிள்ளையைப் பார்த்துக் கொண்டிருவென்று சொல்லிப் போனார்களென்று சொல்லுதற்கு முன்னே, மாமியானவள் கண்கள் சிவந்து சிறி எலும்புகளை யணிந்துகொண்டு சுடுகாட்டிலே திரிகிறவனிடத்தில் அன்பு செய்கிறவனுடைய குழந்தைக்கு நீ அன்புள்ளவள் ஆகையாலே எங்களுக்கு நீ தகாத ஆசாரமுள்ளவள். இனி இந்தப் பிள்ளையை யெடுத்துக்கொண்டு வெளியே போவென்று துரத்திவிட்டாள். அப்போது கௌரி தாயில்லாத பிள்ளை முகத்தைப் பார்த்துத் தெருவிலே நின்று துக்கப்படுகிறவள் மனமே கோயிலாக வாசஞ் செய்கிற மதுரேசனை மனத்தினாலே தியானித்துக் கௌரியின் திருமந்திரத்தைச் செபிக்குமளவில், அழுத பிள்ளை விடைமேலழகனாக ஆகாயத்திலே தோன்றக் கண்டு, பின்னும் அக் கடவுளிடப் பாதத் தமர்ந்த தேவி திருமந்திரத்தை உச்சரிக்கின்றவளைத் தேவி வடிவாகச் செய்து விடைமே லேற்றிக்கொண்டு, ஆகாய மார்க்கத்திலே தேவர்கள் பூமழை பொழியச் சொக்கநாத ரெழுந்தருளினார். அது கண்ட உலகத்தா ரெல்லோரும் அதிக ஆச்சரியங் கொண்டு கொண்டாடினார்கள்.

விருத்த குமார பாலரான படலம் முற்றிற்று.

———

## இருபத்துநான்காவது

# கான்மாறி யாடின படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

திருத்த ராய்மது ராபுரி மேவிய சித்தரா கியசெல்வர்
விருத்த ராயிளை யவருமாய் மழவுமாய் வேடங்கொண் டடலேற்றின்
ஒருத்த ராய்விளை யாடிய வாடலை யுரைத்தன மினிமன்றுள்
நிருத்த ராயவர் மாறிநின் றூடிய நிலைசிறி துரைசெய்வாம்.

உரை: சுத்தமுடையவராய் மதுரையின்கண் எழுந்தருளி யிருக்குஞ் சித்தராகிய சோமசுந்தரக்கடவுள் கிழவனாகியும், குமரனாகியும், குழந்தையாகியும் வேடந்தாங்கி விளையாடி விருஷபாரூடராய் வெளி வந் தருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இனி அந்தக் கடவுள் வெள்ளியம்பலத்தின்கண் கான்மாறி யாடிய திருவிளையாடலைச் சிறிது சொல்லுகின்றோம்.

பின்பு விக்கிரமபாண்டியன் தன் புதல்வனாகிய இராஜ சேகர பாண்டியனுக்குப் பட்டங்கட்டிவைத்துப் பிரமலோக முதலிய லோகங் களுக்கெல்லாம் மேலான சிவலோகத்தை யடைந்தான். பின்பு இராஜசேகர பாண்டியன் உலகமெல்லாம் தன்னதாக அரசு செலுத்தி ஒரு குடைநிழலி லாண்டு ஆனந்தவடிவாய் வெள்ளியம் பலத்து ளாடுகிற சோமசுந்தரக் கடவுள் திருநடனத்திலே அன்பு மிகுந்த அந்தப் பரதசாஸ்திரம் தவிர அறுபத்து மூன்று கலைஞானங் களுந் தெரிந்து வருகிற காலத்தில், கோச்செங்கட் சோழனாலே பூசிக் கப்பட்டுக் காவிரிக்கரையிலே திருவானைக்காவலிலே வளருகிற கடவு ளிடத்து அன்பு பெருகினவனாய், அறுபத்து நான்கு கலைஞானங் களுந் தெரிந்த கரிகாற்சோழன் அரசாட்சி செய்யும்போது அவன் சபையிலிருந்து ஒரு புலவன் வந்து பாண்டியனைக் கண்டு, ஐயா! எங்கள் கரிகாற்சோழனுக்கு அறுபத்துநான்கு கலைஞானங்களுந் தெரியும். உமக்குப் பரதசாஸ்திரம் ஒன்று தெரியாதிருக்கின்றதே யென்று துதித்துச் சொல்ல, பாண்டியன் கேட்டு மறுதேசத்து வித்து வான் சொல்லுகிற சொல்லினாலே மிகவும் மானமுண்டாகி வியாகுல சித்தனாய் வேதாந்தமாகியவெள்ளியம்பலத்திலே திருநடனஞ்செய்கிற கடவுளாடலை நானும் கற்று ஆடுதற்கு என் மனம் விரும்புகின்றதே, இதுவும் எனது ஆண்டவன் அருள் விதிதானென்று அது கற்கத் தொடங்கிப் பரதநூலளவு கண்டவராய், அந்த நூலின்படி ஆடவும், வல்ல நாடக நடைதெரிந்த வித்துவான்களைத் தேடி அவ்வித்துவான் களுக்குத் தனது மகிழ்வினாலே வேண்டிய வஸ்திராபரண திரவியங் கள் போதும் போதுமென்னக் கொடுத்து, இராஜசேகரப் பாண் டியன் கசடறப் பரதசாஸ்திரம் கற்ற வகைபாவது: பாவம் - அராகம். தாளம் ஆகிய மூன்றுஞ் சொன்ன முறைப்படி, பரதமென்பதில் அங்

கம் - உபாங்கம் - பிரத்தியாங்கம் - முகராகம் - கரப்பிரசாரம் - சிரக்கர கருமம் - கரகேந்திரம் - காகரணம் - தானகம் - சுத்தசாரி-தேசிசாரி - நியாயம்-விருத்தி-பிரவிசாரம்-பூமண்டலம்-ஆகாசமண்டலம் -சுத்தக் கரணம்-உற்புலிதகரணம் - அங்ககாரம் - இரேசிதம் என்று சொல்லப் படுகிற இருபது பேதமும் கற்றுப் பின்னும் அவற்றிலே மனோபாவ முதலாகிய எட்டுவகை நிருத்தங்களில், சாரி நிருத்தமாகிய தாண் டவம் அகமார்க்கம் தேசி - வடுகு - சிங்களம் என மூன்றும், அத னிலே பன்னிரண்டு பதமும், இரேகாதி அங்கம் பதினாறும், நால்வகைக் கரணமும், இருவகைக் கரமும், கால்வகை புரிகை முதலாகிய பதினா றும் கவான் மனேமுதலாகிய இரண்டும், மடிப்புவகை இருபத்தெட்டும், சுத்தசாரி யெனும் பூசாரி பதினாறும் ககனசாரி பதினாறும், திக்கிராந்த முதலாகிய முப்பத்திரண்டு தேசிசாரிகளும், தேர்ச் சக்கர முதலாகிய ககனசாரிகைகள் முப்பத்தைந்தும், வித்துவற்பிராந்த முதலாகிய சாரி பத்தொன்பதும் ஆகிய இவைகளெல்லாம் புட்பபுடத் திலக்கண மாகிய முதற் பொருள்கள். ஆசவாத்திய முன்பொருள் முதல் களாச முதலாகிய பாடபேதங்கள் இருபத்தைந்தும், படக பேதம் பத்தொன் பதும், அளக முதலாகிய பாடவகைகள் இருபத்தெட்டும், அதில் பூசல் வார்த்திகத்துடனே ஐந்துவகைச் சச்ச புடலாகிய தாளமாத்திரை யும், மாத்திரையின் கதிகளும் சொற்களும், கீதமும், பாடமும், எழுத் தும், மணிபந்து முதலிய கீதத்தில் வகுத்த கட்டளை இருபத்தெட்டும், சரளை முதலிய கட்டளை முப்பத்தைந்தும், நன்றாகப் பொருந்திப் பாவாதி மூன்று கலப்பீராக வுண்டாக்கப்படும் கூத்து அகமார்க்கம் என்று சொல்லப்படும். இந்தக் கூத்தைக் கற்கும்போது பாண்டியன் தன்னுடம்பில் மிகவும் வருத்தத்தையடைந்து, இந்த வருத்தம் நான்கு வேதங்களாலுந் தெளியலாகாத பொருளாய் ஞானமாய் வெள்ளியம் பலத்தி லாடுகின்ற சோமசுந்தரக்கடவுளுக்கு முண்டல்லவாவென்று தன்னினைவிலே கொண்டு, பிரமனும் விஷ்ணுவுங் காணக்கூடாத பாதமொன்றே நெடுங்காலமாய் வருந்த நிற்கின்றது. ஐயோ! இப்படி வருத்தஞ் செய்வதாகிய அந்தக் கூத்தை நான் கண்டிருந்தும், சும்மா விருப்பது தருமமோவென்று மனது நொந்தும், பிறவிக்கடலைக் கடக்க வெண்ணினவர்கள் வந்து தரிசிக்கஆடுகின்ற ஆடலை நானெப் படித் தடுக்கலாகும்? தடுப்பது தகாது, அப்படித் தடுக்காவிட்டால் பாதம் வருந்துமல்லவோ? ஆனால் இந்த வருத்தம்போக இப்படிச் செய்தால் நன்றென்று துணிந்து எழுந்துபோய்ச் சிவ னிராத்திரியில் சோமசுந்தரக் கடவுளுக்கு அளவிறந்த பூசைகள் நான்கு சாமமுஞ் செய்வித்து திருவடிகளைத் துதித்துப் பின்பு வெள்ளியம்பலத்து ளாடு கின்ற சோதியின் மெய்ஞ்ஞானக் கூத்தைக்கண்டு மனமகிழ்ந்து வணங்கி, ஆனந்தக்கண்ணீ ரொழுகக் கைகளைத் தலைமேற் குவித்து நின்று, எம்பெருமானே! தேவரீர் ஊன்றின காலைத் தூக்கித் தூக் கினகாலை யூன்றி, இன்று நான் தரிசிக்க மாறியாடி என் வருத்தமெல் லாம் போகும்படி செய்யவேண்டும். இப்படி நீர் செய்யாதிருந்தால்

இந்தச் சுரிகைமேல் விழுந்து இறந்து போவேனென்று வாளை நாட்டி, அதில் விழுந்து சாவத்தொடங்கு முன்னே, இடக்காலை யூன்றி வலக் காலைத்தூக்கி அந்த நிருமலக்கடவுள் மாறியாட, அதைப் பாண்டியன் கண்டு சேவித்துத் தன் கவலைகளெல்லாந் தீர்ந்து பரமானந்தக் கட லின் மூழ்கி அப்படித் தேனில் மூழ்கின வண்டுபோலச் சச்சிதானந் தக் கடலின் மூழ்கி எழுந்து பின்னும் திரிகரணங்களு மொருமித்து அன்புவடிவாய் நின்று,

கலி விருத்தம்

பெரியாய் சரணஞ் சிறியாய் சரணங்
கரியா கியவங் கணனே சரணம்
அரியா யெளியா யடிமா றிநடம்
புரிவாய் சரணம் புனிதா சரணம்.

நதியா டியசெஞ் சடையாய் நகைவெண்
மதியாய் மதியா தவர்தம் மதியிற்
பதியாய் பதினெண் கணமும் பரவுந்
துதியாய் சரணஞ் சுடரே சரணம்.

பழையாய் புதியாய் சரணம் பணிவக்
குழையாய் சரணங் கொடுவெண் மழுவாள்
உழையாய் சரணம் முருகா தவர்பால்
விழையாய் சரணம் விகிர்தா சரணம்.

இருளாய் வெளியாய் சரணம் மெனையும்
பொருளாக நினைந்து புரந்தரன் மால்
தெருளா தநடந் தெரிவித் தெனையாள்
அருளாம் சரணம் மழகா சரணம்.

அயனத் தனெனப் படுமா டரவச்
சயனத் தவனைத் தருதத் துவநால்
வயனத் தவவா னவர்வா னவசேல்
நயனத் தவனு யகனே சரணம்.

கதவெங் கரியின் னுரியாய் சரணம்
முதலந் தமிலா முதலே சரணென்
றதிர்பைங் கழனா புரவண்ட லறும்
பதபல் கயமுன் புபணிந் தரசன்.

என்று, துதித்துப் பெருமானுடைய திருவடிகளில் விழுந்து சேவித் தெழுந்து நின்று எம்பெருமானே! இப்படியே எக்காலமும் இந்தத் திருநடனத்தை எல்லாருங் கண்டு தரிசிக்க வெள்ளியம்பலத்திலே நின்றருள அடியேன் வேண்டுகின்ற வரம் அருள வேண்டுமென்று வணங்கினன். அப்படியே அன்று முதல் இன்றளவும் கான்மாறின படியே கடவுள் நின்றருளினர்.

கான்மாறி யாடின படலம் முற்றிற்று.

———

## இருபத்தைந்தாவது

# பழியஞ்சின படலம்

---

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

ஈறிலான் செழிய னன்புக் கெளியவ னாகி மன்றுள்
மாறியா டியநடத் தென்சொல் வரம்பின தாமே கங்கை
ஆறுசேர் சடையான் றானே ரரும்பழி யஞ்சித் தென்னன்
தேறவா மனத்தைந் தேற்றுந் திருவிளை யாடல் சொல்வாம்.

**உரை:** முடிவில்லாதவராகிய சோமசுந்தரக் கடவுள் பாண்டிய னது அன்புக் கெளியவராகி வெள்ளியம்பலத்திற் கான்மாறி யாடிய மகிமையை யான் சொல்லுந் தகைமைத்தோ? இனி கங்கையைச் சடையிற் றரித்தருளிய அந்தக் கடவுள் பாண்டியன் பழியஞ்சினவ னாகித் தெளியாது உள்ளங் குழம்பி யிருந்த காலத்தில் அவனைத் தெளிவித்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

இப்படியாகச் சிலகாலங் கழிந்தபின்பு, இராஜசேகர பாண்டியன் தன் புத்திரனான குலோத்துங்க பாண்டியனுக்குத் தன் அரசாட்சியைக் கொடுத்து வினைகளைக்கடந்து வெள்ளியம்பலத்தில் ஆடுகின்ற கடவுளின் திருவடி நிழலிலே கலந்து பேரின்பத்தை யடைந்தான். பின்பு குலோத்துங்க பாண்டியன், கூடலையகனை நாடோறுஞ் சென்று வழிபடுகிற நீங்காத பக்தி நியமத்தைக்கொண்டு பதினாயிரம் மனைவியரின் போகங்களை யனுபவித்து ஒவ்வொரு மனைவிக்கு அவ்வாறு பிள்ளைகளாய் அறுபதினாயிரம் பிள்ளைகளைப் பெற்றனன். அந்தப் பிள்ளைகளின் மூத்த பிள்ளையான அனந்தகுண பாண்டியன். இளமையான ஆண்சிங்கம்போலக் கலைஞானங்களும், இரதம், யானையேற்றம், குதிரையேற்றம், வாள், கேடகம், வில்வித்தை முதலியவைகளுங் கற்று வல்லவனாக, இப்படியே எல்லாப் பிள்ளைகளும் வல்லவராய் வருகிற செய்கையைக் கண்டு கடல் சூழ்ந்த உலகமெல்லாம் சந்தோஷித்து வாழும்படி அரசு செலுத்தி வருகிற காலத்தில், திருப்புத்தூரிலிருந்து ஒரு பிராமணன் தன் மனைவியுடனே பெற்ற கைக்குழந்தையை எடுத்துக்கொண்டு காடு கடந்து மாமனிருக்கிற மதுராபுரியை நோக்கி வரும்போது, வழியிலே தாகத்துக்கு நீர் 'வேண்டுமென்று தாகத்துடனே வருகிற மனைவியை ஒரு பெரிய ஆலமரத்தி னிழலின் கீழே குழந்தையுடனே இருக்கச் செய்து, தான் நீர்தேடிச் சென்றான். இங்ஙனமிருக்க இருள் மிகுந்த இலைகளை யுடைய அந்த ஆலமரத்தின் மேலே வெகு நாளைக்கு முன்னே ஒருவனெய்த அம்பு தைத்துகிடந்தது. அது காற்றலைக்க அசைந்து கீழே யிருக்கிற பிராமணப்பெண்ணின் வயிற்றிலே விழுந்து உருவத் தைத்தது. அது தைத்தவுடனே அந்தப் பிராமணப்பெண் ஆயுள் முடிவுகாலமாய் இறந்துபோனாள், அப்போது அவ்விடத்திலே

அம்பு தொடுத்த வில்லை யுடையவனு யொருவேடன் வெயிலுக் கொதுங்க நிழல் தேடி மரத்தினிழலி லொருபுறத்திலே இளைப்பாறி நின்ருன். உடனே தண்ணீர்க்குப் போன பிராமணன் குளங்கண்டு தண்ணீர் முகந்து திரும்பித் தன் மனையாளிருக்கிற ஆலமரத்துக்கு வந்து இரத்தவெள்ளம் பெருக இறந்துகிடக்கிற மனைவியைப் பார்த்துக் கூர்மையான அம்புதைத் துருவி யிறந்து போனுளென்று தெரிந்து, பெண்ணே உனக்கென்ன காரணம் இப்படி நேரிட்டதென்று மத்தினு லுடைப்பட்ட தயிற்போற் கலங்கி மனந்தளர்ந்து மதிகலங்கி இந்தப் பெண்கொலை செய்தவர்கள் யாரோ வென்று தெரியாதவனுய், தேடும்போது, அந்த மரத்தினிழலிலே ஒரு புறத்தில் அம்பும் வில்லு மாக வெயிலுக் கொதுங்கி நிற்கிற வேடனைக்கண்டு, இவனே செருப் புப்போட்ட கால்களும், வாள் வைத்துக் கட்டிய கச்சையும், அம்பு தொடுத்த வில்லுமாய்க் கொலைசெய்யுங் கோலமாக இவ்விடத்தி னிற் கிறதினுலே இவனே என் மனைவியைக் கொன்ருன் என்று மதித்து, ஏனடா வேடா! எமன்போல என் மனைவியைக் கொன்ருய்? கொன்ற வன் நீயே யாதலால், அரசனுணை! அப்பாலே செல்லக்கூடாதென்று ஆரவாரித்து, அவனைக் கைப்பற்றி இறந்த மனைவியை முதுகிலே சுமந்து பிள்ளையை இடையிலே கொண்டு, பால் வேண்டி யழுகிற பிள்ளை முகத்தைப் பார்த்துப் பார்த்துக் கண்ணீர்விட்டழுது சென்று பாண்டியனுடைய மதுரைக்குவந்து, உள்ளே குற்றமில்லாத வேடனை முன்னே நடத்திக் கொண்டுபோய் நிறுத்தித் தன்னுடைய மனையா ளுடலை நேரே கிடத்திப் பாண்டியனுடைய மந்திரி முதலானேர்கள் கேட்கக் கண்களிலே நெருப்புச் சிந்தக் கைகளை உயரத் தூக்கி அபய மிட்டுச் சொல்லுகின்ருன்.

ஐயா! இராஜநீதி கோணுத ராஜசிங்கமே! ராஜலட்சுமி விளங்கு கின்ற மார்பனே! சந்திரகுலத்திலே பிறந்து குற்றஞ் செய்தவனுக ஒப்புக்கொண்டு கையை அறுத்துக் கொண்டவனே! உனக்கு அபயம்! அபயம். அரசனுனவன் தூங்கும்போதுந் தனது ஆக்கினை வழுவாமல் உலகங்களை ரக்ஷிக்கிறவரென்பர். இந்த வேடன்செய்த கொலையை விசாரியாவிட்டா லெப்படி மெய்யாகும் என்று முறையிட, வாயில்காப் பவர்கள் இதைக் கண்டு பாண்டியனிடத்தே சென்று ஐயா! ராஜாதி ராஜனே! நமது அரண்மனைக்கு முன்னே ஒரு பிராமணன் தன் மனை யாளைக் கொலை செய்தானென்று ஒரு வேடனை முன்னே விட்டு இறந்த பிணத்தையும் இங்கே கொண்டுவந்து போட்டுத் தானெருவ னுய்ப் பரிதபிக்கின்ருனென்று தெரியச் சொன்னுர்கள். அதுகேட்ட பாண்டியராஜன், என் குடை நிழலும், என் காவலும், செங்கோலும், பயந்தீர்த் தரசாளுகின்ற நீதியும், உலகத்தில் கலிதோஷம் போகத் தாங்குகின்ற பொறுமையும் நன்ருயினவென்று வெகுண்டு வெளியே வந்து, பிராமணன் நிற்கிற நிலையைக்கண்டு மெலிந்து ஓய் பிராமணு? நீ வந்த காரியமென்ன? ஏன் துன்பப்படுகிருய்? உள்ளதைச் சொல் லென, பிராமணன் பாண்டியனை நோக்கி, உயர்ந்த நீதியைச்

செலுத்துகின்ற ராஜனே! கேளுமென்று நடந்த வரலாறெல்லாஞ் சொன்னன். அதைக் கேட்ட பாண்டியன் பிராமணன் சொன்ன தெல்லாம் மனதிற்கொண்டு வேடனைப் பார்த்து உன் செய்தியென்ன வென்ன, ஐயா சுவாமி! நான் வெயிலில் இளைத்து அந்த மரத்தி னிழலிலே ஒரு புறத்திலே நின்றேனேயல்லது நான் கொன்றவனல்லேன். வேறே கொன்றுரையும் யான் காணேன்; என்ன, அது கேட்டு முன்னே நின்றவர்கள் இவள் மார்பிலே அம்புபட்டதெப்படி யென்ன? வேடன் அம்புபட்டிறந்தது மெய்யே, நான் அங்கு நடந்த செய்கைகளொன்றுந் தெரியேனென்றுன். அப்போது மந்திரிகள், கொலை செய்தவன் கொன்றே னென்பானே? அல்லாமலும், வேடன் வார்த்தையிலும் மெய்யுண்டோ? இவனைக் கண்டித்தாலல்லது மெய் விளங்காதென்ன, அதை அரசன் கேட்டு அப்படியே செய்யுங்களென, தண்டனை செய்வோர்கள் தண்டித்து உண்மையைச் சொல்லென்று கேட்க, யாதொரு குற்றமுஞ் செய்யாத வேடன், முன்னே சொன்னபடியே சொல்லித் தன்னல் ஒரு தோஷமு மில்லாமையாலே அவ்வேடன் என்னதான் செய்வான்? தண்டிப்பவர்களைப் பார்த்து இன்னும் நீங்கள் நன்றுய் விசாரியுங்கள்; நான் தண்டிக்கப் படுவேனல்லேன் என்று சொன்னுன். அதைப் பாண்டியன் கேட்டு இந்த வேடன் எவ்வளவு தண்டனை செய்தாலும் சொல்லுவ தொரு விதமே சொல்லுகிறுன். கொலை செய்தவனுக முகத்திலே தோன்றவில்லை. அல்லது, இந்தப் பார்ப்பானுக்குச் சத்துருக்கள் யாராயினுமிருந்து கொன்றுர்களோ? அல்லது மிருகங்களோ? பக்ஷிகளோ? இன்னும் வேறே யாரோ? இவளைக் கொலை செய்ததனுலே என்ன பயனுண்டாகும்? அல்லது இந்த வேடனுவது இன்னும் வேறே யாராவது மிருகங்களை எய்த பாணம் தப்பி இவள்மேலே விழுந்ததோ? இந்தப் பார்ப்பினி இறந்த காரணம் தெரியவில்லையே என்று விசனப்பட்டுப் பின்னும் பாண்டியன் சாஸ்திரிகளை நோக்கிச் சாஸ்திரங்களாலே விசாரித்துச் சொல்லுங்களென்ன, சாஸ்திரிகள், ஐயா! இந்த நியாயம் சாஸ்திரங்களாலே தெளியத்தக்கதன்று, தெய்வத்தாலே தெளியப் படுத்துவதென்னப், பாண்டியன் பிராமணனை நோக்கி நானிதை நன்றுய் விசாரித்து உன் கவலையைத் தீர்ப்பேன்; நீ யஞ்சவேண்டாம். உன் மனைவிக்கு மயானக்கடனை முடித்துப் பின்பு இங்கே வாவென்றனுப்பிவிட்டு வேடனைக் காவல் வசப்படுத்தித் தன் மனைவிக்குச் செய்யுங் கடனைச் செய்துவந்த பிராமணனைத் தன் அரண்மனை வாசலிலிருக்கச் செய்து, தான் தங்கள் குடிக்குல தெய்வமா யிருக்கிற சோமசுந்தரக் கடவுள் சந்நிதானத்திற் சென்று கடவுளை வணங்கிச் சுவாமி! இந்த வேடனே பார்ப்பிணியைக் கொன்றுனே? அல்லது வேறே யாவராயினும் வேறொரு விதங்களாலே கொல்லலாயிற்றே? இது தரும சாஸ்திரங்களாலே தெரிந்து கொள்ளக் கூடாததா யிருக்கின்றது. தேவரீர் திருவருளினுலே தெரியப்படுத்த வேண்டுமென்று மிகவும் வேண்டிக்கொள்ள, அப்போது ஆகாயத்திலிருந்து ஒரு

அசரீரி வாக்கு 'இந்தப் பட்டணத்துக்கு வெளியே ஒரு புரத்திலுள்ள செட்டித் தெருவில் ஒரு கலியாணம் நடக்கின்றது. அங்கே நீ அந்தப் பிராமணனையுங் கூட்டிக்கொண்டு வந்தால் உனக்குத் தெளியாத செய்தியெல்லாம் தெளியச் செய்கிறோமென்று' சொல்லப் பாண்டியன் தன் இரண்டு காதுகளும் நிரம்பக் கேட்டுத் தன் அரண்மனை வாயிலிற் காத்துக்கொண்டிருக்கிற பிராமணனோடு கூடிப் பகற்காலத்தைக் கழித்து, இராத்திரி வந்த பின்பு, தான் வேற்றுருவங்கொண்டு அந்தக் கலியாண வீட்டுக்குள்ளே போய் ஒரு பக்கத்திலே சுகமாயிருக்கும் போது, அன்றையதினம் கடவுளருளால் அந்தப் பிராமணனும் பாண்டியனுங் கேட்க, யமனாலே அனுப்பப்பட்ட தூதர்கள் அந்த வீட்டிலே கல்யாண மாப்பிள்ளைக்கு ஆயுள் முடிந்ததனாலே வந்து, ஒரு தூதனை மற்றொரு தூதன் பார்த்து, அண்ணே! நமதரசனாகிய எமதருமராஜன் இன்றையத்தினமே இவ்வுயிரைக்கொண்டு வாருங்களென் றனுப்பின உத்திரவின்படி, உடம்பிலே யாதொரு வியாதியு மில்லாதிருக்கிற இந்த மாப்பிள்ளையானவனுயிரை எவ்விதத்தினாலே நாம் கொண்டு போவதென்று கேட்க, அந்தத் தூதன் வழிநடந்து வந்து நிழலுக் கொதுங்கி யிருந்த பார்ப்பனியை எக்காலத்திலேயோ மரத்திலையிலே தைத்துக்கிடந்த அம்பைக் காற்றினால் விழச் செய்து எப்படி அவளுயிரைக் கொண்டுபோனோமோ அதுபோல இந்தக்கலியாணத்திலே கொட்டுகிற மேளவாத்தியங்களுக்கு மருண்டு கன்றீய்ந்த பசு, கட்டுந் தாம்பை அறுத்துக் கொண்டுபோய்ப் பாயச்செய்து இவனுயிரைக் கொண்டு போவோமென்றான். அந்த வார்த்தையைப் பாண்டியன் கேட்டு, ஓய் பிராமணா! கேட்டாயோ வென்ன, பிராமணன் மெய்யே கேட்டேன், இங்கே இந்த மாப்பிள்ளையானவ னிறந்தால் அப்படியே என் மனைவி இறந்தது மெய்தான். ஆகையாலே என் மனக்கவலை தீர இந்த மெய்யைக் காண வேண்டுமென்று பாண்டியன் கூடவே பிராமணனு மிருந்தான். அப்போது மிகவும் சம்பந்தமான பல பந்துக்களும் நெருங்கிக் கூடிக் கலியாணஞ் செய்யத் தொடங்கக் கொட்டுகின்ற பல வாத்தியங்கள் முழங்கக் கூடிய பெரிய ஓசைக்குப் பயந்து கட்டியிருந்த கயிற்றை யறுத்துக் கொண்டுபோய் ஒரு கன்றுள்ள தாய்ப்பசு ஓடிப்பாய, அது பாய்ந்தவுடனே மாப்பிள்ளை இறந்து போனான்.

அம் மணநாள் மணமகனே பிணமகனாகவும் மணப்பறையே பிணப்பறையாகவும் மங்களவாழ்த்து ஓசைபோய் அழுகைக்குரலோசையாகவும் முடிந்தது. ஆதலால், ஒரு க்ஷணப்பொழுதுக்குள்ளே யிறந்து முடியும்படியான இந்தத் தேகத்தால வரும பயனை அறிவுடையோ ரடைவார்கள். அறிவில்லாருக் கிந்தத் தேகத்தால் ஒரு பயனுமில்லை என்னக்கண்ட பிராமணன், ஐயோ நான் ஏனிப்படி வீண் வளர்த்தேனென்று மனைவி யிறந்து போன துன்பத்திலும் அதிக துன்பங்கொண்டனன். பின்பு பாண்டியனை பிராமணனோடே தனதரண்மனைக்குச் சென்று மந்திரிகளுக்கும் எல்லாருக்கு மந்த

உண்மையைத் தெரிவித்துப் பிராமணனை இன்னும் ஒரு கலியாணம் செய்துகொள்ளச்சொல்லி அதற்குத் தக்க பொருள்களைக் கொடுத்து அவனைப்போகவிட்டுக்காவற்கிடங்கிலே கிடந்த வேட னுக்கு விலங்கு வெட்டிவிட்டு, ஆலோசித்துத் தெரியாமல் நாங்கள் செய்த தண் டத்தை நீ பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று வேண்டிப் பரிபூரண கடாக்ஷம் பண்ணி அவனுக்கு வேண்டிய பலபொருள்களுங் கொடுத் துத் தயாளுவான குலோத்துங்க பாண்டியன் அந்த வேடனை அவ னிடத்துப் போகவிட்டு, யானையெய்த சோமசுந்தரக் கடவுளைப் போய்க் கண்டு தொழுது அன்பு பெருகிச் சுவாமி! அடியேன் பொருட்டுத் தேவரீரும் பழியஞ்சு கடவுளானீர். தேவரீருக்கு அடியே னினிச் செய்யத்தக்கது முண்டோவென்று பக்தியுடனே புகழ்ந்து பலதரமும் தோத்திரமுஞ் செய்து அளவில்லாத பூசைகளும் நடத்தி உயிர்களுக்கு வருந் துன்பங்களை நீக்கி உயிர்களுக்கெல்லாம் ஓருயிர் போல அரசாண்டிருந்தான்.

பழி யஞ்சின படலம் முற்றிற்று.

---

## இருபத்தாருவது

# மாபாதகந் தீர்த்த படலம்

---

கலி விருத்தம்

வேத நாயகன் வெம்பழி யஞ்சிய
நாத னான நலனிது நல்கிய
தாதை யைக்கொலை செய்த தனயன்மா
பாத கந்தனைத் தீர்த்தமை பாடுவாம்.

உரை: வேதநாயகராகிய சோமசுந்தரக்கடவுள் கொடிய பழியஞ் சிய நாதராகிய திருவிளையாடல் இதுவாகும். இனி அந்தக்கடவுள், தன்னை யீன்றருளிய பிதாவைக் கொன்ற ஓர் புதல்வனது மகா பாத கத்தைத் தீர்த்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்ருேம்.

பின்பு குலோத்துங்க பாண்டியன் உலகமெல்லாஞ் செங்கோல் செலுத்தித் தனியரசு நடத்துகிறநாளிலே, அவந்தியென்கிற பட்ட ணத்திலொரு பிராமணன்; அவன் மனைவியானவள், லட்சுமியும் மன் மதனும் அவன் தேவியாகிய ரதியும் பிரதிமையும் விரும்பத்தக்க ஒப் பில்லாத அழகையுடையவள். அவள் வயிற்றிலே மகனென்று ஒரு கொடும்பாவி பிறந்து, கொலைமுதலிய பாவங்களேறுகின்ற கப்பலைப் போலே அவன் வளருங் காலத்திலே, கோடானுகோடி வில்லை வளைத் துக் கோடானுகோடி அம்புகளைப் பூட்டிக் கோடானுகோடி விகாரங் களைக் கூட்டிக் கோடானுகோடி மன்மதர்கள் எய்ததினுலோ, இளமை யான பக்குவத்தை யுடைய தேகத்தை யுடையவனுகி, மயக்கத்தைத் தருகின்ற காமமும் வலிய பாபமும் தனைந் திழுத்தலினுலோ, தன்னை

வயிற்றிலே வைத்துத் தாங்கிப் பெற்ற தாயைப் புணர விரும்பினுன். அதற்குத் தாயென்னும் குணக்கேடி தன் புருஷனில்லாத காலத்திலே நாணமட முதலிய நான்கு குணங்களும் நீங்க அவளுஞ்சம்மதித்தாள். இன்பமானது சிறிது. இதனுல் வருந் துன்பமோ மிகப் பெரிது என் பதை யாவருமறிய, மயக்கமாகிய பாம்பானது தன் மதியை விழுங்க, அந்தக் கொடியவன் தாயைப் புணர்ந்து சுகித்து வருகிற செய்தியைக் குறிப்பாலறிந்து பக்கத்தார் அறியாமல் மனத்திலே அடக்கிக்கொண்டு வருகிறபோது, வேறே யொருநாள் அந்தப் பிராமணன் வெளியாகக் கண்டு யாதொன்றும் பேசாமலிருக்க, மகனுனவன் அதிக கோபங் கொண்டு கொல்ல நினைத்தெழுந்ததைத் தாயானவள் கண்டு அவ னைப் பார்த்து நீயோ தாயோடு கூடிச் சுகத்தை யடைந்தாய்; தகப்ப னைக் கொல்வதினுலே என்ன பயன் கிடைக்குமென்று தடுக்க, அதற் குக் காமுகரானவர்க்குத் தாயானுலென்ன? தகப்பனுனுலென்ன? தய வேது? தருமமேது? நில்லென்று மண் வெட்டியைக் கொண்டு காம மென்னுங் கள்ளைக் குடித்த மயக்கத்தினுலே வெட்டி இராத்திரியிலே கொண்டுபோய் மயானவினையை முடித்து, கைக்கு வேண்டிய பொரு ளுடனே தாயோடு காட்டுவழிச் சென்ருன். அந்தக் காட்டிலே வேடர் கள் இவனைக் கண்டு சூழ்ந்து அம்பு வில்லுடனே இடிக்கொப்பாக முழங்கிப் போகாதே நில்லென்று அவன் கையிலுள்ள பொருள்க ளெல்லாம் பறித்துக்கொண்டு அவன் தாயையும் தாங்கள் கைப்பற் றிக்கொண்டு போனுர்கள். அப்போது அவன் தூரதேசங்களிற்போய்ச் சுகமடையலாமென்று நினைத்ததொன்று முடிந்த தொன்ருயிற்று. ஆனதினுலே, 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்த தென்னும்' பழமொழி அவனுலே உண்டாயிற்று. அப்போது தகப்பன் இறந்து போகத் தாயும் போனுளே பிள்ளைக்குத் துணை வேறே ஒருவருமில்லையேயென்று பிரமஹத்தி தான் துணையாக வந்து அவ னைப் பிடித்துக்கொண்டது. பற்றினது ஆ! ஆ! வென்னும், அலறும் அழும், சிவனே யென்னும், பாவம்! பாவம்! இதுவோ பழியென்னும், ஐயகோ வென்னும், கைகளை யொன்ருேடொன்று சேர்த்து மோதும், நிழல் வடிவைப்போல விடாமல் பின்பற்றிச் செல்லும், நல்ல தீர்த் தங்கள், சிவஸ்தலங்கள், நல்லோரிடங்களாகிய இவ் விடங்களிலே செல்லவொட்டாது, சிவனது திருநாமங்களைக் காதுகளிலே நுழைய வொட்டாது, மனத்திலும் புகுத வொட்டாது, நாவாலுஞ் சொல்ல வொட்டாது, தூங்கவுமொட்டாது, சுற்றும் முற்றும் பின்னும் பக்க மும் சூழ்ந்து தன்னிடுப்பு முறியப் பற்றி யிழுக்கும். இப்படியாகிய மகா பாதகத்தினுலே அலைந்து, இனி என்ன செய்யத்தக்க தென்று பொறுக்க மாட்டாமல் துன்பப்பட்டு அன்னிய தேசங்களெல்லாம் பயங்கொண்டு அலைவானுகித் துன்ப வியாதியை வெகுகால மடைந்து உலகமெல்லாந் திரிகிற மகா பாதகன் தனது பலமெல்லா மொடுங்கக் கடவுளருளாலே இனி அந்தப்பாதகந் தொலையுங்காலம் வந்து மதுரை யைக் கிட்டினுன். அப்படிக் கொடிய பாதகனுகி வருகிறவனுக்கு

முன்னே அங்கயற் கண்ணியானவள், இரண்டு காதிலுந் தந்தக்குழை யிட்டு புலிப்பல்லாகிய தாலியும் பூண்டு, மயிர்ச்சடையானது பிடரி யிலே அசைய, பழிக்கஞ்ஞாத ஒரு வேட்டுவச்சி வடிவங் கொள்ள, முன்னே பழியஞ்சின கூடற்கடவுள், தலையிலே வேங்கைப் பூமாலை யைத் தரித்து, மான்கொம்பு போலக் கோணிய தாடியும், விற்பிடித்த நீண்ட கையையுமுடைய ஒரு வேட வடிவங்கொண்டு தோன்றிக் கோபுரவாயிற் புலத்திலே பனங்கருக்குப் போலும் பற்களை யுடைய வேட்டை நாய்கள் சூழ்ந்துகொண்டு கிடக்க, அம்பும் வில்லும் பக்கத் திலே விளங்க அங்கயற்கண்ணியாகிய வேடச்சியுடனே சூதாடிக் கொண்டிருந்த அவ்விடத்தே யானை விழுங்கின விளாங்கனிபோல ஒன்றுமில்லாதவனாய் மிகுந்த வருத்தத்துடனே வருகிற மகா பாதகனைக் கண்டு யாராலும் மனத்தினால் நினைக்கக்கூடாத கொடிய பாவி வருவதைக்கண்டு வேடச்சியைப் பார்த்துப் பெண்ணே! எல்லா ருக்கும் வருத்தமாகிய காமநோயைச் செய்கின்ற மன்மதனாலே அலைச்சற் பட்டு வருந்தினவர்கள் மனமானது செல்ல வேண்டிய விடங்களிலே செல்லாது, குணமும், குலமும், ஒழுக்கமும் குறையு மென்றும், கொலை, பழி பாவம் வளருமென்றும் பாராது. உயிருக்கு முடிவு வருமென்று மெண்ணாது. கள் குடித்தல் போல்வதே ஆனாலும், காமமென்பது மனத்தை மயங்கச் செய்வதினாலே, எல்லாராலும் இகழத்தக்க கள்ளானது காமத்தைப்போல நினைத்தாலும், கண்டா லும், கேட்டாலும் உள்ளுண்டாகிய மனத்தை கெடாது. உண்டால் மனத்தைக் கெடுக்கும். ஆதலால் கள்ளிலும் கொடிய காமமே கொலைகளுக் கெல்லாம் காரணம். காமமே களவுக்கெல்லாங் காரணம் எமனு மஞ்சத்தக்க காமமே நரகலோகத்தைக் காணியாக ஆளச் செய்யும் என்று சொல்லிக் கொலைசெய்த பாவம் பிடிக்கப்பட்டு வருகின்றவன் முகத்தைப் பார்த்து, ஏனடா பார்ப்பான்! இப்படி மிகுந்த துன்பங்கொண்டு வருந்துகிறா யென்ன. அப்படிக்கேட்ட கடவுள் கிருபாதிருஷ்டி பட்டுக் கொஞ்சம் பாவந்தணிந்து தன் புதித் யுண்டாகி முன்பிறப்பிலே செய்த அதிக பாவத்தினாலே பிறந்து தகப்பனுக்குப் பகையானதும், தகப்பனைக் கொலை செய்ததும், பின்பு அந்தப் பாவம் பிடித்து எங்குமலைக்க அலைந்துந் தீராமல் இந்த மதுரைக்கு வந்து சேர்ந்ததும் தெரியச் சொல்லி யழுது நின்றான்.

அதுகேட்டு வேடவடிவுகொண்டு மனத்திலே அருள் பெருகி விளங்குகின்ற கிருபாசொரூபியாகிய கடவுள் அப்படிக் கெட்டுப்போன வனைப் பார்த்து உன்னை யடைந்திருக்கின்ற இந்த மகா பாதகம் எங்கே போனாலுந் தீராது! இங்கே தானே தீருமென்று அது தீரும்படி யாக வெண்ணி, ஓய் பிராமணா! நீ செய்த பாவம் உன் குலத்தாரும் நரகத்தில் விழும்படியானது, அதை யாராலே தீர்க்கக்கூடும்? ஆனாலும் இப்போது நாம்எமது கண்ணாலே பார்த்ததினாலே எளிதிலே தீரும்படி சொல்லுகிறோம். அதாவது ஒரு சிவராத்திரியில் சிவனடி

யார்களுக்கேவின பணிவிடை செய்து பிச்சையெடுத் தொருபொழு துண்டு சூரியனுதயமாகு முன்னே எழுந்து அறுகம்புல்லைக் கொய்து வந்து பசுக்களுக்குக் கொடுத்துப் பத்தியுடனே மூன்று காலமுங் கோயிலில் வெளித்தொட்டித் தீர்த்தத்திலே தீர்த்தமாடிச் சிவபெருமானை நூற்றெட்டுத்தரம் பிரதட்சணஞ் செய்து, இப்படியாகத் தவத்தைச் செய்தாயானால் உனக்கிந்தப் பாவம் தீருமென்று கடவுள் கூற, அதைக் கேட்டு வேடச்சியாய்ப் பக்கத்தே யிருந்த அம்மை வேடனை நோக்கி, ஸ்வாமி! இந்தக் கொடிய பாவி, அளவில்லாத காலம் இருபத்தெட்டுக் கோடி நரகத்திலே வீழ்ந்து கிடந்தாலும் தீராத பாவம் தீரும்படி அருள் செய்ததென்ன காரணத்தினாலே என்று கேட்க, அதற்குக் கடவுள் பழி பாவங்களுக் கஞ்சாத நீசரானாலும், நினைத்தாலும் அஞ்சத்தக்க பாவத்தைச் செய்து அது பிடிக்கலாகி எங்குந் தீராமல் வேறொரு ஆதரவு மில்லாதே அலைகின்ற பாவியாகிய இவனுக்கல்லவோ நாம் அருள்செய்து காக்கத் தக்கதென்று சொல்ல, அதுகேட்ட வேடச்சி, சுவாமி! நீர் யாதேனு மொன்றைச் செய்தற்கும், செய்யாமைக்கும், வேறேயொன்று செய்வதற்கும் காரணமாக விளங்குகின்றீர். ஆதலால் நீர் செய்யவேண்டுமானால் எப்படிப்பட்ட பாவிகளையும் புண்ணியவான்களாகச் செய்வது உம்முடைய அருள் விளையாட்டல்லவோ வென்று மனமகிழ்வு தோன்றச் சொல்லும் போது, வேடனாகிய கடவுளும் மறைந்து, வெள்ளியம்பலத்திலே பரிபூரணமாக மேகம் மறைய மின்னலுங்கூட மறைந்தாற்போல அம்மையுங்கூட மறைந்தருள, அறிவில்லா மாபாதகன் கண்டு தான் ஆச்சரியங்கொண்டு, பின்பு கூடனாயகன் சொன்னபடியே மாதவக் கோலங் கொண்டு, அப்புண்ணிய விரதங்களை யனுஷ்டித்து வருங்காலத்தில் மூன்று மாதத்துக்குள் அவனுடைய பாதகந் தீர்ந்து தெய்வீகத் தன்மையான பிராமண வடிவாகிச் சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளிலே அநேகம் வாமொழி மாலைகள் பாடிச் சச்சிதானந்த சோதியின் பொன்னடியிலே சேர்ந்து சிவானந்த வாழ்வடைந்தான். தாயைப் புணர்ந்து தகப்பனைக் கொன்ற பாவந் தீர்ந்து மோட்சத்தை யடையச் செய்தது அந்தப் பொற்றாமரைத் தீர்த்தமேயானால் நீரிழிவு-குஷ்டம்-மகோதரம்-காசம்-சுரம் முதலிய வியாதிகளையுந் துன்பங்களையும் தீர்க்குமென்பதா இந்தத் தீர்த்தத்துக்குப் பெருமை, இவ்வாறு அந்தக் கொடிய பிராமணனுடைய மகா பாதகத்தைத் தீர்த்தது தெரிந்து பாண்டியன் மந்திரிகள் ஊரிலுள்ளவர்கள் வேற்றூரிலுள்ளவர்கள் ஆகாசவாசிகள் இவர்களெல்லாரும் அதிசயிக்க வாக்கு மனதுக் கெட்டாதவன் பேரருளை இந்த அறிவீனனிடத்திலே செய்தது என்ன காரணத்தினாலோ வென்று ஆனந்தக்கண்ணீர் பொழிந்து நான்மாடக்கூடல் நாயகனைத் துதிசெய்து பேரின்பக்கடலிலே மூழ்கினார்கள்.

மாபாதகந் தீர்த்த படலம் முற்றிற்று.

இருபத்தேழாவது

# அங்கம் வெட்டின படலம்

---

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

வேதகந் தரத்து முக்கண் வேதியன் மறையோன் செய்த
பாதகந் தவிர்த்த வாறு பகர்ந்தனம் விஞ்சை யீந்த
போதகன் மனைக்குந் தீங்கு புந்திமுன் னாகச்செய்த
சாதகன் றனைப்போ ராற்றித் தண்டித்த தன்மையுஞ் சொல்வாம்.

உரை: இருக்கு - எசுர் சாமம் - அதர்வண மென்னும் நான்கு வேதங்களும் முழங்கும் அழகிய கண்டத்தையுடைய முக்கண் வேதியராகிய சோமசுந்தரக் கடவுள் ஓர் பிராமணப் பிள்ளையினது மகா பாதகத்தைத் தீர்த்தருளிய திருவிளையாடலைச் சொன்னோம்- இனி, தனக்கு வித்தை கற்பித்த ஆசிரியனது மனைவியை அபகரிக்க முயன்றவனாகிய ஓர் பாவியை, அந்த மதுராபுரித் தலைவரெதிர்த்து அவனங்கத்தை வெட்டியருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

குலோத்துங்க பாண்டியன் உலகமெல்லாங் காத்து அரசாளுகிற காலத்தில், வேறேயொரு தேசத்திலிருந்து அந்த மதுரைக்கு வந்து வாள்வித்தை கற்க வேண்டினோர்க்கு வாள்வித்தை கற்றுக் கொடுத்து மிகவும் கிழவனாய் வாழ்கின்ற ஒருவன், சோமசுந்தரக்கடவுளை வழிபாடு செய்கின்ற அன்புடனே தினம் தினம் கோயிலுக்குப் போய் வணங்கித் துதித்து இருவினையையும் வெல்லும் பேரறிவுடையவனாயிருந்தான். அப்படிப்பட்ட பேரறிவுடையவனான வாள் வித்தையில் வல்லவவனை வணங்கிப் பகைவரை வெல்லக் கற்கின்ற ஆண்சிங்கம் போன்ற குமாரர்களில், நல்வினை தெரியாத பாவியான சித்தனென்பவனொருவன், அந்த வாள்வித்தை முழுவதும் வரும் விதியாலே நிரம்பவுங் கற்றவனாய் அந்த வித்தையிலே தன்னை நன்கு மதித்து, மிகவுங் கருவங்கொண்டு, தன்னாசிரியனுக்கே எதிரியாகத்தானுமொரு வித்தை கற்குமிடமுண்டாக்கிப் பலரும் கற்கும்படி கற்பித்து அந்த ஆசிரியனிலும் அதிகமாகத் திரவியங்கள் சம்பாதித்துப் பின்னும் தானொருவனே இருவர் வரவையும் கொள்ளவேண்டு மென்னுங் கருத்துள்ளவனாய் அந்தக் கிழவனை அவ்வூரினின்றும் போகச்செய்ய வெண்ணி, அந்தக் கிழவனிடத்திலே கற்கின்ற குமாரர்களையெல்லாம் மனம் வேறுக்கி நாள்தோறும் இப்படி விரோதித்து வருகிறவன் முன்னே தாயைப் புணர்ந்தவனுக்குத் தம்பியைப்போல, அந்த ஆசிரியன் மனைவியையும் புணர விரும்பினான்.

அப்போது தோண்டத் தோண்டப் பொறுத்துக் கொள்கிற பொறுமையுள்ள பூமியை ஒத்தவளான அந்த ஆசிரியன் மனைவியிடத்திலே ஆசிரியனில்லாத போதெல்லாம் போய்ப்போய் எப்போது

இடங்கிடைக்கும் எப்போது இடங்கிடைக்குமென்று பலதரமும் போய் அஞ்சாமல் கேட்டுக் கேட்டுப் போவான். அப்படி அவன் கேட்கும் போதெல்லாம் அந்த ஆசிரியன் மனைவி பேசாதிருந்தாள். அப்படியிருக்கையில் பின்னும் ஒருநாள் அந்தச் சித்தனென்பவன் அங்கே சென்று அவள் கையைப் பிடித்திழுக்க, அவனைத் தள்ளிவிட்டு வலிதான கதவைச்சாத்தித் தாள் போட்டுக்கொண்டு தன் கற்புக்கு அழிவு வராமற் செய்துக்கொண்டாள். அப்போது சித்தன் மிகவுங் காமாக்கினியாலே வெம்பிப் பாவிகளிலும் புறங்கடை நின்ற பாவியாய்ச் செய்த தீமையைத் தன் புருஷனுக்குந் தெரியப்படுத்தாமல் அந்த மகா பதிவிரதையானவள் தன் மனத்துள்ளே அவன் செய்தனவெல்லாம் அடக்கிக்கொண்டு எல்லா உயிர்களிலும் நிறைந்திருக்கின்ற சோமசுந்தரக்கடவுளை நினைத்து வருந்தினுள்.

அதைச் சோமசுந்தரக்கடவுள் தெரிந்து அந்தச் சித்தன் செய்த குற்றத்துக்குத் தக்கபடி தண்டிக்கத் திருவுள்ளத்தி லெண்ணி, ஒருநாள் அந்தக் கிழவனுகிய ஆசிரியன்போல் வடிவுகொண்டு, சித்தனிருக்கு மிடத்திற்சென்று, சித்தா! யௌவனனுகிய நீயும், மிகவும் வயதுசென்ற கிழவனுகிய நானும் வாள்கொண்டுபோர்செய்து நம்மிருவருடைய பலமும் தெரிந்து கொள்ளுவோம், நாளைக்கு இந்தப் பட்டணத்துக்கு வெளியே ஓரிடத்திற்கு வாவென்று சொல்லிப்போனுர். அப்படிக் கடவுளாகிய ஆசிரியன் சொன்னதற்குச் சித்தனும் சமமதித்து நாளைக்குப் போர்செய்து வெல்வோமென்று மனஞ்சம்மதித்த நான்காம் பாதகனுன அவன் மனம்போல் சூரியன் அஸ்தமித்து இருள்மூடி இராத்திரியாய்ப் பொழுதுவிடிந்து சூரியனுதயமான பின்பு, சித்தன் சிங்கவாகினியை வணங்கிக் கச்சுக்கட்டிக் கத்தி கேடகங்கொண்டு அந்தக் கிழவன் சொன்ன இடஞ்சென்று நின்றுன். பின்பு வாள் யுத்தத்துக்கு வாவென்று நேற்று வலிய வரச்சொல்லிப் போனவராகிய கொடிய ஆண்புலிபோல் முதிர்ந்து வளைந்து கூனிய ஆசிரியரும் வீரகண்டமணியுங் கச்சுங்கட்டி விபூதியும்பூசிக்கொண்டு பிரகாசமான கத்தியுங் கேடகமுங் கொண்டு அநதப் புததியீனனுககு நேரேவந்து சிங்கமுஞ் சிங்கமு மெதிர்த்தாற்போலக கடவுளாகிய ஆசிரியனும் சித்தனும் எதிர்த்து யுத்தஞ்செய்யத தொடங்கி ஒருவருக்கொருவர் எதிர்கொண்டு நின்றும், முன் வாங்கியும் நேரே சென்றெழுந்தும் இடியேறுபோலக் கெர்ச்சித்தும் பின்பு கேடகத்துள்ளே குனித்தொடுங்கியும் வெளியே தெரியவந்தும் கத்தியையுருவி இடசாரி வலசாரியாகத் திரித்து வீசிவெட்டியும் அப்படி வெட்டுவதை ஒருவருக்கொருவர் கேடகத்தாலே தடுத்தும் மீண்டு கொதிப்புக்கொண்டு கிட்டிச்சென்று நகைத்தும் ஆண்மைகள் பேசியும் மாறிமாறி எதிரிட்டும பின்பு முதுகுகாட்டி ஓடுகிறதுபோல ஒட்டங் காட்டியும சக்கராகிருதியாய்ச் சுழன்று கூப்பிட்டும் மறுபடி வெட்டுகின்ற கததியை மாபிலே தாங்கியும் அப்படி வெட்டுவதைத் தப்பித்துக்கொண்டும் இப்படியாக

நாலைந்து நாழிகைநேரம் யுத்தஞ் செய்தார்கள். அப்படி யுத்தம் பண்ணுவதைப் பார்க்கிறவர்களெல்லாரும் கேட்கக் கிழவனாகிய ஆசிரியன், குருபத்தினியை யெண்ணின நெஞ்சைக் குறித்தும், உடன் படச்சொன்ன நாவைக் குறித்தும், அவளைத் தொட்ட கையையும், பார்த்த கண்களையும் சித்தா! காத்துக்கொள்ளென்று பலதரமுஞ் சொல்லிச்சொல்லி அந்த நெஞ்சு முதலானவைகளுக்குத் தக்கபடி தண்டித்துத் தலையையும் வெட்டிக் கொன்று தமது திருவுரு மறைந்து போயினார்.

அப்போது சண்டை பண்ணுவதைப் பார்த்துக்கொண்டு நின்ற வாள்வீரர்கள் கிழவாசிரியனைக் காணாமல் அவன் வீட்டிற்குப்போய்த் தேடி அவன் மனையாளை ஆசிரியன் எங்கு சென்றானென்று கேட்க, அவள் கடவுளைத் தெரிசிக்கக் கோயிலுக்குப் போயினாரென்று சொல்ல அப்பொழுதே கோயிலுக்குப் போன ஆசிரியன் திரும்பி வருவதைத் தேடிக்கண்ட வீரர்கள் ஐயா! நீர் சித்தனுடனே போர்செய்து அவனை வென்ற பின்பு நாங்கள் அந்த யுத்தகளமெல்லாம் தேடித்தேடி இங்கு வந்து கண்டோமென்று சொன்னார்கள். அதுகேட்ட ஆசிரியன் நான் சித்தனுடைய அங்கம் வெட்டினவனல்லேன் நீங்கள் சொல்லுவ தென்ன காரணம்? என்னைப்போல் அங்குவந்து சித்தனுடனே போர்செய்து கொன்றவன் யார்? ஆனால் இப்படி நடந்தது இந்த நான்மாடக்கூடல் நாயகன் திருவுளந்தானேவென்றான். அதுகேட்டு நின்ற மனையாள் அங்கு நிற்கிறவர்களெல்லாருங் கேட்கச் சித்தன் நெடுநாளாய்த் தன்னை நெருங்கி அடுத்தடுத்து வந்து உடன்படும்படி கேட்டதும், நேற்றையதினம் வந்து கையைப்பற்றி யிழுத்ததும், மனம் வெந்து நான் அவனைத் தள்ளிவிட்டுப் போய்க் கதவை மூடித் தாளிட்டுக் கொண்டிருந்ததும் தெரியச் சொன்னாள். அதுகேட்ட மாணாக்கர்களெல்லோரும், ஐயா இந்த அம்மை சொன்னபடியே அங்கு உம்மைப்போல் வந்த வாள்வீரர் சொல்லிச் சொல்லிச் சித்தனைக் கொலை செய்தாரென்று சொல்ல, ஆசிரியன் கேட்டு இப்படி நடந்தது நம்மை யெல்லாம் ரக்ஷிக்கும் கடவுளான சொக்கலிங்க மென்னுஞ் சோமசுந்தரப் பெருமான் திருவிளையாடலே யென்று தன் மனையாளும் மாணாக்கர்களுங் கூடிவரக் கோயிலுக்குள்ளே போய்க் கடவுளை வணங்கிப் பிரம விஷ்ணுகளுக்கெல்லாம் தெளியக் கூடாத உன் பெருமை மிகவுஞ் சிறிய ஏழையான அடியேன் பொருட்டுத் திருவிளையாடலாயிற்றே யென்று துதிக்கப் பாண்டியனும் பட்டணத்து ஜனங்களும் கடவுள் திருவிளையாடலைக்கண்டு ஆனந்தக்கண்ணீரிலே முழுகி அடிக்கடி வணங்கி வணங்கிக் கீதங்கள் பாடி யாடித் துதித்து நின்று இந்தச் சோமசுந்தரக்கடவுள் அடியார்க்கெளியவர் அநாதி ரட்சகரென்று கொண்டாடிக் குலோத்துங்க பாண்டியன், மாணிக்க மாலை யென்னும் அவன் மனையாளுடனே அந்தக் கிழவாசிரியனை யானைமேலேற்றிப் பட்டணப் பிரவேசஞ் செய்வித்துப் பின்பு தன்

புதல்வனுன அனந்தகுண பாண்டியனுக்குத் தன்னரசாட்சியைக் கொடுத்துப் பின்பு சத்து அசத்து என்னும் பொருள்களைச் சந்தேக மறத் தெளிந்து பாசபந்தங்களை யொழித்து அந்தக்கரணங்கள் ஒரு மித்துச் செல்ல ஐம்புலன் வழியே மனதைச் செலுத்தாது திருவரு ணெறியே செலுத்திப் போதமாகிய தனது லல்லமையை மூடியிருந்த மலவலியானது விட்டு நீங்க இராகுவென்னும் பாம்பினுல் உமிழப் பட்ட சந்திரனைப் போலத் துல்லியனுய் வெள்ளியம்பலத்திற் கான் மாறி யாடிய சோமசுந்தரக் கடவுளின் திருவடி நிழலைப் பிரியாத பேரின்பமாகிய மோக்ஷத்தை யடைந்தான்.

அங்கம் வெட்டின படலம் முற்றிற்று.

---

# நாக மெய்த படலம்

எழுசீரடி யாசிரிய விருத்தம்

செங்கண் மால்விடை மேல்வி டங்கர் செருக்க ளத்திடை வாளெடுத்
தங்கம் வெட்டிய சேவ கத்தை யறைந்த னந்தமிழ் மாறன்மேற்
சங்கை யிட்டம ணீச ராற்றிய தறுகண் வேள்வி முளைத்ததோர்
வெங்கண் வாளர வைத்து ணித்து விளித்த வாறும் விளம்புவாம்.

**உரை:** சிவந்த கண்களையுடைய மால்விடையூரும் விடங்கராகிய சோமசுந்த்ரக் கடவுள் யுத்தகளத்தை யடைந்து கையில் வாளை யெடுத்து குருபத்தினிக்குத் தீங்கு செய்ய எண்ணிய பாதகனது அங் கத்தை வெட்டிய திருவிளையாடலைச் சொன்னேம். இனி பாண்டியன் மீது சமணர்களாகிய நீசர்கள் ஓர் யாகஞ்செய்து அதினின்றும் உண்டு பண்ணி யேவிய சர்ப்பத்தின்மீது (அந்தப் பாண்டியனைக் கொண்டு) கணையேவி அதனைத் துணித்துக் கொன்றருளிய திருவிளையாடலையுஞ் சொல்லுகின்றேம்,

குலோத்துங்கபாண்டியன் மோக்ஷமடைந்த பின்பு அவன் மக னுகிய அனந்தகுணபாண்டியன் சிவனுருவாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரமும் உருத்திராக்ஷமும் விபூதிசாதனமுமே உண்மைப் பொருளென்று பத்திகொண்டு தனது தகப்பன் முதலாகிய அரசர்க ளெல்லாரிலுஞ் சிறந்தவனுய் நடக்கிறதினுலே கடவுளின் ஸ்ரீ பஞ்சாக்ஷரவொலியும் திருநீற்றினொளியும் உள்ளிருளையும் வெளியிருளையு மோட்டப் பரம சிவனது திருவுருவமாகவே பாண்டி நாடெல்லாம் விளங்கியது. இப் படி விளங்குகின்றதை எண்ணுயிரஞ் சமணர்களுந் தெரிந்து கோபங் கொண்டு நெருப்பில் காய்ச்சின இரும்புபோல அபிமானஞ் சுடப் பொருதவர்களாய் அந்த நாயினுங் கடையான சமணர்கள் பாண்டிய னைக் கொல்லவெண்ணி வஞ்சனையான ஒரு வேள்வி செய்வதற்குக்

காதவழி யெல்லை யளவு வேள்விச் சாலைசெய்து அக்கினிக்குண்டமுந் தோண்டி நெருப்பிட்டு எட்டுத்திக்கிலும் புகைபடர மூட்டி நக்ஷத்திரங்களெல்லாம் நெல்லுப் பொரிபோல் உதிர்ந்து சிதற, அக்கினிச் சுவாலை ஆகாயத்தை யளாவ நெருப்பை வளர்விக்க அப்படி கொதித்தெரிகின்ற குழியிலிருந்து இருண்ட படமும், வாயினிரு புறத்திலும் பாதிச்சந்திர னிரண்டு விளங்கினாற்போன்ற பற்களும், வடவாக்கினி போன்ற கண்களும் தோன்ற பாதாளத்திலிருந்து ஒரு மலை எழுந்தாற்போல ஒரு அசுரனெழுந்தான். அப்படி யெழுந்த அசுரன் கோபங்கொண்டு சமணர்களே எனக்கு வடவாக்கினியும் வெந்து போகத்தக்க உதராக்கினி பற்றிப் பசிதாகமா யிருக்கிறதினாலே நீங்கள் இனி எனக்கேவும் வேலை யென்னவென்று கேட்க, அதுகேட்டுச் சமணமுனிவர்கள் நீ போய்ப் பாண்டியனை மதுரையோடே யெடுத்து விழுங்கி வருகவென்றேவிக் கூடத்தொடர்ந்தார்கள்.

இப்படிப் பாயுடுத்துகின்ற சமணர்கள் அனுப்ப வருகின்ற பாம்புருவான அசுரன் பூமியும் ஆகாசமும் நிரம்பின வுடம்புடனே விஷமூறிச் சிந்துகின்ற துவாரம்பொருந்திய பற்களும், வடவாக்கினிபோலெறிகின்ற கண்களும், இருள் நிரம்பின மலைக்குகைபோன்ற பிளந்த வாயுமாய் நெடுந்தூரம் நீண்ட மலைபோல் வருகிறபோது பாதாள லோகம் வெளியே தோற்றவும், உடலழுந்துதலினாலே பூமி பள்ளமாகவும், கண்களில் நெருப்புத் தோன்றச் சுவாசம் விடும்போது முன்னேயுள்ள பயிர்கள் தீயவும், காடுகளெல்லாம் பற்றி வேகவும் மரங்களிலிருக்கின்ற பட்சிகளின் சிறகுகள் சுருண்டு விழவும், உலகமெல்லாமஞ்சவும், உலகத்தைத் தாங்குகின்ற ஆதிசேடனடுங்கவும், சூரியசந்திரர்களஞ்சவும், இவர்களை விழுங்குகின்ற இராகு கேதுக்க ளஞ்சவும், திக்கு யானைகளஞ்சவும் தண்டதரனான யமனும் பயந்தோடும்படி மதுரைக்கு மேற்குத் திசையில் வருகிறதைக் கண்டவர்கள் ஓடிப்போய்ப் பாண்டியனுக்குத் தெரிய, அவனை வணங்கி, ஐயா ! நமது மதுரைக்கு மேல்முகமாக ஒரு பெரிய விடப்பாம்பு பூமி யாகாசமெல்லாந் தன் வாய்க்குளிட்டு விழுங்கும்படி வருகின்றதென்று சொல்ல, அதைக் கேட்ட பாண்டியன் அஞ்சாதவனாய் இந்தப் பாம்பை முன்னே யானையை அனுப்பின சமணர்களே வரவிட்டார்களென்று நிதானித்து ஆனாலும் இந்தப் பாம்பையும் கொல்லுதற்கு நமது குலதெய்வமான சோம சுந்தரக்கடவுளே யிருக்கிறாரென்று தேறி ஆகாயத்தி லிருந்திறங்கின சூரியன்போல விளங்குகின்ற இந்திர விமானக் கோயிலுக்குப்போய்க் கடவுளை வணங்கிச் சுவாமி ! பாரம்பரியமாய் அடிமைசெய்து உமது திருவடியை ஒருபோது மறவாம லெப்போதும் அடிமை செய்கின்ற அடியேன் உமது சொல்வழியே நீதிசெலுத்தி வருகின்றேன். இப்போது இந்த மதுரை முழுவதும் அழியும்படி சமணர்களெண்ணி வரவிட்ட பாம்பை உமதருளினாலே கொல்லும்படி வேண்டுகின்ற அடியேனைக் கிருபைசெய்தருள வேண்டும்; இதுவே உமது கடனென்று

வேண்டிக் கடவுளிச்சை பெற்று வணங்கி அவர் திருவடிகளை உள்ளத்திலே தியானித்துக்கொண்டு வெளியே வருகின்ற பாண்டியன் வில்லு மம்புங் கொண்டு மதுரைக்கு மேற்றிசையில் வருமுன்னே மலைபோல் நீண்டுயர்ந்து வருகின்ற பாம்பைக் கண்டான்,

அப்படியவன் காணும்போது பாம்பாய்வருகிற அசுரன் அநேகம் புள்ளிகளையுடைய விரிந்த வாயோடு கூடிய படத்தை அகலமாகப் பரப்பி எங்குமிருள்மூட நஞ்சொழுகுகின்ற பல்லை அதுக்கிப் பெருமூச்சு விட்டுச் சீறி அந்த மதுரை முழுவதும் விழுங்கும்படியாக வாயை ஆவென்று திறந்தான். அப்போது ராஜசிங்கமான பாண்டியன் இடியேறஞ்ச அட்டகாசம் பண்ணிக் கையிலிருக்கிற வில்லை இருபுறமும் வளைய வளைத்து நாணேறிட்டு அக்கினிச் சுவாலையான கூரிய பாணத்தைத் தொடுத்துவிட்டான். அப்படி அவன்விட்ட பாணங்களெல்லாம் வெறுந்தூளாகக் கடித்துத் துப்பி யூதினன். அதற்குப் பாண்டியன் சகியாமல் பரமசிவனது பாதபங்கயத்தை நினைத்து ஒரு கொடிதான அர்த்தசந்திர பாணத்தைப் பிரயோகித்து வந்த பெரிய பாம்பினது வளையுமுடலைத் துண்டு துண்டாக்கினன். அப்போது இடிபோலே குமுறி மலையிலிருந்து விழுகிற அருவிபோல இரத்த வெள்ளமோட நீண்டவுடல் புரளக் கூரிய வால் நெளியச் சாகிற அசுரன் முற்காலத்திலே வாசுகி கக்கின ஆலகால வெள்ளம்போல் இருண்ட விஷத்தைக் கக்கினன். உடனே அந்த விஷாக்கினி பொங்கிப் பட்டணமெல்லாம் நெருங்கியது. சோலைகள்-கிணறுகள்-குளங்கள்-நாற்சந்தி கூடுமிடங்கள் - கல்விச்சாலைகள்-அகழ்கிடங்குகள் - மதில்கள்-அரசனரண் மனைகள்-மாடங்கள்-உப்பரிகைகள் மேடைகள் - கோபுரங்கள்-நாடக சாலைகளாகிய எவ்விடங்களிலும் பரவி வியாபிக்கப் பட்டணத்து ஜனங்களெல்லா மயங்கித் தூங்கினவர்கள்போல மடிந்தார்கள். எப்படியென்றால், நிலைமை குலைந்து உடம்புகள் விம்மி வேர்வைகளுண்டாகிப் புலன் பொறி கரணங்கள் தடுமாறிப் பேசும் பேச்சுகள் குழறித் தழுதழுத்து நாவும் வறண்டு சுவாசமேலிட்டு அறிவழிந்து மயங்கி மூச்சொடுங்கி உள்ளிருக்கிற உயிர் போகிறது வருகிறதாக இப்படிக் கிடந்தார்கள். அதைப் பாண்டியன்கண்டு விஷத்தைக் கண்டஞ்சின விஷ்ணுவைப்போலக் கடவுள் கோயிலுக்குள்ளேபோய் வணங்கி எங்கள் குலதெய்வமே! உமது திருவடிகளையே சரணமென் றடைந்தேனுகையால் முன்னே வந்த கடலை வென்றும், மழையைத் தடுத்தும், யானையை எய்து கொன்றும், இந்த மதுரையைக் காத்ததுபோலவே இந்த விடத்தினால் வந்த வருத்தத்தையுந் தீர்த்தருள வேண்டுமென்று பலகால் வேண்டக் கிருபைக் கடலான சோமசுந்தரக்கடவுள் தம்முடைய சடையிலே தங்கிய சந்திரகலையின் முகத்திலே சிறிது சிந்திவிட அவர் சிந்தினவுடனே எவ்விடங்களிலும் அர்த அமுதம் பெருகிப் பாலிலே பிரைமோர் போலக் கலந்து முன்னுள்ள மதுராபுரியாகவே பரிசுத்தஞ் செய்து விஷத்தைப் போக்கியது. அப்போது சூரியன்

முன்னே இருள்போலவும் கடவுள் திருவருளின் முன்னே மலவலி போலவும் சந்திரகலையின் முகத்துளியினாலே விஷந் தீர்ந்து எல்லாரு மூர்ச்சை தெளிந்து ஆனந்த பரவசரா யெழுந்து வாழ்ந்திருந்தார்கள். பாண்டியராஜனும் சொக்கலிங்கக்கடவுளுக் கன்புருவாகி உலக மெல்லாம் அரசாண்டிருந்தான்.

நாகமெய்த படலம் முற்றிற்று.

———

இருபத்தொன்பதாவது

## மாயப்பசுவை வதைத்த படலம்

கலி நிலைத்துறை

சுருதி யின்புறத் தவர்விடு மராவினைச் சுருதி
கருத ரும்பர னருளுடைக் கௌரியின் துணித்த
பரிசி தங்கது பொருதமன் படிறர் பின்விடுப்ப
வரிபெ ரும்பசு விடையினுன் மாய்த்ததும் பகர்வாம்.

உரை: வேதபாகியராகிய சமணர்கள்விடுத்த சர்ப்பத்தை வேதங் களுக் கெட்டாத சோமசுந்தரக் கடவுளின் திருவருளை யடைந்த பாண்டியன் துணித்தபெருமைபொருந்திய திருவிளையாடலிதுவாகும். இனி அதனைச் சகியாமல் பாபிகளாகிய சமணர்கள் பின்னர் விடுத்த பசுவை (அச் சோமசுந்தரக்கடவுள் தமது) விருஷபத்தை விடுத்துக் கொன்றருளிய திருவிளையாடலையுஞ் சொல்லுகிறோம்.

அனந்தகுண பாண்டியன் அந்தப் பாம்பைத் துண்டாக்கின பின்பு, அதனுடன் வந்த சமணர்கள், பிரசண்ட வாயு வீசக் கலைந் தோடுகிற மேகங்கள் போலக் கலங்கியோடி ஓரிடத்திலே சேர்ந்து கூடி, நாம் முன்னே யனுப்பிய யானையைக் கொன்றாற் போலவே இப்போ தனுப்பின பாம்பையுங் கொன்றார்கள். இனி நாம் செய்வ தென்னென்று ஆலோசித்து, இனி அவர்கள் சைவர்களாகையினாலே பசுவைக் கொல்லார்கள்; பழிக்கு அஞ்சுவார்கள்; இதுவே தக்கதான தந்திரமென்று எண்ணி, முன்போலவே ஒரு வேள்விசெய்து அக்கினி யை வளர்க்க, அதினின்றும் ஒரு அசுரன் பசுவடிவாகித் தோன் றினான். அப்படித் தோன்றின பசுவை, முன்போலவே அனுப்பினார் கள். அப்போதந்த பசுவானது ஆகாயத்தி லோடுகிற மேகங்களைக் கொம்புகளினாலே குத்திக் கோத்து ஆதிசேடனுடைய தலையும் எதிரே தோன்றுகிற மலைகளுந் தூளாகக் கால்களாலே மிதித்துப் பிரசண்ட வாயுவும் அஞ்சப் பெருமூச்செறிந்து அந்தப்பசு விடுகிற மூச்சினாலே சராசரங்களெல்லாம் பூளைப் பூப்போலே பறக்கவும், அதன் கோபாக் கினியினாலே உலகமெல்லாந்தீயவும், பக்ஷிகள் மிருகங்கள் பயந்தோட வும், நெருங்கின காடுகளையும், மலைகளையுங் கொம்பினாலே குத்திச்

சண்டமாருதம்போலே வேகங்கொண்டு வழியிலே கண்ட பேர்களை யெல்லாந் துரத்திக்கொன்று இடிபோலே முழங்கிப் பின்னும் யமன் வருகிறதுபோலே அந்தப் பசுவானது பாண்டியன் மதுரையை நோக்கி மிகுந்த பலத்துடனே வருகின்றதைப் பாண்டியனும் பட்டணத்து ஜனங்களும் தெரிந்து சோமசுந்தரக் கடவுளை மனதிலே தியானித்துத் துதித்து வந்த துன்பத்தைத் தெரிவிப்போம் என்று கோயிலுக்குப் போய்க் கடவுளைத் தொழுது, சர்வ லோகங்களுக்கும் நாயகராயுள்ள பெருமானே! அபயம்; வெள்ளியம்பலத்திற் கான்மாறி யாடிய ஸ்ரீ பாதங்களை யுடையவரே! அபயம்; பல உயிர்களுக்கு முயிரா யிருந்து ஞானத்தை யுணர்த்துகின்ற ஞானசொரூபரே! அபயம்; பரிசுத்தம் பொருந்திய வேதபுராணங்களின் பொருளா யுள்ளவரே அபயமென்று கூவி முறையிட்டார்கள்.

இப்படி நின்று முறையிடுகின்றவர்களைக் கடவுள் தமது திருவருட் பார்வையினுலே பார்த்து மனமிரங்கித் தமது நந்தியைக் கூப்பிட்டு நீ போய் அந்தச் சமணர்களனுப்பின பசுவை வென்று வருகவென்றருள் செய்தனுப்ப, உடனே அந்த நந்தி யமனுந் தன்னைக் கண்டு அஞ்சக் கண்கள் கொதித்துச் சுவாலை வீச, நாக்கை நீட்டி மூக்கைத் துழாவிக் கடைவாயிலே நுரைசோரத் தலை ஆகாயத்தை அளாவ எழுந்து நெற்றியிலே பட்டம்மின்ன, கொம்புகளிலே பூண்கள் விளங்க முதுகிலே பருமம் குறுங்க, கொம்பிலே கட்டின தொங்கற்குச்சுகள் நெற்றி முன்னே அசைய, பூட்டின முத்து முகவட்டுகளிலங்க, கழுத்திலே சதங்கைமாலைகள் ஆரவாரிக்க, பெரியமணியுங்கண கணென்ன முத்துத் தண்டைகளும் கிண்கிணி மாலைகளும், அரசிலைத் தொங்கல்களும், பல ஆபரணங்களும் விளங்க, நான்கு கால்களிலும் சிலம்புகள் ஒலிக்க, கால்களைத் தூக்கிவைத்து நிலத்தைக் கிண்டி எட்டுத்திக்கும் தூளிகள் எழுந்து மறைக்கச் சுவாசம் விட்டுப் பூமியைக்கொம்பினுலே குத்திக் கோத்து மேகங்கள் நேராக எதிர்நின்று நோக்கி நெருங்கி இரண்டு கண்களிலும் நெருப்புச் தசிந் நடந்தது. அப்படி நடந்த நந்தி இரண்டு கொம்பினுலும் மேகததைக் கிழித்துத் துள்ளி ஒரு வெள்ளி மலைபோல நடந்து சென்று அந்தப் பசுவின்மேற் கோபங்கொண்டு நாற்றம்பற்றிப் பெருமூச்செறிந்து கிட்டி மேற்குள்ளது கிழக்காகவும், கிழக்குள்ளது மேற்காகவும், வடக்குள்ளது தெற்காகவும், தெற்குள்ளது வடக்காகவும், இப்படி முடுக்கிக் கொம்பிலே கோத்து முதுகு கீழாகத்தள்ளி, மலைகளைக் கொம்பினுலே குத்தி திசைகளுக்கு அப்பாற்போய் விழவெறிந்து வீசி அந்த மலைகளின் சிகரங்களை யுடைதது இன்னம் ஒரு சிகரத்தில் விழவெறிந்து ஆகாயத்தையளாவின ஆல மரங்களின் கிளைகளை ஒடியமுரித்துச் சமுத்திரத்திலே போய் விழ வீசி இப்படி நந்திதேவர் விளையாட, அந்தச் சமணர்கள் நினைத்தபடியே பசுவுடனே போர்செய்து கொல்லாமல் உயர்ந்த ஜாதியான இடபம தன்னுடைய பெரியஅழகைத்தெரியக்காட்ட அதை அந்த பசுவானது

கண்டு காமங்கொண்டு மன்மதபானந் தைக்கப்பட்டு உயிருடனே வீரியத்தையும் விட்டுக் கீழே விழுந்திறந்து ஒரு மலைவடிவாய் முடிந்தது. அதுகண்டு மதுரைமா நகரமெல்லாம் அளவில்லாத சந்தோஷத்தையடைய, வேப்ப மாலையைத் தரித்த பாண்டியன் தோள்கள் பூரிக்கச் சூரியனைக் கண்ட இருள்போலப் பசுவின் கூடவந்த சமணர் கூட்டங்களெல்லாம் நாணி யோடினார்கள். அன்றுமுதல் வந்த இடபமும் உலகங்களுக்குத் தெரிய, ஒரு இடபமலையென்று சொல்லும்படி விளங்கா நின்றது. பின்பு சூட்சுமரூபமாய்க் கடவுள் திருவடியிற் சென்று வணங்கக் கடவுளும் பழைய வடிவுடனே நீ இங்கே யிருக்கக் கடவையென்று நிலைபெறச் செய்தார்.

அப்போது பட்டணத்து ஜனங்களும் பாண்டியராஜனும் மிகுந்த சந்தோஷத்தையடைந்து சென்று சந்நிதியிலிருந்த நந்திதேவர் பாதங்களை வணங்கிப் போகச் சோமசுந்தரக் கடவுளும் நந்திதேவருடைய ஜெயத்தைக் கொண்டாடி அங்கயற் கண்ணம்மையுடனே மகிழ்ந்திருக்குங் காலத்தில், அந்த இடபமலைமேலே இலங்கையி லிராவணனைக் கொல்ல வரும்போது இராமனும் இலட்சுமணனுடன் அனுமான் சுக்ரீவன் முதலான வானரசேனைகள் சூழவந்திறங்கினார்கள். அதுதெரிந்து அகத்திய மகாமுனிவர் அங்கே வந்து ராமருக்கு ஆசீர்வாதஞ் சொல்லிச் சோமசுந்தரக் கடவுளுடைய திருவிளையாடல்களைச் சொல்ல, அக்கடவுள் பெருமையைக் கேட்டுத் தலைமேற் குவித்த கையராய், அகத்தியருடனே கூடப்போய்ப் பொற்றாமரை தீர்த்தத்திலே முழுகிச் சோமசுந்தரக் கடவுளடிகளை வணங்கிச் சிவாகமப்படி அருச்சனை செய்து, துதித்துக் கனிந்த அன்புடனே தலைமேற் கைகுவித்துக் கடவுளே! இந்தப் பூமண்டலத்திலே அநேகமான சிவஸ்தலங்களுள்ளன. அவைகளிலே இந்த மதுரை மிகுந்த ஆச்சரியமான ஸ்தலமானதினாலே இது மிகவும் அழகுள்ளதென்பது. அதெப்படியென்றால் உலகங்களெல்லாம் உன்னிடத்திலே யுண்டாகி நிலையாக நீ செய்த செய்கை போலவே உன விளையாடலென்று தெரிய யானைமலையென்றும், நாகமலை யென்றும், பசுமலையென்றும், இடபமலையென்றும், நிலைகொண்டு விளங்குதலாலே இந்த மதுரையே சிறந்தது. இன்னும் கண்டவுடனே துன்பங்களைப் போக்குதற்கும், அளவில்லாத செல்வங்களைக் கொடுத்தற்கும் கருணைகொண்டு நீ யிங்கே விளங்குகின்ற சிறப்பினாலே தெய்வ நாயகனே! இந்த இலிங்கத்துக் கொப்பான தொன்றுண்டோ? அல்லாமலும் முழுகினவுடனே முன் செய்த பாவங்களெல்லாம் தீர்ந்து உனது சிவானந்த போகத்தைக் கொடுக்கின்ற இந்தத் தீர்த்தத்துக் கொப்பான தீர்த்தந்தா னென்றுண்டோ? இன்னமும் எந்தத் தலங்களினு மொவ்வொன்று சிறந்ததா யிருக்கும். இங்கே மூவகைச் சிறப்புமுண்டு. ஆதலால் இந்தத்தலத்தை அடைந்தவர்களுக்குச் சித்த சுத்தியும் பலவிதங்களான சித்திகளும் உண்டாகும். ஆனபடியினாலே அடியேனெண்ணிச் செய்கிற காரியம் முடிவ

தரிதானாலும் எப்படியு முடியும்படியாகத் திருவருள் செய்ய வேண்டு மென்று வணங்க, அதற்கு சோமசுந்தரக்கடவுள் அசரீரியாக, இராமா! நீ கேட்பாயாக, நீ எனக்குத் தென் கீழ்த்திசையிலே சென்று, கடலுக் கணைகட்டி, அந்த ராவணனுடைய பத்துத் தலை களையு மறுத்துச் சீதையின் சிறையை நீக்கி மீண்டு உன்னுடைய அயோத்திக்குச் சென்று, பலகாலம் உலகங்களை யாண்டு, இனிது வாழ்ந்து பின்பு வைகுண்டமடையக், கடவையென்றும், இப்போது நீ கவலைப்படாதே யென்றும் திருவருள் செய்ய, அப்படிச் சொன்ன அசரீரிவாக்கைக் கேட்டு, இராமன் வணங்கித் துதித்துக் கடவுளிடத் திலே விடைகொண்டு சென்று, வேதத்துக்குப் பொருளருளிச்செய்த கடவுளருளின்படியே, இலங்கையிற் சென்று, பாவியான இராவண னைக் கொன்று, அவன் தம்பி விபீஷணனுக்கு அந்த இலங்கையைக் கொடுத்துப் பின்பு திரு இராமேச்சுரத்திற்குப் போய்ச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசித்துத் திருவருள் பெற்றுத் தன்னைப் பற்றின பழியைத் தொலைத்து, இந்திரன் பழி தீர்த்த கடவுளை மீண்டும் வந்து வணங்கித் துதித்துச் சீதையுடனே இராமன் அயோத்திக்குச் சென் ருன். பின்பு அனந்தகுண பாண்டியன் தனது புதல்வனுகிய குல பூஷணனுக்கு அரசாட்சியைக் கொடுத்துத் தான் சிவலோகஞ் சேர்ந்தான்.

மாயப் பசுவை வதைத்த படலம் முற்றிற்று.

---

முப்பதாவது

# மெய்க்காட்டிட்ட படலம்

கொச்சகக் கலிப்பா

பாவமென வடிவெடுத்த படிற்றமணர் பழித்தழல்செய்
தேவவ்வு மறப்பசுவை யேறுயர்த்தோன் விடைநந்திக்
காவலனை விடுத்தழித்த கதையுரைத்து மட்டாலைச்
சேவகன்மெய்க் காட்டிட்டு விளையாடுந் திறமுறைப்பாம்.

உரை: பாவமே தமக்கு உடலாகப் பெற்றுழன்ற பாவிகளாகிய சமணர்கள், நிந்தைக்கிடமாகிய யாகத்தைச் செய்து, அதினின்று முண்டாகிய பசுவை யேவியதற்கு, அந்தப் பசுவை நந்தியாகிய விடைப்பெருமானை விடுத்துக்கொன்றருளிய திருவிளையாடலைச் சொன் னேம். இனி அட்டாலை மண்டபத்தேறிச் சேவகம் புரிந்தவராகிய சோமசுந்தரக் கடவுள் மெய்க்காட்டிட்டு புரிந்த திறத்தைச் சொல்லு கின்றேம்.

பின்பு குலபூஷண பாண்டியன் தனது செங்கோல் செலுத்தி அரசாண்டு வருகிற காலத்தில், அவனுடையசேனை காவலனுகிய சவுந்

தர சாமந்தனென்பவன், சிவனடியார்களைப் பரமசிவமாக அன்பு செய்து பூசித்து நடந்து அரசனுக்கு இம்மை மறுமைக்குந் துணையாகி வருகிறபோது, வேடர்களுக் கரசனான சேதிராயனென ஒரு வேடன், மிகுந்த பலாஷ்டியனாய் மேலிட்டு, ரத கஜ துரக பதாதிகளுடனே குலபூஷண பாண்டியன்மேலே படையெடுத்துச் சென்று வெல்ல வேண்டுமென் றெண்ணிக்கொண்டு வலி செய்வதைக் குலபூஷண பாண்டியன் தெரிந்து, தனது பாத நிழலிலே வணங்கி நின்ற சவுந்தர சாமந்தனைப் பார்த்துச் சாமந்தா ! நமது பொக்கிஷத்தைத் திறந்து வேண்டிய திரவியங்களை எடுத்துக்கொண்டு செலவு செய்து, இன்னமும் சில சேனைகளைச் சேகரித்து, படைவலிமை செய்துகொள்ளென்று ஆக்ஞாபிக்கச் சாமந்தன் அத்தக் கட்டளை யைக்கேட்டு அவனுக்கினை பின்னே தள்ளச் சிவனருள்வந்து முன்னே பற்றி யிழுக்க, விரைவிலே சென்று பொக்கிஷத்தைத் திறந்து, இராஜ நீதிப்படியே சம்பாதித்துச் சேர்த்திருக்கிற திரவியங்களில், தனது ஆசை நிரம்பத்தக்க பொருள்களைக் கைக்கொண்டு அள விறந்த மகிழ்ச்சியுடனே கடவுள் கோயிலுக்குப் போய்ப் பொற்று மரைத் தீர்த்தத்திலே முழுகி நீராடித் தனதுள்ளே மெய்யன்பு வடிவ மான வேதப்பொருளை லணங்கித் துதித்துப், பரமேட்டியான கட வுளே ! உமது திருவருளாலே நான் எண்ணின காரியம் முடிக்க வேண்டும். அதாவது : இப்போது நான் கொண்ட பொருள்களெல் லாம் உமக்கும் உம்மடியார்களுக்குமே ஆக வேண்டுமென்று வேண் டிக்கொண்டு, புண்ணிய வழியாக வந்த அந்தப் பொருள்களெல்லாம் சிவபுண்ணியத்தாலே செலவு செய்ய நினைவு கொண்டு, கடவுளுக்கு ஆகாயத்தை யளாவுகின்ற கோபுரங்களும், ஆயிரக்கால் மண்டபமும், கண்டிகையும், வயிரமணிக் கோளகையும், குண்டலமும், முத்துக் குடைகளும், கொடிகளுஞ் செய்து தேவர்களுக்குப் பூசையும், பிரா மணப் பிள்ளைகளுக்குப் பூணூநூற் கலியாணங்களும், கேள்விகளும், பிராமண சமாராதனமும், துறவிகளுக்கு ஆடை உணவு மருந்து களும், பல்வேறு தருமங்களும் மேன்மேலாக விருத்தி செய்து, யாரா னுலும் சிவவேடமாகக் கண்டால் அவர்களை எதிர்கொண்டு வணங்கி, அவர்களே தனது பிறப்பறுக்கத் திருவேடங் கொண்டவர்களென்று விசுவாசித்து, மாறுத அன்பு உள்ளத்திலே கசிந்து பெருகப் பூசித்து, தினந்தோறும் அறுசுவைப் போசனமு முண்பித்து, மிஞ்சின வெச்சி லுண்டு, இன்று ஆயிரம் பேருக்குப் போஜனம், நாளை இரண்டாயிரம் பேருக்குப் போஜனம், நாளைக்கழித்து மறுநாள் மூவாயிரம் பேருக்குப் போஜனம் இப்படி நாளுக்கு நாள் மேன்மேலும் அபிவிருத்தி செய்து, பாண்டியனுடைய பொருள்களெல்லாம் சிவனுக்கும் சிவனடியார் களுக்குமாகச் செலவு செய்வதைப் பாண்டியனுக்குச் சிலர் தெரி விக்க சேனாதிபதியான சாமந்தன் பாண்டியன் அரசாட்சி மண்டபத் திற் சென்று ராஜகாரியம் பார்க்கிறவர்களோடு கூடி, வெவ்வேறு நாடுகளிலுள்ள வீரர்களுக்கெல்லாம் திரவியங்க ளனுப்பி அவர்களைச்

சேவகத்திலே பதிவு செய்கிறவனைகப் பாவனைகாட்டி தெலுங்கர்-கலிங்கர் - விராடர் - மராடர் - கொங்கர் - வங்கர் - துருக்கர் முதலானவர்களுக்கு மெய்போலப் பொய்யாக கட்டளைகளான ஓலைகளெழுதி, எங்கு மனுப்பி யிருக்க, இப்படி ஆறுமாதக் காலமளவும் அந்தச் சேவகர்கள் வரக் காணுமல் பாண்டியன் சேனுதிபதியை அழைத்து நாளைச் சூரியனுதயமாவதற்கு முன்னே நீ கூட்டின அந்தச் சேவகர்களெல்லாம் வந்து சேரவேண்டுமென்று கண்டிப்பான உத்தரவு செய்தான். அப்படி உத்தரவு செய்த பாண்டியன் மனதுக் கிசைவாகச் சாமந்தனு மொப்புக்கொண்டு வெள்ளி யம்பலத்திலாடுகிற கடவுள் பாதங்களிலே விழுந்து வணங்கிப் பெருமானே! பாண்டியன் கொடுத்த திரவியங்கள் முழுதுங்கொண்டு என்னையும் பணிவிடை கொண்டீரல்லவோ இனி அந்தச் சேவகர்களாகிய சேனைகள் வந்து சேருவதெப்படி யென்றுவேண்டி நிற்க, அப்போது தம் அடியார்கள் குறையைத் தீர்த்தாளுவதே விரதமாகக்கொண்ட சோமசுந்தரக் கடவுள் திருவருளினலே, சாமந்தா! நீ வாங்கின பொருளளவுக்கேற்ற சேனைகளுடனே நாளை வருகின்ருேம். நீ பாண்டியன் சபையிற் போயிருவென்று ஆகாயத்திலிருந்து திருவாக்குண்டாக, அந்த வார்த்தையைக் கேட்டுச் சாமந்தன் பெரிதான மகிழ்வுகொண்டு தன் வீட்டிற் போயிருந்து பொழுதுபோன பின்பு விடிவ தெப்போவென்று தூங்காமல் அடிக்கடி ஆகாயத்தைப் பார்த்து, நக்ஷத்திரங்களை எண்ணி யெண்ணிச் சோமசுந்தரக்கடவுள் வருவதைக் குறித்து நாழிகை பார்த்துப் பார்த்து அன்றிராத்திரி கழிக்கச் சோமசுந்தரக் கடவுள் தமது பூதகணங்களை விரராகச் செய்து, தாமுமொரு குதிரை வீரராய்த் தமது அன்பனை சாமந்தனுக்காக வருவதைப் பார்க்க வேண்டினவன் போலச் சூரியனுதயமானுன்.

அப்படிச் சூரியனுதயமான வுடனே, வீரர்களில் சிங்கமான சாமந்தன் எழுந்து சென்று கிருபாமூர்த்தியான கூடற் கடவுளை வணங்கித் துதித்துக்கொண்டு மீண்டும் போய்ப் பாண்டியன் அரண்மனையைக் கிட்டுமுன்னே, சங்குகன்னன் முதலான பிரதமகணங்களும் குண்டோதரன் முதலிய பூத வீரர்களுங்கூடி, மகா வீரர்களாய் வேல் - வாள் - குந்தம் - தோமரம் - சக்கரம் - சூலம் - வில் முதலான பதினெட்டாயுதங்களுங் கொண்ட கையர்களாய், வீரகண்டாமணி தரித்த கால்களை யுடையவர்களாய்ச் சூழ்ந்து வர, நந்தி - மாகாளன்-பிருங்கி - நிகும்பன் - கும்போதரன் முதலான தலைவர்கள் சூழக் கவசங்களிட்டு, நெற்றியிலே திரிபுண்டரத் தரித்து, கத்தி கேடகங்களுங்கொண்டு முன்னே குதிரைச் சேவகராய்ச் சூழ, சாமரங்கள் - பிச்சங்கள்-குடைகள்-கொடிகள் தோன்ற, எங்கும் வாத்தியங்கள் முழங்கத் தமது விடையையே குதிரையாக மேற்கொண்டு சோமசுந்தரக் கடவுளுமொரு தனிவீரராய் வந்தார். அப்படி வருகிறபோது, முன்னே மதுரையிலே கடல்பொங்கி வந்ததுபோல பல வாத்தியங்கள்

ஒலிக்கிற சத்தங்களும், பாய்கின்ற குதிரைகள் அனுமானிக்கின்ற சத்தங்களும், இடிபோல வீரர்கள் கர்ச்சிக்கிற சத்தங்களும், ஒன்ருய்க் கூடிக் கல்லென்ற சத்தமாய்க் கலந்துவருகிற சேனைகளின் வரவைக் கண்டு, பாண்டியன் சபைக்குப் போகிற சேனுதிபதியான சாமந்தன், பாண்டியனுக்கு முன்னேபோய் இதோ சேனைகள் வருகின்ற தென்று சொல்லப், பாண்டியன் மிகுந்த சந்தோஷத்தை யடைந்து, அரண்மனைக்கு வெளியே வந்து, ஒரு மண்டபத்திலிட்ட சிங்காசனத்தி லிருந்து, பகைவரை வெல்வோமென்கிற மகிழ்வுகொண்டு, சேனை களின் பெருக்கத்தைக் கண்டு, இந்த வீரர்கள் எந்தெந்தத் தேசத் தார்கள் சொல்லென்ன, பாண்டியன் முன்னே நின்று துன்பந்தீர்ந்த மனத்தையுடைய சாமந்தன் தன் கையிலிருக்கிற பொற்பிரம்பை நீட்டி, அவரவர்களை வரிசை வரிசையாக நிறுத்தி ஐயா! இவர்களெல் லாம் கொங்குதேசத்தரசர்கள், இவர்கள் குருநாடர், இவர்கள் கங்க நாடர், இவர்கள் கருநாடர், இவர்கள் அங்கநாடர், இவர்கள் ஆரிய நாடர், இவர்கள் வங்கநாடர், இவர்கள் மாளவநாடர், இவர்கள் குலிந்த நாடர், இவர்கள் கொங்கணநாடர், இவர்கள்தெலுங்கநாடர், இவர்கள் சிங்களநாடர், இவர்கள் கலிங்கநாடர், இவர்கள் கௌடநாடர், இவர் கள் ஒட்டியநாடர், இவர்கள் கொல்லநாடர், இவர்கள் கூர்ச்சரநாடர், இவர்கள் பல்லவநாடர், இவர்கள் பப்பரநாடர், இவர்கள் வில்லநாடர், இவர்கள் விவேகநாடர், இவர்கள் கடாரநாடர், இவர்கள் கேகயநாடர், இவர்கள் மாகதநாடர், இவர்கள் மராடநாடர், இவர்கள் காஞ்சிநாடர், இவர்கள் நாகரிகநாடர் இவர்களெல்லாம் நம்முடைய நாட்டைச் சேர்ந்தவர்களென்று மெய்க்காட்டித் தெரிவித்துப் பின்னும் இப் படிப்பட்ட தேசத்தார்களெல்லா மெப்படி வந்தார்களென்ருல் உமது கொடைப்பொருளினுலே வந்தார்களென்று சொன்னுன்.

அப்போது அந்தச் சேனைகளிலே தூரத்திலே ஒரு குதிரையின் மேலேறிக்கொண்டு பின்தாங்கி நிற்கிற தனிவீரரைப் பார்த்து, இவர் யாரென்று பாண்டியன் கேட்கச் சாமந்தன் வணங்கி. ஐயா! இந்த வீரர்களில் யாரைத்தான் இன்னுரென்று தெரிவதென்று சொல்ல, பாண்டியன் அந்த வீரரை இங்கே கூட்டிவாவென்ன, உடனே பாண் டியன் ஆக்கினைக்கடங்கினவர்போலச் சட்டையணிந்து நிற்கிற அந்த வீரரும் அருகே வரக்கண்டு, பாண்டியன் அளவில்லாத மகிழ்வு கொண்டு பொன்னுபரணங்கள், ரத்தினுபரணங்கள், பொன்வஸ்திரங் கள் முதலான வெகுமானங்கள் கொடுக்க மெய்யன்பனுன சாமந்த னுக்காக அவரும் வாங்கித் தரித்துக்கொண்டு, தம்மோடு தகுதியான வீரர்களுக்குங் கொடுத்துத் தாமேறின குதிரையை ஐந்துவகை வேகங் களை நடத்தியுங் காட்டிப் பின்பு தமது சேனைத் திரளிலே போய்க்கூடி னுர். அப்போது வேடராஜனுகிய சேதிராயன் வேட்டைக்குப்போய்ப் புலியாலடிப்பட்டிறந்தான் என்று ஒரு தூதன் வந்து சொல்லப் பாண் டியன், சேனைகளை முகமலர்ச்சியுாய் நோக்கி, சந்தோஷங்கொண்டு

சாமந்தனுக்கு அளவில்லாத சிறப்புக்கொண்ட முதன்மையும் வரிசைகளும் அதிகமாகக் கொடுத்து, மெய்க்காட்டின சேனைகளெல்லாம் அவரவர் இடங்களுக்குப் போய்ச்சேரத் செலுத்தென்று சாமந்தனுக்கு விடை கொடுக்க, அப்படியே சாமந்தன் அவர்களுக்கு உத்தரவு கொடுத்தனுப்புகிறவன் போல நடைகாட்ட, தனிவீரரான கடவுளும் அங்கே நின்றது நின்றாற்போலவே தமது வீரர்களோடே கூட மறைந்தருளினர். அதுகண்ட பாண்டியன் அதிசயித்துத் தன்னுள்ளே சந்தேகித்து, நன்றாய் ஆலோசித்துப் பார்த்து, இது தனது குலதெய்வமான கடவுள் திருவிளையாடலென்று நினைத்து, ஆனந்தக் கண்ணீர் சிந்திப் புளகாங்கிதனாய், மெய்யன்பு வடிவாய்த் தனக்கு உயிர்த்துணையான சாமந்தனைப் பார்த்து, உனக்கு எளிதே வந்தவர் கூடற்கடவுளேயானால், எனக்கு அந்தக்கடவுள் நீயேயல்லது வேறுண்டோவென்று மிகவுங் கொண்டாடிச் சாமந்தனுக்குப் பின்னும் அதிக சிறப்புகள் செய்து பகைவரால் வரும் மனக்கவலை தீர்ந்து வாழ்த்திருந்தான் குலபூஷண பாண்டியன்.

மெய்க்காட்டிட்ட படலம் முற்றிற்று.

---

முப்பத்தொராவது

# உலவாக்கிழி யருளிய படலம்

---

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அடியார் பொருட்டுப் பரிவயவ ராகிச் செழியன் காணவிடைக்
கொடியார் வந்து மெய்க்காட்டிக் கொடுத்த வண்ணமெடுத் துரைத்துங்
கடியார் கொன்றை முடியார்க் கன்னி நாடன் றனக்கிசைந்த
படியா லுலவாக் கிழிகொடுத்த பழியை யறிந்த படி பகர்வாம்.

உரை: சௌந்தர சாமந்தனென்னும் அடியவர் பொருட்டுப் பாண்டியன் கண்டு சந்தோஷிக்க, ரிஷபக்கொடியை யுடையவராகிய சோமசுந்தரக்கடவுள் மெய்க்காட்டிட்ட திருவிளையாடலைச் சொன்னோம். இனி வாசனைபொருந்திய கொன்றைமாலையைத் திருமுடியிலே தரித்தருளிய அந்தக் கடவுள் அழியாத நிலையைப்பெற்று விளங்கும் பாண்டி நாட்டபதிபனுக்கு இசைந்து உலவாக்கிழி கொடுத்தருளிய திருவிளையாடலை யாமறிந்தபடிச் சொல்லுகின்றோம்.

பின்பு குலபூஷண பாண்டியன் சோமவாரந் தொடங்கிச் சிவதருமங்களெல்லாம் வழுவாமல் அனுஷ்டித்து வருகிற பலத்தினாலே தன்னாட்டிலே யுள்ள பிராமணர்களை அசட்டை செய்ய அதனாலே மழையில்லாமல் நீர் வளமின்றி, பாண்டிநாடெல்லாம் விளைவு குறைந்தது. அக்காலத்திலே முனிவர்களெல்லாம் வறுமை யடைந்து பூணுநூலும்-வேதநூலும் போய், முனிவர்கடன் - தேவர்கடன் - பிதிர்க்கள்

கடன்களாகிய யாகங்களெல்லாவற்றையு மறந்து ஒழுக்கங் குன்றிப் பசி பொறுமல் அந்நிய தேசங்களுக்குப் போய்விட்டார்கள். குடிகளெல்லாம் பசியாலே புழுங்கி யழிந்து, எந்த நாட்டுக்குப் போவோமென்று மிகவும் வருந்துகின்ற செய்கையைக் கண்டு, பாண்டியன், ஐயோ! வென்றிரங்கிச் சோமவாரத்தினன்று பொற்றாமரைத் தீர்த்தத்திலே போய் முழுகிச் சித்தி விநாயகரைப் பூசை செய்து தனது மெய்யன்பினாலே மீனாட்சி சுந்தரேசுவரரை அருச்சனை செய்து சந்நிதியிலே விழுந்து நமஸ்கரித்துக் கைகளைக் குவித்துத் துதித்துங் களித்தும், சுவாமி! உலகத்திலுள்ள வுயிர்களுக்கெல்லாம் நீ உயிர் அல்லீரோ? இந்த வுயிர்கள் பசியால் வருந்துகிற வருத்தம் அடியேனை வருத்த வேண்டியதென்ன? நான் சம்பாதித்த பொருள்களெல்லாம் தருமவழியில் தானே செலவாயின. இனி எம்பெருமானே! உம்முடைய மனமகிழ்ந்து, எனது துன்பநோயைத் தீர்க்கக் கிருபா நோக்கஞ் செய்ய வேண்டுமென்று மிகவும் வேண்ட, அப்போது கடவுள் தம்மை வேண்டுகின்ற பாண்டியன் குற்றத்தை சிறிது உள்ளத்தே கொண்டு, அவன் சொல்வது காதில் விழாதது போலப் பேசாமலிருக்க அப்போது பாண்டியன், தன் வீட்டிற்குப் போய்க் கடவுள் திருவடியி லன்பு பெருகும்படி தியானித்து வெறுநிலத்தே கிடந்து நித்திரை கொண்டான். அப்போது வெள்ளியம்பலவாணர், அவன் கனவிலே சங்கக்குழை யணிந்து திருவெண்ணீறு தரித்துச் சரிகோவணங் கட்டி, மார்பிலே சிங்கத்தோல் கிடந்து விளங்க, ஒரு சித்தராக எழுந்தருளிப் பாண்டியன் முன்னே நின்று ஓ பாண்டியனே! நீ எப்போதும் என்னிடத்திலே அன்புள்ளவன், உலகத்தில் உண்டாகிற துன்பங்களைப் போக்கிக் கோணாமல் நீதி செலுத்துகின்ற செங்கோலுடையவன். ஆனாலும் உன்னிடத்திலே ஒரு குறை யுண்டானதினாலே, எக்காலத்தும் குறைவுபடாத உனது நாட்டிலே இக்காலத்திலே வேள்விகள் குறைந்து வறுமைநோ யுண்டாயிற்று. ஆனால் எமக்கு வேதமே பீடிகை, வேதமே பாதுகை, வேதமே வாகனம், வேதமே சிலம்பு, வேதமே கோவணம், வேதமே கண்கள், வேதமே வாக்கு, வேதமே வடிவம், இன்னும் அவ்வேதமே எமதாக்கினை சத்திரூபமாய், விதிவிலக்காய், ஞானபோதனை செய்து நிலைநிறுத்திப் பலவுயிர்களுக்கும் போகங்களைக் கொடுத்து, வேறுபாடு செய்கிற வியாதிகளைத் தீர்த்து, மோக்ஷத்தையுந் தரவல்லது. எமது செங்கோலும் அந்த வேதமே. அந்த வேதங்களை நிலைபெறச் செய்கிற வேதியர்கள், அந்த வேதநூலின் வழியே கலிதோஷத்தைத் தீர்த்து, யாகங்களை வளர்த்து எம்மிடத்திலே தங்கள் மனதைச் செலுத்துகின்றவர்கள். அவர்களாலே செய்யப்படுகிற வேள்விகளே மழைக்குக் காரணம். அப்படிப்பட்ட பிராமணர்களை நீ யிகழ்ந்து கைவிட்டாய். அதனாலே மழையில்லாமல் வறுமை யுண்டாயிற்று. ஆதலால் மூன்று லோகங்களும் பிழைக்க மூன்று தீயும் வளர்க்கின்ற இந்தப் பிராமணர்களை யானாக மதித்து, நாள்களெல்லாம் பலவகையான தருங்களைப் பெரு

கச்செய்து, செங்கோல் செலுத்தி ஆக்கினுசக்கரஞ்செல்ல வாழக் கடவையென்று, பாண்டியனது முற்காலப் பயன்போலே எளிதாய் வந்த சோமசுந்தரக்கடவுள், உலவாக்கிழியொன்று கொடுத்து இந்தக் கிழியிலே நீ எவ்வளவு பொன் எடுத்துச் செலவுசெய்தாலும் இந்தக் கிழி பழையபடியே நான் கொடுத்த அளவிற் குறையாமலிருக்கும். ஆகையா லிதைக்கொண்டு வந்த வறுமையைத் தீரென்று கொடுத்துப் பாண்டியன் மனக்கவலைதீரத் திருநீறு சாத்தித் தமது திருவுரு மறைந்தார்.

உடனே பாண்டியன், தான் கண்ட கனு மெய்யாக வணங்கியெழுந்து, சோமசுந்தரக்கடவுள் சித்தராய் வந்து கொடுத்த பொற்கிழியைத் தனது மணிமுடிமேலே கொண்டு, பேரானந்தம் விளங்க ஒரு முகூர்த்தகாலம் கூத்தாடி, மந்திரிகளுக்கும் படைத்தலைவர்களுக்குங் காட்டித் தெரிவித்துத் தனது சிங்காசனத்தின் மேலே அந்தப் பொன்முடிப்பை வைத்து வேதங்களுஞ் சங்கங்களுமுழங்கச் சந்தனம் பூசிப் புஷ்பமாலைக ளணிந்து, பத்துவித வாசனைத்தூபங் கொடுத்து, நெய்விளக்குக் கற்பூரவிளக்குகள் காட்டிக் கங்காதரக் கடவுளாக நினைத்துப் பூசைசெய்து, கிட்டி வணங்கி, வலஞ்செய்து பொன்முடிப்பையவிழ்த்து வேண்டிய அளவுகொண்டு முத்தீயை வளர்க்கும் வேதியர்க்கும், வேள்விகளுக்கும் இன்னும் எல்லோருக்கும் கொடுக்கக் கொடுக்க அந்தப் பொன்முடிப்புக் குறையாத மோக்ஷவின்பம்போல வளர, அந்தப் பொன்முடிப்பினுலே உண்டாகுகின்ற பொருள்களைக் கொண்டு கலசம்செய்து இந்திரவிமானக்கோயிலை உள்ளும் புறம்பும் மணிகள் பதிப்பித்து, ஞானக்கொழுந்து போலும் அங்கயற்கண்ணியென்னும் மீனுட்சிகோயில் அறுகாற்பீடம், வாயில் முதலான வெல்லாம் அலங்காரமாகப் பொன்மயமாக்கிப் பின்னும் அந்தப் பொற்கிழியாகிய கடலிலே பொன்னுகிய நீரை மொண்டு மொண்டு தினந்தினம் குலபூஷண பாண்டியனென்று மேகம் பொழியத் தெய்வ தருமங்களாகிய பயிர்கள் வளர்ந்ததினுலே மேகங்கள் முந்நீராகிய கடலிலே மொண்டுமொண்டு பெய்ய, அப் பாண்டித் திருநாட்டிலே பலவளங்களும் வளர்ந்து கன்னிநாடு அளகைநாடுபோலச் செல்வந் தழைத்து, வியாகர்ண பண்டிதர்களும், நியாயநூற் புலவர்களும், வைதிகர்களும், வேதாந்திகளும், தரும சாஸ்திரிகளும், பூர்வாசிரமிகளும், தீக்ஷதர்களும், சைவாகமிகளும், சந்நியாசிகளும் நிறைந்து வசித்தலினுலே தென்னுடு திருமால் வடிவாகிய வையகத்திலே திருமால் திருவுந்தி போலத் தோன்ற அந்த உந்திப் பொகுட்டுபோன்ற பொதிகையில் நான்முகன்போல அகத்தியமாமுனிவர் விளங்க முத்தமிழ் வேதம் முழங்கும்படி விளங்கிக் கொண்டிருந்தது.

உலவாக்கிழி யருளிய படலம் முற்றிற்று.

---

முப்பத்திரண்டாவது

# வளையல் விற்ற படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

வேதத் தனது வடிவென்று விண்ணின் றிழிந்த விமானமறைக்
கீதன் செழியன் தனக்குலவாக் கிழிதந் தளித்த வழியிதுவப்
போதங் கடந்த பொருள்வணிகப் புத்தேண் மாடமணிமறுகு
யாதந் தடவ நடந்துவளை பகர்ந்த பரிசு பகர்கிற்பாம்.

**உரை:** வேதத்தினது வடிவமென்று சொல்லும் விண்ணினின் றிழிந்த விமானத்தில் இனிதெழுந்தருளி யிருக்கும் சாமகீதப் பிரிய ராகிய சோமசுந்தரக்கடவுள், பாண்டியனுக்கு உலவாக்கிழி கொடுத்த திருவிளையாடலிதுவாகும். இனி ஆத்மபோதத்துக்கெட்டாத மெய்ப் பொருளாகிய அந்தக் கடவுள் வைசியத் தலைவராகி, மாடங்க ணிறைந்த அழகிய வீதிகளில், வளையல் விற்றுலாவிய திருவிளை யாடலைச் சொல்லுகின்றோம்.

மேல் குலபூஷண பாண்டியன் ஆக்கினைசக்கரஞ் செலுத்தி வரு கிற காலத்திலே முன்னாள் தாருகாவனத்திலே வாசஞ்செய்கிற தெய்வ ரிஷி பத்தினிகளின் கற்புநிலையை அளவு செய்யவேண்டி மன்மதனை யெரித்த கடவுள், தாமே ஒரு கபாலி வடிவங்கொண்டு பிச்சை வாங்கு கிறவராய் வேதமே கோவணமாகத் தமது திருமேனியெல்லாம் விபூதி தூளிதராய்க் கீதங்கள் பாடுகிற சிவந்த கனிபோன்ற வாயும், உள்ளே நகையும், கிண்கிணி யணிந்த திருவடிகளும், அவைகளுக்கிட்ட பாது கைகளும், பிக்ஷாபாத்திரமுங் கொண்டு, இரதிதேவியின் புருடனாகிய மன்மதனே தவவேடங் கொண்டாற்போலத் திருவேடங்கொண்டு வரும்போது, பாதகமலங்களிலணிந்த சிலம்பினொலியும், கண்டமதிரப் பாடுகிற சங்கீதவொலியும், கையிலே கொண்ட உடுக்கையினொலியும் சென்று அந்த ரிஷிபத்தினிகள் காதுகளைக் கிழித்துக்கொண்டு மன மும் வேறுபட்டு, அவர்கள் கற்புநிலையையும் தளரச்செய்ய, அவர்கள் கையிலே பிச்சை கொண்டு பள்ளத்திலே பாய்கிற நீர்போலத் தங்கள் வீட்டுக்கு வெளியே வந்து பிச்சையிடுகிறவர்கள், ஐயர் பலிபாத்திரத் திலே யிடுகிற பிச்சைச் சோற்றோடுகூடக் கையில் வளைகளும் கழன் றிடுவார்கள். பின்னுந் தங்கள் கருத்திலுள்ள நாணை யிழப்பதை யல் லாமல் இடையிலணிந்த மேகலை நாணுமிழப்பார்கள். (நாண்-வெட் கம், கயிறு) மார்பிலே மன்மதன் அம்புபட தங்கள் கண்ணம்பும் பட நின்று சோர்வார்கள். (அம்பு-பாணம், நீர்) பின்னுமந்தப் பெண்கள் ஐயர் முன்னே வந்து, ஓய் ஐயரே! எங்கள் கைவளையைத் தாரு மென்ன, ஐயர், வளை உங்கள் கண்டத்தி லிருக்கிறதென்றார். (வளை- வளையம், சங்கு) அந்தப் பெண்கள், ஐயரே! எங்கள் கலையினைத் தாரு

மென்ன, ஐயர், உங்கள் முகத்திலே யிருக்கிறது கலை யென்றார். (கலை-ஆடை, ஒளி) பெண்கள், இடையறிந்து வந்து எங்களைச் சேரு மென்ன, ஐயர், பெண்களே! உங்களுக்கு இடையோ காணக் கூடா திருக்கிறது என்றார் (இடை-சமயம், இடுப்பு) பெண்கள், அது அப்படி யானால் எங்கள் பழைய நிறத்தைத் தந்து எங்களுக்கு விடை கொடு மென்ன. ஐயர், பெண்களே! நமது விடை கடலிலே கிடந்து தூங்கு மென்றார் (விடை-உத்தரவு, இடபம்), பெண்கள் இந்தக் கபாலிக்கு எப்போதும் நடுவில்லை யென்ன, ஐயர், நடுவில்லாமை உங்களுக்கே யென்றார். (நடு-நியாயம், இடுப்பு) பெண்கள் இந்த ஐயர் நெஞ்சு கல்லென்ன, ஐயர், பெண்களே! உங்கள் கொங்கைகளே கல்லென்றார். (கல்-இளகாமை, மலை) பெண்கள், ஐயரே கங்கைநீர் சுமப்பதென்ன காரணமென்ன, ஐயர், பெண்களே! உங்களிடத்திலே பலியேற்க வென்றார். (கங்கைநீர் - கங்காசலம், தலையோட்டைக் கையிலே கொண்ட நீர்) பெண்கள், ஐயரே, நீர் சொன்ன செப்பு எப்படிப்போ லிருந்ததென்ன, ஐயர், பெண்களே! உங்கள் கொங்கைபோல் இருக்கு மென்றார். (செப்பு - உத்தரவு, கிண்ணம்) பெண்கள், உம்முடைய கந்தரம் கறுத்தது என்ன காரணமென்ன, ஐயர் மழை பெய்தற் கென்றா. (கந்தரம் - கழுத்து, மேகம்) பெண்கள் என்ன உத்தரம் சொன்னீரென்ன, ஐயர், தெற்கே நின்று பார்த்தால் உத்தரந் தெரியுமென்றார். (உத்தரம்-விடை, வடக்கு) பெண்கள், ஐயர் கண் ணிலே தங்களுருவைக்கொண்டு அதைப்போலவே எங்களையு மிருக்கச் செய்யுமென்ன, ஐயர், பெண்களே! உங்கள் கண்ணிலும் நம்மிலுஞ் சிறந்தவரிருக்கிறார். அவரைக் காணுங்களென்றார். இப்படியாகப் பெண்களிலே சிலர் கும்பிட்டுக்கொண்டு நிற்பார்கள்; சிலர் சரண மென்று பாதத்திலே விழுவார்கள்; சிலர் தங்கள் கைகளை நீட்டி யெட்டித் தழுவுவார்கள். அதற்கு ஐயர் அகப்படாமல் நிற்பார். அப் போது அப்பெண்கள், ஐயரே! நீர் எங்களைத் தழுவாமற் போனாலும் எங்களிடையிலிருந்து அவிழ்ந்த கலையை உடுத்து மென்பார்கள். சிலர், ஐயரே! ஐயரே! உம்மிடத்தாசையால் நாங்கள் வருந்துவது கண்டு, எங்கள் தலைவர்கள் கோபிக்குமுன்னே கழன்ற வளையலை யெடுத்து எங்கள் கையிலே இடுமென்ன, ஐயர், நாளை வந்திடுகிறே மென்று சொல்லி மறைந்தார்.

அப்போது பெண்கள், ஐயர் கொண்டுபோன நாணும் உள்ளமும் மீளும்படி செய்யமாட்டாதவர்களாய்க் கலையுஞ் சங்குந்துள்ள மன்மத பாணத்தினாலே நெஞ்சு தொளைபட்டு மார்பெல்லாம் பசலைப்பூப்ப நிற்கிறதை, அவர்கள் புருஷர்களாகிய முனிவர்கள் கண்டு, அவர்கள் திரிகால ஞானிகளாகையினாலே, நான்மாடக்கூடற் கடவுளே இப் படிக் கபாலி வேடங்கொண்டுவந்து நம்முடையபத்தினிகள் கற்பையும் நாணையும் வாங்கிப் போனாரென்று தெரிந்து, அந்தப் பெண்களைப் பார்த்து, நீங்கள் கற்பு நிலைமை தவறினீர்களாகையால் மதுரையில்

வணிகர் கன்னியர்களாகப் போய்ப் பிறக்கக் கடவீர்களென்ன, பெண்கள் அம் முனிவர்களிட்ட சாபத்தை யேற்று, எங்களுக்கு இந்தச் சாபம் எப்போது நீங்குமென்று கேட்க, முனிவர்கள் அந்த மதுரைக் கடவுளே வந்து உங்கள் கைகளைத் தொடும்போது நீங்கு மென்ன, பெண்கள் மனம் தளர்ந்து முல்லைமாலை யணிந்த வைசியர் குலப் பெண்களாக வந்து பிறந்து, பேதை, பெதும்பைப் பருவங்கள் கடந்து, மங்கைப்பருவப் பெண்களா யிருக்கிற காலத்திலே சோம சுந்தரக் கடவுள் சடையிலே கங்கையும், கண்டத்திலே விஷமும், நெற்றிக் கண்ணும், பாதிப் பெண்வடிவும், மான் மழுவும் தெரியாமல் மறைத்து, வளையல் விற்கிற செட்டிவடிவாய், விஷ்ணுவாகிய வராக முங் காணுத பாதங்கள் பூமகள் சிரத்திலே பொருந்த முன்னுளிலே ரிஷிபத்தினிக ளிடத்திலே கொண்ட வளையல்களுக்கே மட்டும் கயிறு கோத்து வைத்திருந்து பின்னும் அந்தப் பெண்களுக்கே யிடுவோ மென்னு முள்ளக் கருத்துடனே, அடியார்கள் சூட்டின ஐந்து நிறப் பூமாலைகள்போல, தோளிலே ஐந்து வகையான வளையங்களைத் தோட்சுமையாக மேற்போட்டுக்கொண்டு அந்தச் செட்டித்தெருவிலே வளையலோ வளையலென்று நான்கு வேதப் பொருள்களையு மருளிச் செய்த திருவாயாலே சொல்லிக்கொண்டு வர, மேகத்தின் ஓசை கேட்டுக் களித்தெழுகின்ற மயில்கள்போலத் தங்கள் மணிமேகலை ளொளிக்க வணிகர் குலப் பெண்கள் மாளிகைகளிலிருந்து வீதியி னிடத்தே புறப்பட்டு வளையலிட்டுக்கொள்ள மின்போல துடங்கிவந்து செட்டியார் திருவுருவைக்கண்டு அப்பொழுதே அவரைக்கூட மிகுந்த ஆசைகொண்டு நாணம்-மடம்-அச்சம்-பயிர்ப்பு என்கிற குணங்க ளாலே தடைப்பட்டு மனம்வருந்தித் தடுமாறி, மேகலை சிலம்பு குண்ட லம்-கேயூரம்-கண்டிகை முதலிய ஆபரணங்களெல்லாம் அணிந்தி ருந்தாலும் கைகளுக்கு வளையல் இல்லையானுல் பெண்களுக்கு அழகு போதுமோ? ஓய் செட்டியாரே! நல்லவளையல்களாக எங்கள் கைகளுக் குத் தகுதியாகப் பார்த்திடுமென்று, செட்டியாருக்கு முன்னே தங்கள் கைகளை நீட்ட, செட்டியாரும் மீனுட்சியம்மையாரைத் தொட்ட தமது திருக்கரங்களினுலே, அந்தப் பெண்கள் கைகளைத்தொட்டு, வளையல்க ளேற்றும்போதே, மையலுங்கூட வேற்றியிட, அப் பெண்கள், முன் னிட்ட வளையல்களை உடைத்தெறிந்துவிட்டு மறுபடியும் வந்து எங்கள் கைகளுக்கேற்ற வளையலிட விலைசொல்லுமென்று மிகவும் ஆசை அதி கரித்து கைகளை நீட்டுவார்கள் சிலர். சிலர், ஓய் செட்டியாரே! எங்க ளுக்குப்போடும், எங்களுக்குப்போடும் என்று பின்ருெடர்ந்து சென்று, மன்மத வேதையாலே; நாண் முதலிய காவலுமிழந்து நிற்பார்கள். சிலர், முன்னேயிட்ட வளையல் கைக்குப் பெரிதாய்க் கழன்றுபோ யிற்று. வேறே பொருத்தமாக யிடுமென்று சொல்லி, அவரிட்டபின் அந்த வளையலும் அப்படியே பெரிதாகிக் கழல, இன்னமுஞ் சிறி தாய்ப் பார்த்திடுமென்பார்கள். பின்னுமிட்ட வளையல் கழன்றுபோன திலுலே துன்பமுற்று, ஓய் செட்டியாரே! நீரிட்ட வளையல் கழலுவதே

யன்றி இடையிற் கலையுஞ் சரிகின்றதே, இதற்குக் காரணமென்ன வென்பார்கள். சிலர், செட்டியாரே! இந்த வளையலைப்போல வளையல் நாங்கள் எக்காலத்திலும் கண்டறியோம். இந்த வளையல் எங்கே செய்தது? கண்டவுடனே எங்கள் தேகம் புளகாங்கிதங் கொள்கின்றதென்று, நாளையதினமும் இங்கே வாருமென்பார்கள். நாங்க ளிட்டுக்கொள்ளும் வளையலுக்கு இப்போதே விலை தருகிறோம் கொண்டுபோமென்பார்கள் சிலர்; அதற்குச் செட்டியார், பெண்களே! நாளைக்கு நான் வந்து விலை வாங்கிக் கொள்ளுகிறேன், இன்று வேண்டாமென்று சொல்லி, ஆண் சிங்கம்போலே செட்டியார் நடந்தருளக் கண்டு, பெண்கள் பலருங் காணப் பின்னே தொடர்ந்து செல்லும்போது, செட்டியார் சென்று, இந்திரவிமானக் கோயிலுள்ளே புகுந்து சிவலிங்க வடிவாயினர். அதுகண்ட பட்டணத்து ஜனங்களெல்லாம் ஆனந்தக்கண்ணீர் ஒழுக, வளையல் விற்ற செட்டியார் சோமசுந்தரக் கடவுளேயென்று தெரிந்து கொண்டாட, அக்கடவுள் திருக்கைகளினாலே தொட்டதினாலே அந்தச் செட்டிப் பெண்களெல்லாம் அளவிறந்த புதல்வரைப் பெற, பிறந்த பிள்ளைகள் பெருமை, வீரம், சாமர்த்தியம், கீர்த்தி மிகுந்து வளர்ந்திருந்தார்கள். அந்தப் பெண்களெல்லாரும் சிலகாலஞ் சென்ற பின்பு பரமசிவனது திருவடிகளையடைந்து வாழ்ந்தார்கள்.

வளையல் விற்ற படலம் முற்றிற்று.

---

முப்பத்துமூன்ருவது

## அட்டமாசித்தி யுபதேசித்த படலம்

---

விருத்தம்

கொத்திலங்கு கொன்றைவேய்ந்த கூடலாதி மாடநீள்
பத்தியம்பொன் மறுகணைந்து வளைபகர்ந்த பரிசுமுன்
வைத்தியம்பி னுமியக்க வாதர்வேண்ட வட்டமா
சித்திதந்த திறமினித் தெரிந்தவாறு செப்புவாம்.

உரை: கொத்தாக விளங்கும் கொன்றை மாலையைத் தரித்தருளும் நான்மாடக் கூடலழகராகிய சோமசுந்தரக்கடவுள், மாடங்கள் நீண்டு வரிசையாக விளங்கும் அலங்காரத்தையுடைய பொன்மயமாகிய வீதிகளிற் சென்று வளையல் விற்றருளிய மகிமையை முன்னே சொன்னோம். இனி, யக்ஷஸ்திரீகள் வேண்டிக்கொண்டவாறு, அவர்களுக்கு அட்டமாசித்தியை யுபதேசித்த திருவிளையாடலை யாமறிந்தபடி சொல்லுகிறோம்.

சோமசுந்தரக்கடவுள் குலத்தாளுன பாண்டியன் அரசாளும் நாளிலே கயிலாய மலையினிடத்திலே, ஆலமரத்தினிழலிலே, வேதப்பொருளாகிய கடவுள் அருகிலே, வெள்ளிமலையி னருகே ஒரு மரகத

மலைபோலே பருவதராஜ புத்திரியான பார்வதியார் வெற்றிலைச் சுருள் மடித்துக் கொடுக்க, அன்பு பெருகுகிற சுகாசாரியனாய் எழுந்தருளி யிருக்கும்போது பிருங்கி, நந்தி, முதலாகிய கணங்களும், சனகாதி நால்வரும் வணங்கிச் சிவசரித்திரங்கள் கேட்க, அவர்களுக்குத் திருவாய்மலர்ந்தருளிச் செய்துகொண்டிருக்கிற சமயத்திலே, கடலிலே சஞ்சரிக்கின்ற சூரன் முதலானவர்களை வென்று ஜெயங்கொள்ளத் திருவவதாரஞ் செய்த குமரக்கடவுளுக்குத் திருமுலைப்பால் கொடுத்த யக்ஷகன்னியர்களாகிய அறுவர்களும், உடம்பெல்லாந் திருநீறணிந்து, சடை, ருத்திராக்ஷமாலிகை முதலிய சைவ தவக்கோலமாய் வந்து, பெருமானுடைய வேதமாகிய சிலம்புகளலம்புகின்ற பாத தாமரைகளிலே வந்தனைசெய்து, சுவாமி எங்களுக்கு அட்டமாசித்தியு முபதேசிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கக் கடவுளாகிய ஆசிரியர் தம்முடைய மடியின்மே லெழுந்தருளி யிருக்கின்ற பார்வதியாரைக் காட்டி, இவளே பராசத்தியாகிய மகேஸ்வரியாக அணிமா முதலிய அஷ்ட சித்திகளும் வணங்கிக் குற்றேவல் செய்யுஞ் சேடியர்களாய்ச் சூழ்ந்து சேவிக்க விளங்குவாள். ஆகையா லிவளை நீங்கள் தியானித்தால், உங்கள் வினைகளை போக்கி, அஷ்டசித்தியுந் தருவாளென் றருளிச்செய்ய, அந்தச் சித்திகளெட்டையும் தெளிவுசெய்யக் கேட்ட பெண்கள் பூர்வகருமத்தால் அந்தச் சித்திகளை மறந்துபோக, அப்போது சிவபரஞ்சோதியான கடவுள் அந்தக் குற்றத்தைத் தெரிந்து பெண்களைக் கோபித்து நீங்கள் பட்டமங்கையில் ஆலமரத்தடியிலே சடமான பாறைகளாய்க் கிடக்க வென்று சபிக்க; அந்தப் பெண்கள் மிகவுந் துன்பங் கொண்டு கடவுளை வணங்கி, சுவாமி! நாங்கள் இந்தச் சாபத்தை எக்காலந் தீர்ந்து தெளிவோமென்று கேட்க, அதற்குக் கடவுள் நீங்கள் இப்படிக் கருங்கற்பாறைகளாய் ஆயிரம் வருஷகாலம் கிடந்தீர்களானால் அப்பால் நாமே மதுரையினின்றும் வந்து உங்கள் சாபத்தைப் போக்கிப் பழைய வடிவு கொடுத்து உள்ளங்கை நெல்லிக்கனிபோல அஷ்டசித்திகளும் தெளிவு செய்வோம் போங்களென்றார்.

அப்போது அந்த ஆறுபெண்களும் பட்டமங்கை யென்னுமூரிலே ஆலமரத்தடியிற் பாறைகளானார்கள். அப்படிப் பாறைகளாய் ஆலம் பழங்கள் ஆபரணங்கள்போல மேலே யுதிர்ந்து கிடக்க மூடுபட்டு, ஆயிரவருஷமுங் கழிய, மதுரைக்கடவுள் திருவுள்ளமிரங்கித் தமதிஷ்டப்படியே ஒரு ஆசாரிய வடிவமாய் அங்கே எழுந்தருளிப் பெண்கள் சாப நீங்கத் திருவருட் பார்வையாலே பார்த்தபோது, புடம் போட்ட இரும்பு பொன்னானாற்போல மலவிருள்நீங்கிஎழுந்து அன்புடனே கடவுளடிகளிலே வந்து வணங்க, கடவுளும் பார்வதியை யொத்த அந்தப் பெண்கள் தலைமேலே கையை வைத்து அவர்களைபார்த்து, அவர்கள் புத்திக்குத் தெளிவுதோன்றக் கேளுங்கள் பெண்களே என்று உபதேசஞ் செய்தருளுகிறார். எப்படியென்றால் அணிமா-மகிமா-இலகிமா-கரிமா - பிராத்தி - பிராகாமியம் - ஈசத்துவம் - வசித்துவம் என்று

சித்திகளின் பேரெட்டு. அவைகளிலே சிறிய உயிர்களிலே, பரம காட்டையான அணுரூபமாய்ப் புகுந்திருப்பதே அணிமா, பிருதிவி முதல் சிவமீருன முப்பத்தாறு தத்துவம் உள்ளும் புறமும் நீங்கா திருந்து நிறையும் பெருமையே மகிமா; மேருமலைபோலக் கனமான தூலமாய் எடுத்தால் இலகுவா யிருப்பதே இலகிமா; பரமாணுப் போன்ற வடிவாய் எடுத்தால் மேரு மலைபோலிருப்பதே கரிமா: பாதாளத்திலிருந்து பிரமலோகம்போய் மீண்டும் பாதாளத்துக்கு வரத்தக்கதே பிரார்த்தி! ஒரு தேகத்திலிருந்து வேறொரு தேகத்திலே புகுதலும், ஆகாசத்திலே சஞ்சரித்தலும், இச்சித்த போகமெல்லாம் தானிணைத்தபடியே அனுபவிக்க வரச்செய்தலு மிவையெல்லாம பிராகாமியம்; முத்தொழிலுஞ் செய்து சூரியன் முதலான கிரகங்களெல்லாந் தான் சொன்னபடியே நடக்கச் செய்வதே ஈசத்துவம்; அசுரர் - பட்சிகள் - மிருகங்கள் - பூதங்கள் - மனிதர்கள் - இந்திரன் முதலிய அஷ்டதிக்குப் பாலர்களெல்லோரையுந் தன் வசமாக்கிக் கொள்வதே வசித்துவம்; ஆகிய இச்சித்திகளை எம்மைத் தெரிந்த யோகிகள் விரும்பார்கள். ஆனாலும் இந்தச் சித்திகள் அந்த யோகிகளைப் பின்றொடர்ந்து அவர்கள் நிழல்போலக் கூடநின்று உலகத்தாருக் கவர்கள் பெருமையை தெரியச் செய்யுமென்று அஷ்டமா சித்திகளை யுபதேசித்துத் தெளிவு செய்ய, அப்படிக் கடவுளுபதேசித்த சித்திகளை, அந்தப் பெண்கள் பார்வதியாகிய தேவியைப் பாவனையாகத் தியானித்து, நன்ருய் அப்பியாசம் பண்ணிக்கொண்டு ஆகாய மார்க்கமாகச் சென்று கடவுளின் ஸ்ரீ கயிலாயமலையைச் சேர்ந்து வாழ்ந்தார்கள்.

அஷ்டமாசித்தி யுபதேசித்த படலம் முற்றிற்று.

---

முப்பத்துநான்காவது

## விடையிலச்சிணையிட்ட படலம்

### விருத்தம்

சந்துசூழ்மல யச்சிலம்பர் தவம்புரிந்த வியக்கிமார்க்
கந்தநாலிரு சித்திதந்த தறைந்தனந்தன தடிதொழா
வந்துமீள்வள வன்பொருட்டு வடாதுவாயி றிறந்தழைத்
திந்துசேகரன் விடையிலச்சினை யிட்டவாறு விளம்புவாம்.

உரை: சந்தனமரங்கள் சூழ்ந்த பொதிகையின்கண் தவஞ்செய்துகொண்டிருந்த யக்ஷஸ்திரீகளுக்கு அட்டமாசித்தியை யுபதேசித்த திருவிளையாடலைச் சொன்னேம். இனி, சந்திரனைத் திருமுடியில் தரித்தருளிய சோமசுந்தரக்கடவுள் தமது திருவடியைக் காஞ்சியினின்றும் வந்து தரிசித்துத் திரும்பிய சோழராஜன் பொருட்டு, வடவாசலைத் திறந்து விடையிலச்சிணையிட்ட திருவிளையாடலைச் சொல்லுகின்ருேம்.

ஸ்ரீ காஞ்சிபுரத்திலே காடுவெட்டிய சோழனென்பவன் உத்தமர்களாகிய சிவபக்தர்களிலே மிகவு முத்தமன். சந்தன முதலியவைகளும் ஆபரணங்களும் பொய்யென்று நீக்கி, விபூதி ருத்திராக்ஷங்களணிந்துகொள்வான். உண்மையான வேதப்புராணங்களிலே சொல்லும் பொருள்களெல்லாம் பரமசிவமே பரதத்துவமென்று தெரிந்தவன். பின்னும் சைவபுராணங்கள் கேட்டுப் பரமசிவனிடத்திலே மெய்யன்பு கொண்ட கருத்துள்ளவன். சொக்கநாயகன் திருவிளையாடலையுங் கேட்டு மிகவும் அன்புகொண்டவனாய், மீனாக்ஷி சுந்தரேசுவரர் பாதங்களை வணங்க மிகவு மன்புகொண்டு, மதுரேசன் பாதங்களை நானெப்போது வணங்கப் பெறுவேனென்று பரிவுகொண்டு, இராத்திரியிலே தூங்குகிறவன் மீனாக்ஷிசுந்தரேசுவரரைத் தியானித்துக்கொண்டு நித்திரை செய்ய, அன்று ராத்திரியில் அந்தக் காடுவெட்டின சோழன் கனவிலே வெள்ளியம்பலத்திலே திருநடனஞ்செய்கிற கான்மாறியாடிய கடவுள் ஒரு சித்தராய் அவன் முன்னே வந்து நின்று, சோழராசனே ! நீ எவ்வளவுமஞ்சவேண்டாம். நீ உன் வடிவு மாறித் தனியே வந்து இன்றே மதுரையில் நம்மைத் தரிசனஞ்செய்துகொண்டு போவாயாகவென்று சொல்லி மறைந்தருளினர்.

அதுகேட்டுச் சோழராஜன் மிகவு மாச்சரியங்கொண்டு, மந்திரி முதலிய சேனைகளொருவரு மில்லாமல் தானொருவனாய்ப் புறப்பட்டுக் கடவுளருளே துணையாய் நின்று வழிகாட்ட அன்றிராத்திரியிலே மலைகள் காடுகள் ஆறுகளெல்லாங் கடந்து, கரும்புகளும் செந்நெல்களும் வளர்ந்தோங்குகின்ற வையையாற்றங்கரையை யடைந்து நெருங்கும்போது, வையையாறு கரைகளை யுடைத்துக்கொண்டும், மரங்களை முறித்துக்கொண்டும் வெள்ளம் பெருகிவர, சோழராஜன் வடகரையிலே நின்று ஏது மதுரேசனை வணங்குதற்கு இது தடையாயிருக்கிறதென்று மனம் நொந்து, சுவாமி! இந்த வெள்ளந் தடுப்பது, பொற்பாத்திரத்திலே அமுதத்தையிட்டு உண்ணும்போது தடுத்தாற்போலாயிற்று. விடிந்தால் பாண்டியன் துன்பப்படுத்தத் தொடங்குவான். இதற்கென் செய்வேனென்று கிலேசப்படும்போது, கடவுள்முன்னே சொப்பனத்திலே வந்தாற்போலவே, அப்போதும் சித்தவடிவாகவே எதிர்வந்து நின்று, பெருகிவருகிற வெள்ளம் வற்றும்படிக் கிருபாநோக்கஞ் செய்தனர். வற்றின வாற்றை உடனே கடந்துவந்து வடக்குவாயிலுந் திறக்க, உள்ளே நிறைந்துள்ள காவல்களையும், வீதிகளையும் கடந்து, சோழனை பொற்றாமரைத் தீர்த்தத்திலே முழுகச்செய்து, தமது திருக்கோயிலுக்குள்ளே புகுதவுஞ்செய்வித்து, இந்திரவிமானத்துள்ளே விளங்குகின்ற தம்மையும் வணங்கச்செய்து, சர்வலோகங்களையும் பெற்ற தாயாகிய அங்கயற்கண்ணம்மையையும் சேவிக்கும்படி செய்து, பேரானந்தத்திலே முழுகவுஞ் செய்தார் அச் சித்தசாது. அப்போது சோழராஜன்,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

எண்ணிய வெண்ணி யாங்கே யான்பெற முடித்தாய் போற்றி
பண்ணியன் மறைக டேருப் பான்மொழி மணாளபோற்றி
புண்ணியர் தமக்கு வேதப் பொருளுரை பொருளே போற்றி
விண்விழி விமான மேய சுந்தர விடங்க போற்றி.

எவ்வுட லெடுத்தேன் மேனு டெண்ணிலாப் பிறவி தோறும்
அவ்வுட லெல்லாம் பாவ மறம்பொருட் டாகவன்றே
தெவ்வுடல் பொடித்தா யுன்றன் சேவடிக் கடிமைபூண்ட
இவ்வுட லொன்றே யன்றோ வெனக்குட லான தையா.

இவ்வாறு பற்பலவிதமாகத் தோத்திரங்கள்செய்து, வரங்கள் வேண்டுகின்ற சோழனைப் பார்த்து, இனி உன்னைப் பாண்டியன் கண்டால் துன்பப்படுத்த வெண்ணுவானென்று சித்த சுவாமி சொல்லி, அவனை வடக்குவாயில் வழியே அழைத்துக்கொண்டு சென்று, வையை வடகரையிற்கொண்டு போய் நிறுத்தி அவன் நெற்றியில் விபூதி அணிந்து, உன் அன்புக்கேற்க வழித்துணை யுண்டாகக் கடவதென்று வாழ்த்தி, அவனை அனுப்பிவிட்டு வந்து, கதவைமூடிக் கதவில் விடைக்குறியிட்டுத் திருக்கோயிலுக்குள்ளே எழுந்தருளி யிருந்தார். விடிந்த பின்பு வாயில் திறப்பவர்கள் வந்து வேறு குறியிட்டிருப்பதைக்கண்டு சந்தேகித்து, மற்றை வாயில்கள் மூன்றையும் போய்ப் பார்த்து மீனக்குறி தப்பாதிருக்க, வடவாயிலுக்கு மாத்திரம் வேறுகுறி யுண்டாயிருக்கவேண்டிய காரணமென்ன வென்று, பாண்டியன் முன்னே சென்று, ஐயா! வடக்குவாயற் கதவிலே மீனக்குறியை யழித்து, விடைக்குறி யிட்டிருக்கின்றது. அந்தக் குறி யிட்டவர்கள் இன்னரென்று தெரிந்திலோமென்று சொல்ல, உடனே பாண்டியன் வந்து பார்த்து இதென்ன மாயம்? இப்படி அஞ்சாமற் குறியிட வல்லவர் யாரென்று விசாரித்துத் தெரியாமல் தான் கோயிலுக்குள் வந்து வியாகூல சித்தனுய்ப் போசனமுங் கொள்ளாமல், பட்டினியாக வெறுந் தரையிலே படுத்து நித்திரை கொள்ள, அப்போதவன் கனவிலே சோமசுந்தரக்கடவுள் வந்து, பாண்டியனே! காடுவெட்டினசோழன் மிகுந்த பக்திமானுகையினுலே இங்கு வந்து, நம்மைத் தரிசிக்கச் செய்து, அவனை அனுப்பிவிட்டுப் பின்பு கதவைமூடி விடைக்குறி யிட்டோமென் றருள்செய்ய, பாண்டியன் விழித்தெழுந்து பயந்து, வியர்த்து, விம்மித் தோத்திரங்கள் செய்து, பரமானந்தக் கடலிலே முழுகி வெளியே வந்து, எல்லாருக்கு மின்ன படியென்று தெரியச்சொல்லித் தன்னைப்போலவே யெல்லாரையும் பேரின்பக்கடலிலே முழுகச் செய்து, பின்பு தனது செங்கோலும், வெண்குடையும், ராஜமுடியும், தன் புத்திரனுன இராஜேந்திர பாண்டியனுக்குக் கொடுத்துக் கடவுள் திருவடியை யடைந்தனன்.

விடையிலச்சினையிட்ட படலம் முற்றிற்று.

---

முப்பத்தைந்தாவது

# தண்ணீர்ப்பந்தல் வைத்த படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

சம்பு மதுரைப் பரனிரவு தனியே வந்து வந்து தனைப்பணிந்த
வெம்பு கதிரோன் மருமானை விடுத்து மீண்டு தாழிறுக்கி
அம்பொற் கதவின் விடைபொறித்த தறைந்துந் தென்ன னடுபடைக்கு
வம்பு மலர்தோய் புனற்பந்தர் வைத்துக் காத்த வகைசொல்வாம்.

**உரை:** சம்புவென்னும் பெயரையுடைய மதுரைக்கடவுளானவர், இராக்காலத்திலே வந்து தம்மை வணங்கிய சூரிய குலத்தோன்றலாகிய சோழமகாராஜனை, வெளியிலே விடுத்துப் பழையபடியே தாழிட்டு, அழகிய பொன்மயமாகிய கதவினிடத்து விடையிலச்சினையிட்ட அற்புதத்தைச் சொன்னோம். இனி பாண்டியனது சேனைகளுக்கு வாசனையுடைய மலர் தோய்ந்த தண்ணீர்ப்பந்தல் வைத்துக் காத்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்,

இராஜேந்திர பாண்டியன் செங்கோல் செலுத்துகிற காலத்தில் காடுவெட்டின சோழன், பின்பு தான் எல்லாருக்குந் தெரிய மதுரைக்குப் பலமுறை வந்து கடவுளை வணங்கி துதித்துப் பாண்டியன் சிநேகமாகும் பொருட்டு அவனுக்குச் சில கைக்காணிக்கைகள் கொடுத்தனுப்பினன். அப்படிச் சோழன் அனுப்பின பொன்னுபரணம், பொன் வஸ்திரங்கள் முதலானவை யெல்லாம் பாண்டியனேற்றுக்கொண்டு சோழனுடனே தானுமுறவாக நினைத்து, வேறே சில கைக்காணிக்கைகள் கொடுத்தனுப்ப, அதற்குச் சோழன் மனமகிழ்ச்சியாய்த் தன் பெண்ணைப் பாண்டியனுக்குக் கொடுக்கச் சம்மதித்திருக்க, அந்தச் செய்தியை இராஜேந்திர பாண்டியனுக் கிளையவனான இராஜசிங்கனென்பவன் கேட்டுப் பழிபாவங்களுக்கஞ்சாமல் 'வஞ்சனையாய்த் தான் போய்ச் சோழன் மகளைக் கலியாணம் பண்ணிக்கொள்ள நினைத்துக் காஞ்சீபுரம் போய்ச்சேர, அப்படிக் காஞ்சீபுரத்துக்கு வந்த இராஜேந்திர பாண்டியன் தம்பியை சோழன் சேனைகளுடனே எதிர்கொண்டுபோய்க் கண்டு அழைத்து வந்து மூத்தவனுக்குக் கொடுக்க நியமித்த பெண்ணை அவனுக்குக் கலியாணஞ் செய்து கொடுத்துத் தமையன் அரசாட்சியைத் தம்பிக்குக் கொடுக்க ஆசைகொண்டு, காடுவெட்டின சோழன் இராஜேந்திர பாண்டியனைப் பிடித்துத் தன் வசப்படுத்திக்கொள்ள ஆலோசித்து, மருமகனுடனே இரத கஜ துரக பதாதிகள் சூழப் பாண்டியன் மேலே யுத்தஞ் செய்வதற்காகப் பேரிகை யடித்துப் பல வாத்தியங்களு முழங்கத் திரண்டு வந்து, மதுரைக்கிரண்டு யோசனைக்கிப்பா லிறங்குவதற்கு முன்னே, தூதர்கள் சென்று பாண்டியனுக்குத் தெரிவிக்கப் பாண்டியன் தெரிந்து சோமசுந்தரக் கடவுளுக்குத் தெரிவித்து வேண்டுவோமென்று திருக்கோயி

லுக்குப் போய்க் கடவுளை வணங்கிச் சுவாமி! அப்போது பாதிராத்திரி யிலே வந்து உம்மை வணங்கி, உம்முடைய திருவடிக்கன்பனாய்ப் போன சோழன் இப்போதும் அப்படியே பிரசித்தமாய் வந்து உம்மை வணங்கும்பொருட்டு எனக்கு வேண்டிய சில வரிசைகளனுப்பி உறவு கொண்டு, மனத்தில் வேறொன்றை யெண்ணிப் போர்க்கு வந்த தினாலே அக்காலம் தருமநீதிக் குடன்பட்ட தேவரீர், இக்காலம் அவன் செய்யவந்த வீரத்திற்குத் தகுந்த வீரஞ்செய்து, நான வெல் லும்படி செய்யவேண்டுமே யென்று மிகவும் வேண்டிக்கொள்ள, அப் போது கடவுளருளாலே அசரீரி வாக்காகப், பாண்டியனே! நீ அஞ் சாமல் உன் சேனையுடனே சென்று, வந்த பகைவருடனே போர் செய்தாயானால் உனக்கே ஜெயமுண்டாகும்படிச் செய்கிறோமென்று சொல்ல, அந்த அசரீரி வாக்கைக் கேட்டு, இராஜேந்திர பாண்டியன் கடவுள் திருவடியிலே மிகுந்த அன்புகொண்டு ஆனந்தக்கடலிலே முழுகி, வணங்கி யெழுந்து தன் அரண்மனைக்குப் போயிருந்து, சூரியோதய மாகுமுன்னே யெழுந்து, சந்தியாவந்தன முதலியவை களை முடித்துச் சிவபூசையுஞ் செய்துகொண்டு கடலின்மேலே ஓராறு செல்வதுபோலச் சோழனுடைய அளவிறந்த சேனைகளின் மேலே தனது சுருங்கின சேனைகளுடனே போய் எதிர்த்து நிற்க, அப்போது இருதிறத்துச் சேனைகளிலுமுள்ள வீரர்களும் இடிபோல முழங்கிச் சண்டமாருதம் போலே வேகங்கொண்டு, வடவாக்கினி போலே கொதித்து, வீரநகைசெய்து, சேனைகளை அணியணியாக வகுத்து மடித்த வாயுடனே கைகலந்தார்கள்.

அப்போது சோழன் சேனை வீரர்களுக்குப் பாண்டியன் வீரர்கள் ஒருவர் அநேகராகக் கடவுளருளாலே தோன்ற, அப்படியே தோன்றுகிற தேரினோசையும், குதிரைகளனுமானிக்கின்ற வோசை யும், யானைகளின் முழக்கமும், அதோடு கூட வீரர்கள் பொருதுகிற வொலியும், தோள் தட்டுகின்ற வொலியுங் கூடிச் சமுத்திரத்தினோசை போல ஒரே முழக்கமாகக் கலந்தபோது வில்வீரரும், குதிரை வீரரும், தேர்க்காரரும் தேர்க்காரருமாகப் போர் செய்யும்போது ஒருவர்விட்ட அம்புக்கொருவர் தப்பிக்கொண்டு குரூரமான பாணங்களை யெய்து, பின்னுந் தொடுக்கிற அம்புகளுடனே வில்லையு மறுத்து விடுவார்கள். பின்னும் அளவில்லாத அம்புகள் மார்பிலே தைக்க, அந்த அம்பு களைப் பிடித்துக்கொண்டு வருகிற பகைவரை அவ்வம்புகளாலே யெய்து கொல்லுவார்கள். அப்படிப்பட்ட சோழன் சேனை வீரர்கள் மேலே பாண்டியன் சேனைவீரர்கள், விடாத மழைகள்போலே பாணங் களைப் பொழிந்து நின்று, கூத்தாடி, வருகின்ற பாணங்களுக்குத் தப்பி யொதுங்கி நின்று கொடிய பாணங்களாலே அவர்கள் வில்லையும் அம்பையு மறுத்தெறிந்து, இன்னும் வருகிறவர்களெல்லாரும் வாருங்க ளென்று கூப்பிடுவார்கள். இப்படிப் போர் செய்யும்போது கால்கள் முறிந்தன, தலைகளுருண்டன, மலைகள்போலத் தோள்கள் சரிந்தன

தேர்களுடைபட்டன; பலவிதமான ஆயுதங்களு முறிபட்டன; யானைகளின் துதிக்கைக ளறுபட்டு இரத்த வெள்ளத்திலே விழுந்தன. பருந்துகளும்-பூதங்களும்-கூளிகளும் மொய்த்து நெருங்கின. இப்படி இருதிறத்து அரசர் சேனைகளும் ஒருவர் ஒருவர் நிழலிலே ஒருவரொதுங்கும்படி சூரியன் வெயிலெரிக்க, மத்தியான மாகுமளவும் பெரும் போர் செய்ய அக்காலத்தில் சிவனது நெற்றிக் கண்போல அதி தீக்ஷண்யமாய் எப்படிப்பட்ட குளங்களும், ஆறுகளும் வற்றும்படி கோடை வெயில் வீச, மண்ணும் வெடித்துப் பாதாளந் தோன்ற, மலைகளும் பிளந்து, வரிசைகளாகக் கணக்கில்லாமல் நிற்கிற சோலைகளிலே இலைகளெல்லாமுதிர்ந்து சூரியகிரணங்களாலே எங்குங் கானலாக, கானனீரும் வியர்வை நீருமேயல்லாமல் எங்கும் வேறு நீரில்லாமல் வற்றி நின்றன. நிலங்கொதிக்க யானைகள் மதநீர் மாறிச் சோரவும், குதிரைகள் தளர்ந்து தவிக்கவும், பதாதிகள் சூறைக் காற்றினாலே சுழன்று, தண்ணீர் தாகங்கொண்டு கள்ளிமரத்தினிழலிலே யொதுங்கவும், இலைகளுதிர்ந்து வறிதாய் நிற்கிற மரத்து நிழலைக் கண்டு சிலரோடவும், யானை-தேர்-குதிரை இவற்றின் நிழல்களிலே யொதுங்குகிறவர்களும், கேடகங்களை நிழலுக்குக் குடையாகப் பிடித்துக் கொள்ளுகிறவர்களும், வேறே யொதுங்க நிழல் கிடையாமல் வீரசுவர்க்கஞ் சென்றோரது பெயரமைத்து நட்ட கற்களின்கீழ் நிழலிலே யொதுங்குகிறவர்களுமாக, இப்படி வாதைப்படுகிற சமயத்தில், எல்லா வுயிர்களுக்கும் பொதுவான கூடற்கடவுள் பாண்டியன் சேனைகளி னடுவே நான்கு கால்களினாலே ஒரு தண்ணீர்ப்பந்தல் பரப்பி, அந்தப் பந்தலினடுவே நெற்றியிலே திரிபுண்டரங்க ளணிந்து, காதிலே கடுக்கனும் பாதத்திலே ஒற்றைக் கிண்கிணியும், தோலாடையும், பார்த்தவர்கள் மனத்தையும் கண்களையும் கிரகிக்கின்ற சிறுநகையும், கிருபாநோக்கமுங் கொண்டு வேதங்களினடுவே நின்றாற்போல, தவவேடமாக நின்று, ஆற்றுநீரைப் பாத்திரங்களிலே நிரப்பிக்கொண்டு ஒரு கமண்டலத்திலே நீர்மொண்டு கொண்டு ஒருவருக்கொன்று, நூறுயிரம் பேருக்கு நூறுயிரமுமாகக் கண்டிகைச் செம்பின் சிறு துவாரத்தினாலே வார்த்து வார்த்துத் தாகத்தைத் தீர்க்க, அப்போது சோமசுந்தரக் கடவுள் வைத்த தண்ணீர்ப் பந்தலிலே, பாண்டியன் சேனை வீரர்களெல்லாம் வந்து நன்னீர்ப்பருகி இளைப்புத்தீர்ந்து பலம் வந்த பின்பு, சோழன் சேனைவீரர்கள் மேலேறிச் சேனைகளை யெல்லாமோடத் துரத்தித், தும்பைமாலையணிந்து போர் செய்து, சோழனது சேனைகள் கடலுடைந்தாற்போல உடைந்தோட, வெற்றிமாலையைத் தரித்துச் சோழனையும் அவன் மருமகனையும் கைப்பிடியாகப் பிடித்துவந்து, பாண்டியனுக்கு முன்னேவிட பாண்டியன் அவ்விருவரையுங்கொண்டு போய்ச் சோமசுந்தரக்கடவுள் சந்நிதியிலே நிறுத்தி, சுவாமி! தேவரீர் திருவுள்ள மெப்படியென்று வணங்கிக்கேட்க, அதுகேட்ட சோமசுந்தரக்கடவுள், பாண்டியனே! நீ தருமவானல்லையோ உன் மனதிற்

கிசைந்தபடி செய்வாயாகவென்று அசரீரியாகச் சொல்ல அந்த அசரீரி வாக்கைப் பாண்டியன் கேட்டுத் த'ந்ம சாஸ்திரப்படியே சோழனுக்குச் சில ரதகஜதுரகபதாதிகளும், சில ஆபரணங்களும் கொடுத்தனுப்பிவிட்டான். பின்பு தன் தம்பியான இராஜசிங்கனென்பவனுக்குத் தன் னிராஜ்யத்திலே சிலவற்றைப் பிரித்துக் கொடுத்து அவனை யொதுக்கிவிட்டு, எல்லா வுயிர்களுக்குந் தாய்போல ரக்ஷகனாகிக் கடவுளருளாலே பல வளங்களும் பெருக இராஜநீதி செலுத்திக் கொண்டு வாழ்ந்திருந்தான்.

தண்ணீர்ப்பந்தல் வைத்த படலம் முற்றிற்று.

---

முப்பத்தாறுவது

# இரசவாதஞ் செய்த படலம்

---

கலிநிலைத்துறை

வரதன் மீனவன் படையிடை வந்துநீர்ப் பந்தர்
விரத னாகிநீ ரருத்திய வினையுரை செய்தும்
பரத நூலிய னாடகப் பாவையா ளொருத்திக்
கிரத வாதஞ்செய் தருளிய வாடலை யிசைப்பாம்.

உரை: அடியார்களுக்கு வரங்களைக் கொடுத்தருளுகின்றவராகிய சோமசுந்தரக்கடவுள், மீனக்கொடியை யுயர்த்திய பாண்டியனது சேனைகளுக்குட்புகுந்து, நல்ல விரதத்தை யுடையவராய்த் தண்ணீர்ப் பந்தல் வைத்து, அந்தச் சேனைகளுக்குத் தண்ணீரருத்திய திருவிளையாடலைச் சொன்னோம். இனி, பரதநூல் இலக்கணப்படியே நாடகம் புரியவல்ல ஓர் பெண்ணுக்கு இரசவாதஞ்செய் தனுக்கிரகித்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அந்தப் பாண்டிவளநாட்டிலே, வைகையாற்றுத் தென்கரையிலே, மதுரைக்குக் கிழக்கே, திருப்பூவணமென்று ஒரு சிவஸ்தலமுண்டு. அந்தத் தலத்துப் பூவணநாதசுவாமிகளின் திருக்கோயில் மகாஜனங்களும், பரிசாரர்களும், தாசிகளுஞ் செய்த தவப்பயன் போன்றவர்களாய்ப் பெண்களிற் சிறந்தவளாய்த் தேவர்களுங்கண்டு மோகிக்கத்தக்க வடிவுள்ளவளாய்க் கடலமுதம் போலுஞ் சாயலுள்ளவளாய்ப் பொன்னனையா ளென்னும் பெயர்கொண்டு, வீணையிற் பாடல், ஆடல் முதலானவற்றால் தேவரம்பைகளின் மேம்பாடுடையவளாய்த் தருமநீதி தவறாமல் நடக்குந் தகுதியுள்ளவளாகையால், தன்னுடைய தோழியர்களுடனே பொழுது விடியுமுன்னே யெழுந்து, வையையி னீராடிச் சிவபூசை செய்துகொண்டு, பின்பு சந்நிதானத்துக்குப் போய்ப் பூவண நாதரைச் சேவித்து, அங்கே நடனஞ் செய்து, சிவனடியார்களைப் பொருளாக வெண்ணி, அவர்

களைப் பூசித்து அவர்களை அறுசுவைப் போசனமும் புசிக்கச் செய்து, பின்பு தான் புசிப்பதே நியமமாகக் கொண்டு நடந்து வருகிற நாளில், அவள் அன்பின் திறத்தை வெளியிட வேண்டிப் பூவணநாதர் தமது திருவுருவை நூதனமாகப் பிரதிஷ்டை செய்விக்க வேண்டுமென்கிற கருத்தை அவளுக்குக் கொடுத்தருள, அவர் தந்த பேரன்பே வடிவாய் மான் மழுவேந்திய கடவுள்வடிவைக் கருவில் வார்த்துப் பிரதிஷ்டிப்பிக்க வெண்ணி அந்தப் பொன்னனையாளென்பவள் தனக்குத் தினந்தினங் கிடைக்கிற பொருள்களெல்லாம் சிவனடியார் பூசைக்கே செலவாகி மிகுதியாகாமையினாலே கடவுள் திருவுருவை எப்படிக் காணத்தக்கதென்று பாண்டியனுக்கு உலவாக் கிழியருளின சோமசுந்தரக் கடவுளைத் தியானித்துக் கொண்டிருந்தாள். அப்படி எண்ணுகிறவள் நினைவைத் தெரிந்து கூடற்கடவுளானவர் நிறைய விபூதி பூசின திருமேனியும், கட்டங்கமேந்தின கையும், யோகபட்டங்கட்டின இடையும், விபூதிப்பையும், கோவணத்தின் மேலே சூழ்ந்த வுடையும், சிவந்த சடையுங்கொண்ட ஒரு சித்தராகிப் பொன்னனையாள் மாளிகைக்கு வந்து, தினந்தினம் அவள் வீட்டிற் போசனத்திற்காக வருகிறவர்களுடனே கூடித் திருவமுது செய்யாமல் ஒரு புறத்திலே யொதுங்கியிருந்தார்.

அங்கே சிவனடியார்க ளெல்லாம் திருவமுது செய்து போக, தாமொருவரும் அமுது செய்யாமல் வேறே யிருக்கின்றவரை வேலைக்காரிகள் கண்டு, சுவாமி! உள்ளே யெழுந்தருளுமென்ன, அதற்குச் சித்தர் நல்லது உங்கள் தலைவியை இங்கே வரும்படி சொல்லுங்களென்ன, அந்த ஊழியக்காரிகள் சென்று பொன்னனையாளைக் கண்டு, அம்மே! வந்த சிவநேசரெல்லாரும் அமுதுசெய்தருளினார்கள். அவர்களில் ஒரு தம்பிரான், எங்கும் காணக்கூடாத குணமுள்ளவராய்ச் சிறுநகை கொண்டருளி உன்னைத் தம்மிடத்தே வரும்படி சொல்லுகின்றாரென்று சொல்ல, அதைப் பொன்னனையாள் கேட்டு, நவரத்தினாபரணங்கள் புஷ்பித்த பூங்கொம்புபோலே நடந்து வந்து, அவரைக் கண்டு நீர் வந்தது நல்ல வரவல்லவோவென்று துதித்து, அருக்கிய பாத்திய முதலியவைகள் கொடுத்து, சித்தர் திருவடிகள் தனது முடியிலே பொருந்த வணங்கித் தேவரீர் இங்கே எழுந்தருளுவதற்கு அடியேன் பூர்வத்தில் என்ன தவஞ்செய்தேனோ வென்று கொண்டாடிச் சித்தர் திருமேனியும் அவயவங்களினழகும் கண்டு நின்று கைகுவிக்க, சித்தர் கிருபாநோக்கங் கொண்டருள, உடனே பொன்னனையாள், அவர் அருள்வலைக் குட்பட்டவளாய்ச் சுவாமி! தேவரீர் உள்ளே எழுந்தருளினால் அடியேனாலாகிய திருப்பணிகள் தேவரீர் மனதுக் கிசைந்தபடி நடப்பேனென்று மிகவும் வேண்ட, சித்தர் தம்முள்ளே நகைகொண்டு நோக்கி, ஏடி பெண்ணே! என்ன காரணத்தினாலே உன் இடை இளைத்திருக்கிறது போலவே நீயும் மிகவும் இளைத்திருக்கிறா யென்று கேட்டருள, அதற்குப் பொன்னனை

யாள், சுவாமி! அடியேனுக்கு யாதொரு வருத்தமுமில்லை. ஆனாலும் எங்கள் பூவணநாதசுவாமி திருவுருவைக் கருவினாலே கண்டு பிரதிஷ்டை பண்ணவேண்டு மென்னுங் கருத்துடன் கருவுருச் சமைத்தேன். முடிக்குங் கருத்துள்ள எனக்குத் தினந்தினங் கிடைக்கிற பொருள்களெல்லாம் உங்கள் பூசைக்கேயல்லது மிகுதியாகவில்லை. இதுவே அடியேன் கருத்தென்ன, சித்தர் அவளன்பு தித்தித்த சொற்களைக் கேட்டுப் பெண்ணே! நீயோ தேகம், இளமை, செல்வம் இவையெல்லாம் நீர்மேற் குமிழிபோல் நிலையற்றனவென்று தெரிந்தவளாய், தருமம் நிலையானதென்று அறிந்தும், அதிலும் சிவதருமமும், சிவார்ச்சனையும் அதிகம்; அதிலும் சிவனடியார்பூசை அதிகமென்று பூசித்தருச்சித்திருக்கின்றாய். ஆதலால் இம்மைக்கும் மறுமைக்கும் நன்மை கொண்டாய். இனி இருமைக்கும் உன் பெயராலே விளங்கச் சுவர்ணத்தினாலே கடவுள் திருவுருச்செய்துவைக்க நீ விரும்பியபடியே சித்தியாகப் பெறுவை. ஆனதினாலே உன் வீட்டிலுள்ள பித்தளை ஈயஞ் செம்பு முதலான பல பாத்திரங்களையுங் கொண்டுவாவென்றருள்செய்தார். உடனே சித்தர் சொன்னபடியே பலவகையான நவலோகங்களுங் கொண்டுவந்து சித்தர் முன்னே கலகலவென்னக் குவித்தாள். அப்போது சித்தசுவாமி, திருநீற்றை அவைகளின் மேலே தெளித்து அவையெல்லாம் பொன்னாகவெண்ணி, ஏடி. பெண்ணே! இன்றிராத்திரி முழுதும் இவையெல்லாம் நெருப்பிலே புடமிட்டெடுத்தால் அவ்வளவும் உயர்ந்த பசும்பொன்னாகும் அதைக் கொண்டு நீ திருப்பூவணநாதர் திருவுருச் சமைத்துக் கொள்ளென்று சொல்ல, பொன்னனையாள், சுவாமி! தேவரீர் இன்றைய இராத்திரி முழுதும் இங்கேதானேயிருந்து திருவமுது செய்து இது முடிந்தபின்பு போகலாமென்று வேண்ட, அதற்குச் சித்தசுவாமி மீனாக்ஷியம்மையைப் பிரியாத சுந்தரராகையாலே யாம் மதுரையிலிருக்கிற சித்தரென்று மறைந்தருளினார்.

அடியவர் மறைந்தருளின பின்பு சித்தராய் வந்தவர் வெள்ளியம்பலவாணர் என்று பொன்னனையாள் தெரிந்து, ஐயோ! எம்பெருமான் மறைந்தருளினாரே யென்று கொஞ்சம் தளர்ச்சிகொண்டு, ஆனாலும் நமது கவலையை நீக்கினாரென்று மகிழ்வு கொண்டவளாய்ச் சித்தர் திருவருள் செய்தபடியே பல வகையான லோகபாத்திரங்களையெல்லாம் நெருப்பிலேயிட, அவையெல்லாம் நெருப்பிலே கூடின பின்பு கடவுள் திருவடி நிழலை யடைந்தவர்கள் மலவிருளாகிய களங்கம் நீங்கினாற்போலக் களிம்பெல்லாம் நீங்கிச் சுவர்ணமாக, அதைக் கொண்டு பூவணநாதர் திருவுருக்கொண்டு, அந்த உருவின் வடிவழகைப் பார்த்து அச்சோ! அழகியபிரானே! என்று அள்ளி முத்தங் கொண்டு, தனது அன்பின்கண்ணே பழகிய கடவுளைப் பிரதிஷ்டை செய்து, திருவிழா திருத்தேர் முதலியவைகளெல்லாம் நடத்திச் சில நாள் கழித்தபின்பு வீடு பெற்றாள். அன்றுமுதல் பொன்னனையாள்

தனதன்பினாலே அந்தப் பெருமான் கன்னத்திலே செய்த நகக் குறி கொண்டு கலிகாலத்திலே செம்பொன்வடிவு நீங்கிக் காலத்துக்குத் தக்க கோலமாகத் திருப்பூவணநாதர் திருவுரு விளங்குகின்றது.

இரசவாதஞ் செய்த படலம் முற்றிற்று.

---

முப்பத்தேழாவது

# சோழனை மடுவில் வீட்டிய படலம்

---

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மின்னனை யார்பூங் கொன்றை வேணிய ரிரத வாதம்
பொன்னனை யாண்முன் செய்து போந்தது புகன்றே மார்த்தார்
மன்னனை மடுவில் வீட்டி மலரடிக் கன்ப னான
தென்னனை யமரிற் காத்த திருவிளை யாடல் சொல்வாம்.

உரை: மின்னலையொத்த திருமேனியை யுடையவரும் அழகிய கொன்றைமாலையைத் தரித்த சடைமுடியை யுடையவருமாகிய சோம சுந்தரக்கடவுள் பொன்னனையா ளென்னும் அடியவளொருத்திக்கு முன்னே வந்து இரசவாதஞ் செய்த திருவிளையாடலைச் சொன்னோம் இனி, ஆத்திமாலையைச் சூடிய சோழனை மடுவிலே தள்ளித் தமது திருவடிக்கன்பனாகிய பாண்டியனை யுத்தத்திற் காத்தருளிய திரு விளையாடலைச் சொல்லுகின்றோம்.

இராஜேந்திர பாண்டியன், இந்திரன் முதலான தேவர்களெல் லாம் துதிக்கச் சிவலோக மடைந்தான். பின்பு அவன் புத்திரன் இராஜேச பாண்டியன், அவன் புத்திரன் இராஜ கெம்பீரன் அவன் புத்திரன் வங்கியதீபன், அவன் புத்திரன் புரந்தரசித்து, அவன் புத்திரன் யங்கியபதாகன், அவன் புத்திரன் சுந்தரேச பாதசேகரன். இந்தப் பாண்டியன் கூடற் கடவுளுக்கு மிகுந்த அன்புள்ளவனுய்த் தனது கொலைவேலினாலே கொடுங்கோன்மை செய்கிற குறுநில மன்னர்களை யடக்கி உலகத்தில் உயிர்களாகிய பயிர்களை வளர்க்கும் நாளிலே, பத்துத் தேரும், நூறு யானைகளும், ஆயிரங் குதிரைகளும், பதினாயிரம் வீரர்களுமான இவ்வளவு சதுரங்கங்களைக் கூட்டி, இவை களுக்குத் தக்க சம்பளங்கள் கொடுத்து 'மிகுந்த பொருள்களெல்லாம் சித்துருவான சிவனுக்கே கண்டிகை மகுட முதலான ஆபரணங்கள் செய்தும், கோபுரம் மண்டபம் முதலானவர்களுக்கு ரத்தினங்கள் பதித்தும், இப்படிக் கோயிலுக்கு வேண்டிய 'திருப்பணிகளெல்லாஞ் செய்து வருகிற இவனுடைய சேனைகளின் சுருக்கத்தைத் தெரிந்து ஆயிரங் குதிரைகளுக்கொரு சேவகனென்று சொல்ல வல்லவனாகிய ஒரு சோழராஜன் இந்தச் சுந்தரேசபாதசேகர பாண்டியனை வென்று ஜெயங்கொள்ள நினைத்து வஞ்சிமாலை சூட்டிக்கொண்டு அநேகமாயி

ரம் ரதகஜ துரகபதாதிகளுடனே கடல் பொங்கி வருவதுபோல வெழுந்து, பாண்டியநாட்டைக் குறித்து வர, அதைப் பாண்டியன் தெரிந்து சோமசுந்தரக்கடவுள் சந்நிதியிற்போய் வணங்கி நின்று, சுவாமி! தேவரீர் திருவருளாலே அடியேன் அரசாட்சி செய்து வருகிறது தெரியாமல், எனது சேனைகளின் சுருக்கத்தைக் கண்டு எனது நாட்டைத் தன் கைவசமாக்க வெண்ணிக் காவிரி நாடனாகிய சோழன் தனது சேனைக்கடலிலே வடவாக்கினிபோல மூண்டு வருகின்றான். இதற்கு நான் செய்வதென்னவென்று வேண்ட, ஆகாயத்திலிருந்து அசரீரியாகப் பாண்டியனே! நீ எவ்வளவு மஞ்சவேண்டாம் நாமே பொருதுவென்று உனக்கு வெற்றி யுண்டாகச் செய்கிறோமென்று சொல்லப் பாண்டியன் கேட்டுச் சூரியனைக்கண்ட தாமரைபோல முக மலர்ச்சியாய்க் கடவுள் திருவடிக்கமலங்களை மனத்துள்ளே தியானித்துக்கொண்டு வெளியே வந்து பல வாத்தியங்களும் முழங்கத் தனது சேனைகளுடனே புறப்பட்டுக் கொல்லிமலைக்கதிபனான சோழன் சேனைக்கடல் முன்னே ஒரு ஆறுபோலச் சென்றாலும், அந்தச் சேனைகள் கண்களுக்குப் பாண்டியன் சேனையும் கடவுளருளாலே ஒரு கடல் போலவே தோன்றலாயிற்று.

அப்போது கூடற்கடவுள் பாண்டியன் சேனைக்கு முந்தி வேதமாகிய குதிரைமேலேறிக்கொண்டு (மேருவாகிய வில்லை வளைத்து வாசுகியாகிய நாணைப்பூட்டித் துளசிமாலை யணிந்த விஷ்ணுவாகிய அம்பை அதிலே நாட்டி, வாயினெருப்பை முப்புரத்திலே மூட்டி வெற்றிகொண்ட தாமே) ஒருவேடன்வடிவாகிக் காதிலே தந்தக்குழையும், கழுத்திலே முத்துமாலையும், வெட்சிமாலையும், மயிலிறகு முடித்த கொண்டையும், கைகளிலே தந்தக் கடகங்களும், சோழனைக் கொல்ல வெழுந்த விஷம்போற் கறுத்த திருமேனியும், யமன்போல் விளங்கும் வேலுமாக நிற்க, அவரைச் சோழன் கண்டு ஆயிரங் குதிரைக்கொரு சேவகன் நான்: நீ யெவ்வளவென்ன, வேடனாகிய கடவுள், நீ இவ்வளவுதானே, நான் அளவில்லாத குதிரைகளுக்கொரு சேவகனென்ன, அதுகேட்டஞ்சி நிற்கிற சோழன்முன்னே மின்னலை நீட்டிக்கொண்டு செல்லும் மேகம்போலக் கடவுளாகிய வேடன் தனது கைவேலைச் சுற்றிக் கோபித்து அதிர்ந்து சீற, சோழன் பயந்து, இனி இவன் கைவேலாலே நாமிறப்பதற் கெவ்வளவுஞ் சந்தேகமில்லையென்றோடினான். அப்போது கடவுளாகிய வேடன் மறையப் பாண்டியன் குதிரையுடனோடுகிற சோழனைத் துரத்திக்கொண்டு போகச் சோழன் திரும்பிப்பார்த்து இவன் அந்த வேடனல்லவென்று பயந்தீர்த்து, பாண்டியனை மதுரையளவுந் துரத்தினான். அப்போதோடுகின்ற பாண்டியன் தனது மதுரைக்குள்ளே அவசரமாய் நுழைய நினைத்து வருகிற வேகத்தினாலே ஒரு மதங்கொண்ட யானைபோல தவறி ஒரு அகழ்க் கிடங்கிலே விழுந்தான். அப்படிப் பாண்டியன் விழுந்த மேற்றிசை அகழிலே கூடவே தொடர்ந்து வந்து சோழனும்

குதிரையுடனே விழுந்தான். அப்படி விழுந்த இருவரில் சோமசுந்தரக் கடவுளின் திருவருளாலே பாண்டியன் யானைபோலெழுந்து கரையில் வந்தான். சோழன் அதிலே அழுந்தி யிறந்தான். பின்னர் பாண்டியன் அப்படி யிறந்த சோழனுடைய ஆடையாபரணங்கள், இரதகஜ துரகபதாதிகளை யெல்லாஞ் கொள்ளை கொண்டு, தங்கள் கடவுளுக்கு வேண்டியவைகளைக் கொடுத்துக் கடவுள் திருவடிக் கன்பனாய்ப் பெருகி அரசாண்டிருந்தனன்.

சோழனை மடுவில் விட்டிய படலம் முற்றிற்று.

---

முப்பத்தெட்டாவது

## உலவாக்கோட்டை யருளிய படலம்

---

கலி விருத்தம்

*மின்பணிக்கதிர் வேணிவானவன் மீனவன்றனை மானவேல்*
*முன்பனிக்க வலந்திரித்து முடுக்கிநேரி யடுக்கலான்*
*பின்பனிக்கம லத்தடத்திற் விட்டவாறிது பெருமைசால்*
*அன்பனுக்குல வாக்கோட்டை யளித்தவாறு மிளத்துவாம்.*

உரை: விளங்குகின்ற குளிர்ந்த சந்திரனைச் சடையில் தரித்தருளிய சோமசுந்தரக்கடவுள் பாண்டியனைச் சத்துருவினது வலிந்த வேலைக் கண்டு அஞ்சுங் கவலையினின்று மொழித்து யுத்தத்திலே செலுத்தி நேரிமலையை யுடையவனாகிய சோழ மகாராஜனைப் பின்பு குளிர்ச்சி பொருந்திய தாமரை மலர்களையுடைய மடுவில்விட்டிய திருவிளையாடலிதுவாகும். இனி பெருமை மிகுந்த ஓரடியவருக்கு உலவாக்கோட்டை யருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அந்த மதுராபுரியில் விளங்குகின்ற சோமசுந்தரக் கடவுளுக்கு மிகுந்த அன்பனான ஒரு வேளாளன் தருமத்திற்கும் புகழுக்கும் சிறந்தவன்; அவன் மனையாள் ஈகையினாலும் கற்பினாலும் சிறந்த தருமசீலை யென்பவள்; எல்லாரும் நன்கு மதிக்கத் தன் கணவனுக்கு இனிமையானவள். அப்படிப்பட்ட மனைவியோடு வாழ்கின்றவன் அநேகம் ஏர்கள் வைத்து, உழவு தொழில் செய்து விளையும் பலன்களைக் கொண்டு அரசருக்குக் கொடுக்கும் பகுதிச் செலவு போக மிகுந்தவைகளை யெல்லாம் தன் மனையாளாலே அறுசுவை யுண்டிகள் சமைப்பித்துச் சிவனடியார்களைப் பூசித்துப் புசிக்கச் செய்து விருந்தென்றும் வேளாண்மையும் செய்து சிறந்தவனாய் இருக்க அவன் அப்படிக் கொடுக்கக் கொடுக்க மணற்கேணிபோல் செல்வம் பெருகி வளர்கிற காலத்தில், இவனது நற்குணங்களை யெல்லோருக்கும் தெரிவிக்க வேண்டி, மதுரேசர் அவனது விளைநிலத்தில் விளைவு குறையச் செய்தார். அப்படியானாலும் யார்க்கும் இல்லையென்னாதபடி சிவனடி

யார் பூசை முன்போலவே குறையாமற் செய்துபின்பு தான் கொண்ட விரதத்துக்குப் பொருள் போதாமல் தன் உடம்பை வருந்தச்செய்து, இதுவரையிலும் நமக்கு வேண்டிய பொருள் கொடுத்துவந்த சோம சுந்தரக்கடவுள் கடன்படச்செய்து வினைபொருளும் குறையச் செய் தால் நம்மால் என்ன செய்யத் தக்கதென்று நினைத்துச் சிவனடியார் பூசை நியமத்துக்குத் தடையுண்டாய் மிகவும் வருந்தித் தினம் தினம் சிவனடியாரைப் பூசித்துப் பின்பு தான் புசிக்கிறவனுகையாலே ஒரு நாள், தானும் தன் மனைவியும் பட்டினியாய் உதராக்கினியாலே புழுங்கி இனி இறந்து போகத்தக்க இந்த உடம்பினுலே பிரயோஜன மென்னவென்று வெறுத்துத் தன் மனைவியுடனே கோயிலுக்குப் போய் இந்தச் செய்தியைக் கடவுளுக்குத் தெரிவித்துப் பின்பு நாம் இறந்துபோவதே துணிவென்று துணிந்து திருக்கோயிலில் விளங்கு கிற கடவுள் சந்நிதி முன்னேவந்து வணங்கி நின்று தேவர்கள் பிழைக்கச் சமுத்திரத்திற் ருேன்றிய விஷத்தையுண்டு அவர்க ளுயிரைக் காத்த கடவுளே! உம்முடைய மெய்யன்பர் பூசைக்கிடை யூருய் எம்முடைய வினை நிலமெல்லாம் விளையாமற் போயின; கடனும் மிகுதியாயின; இனிக் கடன் கொடுப்பாருமில்லை. ஆதலால், இனி யாரையாகிலும் கடன் கொடுக்கும்படி செய்தீரேயானுல் இந்த உடம்பை வைத்திருப்போம். அப்படிச் செய்யாவிட்டால், இந்த உடம் புச் சுமையைத் தாங்கமாட்டோமென்று மிகவும் வேண்டும்போது, சோமசுந்தரக்கடவுள் அவர்களைப் பார்த்து நீங்கள் அஞ்சவேண்டாம்; உங்கள் வீட்டில் நல்ல சம்பா நெல்லுக்கோட்டை யிருக்கச்செய்தோம். அந்த நெல்லுக்கோட்டை நீங்கள் எடுக்கவெடுக்கக் குறையாதிருக்கும் அதை நாள்தோறும் பூசைசெய்து அதில் வேண்டிய நெல் எடுத்துக் கொண்டு தினந்தினம் நமதன்பர்களுக்கும் அடியார்க்கும் அன்னதான முதலிய பலவித தர்மங்களும் செய்துகொண்டிருங்கள். பின்பு பேரின்பவீட்டைத் தருகிருேமென்று ஆகாயவாக்காகச் சொல்ல, அந்தத் திருவாக்கைக் கேட்டு ஆனந்தபரவசராய் வேதப்பொருளான கடவுளை வணங்கித் துதிசெய்து, பின்பு தங்கள் வீட்டுக்குவந்து முன்னே தேடின தவப்பயன்போலக் கடவுள் அருளிய உலவாக் கோட்டையைக் கண்டு சந்தோஷித்து அந்தக் கோட்டையைக் கடவு ளாக எண்ணி, தினம்தினம் சந்தனபுஷ்ப தூபதீபங்களால் ஆராதனை செய்து உணவுக்கும் அதற்கு வேண்டிய பலவிதச் செலவுகளுக்கும் அது கொடுக்கப் பெற்றுச் சிவனடியார்களுக்கும், வைதிகர்களுக்கும், தென்புலத்தார், தெய்வம், விருந்து, சுற்றம் முதலானவர்களுக்கும் மேகம் போல வரையாது கொடுத்துக் குபேரன்போல வாழ்ந்து பின்பு தானுந் தன் மனைவியும் சிவலோகஞ் சேர்ந்தார்கள்.

உலவாக்கோட்டை யருளிய படலம் முற்றிற்று.

———

முப்பத்தொன்பதாவது

# மாமனாகவந்து வழக்குரைத்த படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

தாமநா றிதழி யார்தந் தமர்க் கன்பன் வறுமை பட்டோன்
ஆமநா ளுலவாக் கோட்டை யருளிய முறையீ தையன்
தேமனன் முல்லைத் தீர்ந்தார்ச் சிறுதகை வணிகற் காக
மாமனும் படிவங் கொண்டு வழக்குரை வண்ணஞ் சொல்வாம்.

உரை: மணம் பொருந்திய கொன்றைமலர் மாலையைத் தரித்த சோமசுந்தரக்கடவுளுடைய அடியார்களிடத்தில் மிகுந்த அன்பராகிய ஒரு வேளாளருக்கு வறுமை வந்த காலத்தில் (அவ்வறுமை நீங்கும் பொருட்டு) உலவாக்கோட்டை யருளிய திருவிளையாட லிதுவாகும். இனி, அக்கடவுள் தேன் பொருந்திய புதிய முல்லைமலர் மாலையைத் தரித்த ஒரு வணிகச் சிறுவனுக்காக அவன் மாமனாகத் திருவுருவங் கொண்டு வந்து (தாயாதிகளிடத்தில்) வழக்குரைத்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அந்த மதுரையில் வணிககுலத்திலே பிறந்து குபேரன்போல் பெருஞ் செல்வத்தை யுடையவனாய்த் தனபதியென்னும் பெயர் கொண்ட ஒருவனும், அவன் மனைவியாகிய அருந்ததிபோலும் கற்பும் மகாலட்சுமியை யொப்பான அழகுடைய சுசீலை என்பவளும் நெடுங் காலமாகப் புத்திரனில்லாமல் வருந்தித் தனபதியென்பவன் தன் தங் கையின் பிள்ளையாகிய மருமகனைத் தனக்குப் பிள்ளையாகக் கொண்டு தன் மனைவியிடத்தில் மகிழ்ந்து கொடுக்க, அவளும் வணங்கி வாங்கிக் கொண்டு, அந்தப் பிள்ளைக்குத் தரிக்கவேண்டிய ஆபரணங்களைத் தரித்து அன்புடனே நன்றாக வளர்த்துவருங் காலத்தில், தனபதி யென் பவன் பிள்ளை யில்லாதவனானாலும் தன் மனைவியிடத்து அதிக மோகங் கொண்டு தன் தங்கைமேல் நாள்தோறும் மனைவி நிமித்தமாக அதிக சண்டை செய்து விரோதித்துவர, அக்காலத்தில் ஒரு நாள் தங்கை யானவள் தமையனைக் கோபித்துப் பிள்ளைப்பே றற்றபாவி யுனக்கு என் மகனல்லவோ இவ்வளவு பெருமையுண்டாகி இம்மைப் பயனும் மறுமைப்பயனும் அடைய யோக்கியனானையென்ன. அதுகேட்ட தன பதி மிகவும் நாணங்கொண்டு, இனி மறுபிறப்புக்காயினும் பிள்ளை யுண்டாகத் தவஞ் செய்வேனென்று நினைத்துத் தன் செல்வமெல்லாம் தன் மருமகனுக்கே ஆகச்செய்து, காட்டில்தவஞ்செய்யப் போயினான். பின்பு அப்படித் தவஞ்செய்யப் போனவன் நெடுங்காலம் வராம லிருக்க, அவன் தாயாதிகள் அவன் மருமகன் கொண்ட செல்வ மெல் லாம் வழக்கிட்டுப் பறித்துக் கொண்டார்கள். அப்படி விளை நிலங்கள்-அடிமைகள்-ஆபரணங்கள்-திரவியங்கள் - பசுக்கள் முதலான எல்லா மிழந்து சிறகொடிந்த பட்சிபோல வருந்துகின்ற மகனும் தாயும்

ஐயோ! சார்பில்லாதவர்களுக் கெல்லாஞ் சார்பாயும் ஆதரவுமாயு மிருக்கிற கூடற்கடவுளே! உன் திருவடிகளே சரணமென்று இந்திர விமானக் கோயிலுக்குள்ளே வந்து, சுந்தரேசர் திருவடிகளைத் தொழுது துதித்து எவர்க்கும் மாதா பிதா குரு தெய்வமுமாகிய, நீரே எங்களுக்கும் ஆதாரமாக வேண்டுமென்று பிரார்த்தித்துச் சுவாமி! என் தமையனான தனபதி தனக்குப் பிள்ளையில்லாததினாலே என் மகனைத் தனக்கு மகனாகக்கொண்டு, எல்லாருக்கு முன்னே தன் செல்வமெல்லாம் கொடுத்துத் தவஞ்செய்யப் போனான். அப்படி அவன் கொடுத்த செல்வத்தையெல்லாம் தாயத்தார்கள் தங்கள் பலத்தினாலே பறித்துக்கொண்டார்கள். ஆதலால் திக்கற்றவளாயும் என் மகன் மிகவுஞ் சிறியவனாயும், வேறே ஆதாரமில்லாமல் இருக்கிறதினாலே, நானிப்படி வருந்துகிறது கிருபாநிதியாகிய உமக்குத் தெரியவில்லையோ? என்று பின்னும் பூமியிலே உடல்படிய விழுந்து வணங்கி அப்படியே சோர்ந்து கடவுள் அருளாலே கொஞ்சம் நித்திரை கொண்டாள்.

அப்படி நித்திரை செய்கிறவள் கனவிலே, சோமசுந்தரக் கடவுள் ஒரு பிராமண வடிவங்கொண்டு வந்து, ஓய் வணிகப் பெண்ணே! நீ நாளை யுதயமானவுடனே உன் தாயத்தாரை அரசனாணையிட்டு மறித்துச் சபையேற்றி வழக்கிட்டுக்கொண்டிரு. அப்போது நாம் அங்கே வந்து பெரியோர்களெல்லாருஞ் சம்மதிக்க, உன் வழக்கைத் தீர்த்துத் தருகிறோம். நீ யெழுந்துபோவென் றருள்செய்ய, உடனே அந்த வணிகப்பெண் விழித்தெழுந்து, மிகவும் அதிசயித்து, "திக்கில்லாதவர்களுக்குத் தெய்வமே துணை" யென்பது மெய்யேயென்று, மீனாட்சி சுந்தரேசுவரரை வணங்கித் துதித்துத் தன்மகனுடனே வீட்டிற்கு வந்து நித்திரைசெய்து, பொழுது விடிந்தபின் வெள்ளியம்பலவாணர் திருக்கோயில் வந்து வணங்கிக்கொண்டு, அவரருள் செய்தபடியே, கொடு வழக்கிட்டு வென்றுகொண்ட தாயத்தார்களைத் தடுத்து, நீங்கள் யாரும் அடுப்பில் நெருப்பிடக்கூடாது. இந்த இடம்விட்டு அப்பால் ஓரடி எடுத்து வைக்கவுங் கூடாது. அநியாய வழக்கிட்ட உங்களை வென்று போகவிடேன், இதோ எல்லாருங்கேட்க, ஆணையிட்டேன். இனி நியாயசபைக்குச் சென்று அந்தத் தருமநீதியார் தீர்த்தபடி கேட்டு, எங்களுடைய பொருள்களைக் கொடுத்துப் போக வேண்டுமென்று தாயத்தார்கள் எல்லாரையும் தடுத்தாள். அப்படித் தடுத்தபோது அந்தத் தாயத்தார்கள் துர்வார்த்தைகளால் வைது தள்ள, கூகூவென்று கூச்சலிட்டுக்கொண்டு போய் நியாய சபையார் முன்னே முறையிட்டாள். அதைக்கேட்ட நியாயசபையார் கூட அனுப்பின சேவகரோடே தனபதி தங்கையானவள் தாயத்தார்களைக் காட்டிச் சபைக்குக் கூட்டிவந்தாள்.

அவ்வேளையில் பார்வதி சமேதரான வெள்ளியம்பலவாணர், காதில் அதிக விலைபெற்ற குண்டலங்களும், தோள்களிலே ரத்ந

கேயூரங்களும், கழுத்திலே ரத்னகண்டிகையும், கையிலே வயிர மோதிரமும் விளங்க அந்தத் தனபதி செட்டியாரைப்போலே மேட்டிமையான நடைகொண்டு வந்து கண்டு, வாடின தாமரைபோலே பங்காளிகளுக்கு முகங்காட்டி வெறுத்தும், மருமகனைத் தேடிக் கண்ணருள்கொண்டு பார்த்தும், தன் உள்ளக்குறிப்பைத் தெரிவித்து நியாயசபை முன்னே நின்று ஓ! ஓ! இங்கே அரசனில்லையோ? நியாய மறிந்த பெரியோர்களில்லையோ? ராஜநீதி கோணலாமோ? நூல்களிற் சொல்லுகின்ற தெய்வமும் கிடையாதோ? நிலையான தருமம் எங்கே போய் மறைந்தது? என்று சொல்லிவருந்துகிற தனபதி செட்டியாரை, வஞ்சனை பண்ணின தாயாதிகள் கண்டு மனங்கலங்கி முன்வலிந்து வென்ற உறுதி அழிந்து பயமும் வெட்கமும் நிறைந்து நிற்க, அப்போது மாமனாகிவந்த செட்டியார் மருமகனைத் தழுவித் தங்கைக்கு ஆதரவு சொல்லிச் சாமவேத கீதம்போல ஐயையோ! இப்படி அநாதிகளாய்ப் போனீர்களே யென்று அழத் தங்கையும் மருமகனும் அழுது, பாதங்களில் கண்களின் கண்ணீராட்டத் தாமும் மருமகனைக் கட்டிக்கொண்டு அழுது, தங்கை மேலும் மருமகன்மேலும் கண்ணீராட்டி, மருமகனைப் பார்த்து வியசனமாய், மார்பிலே நானணிந்த ஐம்படையைக் கண்டிலேன்; கால்களில் சிம்பையுங் கண்டிலேன்; தோளில் மதாணியுங் கண்டிலேன்; காதில் கடுக்கனையுங் கண்டிலேன்; முகத்தில் அசைகிற சுட்டியையும் கண்டிலேன்; ஐயோ! வெறும் உடம்பைத் தானே காண்கிறேன். இந்தப் பங்காளிகளுக்குப் பிள்ளை நகைகள் என்னவிலை பெறுமென்று ஆசைப்பட்டுப் பறித்துக் கொண்டார்கள் என்று நியாயசபையார் எல்லாருங் கேட்க வாய்விட்டு அழுது, தங்கையின் அழுகையை மாற்றித் தமது கையாலே முதுகைத்தடவிக்கொடுத்து, என் கண்முன்னே நீங்கள் ஏன் அழுகிறீர்கள்? இந்த அநியாயம் பண்ணினவர்கள் வழக்கு நானுள்ள அளவிலும் ஜெயங்கொள்ளுமா? உலகத்திலே நான் சம்பாதித்த பொருள் விசுவாச பாதகம் பண்ணியோ? இம்மி அரிசியுங் கொடாமல், அதிக வட்டி வாங்கியோ? இப்படி ஆனது. ஆனாலும் நம்முடைய பொருள் நமமைவிட்டுப் போகுமோவென்று மதுரேசர் கோயிலைப் பார்த்துத் தலைமேல் கைகுவித்து, ஓ! ஓ! மாணிக்கத்தை விலைமதித்து விற்ற எங்கள் குலத்துச் சிங்கமே! எங்கள் வழக்கை இந்த நல்ல பெரியோர்கள் முன்னிலே நீரே தீர்த்துத் தரல்வேண்டுமென்று பிரலாபித்து அழுதார். மறுபடியும் அந்தக் கள்ளவஞ்சகச் செட்டியார்கோபித்து நியாய சபையாரை நோக்கி, தராசுமுனைபோல் எங்கள் வழக்கையும் இந்தப் பங்காளிகள் வழக்கையுந் தீர்த்துக் கால்வேண்டுமென்று நரைத்த மூத்தபுலிபோல் நின்று சொல்ல, சான்றோர் நடுங்கி இருதிறத்து வழக்கையும் தாங்களெடுத்துப் பேசி, விசாரித்துப் பங்காளிகள் வழக்கிடுவது குற்றமென்ன, பங்காளிகள் உறுதிமான்கள்போல இவர் தனபதி செட்டியாரல்லரென்று சொல்ல, செட்டியாராகிய சுவாமி, சபையைப் பார்த்து இரண்டு கையையுங்கொட்டிச் சிரித்து அந்தச் செட்டிகள்-குடிப்பேர்-

பட்டப்பேர் காணிப்பேர் - தந்தைபேர்-தாய்பேர் - மாமன்பேர் - மாமி பேர், பங்காளிகள்பேர் - இவர்களைப் பெற்றவர்கள்பேர் - பிள்ளைகள் - உடன்பிறந்தார் - பெண்டாட்டிகள் - உறவினர் - குணம் - நடக்கை - அடையாளம் இவைகளில் எள்ளளவும் தளராமற் சொல்லச் சபையார் எல்லாரும் பார்த்துத் தனபதி செட்டியார் இவரேயென்று தீர்ப்புக் கொடுக்க, பங்காளிகள் வழக்கு இழந்து, இந்தத் தீர்ப்புக்கு வேறு சொன்னால் வேப்பமாலை யணிந்த பாண்டியன் தண்டிப்பானென்று பயந்து வீட்டுக்குப் போய் வருகிறேனென்றும், குளத்துக்குப் போய் வருகிறேனென்றும், மலபாதைக்குப் போய் வருகிறேனென்றும், காற்றடிக்க மழை கலங்கினாற்போல் கலைந்து போனார்கள். அப்போது நியாய சபையார் தனபதி செட்டியார் மருமகனுக்கே அவர் செல்வ மெல்லாம் உரியனவென்று தீர்ப்புச் செய்து வாங்கிக் கொடுத்தார்கள். அவர்கள் கொடுத்தவுடனே மாமனாகி வந்து வழக்குரைத்த செட்டியா ராகிய கடவுள் மறைந்து திருக்கோயிலுக்குள் எழுந்தருளினார். அது தெரிந்து, வந்தவர் கூடற்கடவுள் அல்லவோ வென்று செட்டிப் பிள்ளைக்குப் பாண்டியன் மனமகிழ்ச்சியாய் அநேகம் சிறப்புகள் செய்து, சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலைக் கனகமயமாய்ப் புதுக்கித் தன் புதல்வனாகிய வரகுணபாண்டியனுக்குத் தன் அரசாட்சியைக் கொடுத்துப் பின்பு இறைவன் திருவடிக் கமலங்களைச் சேர்ந்தான்.

மாமனாகவந்து வழக்குரைத்த படலம் முற்றிற்று.

———

நாற்பதாவது

# வரகுணனுக்குச் சிவலோகங் காட்டிய படலம்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

பண்கொண்ட வேதமுத லிடையீறு
நாடரிய பரன்மாம னாகியொரு வணிகன்
எண்கொண்ட காணிபொருள் கவர்ஞாதி
மாதுலறை யெதிரேறி வென்றபடி யிதுவாந்
தண்கொண்ட நேமிவர குணதேவ னெய்துபழி
தன்னைத் துடைத்தனைய மன்னவன்
கண்கொண்டு காணவுயர் சிவலோக
மதுரைதனில் வருவித்த காதையினி மொழிவாம்.

உரை: சுரவடிவாகிய வேதமானது, ஆதியும், நடுவும், அந்தமும் கண்டறியக்கூடாத பரம்பொருளாகிய சோமசுந்தரக்கடவுள் ஒரு செட்டிப்பிள்ளைக்கு மாமனாக எழுந்தருளி, அவனுடைய விளை நிலங் களையும், பொருள்களையும் வீண் வழக்கிட்டுப் பிடுங்கிக்கொண்ட பங் காளிகளைச் செயித்தருளிய திருவிளையாட லிதுவாகும், இனி, ஆந்நாட

சக்கரத்தையுடைய வரகுண பாண்டியன் அடைந்த பழியை யொழித்து அந்தப் பாண்டியன் கண்ணினுல் கண்டு தரிசிக்கும் பொருட்டு மதுரைப்பதியில் சிவலோகத்தை வருவித்தருளிய திருவிளை யாடலைச் சொல்லுகின்றோம்.

வரகுணபாண்டியன் இந்திரன்போல யாகங்களைச்செய்து நிலை பெற்ற வீரமும், சூரியன்போல் பிரதாபமும், மன்மதன் போல் அழ குங் கொண்டவனுய், ஆன்மா - சந்திரன் - சூரியன் - நிலம் - நீர் தீ - காற்று - ஆகாயமென்கிற எண்வகையாகத் திருவுருவங்கொண்டு விளங்குகிற சோமசுந்தரக் கடவுளை மனம் வாக்குக் காயமென் னும் திரிகரணங்களாலும் குறையாத வழிபாடுசெய்யும் அன்பு கொண்டு வேதாகமங்கள் முதலிய கலைஞானங்களும், யாகாதி பல கிரியைகளும் உலகத்திலே நிலைபெற்று விளங்கச்செய்து நான்முகனுக வும், அஷ்டலட்சுமிகளும் நித்தியவாசம் பண்ணப் பெற்றிருத்தலாலே திருமாலாகவும், ஜிதேந்திரியனுய் முழுதுந் தெரிந்ததினுலே பரம சிவனுகவும், உலகத்தை அரசாட்சிசெய்து வரும்போது, ஒருநாள் அங்கு வேட்டையாடிவரவெண்ணி; வனங்களெல்லாஞ் சென்று மிரு கங்களைத் தேடிப் புலி யானை பன்றிகளைக் கலைத்தோட்டிச் சூரியன் அஸ்தமிக்குமளவும் வில்லும் அம்புங்கொண்டு திரிந்துகொன்று, பட்ட ணத்துக்குத் திரும்பும்போது வாயுவேகங்கொண்டு செல்கிற குதிரை மேலேறி வர, அங்கே வரும் வழியிலே ஒரு பிராமணன் மயங்கிச் சோர்ந்து முகத்திலே குருவேர்வைதோன்ற நித்திரைசெய்ய, அவன் மேலே இவன் ஏறிவருகிற கடுநடைப்புரவி கால்களை வைக்க, உடனே அந்தப் பிராமண னிறந்தான். அது தெரியாமல் வரகுணபாண்டி யன் அம்புபோல் வருகிற குதிரையுடனே தன் அரண்மனை வந்து சேர்ந்து நிற்க; குதிரைக்காலிலே மிதிபட்டிறந்துபோன பிராமணனை, அவன் பந்துக்கள் எடுத்துக்கொண்டுவந்து பாண்டியன் கடைத்தலை வாயிலிட்டு அங்கே நடந்தசெய்தியைச் சொல்ல, பாண்டியன் நினைத் துணர்ந்து, எடுத்துவந்த பிராமணர்கள் கையிலே அநேக திரவியங்க ளைக் கொடுத்து, இறந்தவனுக்கு மயானவினைகளை முடிக்கச்சொல்லி அனுப்பினுன். பின்பு அந்தப் பிராமணக் கொலை பாண்டியனைக் கொஞ்சமாயினும் விடாமல் பிடரியைப் பிடித்துக்கொண்டது.

அப்படி அந்தப்பழி விடாமற் பற்றிக்கொண்டது தீர, வேதப் பிராமணர்களுக்கு அநேக தானதருங்கள் செய்தும், வன்னி அரசு வேம்புகளைப் பிரதக்ஷணஞ் செய்தும் அறுகம் பில்லைப் பறித்துக் கொண்டுவந்து பசுக்கள்வாயி லுண்ணக்கொடுத்தும், அகமருஷண ஸ்நானங்கள் ஓமங்கள்செய்தும் பஞ்சகௌவியம் பசுவின்கொம்பு தோய்ந்தநீர் பருகியும், இன்னும் அநேக தானங்கள் செய்தும், அந் தப்பழி நீங்காமல் பின்னும் பலமாக, நெருப்பிலே நெய்வார்த்தாற் போல மூண்டு, வரகுணபாண்டியன் கண்களுக்குத்தோற்ற வளைந்து சூழ்ந்தது. எப்படியென்றுல், அழும், பெருமூச்சுவிடும், கையெறியும்,

மலைபோ லுயரும், குறுகும், கோபித்து முழங்கும், முன்னும் பின்னும் பக்கங்களுந் தொடரும், சிரிக்கும், வாயை மெல்லும், விலகும், கிட்டிவரும், பழிதாவென்று கோபித்து எதிர்நின்று போராடும். இப்படியாக வரகுணபாண்டியன் அழுக்கடைந்த மாணிக்கம்போலவும், பாம்பு விழுங்கின சந்திரன் போலவும், ஒளி மழுங்கிப் பெரும் யானையுண்ட விளாங்கனி போலவும், உள்ளறிவின்றித் துன்புறுவதுகண்டு, வேதப்பிராமணர்கள், ஐயா! நமது கூடற்பெருமானைத் தினம் ஆயிரத்தெட்டுப் பிரகாரம் பிரதக்ஷிணஞ் செய்தாயானல், அக்கடவுளே உன் பழியைத் தீர்ப்பார். அல்லாமலும் உறுதியாய் அப்படிப் பத்துநாள் வலஞ்செய்துவந்தால் அக்கடவுளே அதற்கு வழிகாட்டுவாரென்று சொல்ல, வரகுணபாண்டியன் சோமசுந்தரக்கடவுளின் திருக்கோயிலுக்குள்ளே போய் இந்திரன் பழியும் மகாபாதகமுந் தீர்த்தருளிய பெருமானே! அடியேன் பழிபாவங்களையும் தீர்க்கவேண்டுமென்று வணங்கித் துதித்துப் பெரியோர்கள் சொன்னபடியே வலஞ்செய்ய அப்போது சோமசுந்தரக்கடவுள் ஆகாயவாணியாகப் பாண்டியனே! நீ செய்யும் வலதுக்காக நாம் மிகவுஞ் சந்தோஷித்தோம்; எவ்வளவும் இந்தப் பழிக்கு அஞ்சவேண்டாம். உன்னுடனே சோழன் சண்டை செய்யவருவான்; அவனேடு நீயுஞ் சண்டைக் கெதிர்ப்பாய்; அப்போது சோழன் உனக்கு முதுகிட்டோடுவான். நீ அவனை எட்டிப்பிடிப்பதுபோலத் துரத்திக்கொண்டு பின்னே ஓடும்போது எம்மையேயாம் அர்ச்சனைசெய்து கொண்டிருக்கிற தலத்துக்குப்போவாய். அப்போது அங்கே உன் பழியைத் தீர்க்கிருமென்று சொல்ல, பாண்டியன் மீனுட்சிசுந்தரேசர் திருவருளை மிகவும் புகழ்ந்துகொண்டு தன் அரண்மனையில்போய் இருக்கும்போது சில நாளைக்குப்பின் சோழராஜன் புலிக்கொடி கட்டிவருகிற சேனைகள் சூழக் கடல்போலப் பல வாத்தியங்களும் முழங்கப் பாண்டியனேடு வந்து எதிர்க்க, பாண்டியனுந் தனது சேனைகளுடனே சோழன் சேனைகளோடு எதிர்த்து, யுத்தம்பண்ண, மந்தரகிரியாற் கலங்கின கடல்போல சோழன் சேனைகள் கலங்கியோடச் சோழனும் நாணி முதுகிட்டோடும்போது வரகுணபாண்டியன் அவனைப் பின்பற்றிச் சென்று, காவிரிநாட்டிலே வந்து, பூசத்துறையிலே ஸ்நானஞ்செய்து, காவிரித்தென்கரையிலே வாசஞ்செய்கிற திருவிடைமருதப்பரைக் கண்டு சேவிக்கக் கிழக்கு வாயிலைக்கடந்து உள்ளே போகும்போது, பாண்டியனது பாவமும் பழியும் வெளியே நின்றன. தெய்வமருதிலே வேத வண்டுகள் பாடி மொய்க்க விளங்குந்தேனைக் கண்ணாரப் பருகி, அழலைச்சேர்ந்த வெண்ணெய்ப்பாவைபோற் கரைந்து, அறிவு மயமாய், வரகுண பாண்டியனின்று, நிராமயனே! பரமாநந்தமாகிய திருநடனத்தைச் செய்கின்ற பெருமானே! நான்மாடக்கூடலென்னும் மதுரைப்பதியி லெழுந்தருளிய பரத்துவப்பொருளானவனே! இமையாத சோமசூரியாக்கினிக ளென்னுந் திரிநேத்திரங்களையுடைய கடவுளே! பர்வதராஜ புத்திரியாராகிய பார்ப்பதிசமேதனே! பழமைக்தும்

பழமையான பெருமானே! சர்வலோக நாயகனே! புண்ணியப் பொருளானவனே! திருவிடைமருதூரென்னும் திருக்கோயிலில் விளங்குகின்ற கடவுளே! சர்ப்பாபரணத்தை யணிந்த சடைமுடியையுடைய கருணைக்கடலே! என்று அளவில்லாத தோத்திரங்களைச் செய்தான்.

அப்படித் துதிசெய்கிற பாண்டியனைப் பார்த்து மருதவாணர், பாண்டியனே! கிழக்குவாயிலில்தானே பிராமணக் கொலை நின்றுவிட்டது. இனி நீ அந்த வழியே போகாமல் மேற்குவாயில் வழியாக நமது மதுரைக்குப் போவென்றருள் செய்ய, வரகுணபாண்டியன் அந்த அருள்வார்த்தையைக் கேட்டு மருதமரத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து, நீங்காத அன்பினாலே அடிக்கடி வாயில்களெல்லாம் விழுந்து சேவித்து மேலைவாயில் வழியே போகின்றவன் தன் பெயராலே கோபுரங் கட்டுவித்து சில நாள் அங்கிருந்து திருக்கோயில் திருப்பணிகளெல்லாஞ் செய்து தென்றிசையை நோக்கிச் செல்லும்போது, வழிகளிலுள்ள சிவஸ்தலங்களெல்லாம் கண்டு வணங்கிக்கொண்டு மதுரையைப் போய்ச் சேர்ந்து தன் பழியைத் தீர்த்தாண்ட சோமசுந்தரக்கடவுள் பாதகமலங்களைத் தினந்தோறும் வந்து வணங்கித் துதித்து, இப்படியாக உலகமெல்லாம் தனது செங்கோல் செலுத்தி வருகிற காலத்தில், வரகுணபாண்டியன் பெரியோர்களாலே அமுதம்போலும் சிவபெருமானுடைய புகழைப் பலவாகக் கேட்டு. வேதம் - ஆகமம்-புராணம்-ஸ்மிருதிகள் முதலான நூல்களெல்லாம். உலகங்களுக்கெல்லாம் மேலானது சிவலோகமென்பதை உட்கொண்டு, அந்தச் சிவலோகங் காணவேண்டிய கருத்துடனே சிவனிராத்திரியினன்று கடவுள் சந்நிதானத்துக்குள்ளே போய், மீனாட்சி சுந்தரேசரை வணங்கி, சுவாமி! இந்தப் பிறவிக்கடலைக் கடந்து தேவரீர் திருவடி நிழலை யடைந்தவர்கள் சூழத் தேவரீர் சிவலோகத்தில் வீற்றிருப்பதைத் தரிசிக்கவேண்டுமென்னும் ஆசை அடியேனுக்கு மிகுந்திருக்கிறதினாலே திருவருள் செய்யவேண்டுமென்ன, அதற்கு அன்புக்கெளியவரான வெள்ளியம்பலவாணர், அந்த உலகத்தை இங்கே வருவித்து இவனுக்குக் காட்டவேண்டுமென்று திருவுள்ளங்கொள்ள, உடனே சிவலோகந் தெரிந்து, சூரிய சந்திரர்களெல்லாம் மின்மினிப்போலொதுங்கக், கோடி சந்திர மண்டலங்கள் ஒன்றாய்க் கூடிவந்தாற்போல், ஆகாயத்திலிருந்து சிவலோகங் கீழே யிறங்க, கடவுள் நந்திதேவரை யழைத்து, எம்மிடத்தில் அன்பு மிகுந்த வரகுணபாண்டியனுக்கு அவனாசைப்பட்டபடியே சிவலோக முழுதுங் காணக்காட்டென் றருள்செய்ய, வேத்திரப் படைகொண்ட திருநந்திதேவர் தொழுதுவந்து, வரகுணபாண்டியனை வாவென்று அழைத்துக்கொண்டு போய்த் திருமாலும், நான்முகனும், வேதங்களும் அளந்தறியக்கூடாத சுயம்பிரகாச சூரியனான கடவுளாளுகின்ற சிவலோகம் இதுதான் பாரென்று சொல்லுகின்றார்.

கற்பூரவாசனை பரிமளிக்க, இளந்தென்றல் வீச, அரும்புகள் விண்டு ஆயிரம் யோசனை தூரம் வாசம் வீச, வெண்டாமரைகளும்

செந்தாமரைகளும் பூத்து விளங்குகின்ற ஓடைகளும், பக்கங்களிலுள்ள ஆறுகளும் அளவில்லாத உருத்திரகணிகைகள் தங்கள் மதுரவாயைத்திறந்து தேன்போற் பாடுகின்ற ஏழிசைகளும், யாழிசைகளும் மலர்ந்த பூந்தருக்களிலே வண்டுகள்பாடு மிசைகளும், தும்புரு நாரதர் பாடு மின்னிசைகளுமே, எங்கெங்குமாய் அமுத வாவிகளும், பொற்றாமரைக் குளங்களும், குயில்கள் கூவுகின்ற தேன் சோலைகளும் அஞ்ஞான விருள்போன்ற தேவர்கள் வாழுமிடமும், திருப்பாற் கடல்போன்ற அகழிகளும் பொன்னாலாகிய மதில்களும், கோபுரங்களும், மிகுந்த நன்மைகள் விளங்குகின்ற வீதிகளும், புதிது புதிதாக நாள்தோறும் உண்ணக் கிடைத்த நால்வகை யுண்டிகளும், சந்தன கந்த புஷ்ப தாம்பூலங்களும் செம்பொன் மாலைகளும், வீணைப் பாடலும், ஆடலுஞ் செய்கின்ற சித்திரப் பாவைபோன்ற பெண்கள் கூட்டங்களும், உருத்திரப் பெண்களோடு கூடி வாழுகின்ற மாளிகை வரிசைகளும், அவர்கள் செல்வங்களும், போகங்களுந் தெரியக்காட்டி, நான்முகனிட மிது, திருமால்வாழும் பரமபதமிது, இவைகளெல்லாங் கடவுள் வடிவுகொண்ட உருத்திரர்கள் வீதி, திக்குப்பாலகர்களுறை விட மிவை, விடியுமுன்னே யெழுந்து நீராடி நமது கடவுள் கோயிலுக்குத் திருவலகு பரிமாறி, நந்தவனங்களை வளர்த்து தூய்ந்து பூவெடுத்துச் சிவபெருமான் திருநாமங்களைக் காதில் கேட்டு உலகவாணராகி சாலோகம் பெற்று வாழ்கின்றவர்களிவர்கள்; பரிசுத்தாந்தக் கரணராய்ப் பஞ்ச சுத்திகளுஞ் செய்துகொண்டு உள்ளும் புறமு மொத்த அன்பினராய் விதிப்படியே சோடசோபசாரங்களுடனும் திரிகரண சுத்தியாய்ப் பூசித்துக் கடவுளருகே யிருக்கின்ற சாமீபம் பெற்றவர்களிவர்கள். மேலெழுகின்ற வாயுவினாலே அக்கினியை உயரச் செய்து, மேலே நெருங்கிப் பின்கலை நாடிக்கும் இடை நாடிக்கும் நடுவே சிந்துகின்ற சந்திர மண்டலத்தில் விளைந்த அமுதரசத்தைப் பானம் பண்ணி நமது கடவுள் வடிவை நெற்றி யென்கிற புருவ மத்தியத்தின் மேலே தியானஞ் செய்து அக்கடவுளது சாரூபத்தைப் பெற்றவர்களிவர்கள்; கடவுள் விஷயமாக வேள்விகளைச் செய்து முடித்து வந்த வேதியர்களிவர்கள்; தண்ணீர்ப்பந்தல் முதலான முப்பத்திரண்டு தருமங்களும் நிராசையாகச் செய்து வந்தவர்களிவர்கள்; வேதாகமப் படியே விபூதி யணிந்து கடவுளது ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபித்துச் சிவபுராணங்கள் கேட்டு வினைவலி கடந்த சிவபக்தர்களிவர்கள்; வேதத்திலே சொல்லுகின்ற சத உருத்திர மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு விபூதி ருத்திராக்ஷமாலை யணிந்தவர்கள் யாரானாலும் அவர்கள் குறி குணம் குலம் பாராமல் அவ்வன்பர்களையே சிவபெருமானாக வெண்ணிப் பக்திசெய்து பிறவி வேரறுத்து வந்தவர்களிவர்கள்; பஞ்ச கௌவியங்களால் அபிஷேகங் கொள்ளுகிற கடவுளே சிவமென்று அங்க ஞானோபதேசஞ் செய்தும், சிவதருப்பணஞ் செய்தும், சாமகானஞ்செய்தும், ஆலயஞ் சமைத்துச் சிவலிங்க ஸ்தாபனஞ்செய்தும், பிறவி தீர்ந்து வாழ்கின்ற உத்தமர்களிவர்கள்; சிவார்ச்சனை செய்

பவர்களுக்கு வேண்டியவைகளைச் செய்தும், சிவனடியார்களையே சிவனாக வெண்ணி அறுசுவை யமுதமுண்பித்துப் பூசித்துச் சிவனடியார்க்குத் திருப்பணிகள் பலவுஞ் செய்து மேம்பட்டவர்க ளிவர்கள்; சோமசுந்தரக் கடவுளுக்கு ஆலய முதலிய திருப்பணிகளும் அருச்சனையும் நிரம்பச் செய்து, பூதிசாதனப்படியே இந்த மதுரையை யாண்டு சிவலோகஞ் சேர்ந்த உன் குலத்தரசர்களிவர்கள் என்று பிரம்பாலே குறித்துக் காட்டித் திருநந்திதேவர், பின்பு சிவனடியார் கூட்டத்தையுந் தெரியக் காட்டிச்செல்ல, வரகுணபாண்டியன் அங் கங்கே நின்று வணங்கித் தலைமேற் கைகுவிக்கப் பின்பு கிரமப்படியே திருநந்திதேவர் தேவர்நாயகரான கடவுள் சந்நிதிமுன்னே கொண்டு போய் விட்டார்.

அங்கே வேதங்களும் ஆகமங்களும் வடிவுகொண்டு இருபுறத்தி லும் துதிக்கவும், தும்புருவும் நாரதரும் வீணைகள் பாடவும், வண்டுகள் மொய்த்துப்பாட, அசைகின்ற பூங்கொம்புகள் போலே அரம்பையர் கள் நடனஞ் செய்யவும், சேவிக்கவந்த தேவர்கள் இடம் நெருங்கி நிற்கவும், விநாயகக் கடவுளும் முருகக்கடவுளும், வீரபத்திரக் கடவு ளும் விழுந்து வணங்கி நின்று, ஏவின பணிகேட்டு நிற்கவும், இடை யிற் கட்டித் தொங்குகின்ற சோமனை ஒதுக்கிக்கொண்டு, இரண்டு கைகளாலும் வாயை மூடிக்கொண்டு, பிரம விஷ்ணுகள் ஒதுங்கி நின்று தங்கள் குறைகளைச் சொல்லவும், இந்திரன் முதலான திக்குப் பாலகர்கள் தாங்கள் செய்கிற காவலிற் குறைகள் சொல்லவும், எழு தண்டு முதலியவைகளைக் கைக்கொண்டு வாயை மென்று பல்லைக் கடித்துப் பூதத்தலைவர்கள் நிற்கவும், கோடி யமன்கள் கண்டு நடுங்க முத்தலைச் சூலங்களைக் கைக்கொண்டு சிவகணங்கள் சூழ்ந்து காத்து நிற்கவும், தேவர் - சித்தர் - அசுரர் - சாரணர் - விஞ்சையர்-கின்னரர்- மாதவர் - இயக்கர் - உரகர் - கருடர் - பாதாளவாசிகள் - சுத்தயோகி கள் முதலான கூட்டங்கள் நின்று துதிக்கவும், கிருபைக் கடலாகிய கடவுளை நோக்கி இனிவருகிற பிறவியைத் தீர்த்து எங்களை ரக்ஷிக்க வேண்டுமென்று அன்புமிகுந்து ஆனந்தக் கண்ணீரொழுக, மயிர் புளகிக்க, முனிவர்கள் சிவசிவ சங்கரவென்று முழங்கவும், எல்லாருக் கும் கிரமமாக உபசாரஞ் சொல்லிப் பார்வதி குறுநகை கொள்ள, ஆயிரங் கிரணங்கள் வீசுகிற சிங்காதனத்தின்மே லிருக்கிற கடவுளைக் கண்டு வரகுணபாண்டியன் விழுந்து வணங்கிப் பேச்சுத் தடுமாற உரோமஞ் சிலிர்க்க அருட்கடலிலே அன்பாகிய ஆறிழக்க மிதந்து போய் வாக்குக் கெட்டாத ஆனந்தாமுதத்தை வாய்மடுத் துண்ட பின்பு தன் பொறிகளும் தன் கரணங்களும் கடவுள் விஷயமாகச் செய்து அன்பு வடிவாய் நின்றான். அப்போது அவனுக்கு முன்னே தோன்றின சிவலோகம் பழையபடியே மதுரையாய் அங்கயற்கண் ணம்மையும் தாமுமாகச் சோமசுந்தரக் கடவுள் விளங்கினார். அப் போது வரகுணபாண்டியன் கடவுளருட் பெருமையை யோசித்துக்

கடவுள் பாதங்களிலே விழுந்து வணங்கி அன்பு மிகுந்து ஆனந்தக் கண்ணீரொழுக வாய்குழறச் சுவாமி!

கொச்சகக் கலிப்பா

நாயினே னென்னை நடுக்கும் பழியகற்றித்
தாயினே ராகித் தலையளித்தாய் தாள்சரணஞ்
சேயினேன் காணச் சிவலோகங் காட்டிப்பின்
கோயினேர் நின்றவருட் குன்றேநின் றாள்சரணம்.

மாழாந்து செய்யும் வினைவழிபோம் வன்னரகிற்
றாழா தடியனேற் கன்புதந்தாய் தாள்சரணம்
ஏழாகி நான்கு வகையா யெழுபிறப்பும்
பாழாக வென்னைப் பணிகொண்டாய் தாள்சரணம்.

வெங்கட் பழியின் வினையேனை வேருக்கித்
திங்கட் குலக்களங்கந் தீர்த்தாய்நின் றாள்சரணம்
அங்கட்சிவ புரமுண் டன்புடையார்க் கென்பதைபின்
றெங்கட்குக் காட்டி யிசைவித்தாய் தாள்சரணம்.

என்று துதித்துப் பெருமானுடைய திருவருளைப்பெற்றுப் பேரன்பு கொண்டு பின்னும் வெவ்வேறே பல பூசைச் சிறப்புகள் செய்து வரகுணபாண்டியன் வாழ்ந்திருந்தானென்று சொன்ன அகத்திய மகாமுனிவரை இருஷிகள் பார்த்து, ஐயா! அக்காலத்திலே இந்திரன் சாபம், வெள்ளையானைச் சாபம், தகப்பனைக்கொன்று தாயைக்கூடின பாபங்களெல்லாம் மதுரையிலே தீர்த்து, வரகுணபாண்டியனுக்குத் திருவிடைமருதூரில் பழிநீங்க வரந்தந்தது யாதுகாரண மருளிச்செய்ய வேண்டுமென்ன, அகஸ்திய முனிவர் நன்றென்று சோமசுந்தரக் கடவுள் எல்லாப் பழிபாவங்களையும் ஒழிக்கின்றவரென்று பிரசித்தமானதினாலே இனி மதுரையிலுள்ளவர்கள் அஞ்சிப் பழிபாவங்கள் செய்யா திருக்கவேண்டி வரகுணபாண்டியனைத் திருவிடைமருதூருக்குப் போகச்செய்து பழிதீர்த்தாரென்று சொல்ல, அதை முனிவர்கள் கேட்டு அதிசயானந்தக் கடலில் மூழ்கினார்கள். அன்றுமுதல் மதுராபுரியானது சிவஸ்தலங்களுக்கெல்லாம் சிகாமணியாய்ப் பூலோக சிவலோகமென்று பதினாலுலகங்களும் புகழ நிலைபெற்று விளங்கிற்று.

வரகுணனுக்குச் சிவலோகங்காட்டிய படலம் முற்றிற்று.

---

நாற்பத்தொராவது

# விறகு விற்ற படலம்

அறுசீரடி யாசிரிய விருத்தம்

நெடியவன் பிரமன் றேட நீண்டவன் றென்னற் கேழின்
முடியதாஞ் சிவலோ கத்தைக் காட்டிய முறையீ தையன்
படிமிசை நடந்து பாடிப் பாணன்றன் விறகா ளாகி
அடிமையென் றடிமை கொண்ட வருட்டிற மெடுத்துச் சொல்வாம்.

உரை: விஷ்ணுவினுலும் பிரமனுலும் தேடியறியக்கூடாத சோமசுந்தரக்கடவுள் வரகுணபாண்டியனுக்குப் பதினுன்கு புவனங்களை யுங்கடந்த சிவலோகத்தைக் காட்டியருளிய திருவிளையாடலிதுவாகும். இனி, அந்தச் சோமசுந்தரக்கடவுள் தமது திருப்பாதங்கள் வருந்தப் பூமியில் நடந்து பாணபத்திரரது அடிமையென்று விறகு சுமையைத் தலைமேற் சுமந்து சாதாரிராகத்தைப் பாடித் திரிந்து அந்தப் பாணபத்திரரை அடிமை கொண்டருளிய திருவிளையாடலை எடுத்துச் சொல்லுகின்ருேம்.

பின்பு அகஸ்தியர் சொல்லுகிருர் வரகுணபாண்டியன் இந்திரனைப்போல் மதுரையில் அரசளிக்குநாளில், வடதேசத்திலிருந்து ஏமநாதனென்னும் ஒரு வீணைப் பாடகன், அநேகம் ஜயவிருதுகளுடனே மதுரைக்கு வந்து, அரசன் அரண்மனைக்குள்ளே சென்று ராஜசபையில் வரகுணபாண்டியனைக் கண்டு வணங்கிப் பாண்டியன கீர்த்திகளைப் பலவிதமாகப் புகழ்ந்துகொண்டாடி, ஏழுசைத் தந்தி பூட்டின வீணையை யிடதுதோளிலே சாத்திச் சுருதி கூட்டித், தேன்போலு மின்னிசைகளைப் பாண்டியன் காதுகள் நிரம்பப் பாடினுன். அப்படிப் பாடக்கேட்ட பாண்டியன் தன் தலையசைத்து மெச்சி, ஏமநாதனுக்கு ரத்தினுபரணங்கள் கொடுத்துப் பலவகையான போஜனங்களுக்கு வேண்டியவைகளுங் கொடுத்து அவனிருக்க வீடும் வேறே யமைக்கச் செய்வித்துப் பின்னும் வேண்டிய சன்மானங்களுஞ்செய்ய, ஏமநாதன் தனக் கெதிரொருவருமில்லாத கருவத்துடனே மனுேரதித்துத் தானிருக்கவமைந்த இடத்துக்குப் போனுன். பின்பு பாண்டியன், வந்த ஏமநாதன் மிகவுங் களித்திருக்கிருனென்று தெரிந்து, சேவகரை விட்டு நம்முடைய பாணபத்திரனை இங்கே அழைத்துவாருங்களென்ன, உடனே சேவகர்கள் போயழைக்கக் கேட்ட பாணபத்திரன் ராஜசபைக்கு வந்து பாண்டியனைக்கண்டு வணங்கி நிற்க, பாண்டியன பார்த்து பத்திரரே! இப்போது புதிதாக வந்திருக்கிற வீணைப் பாடகனுடனே பாடவல்லீரோ? வென்ன, பத்திரன் வணங்கி, ஐயா! பாண்டியர்குல சிகாமணியே! உம்முடைய தயவின் பலமும், சோமசுந்தரக் கடவுளருளின் பலமுங்கொண்டு, என்னுலானவரைக்கும் பாடி, அந்த ஏமநாதன் கொண்ட விருதைப் பரிந்து அவனையும் பாட்டால் வெல்

லுவேனென்ன, பாண்டியன் கேட்டு, நீ நாளைவந்து பாடக்கடவீரென் றுத்தரவு செய்தனுப்ப, பத்திரன், தன் வீட்டுக்குப் போயிருந்தான். அங்கே ஏமநாதனிடத்திலே யிருக்கிற கற்றுச்சொல்லிகளான பாடகர்கள் கடைத்தெருவுகள், நாற்சந்தி கூடுமிடம், அம்பலச்சாவடி, வீதிகளாகிய இந்தவிடங்களி லெல்லாம் போய்ப் போய்ப் பாடித் தங்கள் பெருமை விளங்கும்படி திரிந்தார்கள்.

அப்படி அவர்கள் பாடுகிற பாடல்களைப் பாணபத்திரன் கேட்டு ஆச்சரியப்பட்டு ஏமநாதனுடைய சீடர்களே இவ்வளவு பாடவல்லவர்களானால், அவன் எவ்வளவு வல்லவனோ வென்று மதித்து, அந்த ஏமநாதனை நாளை எப்படி நாம்பாடி வெல்லுவதென்று மதுரேசனை வந்தனைசெய்து, எம்பெருமானே! தேவரீருடைய அருளாகிய துணை இக்காலத்தில் முழுதும் வேண்டுமென்று துதித்துக்கொண்டுபோய்த் தன் வீட்டிலிருந்தான். இப்பால் இந்திர விமானத்திலே நிலைபெற்று விளங்குகின்ற சச்சிதானந்த மயமான சோமசுந்தரக் கடவுள், தம தன்பனான பாணபத்திரனது இசைப்பகையை வெல்லத் திருவுளங்கொண்டு, விறகு சுமந்துவந்து விற்கிற கிழவனாகத் தமதிச்சைப்படி மிகவும் அழுக்குப்பிடித்த கந்தைத்துணியை இடையிலே சுற்றிக்கொண்டு, வெட்டிவெட்டி மழுங்கித் தேய்ந்த வெட்டரிவாளை வலப்புறத்திலே சொருகிக்கொண்டு கிழிந்து பழையதாய்த் தேய்ந்த தோற் செருப்புகளைக் கால்களிலே போட்டுக்கொண்டு, பழையதாய்க் கிழிந்து கிழிந்து தைத்த போர்வையான உறைக்குள்ளே கிடக்கிற வீணையையும் ஒரு தோளிலே மாட்டிக்கொண்டு, பிடரிக்கு மேலே தோள்களிலே தொங்கக் காதுகளிலே களாக்காய்களைக் கொத்துடனே சொருகிக்கொண்டு, தலைமயிர் சரிந்துதொங்கச் சும்மாடு கட்டிவைத்து, அதன்மேல் வெட்டின விறகுசுமைகளைத் தினந்தினஞ் சுமந்து அழுந்தித்தேய்ந்த தலையுடையராய், அப்போது வெட்டின விறகு சுமையைத் தலையிலே சுமந்துகொண்டு. சதைப்பிடிப்பில்லாமல் எலும்புகள் தெரிய இளைத்தவுடம்புடனே, பார்த்தவர்கள் ஐயோவென்றிரங்கும்படியாகப் பூமியிலே பாதங்கள்பட, முகத்திலே வெயர்வு தோன்ற, இருமி விறகாளாக வருகிறவர் சுமைதாங்கிக் கல்லைக் கண்டு, அதன் மேலே விறகு சுமையைச் சார்த்தி, அங்குள்ள மடுவிலே போய்க் கையாலள்ளி நீர்குடித்துவந்து விறகுசுமையைத் தலைமேற் கொண்டு, உச்சி யெரிவுதீர அடிக்கடி யெடுத்தெடுத்து ஆற்றிக்கொண்டு, மதுரைக்குள்ளே வந்து, விலைகேட்கிறவர்களுக்கு வாங்கத் தகாத விலைசொல்லி, வீதி சந்தி முடுக்குகளெல்லா மலைந்து திரிந்து, பிரம்மா - விஷ்ணு வேதங்களாலும் காணப்படாதவர், ஏமநாதனிறங்கியிருக்கிற வீட்டுக் கடைத்தலைக்குப் போகும்போது சூரியன் அஸ்தமித்து செவ்வல்லிமலர்கள் மலர, சந்திரோதயமாகப் பட்சிகள் கூடுகளிலடங்க, வண்டுகள் தாமரைகளிலே தூங்க, குரங்குகள்சோலைகளிலே மறைய, இடையர்கள் மாடுகளை யோட்டிக்கொண்டு வந்து

சேரப் பள்ளிக்கூடங்களிலே பிள்ளைகள் படிப்பு ஓயப், பூமிக்குக் கறுப்புப் போர்வை தரித்தாற்போல இருள்வந்து கவிய, மன்மதன் பாணங்களை யெங்கும் பிரயோகிக்கச் சந்திரனாகிய முகத்திலே களங்க மான திலகம் விளங்க, இருளாகிய கூந்தலுடனே நக்ஷத்திரங்களா கிய முத்துமாலைக ளணிந்தகொண்டு பார்வதிதேவியார் தமது நாயக ரைத் தேடிக்கொண்டு கூடவந்ததுபோல, மாலைக்காலம் வந்து கூட, அந்தவேளையில் விறகாளான சோமசுந்தரக்கடவுள் சுமந்து வந்த விறகு சுமையை ஒருபுறத்திலே இறக்கிச் சார்த்தி யூன்றிவிட்டு, அந்த ஏமநாதன் வீட்டு வெளித் திண்ணையின்மேலிருந்து இளைப்பாறின பின்பு, தகுந்த இன்னிசையைக் கொஞ்சம் உச்சமாகக்கொண்டு பாடினார்.

அப்போது அந்த ராகத்தைக்கேட்டு, ஏமநாதன் இப்படிப் பாடு கிறவன், யாரென்று வெளியே வந்து விறகாளைப் பார்த்து, நீ யாரென்று கேட்க, அதற்கு விறகாளாகிய கடவுள், நான் இந்த மதுரையில் வீணைப்பாடகராகிய பாணபத்திரரடிமை யென்றார். பின் னும் பாணபத்திரரிடத்தில் கற்பவர்கள் அநேகருண்டு. அப்படிக் கற்றவர்களிலே நானுமொருவன்; என்னை இசைத் தலைவரான பாண பத்திரர், நீ மிகவுங் கிழவன், பாடத்தக்கவ னல்லன்; இனிப்பாட யோக்கியனல்லையென்று தள்ளிவிட்டார். நானோ, வேறே சீவனங் கிடையாது விறகுவெட்டிக் கட்டித் தூக்கிக்கொண்டு வந்து, விற்று வயிறு வளர்க்கிறேனென்று சொல்ல, இசைநூல் வல்லவனாகிய ஏமநாதன், கடவுளாகிய விறகாளைப் பார்த்து, விறகு விற்கிற வனே! நீ முன்னே பாடின இராகத்தை இன்னுமொரு முறை பாடென்று சொல்ல, விறகாளான கடவுள் குண்டுபள்ளம் நீர்வற்றி னாற்போல வாயகன்ற சுரைப்பைத் தரையுடைய வீணாதண்டத்தை இடத்தோளிலே சார்த்தித் தெரித்துப் பார்த்து, முறுக்காணிகளை முறுக்கிப் பற்றின முறுக்காணிகளினின்று படர்ந்து செல்லவிட்டுத் தேன்றாரைப்போல இறுக்கிச் சுருதிகூட்டி, வேகத்துடனே மெட்டுகள் தோறும் விரல்கள் நடந்து சென்றுவர, இசைகள் ஏழினிடத்தும் பல வேறாக இன்னிசையாய் விளங்குகின்ற சாதாரிராகத்தின் ஆலாபனை யுடனே நீண்டு செல்லுதலு முடுகியலாகிய அராகமும், நரம்பாகிய தந்தியும், கண்டமும், ஒரு குரலாக நன்கொலிக்க, வயிறு குழியவாங் கல் - அழுமுகங்காட்டல் - புருவமேறல் - தலைநடுங்கல் - கண்ணாடல் - மிடறு வீங்கல், பையைப்போலே வாயைத் திறத்தல், பல்லைக்காட்டல் ஆகிய உடற்குற்றங்க ளில்லாமல் வெள்ளை - காகுளி-கீழோசை-வெடி குரல் குழறுநாசி ஆகிய இசைக்குற்றங்களை நீக்கி, ஒரிடத்திலே நின்று இரட்டித்துச் சொல்லுதல், அளவுகடந்து மிக நீண்டொலித்தல், இளைத்து நெடுமூச்சுவிடுத் துடித்தல் என்கிற பாடற்றொழிற் குற்றங் கள் முதலியவெல்லாம் விட்டு, எழுதின சித்திரம்போலிருந்து இழு மெனு மருவியோசை, மத்தளவோசை, வெண்கலத்தொனி, சங்க

நாதம், வண்டின் குரலாகிய இசைக்குணங்களும், 'மூங்கிலினின்றும் உதிருமிலைபோலவும், மீன்கொத்திக் குருவி மீன்மேல் விழுதலைப் போலவும். பாடுதலின் குணங்களும், வந்திரம்-மத்திமம்-தாரம்-துள்ளல்-தூங்கல்-மெலிதல்-மிகுதல் ஆகிய நாதகீதங்கள் தப்பாமல் கேட்டவர்களெல்லாம் இதென்ன புதுமை யென்னப் பாடியருளினார் விறகாளாகிய கடவுள், எப்படி யென்றால்,

கலி விருத்தம்

விரைசார் மலரோ னறியா விகிர்தன்
அரசாய் மதுரை யமர்ந்தா னென்னே
அரசாய் மதுரை யமர்ந்தா னவனென்
புரைசார் மனனும் புகுந்தா னென்னே.

பாட்ன் மறையும் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டா னென்னே
கூடல் போலக் கொடியே னகமும்
ஆட் லரங்கா வமர்ந்தா னென்னே.

நீல வண்ணன் றேரு நிமலன்
ஆல வாயி லமர்ந்தா னென்னே
ஆல வாயா னலரில் வாசம்
போலென் னுளமும் புகுந்தா னென்னே.

என்று இப்படிப் பாணபத்திரரைக் காக்கும்பொருட்டுப் பருந்துடனே நிழல் போகுதல்போல, வீணை நரம்புடனே சேரப் பாடின இன்னிசைத் தேனானது. ஆகாயவாசிகளுடைய செவிகளாகிய வாய்க்கால் வழியேயோடி மயிர்த்துவாரங்களிலே வழியத்தேங்கி அவர்களுடைய அமுதமயமான வுடல்களை இன்னிசை மயமாகச் செய்தது.' பின்னும் மரங்களெல்லாம் அசையாது நின்றன, கடல்கள் ஒலியாதிருந்தன, நீண்ட மலையருவிகளும் நதிகளும் புரண்டும் துள்ளாமனின்றன. இப்படிக் கருணைக்கடலான விறகாள் பாடின சாதாரியான இன்னிசைத் தேனைப் பருகிச் சித்திர மெழுதவல்லவன் எழுதிவைத்த சித்திரங்கள் போலச் சராசரங்களெல்லா மசையாதிருக்க, விஞ்சையர்களிலே சிலர் வீணையைக் கைநழுவவிட்டுச் சோர்ந்தார்கள். சிலர் விரல்நடாத்துகின்ற வீணை நரம்பினொலியும் கண்டத்தொனியும் வேறாகி வேர்த்தார்கள். சிலர் நாணிச் சந்தோஷம் அதிகமாய் நாக்குழறத் தங்கள் நாயகிகள் மேலே மயங்கி விழுந்தார்கள். பின்னும் இந்த விறகாளான சோமசுந்தரக் கடவுளின் பாடல்கேட்டுப் பிரமன் கடவுளின் பாதத்தியானமானார், விஷ்ணு ஆனந்தக்கடலில் முழுகினார். இந்திரன் எனக்கு ஆயிரங்கண்களும் ஆயிரங்காதுகளாக வில்லையே யென்றான். தபோதனர்களும் முத்தர்களும் சித்தர்களும் கடவுளாகிய கடலில் தங்களன்பாகிய ஆறுகளுடனேகூடி ஆனந்தக்கண்ணீர் வெள்ளம்பாயப் பேரின்பக்கடலிலே முழுகினார்கள். இன்னும் நாயக

ருடனே கூடின பெண்களெல்லாம் கூடிக் கலவிக் கடலிலே முழுகினார்கள். நாயகரைப் பிரிந்த பெண்களெல்லாம் நாயகர்மேல் மனஞ்செல்ல மன்மத பாணத்தினாலே வருந்தி மயங்கினார்கள். பாம்புகள்-மயில்கள்-யானைகள்-சிங்கங்கள் - மான்கள் - புலிகள் எல்லா மயங்கித் தங்கள் தங்கள் பகை தெரியாமல் இந்த இன்னிசை வலைக்கு ளகப்பட்டுச் சேர்ந்தன. பூமிவெடித்து வெம்மையேறக் கிளைகள் கரிந்த மரங்களுக்குக் காதறிவுண்டாகி நல்லோர்கள்போல எங்குந் தளர்ந்து முக மலர்ந்தன. தேவர் - மனிதர் - விலங்கு - புள் முதலானவைகளெல்லாம் அந்தக் கரணங்களடக்கக் கடவுள் பாடின இன்னிசை மயமாயின. இப்படிக் கடவுள் பாடின முல்லைப்பண்பாகிய சாதாரிராகம் சராசர வுயிர்களையும் உலகையும் எட்டுத்திக்கையும் விழுங்கித் தன்மயமாக்கி, ஏமநாத னுடம்பையு முயிரையும் உருகச்செய்தது. அப்போது ஏமநாதன் பரவசனாயிருக்க, பாடின விறகாள் தம்முடைய விறகு சுமையுடனே மறைந்தருளினார்.

அவர் போனபின்பு ஏமநாதன் இந்தச் சாதாரிராகம் இதுவரையிலும் நான் தெரிந்தேனன்று. தெரிந்தேனென்று ஒருவர் சொல்லவுங் கேட்டிலேன். ஆனால், இது தேவராகம் இந்தத் தேவராகத்தை இவனுக்குச் சொல்லிக் கொடுத்தவர்கள் கடவுளே யன்றி மனிதர்களிலே தெரிந்தவர்களாரென்று மிகவும் அதிசயித்துப் பாணபத்திரரால் தள்ளிவிடப்பட்ட இந்தக் கிழவன் பாடலே இப்படியானால், இது கற்றுக் கொடுத்த பாணபத்திரன் பாடலெப்படி யிருக்குமோவென்று மதித்துப் பயந்து தன்னுடைய சமையலாட்கள் முதலான கூட்டங்களெல்லாம் நடுநடுங்கித் தொடர அன்றிராத்திரியே பிரயாணமாய்ப் பலவிதமான சோமன் உடுப்புப் பெட்டிகளும், ஆபரணப் பெட்டிகளும், மடக்குப் பெட்டிகளும், அங்கங்கே கிடக்க வெட்கமும் பயமும் மிஞ்சி வீணையை வைத்தவிடத்திலேயே விட்டுவிட்டு வடதிசையைக் குறித் தோடிப்போனான். அவன் போகும்போது பல்லக்கு ஒருவழி, பாடகிக ளொருபுறம், குடை யொருபுறம், கற்பவர்களொருபுறம், வேலையாட்களொருவழி, நாணழிந்துப் பாடற் கீழ்மக்கள் ஒருவழி, தானும் ஒருவழியாகப் பயந்து போனார்கள். அன்றிராத்திரியே விடைமேலழகரான சோமசுந்தரக்கடவுள் பாணபத்திரர் கனவிலே யெழுந்தருளி, ஓ பத்திரனே! உனக்கு எதிரியாய் வந்த ஏமநாதனிடத்திலே இன்று சாயங்காலம் விறகு தலையாளராய்ச் சென்று நான் பத்திரனடிமையென்று சொல்லிப், பாடி அவனை வென்று துரத்தினேன். இதுதானே நீ என்னை வேண்டிக் கேட்டுக்கொண்ட தென்று மறைய, பாணபத்திரன் விழித்தெழுந்து மனத்தாலும் நினைக்கக் கூடாத சொல்லைக் கேட்டு மிகவும் பயந்து, இப்படிச் சொல்லுதற்கோ நான் கடவுளை வேண்டினதென்று சூரியோதயமாகு முன்னே திருக்கோயிலுக்குப் போய்ச் சோமசுந்தரக் கடவுள் சந்நிதியில் வணங்கி நின்று எம்பெருமானே தேவரீர்,

கலிநிலைத்துறை

கடிய கானகம் புகுதவோ கட்டிய விறகை
முடியி லேற்றவோ முண்டகத் தாள்களுேந் திடவந்
தடிய னேன்பொருட் ட்டாதசொற் பகரவோ வஞ்சக்
கொடிய னேன்குறை யிரந்தவா விளைந்ததே குற்றம்.

நெடிய னேமுதல் வானவர் நெஞ்சமுஞ் சுருதி
முடிய னேகமுங் கடந்தநின் முண்டகப் பாதஞ்
செடிய னேன்பொருட் டாகவிச் சேணிலந் தோய்ந்த
அடிய னேற்கெளி தாயதோ வையநின் பெருமை.

நாத வந்தமுங் கடந்தமெய்ஞ் ஞானவா னந்த
போத மென்பரஃ தின்றொரு புடவிமா னுடமாய்
ஆத பந்தெறத் தறிந்தவிந் தனஞ்சுமந் தடியேன்
பேதை யன்பள வாயதோ பெருமரின் னுருவம்

மறிந்த தெண்டிரை கிடந்தவ னுந்தியில் வந்தோன்
அறிந்த தன்றரும் பொருள் வரம் பகன்றெழு விசும்புஞ்
செறிந்த வண்டமுங் கடந்தது சிறியனேன் பொருட்டாத்
தறிந்த விந்தனஞ் சுமந்ததோ தம்பிரான் முடியே.

என்று, பத்திரன் மீனுக்ஷிசுந்தரேசரைத் துதித்து வலஞ் செய்து தொழுது, மீண்டு வரகுணபாண்டியன் அரசாட்சிமண்டபம் வந்து அரசனை வணங்கி நிற்கப் பாண்டியன் சேவகரை யழைத்து வடக்கே யிருந்து வந்த பாடகனை இங்கே அழையுங்களென்ன, சேவகர் அவனிருக்குமிடம் போய் அவன் பயந்தோடிப்போன சங்கதி தெரியாமல் அங்கெல்லாந் தேடிக்காணுமலுழல; அயல்வீட்டுக்காரர் தங்களுக்குத் தெரிந்ததைச் சேவகரோடு சொன்னதாவது: ஐயா! சேவகர்களே! அந்தப் பாடகன் நேற்று இங்கே யிருந்தான், ஒரு விறகு தலையன் பத்திரனடிமை யென்று சாயங்காலம் வந்து பாடினுன். அவ்வளவு தான் எங்களுக்குத் தெரியும். பின்பு பாதிராத்திரியில் பிரயாணமாய்ப் போய்விட்டானென்று சொல்லக்கேட்டுச் சேவகர் விரைந்து சென்று பாண்டியனை வணங்கி அயல்வீட்டார் சொன்னபடியே சொல்ல, சபை யாரெல்லாம் அதிசயித்துக் கூத்தாடினுர்கள். அப்போது வரகுண பாண்டியன் அனுமானங்கொண்டு தன்னைச் சேர்ந்த பாணபத்திரரைப் பார்த்து அந்தப் பாடகன் என்ன காரணத்தினுலே ராத்திரியே பிரயாணமானுன். நீ நேற்று என்னிடத்திலிருந்து போன பின்பு என்ன செய்தீரென்று கேட்க, பத்திரர் வரகுணபாண்டியனை வணங்கி, ஐயா! நேற்று இங்கிருந்து நான் போய்ச் சோமசுந்தரக்கடவுளை வணங்கி என் குறைகளைச் சொல்லிக்கொண்டு பின்பு என் வீட்டிற் போயிருந்தேன்; இராத்திரி என் கனவிலே கடவுள் வந்து, பத்திரா உனக்காக விறகு தலையனுய்ச் சென்று உன்னெதிரி முன்னே சாதாரி ராகம் பாடி அவனை வென்று துரத்தினேமென்றுர். நான் உடனே விழித்தேன்; இதுதான் நடந்ததென்று சொன்னுர். அப்போது

சேவகர்போய் விசாரித்து வந்து சொன்னதும், பத்திரர் கனுவின் செய்தியும் ஒத்திருந்ததினுலே இது கடவுள் திருவிளையாடலி லொன்றென்று பாண்டியன் தெரிந்து பத்திரர் அன்பையுங் கடவுள் அருளையும் வியந்து கொண்டாடி மதுரேசரைப்போய் வணங்கிப் பாணபத்திரரை யானைமேலேற்றி மதுரைவலஞ் செய்வித்து அநேக வெகுமானஞ் செய்து பாணபத்திரரைப் பார்த்துப் பிரமன் முதலாகிய எல்லாரையும் ஏவல்கொண்ட கடவுளே உமக்கு விறகாளாய் வந்து ஏவல்செய்து உம் குறையைத் தீர்ப்பாராகுல், எல்லாரும் உமக்கு ஏவலாளிக ளல்லவா? ஆதலால் இனி நானும் ஏவலாளியே; பிசகில்லை. இனி நீர் இன்று முதல் வேதநாதனையே பாடத் தக்கதென்று உபசரித்தனுப்பினுன். பத்திரர் தமக்குப் பாண்டியன் கொடுத்தன வெல்லாம் தம்மையடுத்த வித்வான்களுக்கும் கற்றுச் சொல்லிகளுக்கும் பங்கிட்டுக் கொடுத்துத் தன்னுடைய பாடகர்களுடனே வீட்டுக்கு வந்து அளவில்லாத மகிழ்ச்சி கொண்டிருந்தார்.

விறகு விற்ற படலம் முற்றிற்று.

---

நாற்பத்திரண்டாவது

## திருமுகங் கொடுத்த படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

முன்னவன் மதுரை மூதூர் முழுமுத லிசைவ லானை
இன்னிசை பாடிவென்ற தென்னுரை செய்கே னந்தத்
தென்னவன் சேரன் மாடே திருமுகங் கொடுத்துப் பாணர்
மன்னவன் றனக்குச் செம்பொன் வழங்கிய வழக்கஞ் சொல்வாம்.

உரை: முழுமுதற்கடவுளும் மதுராபுரித் தலைவருமாகிய சோமசுந்தரக்கடவுள், இசையிலே வல்லவனுகிய ஏமநாதனை அவனஞ்சியோடும்படி, இசைபாடிவென்ற திருவிளையாடலை நான் என்னவென்றெடுத்துச் சொல்லுவேன். இனி அந்தச் சோமசுந்தரக்கடவுள், பாணபத்திரருக்காகச் சேரர் பெருமானிடத்தில் திருமுகமனுப்பி அளவில்லாத பொற்குவைகளை வாங்கிக் கொடுத்த திருவிளையாடலைச் சொல்லுகின்ருேம்.

பின்பு பாணபத்திரர் பாண்டியன் சொன்னதே சரியென்று, அன்றுமுதல் பாண்டியனிடத்தில் பாடுந்தொழிலைவிட்டு கடவுள் திருக்கோயிலுக்குப் போய் மூன்றுகாலமும் தினந்தோறும் சந்நிதி முன்னே நின்று பாடுவதே நியமமாகக்கொண்டு பாடி வருகிறநாளில், கடவுள் திருக்கோயிலுக்குப் போய்ப் பாடுவதேயன்றி, வேறே தொழிலில்லாமையினுலே பத்திரர் அதிக வறுமையினுலே வருந்த, அவர் அப்படி வருந்துவதைச் சோமசுந்தரக்கடவுள் தரிக்காமல், பாண்டியனுடைய

பொக்கிஷத்திலுள்ள திரவியங்களைக் கொண்டு வந்து, தம்முன்னே நின்று பாடுகிற பாணபத்திரர் கண்ணுக்கு முன்னே சிலநாள் வைத்துக்கொண்டு வந்தார். சிலநாள் பொன் பூவராகன் வைத்தார். சிலநாள் ரத்தினுபரணங்கள் வைத்து வந்தார். சிலநாள் பொன்னுடைகள் வைத்தார். சிலநாள் சாமரைக்காப்புத் தகட்டுப் பொன்னை வைத்தார். சிலநாள் சிங்காசனப் பொற்றகடுகளைக் கொண்டுவந்து வைத்தார். சிலநாள் இரத்தினவகைகளைக் கொண்டுவந்து வைத்தார். இப்படி ஒருவருக்குந்தெரியாமல் கடவுள் கொடுத்துவந்த பொருள்களெல்லாம் பத்திரர் நெருப்பிலிட்டு உருக்கி அழித்துடைத்துத் தம்மைச் சேர்ந்தவர்களுக்கும், யாசகர்களுக்கும், தம்மை பார்த்திருக்கு மவர்களுக்கும், பிறருக்கும் மாருமல் கொடுத்து அவர்கள் துன்பமும் தன் வறுமையுந் தீர்ந்துகொண்டு வந்தார். இப்படிப் பாணபத்திரருக்குத் தினம் தினங் கொடுத்துவந்த சோமசுந்தரக்கடவுள் பின்பு சிலநாள் கொடாதிருந்தார். அக்காலம் பாணபத்திரர் திருக்கோயிலுக்குப் போய்க் கடவுளை வணங்கி, ஒன்றும்பெருமல் சும்மாவந்து பெருந்துன்பத்திலழுந்தி, வேறே பிழைக்கும்வகை கிடையாமல் மிகவும் இளைத்து வாடித் தரித்திரம் பொறுக்கமாட்டாமல் நித்திரை செய்தார். அப்படி அவன் துயிலும்போது கடவுள் கனவில் ஒரு சித்தவடிவு கொண்டு வந்து நின்று, அப்பா பத்திரா ! உனக்காக யாம் பாண்டின் பொன்னறைக் குள்ளிருந்த பொருள்களைப் பெறுநுளம்பு உண்டகனிபோல் கொண்டு வந்து கொடுத்தோம். இனி அப்படிக் கொடுத்தால் எம்மிடத்தில் மிகுந்த அன்புள்ளவனை பாண்டியன் தெரிந்தால் இவ்வளவு கட்டுக் காவலிருக்கிற பொருள்களைக் களவு செய்தது கடவுளே என்று மனம் வேறுபட்டு, பொக்கிஷம் காக்கிற காவலாளிகளைத் தண்டித்தாலும் தண்டிப்பான். ஆதலால் இனி உன்போல் எம்மிடத்தில் அன்புள்ளவனை சேரமானுக்கு ஒரு திருமுகம் எழுதிக் கொடுக்கிறோம். நீ அந்தத் திருமுகத்துடனேபோய் சேரமானைக் கண்டு வாவென்று சொல்லி,

திருச்சிற்றம்பலம்

மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை
யன்னம் பயில்மொழி லால வாயின்
மன்னிய சிவன்யா மொழிதரு மாற்றம்,

பருவக் கொண்மூஉப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைகீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க.

பண்பால் யாழ்வல்ல பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே:

எனத் திருமுகப் பாசுரத்தை எழுதிப், பாணபத்திரர்கையிற் கொடுத்துச் சித்தராகவந்தவர் மறைந்தருளினர். உடனே பத்திரர் நித்திரை தெளிந்து விழித்தெழுந்து, ஆடிப்பாடி ஆனந்தக்கடலிலே முழுகித், தாம் பெற்ற திருமுகத்தைப் பட்டுவஸ்திரத்தில் முடிந்துகொண்டு, சோமசுந்தரக்கடவுள் பாதங்களை வணங்கித் திருக்கோயிலை வலஞ் செய்து, பத்திரர் விரைவிலே மேற்றிசையைக் குறித்து வழி பிடித்துக் கொல்லைகளும், குறிஞ்சி நிலங்களும், பாலைவனங்களும் கடந்து சென்று, பலாச்சுளைகள் பழங்களுடனே காலிலே தடுக்க, மிகுந்த வளப்பம் பொருந்திய மலைநாட்டுக்குப் போய் கடலாகிய உடையாடையும், மலைகளாகிய முலைகளோடும் விளங்குகின்ற மலைநாடென்கிற பெண்முகத்திலிட்ட திலகமும்போன்ற திருவஞ்சைக்களமானது அறப் பெருஞ் செல்வமும், ஐஸ்வரியமும், வீரமும் வடமொழி தென்மொழிகளும் சிறந்து விளங்குகின்றதைக் கண்டு, பத்திரர் அந்தப் பட்டணத்தில் ஒரு புறத்திலே ஒரு தண்ணீர்ப்பந்தலில் வந்திருந்தார். இப்பால் அந்தத் திருவஞ்சைக்களத்தை யாளுகிற சேரமான் கனவிலே அன்றிராத்திரி சோமசுந்தரக் கடவுள் ஒரு சித்தராய் எழுந்தருளி ஓ சேரமான் பெருமானே ! யாம் மதுரையிலிருக்குஞ் சித்தர், எம்முடைய திருமுகங்கொண்டு பாணபத்திர னென்பவன், திரவியங்கள் வேண்டி உன்னைக்காண இங்கே வந்திருக்கிறன். அவனுக்கு வேண்டிய பொருள்களெல்லாங் கொடுத்து, அவனைச் சீக்கிரம் நம்முடைய மதுரைக்கு வந்து சேரும்படி செய்வாயாக வென்று சொல்லி மறைந்தருளினர். உடனே சேரமான் பெருமான் விழித்தெழுந்து விடிந்த பின்பு தன் மந்திரி பிரதானிகளுக்குத் தெரியச்சொல்லி, இப்போது மீனுட்சி சுந்தரேசருடைய திருமுகங் கொண்டுவந்த பத்திரர் எங்கேயிருக்கிறர் ; தேடி அழைத்து வாருங்களென்று ஏவல்வீரரை யனுப்ப, அந்த ஏவல்வீரர், வீதி திண்ணை முடுக்கு சாவடி சத்திரங்களெல்லாம் போய்த் தேடித் தண்ணீர்ப்பந்தலிலிருக்கிற பத்திரரைக் கண்டு தெரிந்து விரைவிலே சென்று; சேரமான் பெருமானுக்குத் தெரியப் படுத்தினர்கள். உடனே சேரமான் சேனைகளுடனே எதிர்கொண்டு போய்ப் பத்திரரைக் கண்டு, கைகளைத் தலைமேற் குவித்துக்கொண்டு, துதிகள்பாடிக் கூத்தாடி, நிலத்திலே விழுந்து. தேனைக்கண்ட வண்டு போல் மகிழ்ந்து, திருமுகத்தை வாங்கிக் கண்களிலே பொற்றி, முடிமேல் மலர்மாலையாகச் சூட்டிக்கொண்டு, ஆனந்தக்கண்ணீர் துளும்ப, உடம்பு பூரித்து, திருமுகத்தைப் பிரித்து வாசித்தனர்.

“ மின்னலைப்போல் விளங்குகின்ற செம்பொன்னினுலும் ரத்தினங்களினுலும் அமைந்த உப்பரிகைகள் நிறைந்த மதுரையிலிருக்கும் சிவனுகிய யாம் எழுதிவிடுக்கும் திருமுகத்தை, பருவ காலத்து மேகம் போல் புலவர்களுக்குக் கைம்மாறு கருதாது கொடுக்கிற சேர நரபாலன் காணக்கடவது; தன்னைப்போல் நமதிடத் தன்பனுகிய இன்னிசை யாழ்ப்பத்திரன் தன்னிடத்திற்கு வருகிறதினலே, அவன் விரும்பிய வண்ணம் மிகுந்த திரவியங்களைக் கொடுத்து அனுப்பக்கடவை ”

என்று, பாண்டியர் குலதெய்வமான சோமசுந்தரக் கடவுளனுப்பின திருமுகத்தின் செய்தியைப் பார்த்துச் சேரமான் பெருமான் தனது மகிழ்வுக்கு முடிவு தெரியாதவராய், அந்தத் திருமுகத்தைப் பொற் றட்டின்மேல் வைத்து, அதை மதயானைத் தலைமேலேற்றிப், பாண பத்திரரை முன்னே வைத்துத் தான் பின்னே யிருந்து, சாமரம் பணி மாறிப், பல வாத்தியங்களு முழங்கப், பட்டணத்தை வலஞ்செய்வித்து, மங்கலப்பெண்கள் மங்களதீபங் கொண்டு எதிரேவரத் தமதரண் மனைக்குக் கொண்டுவந்து திருமஞ்சனஞ் செய்து, பஞ்சவர்ணங்களால் சித்திரஞ் செய்தமைத்த மணி மண்டபத்திலே பாணபத்திரரை எழுந் தருளப் பண்ணிப் பொன்னாசனத்தி லிருக்கச்செய்து, அருச்சித்து அறுசுவைப் போஜனங்களு முண்ணச்செய்து சந்தன களப கஸ்தூரி பனிநீர் புஷ்ப தாம்பூலாதிகள் கொடுத்துப் பின்பு, கடவுள் அனுப்பி விடுகவென்று எழுதி யிருந்தலினாலே பத்திரரை யழைத்துக்கொண்டு போய்ச் செம்பொன்னறையைத் திறந்து காட்டி, ஐயா பத்திரரே! இந்தப் பொருள்களெல்லாம் உம்முடையதே; ஒப்புக்கொள்ளு மென்ன, அதற்குப் பத்திரர் சேரமானை வணங்கி ஐயா! நீரே கடவுளருளுக்கும் பாத்திரமானவராதலால், நீர் கொடுத்ததே எனக் குப் போதுமென்ன, சேரமான் பெருமான் தான் நினைத்தபடியே கொடுக்கக் கொடுக்கப் போதும் போதுமென்று வறுமை தீரப்பெற்ற பத்திரர், பல்லக்கு - யானை - குதிரை - பொன்னுடைகள்-பொன்னாபர ணங்கள் முதலான அநேகந் திரவியங்கள் கொடுக்கப் பெற்றுச் சேரமான் பெருமான் ஏழடி பின்தொடர்ந்து வழிவிட்டு நிற்க, பத்திரர் மீண்டும் மதுரைக்கு வந்து, முத்தமிழ் மதுரேசரைக் கண்டு தொழுது, பாண்டியனது மதுரையிலுள்ளவர்க ளெல்லாருந் தெரிய எல்லாருக்கும், வேதியர்களுக்கும், புலவருக்கும், இசைப்பாணருக்கும் முறைப்படி கொடுத்துப் பாணரில் தர்ம தேவதையைப்போல் வாழ்ந் திருந்தார்.

திருமுகங் கொடுத்த படலம் முற்றிற்று.

---

நாற்பத்துமூன்றுவது

## பலகையிட்ட படலம்

---

கொச்சகக்கலிப்பா

கருந்துழாய் முகிலொருபாற் கலந்தவர்பத் திரற்குநிதி
திருந்துதா குநயவிடைத் திருமுகமீந் தளித்ததிது
வருந்தியா ழவனிசைப்ப மழைதூங்கு நள்ளிரவில்
இருந்துபா டேனப்பலகை யிட்டதூஉ மினிப்பகர்வாம்.

உரை: துளபமாலையைத்தரித்த கரிய மேகம்போன்ற விஷ்ணு வைத் தமது திருமேனியில் பாதியாகவுடைய சோமசுந்தரக்கடவுள்

சேரர்கோனிடந் திருமுகமனுப்பி அவரிடத்தில் அளவில்லாத பொருள் களை வாங்கிப் பாணபத்திரருக்குக் கொடுத்தருளிய திருவிளையாட லிதுவாகும். இனி அந்தப் பாணபத்திரர் மழையிலே நனைந்தபடியே இராக்காலத்தில் இசைபாடிக்கொண்டு சிவத்தியானத்தி லிருக்கை யில், அவருக்கு இதன்மேலிருந்து பாடக்கடவாயென்று பொற்பலகை யிட்ட திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

பின்பு பத்திரர் தன்னை யுகந்தடிமைகொண்ட சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயிலுக்குப் போய் மூன்றுகாலமும் வணங்கி வரு நாளிலே, திருமுகங்கொடுத்துப் பொருளருளிய பின்பு, அர்த்தஜாமத் திலுஞ் சென்று விடையின்பின்னே நின்று, ஏழிசைகளையும் பாடிக் கடவுள் அடியார்களும், தேவர்களும் வணங்க, முத்துப்பல்லக்கின்மே லேறிக்கொண்டு தேவி பள்ளியறைக் கெழுந்தருளும்போது சேவித்து வருவர். இப்படி தினந்தோறும் நியமந்தப்பாமல் நடந்துவருகிற நாட்களிலே. இந்தப் பத்திரர் என்ன விக்கினங்கள் வந்தாலும் தாம் கொண்ட நியமம் விடாதவரென்பதை எல்லாருக்குந் தெரிவிக்கக் கடவுள் திருவிளையாட்டாக ஒருநாள் பள்ளியறை தரிசனஞ் சேவிக்கப் போகும்போது, மேகங்கள் குமுறித் திக்குகள் தெரியாமல் ஆகாய மெங்கு நிறைந்து, முன்பு வருணன் விட்ட மழையைப்போல மின்னிப் பாம்புகள் பயந்தொடுங்க இடித்து, நக்ஷத்திரங்களும் தெரியாம லிருண்டு, ஆகாயமானது கருங்கடலை அடியோடே வாரிக்கவிழ்த்தாற் போலவும், இரும்புக்கம்பிகளை எங்கும் ஊன்றிநிறைற்போலவும், அஞ் ஞானிகள் மனம்போலவும், கீழ்மேலென்றுந் தெரியாதபடி மழை பொழிய, அந்த மழையில் பத்திரர் நனைந்து, அந்த மழையை மலர் மழை பொழிவதாக நினைத்து, அந்தக் கடவுள் கிருபையாகிய மழை யிலே மூழ்கித் தேன்மழை பொழிவது போல நந்தியின் பின்னே நின்று, வீணையை யிடது தோளிலே சார்த்திச் சுருதிகூட்டி ஆலா பனம் பண்ணிச், சோமசுந்தரக்கடவுள் செவிவழியேபோய் அருட் பயிர் தலை யெடுக்கத் தாம்தொடுத்த தமிழி னிசையமுதம் மடை திறந்து நரம்ப நனைந்து ஓசைமழுங்கவும், உடல் குளிர்ந்து நடுங்கவும், கைவிரல்கள் மிறைத்திழுக்கவும், மயிர் சிலிர்க்கவும், கால்கள் சேற்றி லழுந்தவும் நின்று அன்புமிகுந்து என்பையும் உருக்கத்தக்க அமுத விசை பாடுகின்றார். எப்படியென்றால்,

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மாதர் நகையாய் மதுரேச ருன்பலிக்கெம் மனைவாய் வந்து
காதன் முகத்தரும்பிக் காட்டியென் சிந்தை கவர்ந்தாற் போலுங்
காதன் முகத்தரும்பக் கையறவு நீரக் கலப்பேன் பாதி
பேதையரு வாயிருந்தார் மாணிவிழித் தாவி பிழைத்தேன் போலும்.

ஒன்னுதலாய் வெண்டலைகொண் டுண்பலிக்கு நம்மனையி னூடேகூடக்
கன்னுதலா ருள்ளளக் காணமிசைத் தென்னுள்ளங் கவர்ந்தாற் போலு
கன்னுதலாற் பாடு வலிதயங்கண் டாகங் கலப்பேன் பாதி [ம்
பொன்னுருவ மாயிருந்தார் வெள்கிவிழித் தாவிபெற்றேன் போலும்;

ஐயரியுண் கண்ணுய் திருவால வாயுடையா ரையனீ கொள்வான்
மையனகை செய்தென் வனமுலையின் மேற்செங்கை வைத்தார் போலும்
மையனகை செய்தென் வனமுலைமேற் கைவைப்ப மாழ்கிச் சோர்வேன்
தையலிடங் கண்டு நடுநடுங்கி விழித்தாவி தரித்தேன் போலும்.

என்றிப்படித் தும்புருநாரதருக்கு வெகுமானமாகக் கொடுத்த சங்கக் குழையயணிந்த திருச்செவிகளிலே பத்திரர் இன்னிசைத் தேனை ஊற்றுகின்ற அடிமைத்தன்மையை கடவுள் கண்டருளி, இதன்மே னின்று பாடடென்று ஆகாயவாக்காகச் சொல்லி ஒரு பலகை பத்திரர் முன்னே காணவிட்டார். அப்படிக் கடவுளிட்ட பொற்பலகையின் மேல் பெருமானுடைய அருளாணைக்குப் பயந்தேறி மதுரகீதம் பாடிக் கடவுள் திருவடிகளைத் தியானித்துப் பலகையையு மெடுத்துக்கொண்டு பத்திரர் தம் வீட்டுக்குப் போகும்போது, மழைவிட்டு நக்ஷத்திரங்கள் விளங்க, வீடுவந்து சேர்ந்தனர். இப்பால் வரகுணபாண்டியன் பொழுது விடிந்தபின், தங்கள் குலதெய்வமான கடவுள், பாணபத்திர ருக்கு நின்று பாடப் பலகையருளின சிறப்புக் கேட்டுப் பாணபத் திரரை யழைத்துவந்து அந்தப் பலகையின்மே லிருக்கச்செய்து இந்தப் பத்திரரே மதுரேசரென்று நினைத்து ரத்னுபரணங்கள், விளை நிலங்கள் முதலான பல சிறப்புகளும் போதும் போதுமென்னக் கொடுத்துப் பத்திரருக்கு முன்போலவே பல சன்மானங்களும் நடத்திக்கொண்டுவந்தான். இப்படிப் பாண்டியனுலே வரிசைபெற்ற பத்திரர், கடவுள் திருக்கோயிலுக்கு நான்கு காலமும் போய்ப் பாடுந் தொழிலைவிடாமல் நடத்திக்கொண்டு வருகிறநாளில், வரகுணபாண்டி யனும் வேதத்தின் முதற்பொருளாகிய சோமசுந்தரக் கடவுளின் சந்நி தானத்தில் வந்து சேவித்துத் துதிக்கும் நியமம் வழுவாமல் சிலநாள் கழிந்தபின்பு, கடவுளினது சாரூப்பியம் பெற்றுச் சிவபுரமடைந்தான்.

பலகையிட்ட படலம் முற்றிற்று.

---

நாற்பத்து நான்காவது

# இசைவாது வென்ற படலம்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

கூட லம்பதியி லாடகமேருக் கொடிய விற்குரிசி லடியவ னுக்குப்
பாட லின்பரிசி லாகிய செம்பொற் பலகை யிட்டபடி பாடின மன்முன்
வீடரும் பொருவில் கற்புடை யாளோர் விறலி யைப்பரம னிறையருள் பத்தி
மாட கஞ்செறியும் யாழ்வழி பாடி வாதுவென் றவர லாறு மிசைப்பாம்.

உரை: நான்மாடக் கூடலென்னும் மதுரையின்கண் பொன் மலையை வில்லாகக் கொண்டருளிய சோமசுந்தரக் கடவுள் அடியவ ராகிய பாணபத்திரர், தம்மைப்பாடிய பாட்டின் பரிசாகப் பொற் பலகையிட்டருளிய திருவிளையாடலைச் சொன்னேம். இனி, கெடுத

லில்லாத நிகரற்ற கற்பினையுடைய அந்தப் பாணபத்திரரது மனைவியார், ஓர் யாழ்ப்பாண பெண்ணைச் சோமசுந்தரக்கடவுளது பூரண கடாக்ஷத்தினால் முறுக்காணியையுடைய யாழைப்பாடி, இசைவாது வென்ற திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அப்படி வரகுணபாண்டியனுக்குப் பின் அவன் புத்திரனான ராஜ ராஜ பாண்டியன் முடிசூடி அரசாளுங் காலத்தில், அவனுக்குக் குல பத்தினிகளநேகர், காதற் பரத்தைகளநேகரில் ஒரு பரத்தை அந்தப் பாண்டியனுக்கு அமுதும் ஆவியும் போன்றவள். பின்னும், அவன் மகிழ மதுரகீதம் பாடும் வித்தையிலும் வல்லவள். அப்படிப்பட்ட அவளுக்கும் பாணபத்திரர் மனைவிக்கும் கீதம்பாடும் விஷயத்தில் பகை யுண்டாகி மிஞ்சிப் பாண்டியன் பரத்தையானவள் பத்திரர் மனைவிக் கெதிராக இன்னுமொரு பாடகியை வரவழைத்து விட்டுப் பாடி, இவளைக் கருவபங்கம் பண்ண வேண்டுமென்று நினைத்துப் பாண்டிய னுக்குத் தெரியப்படுத்த, அவன் அவள் சொல்வழி நடக்கிறவனானதை யாலே, அவ்வாறே தேடி, ஈழநாட்டில் நின்றும் ஒரு சமர்த்தியான பாடகியை வரவழைக்க, அவள் தன்னுடைய தோழிக் கூட்டங் கள் பக்கங்களிலே நெருங்க ராஜசபைக்கு வந்து, பாண்டியனைக் கண்டு வணங்கி, ஒரு புறத்திலிருந்து கின்னர மங்கைபோல வீணகானம் பண்ணி நிற்க, அவள்மேல் மனஞ்சென்ற பாண்டியன் பழி நோக்காமல், அந்த ஈழநாட்டாளைப் பார்த்து, நீ இப்போது உன்னுடன் பாட வருகிற பத்திரர் மனைவி பக்ஷமாக நாங்கள் பேசினா லும், நீ விடாமல் அவள் வெட்கும்படி ஆணையிட்டு மறித்துப் பாடி வெல்ல வேண்டுமென்று சொல்லிப் பின்பு நீ நாளைக்கு வாவென்று விடை கொடுத்தனுப்பிவிட்டுப் பத்திரர் மனைவியை வரவழைத்து, உள் ளொன்று வெளியொன்றாக, என்னோடு பாடவல்லவளு முண்டோ வென்று கருவங்கொண்டு ஒருத்தி வந்திருக்கிறாள். அவளோடு நீ பாட வல்லையோ வென்று கேட்டான். அதற்கு ஐயா, பாண்டிய மகா ராஜனே! எனது கற்பும், மதுரேசர் கருணையும், நிலைகொண்டிருக்கை யிலே வந்தவளோடு பாடி வெல்வதேயல்லாமல் நான் பயந்திருக்கிறவ ளல்லவென்று பத்திரர் மனைவி சொல்லப் பாண்டியன் அவளையும் நாளைக்கு வாவென் றனுப்பிவிட்டு, மற்றைநாள் பாண்டியன் சபை யிலே இரண்டு பாடினிகளையும் வரவழைத்துப் பாடவிட்டுப் பாடல் கேட்குமுன்னே, யாழ்ப்பாணத்திலிருந்து கப்பல்வழியாகவந்த பாடினி பத்திரர் மனைவியைப் பார்த்து இகழ்ந்து, குற்றமெத்தனை? குணமெத் தனை? வீணைக்குத் தெய்வம் யார்? முன்னே இசைப்பது எந்தவுயிர்? உயிரள வெத்தனை? மெய்யள வெத்தனை? உயிர்மெய்யள வெத்தனை? இவைகளுக்கு மறுமொழி சொல்லிப் பின்பு நீ சமர்த்தியானால் என் னோடு பாடு; இல்லாவிட்டால் நீ தோற்றவளா என்று சொன்னாள். அதற்குப் பத்திரர் மனைவி, நீயோ கப்பலிலிருந்து இறங்கிவந்த பெரு மையும், வித்தையும், வாதஞ்செய்வதில் உற்சாகமும், யானும் ஆயுப

படைத்தக்க உன் பெண்மை யழகின் செருக்கும், இந்த ராஜகுமாரன் முன்னே உன் வாயைத் திறவா விட்டால் எப்படி விளங்கும்? ஏடி பெண்ணே உன்னோடு இசைவாது வெல்ல நான் ஒப்புவேனே யல்லாது சும்மா வாய்ச்சண்டை செய்ய நான் எதிரியல்லேன். உன்னைப் போலே மானம் விற்றுண்டு பிழைக்கும் வேசிகளே வாய்ச் சண்டைக்குத் தக்கவர்களென்று பத்திரர் மனைவி மறுமொழி சொன்னாள். அப்போது பாண்டியன், அவ்விருவரையும் சண்டை விலக்குகிறவன் போலே விலக்கி, இப்போது நீங்கள் இருவரும் பாடுங்கள். தோற்றவள் வென்றவளுக்கு அடிமையாவதே சபதம் என்று ரோஷமுண்டாக்கிவிடவும், ஈழநாட்டுப் பாடினியானவள், முந்தி வீணையை இடது தோளிலே சார்த்தி அவள் குரலின்படியே கைவிரல்கள் தந்தியைத் தெறிக்கப் பெருமித நகை உள்ளேநின்று சிறிதுதோன்ற ஏழிசைப் பாடலை ராஜராஜ பாண்டியன் காதுக்கின்பமாக மழலையமுதம்போலப் பாடினாள். அதற்குப்பின் பத்திரர் மனைவி வீணையைக்கொண்டு முறுக்காணிகளை முறுக்கிச் சுருதிகூட்டி, யக்ஷக்கின்னரர்கள் நாண, விரல்கள் செல்லும்வழியே நாவில் வருகிற இன்னிசை யமுதத்தைப் பலரும் கேட்கப் பாடினள்.

அப்போது பாண்டியன் மனக்கருத்தைச் சபையார் தெரியாமல், பாணபத்திரருடைய மனைவியானவள் பாடினபாடலை மெச்சிக்கொண்டாடினார்கள். பாண்டியன் இலங்கையிலிருந்து வந்த பாடினிபாடலை மகிழ்ந்து கொண்டாடினான். அப்படியான பாண்டியன் கருத்தைத் தெரிந்து, சபையார் பாண்டியன் கொண்டாடினபடியே இலங்கைப் பாடினி பாடலைக் கொண்டாடினார்கள். “மன்னவ னெப்படி மன்னுயிரப்படி” என்கிறபடியே கொண்டாடின சபையாரைப் பார்த்துப் பாண்டியன் தனக்கு இன்பமான பரத்தை சுகபோகத்தை மகிழ்ந்து நீதிதவறி இன்று ஒருநாளிலே இவ்விருவர் பாடலையும் தெரிந்து சொல்லக்கூடுமோ? போங்களென் றனுப்பிவிட்டான். இலங்கைப் பாடினியானவள், பாண்டியன் தன்னை மெச்சினதே வெற்றியாகக்கொண்டு பெருங்களிப்படைந்து, தன்னிடத்துக்கு வந்து தூங்குமஞ்சனத்தின் மேலிருந்து இளைப்பாறிக் கொண்டிருந்தாள். இப்பால் பத்திரர் மனைவி மீனாக்ஷிசுந்தரேசர் திருவடிகளை வணங்கி, வருந்தி நின்று கண்ணீரொழுக அழுது சுவாமி! சோமசுந்தர பாண்டியனாகி நீதி செலுத்தின கடவுளே! இந்தப் பாண்டியன் பக்ஷபாதமான வழக்குச் சொல்ல, உடன்பட்டான். சபையோரும் அவன் சொன்னபடியே சொன்னால் எப்படி நியாயமான நீதி விளங்கும். ஆனதினாலே உம்முடைய திருவருளாகிய துணைசெய்து, எனக்குவந்த பகையை வென்று தரவேண்டுமென்று வேண்டக் கடவுள் அசரீரி வாக்காய், பெண்ணே! நீ பயப்படாதே; நாளைக்கும் நீயே வெல்லும்படி செய்கிறோம் போவென, பத்திரர் மனைவி வீட்டிற்குப் போயிருக்க, மற்றைநாள் பாண்டியன் அந்த இரண்டு பாடினிகளையும் வரவழைத்து, நேற்றுச்

சொன்னபடியே சொல்லிப் பாடுங்களென்ன, சபையாரும் அப்படியே சொல்ல, அப்போது பத்திரர் மனைவி, ஐயா பாண்டியராஜனே! நீரோ பக்ஷபாதமான நியாயம் சொல்லுகிறீர்; சபையாரும் அப்படியே சொல்லுகிறார்கள் ஆனதினாலே, தராசுமுனைபோல நியாயஞ் சொல்லுதற்கு நம்முடைய கடவுள் சந்நிதிமுன்னே நின்று பாடினால் இருவர் பாட்டையுங்கேட்டு யாராகிலுமொருவர் இன்னாள் வென்றாளென்று சொன்னாற்போதும். ஆகையால் அப்படிச் செய்யவேண்டுமென்ன; அதற்குப் பாண்டியன், அப்படியே நாளைக்குச் செய்யுங்களென்று விடைகொடுத் தனுப்பிவிட்டான். மறுநாள் பாண்டியனும் மந்திரிகளும் தர்மார்த்த காமமோக்ஷமென்னும் நான்கு புருஷார்த்தங்களையுந் தெரிந்த பெரியோர்களும் கூடிப்போய் வெள்ளியம்பலவாணர் மண்டபத்தி லிருந்துகொண்டு, அந்த இரண்டு பாடினிகளையும் கூட்டி வாருங்களென்ன; ஏவலாளர் விரைவிலோடி அழைத்து வந்தார்கள். அப்போது இலங்கைப்பாடினி, இந்தக் கிழவி இன்று தோற்று எனக்கடிமை யாவதற்குச் சந்தேகமில்லை யென்று மனக்களிப்புடனே முன்னே வந்தாள். பத்திரர் மனைவியும் தனது கற்பும், கடவுள் திருவடிமேலன்பும் நிலையாகக் கொண்டுவந்தாள். அப்போது சோமசுந்தரக்கடவுள், முத்தாரங்களும், ரத்தின கேயூரங்களும், இன்னும் பலவித ஆபரணங்களும் விளங்க அலங்கிருதராய்த் தாமும் ஒரு வித்வானாகிப் பெரியோர் கூட்டத்திற் கூடி வந்திருந்தார். அப்போது கப்பலினின்றிறங்கி வந்தவள் முன்னேபாட, அது கேட்டுச் சபையார் ஒன்றுங் கொண்டாடாமற் பேசாதிருந்தார்கள். அப்போது பத்திரர் மனைவி சரஸ்வதியைப் போலிருந்து வீணையைக்கொண்டு பாடினாள். எப்படி யென்றால்,

அறுசீரடி யாசிரிய விருத்தம்

குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் கையிற் படுதலைகொண்
டிடங்க டோறு மிரப்பாயென் றேசு வார்க்கென் பேசுவனே.

தேனார் மொழியார் விழிவழியே செல்லா தவர்க்கே வீடென்று
நானா வேதப் பொருளுரைத்தாய் நீயே மதுரை நம்பரனே
நானா வேதப் பொருளுரைத்தாய் நீயே பாதி நாரியுரு
ஆனா யென்று பிறர்பழித்தா லடியேன் விடையே தறைவேனே.

வரத னாகி யெவ்வுயிர்க்கு மாயா விருத்தி வலியடக்கிச்
சரத மான வீட்டின்பந் தருவாய் மதுரைத் தனிமுதலே
சரத மான வீட்டின்பந் தருவாய் வீடு பெறுவார்போல்
விரத யோக நிலையடைந்தா யென்பார்க் கென்னான் விளம்புவனே.

என்று மதுரேசரைத் தியானித்து, இப்படி இசைப்பாட்டாலே கனிந்து பண்ணுதல் பரிவட்டணை முதலாக இசைநூலிற் சொல்லிய தொழில்களெட்டும், வார்தல் வடித்தல் முதலாகிய இசைக்கரணங்க

ளெட்டுந் தோன்ற, மண்ணுலகத்தார் செவிகளுக்கேயல்லாமல் விண்ணுலகத்தார் செவிகளுக்கும் இன்னிசையாகிய வமுதத்தை வார்த்தான். இப்படி இடை பிங்கலை இயங்காமல் மூலாதாரம் தொடங்கி அசைந்து பொதுவான தொழிலால் பிரமரந்திரபரியந்தம் நடக்க, இசைக்கு முள்ளாளம் கண்டம் வீங்காமலும், கண்களிமையாமலும், பல்தோன்ருமலும், புருவம்மேலே நிமிராமலும், கொடிறு துடியாமலும் பாட, எல்லாருங் கேட்டுக் குதூகலங்கொண்டு மெச்சத் தொடங்கும்போது, பாண்டியன், முன்னே தான் கொண்டாடினவனையே கொண்டாட நினைக்க, அப்போது சோமசுந்தரக் கடவுளருளாலே பாண்டியன் மனக்கோணல் தீர்ந்து பத்திரர் மனைவியே நன்ருய்ப் பாடினுளென்று மெச்சி, இலங்கைப்பாடினி கழுத்தின்மேலே பத்திரர் மனைவியைக் கொண்டுவந்து வையுங்களென்று சொல்லும்போது, வித்வானுய் வந்திருந்த கடவுள் இந்தப் பத்திரர் மனைவி பாடலே ஆச்சரியம் ஆச்சரியமென்று கொண்டாடிச் சபையார் காண அப்பொழுதே மறைந்தருளினுர். அதுகண்ட சபையாரெல்லாரும் அதிசயித்தார்கள். பாண்டியன் பயந்து, இது விடைமேலழகர் திருவிளையாடலென்று தெரிந்து, சபையாரும் பாண்டியனும் அடியவரன்பையும் கடவுளருளையும் ஆராய்ந்து பார்த்து, ஆனந்தக்கண்ணீர் பெருகப் பேரின்பக் கடலில் மூழ்கினுர்கள். உடனே பாண்டியன், கப்பலிலிருந்திறங்கி வந்தவளின் பிடரியின்மே லிருக்கிறவளை இறங்கச் செய்து, அவளுக்கு முன்னே ஆடையாபரணங்கள் முதலான பல வெகுமானங்கள் செய்து, பின்பு, கப்பலினின்றிறங்கி வந்தவளுக்கும் சில வரிசைகள் கொடுத்து, ராஜசபைக்கு வந்து மீனுட்சி சுந்தரேசராகிய வித்துவானுக்கும் ஆபரணுதிகள் முதலான சிறப்புகளைச் செய்து, "ராஜாக்கள் பலமெல்லாம் தெய்வபலத்தின் முன்னே நில்லா, அந்தத் தெய்வபலமும் மதுரேசன் முன்னே நில்லா" என்று சொல்லும் பழமொழி இந்தப் பத்திரர் மனைவியாலே விளங்கக் கண்டோமென்று அதிசயித்துக் கடவுளிடத்தில் விடைகொண்டு, திருக்கோயிலைப் பிரதக்ஷிணம் வந்து ஆடல் பாடல்களுடனே தன்னரண்மனைக்கு வந்து வாழ்ந்து, பின்பு ராஜராஜ பாண்டியன் சுகுண பாண்டியனென்னும் புதல்வனைப் பெற்று வாழ்ந்திருந்தான்.

இசைவாது வென்ற படலம் முற்றிற்று.

---

நாற்பத்தைந்தாவது

## பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்த படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

இருளைக்கந் தரத்தில் வைத்தோன் தன்னிடத் தென்று மன்பின்
தெருளைத் தந்தவட்கு மாறுந் தெரிவையை யிசையால் வெல்ல
அருளைத்தந் தளித்த வண்ண மறைந்தனந் தாயாய்ப் பன்றிக்
குருளைக்கு முலைதந் தாவி கொடுத்தவா றெடுத்துச் சொல்வாம்.

**உரை:** கருமை நிறம்பொருந்திய விஷத்தைக் கண்டத்திலே தரித்தருளிய சோமசுந்தரக் கடவுளிடத்தில் எப்பொழுதும் விடாது பேரன்பு செலுத்திய பாணபத்திரர் மனைவிக்கு விரோதியாக யாழ்ப்பாணத்திலிருந்துவந்த இசைப்பாடினியை வெல்லும்பொருட்டு அக்கடவுள் தமது திருவருளைத் தந்தருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இனி அந்தச் சோமசுந்தரக்கடவுள், தந்தையுந் தாயையுமிழந்து வருந்துகின்ற பன்றிக்குட்டிகளுக்குத் தாயாகத் திருவுருவங்கொண்டு, அப்பன்றிக்குட்டிகளுக்கு முலை கொடுத்து, அவைகளி னுயிரைக் காத்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

முன்னே தேவர்களுக்காக விஷத்தையுண்டதற்குச் சாட்சியாகக் கண்டத்திலே விஷத்தைத் தரித்தருளிய சோமசுந்தரக் கடவுளுடைய மதுரைக்குத் தெற்கே குருவிருந்ததுறை யென்றொரு ஊருண்டு. அந்த ஊரில் தேவர்குருவாகிய வியாழபகவானிருந்து தவஞ்செய்ய அவருக்காகவேண்டிய வரங்களைக் கொடுத்துச் சித்திரத்தேர் வலவனுகிய பிரம்மனும் லட்சுமிநாதனுகிய விஷ்ணுவும் வணங்கக் குருநாதனென்னும் பெயரினுலே விளங்கவிருப்பது அக்குருவிருந்ததுறை. அவ்வூரில் சுகல னென்றொரு வேளாளனுண்டு. அவன் மனைவி சுகலையென்பவள் மகா பதிவிரதையாய் வாழ்ந்து, பன்னிரண்டு பிள்ளைகளைப்பெற்ருள். அந்தப் பிள்ளைகளைத் தாய்தந்தையர்கள் தங்களுக்குள்ள செல்வப்பெருக்கினுலே எவ்வளவும் தண்டியாமல் மிகுந்த அன்புகொண்டு வளர்க்குநாளில், அந்தத் தாயுந்தகப்பனு மிறந்துபோக, அந்தப் பிள்ளைகள் எவ்வளவு மஞ்சாதவர்களாய் வேடருடனே கூடிக் காட்டிலே வேட்டையாடி, வெயில்படாத ஒரு மரப்புதலின் கீழேயிருந்து தவஞ்செய்கிற தேவகுருவைக் கண்டு, கைகளைக்கொட்டிச் சிரித்து, கல்லும் மணலும் வாரி அவர்மேலே வீசினுர்கள். அப்போது தவஞ்செய்கிற தேவகுருவானவர், அந்தப் பிள்ளைகளைக் கோபித்துப் பார்த்து, நம்முடைய தவத்துக்கு விக்கினஞ் செய்தார்களேயென்று மனம்நொந்து, பிள்ளைகளே! உங்கள் நல்ல தொழிலைவிட்டு வேடத்தொழிலைச் செய்கிறீர்கள் ஆனுலும், நீங்கள் நிலத்தையுழுகிற தொழிலாளிகளானதினுலே பன்றியின் வயிற்றிலே பிறந்து குட்டிகளாய் தாயையும் தகப்பனையும் இழந்து அலைந்து துன்பப்படக் கடவீர்களென்று கடிய சாபமிட்டார்,

பின்பு பாபரூபிகளான அந்தப் பன்னிரண்டு பிள்ளைகளும் பயந்து, சாபத்தை யேற்றுக்கொண்டு, ஐயா பெரியவரே! எங்களுக்கிந்தச் சாபம் எப்போது தீருமென்று மிகவும் வேண்டிக்கேட்க, அதற்குத் தேவகுரு, குருநாதனுடைய திருவடிகளைத் தியானித்துத், தமது கோபத்தைத் தணித்துக்கொண்டு, பிள்ளைகளே! உங்களுக்கு மதுரேசரே தாயாய்வந்து முலை கொடுத்து உங்களுயிரைக் காப்பாற்றிப் பின்பு உங்களை மந்திரிகளாகச் செய்து பின்பு அழியாத வீடும் தந்தருள்வாரென்று சாபத்திற்கு விமோசனஞ் சொல்ல, பின்பு அந்தப் பன்னிரண்டு பிள்ளைகளும் அந்தக் குருவிருந்ததுறைக்குப் பக்கமான காட்டில் அநேகர் பன்றிகளுக்குத் தலைவனான பன்றியரசனது பெட்டைப்பன்றியின் வயிற்றில்வந்து குட்டிகளாகப்பிறந்து வளருகிற நாளில், மதுரையில் ராஜாதிராஜனான பாண்டியன் மதுரையை விட்டு மேற்புறக் காடுகளெல்லாந் தேடி மான்வேட்டையாடுதற்கு மதயானைமே லேறிக்கொண்டு தன் சேனைகள் நெருங்கிவரச் சென்றான். அப்படி யவன் போகும்போது, மிருகங்கள் சஞ்சரிக்கிற இடங்கள் தெரிந்த வேட்டைக்காரர்கள், தோல் செருப்பிட்டக் கால்களுடனே மிருகங்கள் செல்லுகிற அடிச்சுவடுகண்டு, புலால் நாறுகின்ற வாயும், நெருப்பு விழிகளும் கொண்ட புலிகள் - பன்றிகள் - கடம்பைகள்-மான்கள் மேய்கின்ற கும்பல் கண்டோடிவந்து சொல்ல, சில வேட்டையாடிகள் சீக்கிரத்திலே போய் அந்தக் கும்பலைச்சுற்றி வலைகட்டி, அதில் வெடிமுழக்கி, நாய்கள் சுற்றிலும் நிற்க, மிருகங்களைக்கலைத்து, ஒரு புறத்திலே யொதுக்கி, ஈட்டி வேல்கள் கொண்டு வீரர்கள் சூழ்ந்து நிற்க, யானைமேல் பாண்டியன் ஏறியிருக்க, பம்பை-தவண்டை - சங்கு - கொம்பு முதலிய பறைகளாலே திசைகள் செவிபட முழங்கி, அந்தந்த மிருகங்களுக்குத் தகுந்த பார்வைகளையும், குரல்களையும் காட்டி, புலி-கரடி யானை கடம்பை-மான் முதலியவைகள் மருண்டு கலங்கச்செய்து, விற்களை வளைத்து, வீர பாணங்களைப் பொழிந்தார்கள்.

அப்போது அங்கே கூடின மான்களெல்லாம் கால்கள் முறிந்தன. தலைகளுடைந்தன, ரத்தங்கள் பீரிட்டன. யானைகள் வெள்ளை நிணம் வெளியே சரிந்து கைகளொடிந்து இறந்தன. கரடிகள் புலிகள் வாய்கள் கிழிந்து விழுந்திறந்தன. சில கடித்த புல்லும் கிழங்குகளுமாக அவசரத்துடனே வந்து கண்ணிக்குள் அகப்பட்டன. சில சாயல் கண்டு பார்வைகளின் மேலே விழுந்தகப்பட்டன. சில கட்டின வலைக்குத் தப்பி அப்பால் நாய் கௌவிப் பிடிக்க அகப்பட்டன. சில வீரர்கள் கைவேல்களினாலே குத்துப்பட்டிறந்தன. பல இப்படி இறந்தவைகள் போகச் சில கொலை விலங்குகள் வலையைத் தாண்டி அங்கே நிற்க, வீரர்களோடெதிர்த்து மீண்டு பார்வை விலங்குகளோடு கூடிநிற்பன. சில வீரர்கள் விட்ட அம்புகள் புலிகளைத் துளைத்தும், மான்களை உருவியும், மலைக்கரடிகளைத் துளைத்தும், யானைகளைப் பொடித்

தும் இப்படியாக மாள்வித்தன. பல அம்புகள் பட்டுத் தப்பி வலையைக் கிழித்துச் செல்கிற மானை நாய்கள் பிடித்துக்கொண்டு நிற்க, யானைகள் மேலே பட்ட வேலாகிய புண்வழியே மலைமேல் நெருப்பெரிவது போ லிரத்தங்கள் பொங்க நின்றன. சில வீரர்களொலியும் பம்பைச் சத்தமும், கொம்புச்சத்தமும், அம்புகள்பட்டு விழுகிற விலங்கின் ஓசையும், தப்பி ஓடுகிற மான்கள் மேலே தாவிப் பாய்ந்து நாய் குலைக்குஞ் சத்தமும், அந்தக் காடெல்லாம் நிறைந்து இடிமுழக்கம் போலாக, இப்படிப் பல மிருகங்களையும் கொன்று பாண்டியராஜன் மேலைத் திக்கில் போகும்போது, ஒரு பன்றி கண்டு தங்கள் பன்றி யரச னிருக்கிற காட்டுக்குளோடி முன்னே நின்று ஓ பன்றி ராஜனே! கேளும். பாண்டியன் இந்தக் காட்டிலுள்ள மிருகங்களை யெல்லாம் கொன்று கொண்டு இதோ வருகிறான். நீர் அசட்டை பண்ணலாமோ வென்ன, பன்றியரசன் மிகுந்த மனோரதங்கொண்டு தன் பேட்டுப் பன்றியைப் பார்த்து ஓய் பெண்ணே! நான் இன்று பாண்டியனுடனே சண்டை செய்து வென்று வருவனோ? அல்லது சாவனோ? இனி நீ உன் குட்டிகளைக் காத்துக்கொண்டு இங்கே ஜாக்கிரதையா யிருவென்று சொல்ல, அந்தப் பெண் பன்றி, ஓ ஓ! அங்கே உயிர் போனால் உடல் பிழைக்குமா? பாவிகளான நாமிருவரும் பெற்ற குட்டிகளைக் கொடுத்த தெய்வ பலத்தினாலே ஜெயங்கொண்டு வந்தீரானால் உயிர்வாழ்வேன். அன்றேல், நீர் இறந்த விடத்திலேயே உயிர்விடுவேன். உடலையல்லாமல் நிழலிருக்குமா? நானும் கூட வருகிறேன்; வாருமென்று குட்டிகளையும் சூழவிட்டுக்கொண்டு, பேட்டுப்பன்றிபின்னே பற்றிவர மகா வேகத்துடனே பன்றியரசன் வீரர் கூட்டம்போலப் பலவகை முள்ளம் பன்றி முதலான பன்றிக் கூட்டங்கள் முன்னே திரண்டுவர, இந்தப் பன்றியரசன் கண்களிலே நெருப்புப் பொறிகள் பறக்க முழு ரோஷத்துடனே வருகிறபோது, பாண்டியன் சேனை வீரர்கள் விடாத மழை பொழிவதுபோல் அந்தப் பன்றிக்கூட்டத்தில் பாணவருஷங்களைப் பொழியப், பாணங்கள் பட்டு முன்னே இரத்த வெள்ளம் பெருகின. அந்த இரத்த வெள்ளத்திலே உடல்கள் மிதந்தன. குடல்கள் சரிந்தன. எலும்புகள் முறிந்தன. நிணங்களு மூளைகளும் சிதறின, பருந்துகள் காகங்கள் கழுகுகள் மேலே படர்ந்து பறந்தன. உடல்வேறு பன்றிகளுயிர் வேறாயின. அப்போது பன்றிகள் நெருப்பைப் போலக் கொதித்துப் பாண்டியன் சேனைகளில், சிலரைக் கடித்தும், சிலரை உதைத்தும், சிலரை வாயிலே உதிரம்பெருகக் கொம்பாலே குத்தியும், சிலரை நெஞ்சு நேரேபிளந்தும், பன்றிகள் கொல்லச் சில வீரர்கள் காலொடிந்தார்கள். சிலர் தலை யுடைந்தார்கள். சிலர் தோள் முறிந்தார்கள். சிலர் கையாயுதங்களை இழந்தார்கள். சிலர் உயிர் போனார்கள்.

இந்தப் பாண்டியன் சேனை வீரர்கள் சாகக்கண்டு பாண்டியன் மந்திரிகள் சீறி இருப்புலக்கை சக்கர முதலியவைகளைக் கொண்டு

அடித்தும், நறுக்கியும், குத்தியும், வெட்டியும், குறைத்தும், துணிந்தும் பலவகையாகக் கொன்று தொலைக்க, அதெல்லாங் கண்டு பெண் பன்றியானது தனது தலைவனுன பன்றி யரசனைப் பார்த்து, ஓய் தலைவனே! இப்போது நாம் முன்னே அனுப்பின பன்றிக்கூட்டங்க ளெல்லாம இதோ கொஞ்சகாலத்தி லிறந்தழிந்தன, நாமினி செய்யத் தக்கதென்ன கிடக்கிறது. இனி நாம் வீணே இறந்துபோகாமல் தப்பிப் பிழைத்தோடிப் போவதே நல்ல காரியமென்று வேண்டிச் சொல்ல, அதுகேட்டுப் பன்றியரசன் சாவதற்கஞ்சாமல் போரிடுவதே வீரம், (நுண்ணறிவுடையவராய் நூலொடு பழகினும் பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே) ஆதலால் உன்னுடைய அறிவுக் கேற்றபடியே சொன்னுய். மானமுள்ளவர்கள் போர்க்குப் பின் வாங்கினுல் குற்றமான பழிப்பல்லவோ? இன்னும் இரண்டு சிங்கங்கள் தங்கிக் கிடக்கிற நீர்த்துறையில் ஒரு பன்றி வந்து நீர்குடித்து மீளும், ஒரு பன்றி யிருக்கிற நீர்த்துறையில் வீரத்தில் மிகுந்த சிங்கம் வந்து தண்ணீர் குடிக்கப் பயப்படும். அப்படிப்பட்ட வீர வுறுதிகொண்ட குலத்திலே பிறந்தே ஞனதினுலே இந்த வேப்பமாலை யணிந்த பாண்டியனுடைய வீரத்தினை யடக்கி என் கீர்த்தியை எங்கும் பரவச்செய்ய வல்லேன், அல்லது மடிவேன். அழிவது பூதவுடம்பேயல்லது புகழுடம் பழியுமோ? நீ சும்மா இங்கே தானே நில்லென்று தனது பேட்டுப் பன்றியை நிறுத்தி மற்றப் பன்றிகளெல்லாம் என் காற் புறத்தில் நின்று பாண்டியன் சேனைகளைக் கொல்ல வேண்டுமேயல்லது ஓடக்கூடாது என்று சொல்லி, ஓ பாண்டியா! ஓடிப்போகாதே நில்லென்று கொதித்து வந்து நிலத்தைக் கிண்டிப் பள்ளமாக்கி அதிலிருந்து கிளம்புகிற தூளியினுலே ஆகாசமெல்லா மறையத் தான் தனியே வருகின்ற பன்றியரசனைப் பாண்டியன் பார்த்து, அதன் வீரத்தை மிகவும் புகழ்ந்து கொண்டாடி வில்லை வளைத்துப் பாணங்களைப் பொழிந்தான். அப்போது பன்றி யரசன் பாண்டியன் விடுகிற பாணங்களைப் பரித்துச் சிலபாணங்களைக் காலாலே தேய்த்தும் சில பாணங்களை முரித்தும் சில பாணங்களை வாலாலே வீசி யுதிர்த்தும், இப்படிச் சின்னபின்னம் பண்ணுவதைப் பாண்டியன்கண்டு நாணித் தன்யானைக்கையிலே இருப்புலக்கையைக் கொடுத்துவர, அதுகண்டு இடியேறுபோலே சீறிப் பன்றியரசன் அந்த யானையைக் கொல்ல நினைத்து அதன் கையை வாழைத்தண்டு போல ஒடியச்செய்து தன் கொம்பினுலே குத்திச் சிதைத்துக் கொல்ல, உடனே பாண்டியன் ஒரு தேர்மேலே பாய்ந்தேறிச் சக்கரத்தைச் சுழற்றி அதன் மேலே விட்டான். அந்தச் சக்கரத்தைப் பன்றி யரசன் தடுத்துவிட்டு மிகுந்த வேகத்துடனே பாய்ந்து அவனேறின தேரையுடைக்கப் பாண்டியன் வேறே ஒரு குதிரைமேலேறி வேலாயுதத்தைச் சுழற்றும்போது, பன்றியரசன் அவனேறின குதிரையின் பின்னே சென்று பாய்ந்து குடல் சரியவும், ரத்த மொழுகவும், கொம்பால் குத்திக் குதிரையைக் கொல்லப் பாண்டியன் மனம பொருமல்

கீழேகுதித்துத் தன் கையிலுள்ள இருப்புத் தடியாலே அந்தப் பன்றி யரசன் தலைமேலே ஓங்கியடிக்கப் பன்றி யரசனிறந்து, விமானமே லேறி, மன்மதாகிருதியாய்த் தேவர்கள் வியந்து பூமழை பொழியச் சுவர்க்கலோகத்திற் போய்த் தேவகானங்களைக் கேட்டும், அமுதம் புசித்தும் தேவரம்பைகள் போகசுகமும் அனுபவிக்கலானான். பின்பு பெண்பன்றி எனது நாயகன் சாக நான் கண்டிருக்கலாமோ? வெல்லா விட்டாலும் நானும் கூடச் சாகிறேனென்று கோபித் தெதிர்க்க அதுகண்டு அரசர்கள் பெண் மிருகத்தைக் கொல்வது நீதி யின்றென்று விலக்க, வீரர்களுக்குத் தலைவனான சருச்சரனென் பவன் அதனுடனே போர்செய்ய வளைந்து வெகுநேர காலம் போரா டப் பெண்பன்றி மிகவுஞ் சினந்து அந்தச் சருச்சரனாகிய வேடவீரனை முட்டிக் கீழே தள்ளிச் கொல்லும்போது அவன் தன் கையிலிருந்த இருப்புத் தடியாலே அதன் தலைமேலே யோங்கி யடித்து அதைக் கொன்று தானும் அதனுடனே வீரசுவர்க்கம் சேர்ந்தான்,

பின்பு பாண்டியன் மதுரைபோய்ச் சேர்ந்தான். அந்த ஆண் பன்றி விழுந்து ஒரு மலையாக இன்னமும் பன்றிமலை யென்று விளங்குகின்றது. அந்த மலையில் தபோதனர்கள் அளவில்லாதபேர் கள் மோக்ஷமடையத் தவஞ்செய்கிறார்கள் என்று சொன்ன அகஸ் தியமகா முனிவரைப் பார்த்துகேட்ட முனிவர்கள் ஐயா, மகாரிஷியே! அறிவில்லாத பன்றிவடிவா யிருக்கிற மலையிலே முனிவர்களிருந்து தவஞ்செய்வது என்ன காரணமென்ன, அதற்கு அகஸ்திய முனிவர் சொல்லுகின்றார்: கேளுங்கள் முனிவர்களே! முன்னாளில் மன்மதன் போலே விளங்குகின்ற ஒரு விச்சாதரன் புலத்திய மகாமுனிவர் செய் கிற தவத்துக்கு விக்கினமாக வீணையிசை பாடினான். அதைக் கேட்ட புலத்திய மகாமுனிவர் அவனைப் பன்றியாகச் சபித்தார். அதற்கு அவன் பயந்து ஐயா, முநீந்திரரே! எனக்கு எப்போது இந்தச் சாபம் தீருமென்று கேட்க, முனிவர் ராஜாதிராஜனான பாண்டியன் வேட்டை யாடவந்து பல மிருகங்களையுங் கொன்று உன்னையுங் கொல்வான், பின்பு இந்த வடிவைப் பெறுவாயென்று சொன்னார். அவர் சொன்ன படியே அந்த விச்சாதரன் பன்றியாகப் பிறந்திறந்து பழைய வடிவைப் பெற்றான். ஆதலாலே, அந்தப் புண்ணியன் உடல் கிடந்த படியே மலையாய், அதிலே பெரியோர்களெல்லாரும் வாசஞ் செய்கிறார் கள். மதுரேசராகிய சோமசுந்தரக்கடவுளுமங்கே விரும்பியிருக்கிறார் என்று முனிவர்கள் கேட்ட கேள்விகளுக்கு மறுமொழிசொல்லி, இப் பால் அந்த ஆண் பன்றியையும் பெண் பன்றியையும் கொன்றவிடத் திலேயே அவர்கள் போட்டுவிட்டுப் போனபின்பு பன்னிரண்டு குட்டிகளும் தாயைக் காணாது திகைத்துத் துன்புற்றும் தாயென்று இன்னுமொரு பன்றியின் பின்னே ஓடும், நல்ல நிழலைத் தேடி யலையும், பால்குடிக்கப் பசியுந் தாகமுமிகுந்து உபத்திர வப்படும். வெயிலாலே வெதும்பும், இப்படி இந்தக் குட்டிகள்

படும்பாட்டை யாராலே சொல்லி முடியும். அப்போது மீனுக்ஷி சுந்தரேசர் தமதிச்சைப்படி விமானமேல் வந்தவர் கண்டிரங்கி, அந்தக் குட்டிகள் துன்பந் தீர்க்க வெண்ணி அன்புடைய தாய்ப் பன்றியின் வடிவுகொண்டு கிட்டிவரக் குட்டிகள்கண்டு தந்தாயென்று கிட்டிமுட்டி மொய்த்து, அதன் மூதுகின்மே லேறி எட்டி யெட்டி கால்களா லுதைத்து, நிலத்தைக் கிண்டித் துள்ளிக் குதித்து மீண்டு திரும்பி இவ்வாறு செய்கின்ற குட்டிகளைப் பார்த்து, முன்னெரு பன்றி காணுத தாய்ப் பன்றியானது தன் மயிர்ச்சிலிர்த்துத் தழுவி மோந்து, முலை குடிக்கச்செய்து, அந்தக் குட்டிகளுக்கு மிதந்த பல மும், வீரமும் ஞானமும் பெருமையும், நல்ல குணங்களு முண்டாக்கி, முகமாத்திரம், பன்றிமுகமாகவும், உடம்பெல்லாம் மனிதவடிவாகவுஞ் செய்து (கங்கை நாயகன் கடவுளர் நாயகன், கயற்கண் மங்கை நாய கன் கருணையாந் திருவுரு மறைந்தருளினர்.) ஆகையால் அவரே அறிவில்லாத பன்றிவடிவாகி அறிவுண்டாகச் செய்வாராஞல் இனி நமக்குத் தாயுந் தந்தையுமாய்க் காக்க வல்லவரவரே யென்று பின் னும் சொல்லுகிருர்.

பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்த படலம் முற்றிற்று.

---

நாற்பத்தாருவது

# பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்

---

கலிநிலைத்துறை

தந்தை தாயிழந் தலமரு குருளையைத் தாயாய்
வந்து நாயகன் முலைசொடுத் தருளிய வகையீ
தந்த வாறிரு மைந்தரு மந்திர ராகி
எந்தை யார்சிவ புரம்புகுந் திருந்தவா றிசைப்பாம்.

**உரை:** தந்தையையுந் தாயையுமிழந்து வருந்தியிருந்த பன்றிக் குட்டிகளுக்குச் சோமசுந்தரக்கடவுள் தாயாகத் திருவுருவங்கொண் டெழுந்தருளி, முலைக்கொடுத்தருளிய திருவிளையாடலிதுவாகும். இனி அந்தப் பன்னிரண்டு பன்றிக்குட்டிகளும் பாண்டியராஜனுக்கு மந் திரிகளாயிருந்து (அரசு செலுத்திப்) பின்பு எமது பெருமானுகிய பர மேச்வரன் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ மஹா கயிலாயத்திற் புகுந்து சிவகணநாதராக விளங்கிய திருவிளையாடலைச் சொல்லுகின்ருேம்.

முதற்பெருங் கட்லாகிய பெருமான் அவ்வாறு திருவுருமறைந்த பின்பு, அந்தப் பன்னிரண்டு பிள்ளைகளும் பன்னிரண்டு சூரியர்கள் கூடினுற்போல அந்தப் பன்றிமலையிலே எல்லாங் கற்றுணர்ந்து, பல கலைகளிலும் வல்லவராய்க் கூடியிருந்தார்கள். அவர்களப்படி யிருக் குங் காலத்தில் கடவுளருள் எல்லாவுயிர்க்கும் பொதுவா யின்பம்

திருவோனென்பதை எல்லாருந் தெளிய, அங்கயற் கண்ணம்மையானவள் தன்மணாளரான சோமசுந்தரக்கடவுளைப் பார்த்துச் சுவாமி! உலகத்திலே மிருகங்களிலே கெட்ட அறிவில்லாத மிருகமாகிய இந்தப் பன்றிக் குட்டிகளுக்குத் தாயாய் முலைகொடுத்து, விலங்கறிவைப் போக்கி நல்லறிவருளினது என்ன காரணத்திலேயென்று கேட்க, அதற்குச் சோமசுந்தரக்கடவுள் பெண்ணே! எல்லா வேதங்களும், ஆகமங்களும், என்னைச் சகலசீவ தயாபரனென்று சொல்லுகிறதினாலே எனக்குச் சேதனங்களென்றும், அசேதனங்களென்றும் வேறுபாடில்லை. அவ்விரண்டும் பொதுவாகையாலே தாயையிழந்து உதராக்கினியான பசியாலேவெந்து வெயில் உடம்பெல்லாஞ் சுடக் காட்டிலே கிடந்து தீகிற பன்றிக் குட்டிகளுக்கு மனமிரங்கித் தாயுமாகிப் பால் கொடுத்தேன். அதனால் அளவில்லாத வீரமும் பலமும் நல்ல வித்தையும் ஞானமும் பெற்றார்கள். இனி அந்தப் பிள்ளைகள், நம்முடைய பாண்டியனுக்கு மந்திரிகளாகி, அநேக நன்மைகளைச் செய்து பின்பு போக்குதற்கரிதான மும்மலங்களையும் போக்கிக்கொண்டு, நம்முடைய சிவகணங்களோடு வந்து சேருவார்களென்று நாயகிக்கு விடை சொல்லி, அன்றிராத்திரியே பாண்டியன் கனவிலே வந்து பாண்டியனே! சொல்லக்கேள்; இந்தப் பன்றிமலையிலே பன்னிரண்டு வீரர்கள் பேரறி வுடையவர்களாக விருக்கிறார்கள். அவர்களை உனக்கு மந்திரிகளாக வைத்துக்கொள்ளென்று சிவபெருமான் சொல்லியருள, பாண்டியராஜன் அதிக சந்தோஷங்கொண்டு, சூரியோதயமானவுடனே தன் மந்திரிகளுக்குத் தெரியச்சொல்லி, அந்தப் பன்றி வீரர்களைக் கூட்டிக்கொண்டு வாருங்களென்ன, உடனே மந்திரிகள் அந்தப் பன்றிமலைக்குப்போய், அவர்களைக் கண்டு, பாண்டியராஜனைக் காண நீங்கள் வரவேண்டுமென்று வேண்ட, அவர்களும் பாண்டியன் சமுகம்வந்து கூடினார்கள். அப்படி வந்த வீரர்கள் பாண்டியனை வணங்கி நிற்க, அவர்களைப் பாண்டியன் பார்த்து மிகவும் அதிசயானந்தங்கொண்டு, சோமசுந்தரக்கடவு ளருளின்படியே அவர்களுக்கு மந்திரித்தனங் கொடுத்துப் பின்னும் பல வரிசைகளுங் கொடுத்து, முன்னே பழையவர்களான மந்திரிகள் பெண்களை விசாரித்து விவாகங்களுஞ் செய்வித்து, இது மிகவும் அழகிதென்று கொண்டாட நடத்தினான். அந்தப் பன்றி வீரர்களும் பாண்டியனுக்குக் கண்ணும் கவசமும்போல நடந்து பன்னிரண்டுடலுக்கு ஒருயிர் போல, மனவொருமையாய், ஐந்தலைநாகம் விழுங்கு மிரைபோல ஒரு தன்மையாய்ப் பொருள் வருவழியைத் தெரிந்து அரசனுக்கீட்டிப் பாண்டியனுக்குக் கல்வியைத் தருகின்ற ஞானம்போல மகிழ்வுண்டாக, பாலுந் தேனும்போல மதிநுட்பமும், நூல் வல்லமையுங் கொண்டு பகைவரும் மனங்களிக்கப்பேசுஞ் சொல்லில் வல்லவராய், பிறர்வாய் நுண்பொரு ளுணர்ந்து, அரசனால் மதிக்கப்பெற்றோம், பழைய மானேமென்று இறுமாப்படையாமல், குற்றேவலாளிகள் போல் மிகவும் அஞ்சியொடுங்கி, அரசன் வேண்டினதைத் தங்களுக்கு

விடமாகவெண்ணி, அகலாதணுகாது தீக்காய்வார்போல் அரசனிழல் போல, எதுசொன்னாலும் தடை சொல்லாமல், அபராதப் பொருள்கள், பகைவரைவென்று கொள்ளும் பொருள்கள், இவைகளில்லாமல் விளைநிலத்துக்கு வாரப்பொருளே ஈட்டும் பொருள்களாகச் சம்பாதித்து, அரசன் மனக்கருத்தைக் கண்ணாடிபோலத் தங்களுக்குள்ளே தெரிந்து கொண்டு, அது நீதியானாற் செய்தும் அல்லவானால் உயிருக்கானி வந்தாலும் செய்யவொண்ணாராய், இப்படி நடக்கிற பன்னிரண்டு பேர்களும் தானமும், தருமமும், புகழும் பாண்டியனுக்கு வளரச்செய்து, திக்கு விஜயங்களும் பண்ணிப் பின்பு பரமேஸ்வரன் எழுந்தருளியிருக்கின்ற சிவபுரம்போய், கணநாதருடனே கலந்து, நிலையாக வீற்றிருந்தார்கள். பாண்டியனும் மேலான பதவி யடைந்தான்.

பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம் முற்றிற்று.

---

நாற்பத்தேழாவது

# கரிக்குருவிக் குபதேசஞ் செய்த படலம்

---

கொச்சகக் கலிப்பா

வரிக்குருகிப் பத்திரற்குப் பலகையிட்ட மணிகண்டன்
அரிக்குருளை வடிவான வடல்வீரர்க் கரசன்பார்
பரிக்குமமைச் சியலளித்த பரிசுரைத்தாம் பசுபதிபாற்
கரிக்குருவி குருமொழிகேட் டருளடைந்த சுதைபகர்வாம்.

உரை: பாணபத்திரரது பாடலுக்குருகி அவருக்குப் பொற் பலகையிட்டருளிய சோமசுந்தரர் பன்றிக் குட்டிகளுருவ மடைந்த சுத்தவீரர்களைப் பாண்டியனிடத்திலே அமைச்சுரிமை தாங்கி உலகத்தைப் பரிபாலிக்கும்படி அருள் செய்த திருவிளையாடலைச் சொன்னோம். இனி, பசுபதியாகிய சோமசுந்தரர் ஞானோபதேசஞ் செய்ய, கரிக்குருவி யொன்று அவரது திருவருள் பெற்ற மகிமையைச் சொல்லுகின்றோம்.

பின்பு சுகுணபாண்டியன் கடலாற் சூழப்பட்ட உலகமெல்லாம் தன் ஒரு குடை நிழலிலே வாழ அரசு செலுத்தி வருநாளில், முற்காலத்திலே ஒருவன் மிகவுந் தருமங்களையே செய்து தன்னாலே தள்ளப்படாத ஒரு பாவத்தைச்செய்து, அந்தப் பாப பலத்தினாலே வந்து அசேதனமான ஒரு கரிக் குருவியாய்ப் பிறந்து காக முதலான பறவைகளெல்லாங் கொத்தி யமவாதையைப்போலத் துன்பஞ்செய்ய, ரத்தஞ் சிந்துகிற தலையுடனே பறவைகளுக்கெல்லாம் எளிய பறவையாய் அப்பறவைகளாலே உண்டாகின்ற துன்பத்துக்காகப் பட்டணங்களிலே சஞ்சரிக்கப்பயந்து காட்டிலே போய் நடை வழியிலே ஒரு புலத்திலே நிற்கிற மரத்தின்மேலிருந்து நாணிச் சோம்பி நெடுமூச்சு

விட்டிருக்கும்போது, ஒருவன் விபூதி ருத்திராக்ஷங்க ளணிந்து உள்ளும் புறம்பும் பரிசுத்தனுய்க் கையிற்பிடித்த குடையுடனே தீர்த்த யாத்திரை செல்லுகிறவனுய் அந்த மரத்துநிழலிலே வந்தான். அப்படி வந்தவன் அங்குள்ள சிலரைப் பார்த்து எல்லாருக்கும் பேறுதருகின்ற தலம், தீர்த்தம், மூர்த்திகளாகிய மதுரை, பொற்ருமரை, சுந்தரேசர் என்று மூவகைச் சிறப்புமுள்ளது உலகத்தி லெங்குமில்லை. மற்றை யிடங்களிலே ஒவ்வொன்றே சிறந்தது. இந்த மூவகையாலுஞ் சிறந்தது மதுரையே யல்லாமல் வேறெங்கே யுண்டு. ஆதலால் இந்த மதுரேசர் அன்பர்க் கெளியவராய் நினைத்த வரங்களெல்லாம் வருபிறவிக் கென்ருமல் இப் பிறவியிலே தருதலாலே, எல்லாக் கடவுளுக்குஞ் சோமசுந்தரக் கடவுளே அதிகரென்ருன். அதுகேட்டுக் கொம்பிலிருந்த கரிக்குருவி ஞானம்பெற்றுத் தான் பட்சியாய் பிறந்ததும் அப்படிக்குப் பிறந்த காரணமும் தெரிந்து இனி இந்தச் சன்மத்தை நீக்க வேண்டுமென் றெண்ணி, இங்கே இந்தப் புண்ணிய புருஷன் சொன்னதே உறுதி யென்று கொண்டு, அந்தக் காட்டைவிட்டு மதுரைப் பொற்ருமரைத் தீர்த்தத்திலே வந்து ஸ்நானஞ் செய்து, மீனுக்ஷி சுந்தரேசரை வலஞ்செய்து. மனத்தாலே தொழுது அர்ச்சிக்க, இப்படி மூன்றுநாள் கழிந்தபின்பு மீனுக்ஷியம்மையார் சுந்தரேசரை வணங்கி எதிரே நோக்கி, சுவாமி! இந்தக் கரிக்குருவி யிங்கே வந்து சேர்ந்த தென்ன காரணமென்று கேட்க. கடவுள் அதன் வரலாறெல்லாந் தெரியச்சொல்லிப் பத்திநியமம்பூண்ட அந்தப் பட்சியின் மேலே தமது கிருபாதிருஷ்டி கொண்டு பார்த்து, முன்னே மார்க்கண்டேயருக்கு நித்தியத்துவங் கொடுத்து யமனைவென்ற சத்திய ஞான மிருத்துஞ்சயத்தினை யுபதேசஞ் செய்தருளினர். அப்படி ஒப்பில்லாத சோமசுந்தரர் சொன்ன மந்திரத்தைக் கேட்டவுடனே சிற்றறிவு போய்த் தனது துன்பமெல்லாந் தீர்ந்து சிவபெருமான் திருவடிகளைத் தியானித்து,

கலி விருத்தம்

எண்ணி லாவுயிர்க் கிறைவ போற்றிவான்
றண்ணி லாமதிச் சடில போற்றியென்
புண்ணி யப்பயன் போற்றி யங்கயற்
கண்ணி நாதரின் கருணை போற்றியால்.

தெளித லின்றியே செய்த தீமையால்
விளியு மென்னையு மாவல் வேண்டுமோ
எளிய ரெங்குளா ரென்று தேர்ந்துதேர்ந்
தளியை யாவதுன் னருளின் வண்ணமே.

உம்மை நல்லற முடைய நீர்மையால்
இம்மை யிம்மனு வியம்பினு யிது
அம்மை நன்னெறிக் கேது வாதலான்
மும்மை யுந்தல முடைய மொய்ம்பினேன்.

என்று துதித்து எம்பெருமானே! ஆனாலும் எனக்கொரு குறையுண்டு. அதென்னவென்றால், கெட்ட பறவைகளெல்லாம் என்னை வாதை படுத்தினதினாலே யுண்டாகிய மானமும் எல்லாப் பட்சிகளுக்கும் எளிமையுங் கொண்டேன். ஆகையினாலே என் மானத்தைக் காத்து ரக்ஷிக்கவேண்டுமென்று கரிக்குருவி சொல்ல, அதைச் சோமசுந்நரக் கடவுள் கேட்டு நீ அஞ்சவேண்டாம். இனி உன்னை வாதித்த பட்சிகளுக்கெல்லாம் வலியை ஆவாயென்று வரங்கொடுக்க, அதற்குக் கரிக்குருவி கடவுளை வணங்கி, சுவாமி! அடியேனுக்கு இன்னுமொரு வரம் வேண்டும். அதாவது தேவரீர் என்னை வலியனாவாயென்று சொன்னது என் குலத்துக்கெல்லாம் வலியன் என்பதுண்டாக வேண்டும். இன்னும் தேவரீர் எனக்குபதேசித்த மந்திரத்தை உச்சரித்து என் கலியும் தீரவேண்டும் என்று கேட்க, கடவுள் கிருபையுடனே உனக்கப்படியே உண்டாகக் கடவதென்று சொல்லி, மூன்றெழுத்தாகிய அந்த மந்திரத்துக்குத் தெய்வம் - இருடி - சத்தம் இவைகளெல்லாம் தெரியச்சொன்னார். அப்போது அந்தக் கரிக்குருவி குருவுபதேசம் பெற்றுத் தன் குலமெல்லாம் வலியனென்று பெயர்கொண்டு உலகத்திலே நிலைபெறச்செய்து, பின்பு தானும் அந்தச் சோமசுந்தரக் கடவுளின் திருவடி நிழலைச் சேர்ந்து வாழ்ந்தது. உலகத்திலே ஒருவன் சுகமே வாழ்ந்தால் அவன் பந்துக்களெல்லாம் சுகப்படுவார்களென்கிற பழமொழி இந்த ஒரு கரிக்குருவியாலே அதன் குலத்துக்கெல்லாம் வலியனென்று பெயருண்டாய் விளங்கினது.

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

ஈச னடிக்கன் பில்லார்போ லெளியா ரில்லை யாவர்க்கும்
ஈச னடிக்கன் புடையார்போல் வலியா ரில்லை யாவர்க்கும்
ஈச னடிக்கன் பின்மையினா லெளிதாய்த் திரிந்த விக்கயவாய்
ஈச னடிக்கன் புடைமையினால் வலிதா யிற்றே யெவ்வுயிர்க்கும்.

கரிக்குருவிக் குபதேசஞ் செய்த படலம் முற்றிற்று.

---

நாற்பத்தெட்டாவது

## நாரைக்கு முத்தி கொடுத்த படலம்

---

கலி விருத்தம்

அத்தி தந்த விமான மழகியார்
பத்தி தந்த பறவைக்கு மந்திர
சித்தி தந்த திறனிது நாரைக்கு
முத்தி தந்த கருணை மொழிகுவாம்.

உரை: அட்ட கஜங்கள் தாங்கிய இந்திரவிமானத்தி லெழுந்தருளியிருக்கின்ற சோமசுந்தரக்கடவுள் மிகுந்த பக்தியையுடைய கரிக்குருவிக்கு உபதேசஞ் செய்தருளிய திருவிளையாடல் இதுவாகும். இனி

அம்மதுராபுரித்தலைவர் நாரைக்கு முத்தி கொடுத்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

மிகுந்த நீர்வளம்பொருந்திய வையையாறு சூழ்ந்த பாண்டி நாட்டிலே தென்றிசையில் சந்திர மொன்றுண்டு. அதனிடத்தே தாமரைத் தடாக மொன்றுண்டு. அத்தடாகமோ அதிக ஆழமுள்ளது, சங்குகள் மிகுந்து முத்துக்களைப்பெற்று வளரும் அந்தத் தடாகத்தருகே அதிலுள்ள மீன்களை யுண்டுகொண்டு வெகுநாளாய் ஒரு செங்கால்நாரை வாழ்ந்துக்கொண் டிருந்தது. அந்த நாரைக்குப் பிறவிப் பெருங்கடல் வற்றுங்காலமாகச் சிலநாள் மழையில்லாமல் அந்தத் தாமரையோடை நீர் வற்றிப் போயிற்று. அப்படி நீர் வற்றவே, நாரைக் கிரை கிடையாமல் தான் தங்கியிருந்த தடாகக்கரையை விட்டு, மிகவும் பசித்து இரைதேடி யிளைத்து, அநேகம் பெரியோர்கள் வாசம் பண்ணுகிற ஒரு காட்டிலே வந்து விழுந்தது. அந்தக் காட்டிலே அநேகம் முத்தரான முனிவர்கள் சூழப் பரிசுத்தம் பொருந்திய பேரின்பக்கடலிலே முழுகி மனமாசு தீர்ந்து சிவமயமான சத்தியத்தவமுனிவரென்பவர் வாசஞ் செய்யக் கூப்பிடு தூரமளவு சதுரமாகச் சுற்றும் படிகட்டுள்ளதாய், அலங்கிருதமான கட்டுக்கோப்புடனே குளிர்ந்த சந்தியாமடமும், குளமும் அவ்விடத்தே யுண்டு. இன்னும் சண்பகம் - பாதிரி - வேங்கை வஞ்சி-மகிழ்-குரா-மரா-செம்முருக்கு-மருது முதலான பலசாதி விருக்ஷங்களும் அங்கே சூழ்ந்திருக்கும். அந்தக் குளத்துக்குப் பேர் அதோ தீர்த்தமென்று சொல்லப்படும். அந்தத் தீர்த்தக்கரையிலே முன்னே பசித்திளைத்துவந்த செங்கால் நாரையானது அமர்ந்து அந்தத் தீர்த்தத்திலே பெரிய தபோதனர்க ளெல்லாரும் வந்து முழுகியெழும் போது அவர்கள் சடையோடுகூடத் துள்ளி விளையாடுகிற மீன்களைக் கண்டு, அச்சோ! இந்த மகாமுனிவர்கள் திருமேனிகளைத் தீண்டுதற்கு இந்த மீன்கள் என்ன புண்ணியங்கள் செய்தனவோவென் றதிசயித்து இவ்வளவு யோக்கியதைகொண்ட இந்த மீன்களை நாம் தின்னலாகாதென்று வெறுத்து, அங்கே சும்மா பட்டினியே யிருந்தது. அக்காலத்தில் அங்கே யிருக்கிற சந்நியாசிகளெல்லோரும் அந்தத் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து, நித்திய கருமானுஷ்டானங்களெல்லா முடித்துக்கொண்டு, அந்தச் சந்நியாமடத்திலே யிருந்து, முன்னே சுந்தரபாண்டியனாய் அரசாண்ட சோமசுந்தரக் கடவுள் மதுரைப் புராணமாகிய சாஸ்திர காலக்ஷேபந் தொடங்கிக் கடவுளருள் விளையாடல்களும், அந்த மூர்த்தி, தீர்த்தம், தலப்பெருமைகளும் அன்பர்க் கெளியானென்றும், அவர்கள் சொல்லக்கேட்டு, அங்கே யிருக்கும் நாரையானது தனதஞ்ஞானம் நீங்கிப், பாசவினையவிழ்ந்து, மெய்ஞ்ஞானந் தோன்றிச் சிவபரஞ்சோதியின் திருப்பாதத் தியானத்தினன்பு வாவென்றிழுக்க எழுந்து உடனே பரமேஸ்வரன் எழுந்தருளி யிருக்கின்ற மதுராபுரிக்கு வந்து பொற்றாமரைத் தீர்த்தத்திலே முழுகித் தெய்வயானை தாங்குகின்ற இந்திர விமானத்தில் விளங்கு

கின்ற சோமசுந்தரக் கடவுளை வணங்கிப் பிரதக்ஷணஞ் செய்து கிருபா திருஷ்டி தோன்றத் தரிசித்துச் சந்நிதி முன்னே யிருந்து கடவுளது கிருபா சொரூபத்தைத் தியானித்து, இப்படிப் பதினைந்து நாளளவும் நியமந்தப்பாமல் இருந்து, பின்னும் நாரை பொற்றாமரைத் தீர்த்தத்திலே முழுக மதிலின் பக்கமாக வரும்போது, பசியினாலே வெந்து, இந்தத் தீர்த்தத்திலே துள்ளுகின்ற வேல் வாள்போன்ற மீன்களைப் பிடித்துண்போமென்று கொஞ்சம் மனதிலே நினைத்துப் பின்னும் கடவுளருலாலே ஞானந்தோன்றி, ஐயோ! இந்தத் தரும தீர்த்தத்தின் மீனை உண்ண நினைந்துப் பசியுண்டாயிற்றே; ஐயோ! எனக்கு இந்தப்பிறவி எக்காலந் தீருமென்று துக்கித்து, சோமசுந்தரக் கடவுள் திருவடித் தியானத்திலே மனம் வைத்திருக்கும்போது, தேவர்களும் வேதங்களுங் காணாதவராகிய கடவுள், அந்தணரை நினைத்த வடிவாய் அதன் முன்னே தோன்றி, ஓ நாரையே! நீ யெனக்கு மிகவும் பிரியையானாய், ஆகையால் உனக்கிப்போது வேண்டிய வரமென்னென்ன, அதுகேட்டுச் செங்கால் நாரை வணங்கிச் சுவாமி இந்தப் பிறவியைத் தீர்த்து உம்மடியார்கள் வாழ்கின்ற சிவலோகத்தை நான் சேரும்படிக்குத் திருவருள் செய்யவேண்டும். இன்னும் என் குலப்பறவைகளும் வேறுசாதிப் பறவைகளும், இந்தப் புண்ணியரூபமாகிய பொற்றாமரைத் தீர்த்தத்திலுள்ள மீன்களையுண்டால், எக்காலத்துந் தீராத பாவம் வந்து சம்பவிக்கும்; ஆகையால் எக்காலத்தும் இந்தக் குளத்திலே மீன்களில்லாதிருக்கும் படியாகச் செய்யும் வரமும் வேண்டுமென்ன, நல்லதென்று வெள்ளியம்பலவாணர் அந்த வரமிரண்டும் தந்து மறைந்தருளினார். உடனே நாரையுஞ் சிவலோகமடைந்து, ஐவகை வாத்தியங்களும முழங்க விமானத்தின் மேலேறி நான்கு தோள்களும் மூன்றுகண்களுமாய்ப் பூ மழைக்குள்ளே முழுகிப் போய்த் திருநந்திதேவர் கூட்டத்திலே யிருக்கலாயிற்று. அன்று முதல் இன்றளவும் பொற்றாமரைத் தீர்த்தத்திலே மீன்களே யுல்லாமல் நீர்வாழுயிர்கள் யாவுமில்லாமற் போயின. ஆனதினாலே இந்த நாரை தன் குலத்துக்கும் வேறு பறவைகளுக்கும் நல்லகதி யடையச் செய்ததென்று புகழலாமோ! கடவுளருளையே புகழலாமோ! ஆனாலும் சிவனடியரானால் அவர்களுக்கு அருமையான பொருள் ஒன்றுமில்லை. இவ்வாறு சுகுணபாண்டியன் நீதியோடு அரசு செலுத்திப் பின்பு சுவர்க்கலோகத்தை யடைந்தான்.

நாரைக்கு முத்திகொடுத்த படலம் முற்றிற்று.

---

கூடற்காண்டம் முற்றிற்று.

---

## திருவாலவாய்க் காண்டம்

நாற்பத்தொன்பதாவது

# திருவாலவாயான படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

பாயுடையார் விடுத்தபழி யழல்வழுதி யுடல் குளிப்பப் பதிகமோதும்
சேயுடையா ரணந்தினைக்குஞ் செவியுடையா றளவிறந்த திசைகளெட்டுந்
தோயுடையார் பொன்னிதழித் தொடையுடையார் விடவரவுஞ் சுற்று மால
வாயுடையார் புகழ்பாடப் பெறுவேமேல் வேண்டுவதிம் மனித யாக்கை.

உரை : ஈச்சம்பாயை ஆடையாகவுடைய சமணர்கள் (திருஞான சம்பந்தப் பிள்ளையார் எழுந்தருளியிருந்த திருமடத்தில்) வைத்த பழியையுடைய நெருப்பானது (அவர்களுக்குச் சார்பாயிருந்த) கூன் பாண்டியனது உடல் முழுதுஞ் சென்று வருந்தும்படிக்கு (செய் யேனே திருவாலவாய்) என்னுந் திருப்பதிகமோதி யருளிய அந்தத் திருஞானசம்பந்தப் பிள்ளையாரது தேவாரத் திருப்பதிகங்களாகிய தமிழ் வேதத்தை ஆனந்தமாகக் கேட்டுச் சந்தோஷிக்கின்ற திருச் செவியை யுடையவரும், விசாலம் பொருந்திய எட்டுத் திசைகளையும் ஆடையாக வுடையவரும், பொன்போலும் நிறத்தையுடைய கொன் றைமலர் மாலையைத் தரித்தவரும், விஷம் பொருந்திய சர்ப்பத்தினால் சூழப்பெற்ற திருவாலவா யென்னும் திருப்பதியை யுடையவருமாகிய சோமசுந்தரக் கடவுளாகிய புகழாகிய திருவிளையாடலைப் பாடும் புண் ணிய முண்டாமானால் இந்த மானிட சரீரமானது இன்னும் மிகுதியாக விரும்பத் தக்கதாகும்.

மீனாட்சியம்மையார்

வேதநெடு மாலாதி விண்ணுடர் மண்ணுடர் விரத யோகர்
மாதவர்யா வருங்காண மணிமுறுவல் சிறிதரும்பி மாடக் கூடல்
நாதனிரு திருக்கரந்தொட் டம்மியின்மேல் வைத்தகய னுட்டச்செல்லி
பாதமல ரெழுபிறவிக் கடனீந்தும் புணையென்பர் பற்றி லாதோர்.

உரை : பிரம்மனும் விஷ்ணு முதலாகிய தேவர்களும், பூலோக வாசிகளும், விரதத்தையுடைய யோகியர்களும், பெரிய தவத்தை யுடையவர்களும், மற்றவர்களுங் காணும்படி நான்மாடக்கூட லழக ராகிய சோமசுந்தரக்கடவுள் புன்சிரிப்போடும் தமதிரண்டு திருக் கரங்களாலுந் தொட்டு எடுத்து (திருக்கலியாண சமயத்தில்) அம்மி யின்மேல் வைத்தருளிய ஸ்ரீ மீனுட்சித்தாயாரது திருவடித்தாமரையை எல்லாப் பற்றுகளையும் துறந்த பெரியோர் தமது பிறவிப் பெருங் கடலைக் கடக்குந் தெப்பமாகக்கொண்டு துதிப்பார்கள்,

வேறு

ஓலவாய் மறைக டேறு வொருவன்றன் னுலகந் தன்னைச்
சேலவா யுழலு நாரைக் கருளிய செயலி தம்ம
நீலவாய் மணிநேர் கண்ட னெடியநான் மாடக் கூடல்
ஆலவா யாகச் செய்த வருட்டிற மெடுத்துச் சொல்வாம்.

உரை: வேதங்கள் ஓலமிட்டும் உணரக்கூடாத சோமசுந்தரக் கடவுள், மீனை விரும்பிச் சென்ற நாரைக்கு மோக்ஷ வீடாகிய தமது சிவலோகத்தைக் கொடுத்தருளிய திருவிளையாட லிதுவாகும். இனி, நீலரத்தினம்போல விளங்குந் திருமிடற்றினையுடைய அச் சிவபரஞ் சுடர் நான்மாடக்கூடலைத் திருவாலவாயாக்கிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அந்தச் சுகுணபாண்டியனுக்குப் பின்பு, சித்திரவிரதன் - சித்திர பூடணன்-சித்திரத்துவசன் - சித்திரவருமன் - சித்திரசேனன் - சித்திர விக்கிரமன்-இராஜமார்த்தாண்டன் - இராஜசூடாமணி - இராஜசார்த் தூலன் - துவிதராஜகுலோத்தமன் - ஆயோதனப்பிரவீணன் - இராஜ குஞ்சரன்-இராஜபயங்கரன் - உக்கிரசேனன் - சத்துருஞ்சயன் -வீமத் தேர்மன்னன் - வீரபராக்கிரமன் - பிரதாபமார்த்தாண்டன் - விக்கிரம கஞ்சுகன் சமரகோலாகலன்-அதுலவிக்கிரமன் - அதுலகீர்த்தி என்று இப்படி இருபத்திரண்டு பாண்டியர்க ளொருவருக்கொருவர் புத்திர ராய் மதுரையை அரசாண்ட பின்பு, அந்த அதுலகீர்த்திப் பாண்டிய னுக்கு மகனான கீர்த்திபூஷண பாண்டியன் மதுரையை ஆளுங்காலத் தில் கடல்களேழும் தமக்குக் காவலான கரையைக் கடந்து பொங்கி முழுதும் வெளியே வந்து, முழங்கி விரைந்து அதிவேகமாய் மேலுலக மும் இந்த உலகமும், எட்டு யானைகளும், எட்டுமலைகளும், சக்கிரவாள கிரியும் மறையப் பிரளய காலம்போல வந்து கவிந்து கொண்டது. அந்த மகாப் பிரளயமான வெள்ளத்திலே எல்லா வுலகங்களும், சப்த தீவுகளும், இவைகளிலுள்ள சராசரங்களும் மலைகளு மழிந்துபோயின. மீனாட்சியம்மை திருக்கோயிலும், இந்திரவிமானமும், பொற்றாமரைக் குளமும் சோமசுந்தரக்கடவுள் திருவிளையாடல்களினாலே யுண்டான இடபமலை, யானைமலை, நாகமலை, பசுமலை, பன்றிமலையாகிய இவைகள் அழியாதிருந்தன. பின்பு அந்தப்பிரளயம் வற்றிப்போகக் கண்டு முதற்கடவுளான சிவபெருமான், பழையபடி உலகங்களு முயிர்களும் தோன்றச்செய்து, சோமசூரியாக்கினிகளான மூவர்குலத்துத் தமிழ் நாட்டு மூவரான சேரசோழபாண்டியர்களையு முண்டாகச்செய்து. சந் திரகுலத்தரான பாண்டியரில், அறுபத்துநாலு கலைகளுங்கொண்டது ஒரு சந்திரன் என்று சொல்லும்படி, வங்கியசேகர பாண்டியன் பிறந்து, தங்கள் கடவுளின் திருக்கோயிலைச்சுற்றிக் கொஞ்சமாகப் பட்டண முண்டாக்கி, அதிலிருந்து நரசிங்கமூர்த்திபோல உலகாண்டு வருகிற காலத்திலே, அந்த வங்கியசேகர பாண்டியன் மனுநீதிப்படியே செங் கோல் செலுத்துகிறதினாலே கலிதோஷந்தீர்ந்து, அவன் நாடெல் லாஞ்செழித்து விளைவு மிகுதியாய்ப் பலவகை வளங்களும் பெருகி, சீவ

ராசிகளும் அதிகமாயின. அக்காலத்திலே அந்தப் பாண்டியன் சோம சுந்தரக்கடவுள் திருக்கோயிலுக்குப் போய் வணங்கிச் சுவாமி! உம் முடைய அருளின் பலத்தினலே இந்தப் பூமிபாரந் தாங்கிவந்த எனக் கிப்போதொரு குறைவுண்டாயிற்று. அதாவது:—ஜனங்கள் அதிக மாய் இருக்க இடம் போதாமல் நானும் உம்முடைய திருக்கோயிலுக் குள்ளே வந்து குடியிருக்கும்படியாய்நேரிட்டதாகையாலே, இவ்வளவு மனிதர்களும் இருக்கத்தக்கதான பட்டணமொன்றுண்டாக்க நான் விரும்பினல், முன்னையோர்கள் கட்டியிருந்த அளவு தெரியவில்லை. ஆதலால் இப்போது முன்னிருந்த பட்டணத்தி னளவிப்படியென்று எனக்குத் தெரியக் காட்டவேண்டுமென்று மிகவும் வேண்டினன். அப் போது அணுவுக்கணுவாய் இந்திர விமானத்தி லெழுந்தருளியிருக்கிற சோமசுந்தரக் கடவுள். பாண்டியனுக்காக அன்புக்கெளிய சித்த ராகத் திருவுருவங்கொண்டு, கிருபைக்கடலாகக் கடிசூத்திரம் - கோவ ணம்-பூணுநூல் - சன்னவீரம் - குழை - குண்டலம் - பாதகிண் கிணி- சிலம்பு-கங்கணம் முதலானவெல்லாம் பாம்பாக அணிந்து கொண்டு வந்து, பெரிய மண்டபத்திலே நின்று, தமது கையிற் கங்கணமாயிருக் கிற ஒரு ஆலவாய்ப் பாம்பைப் பார்த்து, நீ இந்தப் பாண்டியனுக்கு இந்தப் பட்டணத்தினளவைத் தெரிந்து அளந்து காட்டக்கட்வா யென்ன, அதற்கு அந்த ஆலவாய்ப் பாம்பானது சித்தர் பாதங்களை வணங்கிச் சுவாமி! இனி இந்தப்பட்டணம் என் பெயராலே விளங்கச் செய்ய வேண்டுமென்ன, அப்போது சித்தரான கடவுள் அப்படியே யாக வென்றருள்செய்ய உடனே அந்த ஆலவாய்ப் பாம்பு விரைவிலே சென்று, கிழக்குத்திக்கிலே தன் வாலை நீட்டிப் பட்டணத்தை வல மாகப் பூமியிற் படிந்து, உடலை வளைத்து, வாயிலே வாலை வைத்துப் பாண்டியனுக்கு அளவு தெரியக்காட்டி, மீண்டும் சித்தர் கையிற் கங் கணமாக வந்து பொருந்திற்று. அப்போது சித்தராகிய கடவுள் தம் முடைய திருக்கோயிலுக் கெழுந்தருளினர். பின்பு பாண்டியன் அந்த ஆலவாய் வளைத்துக் காட்டினபடியே சூழமதிலெடுத்து ஏழுகடலையும் சக்கரவாளகிரி சூழ்ந்தாற்போல், தெற்கே திருப்பரங்குன்றமும், வடக்கே இடபமலையும், மேற்கே திருவேங்கடமும், கிழக்கே திருப்பூ வணமும், இப்படி நான்கு திசைக்கும் நான்கு வாயிலெல்லையாக வகுத்து, அந்த மதிலுக்கு ஆலவாயென்று பெயரிட்டு, முற்காலத் துள்ளபடியே மதில்கள் மண்டபங்கள் - கோபுரங்கள் - வீதிகள் - சோலைகள் முதலான வெல்லாம் புதிதாக அமைத்துக் கடவுளுக்கும் பெரிய கோளகை - கிரீடம் - திருவாபரணங்களெல்லாம் ரத்தினங்க ளாலும் தங்கத்தாலும் வெவ்வேறே செய்வித்து, பின்னும் பலவகை யான குடிகளெல்லாம் நிரம்பச்செய்து, இந்திரலோகத்திலும் அதிக சிறப்புள்ளதாக எல்லா வளங்களும் பெருக, முன்னுளிலே குலசேகர பாண்டியன் செய்த மதுரையை இக்காலத்தில் திருவாலவாயென்று பெயர் விளங்கச் செய்தான்.

திருவாலவாயான படலம் முற்றிற்று.

---

ஐம்பதாவது

# சுந்தரப்பேரம்பெய்த படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அங்கண ருரக மணிந்தருள் வடிவ மடைந்தர சகமகிழக்
கங்கண விடவ்ர வங்கொடு கடிநகர் கண்டருண் முறையிதுவாஞ்
சங்கணி குழையினர் பஞ்சவன் வழிபடு தம்பெய ரெழுதியகூர் [ம்
வெங்கணை கொடுவள வன்படை முடுகிய வென்றியை யினிமொழிவா

உரை: அழகிய கண்ணுளராய் விளங்கும் சோமசுந்தரக் கடவுள் சர்ப்பங்களை ஆபரணமாக வணிந்து சித்தவடிவந் தாங்கி வந்து, பாண்டியன் சந்தோஷிக்கும்படி தமது திருக்கரத்தில் தரித்திருந்த கங்கணமாகிய பாம்பை விடுத்து மதுராபுரியின் எல்லைக்கண்டருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இனி சங்கக்குழையினை யணிந்த அந்தப் பரமேஸ்வரர் பாண்டியன் வழிபடுகிற தம்முடைய திருப்பேரெழுதிய கூர்மையுடைய வெவ்விய பாணங்களை விடுத்துச் சோழனுடைய சேனை முறிபடச் செய்தருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அந்த வங்கியசேகர பாண்டியன் வெண்கொற்றக் குடைநிழலிலே பூமிதேவியும் லட்சுமிதேவியும், சரஸ்வதிதேவியும் நிலைபெற்றுவாழுங் காலத்திலே, அநேகம் யானைப்படைகள் சூழ எதிர்த்த பகைவரை வென்று, தன் பாதங்களை வணங்கச் செய்து, வெற்றிமாலை சூடிய விக்கிரமசோழனென்பவன் இந்தச் சந்திர குலத்தரசனுன வங்கிய சேகரபாண்டியனை வெல்லும் உபாயங்கொண்டு, கடல்போலுஞ்சேனைகள் சூழக் கஜபதி - நரபதி - துரகபதி முதலான வடதேசத்து ராஜாகளுடனே பல வாத்தியங்களும் முழங்கத் தேர்மேலேறி நடத்திக் காவிரியாற்றினருகே வந்திறங்கிக்கொண்டு, வலிசெய்யத தொடங்க, அவன் சேனைவீரர்கள் கோபித்துப் பாண்டிநாட்டிலுள்ள பசுக்களை ஓட்டிக்கொண்டு வந்து குறும்புகள் பண்ணியும், குளங்க ளேரிகளை யுடைத்துவிட்டும, அந்த ஆலவாய்க்கு வருகிற பலசரககுகளையும் வழி கட்டி அடித்துக் கொள்ளையிட்டும், வருவார் போவார்களை வரவும போக வொட்டாமல், வாதைப்படுத்திப் பயங்காட்டியன், இப்படிச் சண்டைக்கு ஆரம்பித்து, மதுரையாகிய ஆலவாயைக் கட்டினார்கள். இப்படி இவர்கள பலாதகாரம் பண்ணுவதைப் பாண்டியன் கேள்விப்பட்டு, இனியென்ன செய்வோம், சோழன் சேனையோ அளவில்லை, அவை வந்து சண்டை செய்யத் தொடங்கினுல் என்னுல் வென்று முடியாது. ஆகையாலே இந்தச் செய்தியைச் சுந்தரனையும கங்கையையுந் தரித்த சடாதரரான கடவுள் திருவடிககு முன்னே நின்று சொல்லி, வரம் பெறுவோமென்று திருக்கோயிலுககுப போய் கடவுளை வணங்

கிக் கிருபா சொரூபியான தெய்வமே! அடியனோடு விக்கிரம சோழன் சண்டைசெய்து வெல்ல அன்னிய தேசத்தரசர்களுடன் வந்து கூடாரங்க ளடித்துக்கொண் டிறங்கினுன். அவன் சேனைகளோ டெதிர்த்துச் சண்டை செய்யத்தக்க சேனைக ளெனக்கில்லை, இன்னும் அவன் அவ்வளவு சேனைகளுடனே வந்து புகுந்தால் எனக்குக் காவலாக வேறே கோட்டை யுண்டோ? ஓகோ தெய்வமே! இனிமே லெனக்கென்ன கதியென்று வேண்ட, அதற்குக் கடவுள், ஓய் பாண்டியா! நீ முந்திசென்று சண்டைபண்ணுகிறபடியே சண்டைபண்ணு, நாமும் பின்னே உனக்குத் துணையாய்க் கூடவே வந்து நீயே வெற்றி கொள்ளும்படிச் சண்டை செய்கிறோம். பயப்படாதே யென்று ஆகாச வாக்காகச் சொல்ல, அவ்வார்த்தையைப் பாண்டியன் கேட்டு, மனங் களித்து ஆனந்தக்கண்ணீரொழுக, இரண்டு கைகளையுந் தலைமேலே குவித்து வணங்கிக்கொண்டு, வெளியே புறப்படும்போது, ஒரு தூதன் வந்து ஐயா! பாண்டிய மகாராஜனே! விக்கிரமசோழனுடைய சேனைகள் நம்முடைய இடபமலைக்கருகே வந்துவிட்டனவென்று சொல்ல, அதுகேட்ட பாண்டியன் பலவாத்தியங்களும் முழங்க வலம்புரிச் சங்க மூத, தேரை மனவேகமும் பின்னிடும்படி சாரதி செலுத்த ரத கஜ துரகபதாதிகள் சூழத் தன்னுடைய திருவாலவாய் மதிலைச் சுற்றின அகழிபோல வந்து வளைந்த சோழனுடைய சேனைகளுக்கெதிரே, வஞ்சிமாலை சூடிக்கொண்டு சேனைகளுடன் நெருங்க, அந்த இரு திறத்துச் சேனைகளும் யுத்தகளத்தை யடைந்து, அநேக சபதங்கள் சொல்லி, ஒருவருக்கொருவராகத் தேர்வீரருடனே தேர்வீரரும், யானை வீரருடனே யானைவீரரும், குதிரைவீரருடனே குதிரை வீரரும் வில்லாளிகளுடனே வில்லாளிகளும், வேலாளிகளுடனே வேலாளிகளும், கத்தி கேடகக்காரர்களுடனே கத்தி கேடகக்காரர்களும், சிங்கங்களுடனே சிங்கங்க ளெதிர்த்தாற் போலச் சண்டை செய்ய, அப்போது பாண்டியன் தேர்மேல் வருகிற சோழனுடனே சண்டை செய்யத் தொடங்கினது சந்திரனும் சூரியனு மெதிர்த்ததே சரி யென்றுசொல்ல துள்ளுகின்ற குதிரைக ளனுமானிப்பும் மதமழை பொழிகிற யானைகளின் சத்தமும், ரதங்களி னோசையும், வீரர்கள் கெர்ச்சனையும், அவர்கள் வீரகண்டாமணிச் சத்தமும், பலவாத்தியங் களினுடைய ஓசையும்கூடி எங்குங் கல்லென்றொலிக்கக் கடல்நீரைக் குடித்துவந்து மேகங்க ளொன்றுடனே யொன் றெதிர்த்தாற்போல வெதிர்த்து, இடியேறுபோல முழங்கி, நீண்ட மலைப்பாம்புபோலத் தொங்குகிற கைகளுடனே ஒன்றோடொன்றெதிர்த்து இருப்புலக்கை களை யெடுத்து ஒன்றையொன்றடித்து, இரத்தங்கள் பெருகியோட, யானைகள் உயிர்சேர்ந்து விழுகின்றன. வீரன் ஒருவன் தானெய்த பாணங்களைத் தடுத்துப் பின்னும் பாணங்களைவிட்டு மார்பைத் துளை செய்யக்கண்டு சிரித்து அவன் வீரத்தை மெச்சுவான். மற்றொருவன் மிகவும் கூரியதானவேலை யெடுத்தெறிய அந்தவேலை இன்னுமொரு வன் தன் கைவாளாலே வெட்டித் துண்டாக்கினுன்.

இப்படி யொருவர்க்கொருவர் பின்வாங்காமற் போர்செய்யும் போது மிகுந்த சேனைகளையுடைய சோழராஜனுக்குத் துணையாகவந்த வடதேசத்தரசர்கள் உலகமுடியுங் காலத்திலே சூரைக்காற்று வீசக் கொதித்தெழும்பின வடவாக்கினிபோலக் கொதித்துப் போர்மூண்டு செய்யும்போது, பாண்டியன் சேனைகள் நிலைகொள்ளாமல், பளபள வென்று மின்னுகிற கத்திகளுடனே வில்லுகளுமிழந்து, ஏறின தேர் களுங் குதிரைகளு மிழந்து, வீரர்களும், பாகர்களும் ஓடும்போது, அவர்களைச் சோழராசன் கண்டு, பாண்டியன் போர்செய்ய மாட்டா மல் தோற்றானென்றும், இனி வெற்றி தன்னதென்றும் நினைத்து, மிகுந்த கெருவத்துடனே தன் வெற்றிச்சங்கை யெடுத்தூதினான். அப் படிப்பட்ட சமயத்தில், முன்னாளிலே தண்ணீர்ப்பந்தல் வைத்தும், மடுவிலே தள்ளியும், ஜெயம்பெறச்செய்த கடவுள் அப்போது வந்த படியே, இப்போதும் ஒரு வேடராஜனாக வடிவங்கொண்டெழுந் தரு ளிப் பாண்டியன் சேனைகளை யோடாமல் நிற்கச்செய்து, தாமே ரக்ஷக ராய்க் கைவில்லை வளைத்துச் சுந்தரேசரென்று தமது பேரெழுதின கூரிய பாணங்களைப்பிரயோகித்து, தானேவென்றதாக சங்குமுழக்கின சோழன் சேனைகளோடும்படி செய்யும்போது, அவர் விடுகிற பாணங் களில் ஒவ்வொரு பாணம் நூறுநூறு மகா வீரர்களைக் கொல்லக் கண்ட சோழன், இதென்ன புதுமை, ஒரு பாணம் நூறுபேரைக் கொல்வதற் குக் காரணமென்ன? அந்தப்பாணத்துக்கிவ்வளவு வலிமை யெப்படி வந்ததென்று சந்தேகித்து அந்தப் பாணத்திலொன்றைக் கொண்டு வரச்சொல்லி, அதிலெழுதி யிருக்கிற பெயரை வாசித்து, இது சுந்த ரேசரென் றெழுதியிருக்கிறதினாலே, பாண்டியனுக்குத் திருவால வாய்க்கடவுளே துணையாக வந்து போர்செய்தால் நம்மாலே வெல்லக் கூடுமோ வென்று பயந்து தனது காவிரிநாட்டைக் குறித்து மீண்டு செல்லும்போது, அவனுக்குத் துணையாகவந்த வடதேசத்தரசர்கள், துருக்கர்கள், ஒட்டியர்கள் முதலான வெல்லோரும் வந்து நில்லும் சோழமகாராஜனே யென்று கோபங்கொண்டு வைது நாங்களெல் லோருமிருக்க நீ தோற்றோடினால், உன் கருத்தும் ஆண்மையும் புகழும் எத்துடன் சேரும்? நீ ஓடவேண்டாம் வாவென்று கோபித்து இடி போல் முழங்கிப் பாண்டியன் சேனைமேல் விழுந்து கும்புகும்பாக நின்று விற்களை வளைத்துக் கொடிய பாணங்களைப் பந்திபந்தியாக விட்டு சேனைகள் தெரியாமல் மறைத்து மூடினார்கள்.

அதுகண்டு முன்காயம்வாங்கி வேடவீரனாக நின்ற சோமசுந்தரக் கடவுள் முன்னே தாம்கொண்ட மகாமேருவைப்போன்ற வில்லை வளைத்து ஒருபாணத்தைவிட்டு அவர்கள்விட்ட பாணங்களெல்லாவற் றையும் அறுத்துத் தொலைத்துப் பின்னும் பத்தம்பைவிட்டு ஆயிரந் தேரை யுடைத்து, மறுபடியும் பத்தம்பினாலே ஆயிரம் யானைகளைக் கொன்று, பத்தம்பினாலே ஆயிரம் குதிரைகளையறுத்து, பத்தம்பி னாலே ஆயிரம் வீரர்களைக் கொலைசெய்து, பின்னும் நூறம்புவிட்டு பதி னாயிரங் குதிரைகளைக்கொன்று, நூறம்பினாலே பதினாயிரம் யானைகளைக்

கொன்று, நூறம்பினாலே பதினாயிரம் தேர்களையழித்து, நூறம்பினாலே பதினாயிரம் மகாவீரர்களை வென்று, பின்னும் ஆயிரம் பாணங்களை விட்டு நூறாயிரங்குதிரைகளைக்கொன்று, ஆயிரம் பாணங்களாலே நூறாயிரம் யானைகளைக்கொன்று, ஆயிரம் பாணங்களாலே நூறாயிரம் தேர்களை யழித்து, ஆயிரம் பாணங்களாலே நூறாயிரம் பதாதிகளைக் கொன்றார். இப்படிச் சண்டைசெய்யத் தோள்களறுபட்டன. கால்கள் முரிபட்டன. தலைகள் மண்ணிலே படிந்துவிழுந்தன. ரத்தவெள்ளங்கள் இறந்த பிணங்களை இழுத்துக்கொண்டோடின. அவர்கள் புனைந்து வந்த தும்பைமாலைகளற்று விழுந்தன. ரதகஜ துரகபதாதிகளெல்லாம் மடிந்தன. மிஞ்சின சேனைகள் எதிர்நிற்க அஞ்சி யொதுங்கிப் போயின. பின்னும் உயிர்கள் சூரியமண்டலத்தின் வழியே முன்னே தாமுங்கூடப்போவதுபோல் அநேகந் தலைகளறுபட்டு உயரச்செல்லுகின்றன. சிலகுறைத்தலைகள் கூக்குரலிட்டுக் கூத்தாடக் குற்றுயிரான உடல்கள் கைகளைக்கொட்டித் தாளம்போடுகின்றன. ஒருபுறத்தில் பூமியில் விழும்படி தமது தலையை யறுக்கவர்களைத் தலைபோனவுடல் கையிலிருக்கிற வேலாலே குத்தித்தள்ளுகின்றன. ஒருபுறத்தில் சில கவந்தங்கள் எதிர்நின்று மார்பைத்தட்ட அற்றதலைகள் வாயைமென்று பல்லைக்கடித்து விழுந்து கொக்கரிக்கின்றன. ஒருபுறத்தில் இரண்டு தலைகளற்றுவிழ, அத்தலைகள் ஒன்றற்கொன்று முகப்பழக்கத்தினாலே வெண்பற்கள் தோன்றச் சிரித்துப் பிரியாமல் கூடவே வந்தாயோவென்று அன்புகொண்டு எதிரே சொல்லிச்சேர, ஒன்றுக்கொன்று மோந்து வாடிநின்றன. பின்னும் ஆகாயத்திலே பறக்கிற பருந்துகளும், காகங்களும் கழுகுகளும், அத்தப் போர்க்களத்திலே இறந்து விழுந்தவர்கள் உடல்களின் மேலே வேர்வை போக விசிறிகள்கொண்டு விசிறுகிறதுபோலச் சிறகடித்துக் கொள்வன. ரத்தவெள்ளங்கள் இழுக்க மிகந்தோடுகிற தேர்களுடனே பேய்ப்பிள்ளைகள் கடலிலே கப்பல்களைத் தள்ளிச் சாய்க்கிற மகரமீன்கள்போலக் கீழேமுழுகி, மேலே தோன்றுகின்றன. ஒருபுறத்தில் இறந்தவருடல்களைக் கத்தியறுத்திழுக்க, ஒருபுறங் கழுகு, பருந்து, காகங்கள் கொத்திக்கொத்தி யிழுக்க, ஒருபுறம் பூதங்களிழுக்க, கூளிகள் மொய்த்துக் கொண்டொருபுறமிழுக்க, ஒருபக்கத்தில் வால்களெல்லாம் அகப்பைகளாகவும், செவிகள் முறங்களாகவும், கொம்பின் முத்துக்கள் அரிசிகளாகவும், கால்கள் உரல்களாகவும், கொம்புகள் உலக்கைகளாகவும், உடல்கள் பானைசட்டியாகவும், இரத்தமே நெருப்பாகவும், மத்தகம் அடுப்பாகவும், இப்படி யானைகளிறந்த விடங்கள் மடைப்பள்ளிபோலாக ஒரு புறத்தில் பிணங்களாலே கரைகட்டி ரத்தவெள்ளத்தைத் தேங்கச்செய்து, குடிக்கப்போகிற பேய்களை உதைத்துத் தள்ளிவிட்டு, முன்னே வையையாறு பெருகிவர, மண்டிபோட்டிருந்து குடித்தபூதத்தைப்போலவே ஒரு பெரிய பூதம் அந்தக் கரையையுடைத்து விட்டு நிணமுங் கொழுப்புமாக வருகிற ரத்த வெள்ளத்தைக் கையாலணைத்துக்கொண்டு எதிரேயிருந்து குடிக்கின்றது.

இப்படியாகத் திருவாலவாய் கடவுள் சுந்தரரென்று பெயரெழுதியிருக்கிற பாணங்களைப் பிரயோகிக்க, அந்தப் பாணங்களாலே சோழனுக்குத் துணையாக வந்தவர்களும், எட்டிமரத்தைச் சேர்ந்த சந்தனமரங்களும் கூடக் காட்டுத்தீயால் வெந்தது போல் மடிந்தார்கள். கடவுள் பாணங்களாலிறந்தோர் உடல்களை யுண்ண மொய்த்த கூளிகள், பருந்துகள், காக்கைகள், கழுகுகள் முதலானவைகள் ஒன்றற்கொன்று எனக்குனக்கென்று சண்டைசெய்யத் தொடங்கின. இப்படி வேட வீரராகிய கடவுளாலே தன் சேனைகளெல்லா மடியக் கண்ட சோழன், பகைவர் நகையும் மிஞ்சின சேனைகளுஞ் சூழ்ந்து பின்னே வரத் தான் முதுகிட்டோடிப் போனான். பின்பு வில்லுடனே யிறங்கின மேகம்போன்ற கடவுள் ஜெயங்கொண்ட பாண்டியன் முகத்தைப் பார்த்துப் புன்னகை செய்து தமது திருவுருமறைத் தருளினார். அப்போது வேப்பமாலை யணிந்த பாண்டியன் தனது வெற்றிச்சங்கை வாயில் வைத்தூதி முழங்கிப் பட்டத்து யானைமே லேறிக்கொண்டு பல்லாண்டு மங்களங்கள் பாடத் திருவாலவாய் நகரை யடைந்தான். அப்படிப் பட்டணத்துள்வத்து கடவுளுக்குப் பொன்னாலும் ரத்தினங்களாலும் ஆபரணங்கள் செய்வித்து தரித்து, நீண்ட வில்லும் சுந்தரரென்னும் திருப்பேரெழுதின அம்பும் பண்ணிச் சாத்தி, வங்கியசேகரப் பாண்டியன் கடல் சூழ்ந்த வுலகமெல்லாம் தருமநீதிபெருக அரசாக்ஷி செய்திருந்தான்.

சுந்தரப்பே ரம்பெய்த படலம் முற்றிற்று.

---

ஐம்பத்தோராவது

## சங்கப்பலகை தந்த படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

வேடுரு வாகி வில்விதன் ஞமக் கோலெய்
தாடம ராடித் தென்ன னடுபகை துறந்த வண்ணம்
பாடினஞ் சங்கத் தார்க்குப் பலகைதந் தவரோ டொப்பக்
கூடிமுத் தமிழின் செல்வம் விளக்கிய கொள்கை சொல்வாம்.

உரை: மேருமலையை வில்லாகக் கொண்டருளிய சோமசுந்தரர் வேடுருவந் தாங்கி, தம்முடைய திருப்பேரெழுதிய அம்புகளைத் தூவி, வெற்றியுண்டாகச் சண்டை செய்து, பாண்டியனது பகையை யொழித்த திருவிளையாடலைச் சொன்னோம். இனி சங்கப் புலவர்களுக்குச் சங்கப்பலகை கொடுத்து, அந்தப் புலவர்களோடு தாமுமொருவராக எழுந்தருளி யிருந்து (இயல், இசை, நாடகமென்னும்) முத்தமிழின் செல்வங்களை விளக்கி யருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அந்த வங்கியசேகர பாண்டியன் நீதி செலுத்தி அரசாளுங் காலத்தில், தாமரைப்பூவாசனத்திலே வாசஞ் செய்கின்ற நான்முகனான பிரமதேவன், ஸ்ரீ காசிப்பட்டணத்துக்கு வந்து பத்து அசுவமேத யாகஞ் செய்து, பெரியோர்களெல்லாம் சந்தோஷிக்க வேதாகமப்படி முடித்தபின்பு, ஸ்நானம் பண்ணுதற்குத் தன் பத்தினிகளான வாணி, சாவித்திரி, காயத்திரி என்னும் மூன்று பெண்களுடனே கூடிக் கங்கையை நோக்கிப் போகும்போது, வழியில் அந்த மூவரிலொருத்தியான வாணி யென்பவள், ஆகாயமார்க்கத்திலே சஞ்சரிக்கிறவளான ஒரு விஞ்சையர் கன்னியானவள் பாடுகின்ற கானத்திலே தன் மனதைச் செலுத்திக் கூடப்போகாம லங்கேதானே நிற்க, பிரமதேவன் மற்ற இருவருடனே கங்கைக்குப் போன பின்பும் வாணி வராமல் கால தாமதஞ் செய்யப் பிரமதேவன் ஒன்றும் யோசியாமல் அந்த இருவருடனேகூடிக் கங்கையில் ஸ்நானஞ்செய்து கரையேறும்போது, வாணிவந்து நானில்லாமல் நீ எப்படி ஸ்நானஞ் செய்யக்கூடுமென்று கோபிக்க, அதுகேட்ட பிரமதேவன், ஓ வாணியே! குற்றம் உன் மேலிருக்க, நீ என்னை வீணே கோபித்த குற்றந்தீர, நீ அளவில்லாத மனிதப்பிறவி பிறந்து இந்தக் குற்றந் தீரக்கடவை யென்று சாபங் கொடுக்க, அந்தச் சாபத்தை யேற்ற வாணியானவள் மிகவும் பயந்து புலம்பித் துக்கித்து, சுவாமி! பிறப்பில்லாத உமக்குப் பாரியான நான் இப்படி மனிதப்பிறவியி லகப்பட்டு மயங்கலாமோ வென்று கேட்க, அதற்கு அந்த வெண்டாமரைச் செல்வியான வாணியினுடைய துன்பம் போக வெண்ணிப் பிரமதேவன், ஓ வாணியே! உன் சொருபமான ஐம்பத்தோ ரெழுத்தில் அகரமுதலாக நாற்பத்தெட்டு எழுத்துக்களும் நாற்பத்தெட்டுப் புலவர்களாக உலகத்திலே பிறக்கக் கடவன. அந்தந்த வருக்கங்களிலும் மற்றவைகளிலுமேறி அந்தப் படியேயாய், இன்னும் வெவ்வேறு உச்சரிப்புகள் தோன்றவுஞ் செய்கிற அகரவுயிர்க்கு முதலாக விளங்குகின்ற கடவுள் திருவாலவாய்க் கடவுளே யாகலான் அக்கடவுளும் ஒரு புலவருருக்கொண்டு சங்கப் பலகை யேறியிருந்து நாற்பத்தொன்பதின்மராகி, மற்ற நாற்பத்தெண்மருக்கும் உள்ளே நின்று, ஞானந் தோன்றச் செய்து, அங்கே முத்தமிழ்ப் புலமையும் நிரம்பச் செய்வாரென்று பிரமதேவன் சொல்ல, அப்படியே அந்த நாற்பத்தெட்டெழுத்தும் உலகத்திலே வெவ்வேறே மனித ஜாதிகளாகப் பிறந்து பலவகையான மாட்சிமை கொண்ட சாஸ்திரங்களின் வகைகளெல்லாந் தெரிந்து, தகுதியான தென்கலையிலே நுண்ணறிவுடையரா அத் தமிழ்ப் புலமையில் தலைமையானவர்களாய் உயர்ந்து, வயிர ரத்தினங்கள் பதித்த ஆபரணங்களை யல்லாமல் ஸ்ரீ ருத்திராக்ஷமாலிகைகளும்; பூணுகின்ற துல்லியமான திருநீறு மணிந்த திருமேனியை யுடையவர்களாய்ச் சோமசுந்தரக் கடவுளுக்குத் தாங்கள் வழுவழுக்கற்ற தமிழ்மாலை சூட்டுவதே யன்றி, ஆய்ந்து கொண்டுவந்த பூமாலைகளுஞ் சூட்டி அருச்சனை செய்வார்கள்.

பின்னும் ஊர்கள்தோறும் போய்த் தங்கள் புலமைத் தனத்தாலே ஜெயங்கொண்டு பொருநையாற்று வளங்கொண்ட பாண்டிய நாட்டில் வந்து உலகமெல்லாம் ஆளுகின்ற செல்வச் செருக்கா னிறைந்த நிதிபோலும், பாண்டியன் செங்கோல் செலுத்துகின்ற மதுரைப் பதியை நோக்கி அவர்கள் வரும்போது பல்கலைப்பயனுன அற்புத மூர்த்தியென்னுந் திருவாலவாய்க்கடவுள் தாமும் அங்கே ஒரு புலவராகிப் பாதங்கள் நிலத்திலே படியவந்துகூடி, அங்கே வருகின்ற புலவர்களைப் பார்த்து நீங்கள் யார்? எங்கேயிருந்து வருகின்றீர்கள்? என்று கேட்க, அப்போதவர்கள், ஐயா! நாங்கள் புலவர்கள்; சகல பாவங்களையுந் தீர்க்கத்தக்க பொருநை நாட்டுக்குப் போக வருகிறோ மென்று சொல்ல, அப்போது, தனியே வந்த புலவர், அந்தப் புலவர்களைப் பார்த்து நீங்கள் தமிழ்வளம் பொருந்திய திருவாலவாயில் விளங்குகின்ற எங்கள் கருணை மூர்த்தியை வந்து வணங்க வேண்டும், ஆதலால் என்கூட வாருங்களென்ன, அதற்குப் புலவர்கள், ஐயா! நீரே எங்கள் வினைகளெல்லாம் தீர்க்கும் சோமசுந்தரக் கடவுளென்று கொண்டாடத் தனிப்புலவர் அந்தப் புலவர்கள்சூழத் திருக்கோயிலுக்குப்போய் மீனுட்சிசுந்தரேசரை வணங்கச்செய்து மறைந்து போயினர்.

பின்புவந்த சான்றோர்களாகிய புலவர்கள் இந்திரவிமானக் கடவுளைத் தனித்தனியே தமிழ்ச்செய்யுள்கள் பாடித்துதித்து வணங்கிக் கொண்டு வெளியேவந்து, பாண்டியனைப்போய்க் கண்டார்கள். பாண்டியன், வந்த புலவர்கள் கல்வி கேள்விகளைத் தெரிந்து, இவர்கள் ஒழுக்கத்தாலுயர்ந்த சான்றோர்களென்று மதித்து மனமகிழ்ந்து, சோமசுந்தரக்கடவுளின் திருக்கோயிலுக்கு வடமேற்றிசையில் ஒரு சங்க மண்டபமுண்டாக்கி, அப்புலவர்களுக்குத் தகுந்த சிறப்புகளுஞ் செய்வித்து நீங்கள் இந்த மண்டபத்திலேதானே அமர்ந்திருங்களென்று அந்தப் புலவர்களை நிலையாயிருக்கச் செய்தான். அப்படிப் பாண்டியன் வேண்டிய சிறப்புகள் செய்யக் கண்ட பழைய புலவர்கள் பொருமல், மனம் புழுங்கி, அந்தச் சங்கப் புலவர்களோடு பலவிதமான தர்க்கங்கள் செய்து, முன்னிருந்த புலமைத்தனமும் போய்த் தோற்றுத் துன்புற்றுப் போனர்கள். இப்படியே அன்னிய தேசத்துப புலவர்களெல்லாரும் வந்துவந்து கேள்விகள் கேட்டு வாதஞ்செய்து தோற்க, அவர்களை வென்றுகொண்டிருக்கிற சங்கப்புலவர்கள் ஆலோசித்து மீனுக்ஷி சுந்தரராகிய புலவரெழுந்தருளி யிருக்கும் திருக்கோயிலுக்குப் போய், முந்து நூல்மொழிந்த முதற்கடவுளை முறையே வணங்கி, ஸ்வாமி! எங்களைப் பலரும் வந்து வாதஞ் செய்கிறதினுலே அறிவு நிறைகாண்பதாக எங்களுக்கொரு சங்கப்பலகை தந்தருளவேண்டுமென்று கேட்டுவணங்கினுர்கள் அப்போது முன்னே பாடின பாணனுக்கு வலிய பலகை தந்த சோமசுந்தரக்கடவுள், வேண்டுமென்று கேட்கிற புலவர்களுக்குக் கொடுக்கத் தாமுமொரு புலவராய் ஒரு பலகையுடனே அவர்கள்

முன்னேவந்து, இந்தப் பலகை சதுரமா யிரண்டு சாணளவுள்ளது. சந்திரனிலும் பரிசுத்தமானது. மந்திரபலமுள்ளது, மூதறிஞரான உங்களைப் போல்வார்க்கு ஒருமுழம் வளர்ந்து இருக்க இடங்கொடுக்கு மென்று சொல்லி, வாணி வடிவாகிய புலவர்களுக்கு அந்த வாணிபீட மான வெண்டாமரை மலர்போன்ற பலகையைக் கொடுக்க, உடனே சங்கப்புலவர்கள் அப்பலகையை வாங்கிக்கொண்டு, திருக்கோயிலை வலம்வந்து, தங்கள் கல்விக் கழகமாகிய சங்கமண்டபத்துக்குப்போய்ப் பலகையைவைத்து, நல்லபூமாலை சாத்தி, பனிநீரிற் குழைத்த சந்தனம் பூசிப் புதுவஸ்திரம் சாத்தித் தூபதீபமுங் கொடுத்துத் தனித்தனியே பூசைபண்ணி வணங்கித் துதித்து முன்னே நற்கீரர் ஏறினர். பின்பு கபிலரும் பாணரும் ஏறினர்கள். பின்பு புலவர்கள் எல்லோரும் முறையே யேறியிருக்க இடங்கொடுத்துச் சோமசுந்தரக்கடவுள் தந்த பலகை ஒன்றுதானே எல்லாப்பொருளுஞ் சொல்ல இடங்கொடுக்கிற முன்னோர் நூல்போல விளங்கிற்று. பின்பு யாராயினும் வாதஞ் செய்ய வந்தால் அந்த மேம்பாடுபெற்ற சான்றோர்கள் நூற்பொருள் விளங்கக் காரணமும் உதாரணமும் எழுவகை மதமும் பேசும்போது கேட்டறிந்த கிளிகளும் பூவைகளுமே தடுத்துச் செவ்வையாக நிலைநிற்கச் செய்யும். இவ்விதமாக அந்த நாற்பத்தெட்டுப் புலவர்களும் ஆராய்ந்தறிந்த கல்வி கேள்விகளின் பயன்விளங்கத் தனித்தனியே பாடல்கள் பாடிக் கொண்டிருந்தார்கள்.

அப்படியிருக்குங் காலத்திலே பலருஞ்செய்த நூல்களும், அந்த நூல்களிலுள்ள சொல்லின்பமும், பொருளின்பமும், செய்யுட்குறிப்பு களு மொரேதன்மையாய் வேறுபாடு தெரியாமல் அவர்களே அதி சயித்து, இது நீர்பாடியது, இது நான் பாடியதென்று அவர்களில் ஒரு வருக்கொருவர் பகைகொண்டு மயங்கவும் தெளியவும் செய்த, சொல் லும் பொருளுமான மதுரேசர் அந்தச் சங்கப்புலவர்கள் முன்னே தாமொரு புலவராக வந்து, நீங்கள் மயங்கித் துன்பமடையும்படியான பாடல்களைக் கொண்டுவாருங்களென்ன, சங்கப்புலவர்கள் சுவாமி! இவைகளே நாங்கள் பாடின பாடல்களென்று முன்னே வைத்தார் கள். அப்போது சுந்தரேசராகிய புலவர், சங்கப்புலவர்கள் சொல் லின் தொடர்பும் பொருளின் தொடர்பும் தெரிந்து அவரவர்கள் பாடின பாடல்களை அவரவர்களே ஒப்புக்கொள்ள எடுத்துக் கொடுத் தருளினர். அப்படிக் கொடுக்கப்பெற்ற சங்கப்புலவர்கள் மனமகிழ்ந்து, ஐயா புலவரே! நீரும் எங்களோடு ஒரு புலவராய் இருக்கவேண்டு மென்று மிகவும் வேண்டிப் பொன்னுசனமிட்டு அதிலிருக்க வைத்தார் கள். அப்போது அந்தப் பொற்பீடத்தின்மேல் பொன்மலையின் நடுவே ஒரு நாகரத்தினம் விளங்கினற்போலே மதுரேசரும் வீற்றிருந்தார். பின்பு அவரோடுகூடி நாற்பத்தொன்பது புலவர்களாய்த் தமிழ்ப் பாடல்கள் பாடிக்கொண்டு, தங்கள் நுண்ணறிவுதோன்ற வாழுங் காலத்தில் வங்கியசேகர பாண்டியன் தன்மகனுகிய வங்கியசூடாமணி

பாண்டியனுக்கு முடிசூட்டி அரசாட்சியுங் கொடுத்துப் பின்பு பாச வினைகளை வென்று பரமசிவன் திருவடிகளைச் சேர்ந்து பேரின்பமுற்று வாழ்ந்திருந்தான்.

சங்கப்பலகை தந்த படலம் முற்றிற்று.

---

ஐம்பத்திரண்டாவது

# தருமிக்குப் பொற்கிழி யளித்த படலம்

கலிநிலைத்துறை

சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொருபீடம்
அற்குவை கண்டத் தண்ணல ளித்த தறைந்தேமால்
தற்குவை தந்தா லுய்குவ லென்னுந் தருமிக்குப்
பொற்குவை நல்கும் வண்ணமெ டுத்துப் புகல்கிற்பாம்.

உரை: கூட்டமாகிய சொற்களைக் கற்று ஆராய்கின்ற சங்கப் புலவர்கள், இனிது ஏறியிருக்கும்படி அவர்களுக்கு மாத்திரம் இடங் கொடுக்கத்தக்க ஆசனமாகிய சங்கப் பலகையை, இருள் பொதிந்த கண்டத்தினையுடைய சோமசுந்தரக்கடவுள் கொடுத்தருளிய திருவிளையாடலைச் சொன்னேம். இனி, தனக்கு (பாண்டியன் கட்டி வைத்திருக்கின்ற பொற்கிழியைத் தந்தால் நான் கல்யாணஞ் செய்து கொண்டு) பிழைப்பேன் என்று திருச்சந்நிதியில் முறையிட்டமுத தருமியென்னும் ஆதி சைவப்பிள்ளைக்காக, அவன் கோரியபடியே அவனுக்கு அந்தப் பொற்கிழியை வாங்கித்தந்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

இராஜாதிராஜனென வங்கியசூடாமணி யென்னும் பாண்டியன் முன்னே மதுரையைச் சுந்தரபாண்டியனாகி யரசாண்ட சோமசுந்தரக் கடவுளுடைய திருமுடிக்குத் தகுதியாய்ப் பலவகை மலர்களுந் தரும் படியான நந்தவனம் வைக்கிறதான திருப்பணி செய்ய வெண்ணிக் குருக்கத்தி - பாதிரி-ஆத்தி - வில்வம் - மந்தாரம் - மல்லிகை - முல்லை - மகிழ் - கோங்கு - கொன்றை - காக்கணம் - அலரி - நந்தியாவட்டம் - செருந்தி - குருந்து - புன்னாகம் - தாமரை - நீலம் முதலான சிறந்த மலர்களும், எட்டுத்திக்கும் பரிமளிக்கும்படி வண்டுகள் தேனைக் குடித்து எங்கும் இசைகள்பாட நந்தவனம் உண்டுபண்ணி, அதிலே சண்பகப் பூந்தோட்டமும் வேறே வைத்து அந்தச் சண்பக மரங்களெல்லாம் பூத்துப் பொன்னாபரணங்கள் நிறையப்பூண்ட பெண்கள் போல விளங்கக் கண்டு வங்கியசூடாமணி பாண்டியன் மிகவும் மகிழ்ந்து, வண்டுகள் மொய்க்காத சண்பகப் பூக்கள் கொய்து இண்டைமாலை, தொங்கன்மாலை, தாமமாலை, கண்ணி மாலைகளாகத் தொடுத்துத் திரிபுரதகனரான சோமசுந்தரக் கடவுள் திருமேனியில்

அணிந்து. அலங்காரஞ் செய்து, அந்தப் புதுவலங்காரத்தைக் கண்டு மகிழ்ந்து, அதிசயித்து, மதுரேசரை வணங்கி, அந்தக் கடவுளைச் சண்பக சுந்தரரென்று, பெயரிட்டுத் துதித்தான். அதுமுதல் இன்றளவும் சண்பக சுந்தரரென்னும் பெயர் விளங்கலாயிற்று.

அக்கடவுள் திருமுடிக்குச் சண்பக மலர்களால் அலங்காரஞ் செய்து வணங்குகிறதினாலே வங்கியசூடாமணி பாண்டியனுக்குச் சண்பக பாண்டியனென்னும் பெயருண்டாயிற்று. இப்படிச் சண்பக பாண்டியன் சண்பக சுந்தரேசரை வணங்கித் தினந்தோறும் அன்பு நீங்காமல் திருப்பணிகள் செய்துகொண்டு வருங்காலத்தில், மன்மதகோலாகலமாக வசந்தகாலம் வந்தது. எப்படி யென்றால், உலகத்தார் தங்களுக்குண்டாகிய வியர்வைத் தீர்க்கிற தென்றற்காற்று தனக்குமொரு தென்றற்காற்றுத் தேடவும், குளிர்ந்திருக்கிற சோலைகளும் தமக்குமொரு குளிர்ந்த சோலை தேடவும், குளங்களும் வேறே குளங்கள் தேடவும், சந்திரனும் தனக்கொரு சந்திரன் தேடவும், ஆகாயத்திலுள்ள விருக்ஷங்களோடு பகைகொண்டு சீறிச் சிவந்தெழுந்தாற்போல மாமரங்கள் உயர்ந்து தளிரீனவும், செருந்திமரங்கள் பெண்கள் ரத்னங்கள் பதிந்த குண்டலங்கள் அணிந்தாற்போல மலர்ந்து நிற்கவும், பலாமரங்கள் உதைய காலத்துச் சூரியன்போல் முழுது மலரவும், காஞ்சிமரங்கள் மேகவாகனனை இந்திரன்போல் மலரவும், குங்குமமரங்கள் சந்திரன்போல மலரவும், காயாமரங்கள் விஷ்ணு நிறமாக மலரவும், பூமியைக் கிழித்துக்கொண்டோடுகிற வைகையாற்றங் கரையிலே கரிய மணற்கொழிப்புகள் அல்குலாகவும், அந்த ஆற்றின் அலையொலிகள் மேகலை யோசையாகவும், அவ்விடத்தே மலர்ந்த மொழுகிறைப் போலே ஞாழற்றுதுகளுதிரவும், புன்னைவிருக்ஷங்கள் மரகதம்போலே தழைத்து வெள்ளை முத்துப்போலே அரும்புகள் விட்டுப் பொன்னைப்போலே பூக்கள் மலர்ந்து கடலெல்லாம் பவளக்காடாகச் செம்பராகங்களைச் சிந்தவும், மற்ற மரங்களெல்லாம் புருஷரோடு பிணங்கின பெண்கள் தங்கள் ஆபரணங்களை யெல்லாம் கழலவிட்டாற் போல, முன்னே இலைகளெல்லா முதிர்ந்து, பின்பு மணந்த பெண்கள் போலத் தழைத்துப் பிரிந்த பெண்கள்போல பசந்து கண்ணீரொழுகின, மிகவும் மையல் கொண்ட பெண்களலர்போல அலருண்டாய் விளங்கவும், புருஷன் மெலியத் தானும் மெலிந்து நெஞ்சு குழைந்து நிற்கும் பதிவிரதையைப் போலச் சூரிய கிரணத்தாலே மரங்கள் தீயத் தாமுந் தீய்ந்து பின்பு அந்த மரங்கள் தழைக்கச் சூழ்ந்த கொடிகளெல்லாத் தழைக்கவும், நட்டுவன் ஆட்டுவிக்க முகத்திலே வியர்வை யொழுகப் பாட்டுகள் பாடிக்கொண்டாடுகின்ற பெண்கள்போலத் தென்றற் காற்று அசைக்க அசைந்து தேன்களொழுக வண்டுகள் பாடச் சாய்ந்து வளைந்து பூங்கொம்புகளாடவும், உத்தமகுலத்துச் செல்வர்கள் செல்வங் குறைந்த காலத்திலும் வந்தவர்களுக்கு இல்லையென்று

சொல்லாம னுயிரைமாறியாயினும் கொடுப்பதுபோலச் செவ்வந்தியும் மகிழும், மலர்ந்து, முதிர்ந்து, வாடியும், காய்ந்தும், வண்டுகள் மொய்த்துத் தேனை நல்கும்படி கிடக்கவும். ஆண்குயில்கள் மாந்தளிரைக் கோதிக்கோதிக் கூப்பிட்டுப் பெட்டைக் குயிலை மனமுருக்கவும், தன்னிலும் பெரிய அரசன் பிரசித்தமாய் விளங்கக்கண்ட மற்றோரரசன் அடங்கினாற்போல மயில்களொடுங்கி யடங்கவும், கண்ட துகற்கும் பண்டிதன் போலத் தென்றற்காற்றும், சோலைகளிலே நுழைந்து வாவிகளிலே புகுந்து தாமரை மலர்களெல்லாந் துழாவி இருவாக்ஷி முல்லை மல்லிகைப் பந்தல்களிலே உலாவிப் பலபல வாசனைகளையுங் கொள்ளை கொண்டு குளிர்ந்து மெதுவாகச் சஞ்சரிக்கவும், வசந்தகாலத்தரசன் மகுடஞ் சூடிக்கொண்டு தாமரைமலராகிய படிக்கமேந்த, குயிலோசையாகிய மத்தளங்கொட்ட, மருதவிருக்ஷத்திலே கிளிகள் மங்களங்கள் பாட, வண்டுகள் சங்கீதம்பாட, தாழை மடலாகிய ஈர்வாளுந்தோன்ற வாழுமிடமாகவே அந்தச்சோலை விளங்கவும், யௌவன புருஷர்கள் சந்திரகாந்தக் கற்களாலே செய்திருக்கிற மண்டபங்களிலும், சித்திரித்த புதுவீடுகளிலும், தோட்டங்களிலும், தாமரைத் தடாகங்களிலும் தண்முத்துமாலை யணிந்த பெண்கள் முலைகளிலுமே அந்தக் கோடைகாலவெம்மைதீர நினைத்து, திருவாலவாய் மதில்சூழ்ந்த மதுரையில் மேலுலகத்துத் தேவர்களும் விரும்பும் போகசுகத்தைத் தருகிற மங்கையர்களுடனேகூடி விண்ணுட்டிலே கற்பகக்காடுபோல் விளங்குகின்ற பூஞ்சோலைகளிலே சுகிக்க, யானைகள் மேலே சிங்கங்கள்போலவும், குதிரைகள்மேலே யானைகள் போலவும், தேர்கள்மேலே சூரியன் போலவும், மாலைகளிலே வண்டுகள் மொய்க்கக் கால்களிலே சிலம்புகள் கபுல்க ளொலிக்க நடந்தும் புருஷர்கள் செல்ல மங்கையர்கள் கறுத்த பேட்டானைகள்மேலே மற்றொரு பெண்யானைகள் போலவும், முத்துப் பல்லக்குகள்மேலே சரஸ்வதிகளைப் போலவும், குதிரைகள் மேலே ரதிதேவிகளைப் போலவும், புருஷர்கள் கைகளைந் பற்றிக் கொண்டும் இப்படியாக வண்டுகள் மொய்த்திருக்கின்ற பரிமளமாலைகள்சூடின புருஷர்களும் மன்மதனுடைய சேனைபோன்ற பெண்களும் வெள்ளை முத்துக்களை மலைகள்போலக் கொழித்துக் குவிக்கின்ற வையையாற்றங்கரையில் மணல்மேடுகளிலுள்ள பூஞ்சோலைகளுக்கு வந்து பெண்யானைகளிலும் பெண்குதிரைகளிலும் ஏறிவந்தபெண்கள் புருஷர்கள் தோள்கொடுத்திருக்க அவர்கள் தோளிலுள்ள வீரலட்சுமி போல இறங்கிப் பூங்கொம்புகளிலே பூங்கொத்துகளினின்று பொடிகளுதிர்ந்தாற்போலக் கலவைச் சந்தனங்களுதிர வனமங்கைகள் போலே பொன்மலைகளையொத்த கொங்கைகளைக்கொண்டு நடக்கும் சித்திரம்போலக் குருக்கத்திப் பூவைக்கண்டு இதனருகே சிலர்போகப் புன்னை நிழலிலே சிலர் வர, மாமரத்து நிழலிலே சிலர் செல்ல, செருந்திமர நிழலிலே சிலர் கிட்ட, மன்மதன் ஆயுதசாலைபோலத் தோன்றுகிற தாழை நிழலிலே சிலர் நிற்க, அந்தப் பெண்களுடைய கூந்தலை மேகமென்று மனதில் நினைத்துச் சில மயில்கள் நின்று கூத்தாடும்

சில மயில்கள் அந்தப் பெண்களின் கண்களை அம்பென்று நினைத்துப் பயந்தோடும். குயில்கள் அந்தப்பெண்கள் மேனியை மாந்தளிரென்று தின்னவந்து பின்பு அவர்கள்பேசு மிசையைக் கேட்டு ஒதுங்கி வெட்கிப்போகும். இன்னும் அந்தச் சோலையில் அலைகள் மிகுந்திருக்கிற குளங்கள் பூத்திருக்கிறதேயன்றி கொம்புகளிலும் செங்கழுநீர் - செவ்வல்லி-தாமரை முதலிய மலர்களை பூத்தாற்போலப் பெண்கள் தம்முடைய கண்கள் வாய்முகமாகிய இவைகள் விளங்க எங்கும் நெருங்கினார்கள்.

பின்னும் பெண் யானைகள்போல நடந்துலாவின பெண்கள் கூடவே சில நாயகர்கள் கொடிகள் படர்ந்த மாதவிப்பந்தலுக்குள்ளே புகுந்து இயக்கர் கூட்டமாகக்கூடிப் பனிநீர் தெளித்து வெப்பத்தை நீக்கிக் கன்றின் பாதங்களைப் பிடித்துச் சேடியர்களுக் குதவிசெய்வார்கள். சில பெண்கள் பூங்கொம்பை வளைத்து மலர்களைப்பரித்து மோந்து ஆயாசந்தீர்ந்து அந்தப் பூங்கொம்புகளுக்குத் தங்கள் குழையுந் தோடுமணிந்து அழகு பார்த்துச் சந்தோஷித்து நாயகர்கள் மார்பிலேதைக்கப் பரித்தமலர்களை மன்மத பாணங்கள்போல எறிவார்கள். சிலபெண்கள் பூங்கொம்பை வளைக்க அக்கொம்பிலே அலர்ந்த மலர்களிலே மொய்த்திருக்கிற வண்டுகளும் பேடைகளு மிசைபாடிக்கொண்டே இவர்கள் கூந்தலிலே வந்து மொய்த்துப் பாணர்கள் போலே நெருங்கின. இன்னும் இவ்வுலகத்திலே மோக்ஷத்தைத் தருந்தெய்வம் பெண்களே யென்பவர்கள் வார்த்தை மெய்யே. எப்படியென்றால், அந்தப்பெண்கள் வளைக்க வந்து நடுங்கி அவர்களடியிலே மலர்களைச் சிந்தி மலர்முகங் கண்ணீர்சோரப் பூங்கொம்புகளும் வணங்குமானால் அவர்களைப் புருஷர்கள் வணங்குந் தெய்வமென்னலாகாதோ? ஒருத்தி எட்டாத ஒரு பூங்கொம்பை எட்டி வளைக்கும்போதெல்லாம் அது வளையாமையாலே அவள் வாடின கொடிபோலே நிற்க, அதை மன்மதனை யொத்த அழகுள்ள ஒருவன் வந்து கண்டு ஏன் வருந்துகின்றாய்? என் தோள்மேலேறிக்கொண்டு மலர்களைப் பரியென்று தன் தோண்மேலேற்றிக்கொண்டு நின்றான். இன்னுமொருத்தி அப்படியே எட்டாத பூங்கொம்பை எட்டியெட்டி வருந்தி நிற்க, அதுகண்ட அவள் புருஷன் மிகவும் பொறாமல் இதுவென்ன பிணங்கினவளோ வென்று வளைத்துக் கொடுத்து வேண்டின மலர்களைப் பரித்துக் கொள்ளென்று சொல்ல, அவள் கொம்பை நோக்காமல் பிணங்கினவ ளெவளோவென்று கண்ணீர்விட்டழுதாள். இன்னுமொருத்தி காதிற் பொன்னோலையிலே செருந்திப் பூவைச் செருகிப்பார்த்து அவள் புருஷன் இந்த ஓலை அழகாயிருக்கிறதென்று சொல்ல, உடனே அவள் அந்த ஓலையிட்டவளுக்கே இந்த ஓலையு மிட்டுப்பாரென்று அவனை மயக்கித் துன்புறச்செய்தாள். ஒருத்தி மாமரத்தின் கூட்டிலிருக்கிற பெட்டைக் குயிலானது தன்னுடைய சேவற்குயிலைக் கூப்பிடக் கண்டு, தன் கணவனைக் கடைக்கண்ணாலே வரக்கூப்பிட்டு, வண்டுகளுந் தேனும்பொருந்திய மாதவிப்

பந்தலுக்குள்ளே புகுந்தாள். ஒருத்தி தான் பூசிக்கொண்ட சந்தன வாசனையைக் காற்றுவீச விடுத்தும், அரைநூல் மாலையோசை நாயகன் காதிலேவிழ நடந்தும், கலவிகளைச் சித்திரித்திருக்கிற புடவையை யுடுத்தியும், போத்தும் இப்படித் தூதனுப்பினவள் போலத் தலைவன் வரும் வழியே எதிர்பார்த்து நின்றாள். ஒருத்தி தனக்கு மலர்கொய்து கொடுக்கிறவன் உடம்பெல்லாம் அந்தப் பூந்தாதுக்கள் சந்தன கஸ்தூரிகள் போலச் சிதறியிருக்கக் கண்டு, நீ யாரோடுகூடிவந்த சந்தன மிது வென்றாள். அவன் என் மனத்திலே உன்னையுங்கூடச் சுமந்து பரித்த சண்பகத் தாதுக்கள் சந்தனமல்ல வென்றான். அதற்கவள் என்னையன்றி இன்னும் யாரை உன்மனத்தே கொண்டு சுமந்தா யென்று, நெய்வார்த்த நெருப்பைப்போற் கொதித்தாள். இன்னுமொருத்தி தன் பிணக்குத்தீர வந்து கணவன் வணங்கும்போது தன் னிழல் அவன் முடிமணியிலே யிருக்கக்கண்டு கங்காநாயகன்போன்ற நீர் என்னை ஏன் வணங்குகிறீரென்று சிரித்துப் பின்னும் துன்பத்தின் மேலே துன்பமுண்டாகப் பண்ணினாள்.

ஒருவன் ஒருத்தியைப் பார்த்துப் பெண்ணே! உன் பாதங்கள் தாமரை மலர்களே! கைகள் காந்தள் மலர்களே! கொங்கைகள் கோங்கரும்புகளே! கண்கள் நீலமலர்களே! உன்வாய் செவ்வல்லிப் பூவே! உன் பர் ள் எந்தப்பூ? அதைத் திறந்து காட்டிவிட்டு போகக் கடவாயென்று அவளை வேண்டி அடுத்து நின்றான். தன் விடைபோலு மொருவன் ஒருத்தியைத் தன் முன்னே கண்டு ஏடிபெண்ணே! உன் அல்குலாகிய சுனையிலோகொங்கையிலோ உன்னிடத்திலே தன் மனம் வந்து மறைந்துகொண்டது உனது பூம்பட்டாடையைத் திறந்து காட்டிவிட்டுப் போவென்று, அவள் பின்னே தொடர்ந்து சென்றான். இன்னும் பதிவிரதையானவளை விட்டுப் பலரும் அனுபவித்து உடம் பெல்லாம் எச்சிலான வேசியர்களைக் கூடுகின்ற அறிவீனர்கள் போலப் பெண்டுகள் வளைக்க வந்த பூங்கொம்பிலுள்ள வண்டுகள் அவர்கள் கூந்தலில் முடித்திருந்த பழம்பூமாலைகளிலே வந்து மொய்த் தன. இப்படிப் புருஷர்களைத் தழுவி அவர்களிடத்திலுள்ள பொருள் களை யெல்லாம் கொள்ளை கொண்டாற் போலப் பெண்கள் பூங்கொம் பைத் தழுவி மலர்களை யெல்லாம் பரித்துக்கொண்ட பின்பு, கைப் பொரு ளில்லாதவன்போல், அந்தப் பிஞ்சோலைகளெல்லாம் வறுமை யாயின. பின்பு பெண்கள் தங்கள் புருஷர்களோடு கூடிப் பூக் கொய்து விளையாடிக் கூடின புருஷரைப்போல, உடம்பையுங் கண் களையும் வாயையும் வேறுபாடுசெய்கிற பொய்கை நீராட இறங்கின போது, அந்தக் குளங்கள் தாமரை - நீலம் - குமுதமாகிய மலர்களை மலர்வதேயன்றி, முல்லை-சண்பகம்-கோங்கு முதலாகிய மலர்களையும் மலர்ந்தாற்போல விளங்கின. அப்பெண்கள் குளத்தில் புகுமுன்னே சேற்கண்டைகளும் - பாம்பும்-ஆமையும் - நண்டும் - வராலும் - அன் னங்களும் வலிய பகைவரைக் கண்டஞ்சி ஓடினாற்போலோடின. அப்

பெண்கள் நீராடும்போது பலவிதமான மலர்களும் அலைகளால் அலை வது, கண்ணும் நீலமரும், முகமும் தாமரைமலரும், வாயும் செவ் வல்லிமலரும், சண்டை செய்வதுபோலவும், பாசிபோலக் கூந்தல் கள் விரியவிட்டுத் தாமரை அரும்புபோலக் கொங்கைகளும், மலர் போல முகங்களும் தோன்ற ஸ்நானஞ்செய்து, கரையேறுகிற தனது நாயகியைக்கண்ட புருஷன், அவள் வாயும் கண்களும் வெளுத் திருந்ததினாலே மயங்கி, என்னுயிர் போன்றவள் எங்கேயென்று கேட்டான். அதற்கு அவள் என்னையல்லாமல் உனக்கு நாயகி வேறுண்டோவென்று புலம்பி அழுதாள். ஒருத்தி நீராடத் தனது நாயகன் கையைப் பிடித்துச் செல்லும்போது, அவன் நீராடி வருகிற ஒருத்தியைப் பார்க்க இவள் சீச்சீ இவளாடின எச்சில் நீரிலே நான் முழுக வாரேனென்று கரையிலேதானே நின்றாள். ஒருத்தி நாயகன் நீராடும்போது அவன் மார்பிலே பூசிய குங்குமத்தில் தாமரை மொட்டழுந்தி யிருக்கக்கண்டு, இப்படி உன்மார்பிலே காயஞ் செய்தவ ளெவளென்று வருந்தினாள். ஒருத்தி தனது இஷ்ட நாயகன் செய்த குற்றமாகிய வேலாலே பிளவுபட்ட நெஞ்சின ளாய்ப் பிணக்கும் காமநோயும் தாங்கமாட்டாமல், அவன் பார்க்க ஆழமான நீரிலே முழுகுகிறவளைப் போல முழுகிப் போய், அங்கே யிருக்கிற அன்னத்தைப் பார்த்துக் கைக்கொடு கரையேற வென்று வேண்டினாள். நீரிலே விளையாடுகின்ற ஒருத்தியினுடைய முகமானது தாமரை மலர்களி லொன்றாகத் தோன்றுவதைக் கண்ட நாயகன் இவள் முகமெது? தாமரை மலரெது? வென்று சந்தேகித்து வருந்த, அதற்கவள் குறுநகை செய்ய, அந்த நகை யொளியாலே முகமென்று தெரிந்து கொண்டான். ஒருத்தி களித்தவனான நாய கன் முழுகின நீர்க்குமிழியிலே தனது நிழல், தன் போலவே சிரித் துக்கொண்டு தோன்றுவதைத் தனக்குச் சக்களத்தியென்று, நினைத் துத் தன் கையை நீட்டித் தடவிப் பார்த்துக் காணாமல் இந்த நீர்க் குள்ளே ஒளித்துக் கொண்டாயோ வென்று அவ்விடத்திலே உதைத் துச் சீறினாள். ஓரிடத்திலே வழிப்போக்கர்கள் பொருளை யபகரிக் கின்ற திருடர்களைப் போலக் கந்தப்பொடி, கலவைச்சாந்து, கஸ்தூரி களை மாறி மாறி வீசி விளையாடுகின்ற புருஷர், பெண்கள் மார்பிலே, வண்டுகள் ஆகாசத்திலே பறந்து வந்து விழுந்து அவ் வாசனைகளைக் கவர்ந்துண்கின்றன. ஓரிடத்திலே தாங்கள் பரித்த நீலமலர், தாமரை மலர் இவைகளை மன்மத பாணம் போலாக மார்பிலே யெறிவார்கள். அப்படி யெறிகிற மலர்களைக் கைகளாலே தடுத்தெறிய அம்மலர்கள் மீண்டும்போய், அவர்கள் முகத்திலே படக்கண்டு, மனமகிழ்ந்து சிரிப் பார்கள். ஓரிடத்திலே பிடியானையும் களிற்றானையும்போல ரத்தினா பரணங்கள் விளங்கக் கைகளாலே பனிநீர் கந்தப்பொடிகளை வாரி வாரி இறைப்பார்கள். பின்னும் பூசியிருக்கிற சந்தனமழிய நீரையும் வாரி யிறைப்பார்கள். பின்னும் அந்தப் பெரிய குளத்திலே நீராடுகிற வர்களி லொருத்தி தன் சிவந்த வாயில் நீரை நிறையக்கொண்டு

ஒருவன் முகத்திலே கொப்பளித்துத் துப்ப, அந்நீரை அவன் செவ் வலித்தேனென்று மிகுந்த சந்தோஷத்தோடு குடித்தான். ஒருவன் ஒருத்தியைப் பார்த்து, அங்கே ஆழம் போகாதே நில்லென்று தடுத்து விலக்குகிறவனைப்போலே, தன் கையால் வளைத்துத் தூக்கி, மார்போ டணைத்து இரதியை யணைத்த மன்மதன்போல் மகிழ்ந்தான். சில பெண்கள் பூசிவந்த சந்தன களப கஸ்தூரி வாசனைகளை அந்தக் குளத்துக்குக் கொடுத்து அதிலுள்ள மலர்களின் வாசனைகளைக் கைக் கொண்டு கரையேறும்போது, நனைந்து மெல்லியதான வஸ்திரத்துக் குள்ளே தங்கள் உடம்பெல்லாம் தெரிய, அதற்கு நாணிக் கரைமேல் நிற்கிற கணவரைப் பார்த்து ஐயனே! நான் உடுக்கும் வஸ்திரத்தை எடுத்தெறியுமென்று, கிருஷ்ணனை வேண்டுகிற இடைப்பெண்கள் போல வேண்டுவார்கள்.

இந்தப்பெண்க ளணிந்திருந்த செம்பஞ்சுக் குழம்பும், குங்குமக் குழம்பும் கரைந்து குழம்பி, அந்தக் குளமுழுதுஞ் சிவந்து, ஆலாத்தி நீர்போலாக, அதைச் சுற்றி நிற்பவர்களைப்போல விளங்கின. குளக் கரை யேறின பெண்கள் பட்டுவஸ்திரங்களும், இன்னும் பல நிறமான சேலைகளும், பலவிதமான ரத்தினாபரணங்களும், சந்தன குங்கும கஸ் தூரிச்சேறும் பூமாலைகளுங் கொண்டு புருஷர்க ளுள்ளமெல்லாங் கொள்ளை கொள்ள வெண்ணினார்கள். குளத்திலே தோன்றக் கண் டதுபோலத் தாங்களழகுபார்க்கிற நிலைக்கண்ணாடியிலும், கண்ணாகிய நீலமும், முகமாகிய தாமரையும், வாயாகிய செவ்வல்லியுந் தோன்றக் கண்டு கண்களாலே மன்மதனையு மேவல்கொள்ள வல்ல பெண்கள், பொன்னாலும் வெள்ளியினாலும் பளிங்கினாலுஞ் செய்த கிண்ணங் களிலே, சூரிய கத்தியை ஊன்றினாற்போல, மதுவை வார்த்துத் தோழிகள் கொடுக்க, அம்மதுவில் மொய்க்கின்றவண்டை விரலினாலே தெறித்தோட்டிக் கொவ்வைக்கனிபோலும் வாயில் வைத்து நிறம்பக் குடித்தார்கள். இந்தக் குடத்திலிருக்கிற 'மதுவையெல்லாம் கொள்ளை கொண்டு போக வந்தவைகளே இந்தக் கிண்ணங்களென்று சினந்து, அறுக்கும் வாளை அதனெஞ்சிலே யூன்றி யீர்வதுபோலக் குடத்தி லிருந்து கிண்ணத்திலே வார்க்க, அப்படி ஈர்ந்து பிளப்பதைக் காண் பாரைப்போல வண்டுகள் மொய்க்க, அக் கள்ளைக்குடித்து மன மறக் கிறவ ளொருத்தி, இன்னுமொருத்தி தான்குடிக்க வள்ளத்திலே ஊன்றுகின்ற மதுத்தாரையை மயக்கத்தாலே ஈர்வா ளென்று நினைத்து, அடி பயித்தியக்காரி! ஏன் வாளாலே கிண்ணத்தை அறுக் கிறாயென்று சிரித்தாள். இலமென்று சொல்லிப் பலரிடத்திலுமேற் றும் இன்மை நீங்காத எளியோர், கொப்பரையோடே புதையற் பொருள் கிடைத்தால் விடாது கொள்வாரல்லவோ, அப்படியே மலர் களிலும் நக்கித் திரிகிற வண்டுகள் கையாலோட்டினாலும் போகாமல் மதுக்குடமெல்லாம் மொய்த்துக் கொண்டிருக்கின்றன. அங்கே நிறம்ப மதுவுண்ட வொருத்தி பின்னு முண்ணும்போது அக்கள்ளிலே

தோன்றுகின்ற தன் முகத்தையுங் கண்ணையுங் கண்டு ஓ! ஓ! இதிலே தாமரை பூத்திருக்கிறது. அல்லாமலும் உண்மையாகவே வண்டுகளும் மொய்க்கின்றன வென்று சொல்லிக் கைகளைக்கொட்டிச் சிரித்தாள். ஒருத்தி தான் குடித்துக் கிண்ணத்தில் மிஞ்சி யிருக்கிற கள்ளிலே தோன்றுகிற சந்திரனைப் பார்த்து, யான் நாயகனைப் பிரிந்திருக்கும்போது நீ நெருப்பாய்ச் சுட்டவனல்லையோ, நீ இப்போது எச்சிற்கள்ளைக் களவாகக் குடிக்கவந் தகப்பட்டுக்கொண்டாய். இனி உன்னை நான் விடமாட்டேன். இதிலேதானே கிடக்கக் கடவா யென்று வேறேயொரு கிண்ணத்தினாலே மூடிப் பத்திரஞ்செய்து குடியாதிருந்தாள். நிறம்பவுண்ட வொருத்தி தன்கைக்கண்ணாடிக்குள்ளே தோன்றுகிற கண் சிவப்பும் வாய் வெளுப்புங் கண்டு, பலரும் நிந்திக்க என்னழகைக் கொள்ளை கொண்டு போனவன் யாரென்று மயங்கி விழுந்தாள். ஒருத்தி மதுவுண்ணும்போது அந்த மதுவிலே தன் வடிவைக்கண்டு, தோழியைக் கூப்பிட்டு என்னுடனேகூடக் கள்குடிக்கிற வளைக் கண்டாயோ வென்ன, தோழி வந்து பார்த்துத் தன் வடிவையு மதில்கண்டு, ஒருத்துமாத்திரமா இரண்டுபேர் குடிக்கிறார்களென்றாள். அப்போதவள் இது இரண்டுபேர் எச்சிலென்று கீழேபெய்து சிரித்தாள், முழுக்குடியாளான வொருத்தி தனது வேறுபாடான வடிவைக் கண்ணாடிக்குள்ளே கண்டு, இவள் அல்லவோ, நான்தானோ அல்லது யாரேனும் என்னைக்கொண்டு போனவருண்டோ? அடி சேடி! நான் எங்கே யிருக்கிறேனோ? தெரியவில்லை என்னை நீ உடனே தேடிக் கொண்டுவரவேண்டுமென, என் பிராணநாயகன் வந்து தேடுவானே அவனுக்கு யார் வழி சொல்லுவார்கள். நீ சொல்லென்றாள். அப்படி நிறம்பக் குடித்த வொருத்தி தன்பின்னே புருஷன் வந்து நிற்பது தெரியாமல் அவனோடுசேரத் தன்னையும் கண்ணாடிக்குள்ளே கண்டு, ஓ! ஓ! மாற்றாளோடு கூடியிருக்கிறாயோ வென்று ஓங்கி யுதைத்தாள். சிலர் கட்டுச்சோறுண்கிறார்கள்; சிலர் வீணைபாடி வெண்ணெய் போலுருகினார்கள்.

இப்படிப்பட்ட வசந்தகாலத்திலே சண்பகபாண்டியன் ஒரு நாள் தன் மனைவியோடுகூடி வேறே ஒரு புறத்திலே சந்திரகாந்தச் சலவை மண்டபத்தில் வேடைக்கோடை போகத் தனியாக ஒரு கொம்பிலே மாந்தளிரும், கோங்கரும்பும், முல்லையரும்பும், காந்தள்-கமலம்-செவ்வல்லி-சண்பகம்-செங்கழுநீர் முதலியன மலர்ந்தாற்போன்ற தேவியுடன்கூட விருக்கும்போது, தென்றற் காற்றானது நல்ல திவ்விய பரிமள கந்த வாசந்தோன்ற முகந்து முன்னே வீச, அப்படி வீசின வாசத்தை நன்றாய் மோந்து பார்த்துப் பாண்டியன் இதேது புதிதான திவ்ய பரிமள கந்தமாயிருக்கிறது. பூஞ்சோலைக்காற்று வீசன வாசமுமன்று. காற்றுக்கோ வாசமே கிடையாது. இது எதினுடைய சுயவாசமோவென்று ஆராய்ந்து ஆலோசித்து, திரும்பத் தன் தேவியைப் பார்த்தான். அப்போது அந்தவாசம் அவள் கூந்தலிலிருந்து வீசக்

கண்டு, ஓ! ஓ! இந்தவாசம் வண்டுங் கண்டிராது. இதென்ன புதுமை யென்று கொண்டாடி, இவள் கூந்தலில் இந்தவாசம் செயற்கையால் வந்ததோ இயற்கையாய் வந்ததோவென்று சந்தேகித்து, இப்போது நான் சந்தேகித்த கருத்தைத் தெரிந்து பாடவல்லவருண்டானுல் அவர்க்கு ஆயிரம் பொன் கொடுப்பேனென்று முடிப்புக் கட்டிக் கொடுக்க, அங்கிருந்த ஏவலாளர், மெய்ஞ்ஞானிகளான சங்கப்புலவர் களுக்குமுன்னே கொண்டுபோய்க் கட்டித் தொங்கவிட்டார்கள். அக் காலத்தே சங்கப்புலவர்கள் கடலிலே கப்பலைக்கண்டால் அதிலிருக் கிற பொருள் இன்னதென்று தெரியாமல் மதியினுலே இன்ன தென்று சொல்வதுபோலப் பாண்டியன் கருத்தை ஒவ்வொருவரும் தனித்தனியே வந்து சொல்லிச் சொல்லி உண்மை விளங்காமல் அவ மானப்பட்டுக் கிலேசிக்கலானுர்கள். அக்காலத்திலே, ஆதி சைவ குலத்துப் பிரமசாரி ஒருவன். அவனோ தாய் தகப்பனில்லாத தனிய னுன தருமியென்பவன். அவன் தனக்குண்டாகிய வறுமை நீங்கும் பொருட்டு நான்கு முகங்களுடைய பிரம்மனுலும், மகாலட்சுமியை மார்பிலே தரித்தருளிய விஷ்ணுவினுலும் தேடிக் காண்பதற்கரிய தேவநாயகரும், உருவர் அருவம் அருவுருவமென்னு மிவைகளைக் கடந்துள்ளவருமாகிய சோமசுந்தரக் கடவுளுடைய திருவடிகளைச் சேவித்து எம்பெருமானே! அடியேன் தந்தையுந் தாயுமில்லாதவன், வேறே யாதரவு கிடையாது. அப்படிப்பட்ட சிறுவனுகிய நான் கலியாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்கிற ஆசையை யுடைய வனுயிருக்கிறேன். அந்த ஆசையாகிய நோயானது என் மனத்தை மிகவும் வருத்துகின்றது. அந்த வருத்தத்தைத் தீர்ப்பதற்குச் சமயம் இதுவே யாகும். ஆகையால் என் எண்ணத்தை நிறைவேற்றி யாட் கொள்ள வேண்டுமென்று துதித்தான்.

இப்படியாகச் சோமசுந்தரக் கடவுள் திருக்கோயில் முன்னே நின்று துதிக்கச் சுவாமி! வேதாகமங்கள் முடியக்கற்று அவ்வழியே யானடைந்தேனுனுலும், இல்லறமான மனேவியுடன் வாழ்க்கையில் லாமல் உன்பாத வருச்சனைக்கு யோக்கியனுவேனோ? மனைவியில்லாத வன் உன்னைத் தொடலாகாதே. ஓ ஓ கடவுளே! இதுவே நல்லசமயம்; எல்லா மறிந்திருக்கிற நீர் இந்தப் பாண்டியன் கருத்தறியீரோ? இந்தச் சமயத்தில் நான் போய்ச்சொல்லி ஆயிரம்பொன்னும் பெறும்படியான ஒரு கவி பாடியருள வேண்டுமென்று பிரார்த்தித்தான். அப்போது பாண்டியர் குலதெய்வமாகிய சோமசுந்தரக்கடவுள் மனமகிழ்ந்து,

கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின்
மயிலியற் செறியெயிற் றரிவை கூந்தலி
னறியவு முளவோ நீயறியும் பூவே.

என்கிற ஒரு செய்யுளை எழுதிக்கொடுக்கத் தருமியென்பவன் தொழுது வாங்கித் தன் துன்பந்தீர்ந்து சோமசுந்தரக்கடவுள் சொன்னபாடலைக் கைக்கொண்டு, புதையல் கண்டெடுத்தவன்போல மனமகிழ்ந்து, சங்கப்புலவர்களுக்கு முன்னேபோய், அங்கே கற்றுவல்ல சான்றோர் கையில் அந்தப் பாடலைக் கொடுக்க அவர்கள் வாங்கி வாசித்துப்பார்த்துச் சொற்சுவை பொருட்சுவை தெரிந்து, நல்ல நல்லதென்று கொண்டாடி அந்தச் சான்றோர்கள் பாண்டியனுக்கு முன்னே போய்ச் சொல்ல, அதைப் பாண்டியன் கேட்டுத் தன் மனக்கருத்துக்கு ஒத்திருந்ததினாலே தலையை அசைத்து மனமகிழ்ந்து, இந்தச் செய்யுள் பாடிக்கொண்டுவந்த பிராமணன், முன்னே முடிப்புக்கட்டி வைத்த ஆயிரம்பொன்னும் யாதொரு தடையுமில்லாமல் பெறக்கடவனென்று கொடுக்க, அப்போது பாண்டியனேவினபடியே கற்றுவல்ல சான்றோரோடு ஏவலாளிகள் கூடவந்து சங்கமண்டபத்துக்கு முன்னே கட்டித் தொங்குகிற பொன்முடிப்பைத் தருமி அறுக்கும்போது, நக்கீரர் நில்லென்று விலக்கி இந்தச் செய்யுளிலே குற்றமிருக்கிறதென்று சொல்லத் தருமியென்பவன் கேட்டுப் பசியன் நெடுங்காலம் அன்னங் கிடையாமல் பட்டினியே கிடந்து கிடைத்துண்ணப் போம்போது கையைப் பிடித்துக்கொண்டால் அந்தப்பசியன் கலங்குவது போலக் கலங்கி, மனதும் வாயுமுலர்ந்து பயந்து, சோமசுந்தரக் கடவுளின் திருக்கோயில் முன்னே பாடலைவைத்து சுவாமி! நீர் என்ன காரணத்திற்காக இத்த வழுவானபாடலை எளியேன் கையிலே கொடுத்தீர்? தரித்திரமென்கிற வியாதி பிடித்துப் பலகாலமும் வழிபடுகின்ற உமதடியேன் இப்போது கிடைக்கின்ற பொருள் போயிற்றேயென்று அதற்கே நான் முழுதும் வருந்தவில்லை; தெய்வநாயகரான நீர் பாடின பாட்டு குற்றமென்று அற்பாயுசும் சிற்றறிவுமுள்ளவர்கள் சொல்லலானால், இனி உம்மை யாவர் தெய்வமென்று மதிப்பார்களென்றல்லவோ நான் முழுதும் துன்பப்படுகிறேன். இப்போது நேரிட்ட அவமானம் உமக்கேயல்லாமல் எனக்கென்னவுண்டு. ஓகோ தெய்வமேயென்று முழுதும் மனம்வருந்தி அந்த ஆதிசைவப் பிராமணன் அழ, அப்போதங்கே எல்லார்க்கும் பந்தம், வீடு, வேதம், அதன் பயன் ஆகிய எல்லாமான சுந்தரேசர் ஒரு புலவராகக் கண்டிகை-மோதிரம்-கதிர்முடி, வயிரம்பதித்த கடுக்கன், இவைகளாலே அலங்கிருதராய், முத்தமிழும் வல்லவரிவரேயென்று அறியவிட்டகுறி போலத் திரிபுண்டரங்கள் நெற்றியிலே இட்டுக்கொண்டு நல்ல பட்டங்கியும் போட்டுக்கொண்டு, கங்கணங்களணிந்த தோள்களையுடைய கற்றுச்சொல்லிகள் அடப்பை தாங்கவும், காளாஞ்சி தூக்கவும், கோடிகமேந்தவும், முத்துக்குடை நிழலின்கீழே பொற்காற்சாமரை வீசவும். வேதமே பாதுகையாகத் தாங்கவும், தாம் அருளிச்செய்தவைகளைக் கற்றுப் பாட வல்லவரான வேதாகமங்கள் தரும சாஸ்திரங்களெல்லாந் தெரிந்த சான்றோர்கள் கூடின சங்கமண்டபத்துக்கு வந்து, அங்கே அவர்கள் முன்னே நின்று அவர்களைப் பார்த்துச்

சுவாமியானவர், நாம் பாடியனுப்பின பாட்டிலே குற்றஞ்சொன்னவர் இவர்களில் யாரென்று கேட்கு முன்னே, கீரன் அஞ்சாமல் நானே குற்றஞ் சொன்னவனென்ன, வந்த புலவர், அதில் எது குற்றமென்று கேட்க, அவர் பெருமைகள் ஒன்றுந் தெரியாத கீரன், அப்பாட்டிலே சொற்குற்றமில்லை; பொருட்குற்ற மிருக்கிறதென்ன, அதற்குப் புலவர், பொருட்குற்ற-மென்னவென, கீரன், தனக்குக் குற்றம் வருவது தெரியாமல், முடிக்கும் பூவால் வாசமேயல்லாமல், கூந்தலுக்குச் சுயமே வாசமேது? அப்படி வாசமுள்ளதாக (கூந்தலி னறியவுமுளவோ) வென்று வினவியதே குற்ற மென்ன, புலவர், பதுமினி கூந்தலுக்குச் செயற்கைதானோ வென்ன, கீரன், அவள் கூந்தலுக்கும் முடித்ததினாலேதான் வாசமுண்டாகுமென்ன, புலவர் தெய்வப்பெண்கள் கூந்தலும் அப்படித்தானோ வென்ன, கீரன் அந்தப்பெண்கள் கூந்தலும் மந்தாரம் முதலிய மலர்களாலே தான் வாசங் கமழுமென்ன, புலவர், நீ துதித்து வணங்குகின்ற பரஞ்சோதியான திருக்காளத்தியப்பர் பாகத்தே வீற்றிருக்கின்ற ஞானப் பூங்கோதை கூந்தலும் அப்படித்தானோவென்ன, அதற்கும் அஞ்சாமல் கீரன், ஞானப்பூங்கோதை கூந்தலுக்கும் அப்படியே செய்கையாலே தான் வாசங்கமழுமென்று முழுதும் ஒரே நிலையாகச் சாதிக்கும் போது, வந்த கடவுட்புலவர் தமது நெற்றிக்கண்ணைக் கொஞ்சந் திறந்துகாட்ட, அதைக் கீரன் கண்டு பயப்படாமல், நீரே பரமசிவனானாலுமாகுக. உம்முடைய நெற்றியிலே ஒருகண் காட்டினதுபோல உம்முடைய உடம்பெல்லாம் கண்களாகக் காட்டினாலும் இந்தப் பாட்டில் குற்றம் குற்றமேயென்று சொல்ல, அப்போது கடவுள் நெற்றிக்கண் வெம்மை கீரன்மேலே தாக்கப் பொற்றாமரைக்குளத்திலே போய்விழுந்தான். அவனை யெரித்து வீழ்த்தின சோமசுந்தரக்கடவுள் உடனே தமது திருவுரு மறைந்தருளினார்.

தருமிக்குப் பொற்கிழி யளித்த படலம் முற்றிற்று.

———

ஐம்பத்துமூன்றாவது

## கீரனைக் கரையேற்றிய படலம்

மாரனைப்பொடி கண்டவ னந்தண மைந்தனுக்
கார நற்கன கக்கிழி யீந்த தறைந்தனம்
ஏர னத்திரன் கும்மல ரோடை யிடத்தினுங்
கீர னைக்கர யேற்றிய வாறு கிளத்துவாம்.

உரை: மன்மதனை யெரித்துப் பொடித்தருளிய சோமசுந்தரக் கடவுள் தருமியென்னும் பிராமணப்பிள்ளைக்கு (அவனுடைய கலியாணத்திற்கு உபயோகமாகும் பொருட்டு) மிகுதியாகப் பொற்கிழி

யளித்த திருவிளையாடலைச் சொன்னோம். இனி, அழகு பொருந்திய அன்னங்கள் வீழ்ந்து விளையாடுகின்ற பொற்றாமரைத் தடாகத்தினின்றும் நக்கீரனென்னும் சங்கத் தலைவரைக் கரையேற்றிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

தொங்குகின்ற நீண்ட சடாபாரத்தையுடைய சோமசுந்தரக் கடவுளின் நெற்றிக்கண்ணாலே தாக்கப்பட்ட கீரன் பொற்றாமரைத் தீர்த்தத்திலே வீழ்ந்து துக்கசாகரத்திலே யழுந்தித் துன்பப்படுதலை அவரோடு கூடின சங்கப்புலவர்கள் கண்டு பொறாமல் அரசனில்லாத குடிகளும், நாயக ரத்தினமில்லாத கண்டிகையும், ஞானமில்லாத கல்வியும்போலச் சங்கங் குலைகுலைந்து, ஐயையோ! சொல்லும் பொருளுமான கடவுளோடு வாதுசெய்த குற்ற மெப்படித் தீருமோ? இனிக் கீரன் பிழைப்ப தருமையென்று நினைத்து, முன்னாளிலே வெள்ளிமலையை வேரோடு பெயர்த்த ராவணன் பயந்து கைவீணையாலே இன்னிசைபாடக் கேட்டு மனமிரங்கினவராகிய கடவுள், பின்னும் அந்த ராவணனுக்குத் தேரும் வாளும் கொடுத்து, அவன் செய்த குற்றத்தையும் பொறுத்தருளினாரல்லவோ? ஆகையாலே இக் குற்றத்தை ஒருவராலுந் தீர்க்கப்போகாது. எல்லார்க்குந் தெய்வமான சோமசுந்தரக் கடவுளே மனமிரங்கினால் தீர்த்து போகுமென்று துணிந்து சொல்லிக்கொண்டுபோய் புலவர்கள் கடவுளடி நிழலிலே யொதுங்கி நின்று சேவித்து,

### கொச்சகக் கலிப்பா

திருத்த னேசர ணஞ்சர ணம்மறைச் சென்னிமேய்
நிருத்த னேசர ணஞ்சர ணம்நிறை வேதநூல்
அருத்த னேசர ணஞ்சர ணந்திரு வாலவாய்
ஒருத்த னேசர ணஞ்சர ணங்க ளுனக்குநாம்.

பாயு மால்விடை மேல்வரு வோய்பல் லுயிர்க்கெலாந்
தாயுந் தந்தையு மாகுநின் றண்ணளி தர்மரைக்
கேயு மாதவன் போனல்ல தீய வியற்றினார்க்
காயு மின்பமுந் துன்பமு மாக்குவ தாதலால்.

அந்த கற்ற செருக்கி னறிவழி ரேனின்
வித்த கக்கவி யைப்பழு தென்ற விதண்டையான்
மத்த கக்கண் விழித்து வெதுப்பின் மலர்ந்தபொன்
முத்த கக்கம லத்திடை வீழ முடக்கினாய்.

என்று துதித்து, ஓ காளகண்டக்கடவுளே! இனி, இந்தக் குற்றத்தை மன்னித்தருள வேண்டுமென்று கபிலன், பாணன் முதலான புலவர்களெல்லாம் சரணமென்று விழுந்து வணங்கி மிகவும் வேண்டினார்கள். அப்போது அந்தத் திருப்பாற்கடலில் பிறந்த நஞ்சையுண்ட கிருபா சுவரூபியான சோமசுந்தரக்கடவுள், கரும்பின் மாதுரியத்தையும் வெல்லத்தக்க தீஞ்சொல்லையுமுடைய மீனாட்சியம்மையோடெழுந்தருளிவந்து, நக்கீரன் கிடக்கின்ற பொற்றாமரைத் தீர்த்தக் கருகே

போய்க் குளிர்ந்த மதுரம்பொருந்திய சொல்லையுடைய புலவர் கூட்டத்திலே நின்றருளினர். அப்படி நின்றருளின சோமசுந்தரக் கடவுள், முன்னே நெருப்புக்கண்ணாலே பார்த்து வீழ்த்தி இப்போ தருட்கண்ணாலே பார்க்க, ஆழ்ந்த நீரிலே கிடக்கிற நக்கீரன் பொறிபுலன் கரணங்களெல்லாம் கடவுள் விஷயமா யொருமித்து, அவரது கிருபைக் கடலிலே முழுகி அன்புருவாய், ஐயோ உலக மாதாவான ஞானப் பூங்கோதையம்மையார் திருக்கூந்தலுக்குங் குற்றஞ் சொன்ன என் வாய்க்குற்றத்தைச் சோமசுந்தரக்கடவுளை யல்லாமல் யார் பொறுத் தருளுவாரென்று காளத்தி கயிலையென்றெடுத்த சொன் மாறிமாறி யிசைய, வெண்பாவினாலே ஒரு திருவந்தாதி பாடித் துதிக்க, அது கேட்ட சோமசுந்தரக்கடவுள் அவன் முன்னேவந்து அவன் கையைப் பிடித்துக் கரையேற்றிவிட்டார். கரையேறின கீரன், பிறவிக் கடலினின்று கரையேற்ற வல்லவராகிய சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கண்ணம்மையையும் வணங்கி அவ்விருவருடைய கிருபைக் கடலிலே மூழ்கிக் குற்றஞ் செய்தவர்களுக்குப் பயதண்டமும் நன்மை செய்தவர்களுக்கு அன்புஞ் செய்கின்றதே பொருளாகக்கொண்டு கடவுளருளை வேண்டிப் பாடுகின்றான் :—

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அறனிலா னிழைத்த வேள்வி யழித்தபே ராண்மை போற்றி
மறனிலாச் சண்டிக் கீந்த மாண்பெருங் கருணை போற்றி
கறுவிவிழ் கூற்றைக் காய்ந்த கனைகழற் கமலம் போற்றி
சிறுவனுக் கழியா வாழ்நா ளளித்தருள் செய்தி போற்றி.

சலந்தர னுடலங் கீண்ட சக்கரப் படையாய் போற்றி
வலந்தரு மதனை மாயோன் வழிபடக் கொடுத்தாய் போற்றி
அலர்ந்தசெங் கமலப் புத்தே ணடுச்சிர மரிந்தாய் போற்றி
சிலந்தியை மகுடஞ் சூட்டி யரசருள் செல்வம் போற்றி.

திரிபுரம் பொரிய நக்க சேவகம் போற்றி மூவர்க்
கருளிய தலைமை போற்றி யனங்கனை யாகந் தீய
எரியிடு நயனம் போற்றி யிரதிவந் திரப்ப மீளக்
கரியவன் மகனுக் காவி யுதவிய கருணை போற்றி.

நகைத்திட வந்த வந்த நதசிரந் திருகி வாங்கிச்
சிகைத்திரு முடிமேல் வைத்த திணிதிறல் போற்றி கோயில்
அகத்தவி சுடரைத் தூண்டு மெலிக்கரசாள மூன்று
சகதலத்தையு மளித்த தேவா தம்பிரான சரணம் போற்றி.

பொருப்பகழ்ந் தெடுத்தோன் சென்னி புயமிற மிதித்தாய் போற்றி
இருக்கிசைந் தவன பாட விரங்கிவாள கொடுத்தாய போற்றி
தருக்கொடு மிருவர் தேடத் தழற்பிழம பாய போற்றி
செருக்குவிட் டவரே பூசை செய்யநேர் நின்றாய் போற்றி,

பருங்கைமால் யானை யேனம் பாய்புலி யரிமான் வினம்
இருங்குறள் யாமை கொண்ட் டிகல்வலி கடந்தாய் போற்றி
குரங்குபாம் பெறும்பு நாரை கோழியா னலவன் றேரை
கருங்குரீஇ கழுகி னன்புக் கிரங்கிய கருணை போற்றி.

சாலநா ளிழைத்த தீங்குக் கென்னையுந் தண்டஞ் செய்த
கோலமே போற்றி யஞ்சிக் கொடியனேன் றெடுத்த புன்சொன்
மாலைகேட் டென்னை யாண்ட மலைமகள் மணாள போற்றி
ஆலவா யடிகள் போற்றி யம்மைநின் னடிகள் போற்றி.

என்று துதித்து நின்று, ஆ! மிகவுந் துன்பப்பட்டேன். அடியேனுக் கருளருளென் றிப்படிக் கோபமும் பிரதாபமுந்தோன்ற, சோமசுந்தரக் கடவுளையும் அங்கயற்கண் ணம்மையையும் போற்றிபோற்றி யென்று பாடிப் பின்னும் தேவகானத்தோடுங் கூடிய ஏழிசை யெழு கூற்றிருக்கையும்பாடிச் சொக்கநாதருடைய சேவடிகள் தன் சிரசின் மேற்பட விழுந்து சேவித்தெழுந்தான். மற்றப் புலவர்களுந் தனித் தனியே பாடித் துதித்து வணங்கினார்கள். பின்பு சோமசுந்தரக் கடவுள் தம்மைப் பாடித்துதித்த நக்கீரருக்கு இன்னருள் சுரந்து நீ முன் போலவே பாண்டியனாலே மெச்சப்பட்ட புலவர் கூட்டத்திலேபோயிரு வென்று சொல்லித் தமது திருவுருமறைந்தருளி இந்திரவிமானக் கோயிலுக்குள் அம்மையோ டெழுந்தருளி யிருந்தார். பின்பு நக்கீரரும், புலவர்களும் சங்கமண்டபத்திலே தொங்கக் கட்டியிருந்த பொற் கிழி யென்கிற பொன்முடிப்பை அந்தத் தருமியென்னும் சைவப் பிராமணனுக்குக் கொடுத்துப் பாண்டியனாலும் வரிசைகள் கொடுக்கச் செய்து, சோர்வில்லாத கல்விச்செல்வரா யமர்ந்திருந்தார்கள். பின்பு சண்பகபாண்டியன் மீனாட்சி சுந்தரேசரை வந்து வணங்கி நிறைந்த மெய்யன்புடனே பின்னும் திருக்கோயிலுக்கும் சோமசுந்தரக் கடவுளுக்கும் வேண்டிய திருப்பணிகள் செய்துக்கொண் டிருந்தான்.

கீரனைக் கரையேற்றிய படலம் முற்றிற்று.

---

ஐம்பத்துநான்காவது

## கீரனுக்கிலக்கண முபதேசித்த படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

கொன்றையந் தெரியல் வேய்ந்த கூடலெம் பெருமான் செம்பொன்
மன்றலங் கமலத் தாழ்ந்து வழிபடு நாவ லோனை
அன்றகன் கரையே றிட்ட வருளுரை செய்தே மிப்பாற்
றென்றமி ழ்முனியான் றேறத் தெருட்டிய திறனுஞ் சொல்வாம்.

**உரை:** அழகிய கொன்றை மாலையைத் தரித்த சோமசுந்தரக் கடவுள், வாசனை பொருந்திய பொற்றாமரைத் தீர்த்தத்தில் விழுந்து வருந்திப் பின்பு வழிபட்டு வேண்டிய நக்கீர தேவரை, அப்போது

அகன்ற அந்தத் தீர்த்தக்கரையி னின்றும் ஏற்றியருளிய திருவிளை யாடலைச் சொன்னோம். இனி, அந்த தக்கீரதேவருக்கு, அகஸ்திய மகாமுனிவரைக் கொண்டு செந்தமிழிலக்கணத்தை யுபதேசித்தரு ளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

முன்பு நான்மாடக் கூடலென்னும் மதுராபுரியில் எழுந்தருளிய முதற்பெருங் கடவுளாகிய சோமசுந்தரப் பெருமானுடைய திருவரு ளாலே சென்று புலவர் கூட்டத்திற் கூடி வாழுகின்ற நக்கீரதேவர், தமதுள்ளத்திருந்த கோணல் தீர்ந்து, மதுரேசர் திருவடிகளிலே மிகுந்த அன்புகொண்ட மனத்துடனே ஆராய்ந்து பார்த்து, முன்னே கடவுள் நெற்றிக்கண்ணாலே எரித்த மன்மதன், பிரம்ம விஷ்ணுக்களா லும் உருவாகாமற் போனான். நம்மையும் அந்தக் கண்ணே சுட, அந்த வெம்மையைத் தீர்த்து ரக்ஷித்ததல்லவோ இந்தப் பொற்று மரைத் தீர்த்தம் ஆகையாலே இந்தத் தீர்த்தமே நம்மை யெக்கால மும் ரக்ஷிக்கத் தக்கதென்று வேறுபாடில்லாத மனதை யுடையவ ராய் மூன்று காலமும் போய் மூழ்கி மூழ்கி, எனதப்பனாகியும், திரு வாலவா யென்னும் மதுராபுரியி லெழுந்தருளி யிருக்கின்ற பெருமா னாகியும் உள்ள சோமசுந்தரக் கடவுளை அடியார்களுடன் சேவித்து, அதுமுதல் தினந்தோறும் வழிபடுகின்ற நியமத்தை யுடையவராக விருந்தார்

இப்படிக் களங்கமில்லாத மனதுடனே வந்து வழிபடுகின்ற நக்கீரர் நியமத்தைக் கண்டு சோமசுந்தரக்கடவுள் மனமகிழ்ந்து எழுந் தருளி, இந்தக் கீரனுக் கிலக்கண மின்னுந் தெளிவாக வரவில்லை. ஆதலால், இது செஞ்சொல், இது வழூச்சொல்லென்று தெரிகிலன். இனி குற்றந்தீர்ந்த கேள்வியறிஞர்கள் யாரைக்கொண்டு இவனுக்குப் போதிப்போமென்று நினைத்து ஆலோசிக்கும்போது, அம்மையான வள் தன்னுடைய தாமரை மலர்போன்ற கைகளைக் குவித்து வணங்கி, சுவாமி உள்ளங்கை நெல்லிக்கனிபோல எல்லா மொருங்குணர்ந்த உம்முடைய சங்கைக்கு விடைசொல்ல வல்லவர்களெங்கே யாரிருக் கிறார்கள். ஆனாலு மென்மனதுக்குத் தோன்றியதொன்று சொல்லு கிறேன். அதாவது, முன்னொரு காலத்திலே வெள்ளிமலையி னிடத்து, இந்திரன் பிரமன் விஷ்ணு சனகாதி முனிவர் முதலான எல்லாருங் கூடினபோது, அங்குப் பூமி தாங்காமல் வட கீழ்த்திசை அழுந்தித் தாழ்ந்தது, தென்மேற்றிசை உயர்ந்தது. அதுகண்டு தேவர்க ளெல்லோரும் உம்மை வணங்கித் துதித்து, சுவாமி உம்மையொப் பான ஒருவரை தென்மேற்றிசையிற் போயிருக்க விடைகொடுத்தால் இந்தப் பூமி சரியாக நிற்குமென்றார்கள். அப்படிச் சொல்லக்கேட்ட நீர் கடல் நீரைப் பானம் பண்ணின அகத்தியமுனிவனே நம்மை யொப்பானவன், அவன் மனைவாழ்க்கைக்குரிய உலோபா முத் திரையே பார்வதியை யொப்பானவளென்று நினைத்து, அங்கே போய் இருக்கும்படி அந்த அகத்தியமுனியை யனுப்பும்போது அந்த முனி

வன், சுவாமி! நான் போகும்படியான நாடோ தமிழ் வழங்கும் நாடு. அந்த நாட்டிலுள்ளவர்களெல்லாம் தமிழாராய்ந்து கேட்டுத் தெளிந்தவர்கள். அவர்களுக்கெல்லாம் கேள்விக்கு விடை சொல்ல வேண்டும். ஆதலால், அந்தச் செந்தமிழிலக்கணம் எனக்குத் தெரியத் திருவருள் செய்யவேண்டுமென்றான். அதற்கு அவன் கேட்டுக்கொண்டபடியே இலக்கண முதனூலைத் தெளியச் சொல்லி யருளினீர். அப்படி இலக்கணந் தெளிந்துகொண்ட பின்னும் சுவாமி! இனி எக்காலத்தில் தேவரீருடைய திருவடியைச் சேவிப்பேனென்ன அதற்கு நீ கடம்பவனத்திலே நம்மைக் கண்டு சேவித்துக்கொள்ளென்றும் இன்னும் உனக்கு வேண்டியவைகளெல்லாம் அங்கே நம்மிடத்திலே பெற்றுக்கொள்ளக் கடவையென்று விடைகொடுத்துப் பொதியமலையிற் போயிருக்கத் திருவருள் செய்தனுப்பினீர். அப்படியே இன்னும் உலோபாமுத்திரையுடனே கூடி அங்கே தானே யிருக்கின்றான். இது செய்தி உமக்கு ஞாபகமுண்டாகத் தெரிவித்தேன். உம்முடைய திருவுள்ளத்துக்குச் சம்மதமானால் இந்தக் கீரனுக்கு அந்த அகத்தியமுனியை அழைத்து இலக்கணந் தெளியப்படுத்துமென்று மீனாட்சியம்மையார் சொல்லக் கடவுள் மனமகிழ்ந்து, அக்காலத்தில் நடந்தனவெல்லாம் இன்றளவும் மறவாமலிருந்து சொன்னையல்லவோ வென்று கொண்டாடி, அப்படியே செய்கிறேமென்று அந்தக் குடம்பெற்ற முனியான அகத்தியமுனிவரை நினைத்தார். அப்போது எல்லாமுடைய நாயகரான சோமசுந்தரக்கடவுள் திருவுள்ளந் தெரிந்து, தலைமேலே கைகளைக் குவித்துக்கொண்டு அரிய தவமான விமானத்தின்மேலே தன் பத்தினியாரோடேறிக் ககனமார்க்கமாக வந்து அந்தத் தவத்தேரைவிட்டுப் பத்தியுடனே தமிழ் முனிவனிறங்கிச் சோமசுந்தரக்கடவுள் திருக்கோயிலுக்குள்ளே புகுந்து, நான்கு புயங்களுடனே விளங்குகின்ற கடவுளாகிய செம்பவள மலையையும் அதனருகே விளங்குகின்ற தேவியாகிய இந்திர நீலமலையையும் வணங்கி, அன்பு மனத்திலே துளும்பிப்பொங்கவும், மெய்ஞ்ஞானந் தம் பெருகவும், கடவுளருகே ஒரு புறத்திலிருக்க, அப்போது அவ்விடத்தே நக்கீரரும் பொற்றாமரைக் குளத்திலே நீராடிக் கடவுளை முன்போலவே உருகுகின்ற அன்புடனே விரைவில் வணங்க வந்தார்.

அப்போது நக்கீரர் வரக்கண்ட கடவுள், அகத்தியரைப் பார்த்து, ஓய் அகத்தியமுனிவரே! இந்தக் கீரனுக்கின்னு மிலக்கணம் தெளிவாய் நிரம்பவில்லை. ஆதலால், நீர் எம்மிடத்தே தெரிந்துகொண்டபடி குற்றந்தீரத் தெளிவு படுத்துக வென்று திருவாய் மலர்ந்தருளினார். உடனே அகத்தியமுனிவர் சந்திர சடாதரனான கடவு ளனுக்கிரகத்தைத் தலையிலு மனத்திலுங் கொண்டு, நக்கீரரையழைத்து வணங்குவித்து, அவருக்கு வடநூலார் வியாகரணமென்கிற இலக்கணஞ்சொல்லத் தொடங்கினார். எப்படியென்றால், பொதுப்பாயிரம் சிறப்புப்பாயிரம் இவைகளைக்கொண்டு எழுவகை மதங்களுடனே நான்குபொருளுங்

கூடிப் பத்துக்குற்றங்களையு மொழித்துப் பத்தழகும் முப்பத்திரண்டு யுத்திகளும் பொருந்திய முனிவன்கண்ட முதநூலைத் தொகைவகை விரிமுறையாகக் கருத்துரை பதவுரை முதலிய காண்டிகை யுரையாலும் விருத்தியுரையாலும், நூலிலுள்ள பொருளைக் குற்றமில்லாமல் விளங்கத் தெரிவித்தார். அப்படித் தெரியப்படுத்தின வழிநூலாசிரியன் திறத்தைக்கண்டு அந்த நூலின் பொருள்வடிவான முதனூலாசிரியர், சந்தோஷமும் இன்பமும் கருணையுந் தழைக்கத் தம்முடைய திருக்கைகளாலே உள்ள மகிழ்வுபொங்க, ஆலிங்கனஞ் செய்து, அவருக்கு வேண்டின வெல்லாம் அருள்செய்து, பொதிய மலையிலே போயிருக்க விடைகொடுத்தனுப்பிவிட்டார். உடனே உலோபா முத்திரையோடு அகத்தியமுனிவர் விடைபெற்றுப் போனபின்பு, அங்கயற் கண்ணம்மை தம்மிறைவரைப் பார்த்து, சுவாமி! என்ன காரணத்தினாலே நீரே சொல்லாமல் கீரனுக்கு அகத்தியராலே இலக்கணஞ் சொல்லுவித்ததென்று கேட்க, அதற்கு மதுரேசர் தமது தேவியாரைப்பார்த்து, பெண்ணே கேள் : நூல் சொல்லவேண்டியது, தனக்கு வழிபாடு செய்வோன், மிகவும் பொருள் கொடுப்பவன், மனமாச்சரியமில்லாதவன், சொன்னசொற் கடவாதவன் ஆகிய இப்படிப்பட்டவர்களுக்கே சொல்வது தருமம். இந்தக்கீரன் என்னோடுகொண்ட மனமாச்சரியத்தாலே நாமே சொல்லாமல் அகத்தியமுனிவராலே சொல்லுவித்தோமென்ன, அம்மைகேட்டுக் கவலைதீர்ந்து மகிழ்ந்திருந்தாள். பின்பு இலக்கணந் தெரிந்துகொண்ட நக்கீரர், தாம் முன்னே பாடின கவிகளெல்லாம் ஆராய்ந்து பார்த்து, அதிலுள்ளவழிவழா நிலைகளெல்லாந் தெரிந்து, ஐயோ நான் யாது காரணத்தினாலே முழுதொருங் குணர்ந்த முகற்கடவுள் பாடலிலே பொருள்வழச் சொன்னேன். வேதாந்தங்களும் தொட்டறியப்படாத பாதங்கள் பூமிதொடும்படி வருந்த எழுந்தருளின நிறைந்த பரஞ்சோதி நிராமயமான வெள்ளியம்பலவாணர் விஷயத்தில் அபராதியானேன். எப்படியென்றால், அல்ப மதிகளே அதிக செருவிகளென்கிற பழமொழி என்மாட்டாகவன்றோ முடிந்தது. இன்னும் அட்டமூர்த்திக்குச் செய்த குற்றத்தினாலே அக் கடவுள் நெற்றிக்கண்ணே என்னுடம்பைச் சுட்டதேயன்றி என்னெஞ்சையுஞ் சுடுகின்றதேயென்று பலவிதமாக மனநடுங்கிப் பின்னும் பிள்ளையைப்பெற்ற தாயானவள் கசக்குமருந்தை வாயிலூட்டிப் பிணியைத் தீர்த்தாற்போல், என்னுடைய பகைகொண்டு வலிந்து என்குற்றந்தீரத் தெளிவு செய்த சோமசுந்தரக் கடவுளுக்கு நான் செய்யக் கிடந்ததென்ன வென்று அளவில்லாத பேரின்பக் கடலிலே முழுகிக் கடவுள் அகத்தியமுனிவராலே தமக்குத் தெளிவுபெறச்செய்த நூலை எல்லாப் புலவர்களுக்கு மன்புடனேபோதித்து, கடவுள் திருவடிக்கன்பு மிகுதி மேன்மேலாக நக்கீரர் சங்கத்தில் மிகுந்த அன்போடிருந்தார்.

கீரனுக்கிலக்கண முமதேசித்த படலம் முற்றிற்று.

---

ஐம்பத்தைந்தாவது

# சங்கத்தார் கலகந்தீர்த்த படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

காமனைப் பொடியாக் கண்ட சுண்ணுத றென்னூல் கீர
நாமநற் புலவற் கீந்த நலமிது பொலம்பூங் கொன்றைத்
தாமனச் சங்கத் துள்ளார் தலைதடு மாற்றந் தேற
ஊமனைக் கொண்டு பாட லுணர்த்திய வொழுக்கஞ் சொல்வாம்.

உரை : மன்மதனைப் பொடியாக வெரித்தருளிய நெற்றிக்கண்ணை யுடைய சோமசுந்தரக்கடவுள் (அகஸ்திய மகாமுனிவரைக்கொண்டு) நக்கீரதேவரென்னும் பெயரையுடைய சங்கப்புலவருக்குத் தமிழலக் கணத்தை யுபதேசித்தருளிய திருவிளையாட லிதுவாகும். இனி, பொலிவையுடைய அழகிய கொன்றைமலர் மாலையைத்தரித்த சோம சுந்தரக்கடவுள் அந்தச் சங்கப் புலவர்கள் (நாற்பத்தெண்மரும்) கொண்டிருந்த மயக்கமானது நீங்கும்படிக்கு (உருத்திரசன்மரென் னும்) ஊமைப்பிள்ளையைக்கொண்டு அவர்கள் பாடலின் உண்மைப் பொருளை யுணர்த்தி அவர்கள் கொண்டிருந்த கலகத்தைத் தீர்த்தரு ளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அளவில்லாத நிறைந்த கல்வி கேள்விகளில் வல்லவராகிய சங்கப் புலவர்கள் நாற்பத்தெட்டு பேர்களும், தனித்தனி வெவ்வேறே செந் தமிழ்ச் செய்யுள்கள்பாடி, அவரவர்களும் தங்கள் தங்களை மெச்சிப் பெருமைகள்பேசி மாறுகொண்டு, பின்பு அவரவர் தராதரந் தெரிந்து சொல்லவல்ல முதனூலாசிரியரான கடவுள் சந்நிதிமுன்னே வந்தார் கள். அப்படி வந்தவர்கள் சோமசுந்தரக்கடவுளை வணங்கிச் சுவாமி! அடியேங்கள் பாடின இந்தப்பாடல்களில், நல்லதும் தீயதும் தெரிந்து வேறுபாடுகளை அளவிட்டுக் காட்டி, அவைகளின் குற்றங்களைப் போக்கி எங்கள் சந்தேகந் தீர்த்தருள வேண்டுமென்று வேண்டிக் கொள்ள, அதைக்கேட்ட வேதமுதல்வரான சோமசுந்தரக்கடவுள், முன்னே பிரம்ம விஷ்ணுக்கள் தேட வளர்ந்து, நெருப்புமலையாக நின்று அதிலிருந்து வந்த வடிவுபோலே சச்சிதானந்த சொரூபமாய் உலகுக்கெல்லாங் காரணமாக முளைத்த மூலவிலிங்கத்தி லிருந்தும் காணக்கூடாத ஒரு புலவராகி எழுந்தருளி வந்து, ஓய் புலவர்களே! இந்த மதுரையிலே ஒரு வர்த்தகன் குபேரன்போலும் பாக்கியவான். அவன் பேர் தனபதி. அவன் மனைவியாள் பேர் குணசாலினி. அவ் விருவருக்கும் அவர்கள் செய்த பெரிய தவத்தினாலே வெள்ளறிவாள ருடைய அஞ்ஞான விருள்நீங்க ஞானசூரியன்போல ஓர் புத்திரன் அவதரித்திருக்கிறான். அவனே தெய்வத்தன்மையான மன்மதன் போலும் வடிவழகுள்ளவன். ஆனால் வாய்பேசாத ஊமைப்பிள்ளை. அவனிடத்தில் நீங்கள் எல்லோரும்போய் நீங்கள் பாடின பாடல்களை

யெல்லாம் சொல்லுங்கள் ; அவன் கேட்டுத் தன் புத்திக்கிசைந்து நன்றென்ற பாடல்களே எல்லாரும் மதிக்கும்படியான பாடல்கள் என்று சொல்ல, அதற்குப் புலவர்கள், சுவாமி! அவன் ஊமைப் பிள்ளையானுல் எங்கள் பாடல்களிலுள்ள நன்மை தீமைகளை எப்படித் தெரிந்துகொள்ள மாட்டுவானென்று கேட்க, வெள்ளியம்பலவழகர், ஓய் புலவர்களே ! அவன் செட்டிப்பிள்ளையாய் ஊமையாயிருந்தாலும், உங்கள் பாடல்களிலுள்ள சொல்லாழமும் பொருளாழமுங் கண்டால் தலையை யசைத்து, உடம்பெல்லாம் புளகித்து, மனங்களித்தானந்திப் பான். அப்போது உங்களுக்கெல்லாம் உண்டான கலகத்தீரு மென்று சொல்லி, ஆலயத்துக்குள்ளே யெழுந்தருளினுர். பின்பு புலவர்களெல்லாருங் கூடிப்போய் அந்த வைசியரத்னத்தை அன் போடு கண்டு அழைத்துக்கொண்டுபோய்த் தங்கள் சங்கத்திலேயிருக் கப் பண்ணி அவன் திருவடியை அருச்சித்து, நல்ல சந்தன களப கஸ்தூரி புஷ்பங்களாலே அலங்காரஞ்செய்து விசுவசித்து முன்னே யிருந்து தாங்கள் பாடின அருமையான மதுரம்பொருந்திய தமிழ்ப் பாடல்களைக் கேட்டுச் சிலர் சொல்லாழங்களை மகிழ்ந்தான். சிலர் பொருளாழங்களை மகிழ்ந்தான். சிலர் சொற்கூட்டுகளை இகழ்ந்தான். சிலர் பொருட்கூட்டுகளை இகழ்ந்தான். சிலர் சொல்லின்பங்களைப் புகழ்ந்தான். சிலர் பொருளின்பங்களைப் புகழ்ந்தான். சிலர் சொல் லுறுதிகளையும் பொருளுறுதிகளையுந் தேர்ந்து கொண்டாடினுன்.

இப்படிப் புலவர்கள் பாடின தமிழ்நயங்களை, மனக்குறிப்பிலே தெளியப்படுத்தின சிறிய செட்டிப்பிள்ளை, மிகத் தெளிந்த நக்கீரர் தமிழையும், கபிலர் தமிழையும், பாணர் தமிழையும் அப்படியே கேட்கும்போ தெல்லாம் கொண்டாடி, அந்த மூவர் தமிழிலும் நுழைந்து, சொற்சுவையும் பொருட்சுவையு மிகச் சிறந்திருக்க, அனுப வித்து, உடல்பூரித்து, மனமொருமித்துச் சிரசை யசைத்து, மகிழ்ந் துருகி, ஆனந்தக் கண்ணீர்விட்டு, நவரத்தினங்களையும் தனித்தனியே விலை மதித்துச் சொல்லுந் தங்கள் குலச்செட்டிகள்போல புலவர்கள் பாடின தமிழ்ப் பாடல்களைத் தராசுமுனைபோல நிறுத்திப் பார்த்து இன்னதிப்படி இன்னதிப்படியென்று குறித்துக் காட்ட, நல்வழி தெரிந்த புலவர்கள் ஒருவருக்கொருவ ருண்டான பகை தீர்ந்து உற வானுர்கள். பின்பு, அப்புலவர்கள் பாடின பாடல்கள் உலகமெல் லாம பரவிச் சிறந்து விளங்கின. அந்தத் தெய்வப் புலவர்களும் தங்கள் கலகந் தீர்ந்து நூலாராய்ச்சி செய்து பழையபடி சங்கங்கூடிப் பொலிவு பெற்று வாழ்ந்திருந்தார்கள்.

சங்கத்தார் கலகந்தீர்த்த படலம் முற்றிற்று.

---

ஐம்பத்தாருவது

# இடைக்காடன் பிணக்குத்தீர்த்த படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

குடைக்காடன் பசிக்கன்னக் குழியருத்தி
வேட்கையறக் கொடுத்த கங்கைச்
சடைக்காடன் புலவரிக ரணிவித்த
முறையிதுமேற் றன்னைப் பாடுந்
தொடைக்காடன் பகன்றிகழ்ந்த தென்னவனை
முனிந்துதன்னைத் தொழுகி போன
இடைக்காட னுடன்போய்ப்பின் யெழுந்தருளிப்
பிணக்கறுத்த வியல்பு சொல்வாம்.

உரை : குடைக்கு ஆளாகிய குண்டோதரனென்னும் பூதத் தலைவனது பசிதீரும்படி அன்னக்குழியை அவன் கொண்டிருந்த ஆவலடங்க உண்ணும்படிக்குக் கொடுத்தருளிய கங்கை தங்கிய சடாமுடியை யுடைய சோமசுந்தரக்கடவுள், சங்கத்தாருடைய கலகந் தீர்த்த திருவிளையாட லிதுவாகும். இனி, தன்மேல் பாடிக்கொண்டு வந்த பிரபந்தத்தைக் கண்டு மகிழாமல் இகழ்ந்த குலேச பாண்டியன் மேல் கோபித்து அதனைத் தம்முடைய சந்நிதியில் வந்து முறையிட்டு வணங்கிப் போன இடைக்காட்டுச் சித்தரோடு சென்று மீண்டும் எழுந்தருளி அவருக்குண்டாயிருந்த பிணக்கைத் தீர்த்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

அதன்பின்பு சண்பகபாண்டியன், இந்திரனுக்குண்டாகிய பழியைத் தீர்த்து அவனுக்கு முன்னிருந்த அரசுரிமையும், பின்பு மோட்ச வின்பமுந் தந்தருளிய சண்பகசுந்தரர் பொன்னடிக்கு மிகுந்த அன்புகொண்டு, சண்பகப்பூமாலை கட்டிச் சாத்தி வணங்குகின்ற திருத்தொண்டுக்குத் தகுந்த அந்தர சூடாமணியாய் விளங்குகின்ற சிவலோகத்தை யடைந்தான். அவனுக்குப் பின்பு, பிரதாப சூரியன் - வங்கிசத்துவசன் - இரிபுமருத்தனன் - சோழவங்கிசாந்தகன் - சேரவங்கிசாந்தகன் - வங்கிசேசசன் - வங்கிலே, திசசிரோமணி - பாண்டீச்சுரன் - குலத்துவசன் - வங்கிசபூடணன் - சோமசூடாமணி - குலசூடாமணி - இராசசூடாமணி - பூபசூடாமணி - குலேச பாண்டியன் என்றிப்படிப் பதினைந்து பாண்டியர்கள் மதுரையை யரசாண்டார்கள். அவர்களில் குலேசபாண்டியன், இலக்கண விலக்கிய முதலிய எப்படிப்பட்ட நூல்களின் முடிவுங்கண்டு தெளிந்தவ னுதலினாலே முத்தமிழ்ச்சங்கம் அவனுக்கு இடங்கொடுத்துக் கூடவிருந்தான். அப்படிக் கல்வி கேள்விகளினாலே சிறந்தவனென்று கேட்டு, இடைக்காடடுச்சித்தர் முழுதுந்தெரிந்த கபிலரைச் சினேகங்கொண்டு அவராலே அந்தப் பாண்டியனைக் கண்டு, தமிழ்

சொல்ல வேண்டுமென்று நினைத்து, தாம் பாடின பாடல்களைப் பாண்டியன் முன்னே வந்து சொல்ல, பாண்டியன் அப்பாடல்களின் சொற்சுவை பொருட்சுவைகளெல்லாந் தெரிந்தும், தம் மனத்திற் பொறுமையாலே தலை யசைத்தல், மனமகிழ்தல் முகமலர்தல்களிலொன்றுஞ் செய்யாமல் பேசாதிருந்தான். அப்போது சங்கத்தாரை வேண்டிவந்த இடைக்காட்டுச்சித்தர் மிகவும் நாணி, அங்கு நின்றும் சோமசுந்தரக் கடவுள் திருக்கோயிலுக்குப் போய்ச் சந்நிதியிலே விழுந்து சேவித்துத் தமிழறியும் பெருமானே! தன்னைச் சேர்ந்தார் பெறுதற்குரிய செல்வமே! திருவாலவாயுடைய நாயகனே! இந்தப் பாண்டியன் கல்வியிற் சிறந்தவனென்று சொல்லக்கேட்டு, வந்து பாடல்கள் பாடினேன். அதற்கு அவன் எவ்வளவுந் தலை யசையாமல், அவமதித்து, அன்புகொண்டு புகழ்ந்தவர்களுக்கு ஒரு பயனுமுதவாத உவர்க்கடல், உப்பங்கழி, காட்டுமிருகம், பக்ஷி, முள்வரம், வெறுங்கல்லானமலை, வேம்பு, பாலைநிலம் இவைகளிலொன்றான அசேதனம் போலிருந்தான். எம்மையனே! இப்படி அவன் என்னையே அவமதித்தான். அன்று, சொல்வடிவான இந்த அங்கயற்கண்ணம்மையையும், பொருள் வடிவான உம்மையுமே அவமதிப்புச் செய்தான. ஆகையாலே எனக் கொன்றுமில்லையென்று சந்நிதி முன்னே நின்றிப்படி விண்ணப்பஞ் செய்துவிட்டு இடைக்காட்டுச் சித்தர், தணியாத கோபத்துடனே, அங்கு நின்றும் விரைந்துபோயினார். பின்பு அவர் சொன்ன சொற்களை சோமசுந்தக்கடவுள் திருச்செவிகளிலே அருளோடுமேற்று விரைந்து சென்ற இடைக்காட்டுப் புலவருக்கும் அவரைத் தொடர்ந்து சென்ற கபிலருக்கும் மனமகிழ்வாகத் தாமும் ஞானமயமான தம்முடைய இலிங்கவடிவைத் தெரியாமல் மறைந்து விட்டுத் தேவியுடனே சென்று வெளியேபோய்த் தமது கோயிலுக்கு வடபுறத்திலே வருகிற வையை யாற்றுக்குத் தென்பாகத்திலே ஓராலயந் தோற்றுவித்து அதிலே எழுந்தருளியிருந்தார்.

பின்பு சங்கப்புலவர்களும், கடவுள் போனவழியேபோய், அங்குத் தோன்றின ஆலயத்தினிடத்திலேதானே வாசஞ்செய்திருந்தார்கள். அன்றிராத்திரி விடிந்து விடியற்காலம் பள்ளியெழுந்த பின்பு சேவிக்க வந்த அடியார்கள் ஞானமயமான சிவலிங்கத்தை அங்கே காணாமல் இதென்ன மாயமென்று அதிசயித்துச் சித்தங்கலங்கி இதைச் செய்தியைப் பாண்டியராசனுக்கு ஓடிப்போய்த் தெரிவிப்போமென்று போகும்போது, மதுராபுரி பிராண நாயகனைப் பிரிந்த பெண்கள் போலவும் லட்சுமி நீங்கிய தாமரை மலர் போலவும் அழகு குலைந்து களையில்லாதிருப்பதைப் பார்த்துக் கொண்டு போய்ப் பாண்டியனைக்கண்டு நடுநடுங்கி நாவுலர்ந்து, ஐயா பாண்டிய மகாராஜனே! நாங்கள் சொல்லப் பயப்படுகிறோம். ஆனாலும் உங்கள் குலதெய்வத்தைத் திருப்பள்ளியெழுச்சி கண்டு இன்று சேவிக்கப்போனோம். அங்கே கடவுள் வடிவமான சிவலிங்கத்தைக்

காணோம், வெளியே பட்டணங்களெல்லாம் அழகு குலைந்திருக்கின்ற தென்று, காய்ச்சின வேலைக் காதிலே சொருகினாற்போலச் சொன்னார்கள். உடனே பாண்டியன் சிங்காதனத்திலிருந்து அடியற்ற மரம் போல மண்மேல்விழுந்து உயிரும் அறிவும் ஒடுங்கி மண்பொம்மை கிடந்தாற்போலக் கொஞ்சநேரங் கிடந்து சிறிது ஞாபகமுண்டாகி யெழுந்து, இரண்டு கைகளையுங் குவித்து அழுதகண்ணீர் வெள்ளத்திலே மூழ்கி, எங்குலதெய்வமே! எம்மரசே! அடியேன் என்னகுற்றஞ் செய்தேன்? தேவரீர் திரிபுரத்தையெரிக்க வில்லாகவளைத்த மேருமலைக்குப் போனீரோ? அல்லது பழையசிவ புரத்துக்குப் போனீரோ? கயிலைமலைக்குப் போனீரோ? தம்மை மறந்து உம்மையே தியானிக்கின்ற அடியாருள்ளத்துக் கெழுந்தருளினீரோ? அல்லது எப்போதுந் துதித்துக்கொண்டே யிருக்கின்ற வேதமுடிக்கெழுந்தருளினீரோ? இப்போது எங்கே போயினீர்? என்று இவ்வாறாகப் பாண்டியன் துன்பப்படும்போது சிலர் ஓடிவந்து, ஓ ஐயா, பாண்டிய ராஜனே! நாங்கள் ஒரு அற்புதங்கண்டோம். அதாவது, வையை யாற்றுக்குத் தென்புறத்திலே பிரம்மசிருஷ்டி உண்டான நாள்முதல் ஒரு நாளுங் கண்டதில்லை. இந்தத் திருவாலவாய்க்கடவுள் இங்கிருந்த சங்கப்புலவர்கள்கூடப் பார்வதிதேவியாருட னெழுந்தருளி வாசஞ் செய்கிறாரென்றார்கள். அந்த வார்த்தை காதிலே புகுந்திழுக்க வெழுந்து, பாண்டியன் பயத்திலே மூழ்கிக் காலாலே நடந்துபோய் வையையாறு தன்னுடைய அலையாகிய கையினாலே புட்பங்களைக் கொண் டருச்சனைசெய்து வணங்கத் தென்கரையிலே பார்வதி தேவி யாருடனே வாசஞ்செய்கின்ற தங்கள் குலரத்தினமான கடவுளைக் கண்டு, ஓடிவந்து வணங்கி, அன்பினாலே உருகுகின்ற கண்ணீர் பெருகி, ஆனந்தக்கடலிலே மூழ்கிக்கிடந்து பின்னுமெழுந்து நாக்குழறித் தடுமாறி நின்று ஐயா! ஐயா!! வேதங்களுந் தேடிக் காணப்படாத திருவடிகள் சிவக்கவும், பட்டணமெல்லாம் துன்பப்படவும், ஜெகதீஸ்வரியான எமது அன்னையுடனே இங்கே வருவதற்குக்காரணமென்ன? அடியேனால் ஏதாகிலுங் குற்றமுண்டோ? அல்லது என்னைச் சேர்ந்தவர்களாற் குற்றமுண்டோ அல்லது என் பகைவர், திருடர் காட்டு மிருகங்களாலே இடையூறுண்டாயினவோ? அல்லது வேதப் பிராமணர்கள் ஆசாரந்தப்பி நடந்தனர்களோ? அல்லது தருமங் குறைந்ததோ? தவங் குறைந்ததோ? இல்லறந் துறவறந் தவறினவோ? எங்கள் குலதெய்வமே! தெய்வமே! எனக் கொன்றுந் தெரியவில்லையே என்று திருச்சந்நிதி முன்னின்று,

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

கள்ளேறு கடுக்கைநறுஞ் சடையானே போற்றிபெருங் கருணை போற்றி
வெள்ளேறு கொடியுயர்த்த விடையானே போற்றியருள் விகிர்தா போற்றி
புள்ளேறு கொடியுயர்த்த புனிதனயன் றேருத புனிதா போற்றி
வள்ளேறு சிறுகுழவி மதிநுதலங் கயற்கண்ணி மணாள போற்றி.

பாதமல ரிணைபோற்றி பன்னிரண்டு கையாளைப் பயந்தாய் போற்றி
வேதமுடி கடந்தபர ஞானத்தி லானந்த விளைவே போற்றி
போதவடி வாய்நால்வர்க்கசைவிறந்து நிறைந்தபரம் பொருளே போற்றி
மாதவள நீறணிந்த மன்னுலங் கயற்கண்ணி மணாள போற்றி.

பொக்கமுடை யார்செய்யும் பூசைதவங் கண்டுநரும் புராண போற்றி
தர்க்கன்மரம் பொடியாகத் திருப்புருவ நெரித்த கொடுந் தழலே போற்றி
செக்கமலக் கண்ணிடந்த கண்ணனுக்குத் திகிரியருள் செல்வா போற்றி
மைக்குவளை யணையமணி கண்டாவங் கயற்கண்ணி மணாள போற்றி.

என்று பாண்டியன் இப்படித் தோத்திரங்கள் பண்ணக் கேட்டுக் கூடலழகர் ஆகாயவாக்காகப், பாண்டியனே! இப்போதுன்னுடைய தோத்திரங்களைக் கேட்டு நாம் மிகவுஞ் சந்தோஷித்தோம். மிகவும் நன்றாக விருக்கின்றன. ஆனாலும் இன்ன மொன்றுண்டு. அதே தென்றால், உலகத்திலே உள்ள சிவஸ்தலங்களிலே திருவாலவாய் மிகவும் மேலானது. இங்கே சுயம்பு லிங்கங்கள் அநேகம். அல்லாமலும், அசுரர் - இயக்கர் - சித்தர் - அரக்கர்-தேவர்-முனிவர்-மனிதர் ஆகிய இவர்கள் தங்கள் தங்கள் பெயர்கள் விளங்கப் பிரதிஷ்டையாகச் செய்த இலிங்கங்கள் அநேகம். அந்த லிங்கங்களில் மேம்பாடுள்ளவைகள் அறுபத்துநான்கு. இந்த அறுபத்து நான்கிலும் மேம்பாடுள்ளவைகள் எட்டு. இந்த எட்டும் திக்குப் பாலர்களாலே பூசிக்கப்பட்டன. இப்போது நாம் இருக்கிற லிங்கம் நமது தோழனை குபேரனாலே பூசிக்கப்பட்டது. இந்த லிங்கங்களெல்லாம் ஒருழிக் காலத்திலே மறைந்துபோயின வானாலும், இங்கே இந்த லிங்கம் நமது தோழன் பூசைசெய்த தானத்தினாலே, இதிலே நாம் வாசஞ் செய்கிறோம். ஆதலால், இனி இது வடமதுரையென்று பெயர் பெறக்கடவது ஆனாலும் நாம் கடம்பவனம் - மதுரை - நான்மாடக்கூடல் - திருவாலவாயென்கிற விடங்களைவிட்டு ஒருநாளும் நீங்கமாட்டோமென்ப துனக்கே நன்றாகத் தெரியும். நீயோ எனக்கபராதி யானவன். இடைக்காட்டுப் புலவன் செய்த செய்யுளை நீ அலட்சியஞ் செய்தாயாகையாலே, நாமந்தப் புலவனிடத்தே கொண்டிருக்கிற தயையினாலே அங்கே மறைந்து, இங்கே வந்தோமென்று சோமசுந்தரப் பெருமான் கட்டளையிட, அப்படியோ வென்று, சுவாமி! சிறியோர் செய்த குற்றம் பொறுப்பது பெரியோர்களுக் கழகு தானே; ஆகையாலே பொறுத்து அடியேனை ரட்சிக்க வேண்டுமென்று பின்னுந் துதித்து வணங்கினான். அப்படி வணங்கின பாண்டியனுக்கு இரங்கி யருள்செய்து வடமதுரைக் கடவுள், அவனை அவன் அரண்மனைக்குப் போகச் சொல்லித் தாமும் சங்கப் புலவர்களும் மதுரை வந்து சேர்ந்தார்கள்.

பின்பு பாண்டியன், விதிப்படி வாழை - கமுகு - சாமரம் - மேற்கட்டி - விளக்கு - பூமாலை - நிறைகுடம் துகிற்கொடி ஆகிய இவைகளாலே அலங்காரமாக ரத்தினகஜிதமான சங்கமண்டப செம்பொன்

ருசனத்தின் மேலே மாப்பிள்ளைக் கோலமாக இடைக்காட்டுச் சித்தரை அலங்கரித்து, புலவர்கள் சூழ இருக்கச்செய்து, தானும் சிங்காசனத்தின்மேலிருந்து மல்லிகை முல்லை முதலிய வெள்ளை மலர்களால் செய்த மாலையும், வெள்ளை வஸ்திரமும், வெண்முத்து மாலையு மணிந்துகொண்டு, மங்கள வாத்தியங்கள் முழங்கவும், வேதப் பிராமணர்கள் ஆசீர்வதிக்கவும், மாங்கிலியப் பெண்கள் பல்லாண்டு சொல்லவும், தமிழ்ப்பாடலைக் கேட்டு இடைக்காட்டுச் சித்தருக்கும், சங்கப் புலவர்களுக்கும் வரிசைப்படி, வஸ்திர பூஷணுபரணங்கள்; பணிப்பெண்கள், மிகுந்த திரவியங்கள், யானை குதிரை விளைநிலம் முதலானவைகள் நிறம்பக்கொடுத்து, ஏழடிதூரம் பின்னே காலாலே கடந்து சென்று, பரிசுத்த கவிகளான சங்கப்புலவர்களே! நான் இப்போது இந்த இடைக்காட்டுச் சித்தருக்குச் செய்த குற்றமெல்லாம் பொறுத்துக் கொள்ளவேண்டும் எம்மடிகளே! என்று துதித்து வணங்கினுன். அப்போது சங்கப் புலவர்கள், ஐயா பாண்டிய மகாராஜனே! உம்முடைய குளிர்ந்த சொல்லாகிய மழையினுலே எங்கள் கோபாக்கினி அவிந்தது. இன்னமும் இந்தத் திருவாலவாயில் விளங்குகிற எங்கள் திருவாலவாய்க்கடவுள் கிருபாநோக்கத்தினுலே உமக்கு மிகுந்த புகழும், குறையாத செல்வமும் உண்டாகக் கடவதென்று வாழ்த்தினுர்கள். பின்பு பாண்டியன் தான் செய்த தவமே ஒரு வடிவுகொண்டாற்போல சோமசுந்தரக்கடவுள் அருளாலே அரிமருத்தன பாண்டியனென்கிற புத்திரனைப் பெற்றுப் பல காலஞ் சென்ற பின்பு அந்தப் புத்திரனுக்குத் தன்னரசாட்சியைக் கொடுத்துச் சோமசுந்தரக்கடவுள் திருவடியைச் சேர்ந்தான்.

இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலம் முற்றிற்று.

---

ஐம்பத்தேழாவது

## வலை வீசின படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மின்றிரிந் தன்ன வேணி வேதிய னிடைக்கா டன்பின்
சென்றுமீண் டனையான் கொண்ட பிணக்கினைத் தீர்த்த வண்ணம்
இன்றுரை செய்து முந்நீ ரெறிவலை வீசி ஞாழன்
யன்றலங் குழவி னுளை மணந்துமீள் வ்ண்ணஞ் சொல்வாம்:

உரை: மின்னலைத் திரித்தாற்போலும் விளங்குகின்ற சடாபாரத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், பாண்டியன்மீது கோபித்துச் சென்ற இடைக்காட்டுப் புலவரிடஞ் சேர்ந்து, மீண்டுமவரை மதுரைக் கழைத்துக்கொண்டு வந்து அவர் கொண்டிருந்த பிணக்கைத் தீர்த்த திருவிளையாடலைச் சொன்னோம். இனி, அச் சோமசுந்தரக்கடவுள், சமுத்திரத்தில் வலைவீசி மீன் பிடித்து (அதற்குப் பரி

சாக) குங்குமவாசனை செறிந்த அழகிய கூந்தலையுடைய உமாதேவி யைத் திருமணம் புரிந்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

பின்பு அந்த அரிமருத்தனபாண்டியன் அரசாளுங் காலத்தில், சோமசுந்தரக்கடவுள் வேறே தனியிடத்திலிருந்து, உலகமாதாவாகிய அங்கயற்கண்ணம்மைக்கு ரகசியமான வேதார்த்தங்களைச் சொல்ல, பகவான் சொல்லுகின்ற நான்குவேதப் பொருள்களை யெல்லாம் என்ன காரணத்தினாலோ அம்மை தீவினைசெய்தவள்போலக் கொஞ் சங் கவலை யுண்டானவளாய் அன்பில்லாமற் கேட்க, அது தெரிந்து பெருமான், தேவியைப் பார்த்து, அஞ்ஞானத்தையுடைய பெண்கள் போல, நாம் சொல்லுகின்ற வேதப்பயனை அசட்டையாய் மனவொரு மையில்லாமற் கேட்டாய், ஆதலாலே இந்தக் குற்றம் போகத் தரும விரதங்களில்லாமல் மீன்பிடித்து, இழிதொழில் செய்கின்ற வலையர் மகளாகக் கடவையென்று சாபங்கொடுத்தார். அப்போது தேவி பயந்து சுவாமி! உம்மைப் பிரிந்திருக்க என்னாலாகுமோ சொல்லு மென்று வணங்கிக்கேட்க, அதற்குச் சோமசுந்தரக்கடவுள் தம்மைப் பிரிந்து போகப்போகிற தேவியின் துன்பத்தைப் பார்த்து, நீ கடற் கரையில் வாழ்கிற வலையர்களுக்கரசன் மகளாகி அங்கே வளருங் காலத்தில், நாம் வந்து உன்னைக் கல்யாணஞ் செய்து கொள்ளு வோம். நீ வருந்த வேண்டாமென்று சொல்லித் தேவியை விடை கொடுத்தனுப்பிவிட்டுத் தாம் தனியே யிருக்க, அப்போது அந்தச் செய்தி தெரிந்து விநாயகக் கடவுள் தந்தை முன்னே வந்து, இந்தப் புத்தகங்களாலே யல்லவோ இப்படி யுண்டாயிற்றென்று, அங்கே யிருந்த புத்தகங்களை யெல்லாம் தம்முடைய ஐந்து கைகளாலும் வாரிச் சமுத்திரத்திலே போய்விழ வெறிந்தார். உடனே முருகக் கடவுளும் அங்கேவந்து தந்தை கையிலிருந்த சிவஞான போதநூலைப் பறிதது விரைவிலே அதுவும் கடலிலே போய் விழவெறிந்தார். அப்போது சோமசுந்தரக்கடவுள் வாயிலின் முன்னே காத்திருக்கின்ற திருநந்தி தேவரை வெகுண்டு பார்த்து, நாம் தனியே தேவியோடு வார்த்தை சொல்லிக் கொண்டிருக்கிற சமயமிதுவென்று நீ நினையாமல், இவாக ளிருவரையும் ஏன் உள்ளே வரவிடுத்திருந்தாய்? இந்தக் குற்றம்போக நீயும் இப்போதே போய் ஒரு சுரு மீனாகிக் கடலிலே கிடந்தலையக் கடவையென்று சாபங் கொடுத்துப் பின்பு விநாயகக் கடவுளுக்குச் சாபங் கொடுத்தால் அந்தச் சாபம் தம்மையே தொடருமென்று சாப மிடாமல், முருகக்கடவுளை மாத்திரம் மதுரையில் செட்டிகள் குலத்தில் ஊமைப்பிள்ளையாய்ப் பிறக்கச் சாபமிட்டருளினார். இப்பால் லோக நாயகன் ஏவலாலே தேவியானவள் வலைப்பெண்ணாகவும் நந்திதேவர் சுரு மீனாகவும் பிறந்த தெங்கே யென்றால், வையையாறு சூழ்ந்த நாட் டிலே, உவர்க்கேணிகளும், உப்பங்கழிகளும, அழகாக வளாநது, தாழைகளிருண்டு மதிலாகச் சூழ்ந்திருப்பது; அதுவே தண்டுறைப் பாக்கமென்று சொல்லப்படுவது. அங்கே எவ்விடங்களிலுங் கேடகத்

துள்ளே யடங்கி வாளாயுதத்தைக் கையிலேகொண்டு ஒருவர்க்கொருவர் சண்டை செய்கிறதுபோல முள்ளுகளையுடைய மடங்களிலே மறைந்து, பூக்கள் காற்றுலசைய, தாழைகள் நெருங்கி நின்கின்ற அவ்விடங்களிலே புலவுமீன்களை உலரப்போட்டு, அவைகளைப் பல பட்சிகளும் வந்து தின்னுமல் அதட்டி யோட்டுகிற சத்தமும், அவைகளை விலைக்கு விற்கிற சத்தமும், வாங்குகிறவர்கள் சத்தமும், மீன் பிடிக்க வலைவீசுகிற சத்தமும், அந்த வலைகளையிழுக்கிற சத்தமும், இச்சத்தங்களைக் கடலின் அலையோசை யடக்க - அங்கே நுளையருடைய சிறு பெண்கள் களிமண்ணுலே செய்த பிரதிமைக்குத் தாழை தனது மலரிலுள்ள சோறூட்டக் கடல் முத்துமாலை சூட்டக் குங்குமமரங்கள் பூமாலை சூட்டுகின்றன. பின்னும் அங்கே வந்து சமுத்திரத்தில் ஸ்நானஞ் செய்து போகிறவர்களுக்கு உபசாரஞ் செய்கிற தருமப் பிரபுக்கள் போலத் தாழை கட்டுச்சோருகப் பூமலர்ந்து கொடுக்க முத்துமாலை, பொன்மாலை, பவளமாலைகள் புன்னைமரங்கள் மலர்ந்து கொடுக்கின்றன. காய்ந்தமீன் விற்கிற வலையர்கள் குடிசைகள் மேலே கடலிலிருந்து தாவிப் பவளக்கொடிகள் படர, வலைச்சிகள் அடிக்கடி குப்பல் குப்பலாகக் கூட்டிப் பெருக்கும்படி வாசல்கலெல்லாம் கடல்முத்துகளை அலைகளாலே ஒதுக்கிக்கொண்டே யிருக்கின்றன. பின்னும் அந்த நுளைப்பெண்கள் விலைகூறி விற்கிற கெண்டைமீனுக்கு நேராக அவர்கள் கண்களே பிறழ்ந்து விலையுயர்த்தவும், பேசுகிற வாய் வாசமும், கூந்தலில் முடித்திருக்கிற தாழம்பூ வாசமும் மீனிறைற்றத்தை யொழித்து நல்ல வாசம் வீசவும், உப்பங்கழியிலே மலர்ந்த குமுதப்பூவிலே மொய்க்கிற வண்டுகள், பனங்கள்ளுக் குடித்தவாயிலும் மொய்த்திருக்கின்றவனுய் அப்பட்டணத்திலேயுள்ள ஒருவன் முன்செய்த தவத்தினுலே தேவர்களிலும் பரிசுத்தனுய்க் கொஞ்சம் பாசபந்தத்தாலே மீன்விற்றுப் பிழைக்கிற சாதியிற் பிறந்து மேம்பட்டு, நுளையர்கள் பெரிய வாசலுடையவனுய், அவர்களுக்கு ஆறிலொருபங்கு கொடுக்கும்காவலனுய், விடைக்கொடி நாயகனுக்கு மெய்யன்பனுகிய நற்குணனுய் வருங்காலத்தில், அவனுக்குப் பிள்ளையில்லாமல் வெகுநாள் இம்மை மறுமைப் பயன்பெருதவன்போல வருந்தி, ஒருநாள் கடல் பார்க்கப் போகும்போது, கரையோரத்தில் ஒரு புறத்திலே பர்வதராஜன் தவத்தினுலே ஓடையிலும், பாண்டியன் செய்த தவத்தினுலே வேளவியிலும், புத்திரியாய்ப்பிறந்த லோகமாதாவானவள், தனது நாயகராகிய சோமசுந்தரக் கடவுளின் ஏவலாலே, மீனவிற்கிற வலையன் செய்த பூர்வபுண்ணியபலன் சித்தியாகத் தன்னிச்சைப்படி, அவன் அன்புக்கிரங்கினவள் போலத் தனது செவ்வாய்மலரைத் தறந்தழுதுகொண்டு ஒரு குழந்தை வடிவாய், ஒரு புன்னை வருக்ஷத்து நிழலிலே கிடந்தாள். அப்படிக் கிடக்கின்றதை அந்த வலையர்க்கரசன் கண்டு, ஓ! ஓ! இந்தப் பிள்ளை ஜலகன்னிகையோ! அல்லது கங்காதேவியோ! அல்லது வனகன்னிகையோ! அன்று, கண்களிமைக்கிறதினுலே இந்த வுலகத்தில் யார்

பெற்ற பெண்ணே! தெரியவில்லை. ஆனாலும் பிள்ளையில்லாத வெனக் கிரங்கி மதுராபுரிவள்ளல் அருள்செய்த பிள்ளையே யிதுவென்று நினைத்து, வலத்தோள் துடிக்க, அன்பு மிகுந்து, இரண்டு கைகளாலு மெடுத்து, மார்போடணைத்துக்கொண்டு வந்து, தனது கற்புடைய மனைவி கையிலே கொடுத்தான். அவன் கொடுத்தபோது, பிறவிக் குருடனுக்குக் கண் கிடைத்தாற் போலவும், நித்திய தரித்திரனுக்கு பெருநிதி கிடைத்தாற்போலவும், அவன் மனைவி மகிழ்ந்து வாங்கினாள். அவள் வாங்கும்போது வலையர்களெல்லாம் கடல்போல முழங்க, வலைச்சிக ளெல்லாரும் கைகள் கொட்டிக் கும்மியடித்துக் குரவைக் கூத்தாட, மிகவும் மகிழ்ந்து, பிள்ளைத்திருநாள் கொண்டாடி, அந்த வலையர்க்கரசன் மனைவியானவள் தான் பெருமற் பெற்றெடுத்த பிள்ளையைத் தன் கொங்கைகளினாலுங் கண்களினாலுங் குளிரத் தழுவி, முத்தமிட்டு, உச்சிமோந்து, மனத்தி லன்புபெருக. அழகோடு மாணிக்கத் தீபம்போல் வளர்ந்து வருகிற நாளிலே, மீன் விற்றுத் தேடின பொருள்களாலே பலவகையான பிள்ளைப் பணிகளும், முத்தும் பாசிமணியும் ரத்தினங்களுங் கலந்து கோத்த கழுத்து மாலையும, கைகளுக்கு வளையல்களும், தங்கள் குலத்துக்கேற்ற ஆபரணங்களும், அழகுவடிவான பிள்ளைக்குப் பின்னும் அழகு பெற அலங்கரித்துப் பாராட்ட வளர்ந்து, உயிர்களையெல்லாம் தாய்போல் வளர்க்கும் மீனாட்சியம்மை தானொரு வலைப்பெண்ணாகி அங்குள்ள வலைச் சிறுமிக ளோடு கலந்து கடற்றுரைக்குப்போய் மண்ணிலே பிரதிமை பண்ணி விளையாடியும், சினை முகத்திலே முத்துகளை முகந்து கொழித்தும், தாழம்பூ குங்குமப்பூ பறித்தும், கூந்தல் பின்னே அவிழ்த்து தொங்கக் கடனீராடியும், தன்னாயகன் தனக்கு நியமித்த நாளும் தனது கொடிபோன்ற இடையுங் குறைவாகத் தன்னாயகன்மேல் வைத்த அன்பும் ஆசையும் கொங்கைகளும் வளரச் சில காலத்திலே மிகவும் வளர்ந்து அந்தத் தண்டுறைப்பாக்கத்திலே வாசஞ்செய்திருந்தனள். அக்காலத்திலே சோமசுந்தரக்கடவுள் ஏவியபடியே, கொன்றைமாலையும், இளம்பிறைச் சந்திரனும் விளங்குகின்ற சடாமகுடமும், நான்கு கைகளும் கொண்ட திருநந்திதேவர் தாமுமொரு சுறுமீனாகி, விநாயகக் கடவுளும் முருகக்கடவுளும் அக்காலத்தே யெறிந்து விட்ட புத்தகங்களை யெல்லாம் தமது சிரமேற்கொண்டு கடலிலேமுழுகி, விளங்கனிக்குக் கன்றெறிந்த கண்ணனாலுங் காணப்படாத கடவுள் திருவடிகளை மனதிற்கொண்டு, அக்கடலிலே முன்னே கலக்கின மந்தரமலைபோற் புகுந்து கலக்கி, அங்கு வருகிற தோணி படகுகளை வேகங்கொண்டு மோதி உடைத்துக் கப்பல்களைச் சரக்குடனே கவிழ முட்டிச் சீறி அங்குச் சஞ்சரிக்கின்ற பல சுறு மீன்களையு முடுகத் துரத்தி, மற்ற மீன்களையெல்லாம் தன் கொம்பிலே கோத்து வீசித் தரங்கவாரி தீரைக் கலக்கித் தந்திரங்கொண்டு புலவருக்கமுதுதந்து மந்திரகிரியை நிகராய் அலையோடு கூடிச் சென்று, வலையர்கள் வீடுகளை யழித்து மேலே துள்ளியெழுந்து மேகங்களைக் கலங்கக் கிழிந்து, அந்தக் கடல்

வழியே கப்பல்களைச் செல்லவொட்டாமல் தடுத்து இப்படித் திரியும் போது அந்தக் கடற்றுறைச் செல்வனான வலையர்க்கரசன் மனவருத் தங் கொண்டு, இந்தச் சுறுமீனை எப்படி நாம் பிடிப்பதென்று தன் கிளைஞரோடு கூடி ஆலோசித்துப் பெரிய கயிற்று வலையைக்கொண்டு அங்குள்ள கடலெல்லாம் பரவப் படவின்மேலிருந்து வீசினான், அப் படி வீசி யெறியவே சுறுமீன் அவனேறி நின்று வீசின படவைத் தன் கொம்பினாலே குத்தி உடைத்து விட்டது அவனேறிவந்த படவுடைய, வேறேயொரு தோணிமேற் பாய்ந்தான். அந்தத் தோணிமேலும் பாய்ந்துடைக்க, அதை விட்டு வேறொரு சோங்கின் மேலேயேறிப் பின்னுமொரு பெரிய வலையை வீச, இப்படி ஒருயிரே பல வுடல்களி லும் புகுந்தாற் போலே அந்த வலையர்க்கரசன், படவு, தோணி, சோங்குகளிலேறி யேறி வலை வீசினாலும் அகப்படாமல், முன்னே வீசினால் பின்னே கிளம்பியும். பின்னே எறிந்தால் முன்னே யெழும்பி யும், வலப்புறஞ் சென்றால் இடப்புறந் தோன்றியும், இடப்புறஞ் சென் றால் வலப்புறங் காணப்பட்டும், ஒருகால் அவன் சந்தோஷித்திருக்கும் படி வீசினபோ தகப்பட்டுப் பின் அந்த வலையினின்றும் வழுவப் பொதுமகளிருள்ளம் போல மெய்க் காட்டிப், பின்பு உணர்ந்தார்க் குணர்வரிய பரம்பொருள்போல காணாமற் போய் மறைய, வலையர் தலைவன், தன்னேவலாளருடனே இப்படிப் பலகாலும் அந்த மீனைப் பிடிக்கத் தக்க தந்திரங்களெல்லாஞ் செய்தும் அகப்படாமற் போக, அவன் இனி யார்தான் இந்த மீன் பிடிக்க வல்லவரென்று அந்தக் கடற்கரையிலுள்ளவர்க ளெல்லோருடனுங் கூடி ஆலோசித்து முடியா மல் மிகவும் கலங்கி வருத்தப்பட்டு, அந்தத் தண்டுறைப்பாக்கத்தான், இந்தக் கடலிலே மந்தர மலைபோலே கிடந்தலைகிற சுறுமீனைப் பிடிப் பவன் யாரோ அவனே என் மகளுக்கு மாப்பிள்ளையென்று மனத் திலே நிச்சயித்துக்கொண்டிருந்தான். அப்படி நந்திதேவரும் மீனாட்சி யம்மையும் அவ்விடத்திருக்குநாளில், அஷ்டகெஜங்களுந் தாங்கு கின்ற இந்திரவிமானத்தி லெழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக்கடவுள். பிராட்டியை மணக்க நினைத்து உயர்ந்த சாதிகளையும் தங்களிலும் இழிவான ஜாதிகளென்று கசந்திருக்கிற வலையர் குலப் பெண்ணை. விவாகஞ் செய்யவேண்டி நாம் போய்ப் பெண் கேட்டால் அவன் வெறுத் திகழாதபடி யாம் மீன் பிடிக்கும் வலையனாகிப் போவோ மென்று திருவுள்ளங்கொண்டு இருண்ட கறுப்புக் கச்சையும் அதிலே செருகின சிற்றரிவாளும், தோள்மே லணிந்த வஸ்திரமும், குடுமியிலே முடிந்த நெய்தற்பூமாலையும், பெரிய தேவரிருவரும் வேதங்களுந்தேடிக் காணுமலிளைக்க, ஒரு வலையன் வடிவாய்த் தன் கணதிபர்கள் ஏன் நம் முடையகடவுள் மீனாட்சிதேவியை வலைச்சியாகச்சபித்துத் தாமும் ஒரு வலையன் ஆனாரென்று அதிசயிக்கத் திருவேடங்கொண்டு மீன் பிடிக்க வீசுகின்ற வலையைத் தோள்மேற் போட்டுக்கொண்டு அது முதுகின் புறத்திலே கனங்கொண்டு தொங்க, மற்றொரு தோளிலே சுலபமாக மீன் போடுகிற கூட்டைத் தரித்து அது பின்புற மிழுத்துக்கொண்டு

போக, அந்தத் தண்டுறைப்பாக்கத்தை நோக்கி உப்பங்கழிக் கரைக ளெல்லாம் முள்ளிச் செடிகளும், தாழஞ் செடிகளும், நெய்தற்பூக்கள் நீர்ச் சுழிகளிலே முழுகிச் சுழல்கின்ற பள்ளங்களும், சுஃறென்று சப்திக்கின்ற மடல்களையுடைய பனைமரங்கள் நடக்கும் வழிகளிலே மாட்டின தோண்டிக் கலயங்கள் நிரம்பிக் கள்ளை வார்க்கவும், அந்தக் கள்ளை வாயைத் திறந்து குடிப்பதுபோலச் செவ்வல்லிகள் மலர்ந்து நிற்பனவுமான கடற்கரைச் சோலைகள் சூழ்ந்த வலைச்சேரிக்கு வந்து சொக்கலிங்கப் பெருமான் சேரும்போது, 'அமுதம்போன்ற தேவி யைப் பெருமற் பெற்று வளர்க்கத் தவஞ் செய்த வலையர்க்கரசன் தன் மனத்திலே அதிசயித்து, அங்கே வருகிற யௌவன பருவத்தை யுடைய வலையனைக் கண்டு, ஓய் நல்ல அழகிய நம்பீ! நீ யார்? சொல் லென்றான்.

அதற்கு நான்கு வேதங்களுந் தெளியக்கூடாத வடிவுகொண்டு வந்த மீன்வேட்டையாடி, ஓய் அரசனே! மதுரையிலுள்ள வலையர் களுக்கெல்லாம் தந்தைபோற் சிறந்துள்ள ஒரு வலையனுடைய மகன் நான். ஆனாலும் படைத்துக் காத்துத் துடைக்கவும் வல்லேனவேன். அல்லாமலும் இங்குள்ள மீன்களை யல்லாமல் ஆகாயத்திலுள்ள மீன் களையும் வலைவீசிப் பிடிக்கமாட்டுவேனென்று சொல்ல, அதை வலையர்க்கரசன் கேட்டு இவன் வலையனென்பது மெய்யோ? முன்னே சொன்னதொன்று இப்போ சொல்வதொன்றா யிருக்கின்றது. ஆனாலுமிந்த இரண்டையும் பரிசோதித் தறிவோமென்று சிவனுக் கடிமைத் தொழிலை உட்கொண்டிருப்பவனான வலையர்க்கரசன், அப்படியானால் இந்தத் துறையிலே ஒரு பெரிய மீன் நெருப்பைப் போல கொதிக்குங் கோபத்தைக் கொண்டு கிடக்கின்றது. ஐயா! அதை நீ கண்டு பிடிக்க மாட்டுவையேயானால் என்னுடைய மகளை உனக்குக் கல்யாணஞ் செய்து கொடுக்கிறேனென்று சொன்னான். அதுகேட்டு ஆண் சிங்கம்போல் வந்த வலையன், உடனே வாயுவேக மாக விரைந்து செல்லுகின்ற ஒரு படகின்மேலே பாய்ந்தேறிச் சங்குகளை வீசுகின்ற அலைகளைத் தடுத்து அந்தப் பெரிய கடலைக் கிழித்துக்கொண்டு சென்று, மீன்பிடிக்கும் வேலையாளான யௌவன குமாரன், தனது மலையை யொத்த தோள்மேலே கனத்த தொங்கல்க ளுடனே கிடந்த தொங்குகின்ற வலையை எடுத்து நன்றாய்ப் பார்த்து மார்பு புரள வீசினார். அப்படி வீசவே, பக்கமெல்லாங் கொண்ட மணி கள் பிரகாசமாகச் சுற்றிலும் வேகங்கொண்டு ஒலித்துப் படர்ந்து விழுந்து பரவ, அதற்குள்ளே சர்ப்பமானது படத்தை விரித்து வாயைத் திறந்து விழுங்க அகப்பட்ட ஒரு மீன்போலக் குரூரமான செய்கையுடனே உழலுகின்ற அந்தச் சுறாமீன் அகப்பட்டுக் கொண் டது. அது அகப்பட்டவுடனே, அடியார் அன்பின் வலைக்குள்ளாகும் கடவுளாகிய வலையர் தாம் விசிறி யெறிந்த வலைக்குள்ளான மீனைச் சுருக்கி யிழுத்துக் கடற்கரை மேலேபோட, அப்படிப் போடும்போது தேனைக்கண்டு மொய்க்கும் வண்டுகள்போல வலையர்களெல்லாம்வந்து

நெருங்கிக் கண்டீர்களோ நாமும் நமதரசனும் நம்முடைய சாமர்த்திய முழுதுங்கொண்டு பலகாலு முயன்று வீசின வலையி லகப்படாத இந்த மீன் இந்த இளங்குமரன் ஒருகால் வீசின வலைக்கு ளகப்பட்ட தல்லவோ? ஆகையாலே இந்தப் பிள்ளையாண்டானை நம்முடையகுலத் துக்கொரு தெய்வமாகக் கொள்ளப்படுமென்று கொண்டாடினார்கள்.

அப்போது அந்த கடற்கரைச் செல்வன் மிகவும் ஆனந்தித்துப் பர்பை முழங்கக் கள்ளொழுகும் வாயையுடைய நுண்ணிடை வலைச்சி கள் குரவைகள் பாட, படங்கொண்ட பாம்பு கச்சைகட்டின வலையனுக் குக் குங்குமப் பூமாலையுந் தகரஞாழலும் அணிந்த கூந்தலையுடைய பெண்ணைத் திருக்கல்யாணஞ் செய்து கொடுத்தான். அப்போது கல்யாணக் கோலங்கொண்ட மருமகனும், வேல்போலுங் கண்களை யுடைய மகளும், ஆகாசத்திலே விடைமேலேறித் தங்கள் சுபாவ வடிவு கொண்டுதோன்றக் கரைமேற் கிடந்த சுருமீனும் தன் வடிவுகொண்டு நந்தியாய் முன்னே தோன்ற, விடைமேலழகராய்க் காக்ஷி கொடுத்து அவர் கிருபாநோக்கம் பெற்றதினாலே பூருவ கருமத்தால் வந்த அந்தப் பிறவியிலுண்டான சிற்றறிவு நீங்கிக் கடற்கரைச் செல்வனுக்கு நல் லறிவு தோன்றி மாணிக்க வல்லியோடு கூடின பொன்மயமாகிய மேரு மலையை வில்லாகத் தரித்த சோமசுந்தரக்கடவுள் திருவடி நிழலின் கீழே விழுந்து வணங்கி,

*இரக்கமி ழிந்த யாக்கை யெடுத்துழ லேழை யேனைப்*
*புரக்கவின் றென்போல் வந்த புண்ணிய வடிவம் போற்றி*
*அரக்கெறி பவளச் செவ்வா யணங்கினை மணத்தென் பாசங்*
*கரக்கவெள் விடைமே னின்ற கருணையே போற்றி யென்றான்,*

என்று துதிக்கின்ற அன்பனுடைய மலர்மிசை யேகுவானான சோம சுந்தரக்கடவுள். ஓய் கடற்கரைச் செல்வனே! நீ பலகாலமாகப் பிள்ளை யில்லாமல் வருந்துகின்றதைக் கண்டு நாம் பார்வதியை உமக்கு மகளா கக்கொடுத்துத் தகுந்தபடியே நாமும்மருமகனாகவந்து விவாகஞ்செய்து கொண்டோம். இனிமேல் நீ இன்னமும் இந்த உலகத்திலே குபேரன் போலக் குறையாத செல்வங் கொண்டு சுகபோகத்திலே மூழ்கி வாழ்ந்து பின்பு நமதுலகத்தை யடைவாயென்று பெண்ணைக் கொடுத்த மாமனாருக்கு நல்லருள் செய்து, அந்தத் தருமசொரூபமான மால்விடைமேலேறினபடியே திருநந்திதேவரும் அடியார்களுஞ் சூழ ஆகாசமார்க்கமாக உத்தரகோசமங்கைக்குப்போய் அங்கே யிருந்து, அநாதிமூர்த்தியான கடவுள் நான்கு வேதங்களுந் துதிக்கும் பாதங் களைத் தேவி வணங்கிக்கேட்க, அவளுக்கு வேதப் பொருள்களெல்லாந் திரட்டித் தேவாமிர்தம்போலத் தேவி காதுகள் நிறம்பம் புகட்டியருளி னார். அப்போது அங்கே அறுபதினாயிரம் அடியார்களுக்கும் கிருபை செய்து, பாசக்கடலைக் கடக்கப்பண்ணி அழியாத பேரானந்த வீட் டைக் கொடுத்துப் பின்பு அங்கயற்கண்ணம்மையுடனே கூடி சுந்தர பாண்டியனாக உலகாண்ட பெருமான் மதுராபுரிக் கெழுந்தருளினார்.

வலை வீசின படலம் முற்றிற்று.

ஐம்பத்தெட்டாவது

# வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம்

கொச்சகக் கலிப்பா

கலைவீசு மதிச்சடையோன் கடற்றுறைவன் றலைச்சென்று
வலைவீசி யவன்பாச வலைவீசும் பரிசிதுமேல்
அலைவீசும் புனல்வாத வூரரைவந் தவிச்சைவலி
நிலைவீசிப் பணிகொண்ட நெறியறிந்த படிமொழிவாம்.

உரை : கிரணங்களை வீசுகின்ற சந்திரனைச் சடையில் தரித்தருளிய சோமசுந்தரக்கடவுள், கடற்றுறைக்குத் தலைவனாகிய பரதவர் முதல்வனிடஞ் சென்று அவனனுமதியால் கடலில் வலைவீசி, மீன் பிடித்து, அவனுக்குத் திருக்குமாரத்தியா யவதரித்திருந்த உமாதேவியாரைத் திருமணம்புரிந்து, அதனால் அவனது பாசமாகிய வலையை யறுத்து அருள்புரிந்த திருவிளையாட லிதுவாகும். இனி, அலைகளை வீசும் நீர்வளம் பொருந்திய திருவாதவூரில் அவதரித்தருளிய வாதவூரடிகளுக்கு அவிச்சையினது சத்திகெடும்படி அதனது தன்மையை மாற்றி, அப்பெரியோரைத் தமது அடிமையாக்கிக் கொண்ட அற்புதத்தை யாமறிந்தபடி சொல்லுகின்றோம்.

உலகத்திலே நல்லோர்கள் தங்களுக்கு வரும்பொருளும் செலவும் தெரிந்து குடும்பத்தைப் பாதுகாத்து, பொருள் வேண்டிக் கொடாத செல்வரிடத்திலே போகாதிருத்தல் போலப் பாண்டி நாட்டிலுள்ள வயல்கள் குளங்களெல்லாம் நிறம்பப் பாய்ந்து, தருமம் வளரச்செய்து, கடலுவர்ப்பென்று பாயாத வையை யாற்றங்கரையிலே, திருவாதவூரென்னுந் திவ்யநகரம் இருக்கின்றது. அவ்வூரில் எப்போதும் திருவிழாக்களும், வீடுகளெல்லாம் விருந்தோடுண்டலும், பிள்ளைப் பேறுகளின் மகிழ்ச்சியும், வேதமோதுதலும், மத்தள முழங்குகின்ற நாடக சாலைகளும் மேகங்கள் நீங்காது சஞ்சரிக்கின்ற சோலைகளும் முப்போகம் விளைதலினாலே எப்போதும் உழுதுகொண்டிருக்கிற வயல்களும், உயிர்நிறம்பிய வுடல்போல விளங்குகின்றன. அப்படிப்பட்ட வூரிலே ஆமாத்தியப் பிராமணர் குலத்தில் வேதநெறியும் சைவாகம நெறியும் விளங்கவும், விஷ்ணு வஞ்சனையாலே செய்த புத்தமதமாகிய இருள் தோற்றோடவும், சோமசுந்தரக் கடவுளருளாலே ஞானசூரியன் போல, ஒரு பெருந்தகையார் அவதரித்து திருவாதவூரரென்னும் பெயர்கொண்டு, தங்கள் குலத்துக்குத் தக்கபடியே சடங்குகளெல்லாம் செய்யப்பெற்று, இளஞ் சந்திரன்போல் வளர்ந்து, வேதமுதலான அறுபத்துநான்கு கலைஞானங்களும், பதினாறு வயதுக்குள்ளே உணர்ந்திருக்க, இவர் செய்தியைத் தெரிந்தவர்கள்போய்ச் சொல்ல, அரிமருத்தன பாண்டியன் கேட்டு, வரவழைத்துக் கண்டு மகிழ்ந்து, தகுந்த

சிறப்புச் செய்து, தன் அரசாட்சிக்குத் தகுதியான மந்திரித்தனங் கொடுத்து மேம்படுத்திக்கொள்ள, இவர் எல்லாக் கலைகளையும் உறுதியாக உணர்ந்தவராகையால், தனுர்வேதத்திலும் மனுசாஸ்திரத்திலும் விதிப்படி அந்தப் பாண்டியனுக்குக் கண்போன்று முழுதுந் தெரித்த மந்திரிகளெல்லாருக்கு முதல் மந்திரியாய்ப் பகைவர் வலிகளை யடக்கி, இறைப்பொருள் வாங்கியும், செல்லக்கூடாத பலவகைத் தீவுகளிலும் செங்கோல் செலுத்த வல்லவரான அரசர்களெல்லாம், தங்களிடத்துள்ள அரும்பொருள்களை வரவிடுத்து நல்லவர்களா யொப்புரவான நட்புக்கொள்ள நடந்து அரசனுக்குக் கண்ணுங் கவசமும்போல் ராஜகாரியஞ் செய்து, தமது தயவினாலே தமது உறவினர்போல் எல்லாரும் மகிழ்ச்சிகொள்ளச் சந்திரன்போலுங் குடைநிழல் செய்வித்து, நீதி செலுத்தி வாழுங் காலத்திலே, நித்தியா நித்தியவஸ்துவின் லக்ஷணம் இன்னதெனப் பகுத்தறியும் விவேகந் தோன்றி, இகபரபோக விராகராய்ச் சமாதி சட்க சம்பத்தி கொண்ட முமூட்சுவாகிப் புத்தர் முதலான புறச்சமய மார்க்கங்களும், வேதசாஸ்திரங்களைத் தழுவின உட்சமயங்களும், மனமாசறுத்துச் சிவனருளைத் தெளிவிக்க மாட்டா. அதனாலே மும்மலங்களும் போகா. வீடுங் கிட்டாது. ஆகையாலே பத்தி செய்து சிவனருளைப் பெற்ற பக்தர்களுக்கே யல்லாமல் மற்ற யார்க்கும் வீடு சேரக்கூடாதென்று பொதுவான வேதஞ் சொல்லுதலினாலே, அந்த மெய்ப்பொரு ளுணர்ந்தோர்கள் அந்த மெய்ப்பொருளின் தெளிவெல்லாம் சத்திநிபாதருக்கு விளங்கச் சொன்னதே ஆகமம். அந்த வேதாகமங்களின் முடிவிலே விளைகின்ற பொருளின் பேதாபேதங்களான பிணக்குகளை யொழித்து அஞ்ஞானமாகிய கட்டை யவிழ்த்துப் பதியாகிய தன்னையும், பசுவாகிய என்னையும், தெரிவிக்கின்ற போதனாகிய குருபரன் வருவதெக்காலம். இன்னும் மறைப்பில்லாத மெய்யன்புக்கெளியதாக விளங்குகின்ற அருட்குருவான ஞானாசாரியனது நிறைந்த திருவருளையல்லாமல் இந்தக் கொடிதான வெவ்விய பாசத்தை நல்ல கேள்விகளாலே போக்கிக் கொள்வோமென்று தெப்பத்தைக்கொண்டு நீந்தாமல் வெறுங் கையாலே கருங்கடலை நீந்த நினைப்பதுபோலல்லவோ வென்று, வாதவூரடிகள் இன்பவீட்டைச் சேரவேண்டிய ஆசைக்குள்ளே கட்டுண்டு, வேதாகம நூல்களை யுணர்ந்த பெரியோர்கள் திருக்கோயிலுக்கு வரும்போதெல்லாம் போய்க் கண்டும், கண்டபோதெல்லாம் விசாரித்தறிந்தும், இப்படி அநேகம் பெரியோர்களைக் கண்டு கண்டு விசாரித் துணர்ந்த பொருள்களெல்லாம், தாகவிடாய் கொண்டவர்கள் உவர்நீருண்டாற் போல மனதுக்குப் பொருந்தாமல், அரசனுக்கு உயிருங் கண்ணுமாய மந்திரித்தனத்தையும் விடாமல் சோரநாயகனிடத்தே அன்பு கொண்டு நடக்கின்ற பெண்பிள்ளையைப் போலே, தேவர்களுயிரைக் காப்பாற்றும் பொருட்டுச் சமுத்திரத்தில் தோன்றிய விஷத்தையுண்ட கடவுளிடத்தே உள்ளன்பு கொண்டு, ராஜகாரியமுங் கைக்கொண்டு, இப்படி நடக்கின்றவ ரொருநாள் அரிமருத்தன பாண்டியன் சபைக்கு

குப் போய் அவனெதிரே நிற்கும்போது, குதிரை பரிபாலகர்கள் வந்து அரசனைக் கண்டு வணங்கி ஒரு புறத்தே நின்று, ஐயா பாண்டிய மகா ராஜனே! நம்முடைய குதிரைக் கூட்டங்களிலே இறந்த குதிரைகள் போக மிஞ்சின குதிரைகளெல்லாம் முழுதும் நோய் கொண்டவை களும் அதிக வயது சென்ற கிழங்களுமா யிருக்கின்றனவே யல்லாமல் நல்ல குதிரை ஒன்றுவது கிடையாதென்று சொன்னார்கள்.

அதுகேட்ட அரிமருத்தன பாண்டியன், வாதவூரடிகளைப் பார்த்து, இன்றையதினமே நீர்போய் நம்முடைய பொக்கிஷசாலையைத்திறந்து, வேண்டிய திரவியங்க ளெடுத்துக்கொண்டு போய், கடற்கரையிலே குதிரைகள் வந்திறங்குவன தெரிந்து, நல்ல சமயங்கொண்டு தாவத் தக்க குதிரைகள் வங்கிக்கொண்டு வருவதற்குப் போமென்று விடை கொடுத்தனுப்பினான். அப்போது மனவேறுபாட்டுடனே மந்திரித் தனஞ் செய்துகொண்டு வருகின்ற வாதவூரடிகள், பொக்கிஷசாலை அறையைத் திறந்து, நல்ல குதிரைகளாக வாங்கத்தக்க திரவியங்களை வேண்டியமட்டும் எடுத்துக்கொண்டு, தாழிறுக்கிப் பொக்கிஷத்தைப் பூட்டிக்கொண்டு, சந்திரகுலத்துப் பாண்டியனிடத்திலே உத்தரவு பெற்றுப் போகின்றவர் தாம் கொண்ட பண மூட்டைகளை ஒட்டகங் களின் மேலேற்றி முன்னே போகவிட்டுப், பின்பு ஆகாயத்தை யளாவிய சோமசுந்தரக் கடவுளின் திருக்கோவிலுக்குப் போய்ப் பொற்றாமரைக் குளத்திலே ஸ்நானஞ் செய்து, அந்தக் குளக்கரையி லிருக்கிற சித்தி விநாயகக்கடவுளை வணங்கிக்கொண்டு, கருணை நாயகியான அங்கயற்கண்ணி யெம்பிராட்டியினுடைய சிவந்த தாமரைபோலுந் திருவடிகளை வணங்கின பின்பு, வருணனுடைய வயிற்றுநோயைத் தீர்த்தாண்ட சந்திரசேகரராகிய சோமசுந்தரக் கடவுளினுடைய திருப்பாதங்களை வணங்கி முன்னே நின்று சுவாமி எனக்கொரு குறைமுடிக்க வேண்டும். அதாவது, இப்போது அடி யேன் கொண்டு செல்கின்ற பொருள்களை யெல்லாம் உமக்கும், பஞ் சேந்திரியங்களையும் வென்று வேண்டுகின்ற உம்முடைய அடியார் களுக்குமே ஆகச் செய்யவேண்டும். ஓ! ஓ! வெள்ளியம்பலத்தில் திரு நடனஞ் செய்கின்ற கடவுளே இதுவே எனக்குள்ள குறையென்று வேண்டி நின்று துதிக்கின்ற வாதவூரடிகளுக்கு முன், சோமசுந்தரக் கடவுள் இன்னருள்போலும் ஆதிசைவராகிய ஒரு குருக்கள் முன்னே வந்து விபூதி கொடுத்தார். அப்படி விபூதி கொடுக்கப்பெற்ற வாதவூ ரடிகள், நமக்கு இதுபோல நல்ல சகுனம் வேறில்லை. இன்னம் இதுவே நல்ல வழக்குக் காரணமென்று, இரண்டு கைகளையுமேந்தி வாங்கித் தரித்துக்கொண்டு வேதநாதரான கடவுளை வணங்கி விடை கொண்டு, திரும்பிப் பல வாத்தியங்கள் முழங்கவும், பதாதிகள்சூழவும், இரட்டை வெண்சாமரைகள் விசவும், பவளக்கால் கொண்ட சந்திரன் போலும் வெள்ளைக்குடை நிழலின் கீழே பொன்னினாலும் ரத்தினத்தி னாலும் செய்த பல்லக்கின்மே லேறிக்கொண்டு நடந்தார்.

அப்படி அவர் வழிகொண்டு நடக்குமுன்னே வெள்ளியம்பலத்திலே கான்மாறியாடின கடவுள் வாதவூரடிகளினுடைய இருவினையொப்பும் மலபரிபாகமும் கண்டு அவரை அடிமைகொண்டு பணிகொண்டருள நினைத்து, வேதங்களுந் தேடிக் காணக்கூடாத தம் அருளினாலே ஒரு பிராமணகுலக் குருவாகித் தமது திருப்பாதங்களை விட்டு நீங்காத பல சீடர்களுடனே திருப்பெருந்துறைக்கு வந்து, ஒரு குருந்தமரத்தி னிழலடியிலே யெழுந்தருளி யிருந்தனர். பின்பு கடல் போலுந் திரண்ட சேனைகளுடனே முல்லை நிலங்களும், பாலைநிலங்களும் கடந்து எழுபிறப்பாகிய கருங்கடலைக் கடக்கவருகிற வாதவூரடிகள் கிருபைக்கடலாகிய பரமேஸ்வரன் நிறைந்து விளங்குகின்ற திருப்பெருந்துறையை அடுத்து வரவர, மனதிலே ஆனந்தக் கடல் பெருகிக் கைகளைத் தலைமேலே குவித்துக்கொண்டு, ஆனந்தக் கண்ணீரொழுக, வினைகளைப் போக்குகின்ற கடவுளருளுங்கூட வந்து இது பித்தென்று பிறர் நகைக்க வருவதான நாலாஞ்சத்தி பதியவும் நமது மெய்யறிவை மூடுகின்ற மும்மலங்களினின்றும் பயந்து, சுமை தாங்குகின்றவனையும் பிணியாளனையுமொத்து நெருப்பிலிட்ட வெண்ணெய்போலத் தமது மனமுருகக் கண்டு, என்ன காரணத்தினாலோ தெரியவில்லை; இங்கே என் மனமுருகின்றதினாலே என்னை மறைத்திருக்கின்ற மனவலியைக் கருக்குகின்றவனாய் என்னையாளுங் கிருபைக்கடல் விளங்குவதான இடமே யிதுவென்று திருப்பெருந்துறைக்கு வந்து, மழுவை வலங்கொண்ட கடவுள் திருக்கோயிலுக்குள்ளே புகுந்து அங்குள்ள தீர்த்தத்திலே முழுகிச் சந்நிதிமுன்னே வந்து, தேகம் மண்ணிலேபட விழுந்து வணங்கிக் கடவுளுடைய உண்மையான புகழைத் துதித்துக் கொண்டு, ஆலயத்தினிடத்தே திருக்கோயிலை வலமாகவரும் வாதவூரடிகள் மூலமறையும் ஓதி முடியாத பொருளைச் சீலமுனிவோர் தெளிய மோனவழியைத் தெளிவிக்குங் கோலமானது வாசஞ் செய்கின்றதான் ஒரு குருந்தமரத்தைத் தமக்கு முன்னே கண்டார்.

அங்கே வேதசாஸ்திரங்க ளொருபுறத்திலும், உண்மைவழியான சிவஞானபோத நூலொருபுறத்திலும், புராணங்களோடு கூடின இசை நூலொருபுறத்திலும், உட்சமயம் புறச்சமயமென்னும் வேறுபாடான நூல்களொருபுறத்திலும் வாய்விட்டு முழங்கவும், வேதங்கள் சொன்ன அறம்பொருள் இன்பவீடாகிய நான்கையும் நான்கு வேதங்களாலும் காணுதற்கரிதான வீட்டுக்குக் காரணமென்று சைவாகமங்களிலே சொல்லுகின்ற சரியை கிரியை யோகம் ஞானமாகிய நான்கு முடிகளையுங் கண்டுணர்ந்து பெரியரான மாணுக்கர் கூட்டங்களும், வினாவிடை பேசிக்கொண்டிருக்கவும், சரியை தெரிந்த மெய்யடியார்களும், கடவுளுக் கின்பமாகிய கிரியை செய்கின்ற நல்லோர்களும் விளங்குதலான சிவலோகந் தெரிகின்ற அப்பியாசிகளும், ஆசாரியத் தன்மைகொண்டு போதிக்கின்ற சிவஞானிகளுமாக அளவில்லாத

வர்கள் நிறைந்திருக்கவும், விரதங்களைவிட்டு ஆடாமலும் பாடாமலும் சகம்பேயென்று தம்மைச் சிரிக்க அழுகையும் களிப்புங்கொண்டு பாசம் நீங்கிய கண்களாலே சிவவடிவைத் தரிசித்துக்கொண்டு உலகந்தெரியாமல் உலவுகின்ற அநேகம் வைராக்கியர்கள் கூடியிருக்கவும், மறைப்பில்லாத இருதயமாகிய ஆகாயத்திலே குற்றந்தீர்ந்து விளங்குகின்ற ஞானசூரியனுக்கு உதயாஸ்தமனங்க ளில்லாமையினாலே இராப்பகல் தெரியாமலிருந்து செய்கின்ற நித்திய கருமானுஷ்டான விரதங்களை விட்டிருக்கின்ற வித்துவான்களுங்கூடியிருக்கவும், கோவணமே வஸ்திரமாகவும், கையிற் பிச்சை வாங்குதலே சோறாகவும், சிவனடியார்களே உறவாகவும், உருத்திராக்ஷங்களே ஆபரணங்களாகவும், வெறுநிலமே படுக்குமிடமாகவும், பகல் இராத்திரி ஆதி அந்தம் நடு இல்லாத இடத்திலே தூங்குவதே அவர்களுக்கு வாழ்வாகவும், இப்படியாகிய அநேகம் அடியார்கள் கூட்டங்களின் நடுவே கல்லாலவிருக்ஷத்தை யொப்பான குருந்தமரத்து நிழலடியிலே ஒரு கையிலே சிவஞானபோத மெழுதிய புத்தகமும் ஒரு கையிலே சின்முத்திரையுங் கொண்டிருக்கின்ற கருணைமூர்த்தியைத் தரிசித்து உடனே அம்பலத்திலாடிய ஆனந்தவடிவமும், வடவால விருக்ஷத்தின் கீழிருந்து சனகாதிகளுக்கு அசைவறச்சொன்ன வடிவமும ஆகிய இரண்டும் இப்போது நாயினேனுக்கு எளிதாக இங்கே தோன்றுகின்ற இந்த வடிவமேயாமென்று, அப்போது கடவுள் திருவுள்ளக் குறிப்புத் தமதுள்ளத்துக்குத் தோற்றுவிக்கத் தெரிந்து, முன்னேவந்து வணங்கி இரண்டுகைகளையு முடியின்மேலேறக் குவித்துத் துன்பமான வெவ்விய பிறவிவலையை அறுத்துக்கொள்ளவந்த திருத்தொண்டரான வாதவூரடிகள், தாம் காணுதற்கு நல்லவராய் எளிதாக வந்து தமது அன்பாகிய வலைக்குள்ளகப்பட்ட கடவுளாகிய ஞானதேசிகர் அருள்வலைக்குள்ளகப்பட்டு, உடம்பெல்லாம் நெக்கிட மனமுருகிய நல்லொழுக்கத்தை யுடைய மாணக்கர்கள் பக்குவந்தெரிந்து உபதேசிக்கின்ற ஞானதேசிகனென்று சொல்லும்படி மூலவாகமத்தைச் சொன்ன கடவுள், திருவடிகளின் மேலே மலர்ந்த செங்கழுநீர் மாலையை வன்கழலாகச் சுற்றி, சந்தனக் குழம்பாலே அலங்காரஞ்செய்து, காலமுங்காணுக் காட்சியும் நிமித்தமுங் கடிந்தவராய் நிற்க, அப்போது ஞானதேசிகரான கடவுள், வாதவூரடிகளுடைய ஒழுக்கத்தையும் பேரன்பையுங்கண்டு அவருடைய உடல் பொருளாவி மூன்றையும் தத்தமாக வாங்கிக்கொண்டு, மனக்கண்ணினாலே ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும் போக்கி, பாதகமலத்தையுஞ் சூட்டிச் செந்தாமரைபோலுந் திருக்கையை அவர் தலைமேலே வைத்து, சூட்சும பஞ்சாட்சரத்தினாலே சூழ்ந்த பாசக் கட்டை யறுத்து, மெய்யானந்தம் விளை நிலத்துய்த்துப் போக்கும் மீட்சியுட் புறம்பிலாப் பூரணவடிவ மாக்கினார்,

அப்போது ஒப்பற்ற ஞான விளக்காகிய கடவுள், பார்த்த பார்வையாலே இரும்புண்ட நீர்போலே தம்மைப்பற்றி வாங்கிக்கொண்ட

பரிசுதனையும், குருபதேசத்தையும், தம்மை மூடியிருந்த பாசத்தையும் தம்மையும் மறந்து மெய்ஞ்ஞான சொரூபமாய் ஒன்றுந் தெரியாதிருந் தார் வாதவூரடிகள். பின்பு தேனும் பாலும் கற்கண்டும் அமுதமாகத் தித்தித்து, ஊனும் உள்ளமும் உருக, உள்ளொளியைத் தெரிந்து, ஆனந்தமான ஆறு நிறம்பக் கரைபுரத்தே கசிவதுபோல, நீங்காத ஞானவாக்குச் சரஸ்வதி நாவிலே வந்து குதிகொள்ள, கும்பிட்ட கைகளும், நடுங்கிய தலையும், நீர்துளும்ப அழுகின்ற கண்களும் புள காங்கிதமான தேகமும் நாக்குத் தழுதழுத்த அன்புள்ள வார்த்தை களுமாகத் தம்மை இழந்து, அக்கினியிலே சேர்ந்த நெய்போலப் பின்னுமுழுகி வணங்கித் துதிப்பவராய், குற்றமில்லாத சொற்களாகிய மாணிக்கங்களைப் பக்திசெய்து முழுதும் அன்பாகிய கயிற்றிலே வரிசையாகக் கோத்து மாலையாக அமுது சாத்துகின்ற மெய்யன்ப ராகிய வாதவூரடிகளுக்கு ஞானதேசிகராகிய கடவுள், மனமகிழ்ந்து எக்காலமும் வழுவாமல் விளங்குவதாக மாணிக்கவாசகரென்று திருப் பேர் கொடுத்தருள, வாதவூரடிகள் தமது பாட்டுக்கு மனமகிழ்ந் தருளின குருபரன் திருவடிகளின் மேலே ஆனந்தக் கண்ணீராட்டிச் சொற்களாகிய மலர்களை யணிந்து, தற்போதமாகிய நல்ல அமுதத்தை ஊட்டித் தற்பரஞான ஓமாக்கினியை மூட்டிச் சிவபூசை செய்தவன் மேல் முயற்சியுடையவராக அப்படி ஆசையிலுண்டாகின்ற பிறவி வாசனை தீர்ந்து மாணிக்கவாசகரான வாதவூரடிகள் தமது ஞானாசாரி யருக்கு மாணுக்கராய்ச் சொல்லுகின்ற வேதாகமமான உபநிடதப் பொருள்களைக் கொண்ட பாடல்களை யருளிச்செய்ய, அவற்றை யெல் லாங் கேட்டும், பின்னும் அந்தப் பாடல்களிலே மிகுந்த நேசங்கொண் டவராய், அப்படிப் பாடச்செய்து கடவுள் இன்னமும் சிலகாலம் வாத வூரடிகள் தித்திக்கப் பாடுகின்ற மாணிக்கவாசகங்களைத் தமது திருச் செவிகளாலே கேட்கவும், அவர் கையிலுள்ள பொருள்களை யெல்லாம் பத்தியாகிய பெரிய அன்பைக் கொடுத்து வாங்கித் தமக்கு வேண்டிய திருப்பணிகளைக் கொண்டு, பாண்டியன் இவருடைய குணங்களெல் லாந் தெரிந்துகொள்ளச் செய்து, வீடுபெறச் செய்யவும் புத்தரை வாதுசெய்து முடிக்கவும் திருவுள்ளங் கொண்டு, வாதவூரடிகளைப் பார்த்து மயங்கிச் சிறிது காரியமுண்டு, இங்கே யிருவென்று அடியார் களுடனே தமது திருவுரு மறைந்தருளினர்.

அப்போது கனவிலே தோன்றும் பொருள்போலக் கடவுள் தமது கிருபாசொரூபத்தைக் காட்டி மறைந்தவுடனே, வாதவூரடிகள் கலக்கமாகிய கடலிலே முழுகி, இதென்ன நனவோ அல்லது கனவோ இன்று நாதரானவர் நாய்க்குத் தவசிட்ட தன்மைபோலே அடியே னுக்கு நினைக்கவுங் கூடாத தமது திருமேனியைக் காட்டி அடிமை கொண்டு விட்டுப்போனதென்ன காரணமென்று சந்தேகித்துப் பின்னும் மனந்தேறி எம்பெருமானே! உம்முடைய அடியார் திருக் கூட்டத்திலே என்னைக் கூட்டிக்கொள்ளாமல் என்னையும் என் வினை

யையும் விட்டுப் போனீரோ? அப்படி நீர்போக அடியேன் வஞ்சனை செய்கின்ற வினைக்குப் பாத்திரமான இந்த வுடலைத் தீயிலுமிடாதிருக்கின்றேன். அல்லது மலையிலிருந்துருண்டு விழுந்து அழியாதிருக்கின்றேன். வாளால் வெட்டியாயினுங் குறையாதிருக்கின்றேன். இப்படி நான் செய்யப் பயந்திருக்கிறது இந்த வுடலும் உமதுடைமையென்றல்லவோ? அல்லது தானுகைவாளுலும் சாகவில்லை. சுவாமி உம்மைப் பிரிந்திருக்கவுங் கூடவில்லை, நான் என்ன செய்வேன்? சுவாமி! சுவாமி! யென்று இரங்கிப் புரண்டழுது, பின்னும் தரித்திரனாகிய ஒரு பிறவிக்குருடனுக்குத் தன் கையிலே கிடைத்த அதிக விலைபெற்ற மாணிக்கம் போலவும், மழலைச்சொல் நிறம்பாத ஒரு சிறு குழந்தை கையிற்கொண்ட செம்பொன் மணிக்கிண்ணம் போலவும் எந்தத் தேவர்களுக்குங் கிட்டாத நீர் எளிதாக வந்து அடிமைகொண்டருளிய அருமை தெரியாத அடியேனைத் துன்பக்கடலிலே முழுகச் செய்து, உம்மைப் பிரிந்தறியாத அடியார்களுடனே நீங்கிப் போயினீர். ஆதலால், கல்லாத மூடனை என் குறையேயல்லாது உம்மாலே என்ன குறை,

மண்ணுதி யாருறு மனந்துழாவித் தடுமாறிப்
புண்ணுகி யெனைக்காணு துழல்கின்றேனைப் போதவருட்
கண்ணுலவை முழுதும் கரைநோக்கி யான்யானென்
றெண்ணு வெனைத்தந்தா யெங்குற்ருயோ யெந்தாயே.

வானுதி யைந்துமுதல் வகுத்தவோசை முதலைந்தும்
ஆனுதி யங்குமன மாதிநான்கும் வழியடைப்பத்
தேனுதி யறுசுவையும் கழியவூறுந் தெள்ளமுதம்
யானுர நல்கினையா லெங்குற்ருயோ வெந்தாயே.

மாசாய் மறைக்குமல வலியும்நானும் வேறின்றி
ஆசா விகாரமல மாயினேனைப் பொருட்படுத்திப்
பேசாத வின்புருவி னின்றேடென்னைப் பின்வைத்த
ஈசா யெனையிங்கிட் டெங்குற்ருயோ வெந்தாயே.

என்று வாயைத் திறந்து அழுது, பிரலாபித்து அப்போதீன்ற கன்றைப் பிரிந்த பசுவைப்போல மனங்கரைந்து, கோபுர வாயிலின் புறத்தேபோய் அங்கே திரண்டு நின்ற பாண்டியன் சேனைகளைப் பார்த்து நீங்கள் முன்னே போய்ப் பாண்டியனுக்கு ஆடிமாதம் கப்பலிலிருந்து குதிரைகள் வந்திறங்குமென்று சொல்லுங்களென்று சொல்லியனுப்பிவிட்டு, வாதவூரடிகள் திருப்பெருந்துறையிலேதானே யிருக்கக் குதிரை வீரர்களும், தேர்வீரர்களும் மதுரைக்குப் போய் பாண்டியனை வணங்கி உள்ளதைச் சொன்னூர்கள். அதுகேட்டுக் குதிரைகள் மெய்யாகவே வருமென்று பாண்டியன் ஒன்றும் பேசாம லிருந்தான். பின்பு வாதவூரடிகள் பாண்டியன் குதிரை வாங்கக் கொடுத்த பொருள்களை யெல்லாம் குருந்தமரத்தடியிலே வந்திருந்து தம்மை அடிமைகொண்ட கடவுளுடைய திருப்பெருத்துறையிலுள்ள பிரா

மணர்களுக்கு மனத்தில் அன்பு பெருகுமுன்னே வேண்டிய மட்டுங் கொடுத்துப் பின்பு கடவுள் பூசைக்கும் திருவிழாச் சிறப்புக்கும் செல்வநிறைந்த திருக்கோயில் திருப்பணிகளுக்கும் நிறம்பக் கொடுத்துச் சிவனடியார்களுக்குங் கொடுக்க அந்தத் திருப்பெருந்துறையிலே தானே யிருந்துகொண்டு இவ்விதமாக உலகத்தாசை தீரக் காலங் கழித்துக்கொண்டு வரும்போது பாண்டியன், வாதவூரடிகள் சொல்லி அனுப்பின கெடுவின்படி ஆடிமாதம் வந்தவுடனே இன்னமுங் குதிரைகள் வரவில்லையென்று வாதவூரடிகளான தன் மந்திரிக்கு ஓலை யெழுதி அனுப்பி விட்டான். அப்படி அவன் எழுதி யனுப்பின திருமுகத்தைக் கிரமப்படியே வாதவூரடிகள் வாங்கி, அதிலுள்ள சமாசாரந் தெரிந்துகொண்டு, ஆதியந்தமில்லாத கடவுளுடைய திருவருட் கடலிலே முழுகினவராய் இனி என்ன செய்வோமென்று சோர்ந்து, தம்முடைய மனமாகிய விளை நிலத்திலே சிவமாகிய பயிர்வளரப் பந்த பாசங்களின் வேரறக் களைந்து கடவுள் திருவருளாகிய நீரைப் பாய்ச்சி அந்தமாதியில்லாத ஆனந்தபோகத்தைத் தந்தருளின உழவனாகிய தேசிகனுடைய திருக்கோயிலுக்குப் போய் என் நாயகனே! பொன்னுடரேறே! ஏறு கொடியுயர்த்த மன்னா! தென்னா! பெருந்துறையின் மணியே! பாண்டியன் கொடுத்த பொருள்களெல்லாம் உன் ஆலயத்துக்கும் உன் அடியார்களுக்குமே செலவு செய்யும்படியான புத்தியைக் கொடுத்தாய்; இனி அந்தப் பாண்டியனுக்கு நான் எப்படிக் குதிரைகள் கொண்டுபோய்ச் செலுத்துவதென்று வணங்கி யெழுந்து துதித்து வேண்டினார். அப்படி வேண்டுகின்ற வாதவூரடிகளுக்கு முன்னே திருப்பெருந்துறைக் கடவுள் ஆகாச வாக்கினாலே ஓய் மந்திரியே! பாண்டியனுக்குக் குதிரைகள் எப்படியும் வந்து சேருமென்று ஓலையெழுதி யனுப்பென்று சொல்லி யருளக் கேட்டு, வாதவூரடிகள், மனதிலே மிகவும் சந்தோஷித்து அப்படியே ஓலையெழுதி யனுப்பினார். அந்த ஓலை போய்ச் சேர்ந்து வாசிக்கக் கேட்டுப் பாண்டியன் சந்தோஷித்திருந்தான்.

---

அப்போது, சூரியன் அஸ்தமிக்க அந்தச் சூரியனாலே வெந்தசூடு தணிக்கிறவனாகச் சந்திரன் உதயமானான். அன்று இராத்திரியிலே தூங்குகின்ற வாதவூரடிகள் கனவிலே வெள்ளியம்பலக்கடவுள் குருந்தமரத்தடியிலே தோன்றின ஆசாரிய வடிவுகொண்டெழுந்தருளி ஓய் வாதவூரரே! நாம் பாண்டியன் சந்தோஷிக்கும்படியான குதிரைகளைப் பின்னே கொண்டு வருகின்றோம். நீர் முன்னே மதுரைக்குப் போமென் றருளிச்செய்ய, உடனே வாதவூரடிக ளெழுந்திருந்து தேவர்களுக்கும் கனவிலும் காணக்கூடாத கிருபாசொரூபம் நமக்கு நனவிலும் கனவிலும் எளிதாயிற்றல்லவோவென்று எண்ணிக் கொண்டிருக்கும்போது, வெள்ளியம்பலத்தாடுகின்ற ஆனந்த சூரியன் மனத்திலுள்ள அஞ்ஞானவிருளை விளக்கிக்கொண்டு விளங்குவதுபோலச் சூரியன் உலகை மூடின இருளை விழுங்கிக்கொண்டு உதயமானான்,

அப்படி விடிந்தவுடனே வாதவூரடிகளெழுந்திருந்து திருப்பெருந் துறைக்கடவுளை வணங்கிக்கொண்டு, இனிப் பிறப்பில் அழுந்ாதவ ராய் வழிக்கொண்டு நடந்துபோய்த் திங்கட்கொழுந்தார் சடையார் விடையார் தென்கூடலடைந்த பாண்டியன் கோயிலுக்குள்ளே போய்ப் பாண்டியனைக் காண அப்போது வழிபாடு செய்து முன்னே நிற்கின்ற வாதவூரடிகளைப் பார்த்து, எவ்வளவு பொருள் கொண்டு போயினீர்; எவ்வளவு குதிரைகள் வாங்கினீர் என்றான். அதற்கு வாத வூரடிகள் ஓய் பாண்டிய மகாராஜனே! கொண்டுபோன பொருளின் கணக்கும் வாங்கின குதிரைகளின் கணக்கும் குதிரைகள் வந்த பின்பு தெரிந்துகொள்ளலாம். இனிவருங் குதிரைகளாலே துரங்கபதி என்று பெயர் பெறுவீரென்றார். அதுகேட்ட பாண்டியன் மந்திரிக்குச் சிறந்த வெகுமானங்கள்செய்து அனுப்பிவிட, வெளியே வருகின்ற வாதவூரடி கள் பொற்றாமரைக்குளத்திலே ஸ்நானஞ் செய்து, சித்திவிநாயகரை வணங்கிக்கொண்டு, தாமாக எழுந்தருளிப் பக்கத்திலே அங்கயற்கண் ணம்மையுடனே விளங்குகின்ற சொக்கலிங்கப்பெருமானைத் தரிசித்து, மனம் வாக்கு காயம் மூன்றும் அன்புமயமாய் முன்னே நின்று, என்னை யாட்கொண்ட மணியே! வெள்ளி மன்றுடும் அன்னே! என்று துதித்து, அடியேன் வேண்டிக்கொண்டபடியே பாண்டியன் கொடுத்த பொருள்களெல்லாம் நீரே ஒப்புக்கொண்டு, எனது அடிமை யையும் அங்கீகரித்தீர். ஆனால் இனிமேல் என்னைப் பாண்டியன் கோபியாமல் மிகவும் சந்தோஷிக்கும்படியாய்க் குதிரைகள் வந்து சேருவதெப்படி? யென்றுவேண்டி நிற்கும்போது, கடவுள் திருவாக் காக, ஓ ஓ! மெய்யன்புள்ளவனே! நீ வேண்டிக்கொண்டபடியே சூரி யன் தேரையிழுக்கும் குதிரைகள் போலுங் குதிரைகள் கொண்டு வரு கிறுமென்று ஆகாயத்திலே அசரீரிவாக்கு உண்டாக, அது கேட்டுப் பொய்யன்பில்லாத வாதவூரடிகள், பரமசிவனுடைய பெருங்கருணை யைப் போற்றிக்கொண்டு தமது மனைக்குப் போனார். அப்படி அவர் போனவுடனே, அவரிடத்திற்கு, சுற்றுப்புறத்தி லுள்ளவர்களும், பந்துக்களும், அடிமை செய்கிறவர்களும், அன்னியர்களும், பிறரும் வந்துகூடி, மேகங்கள் முழங்கினாற்போல முழங்கிப் புத்திகள் சொல்லு கிறார்கள்.

ஐயா! மந்திரித்தனங்கொண்டு ராஜகாரியஞ் செய்கிறது பிராமண தருமமேயன்று, அல்லது அப்படிப்பட்ட மந்திரித்தனத்தை யொப்புக் கொண்டால் ராஜாக்கள் மனதுக் கேற்றபடியே செய்யவேண்டு மென்று தருமசாத்திரந் தெரிந்த சான்றோர்கள் சொல்லுவார்கள். அப்படிப்பட்ட அரசியலும் அமைச்சியலுந் தெரிந்த உமக்கு தாங்கள் சொல்லக் கடவதென்ன விருக்கின்றது; நீர் செய்வதோ ஒன்றும் நன் றான தா யிருக்கவில்லை. இன்றைக்குக் குதிரைகள் வருவதாகச் கெடுச் சொன்னீரே. சொன்னபடியே குதிரைகள் வரவேண்டு மல்லவோ, அப்படிக் குதிரைகள் வந்து சேராவிட்டால் நாளைக்கென்ன சொல்லு

வீர். நீரோ, உம்மையடுத்த பந்துக்கள் சிநேகிதர்கள் சார்ந்தவர்கள் நல்லோர்கள் முதலானவர்களை ரட்சிக்க வேண்டும்படியான கருத்தில் லாதவரா யிருக்கிறீர்; நீர் செய்கிற செய்கை உமக்கே நன்ருகக் கொண்டீரென்று எல்லாருஞ்சொல்ல, அதற்கு வாதவூரடிகள், கேளுங் கள்! நானே பந்துக்கள், சிநேகிதர்கள், துன்பம், இன்பம், தேகாபி மானம், பொருளாசை, கோபம், கர்வம், நல்வினை, தீவினை முதலான இவைகளெல்லாம் கற்றைவார் சடையான் கோலங்காட்டி யாட் கொண்ட அன்றே விட்டுவிட்டேன். ஆனுல் இனி யெனக்குத் தாய் தகப்பன், மாமன், ஆசான், பாட்டன் எல்லாம் சிவனே, நிராசையே மனைவி, உயிர்களே பிள்ளைகள், சிவனடியார்களே பந்துக்களாக எந் தையார் கருணைகாட்டி என்னை யாட்கொண்ட வன்றே கொண்டேன். ஊரெல்லாஞ் சமைத்த சோறென்னதே, கடல்சூழ்ந்த உலகமெல்லாம் பாயலே, கோவணமே கட்டும் வஸ்திரம், விபூதியே பூசுஞ் சந்தனம், உருத்திராட்சமே ஆபரணமாக நீரெல்லாஞ் சுமந்தவேணி நிருத்தனுட் கொண்டவன்றே எண்ணினேன். நான் இறந்தாலும் இன்றே இறக் கக்கடவது. சாவாமலிருந்தாலு மிருக்கக்கடவது. பாண்டியன் தண் டித்தாலும் தண்டிக்கக்கடவது. வெகுமானஞ் செய்தாலும் செய்யக் கடவது. சுவர்க்கம் சேர்ந்தாலும் சேருகிறேன்; நரகஞ் சேர்ந்தாலும் சேருகிறேன்; சிவனை மறக்கமாட்டேன். பழவினைப்பயனை யார்தான் விலக்கிக்கொள்ளுவார்கள் என்று அவர்களைத் தடுத்து வார்த்தை யாடிக் கொண்டிருந்தார்.

வாதவூரடிகளுக்கு உபதேசித்த படலம் முற்றிற்று.

---

ஐம்பத்தொன்பதாவது

# நரி பரியாக்கிய படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அரிகணை தொடுத்து வேழமட்டவன் செழியன் வாயிற்
றெரிகலே யமைச்ச ரேற்றைத் தேசிக வடிவத் தீண்டி
வரிகழல் சூட்டியாண்ட வண்ணமிவ் வண்ண மையன்
நரிகளைப் பரிக ளாக்கி நடத்திய வாறுஞ் சொல்வாம்,

உரை : சமணர்கள் ஏவிய யானையை, அதற்கு வைரியாகச் சிங்க மாகிய அஸ்திரத்தைத் தொடுத்துக் கொன்ற வீரராகிய சோமசுந்தரக் கடவுள், அரிமருத்தன பாண்டியனிடத்தில் முதன்மந்திரியா யெழுந் தருளி யிருந்த வாதவூரடிகளைக் குருமூர்த்தமாகத் தோன்றித் தமது பாததாமரைகளைச் சிரசிற் சூட்டி ஆட்கொண்டருளிய திருவிளையாட லிதுவாகும். இனி, அச்சோமசுந்தரக்கடவுள், தமதன்பராகிய அந்த வாதவூரடிகள் பொருட்டுக் காட்டிலே திரிந்த நரிகளை யெல்லாம் குதிரைகளாக்கிக் கொண்டுவந்து பாண்டியனுக்குச் செலுத்திய திரு விளையாடலைச் சொல்லுகின்ருேம்.

இவ்விதமாகப் பந்துக்களாகிய பாசபந்தங்களை யறுத்துப் பரிசுத்தராயிருந்த வாதவூரடிகளை, மறுநாள் பாண்டியன் வரவழைத்து ஏன் இன்னம் குதிரைகள் வரவில்லையென்ன, அதற்கு வாதவூரடிகள் இன்றுமுதல் மூன்று நாளைக்குள்ளே குதிரைகள் வந்துசேரும். ஐயா! அப்படி வருகிற குதிரைகளுக்கு வேறே பெரிய லாயங்கள் கட்ட வேண்டும் தண்ணீர்குடிக்கக் குளங்கள் தோண்டவேண்டும். பட்டணமெல்லாம் அலங்காரஞ்செய்யவேண்டுமென்று சொல்ல, அதுகேட்டுப் பாண்டியனும் அப்படியே செய்யவேண்டுமென்று உத்தரவு செய்ய, வேலைக்காரர்கள் குதிரை லாயங்கள் பெரிதாகக் கட்டிப் பட்டணமெல்லாம் அலங்காரஞ் செய்ய, மண்வெட்டியாள்கள் மூன்று நாளைக்குள்ளே வேறே வாவிகளும் குளங்களும் வெட்டினார்கள். பின்பு கெடுச்சொன்ன மூன்றுநாளுங் கழிந்தபின்னும், பாண்டியன் இன்னம் குதிரைகள் வரக்காணோமே யென்று வாதவூரடிகளைக் கூப்பிட்டுத் தானே தண்டிக்கிறவனாகக் கோபங்கொண்டு, இவன் குதிரை வாங்கினதெங்கே? என்றைக்குக் குதிரைகள் வருகிறதென்று தனக்கு முன்னே நின்ற சில சேவகரைப் பார்த்துப் பெரிய திருடனான இவனைக் கொண்டுபோய் தண்டித்து, நம்முடைய பொக்கிஷசாலையிலுள்ள பொருள்களெல்லாம் கணக்குப் பார்த்து, எவ்வளவு குறைகிறதோ அவ்வளவையும் வாங்குகங்ளென்று உத்தரவு கொடுத்தான். அப்படி அவன் உத்தரவு கொடுக்கவே, பாண்டியன் கோபத்துக்குப் பயந்து முன்னே நில்லாமல், ஒரு கையிலே கயிறுகட்டி வாதவூரடிகளை நடுவேவிட்டுப் புறத்திற் சூழ்ந்துகொண்டுபோய், தண்டவீரர்கள், ஓ மந்திரியே! இனி எப்படி பணத்துக் கென்னவகை சொல்லுமென்று கோபித்து, அவரை நிற்கவைத்துத் தலைமேலே பெரிதான ஒரு கல்லைச் சுமக்க வைத்து வாதிக்க, வாதவூரடிகள், சோமசுந்தரக் கடவுளுடைய திருவடிகளைத் தியானித்துத் தலைமேலேற்றிய கல்லுச் சுமையை சுமந்துகொண்டு நின்றார். அப்படியவர் தாங்குகின்ற பாரத்தை அவரை அடிமைகொண்டாண்ட கடவுள் தாங்குகிறதினாலே வாதவூரடிகள் தமக்குக் கனம் தோற்றாமல் தாம் நிற்கிற வெயிலே சிவனது பாதநிழலாக நின்றார். அப்படி அவர் நிற்கிற நிலையைக் கொலை செய்யவும் அஞ்சாத அத் தண்டவீரர்கள் கண்டு, இது ஏதோ மாயமாயிருக்கிறதென்று மிகவுங் கோபங்கொண்டு வேதாந்தப் பொருளைத் தியானஞ் செய்துகொண்டு நிற்கிற வாதவூரடிகள் கையிலுங் காலிலுங் கிட்டிகட்டி நெருக்க, அந்தக் கொடுந் தொழிலுக்கும் சலியாமல் சிவத்தியானமா யிருந்தார். அப்போது சூரியன், ஐயோ இந்தக் கொடிய தண்டகர்கள், இனி மிகவும் தண்டிப்பார்களே யென்று பார்க்கமாட்டாதவனாய்த் தன்னொளிகள் மழுங்கிக் கடலிலே முழுகி அஸ்தமித்தான்.

அப்போது வாதவூரடிகளான தமதன்பருடைய துன்பந் தீர்க்கிறதற்குச் சோமசுந்தரக்கடவுள் அவர் முன்னே எழுந்தருளினாற் போலச்

செவ்வானந் தோன்றி, அவர் மார்பிலணிந்த பன்றிக் கொம்புபோல, இளஞ்சந்திரன் உதயமாகிப் பிரமதேவனுடைய தலை மாலைபோல நக்ஷத்திரங்கள் விளங்கி துன்பமாகிய சுழிகளையுடைய பிறவிக் கடலிலே முழுகிக் கழிகிற பாண்டியனானவன் தன்னையுங் காக்கவல்ல சோமசுந்தரக் கடவுள் திருவடிகளைத் தியானித்து, வழிபடுகின்ற வாதவூரடிகள் பெருமை தெரியாமல், காவல் வசப்படுத்தின அந்தப் பாண்டியன் பழி பாவம்போல எங்கு மிருண்டது. அப்படி யிருண்டவுடனே, வாதவூரடிகள் காலிலே விலங்கிட்டுக் காவலாளர்கள் கண்களிலே நெருப்புப் பொறி சிதற தவத்தைக் காவலுக்குள்ளாக்கினாற் போலக் கோபங்கொண்டு தண்டித்துக் காவலறையிலே வைத்துக் கும்புசேர்ந்து எல்லாரும் வருத்த, வாதவூரடிகள் அந்தச் சிறைக்கூடத்திலே கிடந்து மாலுமயனுங் கீழுமேலுந் தேட நின்றவரது செம்பொன் மயமான திருப்பாதக் கமலங்களைத் தமக்குத் தெப்பமாகக் கொண்டு, தமக்கு நேரிட்ட துன்பக்கடலைக் கடக்க, இருட்கடலும் வற்றி புலர்ந்தது. அந்த உதய காலத்தில் அந்தமிலழகராகிய சொக்கலிங்கப்பெருமானையும் அங்கயற் கண்ணியையும் திருப்பள்ளி யுணர்த்துதற்கு, அடியார்கள் வந்து சேர்ந்து வந்தனை செய்கிற சத்தமும் மங்கல சங்கத்தொனியும், நான்கு வேத முழக்கமும், வாதவூரடிகள் தமது திருச்செவிகள் நிறம்பக் கேட்டுக்கொண்டிருக்க, அந்தச் சமயத்திலே போதவானந்த சோதியாகிய கடவுள், தமது பரிசுத்தமான மெய்யன்பருக்காக நாதமாகிய பேரிகைகள் முழங்க, நரியாகிய குதிரைகள் மேலேறின வீரர்கள் சூழத் தாமும் வேதமாகிய தாவுகின்ற பரிமேலேறிக்கொண்டு, மதுரை வீதியில் இனி வருவதைத் தானுங் கண்டு தரிசிக்க ஆசை கொண்டவன் போலத் தேர்மேல சூரியனுதயமாயினான். அப்படிச் சூரியன் உதயமானவுடனே, வாதபுரேசர் அங்கயற்கண்ணியுடனே திருப்பள்ளி யெழுந்திருக்கின்ற சோமசுந்தரனான கருணைக்கடல் விளங்குகின்ற அந்த விமானத்தின் சிகரத்தைப் பார்த்துத் தமது கைகளைக் குவித்துக் கண்களிலே நீரொழுக நாதனைப் பாடத் தொடங்கினார். எப்படியென்றால்,

கொச்சகக் கலிப்பா

எந்தா யனைத்துலகு மீன்றுயெத் தேவர்க்குந்
தந்தாய் செழுங்குவளைத் தாராய் பெருந்துறையில்
வந்தாய் மதுரைத் திருவாலவா யுறையுஞ்
சிந்தா மணியே சிறியேற் கிரங்காயோ.

மூவர் முதலாய் முதுமறையா யம்மறையுந்
தாவாத சோதித் தனிஞான பூரணமாய்த்
தேவாதி தேவாய்த் திருவால வாயுறையும்
ஆவா கொடியா யடியேற் கிரங்காயோ.

முன்னை முதுபொருட்கு முன்னை முதுபொருளாய்ப்
பின்னும் புதுமைக்கும் பின்னைகும் பேரொளியாய்த்
தென்னை மதுரைத் திருவால வாயுறையும்
என்னை யகனே யெளியேற் கிரங்காயோ.

மண்ணைப் புனலாய்க் கனலா வளியாகி
விண்ணை யிருசுடரா யித்தனையும் வேறுகிப்
பண்ணை யிசையாய் பனுவலா யெங்கண்ணுங்
கண்ணை யென்னுறுகண் காணுவா ரென்கொலோ.

பொங்குஞ் சினமடங்கல் போன்றுருத்து வெம்கூற்றம்
அங்கும் புரியா வருந்துன்பந் தாழ்ந்துநான்
மங்கும் படியறிந்தும் வந்தஞ்ச லென்கிலையால்
எங்குஞ் செவியுடையாய் கேளாயோ வென்னுரையே.

பூட்டியருட் பாசமிரு பாதம் பொறித்துடலிற்
கூட்டி யடியாரு ளகப்படுத்தாட் கொண்டருமை
காட்டியவோ வின்றென்னைக் கைவிட்டாய் லெய்யரென்னை
ஆட்டி யொறுக்குமிடத் தாரென்று கொள்வாரே.

ஊரா ருனைச்சிரிப்ப தேர்ராயென் றுன்னடிமைக்
காரா யடியே னயர்வே னஃத்றிந்தும்
வாரா யரசன் றமரிழைக்கும் வன்கண்ணோய்
பாரா யுன்றன்மை யிதுவோ பரமேட்டி.

என்று இவ்விதமாகத் துதிக்கின்றவருடைய அழுகைச் சத்தம் கடவுளின் திருக்காதிலே இளம்பிள்ளை அழுமோசை பெற்ற தாய் காதிலே புகுந்தாற்போலே நுழையக் கேட்டுக் கூடற்கடவுள் அன்றைக்கே வாதவூரடிகளைச் சிறைக்கூடத்தைவிட்டு நீக்கத் திருவுள்ளங்கொண்டு திருநந்திதேவர் முதலான கணுதிபர்களைக் கூப்பிட, அவர்கள் உடனே வந்து சேவித்து நிற்க இன்றையத்தினம் ஆவணி மூல நக்ஷத்திரம், பாண்டியன் மிகவும் கோபங்கொள்ளுமுன்னே அவனுக்குள்ள குதிரைகளெல்லாம் செலுத்தவேண்டும். ஆகையாலே நீங்களெல்லாருங் காட்டிலே சஞ்சரிக்கின்ற நரிகளையெல்லாஞ் சேர்த்துக் குதிரைகளாக்கி, அந்தக் குதிரைகளை நடத்தும் வீரர்களாகி நீங்கள் முன்னே செல்லுங்கள்; நாமும் உங்கள் பின்னே ஒரு குதிரை வீரனுய்த் திருவுருவங்கொண்டு வருகிறோமென்று விடைகொடுக்க, அந்த ஒப்பற்றகடவுள் இட்டருளிய ஆக்கினைகொண்டெழுந்த கணுதிபர்கள் தேவர்களும் அதிசயிக்கக் காடுகளிலுள்ள நரிகளையெல்லாந் திரட்டி வேகத்துடனே தாவுகின்ற குதிரைகளாகச் செய்து, அந்தக் குதிரைகளை நடத்துகின்ற பாகர்களானுர்கள்.

எப்படியென்றல்: இடையிலே தூக்கிக்கட்டின செம்பட்டும், அதிலே செருகின சுரிகையாகிய பாங்கும், கால்களிலே செருப்பும் நெஞ்சிலே இரும்புக்கவசமும், சினந்து பார்க்கிற கண்களும், திரிபுண்டரமணிந்த நெற்றியும், இடிபோல் அதிர்ந்து முழங்குகின்ற சிரிப்பும்,

கொதித்துப் பொங்குகின்ற கோபமும் கொண்டவர்களாய், வட்டமான கேடகம் முதுகிலே கிடந்தசையக் கூர்மைபொருந்திய வாளேந்திய கைகளுமாகச் சிலர் வர, சிலர் தோமரஞ் சுழக்கொண்ட கையின ராய் வர, சிலர் முதுகிலே அம்புக்கூடிகட்டிக் கையிலே வில்லேந்திக் கொண்டுவர, சிலர் சிவந்தபடாத்தினாலே போர்வையணிந்துகொண்டு வர, சிலர் பச்சைப்படாத்தினாலே சட்டையிட்டுக்கொண்டுவர, சிலர் மேகவண்ணப்பட்டினாலே போர்வையணிந்துகொண்டுவர, சிலர் செம் பொன்னிறமான சட்டையணிந்துகொண்டுவர, அனேகம் பேர்கள் மயிற்குடை பிடித்துக்கொண்டுவர, அனேகம்பேர்கள் சாமரங்கள் குடைகளுடனே வர, அனேகம்பேர்கள் சித்திரக்குடைகள் பிடித்துக் கொண்டுவர, அனேகம்பேர்கள் முத்துக்குடைகள் பிடித்துக்கொண்டு வர. இப்படி வருகிறவர்களிலே தர்மம் - அருத்தம் - காமம் - மோக்ஷ மென்கிற நான்கு புருஷார்த்தங்களும் நான்கு கால்களாகவும், ஞான கண்டம் கருமகாண்டம் ஆகிய இரண்டும் இரண்டு காதுகளாகவும், காட்சியளவைக்கடந்த ஒருமைகளான பரம் அபரம் என்கிற உணர்வே இரண்டு கண்களாகவும், அருமையான விதியே முகமாகவும், நிஷே தமே வாலாகவும், பல நூல்களே முதுகலங்காரமாகவும், மந்திரங்களே சதங்கைகள் - கிங்கிணி மாலைகள் - ரத்தினங்கள் - ரத்தினச் சிலம்புக ளாகவும், சூரியனும் சந்திரனும் இருபுறத்தும் அங்கவடியாகவும். பெருமைபொருந்திய தாரகப்பிரம்ம மந்திரமே கடிவாளமாகவும், புறச் சமயங்களான சேனைகள் தோற்றேடும்படி மூண்டு போர்செய்து பகையை வெல்லவல்லதாய்ப் பிரமன் முகமாகிய லாயத்திலே தங்குவ தாய், அண்டகோடிகளை யெல்லாம் ஒரு பிண்டமாக அடுக்கினது போலான முதுகின்மேலே உபநிடதமான ஜீனிகொண்டு, பரிசுத்த மாய் விளங்குகின்ற வேதமாகிய குதிரையின்மே லெழுந்தருளி, வாத வூரடிகளுடைய கால்விலங்கைப் போக்குதற்காக எழுந்தருளுகின்ற சோதியானவர், அவர்க்கேயல்லாமல் பாண்டியன் பிறவியைப் போக் கவும், காலிலே வீரக்கழல்கட்டி, வேதமாகிய உறையினின்று முரு வின ஞானமாகிய வாளானது புறத்திருளையும் போக்கி விளங்கப் பிறக்கவேண்டினவர்கள் மறந்து மிங்கே வராதிருங்கள். அந்தப்பிறவி தீரவேண்டினவர்கள் விரைவிலே இங்கே வாருங்கள்; தமதன்பரைப் பாண்டியன் தண்டியாமைக்கு வருகின்ற பெருமான், உங்கள் பிறவி யைத் தீர்க்க வருகிறுனென்பதுபோலக் குதிரைக்கால்களிலே சிலம்பு கள் சத்திக்கவும சுவாமி! கங்கையை உம்முடைய முடியின்மேலே மறைத்து வைத்திருக்கிறீர்: அப்படியே எங்களையும் மறைத்து வைத் துக்கொள்ளுமென்று பெருமானை வேண்டிக் காவேரி துங்கபத்திரை முதலான நதிகளெல்லாம் சூழ்ந்து பொங்கி விழுகிறதுபோல, அந்தக் கங்காநதியும் சாமரைகளும் புரண்டுவிழவும், பிரமதேவனுடைய நாவி லிருக்கின்ற சரஸ்வதிதேவியானவள், பார்வதிநாயகன் நான்குவேதங் களே குதிரையாக அதன்மேற்கொண்டு வருகின்றுனென்றும், தான் ஒரு வெள்ளைக்குடையாகி மேலே பரவி வருகிறதுபோலே வெண்-

கொற்றக்குடை விளங்கவும், வேதங்களைக்கொண்டு சொல்லுகின்ற பதினெண்புராணங்களும் நாம் சொல்லுகின்ற கடவுளிவனே, படைத்துக்காத்து அழிக்கின்றவனுமிவனே, இன்னம் வேதங்களும் முறையிட்டுரைக்கின்ற பரம்பொருள் இவனேயென்று வாய்விட்டுச் சொல்வது போலப் பதினெட்டு வாத்தியங்களும் முழங்கவும், இப்படி நெருங்கின மாயக்குதிரைகளெல்லாம் மேற்குத்திசையை நோக்கி நடந்து வருகின்றன. அவைகளின் நடுவே சோமசுந்தரக் கடவுளுடைய வேதக் குதிரையும் நடந்து வரும்போது, அங்கு கிளம்பின தூளிகள் ஆகாசமும் திக்குகளும் மறைக்கக் கண்டு, சூரியன் தாம் செல்லுகிறவழி எங்கேயென்று மயங்க, நெருங்கின பல வாத்தியங்களினுடைய முழக்கமும், குதிரைகளினொலியும், வீரர்கள் சத்தமும், திசைகள் செவிடுபட, வேதக்குதிரைமேல் கூடலழகர் இன்னம் மதுரை அரைக்காதவழி தூரமென்ன எழுந்தருளினர்.

அது கண்டபேர்கள் விரைந்து மதுரைக்கோடி வந்து அங்கே காவல் வசப்பட்டிருக்கிற வாதவூரடிகள் முன்னே வந்து சேவித்து, மலர்ந்த சந்தோஷ முகத்துடனே, ஐயா! ராஜநீதி தவருமல் நடத்துகின்ற மந்திரிகள் சிங்கமே! பல நிறங்களைக்கொண்டு கடல் பொங்கி வருகிறதுபோல உள்ள குதிரைகளெல்லாம் திரண்டு வருகின்றன. இந்நேரம் கோட்டை வாயிலுக்குள்ளே அவைகள் வந்து சேரும் ஆதலால், பாண்டியனுக்குப் போய்ச் சொல்லுமென்ன, அதுகேட்டு வாதவூரடிகள், மேகத்துக்கு விலங்கிட்ட உக்கிரபாண்டிய குலத்தானிடமே சென்று, ஐயா பாண்டிய மகாராஜனே! குதிரைகள் வருகின்றன வென்று சொல்ல, உடனே பாண்டியன், வாயுவேகத்துடனே குதிரைக்கடல் வருகின்றதென்று அணிந்த கங்கணங்கள் தெறிக்க உடம்பு பூரித்து மனமகிழ்ந்து, பெரிய விலைபெற்ற ரத்தின ஆபரணங்களும் வஸ்திர பூஷணங்களும் வெகுமானஞ் செய்து, மந்திரியை மகிழ்வுடனே சந்தோஷப்படுத்தினன். அப்படிச் சந்தோஷப்படுத்திச் சிங்காதனத்தைவிட்டு எழுந்து தலைவாயிலுக்கு வந்து, அங்குள்ள மணிமண்டபத்திலே ஒரு சிங்காதனத்தின்மே விருந்துகொண்டு பெண்கள் சாமரங்கள் வீச, பெரியோர்கள் சூழ்ந்திருக்க, குதிரைகள் எங்கே வருகின்றனவென்று பார்த்துக் கொண்டிருக்கும்போது, கடவுள் திருவிளையாட்டால் சிறிதுநேரம் குதிரைகள் வராமல் தாமதமாக நிற்க, அதைக்கண்டு சந்திரகுலத்துப் பாண்டியன் மனம் நாணி, இது பொய்யென்று நினைத்து அருகே நிற்கிற தண்டவீரர்களைக் குறித்துச் சினந்து நோக்க, அவர்கள் பாண்டியன் மனக்குறிப்புத் தெரிந்து, மந்திரிகளுக்கு முதல்வரான வாதவூரடிகளை நெருங்கிக் கொண்டுபோய், எவ்வளவும் அஞ்சாமல் மிகவும் தண்டனை செய்ய, அப்போது வாதவூரடிகள், தமது சுந்தர பாண்டியனை கடவுளை நினைத்து அவரது திருப்பாதங்களைத் துதிக்கின்றார்.

கலி நிலைத்துறை

பூவார் முளரிப் புத்தே ளறியா நெறிதந்தாய்
பாவார் தென்சொற் பனுவன் மாலைப் பணிகொண்டாய்
தேவா தேவர்க் கரசே சிறியே னுறுதுன்பம்
ஆவா வென்று லஞ்சே லென்று யரனேயோ.

நெஞ்சே யுரையே செயலே யெல்லா நினவென்றாய்
வஞ்சே போது மஃதே லின்று வாராயோ
பஞ்சே ரடியாள் பாகா கூடற் பரமேட்டி
அஞ்சே லென்று யிதுவோ விருளுக் கழகையா.

நாவி நேருங் கண்டா நாயிற் கடைட்யான
பாவியேனைப் பொருளாக் கொண்டென் பணிகொண்டாய்
ஆவி யோடிவ் வுடலு நினதே யன்றோவின்
றேவி வாளா திருந்தால் யாரென் னுடையானே.

என்று துதித்தழுகின்ற வாதவூரடிகள் காதிலே பால்வேண்டிக் கத்துகின்ற இளங்கன்றின் காதிலே தாய்ப்பசுவின் கனை குரலோசை வந்து புகுந்தாற்போல, சின்னம், காளம், காகளம் முதலியவைகள் ஒலிக்கும் ஓசை வந்து புகுதவும், செந்தூள் திசைகளெல்லாம் மறைக்கவும் கண்டார். அப்போது பாண்டியனுங் கூடக் கண்டு, வாதவூரடிகளை வரவழைத்து அவர் எல்லாரும் வணங்கும் குலத்தினராகையாலே அவரிடத்திலே மெய்யன்பு கொண்டு, எங்களுடைய ராஜகாரியம் உம்மைப்போலவே செய்ய வல்லவர்கள் யாரிருக்கிறார்களென்று கொண்டாடிச் சொல்லி முடியாத சந்தோஷங் கொண்டு பேசிக்கொண்டிருக்கும்போது, படர்ந்த இருட்படலத்தைக் கிழித்துக்கொண்டு தனதாயிரம் கிரணங்களுந் தோன்ற உதயமாகிற சூரியர்களை யொத்தவர்களாய்ச் சிறந்த திருமேனிகொண்ட பாகர்களுடனே கடலினுரைபோலே வாய்நுரை தோன்ற மாயக் குதிரைகளெல்லாம் வந்தன. அப்படி வந்த குதிரைகளைப் பாண்டியனும், தன் குலத்திலுள்ளவர்களும், என்றுங் கண்டறியாத லக்ஷணங்களையுடைய குதிரைகள் இவைகளென்று பார்த்து, அச்சோ இந்திரனைப்போல ஆயிரங் கண் நமக்குண்டானாலும் பார்த்து முடியாதென்று மனக்குறிப்புடனே தானென்றும் சந்தோஷமென்றும் வேறுபாடு இல்லாமல், அந்தக் குதிரைகள் மேல்வந்த வீரர்களை யெல்லாங் கண்டு அதிசயித்து, இந்தக் குதிரை வீரர்களுக்கெல்லாம் தலைவர் யாரென்று தன் மந்திரியான வாதவூரடிகளைக் கேட்க, எல்லாந் தெரிந்த வல்லவராகிய வாதவூரடிகள், ஐயா! எனக்கது தெரியாதென்றார். அந்தச் சமயத்தில் அண்டங்களெல்லாம் ஒருடலாகத் தாமே உயிராகி ரக்ஷிக்கப்பட்ட ஆனந்தமயமாகிய பரஞ்சோதியான சோமசுந்தரக் கடவுள், அந்த அண்டங்களைத் தாங்குகின்ற வேகத்தையுடைய வேதமாகிய குதிரையே தமக்கோர் ஆதாரமாகித் தம்மைத் தாங்கவும், ஒரு காலத்தும் அசையாதிருக்கிற தம்முடைய பாத தாமரைகளசையவும், எல்லா

ருடைய ஆசாபாசங்களையும் நீக்குவதான கையிலே ஏறின குதிரைக் கடிவாளமாகிய பாசத்தைப் பற்றிக்கொண்டு பாண்டியனுக்கு முன்னே வந்து ஓ பாண்டிய மகாராஜனே! எங்களுடைய குதிரை யேற்றத்தைக் கொஞ்சம் பார்ப்பீராக வென்று சொல்லி, அந்தப் பாண்டியனும் அந்தப்பாண்டியன் சபையாருமேயல்லாது, தேவர்களு மயங்கும்படி எல்லா உலகங்களையும் அசைக்கவல்ல கடவுள், ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியு முதலான விசித்திர வேறுபாடுகள் தோன்றத் தம்மிச்சையால் குதிரையைச் சற்றே அசைத்தருளினர். அப்படியே மற்றைக் கணுதிபர்களும் தனித்தனியே தங்கள் குதிரை களை நடத்திக் காட்டக் கண்டு, பாண்டியன் அவர்களைப் பார்த்து, உங்களிலே தலைமைத் தனங் கொண்டவர் யாவரென்று கேட்டான். அதற்குக் குதிரை வீரர்கள் எங்களுக்குத் தலைவரான தனிவிரர் இவர் தானென்று கடவுளாகிய வீரரைக் காட்டினர்கள். அவர்கள் காட்டின வுடனே, சுட்டுதற்கரிய சோதியாகிய கடவுள், வேதமாகிய தாவுகின்ற புரவியோடு, பாண்டியன் முன்னேவர அவரது கிருபாதிருஷ்டி பாண் டியன் மேலே பட்டுத் தன்னை மறந்தெழுந்து, இரண்டு கைகளையுந் தலைமேலே குவித்துக்கொண்டு நின்றான். உடனே கடவுளருளாலே மயங்கிய பாண்டியன் மனந்தேறி, இன்று ஒரு குதிரை வீரனைக் கண்டு நாம் எழுந்து தலைமேலே கைகள் குவித்துக்கொண்டு நின்ற தற்குக் காரணமென்ன வென்று, சிங்காசனத்திலே மறுபடியும் இருக்க நாணி அப்படியே நின்றான்.

அப்படி நிற்கின்ற பாண்டியன் முகத்தைப்பார்த்து, எதிரே நின்ற வேதப்பரிமேலழகர், ஓ பாண்டிய மகாராஜனே! உன்னுடைய பொருள்களெல்லாங் கொண்டுவந்து, உன் சொல்வழுவாத மந்திரி யானவர் எனக்கும் என்னைச் சேர்ந்தவர்களுக்கும் நிரம்பக்கொடுத்தத னாலே, இந்தக்குதிரைகள் கொண்டு வந்தோம; இவை தேவர்களுக்கே யல்லாமல் மனிதர்களுக்குக் கிடைக்கத் தக்கனவல்ல. குதிரை லக்ஷ ணந் தெரிந்தவர்களாலும் விலையளவு சொல்லக் கூடாதவைகளாய், சாஸ்திரத்திலே சொல்லிய லட்சணங்கள் அமைந்துள்ளனவாய் நல்ல குதிரைகள் உமக்கு வந்து சேர்ந்தன. ஆனாலும் குதிரைவிற்கும் வர்த் தகத்தைச் சொல்லக் கேளும்: இந்தக் குதிரைகளை என்னிடத்திலே இன்று நீர் கயிறுமாறி, உமமுடையவாகக் கொள்ளுகிறதினாலே இந் தக் குதிரைகள் நாளைக் கெப்படியானாலும எனககும உமககும யாதொரு வழக்கும் பேசக்கூடாது. இதுவே குதிரைவிற்கும் நியாய மென்று சொலல, அதுகேட்ட பாண்டியன், மனமகிழ்ந்து அதற்குச் சமமதிதது அந்தத் தனிவீரரைப் பார்தது என்னிடததிலுளள மநதிரி களிலே சிறந்த வாதவூரர், உங்களுடைய சினேகத்தினாலே, பினனும் எனக்குச் சிறந்தவரானாரென்று கொண்டாடிப் பாணடியன சொன் னான். அதற்குப் பாமபாபரணந் தோற்றமல் வேதக் குதிரைமேல் வந்தவர் மரகதநிறமான வேப்பமாலை யணிதத பாண்டியனைப்பார்த்து,

குதிரை கயிறுமாறிக் கொடுக்குமுன்னே, பொதுவான குதிரை லட்சணங்கள் சொல்லத் தொடங்கினர். கேளும் பாண்டிய மகாராஜனே இந்தக் குதிரை சமயம் வந்தால் மதிலும் கடந்துபோகும், கண்ணும் நுழையாத பலகணி வாயிலும் நுழையும்; கண்ட வெளியெல்லாம் தனக்கு வழியாகப் போகும்; பசிவந்தால் எதுகிடைத்தாலுந் தின்னும்; இன்னும் ஒப்பில்லாத சிறந்த இலக்ஷணங்களுள்ள இந்தக் குதிரைகளிலொன்று உன்னிடத்திலிருந்தால் லட்சுமிகடாட்சமும் குறையாத செல்வமும் மேன்மேலான கீர்த்தியும் பெறுவாய். மேலும், நெய்த்து மாந்தளிர் நிறமான நாக்கும், கீழே ஊன்றுகின்ற உயர்ந்தகுளம்புகளும், நீண்டுசரியொத்திருக்கிற பற்களும், பாம்புப்படம்போல விரிந்த கழுத்தும் மார்புங்கொண்டிருந்தால் அதற்குப் பாடலமென்று சொல்ல வேண்டும். விசாலமான நெற்றியும், நீண்ட தலைமயிர்போல ஒருநிறமான புறமயிருடனே நின்ற கோணமாய் அழகிய முகமுள்ளதைக் கேடகமென்று சொல்லத்தகும். எதிர்த்த யுத்தத்திலே முகத்திலே கத்திகொண்டு வெட்டினாலும் எதிர்த்துச் சண்டை செய்யவல்லதாய் குரங்கு-வேங்கை-யானை-நரி - சரபம் - முயல்கள்போலுங் கதியுடையதானல் அதை இவுளியென்று சொல்லப்படும். உன்னதமும் நீளமுமுடையதாய் சங்கு கற்கண்டுபோல் வெண்மையான வாய் நுரையை உமிழ்வதாய்ப் பின்னமான ஒரு நிறமும் மைந்நிறமுமுடையதை வன்னியென்று சொல்லவேண்டும். பலமான கழுத்திலே சிறந்த தெய்விகமான மணியும் அஷ்டமங்கலமும் அழகான பஞ்சகல்யாணமுமுள்ளதைக் குதிரையென்று சொல்லவேண்டும். குங்குமவாசனை கற்பூர வாசனை அகிற்சந்தன வாசனை இவைகளை வீசுவதாய், சங்கு-மேகம்-சரபம்-சிங்கம் இவைகள்போ லனுமானிப்பதைப் பரியென்னப்படும். நான்கு கால்களுங்கடைந்தெடுத்து நாட்டினாற்போல்வதாய், கொள்ளி வட்டம்போலே வட்டமிட்டுச் சுழல்வதாய், மேலேறின வீரன் காலுக்குள் ளடங்குவதைக் கந்துகமென்னத்தகும். கோட்டையும், மலைமேற் கோட்டையும், ஆறும், தாண்டும்பலமுள்ளதாய், இந்தமுழுலட்சணங்களெல்லாம் முழுதுங்கொண்டதைப் புரவியென்று சொல்லவேண்டும் ஆனால் இந்த எட்டுவகையும் எட்டு வயதுள்ளவைகளே. பகைவரை வெல்லுவதான வல்லமை பொருந்திய இந்த எட்டு வகையும், பாண்டிய ராஜனே! நீயே ஏறத்தக்கவைகளென்று சொல்லி, வேதத்தின் முதுகிலேறியிருக்கின்ற தனிவீரர் திரும்பித் தமது கூட்டத்தார் முகத்தைப் பார்த்தார். அவர் பார்த்தவுடனே நெருங்கிக் கூட நின்ற வீரர்களெல்லாம் குதிரை நூல் வல்லவர்களறிவும் பின்னிடும்படி தனித்தனி சாரிவிட்டார்கள்.

அதுகண்டு பாண்டியன் அதிசயித்துத் தன் பக்கத்திலே தனக்கு முழுநம்பிக்கையான மந்திரிகள் எல்லாரையும் பார்த்து அசையாத தலையை யசைத்து, மெல்ல மெல்லத் தோன்றுகின்ற நகையோடு மிகவுஞ் சந்தோஷித்தான். அப்போது கடவுளும் நமது தெய்வத்

தன்மை பொருந்திய குதிரையைச் செலுத்தி, இடசாரி வலசாரி கொண்டு வட்டமாக வரும்போது கொள்ளிபோல வீதியெல்லாம் ஒரே குதிரையாகத் தோன்றி, வீதிகளெல்லாங் குதிரைகள் விற்பன வாக, ஒரு நிமிஷத்துக்குள்ளே, முன்னே ஒரு பாண்டியனுக்காகத் தமது கையிற் கங்கணமான பாம்பு வளைந்து சுற்றினது போலே சுழல, இன்னும் பல நிறங்கள் கொண்ட குதிரைகளும் வீதிகளெல் லாம் பின்னிஞற்போலப் பின்னி, வட்டமாக, மதுரை யென்கிற ஒரு பெண்ணனவள் கையில் தரித்த நவமணிக் கடகம்போலவும் விளங் கின, இன்னும் அந்த மதுரையிலுள்ள பெண்களணிந்து கொள்ளும் பொன்னிறமான கந்தப் பொடிகள் சிந்திக் கிடக்கிற வீதியிலே நடக்கிற குதிரைக் கூட்டங்களாலே கிளம்பின தூளிகள், பொன்னுல கத்திலே குதிரைகள் செல்ல அங்குண்டான பொன்னிறப் பொடியை யொப்பாயின.

இப்படித் தேவர்களும் மனிதர்களும் அந்த மதுரையிலுள்ள யாவ ரும் அதிசயிக்குமாறு குதிரையை நடத்தி, அந்த மதுரைக்கரசனுன பாண்டியனுக்கு முன்னே கருணைக்கடலான கடவுள் வந்து நின்று, அக்குதிரைகள் பிறந்தவிடங்களை வகுத்துக் கூறுகிருர். இந்தப் பரிகள் காம்போசம், இந்தப் பரிகள் மாமந்தரம், இந்தப் புரவிகள் காந்தாரம், இந்தப் பரிகள் வான்மீகம், இந்தக் கந்துகம் சிந்து, இந்தக் கன வட்டம் பாஞ்சாலம், இந்தக் குதிரை துளுவம், இந்தத் துரகம் இமயம், இந்தக் கற்கி கலிங்கம், இந்தப் பாடலம் ஆரியம், இந்த அச்சுவம் கூர்ச்சரம், இந்தத் துரங்கம் கேகயம், இந்தக் கொய்யுளை யவனம், இந்தக் கொக்கு மக்கம், இந்த இவுளி வனயுசம், இந்தப் பாய்மா பல் லவம், இக்கக் கோரம் சவ்வீரம், இந்தக் கன்னி மாராட்டம், இந்த வன்னி வாசந்திகம், இந்தக் கோடகம் காடகம், இந்த அயம் கான்மீ ரம், இந்தக் கோணம் மாளவம், இந்தக் குந்தம் கந்தரம், இந்த அரி சவுராட்டகம், இந்தக் கிள்ளை மற்ருேர் தேசம், இந்தத் துரகதம் வேருெரு தீவாந்தரம், இந்தக் குரகதம் குருக்கேந்திரம் என்று, இப் படிப் பல பல தேசங்களிலுண்டாகிய பெயர் வேறுபாடான குதிரை களையெல்லாம், இந்த வாதவூரர் கொடுத்த பொருளுக்காசைகொண்டு இவர்களே கொண்டுவந்தவர்கள். கேளும் பாண்டியராஜனே! இந்தக் குதிரைகளில் வெள்ளி - முத்து - பால் - சந்திரன் - சங்கு - வெண்பனி இந்த நிறமுள்ளவை வெள்ளைக் குதிரை. மாதுளம்பூ - செம்பஞ்சுக் குழம்பு இந்த நிறமுள்ளவை சிவப்புக் குதிரை. குயில்-வண்டு-மேகம் இந் நிறமுள்ளவை கறுப்புக் குதிரை. கோரோசனை நிறமுள்ளது பொன்னிறக் குதிரை. இந்த நான்கு நிறமுங் கலந்திருப்பது மிச் சிரம். முகம் - மார்பு - உச்சி - வால் - கால்கள் நான்கு ஆக எட் டுறுப்பும் வெண்மை கொண்டது அஷ்டமங்கலம். தலை - வால் - மார்பு இந்த மூன்று நீங்கலாக ஐந்திடத்தும் வெண்மையுள்ளது பஞ்ச கல்யாணி. கழுத்தில் வலஞ்சுழித்திருந்தால் அதையே தெய்வமணி

யென்று தெரிந்தோர்கள் சொல்லுவார்கள், முகம் - தலை - நாசி - மார்பு இந்த நான்கிடத்திலும் இரண்டிரண்டு சுழிகளும், நெற்றி நடு பின்பக்கம் இரண்டிடத்திலு மொவ்வொரு சுழியும் உள்ள குதிரையே லக்ஷணமுள்ளது. இந்தச் சுழிகளில்லாம லிருந்தாலதை இலக்ஷணப் பழுதென்று சொல்லவேண்டும. வெவ்வேருக மார்பிலே ஐந்துசுழி யுண்டானுல் அதற்குப் பேர் ஸ்ரீவற்சம். நெற்றியில் இரண்டு சுழி யாவது மூன்று சுழியாவதிருந்தாலும் நல்லதே. அப்படி யில்லாவிட்டால் நெருக்கமாக நான்கு சுழி வலம் புரியா யிருந்தால் நல்லது. அப்படியன்றி இரண்டு சுழி முன்னங்கால்களிலும் மூலத்திலு மிருந்தாலும் நல்லதென்றே சொல்லுவார்கள். கண்டத்தினடுவே இரட்டைச் சுழி யுடைய புரவியானது தன்னுடைய தலைவனுக்கு மிகவும் தரித்திரத்தை யுண்டாக்கும். அல்லது தன்னைக் கொண்டவனுக்கு மிகவுந் துன்பத்தையும் மரணத்தையும் ஏற்படுத்தும். அந்த இரட்டைச் சுழி கணைக்காலிலிருந்தால் அந்தப் புரவியை யுடையவனுக்குப் பயம்-துன்பம்-விலங்கு இவைகளேற்படும். மேலுதடு - முன்காலடி - கபோலம்-முழங்கால் இந்த நான்கிடங்களிலுஞ் சுழிகளிருந்தாலும் அந்தப் புரவி தன்னை வாங்கிக்கொண்ட தலைவனைக் கொல்லும். இந்தச் சுழிகளையுடைய புரவிகளை ஏருமல் லாயத்திலே கட்டியிருந்தாலும் குற்றமாம்,

இவைகளிருக்க புரவிக்கு வயது முப்பத்திரண்டு. அவஸ்தை பத்து. அவஸ்தை ஒன்றுக்கு வருஷம் மூன்று, மாதம் இரண்டு, நாள் பன்னிரண்டு. இன்னமும் எந்தநிற பேதங்கள் மிகுந்திருந்தாலும், வெள்ளை நிறங் கலந்திருந்தால் அவ்விதப் புரவிகள் நல்லதே. கறுத்த புரவிக்கு வயிருயினும் மார்பாயினும் சிவந்த நிறமா யிருந்தால் அது மிகவும் ஜெயத்தைத் தரும். அந்த வயிறும் மார்பும் வெள்ளையா யிருந்தால் அதற்குப் பெவர் வாருணம். அது பகைவரிடத்து வெற்றியைத் தரும். பிடரி வெளுத்திருந்தால் உடையவனுக்குப் புத்திரப்பேருண்டாம். மார்பு வெளுததிருந்தால் சந்தோஷந்தைத் தரும். மணிக்காலும், கண்டததினிடமும் வெளுத்திருந்தால் பொருள் சேரும். முகம் வெளுத்திருந்தால் வெற்றியைத் தரும். பின் பக்கத்தினிடம் வெளுத்திருந்தால் சுகத்தைத் தரும். இடை வெளுத்திருந்தால் சந்தானம் அதிகமாம். வலப்புறத்திலே வெண்மையா யிருநதால் தனதானியங்கள அதிகமாம். முதுகு - வால் - முகம் இந்த மூன்றும் வெளுதத புரவி ஜெயத்தைத தரும். உந்தி தொடங்கி முன்புறம் எல்லாம் சூரியன் போலே சிவந்து சந்திரன் போலே பின்புறம் எல்லாம் வெளுத்து அழகமைந்த புரவிக்குப் பகலில் ஜெயமுண்டாம். சந்திரன் போலே முன்புறம் வெளுத்துப் பிறபுறமெல்லாம் சூரியன் போலே சிவத்த புரவிக்கு இராத்திரியிலே வெற்றியடையும். இந்த இருவகைப் புரவிகளும் வந்திருக்கின்றன. புரவிகள் காலூன்றினுல் பத்து வைத்தாற்போல

வும், நின்ருல் மலேபோலவும், அனுமானித்தால் யானேபோலவும் சிங்கம் போலவும், வேகத்தில் வாயுபோலவும், ஆட்டத்தால் நட்டு வன் போலவும், நடந்தால் யானேபோலவும், சிங்கம்போலவும், குல மகளேப் போலே கவிழ்ந்த முகமும், கருநெய்தல் போலே கண்ணும், மேகம்போலே சிறந்து விளங்குகின்ற நிறமும், கருநெய்தற் பூப் போலே வாசனேயும், மலராலும், அகிற்சந்தனங்களாலும், ரத்தினுபர ணங்களாலும் அலங்கரித்தால், நீங்காத அதிக சந்தோஷங்கொண்டு விளங்குவது உத்தமமான குதிரையென்று சொல்லுவார்கள். உத்தமக் குதிரைக்கு உயரம் 100 விரல் அளவு, மத்திமக் குதிரைக்கு உயரம் 84-விரல் அளவு, அதமக் குதிரைக்கு உயரம் 61-விரல் அளவு என்று நிலேபெற்ற நாகபந்தம் விருத்தம் நெடுவீதி என்கிற குதிரையி னுடைய நடைபேதமெல்லாம் இனிதாக நடத்திக் காட்டினர். வெவ் விய குதிரைகளுக்கு எஜமானனேப் பார்த்து அதிசயப்பட்டுப் பாண்டி யன் சிரக்கம்பஞ் செய்து ஒரு கைவிரலேச் சுழற்றி அழகிய பொன் இவ்வளவென்று விலேயில்லாததான அரிய வஸ்திரமொன்று கொடுத் தான். எம்முடைய கடவுளானவர் அதைச் சவுக்கின்மேல் ஏற்றுக் கொண்டு புன்னகை செய்தார்.

அப்படி ஏற்றுக்கொண்ட பிரகாசம் பொருந்திய வஸ்திரத்தை நேசத்தை யுடையவனுப் காற்றைப்போலச் சீக்கிரத்தில் வந்து விரைவாகத் தன் கையில் வாங்கி வணங்கவில்லே சிரசிலே தரித்துக் கொள்ளவில்லே யென்று, பாண்டியராஜன், திருநீற்றைத் தரித்த கடவுளினுடைய மறைப்பினுலே கோபங் கொண்டான். வெளிப்படக் காணுதற்கரிய அருமைத் திருமேனியை யுடைய பரமசிவனுனவர், பார்த்தவர் கண்களும் மனமும் சந்தோஷமடையும்படி, வருகிறதைப் பார்த்தும், பாண்டியராஜன் காணவில்லே. ஒளித்துக்கொண்டு உல கெங்கெணும் நிற்கின்ற கடவுள், மிகுந்த பிறவியை யொழித்து அறிவு கொடுத்தாலல்லாமல், எவர்கள் அவருடைய தன்மையைத் தெரிய வல்லவர்கள். எட்டுத் திக்குகளிலும் இருக்கின்ற அரசர்கள், அன்பால் தமக்குக் கொடுக்கப்பட்ட வஸ்திரங்களே யெல்லாம் சவுக்கிலே வாங்கிக் கொள்வது அவரது தேசவழக்கமென்று, வளத்தையுடைய தமிழ் வேதத்தைப் பாடுகின்ற திருவாதவூரரானவர், பாண்டியராஜன் முன்னே நின்று, அவன் மனதிலே கொண்டிருந்த கோபம் சாந்தி யாகும்படி தாழ்ந்து சொல்லியருளினுர். நன்மை பொருந்திய இந்த வழக்கத்தைக் கேட்டபின், அன்புகொண்டு கலக்கமில்லாத அசுவ லட்சண சாஸ்திரங் கற்றறிந்த புலவர்களேப் பார்த்து லக்ஷண விதிப் பிரகார மிருக்கிற பெரிய குதிரையினுடைய இழிவும் உயர்வும் பிரகாச மாக உங்களுக்குள்ளே சோதித்து நம்மோடே சொல்லுமென்று சொன்னுன். பாண்டியராஜன் சொல்லினுற் பிரகாசிக்கப்பட்ட அஸ்வ லட்சணத்தினுடைய உண்மையாகிய பொருளேத் தெரிந்தவர்கள் வெற்றி பொருந்திய விரும்பத்தக்க குதிரைகளுக்குள்ளே குற்றத்தை

யும் குணத்தையும் பார்த்து மகமேரு மலையின்மேல் தன்னுடைய மீனக்கொடியை எழுதி வைத்துத் திரும்பிய வெற்றியைக்கொண்ட அரசர்க்கரசனாகிய பாண்டியராஜன் முன்பாக இந்த விதமாகச் சொன்னார்கள். துன்பத்தைத் தருகின்ற சந்திரச்சுழியும் அண்டாவர்த்தமென்னும் தண்டையடியி லிருக்கின்ற சுழிகளும், உடலிலொரு பக்கத்தி லிருக்கின்ற சுழியாகிய கௌவகமும், காகாவர்த்தமும், மேன்மையாகவிளங்கிய முன்வளையச்சுழியும், பரவியசெழுமையுள்ள கேதாரிச் சுழியும், காவலிலிருக்கின்ற பிரயோஜனமில்லாக் கொடிய சுழியாகிய கேசாவர்த்தமும், பொலிவோடுங் கூடிய கச்சை நிலையிற் பட்டையாகச் சொல்லப்பட்ட சுழியும் ஆகிய இந்தச்சுழிகள் பொருந்தாதனவாம். கொம்பைப் போலிருக்கும் நீண்ட காதும், முறுக்கிய காதும், மூன்றுகால் விளர்த்து ஒருகால் கறுத்தும், கறுத்த காலொன்றும் மூன்றுகால் கறுத்து ஒருகால் விளர்த்தும், விளர்த்த காலொன்றும் விளர்த்த கண்ணும், தீனி குன்றுமையும், வெம்புகின்ற தீயையுடைய மயானருத்திரனைப்போலும் நீலகண்டமும் பீஜமில்லாமையும், ஏறக்குறைய விருக்கும் பெரிய பீஜமும், செவ்வையாகிய பதுமையும், அக்கினியும், சித்திரம் போல அசைவில்லாமலும், முகம் வால் நாற்கால்களிவைகளிற் சுழி யில்லாமையுமென, இப்பூலோகத்தார் சொல்லிய குற்றங்களி லொன்றுமில்லாமல் கழுத்தடியில் மார்க்கண்டமிரட்டையா யிராமல் சிரசிலே இரண்டு சுழியும், செழுமையுள்ள நாவிலே நான்கு சுழியும், சிறந்த மார்பிலே இரண்டு சுழியும், நெற்றியிலே ஒரு சுழியும், உகட்டிலே ஒரு சுழியும் ஆகிய சுழிகள் பத்தும் குறையாம லிருக்கவேண்டும்.

மேலும், நரி-பூனை - கரியகாக்கை - பேய் - ஓரி - நாய் - செழுமையுள்ள பன்றி இவைகளுடைய சத்தமில்லாதவையாய்ப் பெரிய அலையை யுடைய கடல் - மேகம் - சங்கம் - இடபம் - பேரிகை இவைகளைப் போல் ஓசையை யுடையனவாய், கோபித்துப் பகைக்கின்ற புலி கரடி கழுதை செந்நாய் - பூனை - நரி - கரியநாயகம் - தீ - புகை இவைகளினுடைய நிறத்தைப் பொருந்தாதவைகளாய் இறுமாப்புடையனவாய் வாயு வென்னும் வேகத்தோடுங்கூடிப் பிரகாசித்த கிரணங்களுடைய வெள்ளி முத்துக்கள் சந்திரன் நீலரத்தினம் மெல்லிய தாமரையினுடைய மகரந்தம், செழுமை பொருந்திய பொன் காயா செவ்வரத்த மலர், நல்ல பச்சைக்கிளி, ஆகிய இவைகள் போல பொருந்திய உருவத்தை யுடையனவாகி நெற்றி பரந்து உயர்ந்த மேலுதட்டையுடையவாய், வெண்ணிறம் நிறைந்து தம்மிலே வரிசையாய் ஒத்துப் பிரகாசிக்கப்பெற்ற பற்களையுடையவாய், நிறைந்த நல்ல வாசனை பொருந்தி நாக்கும் மாவினிளந்தளிர்போலும் செம்மைநிறம் பொருந்தி, இரண்டிமையின் மயிருந் திரட்சியுடையவாய் உக்கிரமாகிய கண்பார்வையுடையவாய், தேகத்தினிடத்தில் அதிக மாமிசமில்லாமல் உள்ளே வளைந்து முக்கோணமாய்ப் பிரகாசிக்கின்ற முகத்தை யுடையவாய்

கழுத்து மயிரும் தலைமயிரும் ஒரு நிறமாயிருப்பவாய், மார்பினுடனே கண்டமும் பாம்பின் படமும் போலொத்துச் சங்குகள்போலத் தொனியுண்டாய்க் குவிந்து உள்வாங்கி மண்டலஞ் செய்வனவாய், வலிமை கொண்ட குளம்புடையவாய், கிளைத்திருக்கின்ற நரம்புகள் மறைந்து தசையை யுடையவாய்ப் பிரகாசிக்கின்ற முழங்கால் தெளித்தலில்லாமல் நெளிப்பாகிய முதுகும் பருத்த தொடைகளுந் திரண்டு தண்டைக்கால் நீண்டு சிவந்த நிறத்தை யுடையவாய், மிகுந்த செழுமையுள்ள சாமவேதத்தினுடைய நாவிலும், பிரமதேவனானவன் ஓமஞ் செய்யும்போது அவன் கண்ணினின்று கையில்வழிந்த நீரினிடத்தும், இந்திரன் முதலிய திக்குப்பாலர்களெண்மரிடத்தும் சமுத்திரத்திற் பிறந்த அமிர்தத்தினிடத்தும் அந்தப் பிரமன் ஓமஞ்செய்த அக்கினியிடத்தும், நிறைந்த கருப்பையிலும், லட்சுமி சாபுத்தாற் பிரமன் கோட்டானாக, அந்தக் கோட்டான் முட்டையிலும், ஆகிய இவ்வேழிடங்களிலும் உற்பத்தியான பழமையுடையனவாய், நான்கு கால்களும் நெற்றியும் ஒக்க வெளுத்திருக்கும் பஞ்சகல்யாணி யென்னும் குதிரைகள் ஆகாசத்திலும் நீரிலும் செல்லுகின்ற வழியுண்டாய், மங்காளனென்றும், சாரங்கனென்றும், கங்கா நீலனென்றும், மௌவழகனென்றும், கொங்காளனென்றும், சன்னசம்பானென்றும், குங்குமச் சோரனென்றும், கரியானென்றும், நீலனென்றும், சாரனென்றும், பொல்லானென்றும் கருங்காற் சம்பானென்றும் பல நிறத்தையுமுடைய சாதியாய், உயர்ந்த குதிரைகளிவைகளென்று அவற்றின் மேன்மை யெல்லாம் சொல்லிப் பாண்டிய ராஜனைத் தொழுது நின்றார்கள்.

* அவர்கள் இவ்விதமாகச் சொன்ன பின்பு பரிமேலழகராகிய சோமசுந்தரக் கடவுள், ஒரு நரிப் பரியைக்காட்டி இதைப் பூசித்து வணங்கிக் கயிறு மாற்றிக்கொள்ளென்ன, உடனே அரிமருத்தன பாண்டியன், அவர் காட்டின குதிரைக்கு முத்துமாலை சதங்கை சிலம்புகளால் அலங்காரஞ் செய்வித்து நல்ல பூமாலையும் சந்தனமுமணிந்து தூபதீபங்கொடுத்துப் பக்தியுடனே வணங்கி யெதிரே நிற்க அப்போது, முத்தொழிலின் மூவராய் மூவர்க்குந் தெரியாத முக்கண் மூர்த்தியான பரிமேலழகர், திருவாலவாய்ப் பரமனை பார்த்துத் தமது கைகளைத் தலைமேலே குவித்து வாழி வாழியென்று குதிரையைக் கொடுத்துக் கயிறுமாறி, உபநிடதமாகிய சீனியையுடைய குதிரை யொன்று தவிர மற்றைக் குதிரைகளை யெல்லாங் கொடுக்கப், பாண்டியன் வாங்கி குதிரைவீரர்களிடம் தர, அவர்கள் லாயத்தில் கட்டினார்கள். பின்பு, குதிரை வர்த்தகரான கடவுளுக்குப் பாண்டியன் நல்ல வெள்ளை வஸ்திரம் வெகுமானமாகக் கொடுத்தான். பாணனுக்கு ஏவல் செய்தவராகிய சோமசுந்தரக்கடவுள், நானுமல் குதிரையை

* இந்த அடையாள முதல் * இந்த அடையாளம் வரையில் திருவாதவூரடிகள் புராணத்திலிருந்து சேர்க்கப்பட்டது.

விட்டிறங்கி வாங்கி அந்த வஸ்திரத்தை மற்றொரு கங்கைபோலத் தமது முடிமேலே சூடிக்கொண்டார். அப்போது சனுதிபர்கள், நமது கடவுள் குதிரைவிட்டிறங்கி, இந்தப் பாண்டிய ராஜனிடத்திலே யிரந்து தலைமேலே சூடிக்கொள்ளுகிறதற்குக் காரணமென்ன, இனி இந்தப் பாண்டியன், கடவுளணிந்த கபாலமும் திசம்பரமும் பாம்பாபரணமுங் கொள்ளுவாரோ வென்று, தங்களுக்குள்ளே ஒருவர்க்கொருவர் பேசி வெருண்டார்கள். பின்பு, மனுநீதிப்படி அரசு நடத்துகிற பாண்டியன் குதிரைவீரர்களெல்லோருக்கும் வெவ்வேறே வஸ்திரங்கள் கொடுக்க, அவர்களும் வாங்கி யுடுத்திக்கொண்டார்கள். பின்பு அருள்வடிவாய்ச் சிறந்து வந்த பரிமேலழகரும், மற்ற மாயக்குதிரை வீரர்களும் மறைந்து போயினார்கள். அப்படி அவர்கள் போனபின்பு, தனக்கு இம்மைக்கும் மறுமைக்குந் துணையாகிய வாதவூடிகளுக்கு அரிதான சிறப்புகள் செய்து அவரிடத்துக்கு அவரை அனுப்பிவிட்டுப் பாண்டியன் உச்சிக்காலத்தில் தனதரண்மனைக் குள்ளேபோக மற்றை மந்திரிகளும் தங்கள் தங்கள் வீட்டிற்குப்போகக் குதிரைகள் பார்க்கவந்த மதுரைப்பட்டணத்து ஜனங்களும் தங்கள் தங்கள் வீடுகளுக்குப் போக, பரிமேலழகரும் தம்முடைய திருக்கோயிலுக்குப்போய்த் தம்முடைய திருவிளையாட்டெல்லாம் மீனாட்சியம்மையாருக்குச் சொல்லிக் கொண்டிருந்தார்.

நரி பரியாக்கிய படலம் முற்றிற்று.

---

அறுபதாவது

## பரி நரியாக்கிய படலம்

கலிநிலைத்துறை

ஞான நாயக னாணையா னரிபரி வெள்ள
மான வாறுரை செய்துமீண் டப்பரி நரியாய்ப்
போன வாறுகண் டமைச்சரைப் புரவலன் கறுப்ப
வான வாறுபோல் வைகைநீர் வந்தவா றுரைப்பாம்.

உரை: ஞானத்தலைவராகிய சோமசுந்தரக் கடவுளது திருவாணையால் நரிகளெல்லாங் குதிரைக் கூட்டங்களாகச் சமைத்த திருவிளையாடலைச் சொன்னோம். இனி, மீண்டும் அந்தக் குதிரைகள் நரிக் கூட்டங்களாகி ஓடிப் போய்விட்ட அதிசயத்தை யறிந்து, அதனை மோசமாக வெண்ணி, மந்திரித் தலைவரைப் பாண்டியன் கோபித்து வருத்திய சமயத்தில் அச் சோமசுந்தரக் கடவுளது திருவாணையால் வையை நதியானது ஆகாச கங்கைபோல மதுரையிற் பெருகிய அற்புதத்தையும் சொல்லுகின்றோம்.

நெருங்கிய பல வாத்தியங்களின் முழக்கமும், சேனைகளும் அதிகமாகப் பெண்கள் கூட்டங்கள் எதிரே வந்து மங்கலங்கள் ஏந்தப் பாண்டியன் கொடுத்த வரிசைகளைப் பெற்றுக்கொண்டு, வாதவூரடிகள் தமது திருமனையிலே வந்து புகுந்தனர். அப்படி வந்து புகுந்த வுடனே, சுற்றத்தாரும், கல்வி கற்றவர்களும் மிகுந்த சிநேகிதர்களும் தங்கள் தங்கள் முறைப்படியே விசாரிக்கின்றவர்களுக் கெல்லாம் தமது திருவாக்காலே உபசார வார்த்தைகளும் சந்தோஷமு முண்டாகச் செய்தனுப்பிவிட்டு, வாதவூரடிகள், தாம் தனியே ஓரிடத்திலிருந்து கரந்தை மலர்மாலையைத் தரித்தருளிய ஆலவாய்க் கண்ணுதலாகிய சோமசுந்தரக்கடவுள், நாம் வேண்டிக் கொண்டபடியே கொண்டுபோன பொருள்களெல்லாம் அடியார்களும் தாமுமாகவே ஒப்புக்கொண்டு, நம்மையும் பணிகொண்டு நமது துன்பத்தையுந் தீர்த்தார். அல்லாமலும், பாண்டியனுக்குஞ் சம்மதியாகவே குதிரைகளுஞ் செலுத்தினார்கள். ஆதலால், இனி நமக்கு முழுதுங் கவலையில்லாமல் செய்த அவரே பிரபஞ்சமாயை முழுதும் வெல்லும்படியான தமது பேரருள் விளைப்பதான பேரானந்தத்தை நாமடையுமாறு, நம்மைத் தவக்கோலஞ் செய்தருள வேண்டுமென்று அன்பு மிகுந்து, இகபரத்தாசைகள் ஒன்றுமில்லாமல், அறிவினுக்குள் ளுணர்வாகத் தோன்றுகின்ற பூரணமாகிய சோமசுந்தரச் சோதியினுடைய வெள்ளியம்பலத்துள்ளாடிய திருவடிகளை மனத்துள்ளே தியானித்துக் கொண்டிருந்தனர். பின்பு சூரியன், நாளையத் தினமும் திருவாலவாய்க் கடவுள் தமது அன்பரை ஆண்டு கொண்டருளவேண்டி மண் சுமத்தருளுவாரென்று அதையும் பார்ப்பதற்காக, ஊளையிடுகிற நரிக் குதிரைகளினுடைய தூளிகளாலே மூடுபட்ட உடம்பைக் கழுவிக் கொண்டு திரும்ப வேண்டுகிறவன் போலக் கடலிலே குளித்து மறைந்தான்.

அப்படி அவன் மறையவே, சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலால் வந்த குதிரைக் கூட்டங்களாலே யெழுந்த செந்தூளியினால் அழுக்காய் மழுங்கின; ஆகாயத்தை வெள்ளை நிலாவாகிய வஸ்திரத்தினாலே அந்தத் தூளிகளைத் துடைக்கிறவன்போல், முத்துக்களை எறிகின்ற கடல் முகட்டிலே குளிர்ந்த சந்திரன் உதயமாகிப் பின்னும் நக்ஷத்திரங்களை எழுத்துக்களாக எழுதின ஆகாசமாகிய ஏட்டுக்கு இருளாகிய மைபூசிப் பரிசுத்தம் பொருந்திய வெள்ளைக் கிரணமாகிய வெள்ளை வஸ்திரத்தினாலே துடைக்கிறவன் போலவும் விளங்கினான்' அப்படி இராத்திரியானபின்பு, பாண்டியன் லாயத்திலே புகுந்திருந்த மாயக குதிரைகளெல்லாம், திருவாலவாய்க் கடவுள் திருவிளையாடலாலே, முன்னுள்ள தங்கள் வடிவுகொண்டு ஒன்றோடொன்று பேசிக் கொள்ளுகின்றன. எப்படியென்றால்; சங்கோசையும் பிணப்பறையோசையும், பெண்டுகள் அழுகுரலோசையும், கொங்கைகள் சிவக்க இரண்டு கைகளாலும் மாரடித்துக்கொள்ளும் ஓசையுமல்லோ? நாம்

எவ்விடங்களிலும் காதுகள் குளிர அமுதம்போலே கேட்போம், இப்போது அதைவிட்டு, நாம் குதிரைகளாகி, மனிதர்களைச் சுமந்து, தாம்பு சங்கிலிகளாலே கட்டுண்டு பகலெல்லாம் சவுக்காலடிக்கத் துன்பப்பட்டு வருந்தினும். இப்போதல்லவோ நம்முடைய விதிவலியாலே நம்முடைய முன்னைய வடிவை நாம் கண்டோம். ஆனால், முன்னே நாம் காடுகளிலே வாழுங்காலத்திலே, ஒரு நாளாவது இந்தக் கவலையான துன்பத்தைக் கண்டறிந்திலேம். இப்போது கட்டுண்ட தழும்பும் சவுக்கடித் தழும்பும் உடம்பிலே போகவில்லை. ஆகையால், இனி விடியு முன் ஓடிப்போய் விடுவதே நல்ல காரியம். இவ்விடத்திலே மனந் திருப்தியாக நாம் தின்பதற்கு ஊண்சரிந்து சிந்துகின்ற நொள்ளை நத்தைகளில்லை; நந்துகளுமில்லை; வளைக்குள்ளே புகுந்து மறைகிற கவைக்கால் நண்டுகளுமில்லை; இவர்கள் கொடுக்கிற கடலை - கொள் - பயறு - புல்லுகளாகிய இவைகளை நாம் தின்னத்தகுமோ? இனி, அரசன் ஏவலாளரும், பட்டினத்து ஜனங்களும் நம்மைக்கண்டால் அடித்துக்கொல்லுவார்களே; இனி அவர்களடியாமல் விடியுமுன்னே கட்டுகளை அவிழ்த்துக்கொண்டு காட்டிற்கோடிப் போய்விடுவதே நல்ல உபாயமான காரியமென்று தைரியங்கொண்டு ஊளையிடுகிற குறுநரிக் கூட்டங்கள் ஒன்றுய்க்கூடிப் பேசிக்கொண்டு, கொள் கடலைகளை வெறுத்து, நண்டு நத்தை சங்குகளை விரும்பிச் சங்கிலிக்கட்டுகளை முறித்துக் கால்களிலே கட்டின கயிற்றுடனே முளைகளைப் பிடுங்கிக்கொண்டு ஓடிப்போம் வழி பார்த்து ஊளையிட்டெழுந்து, குதிரைலாயத்திலே முன்னுள்ள குதிரைகள்மேலே பாய்ந்து, பல்லுடைய அழுந்தக்கடித்து மென்று இரத்தத்தைக் குடித்துக் குதிரைகள் முழுதும் பயந்தோடும்படி அவைகளின் பீஜங்களைக் கடித்துக் காயம்பண்ணும்போது, அந்த நரிகளின் ஊளைச் சத்தங்கேட்டு திடுக்கென்று நித்திரைவிட்டெழுந்து, இலாயங்காக்கின்ற காவலாளர்கள், நேற்றுச் சிங்கங்களைப்போல்வந்த குதிரைகளெல்லாம் நரிகளாய் முன்னுள்ள குதிரைகளின் குடல்களைப் பிடுங்கித் தின்பனவற்றைக் கண்டார்கள்.

அப்படி அவர்கள்வந்து கண்டவுடனே சில நரிகள் உறுதியாய் வலிதான இரும்புமுட்கள் நட்டிருக்கின்ற வேலியைத் தாண்டியோடின. சில நரிகள் சாளரங்களின் வழியாகத் தொளைத்துக்கொண்டோடின. சில நரிகள் கோட்டையிற் கள்ளவழியாயோடின. சிலநரிகள் கும்பலுக்குள்ளே நுழைந்தோடின. காலொடிந்த நொண்டி நரிகளும் கிழநரிகளும் ஒரிகளும் குருட்டு நரிகளும் வியாதிகொண்ட நரிகளும் ஓடிப்போக இடங்கள் கிடையாமல் அந்த லாயத்திலே தானே கத்திக்கொண்டு கிடந்தன. அவைகளிலே சிலநரிகள் கிட்டவந்தவர்களையும் அதட்டினவர்களையும் கீழேவிழும்படி கடித்து நடுவே புகுந்தோடின. சிலநரிகள் தடுத்துப்பிடிக்க வருகிறவர்கள் கால்களினடுவே நுழைந்தோடின. சிலநரிகள் அவ்விடத்தில்தானே கிடந்து ஊளையிட்

டழூதன. சிலநரிகள் குட்டிநரிகளைக் கூடக் கூட்டிக்கொண்டு வேலிகள் முறியத் தாண்டின. இப்படிப் பாண்டியன் அரண்மனையைக் கடந்து வெளியேபோன நரிகளெல்லாங் குளங்கள் தோட்டங்கள் வீரர்களின் வீடுகள் கோயில் நாற்சந்திகள் வீதிகள் பட்டணங்களெல்லாம் நெருங்கி மன்றுகளும் சித்திரகூடங்களும் மாடங்களும் செய்குன்றுகளும் தெற்றிகளும் வாசல்களும் நக்ஷத்திரங்களும் கிரகங்களும் சுற்றுகின்ற உயர்வையுடைய சோலைகளும் எந்த இடங்களும் நிறைந்து நரிகள் தங்களினங்களுடனே ஊளையிட்டு அலைந்தன. அப்போது யானைச் சத்தமும் பலவித வாத்தியங்களினுடைய சத்தங்களும் தேர்கள் குதிரைகளின் சத்தங்களும் முத்தமிழ் முழங்குமோசையும் பாணர்கள் பாடுகின்ற பாடலோசையும் நிரம்பின பட்டணங்களெல்லாம் நரிகள் ஊளையிடவே எல்லாரும் விழித்தெழுந்தார்கள். வளர்க்கிற நாய்களெல்லாம் விழித்து நின்றன. மயில்களும் பயந்து விழித்துக்கொண்டன. கோழிகளும்விழித்தெழுந்தன. வண்டுகளும் பயந்தெழுந்தன. அன்னங்களுமெழுந்தன பட்சிகளும் யானைகளும் காகங்களும் விழித்தெழுந்தன.

இவ்வாறாக, நரிகள் சமையல்வீடுகளிலே புகுந்து தங்களுக்கதிக பசியுண்டாகிப் பாண்டங்களையுருட்டிக் காய்ச்சின குழம்பு சமைத்த சோறு பலவிதமான உணவு முதலியவைகளைக் குட்டிகளுக்குங் கொடுத்துத் தாங்களுந் தின்று ஊளையிட்டு, திரிந்து புருக்கள் மயினுக்கள் கிளிகள் சிவந்த கொண்டைத் தலைச்சேவல் முதலியவைகளைப் பிடித்தும் தூங்குகின்ற பிள்ளைகளைக் கொண்டுபோய் அதன்வாயையும் பல்லையும் நக்கிக் காயம்பண்ணுமல் தங்களுக்குறவுபோல விளையாடியும் வாசல்களிலே பந்தரிட்டுப் படர்ந்த கொடிகளை வேரோடு பிடுங்கியும் அதன் காய்களைக் கடித்தும் கரும்புகளைச் சாறுழுக முறித்தும் வாயிலிட்டுக்குதட்டியும் வண்டுகள் வாயிலேமொய்க்க ஊளையிட்டுத் துள்ளிக்குதித்தும் திரிந்தும், பலவாகி முறுக்கான கொம்புகளையுடைய ஆடுகளாயிரம், இருப்புபோற்கெட்டியான பன்றிகள் ஆயிரம் முருக்க மலர்களைப்போல் உச்சிக்கொண்டையையுடைய கோழிகளாயிரம், அதன் குஞ்சுக ளாயிரமாகக்கொன்று பின்னே தொடர்ந்து நாய்கள் குலைக்கக் குலைக்க ஓடி முன்னே கண்ட வுயிர்களைக் கொன்று கோபங்கொண்டு வீரர்கள்போய் வலிந்தெதிர்த்தால் அவர்களைச் சீறி இரத்தமொழுகக் கடிப்பன அநேகங்களாகப் பன்றிகள் கத்துகிற சத்தங்களும் பலபுள்ளிகளும் முள்ளுப்போன்ற வாய்களையுமுடைய கோழிகளின் சத்தங்களும், ஆடுகளின் சத்தங்களும், நாய் குலைக்கிற சத்தங்களும், வீரர்கள் சத்தங்களும்கூடி ஊளையிடுகிற நரிகளின் குரலுக்குச் சமானமாயின. ஒரு பக்கத்திலே இப்படியாகப் பொழுது விடிந்தவுடனே பட்டணங்களெல்லாங் கண்விழித்தெழக் கோட்டைவாசல்களைக் காக்கிறவர்கள் வாயிற்கதவைத் திறக்குமளவில் தடையில்லாமல் எங்குங்கூடின நரிகளெல்லாம் கணப்பொழுதிலே இருள் சிதர்ந்தோடினாற்போல் காட்டுக்கோடிப் போயின.

அப்போது அழிவில்லாத சிவபரஞ்சோதிபோலச் சூரியன் கிரணங்கள் வீசுமளவில் தெளிந்த சாத்துவிக குணமுடையவர்கள் முன்னே தாமதகுண தேவதைகள் நில்லாமற்போவது போல நக்ஷத்திரங்க ளொளிமழுங்கி மறையத் தேவர்களுக்குங் கிட்டாத வேதப்பொருளான கடவுள். அழுது தொழுகின்றவராகிய வாதவூரடிகளுக்காக எளியராய் மண்சுமந்தருளுகின்ற வருத்தத்தைக்கண்டு அவர் பாதங்களை வருடுவதற்காகவே ஆயிரங் கிரணங்களாகிய கைகளுடனே சூரியன் கீழ்த் திசையிலே உதயமாகவும், நேற்றையதினம் பாண்டியனுக்குக் குதிரைகள் செலுத்தித் தமது கவலை தீர்ந்து, சிவத்தைத் தியானித்திருக்கிற வாதவூரடிகள் மனம்போல் தாமரைகள் மலர்ந்தன. ஒப்பில்லாத பரம்பொருளைத் தெரிந்து பேச்சடங்கின. மௌனிகள்போலக் குமுதங்கள் வாயொடுங்கின. அப்போது இலாயக்காரர்கள் எப்படிப் போயிதை அரசனுக்குச் சொல்லுவோமென்று பயந்து விரைந்தெழுந்து சென்று பாண்டியன் அரசாட்சி செய்கின்ற சபையிலே அவனைக் கண்டு கும்பிட்டு உடல்நடுங்கி, ஐயா. நேற்று காற்றினும் அதிக வேகமாய் கண்ணுக்கழகாய் வந்த குதிரைகளெல்லாம் முன்னிருந்த குதிரைகளுக்கு நமன்போலாகிக் கடித்துக் கொன்று பட்டணமெல்லாங் கும்புகூடிப் பலவுயிர்களையும் வதைத்துக் காட்டுக் கோடிப் போயினவென்று சொன்னார்கள். அப்படிச் சொன்ன மனத்துக்குப் பொருந்தாத இந்தச் சொல்லாகிய கடுங்காற்றானது அவன் காதாகிய துருத்துவழியே போய்க் கோபாக்கினியை மூட்டிவிடக் கண்களிலே நெருப்புப்பொறி சிந்தச் சிவந்து அரிமருத்தன பாண்டியன் கோபத்தைக் கண்டு அங்குள்ள மந்திரிகளும் பயந்தொதுங்கினார்கள்.

பின்பு பாண்டியன், நேற்றுக் குதிரைகளைக் கண்டு, அமுதமுண்டவன்போலச் சந்தோஷக்கடலிலே முழுகி இன்று அந்தக் குதிரைகளெல்லாம் நரிகளா யோடிப் போயின வென்றவுடனே துன்பக் கடலிலே முழுகி அருகிலிருந்த மந்திரிகளைப் பார்த்துக் கண்டீர்களோ இந்த வாதவூரனாகிய கொடிய இருள்போலும் மனவஞ்சகன், நம்முடைய பொருள்களெல்லாங் கொண்டுபோய்க் காட்டிலே திரிந்து மாமிசத்தையும் நிணத்தையும் குடலையும் பிடுங்கித் தின்கிற நரிகளையெல்லாம் குதிரைகளாக்கிக் கொண்டுவந்து காட்டினான். இவன் பண்ணின மாயங்களுக்கு இவனை என்ன செய்வது என்று கேட்க, அதற்கு மந்திரிகள், ஐயா! எங்களுக்கெல்லாம் கொடியபழி பாவங்களுண்டாகத் தவறு செய்து உம்முடைய செய்நன்றியை மறந்தவனுக்கு நாங்கள் சொல்லக்கடவது என்ன விருக்கிறதென்று சும்மா தங்கள் தலையையும் அசையாமல் பேசாமலிருந்தார்கள். அந்த வேளையில் வாதவூரடிகள் இங்கே நடந்ததொன்றுந் தெரியாமல் பாண்டியனுக்குக் குதிரைகள் செலுத்தவேண்டிய காரியத்தை நன்றாக முடித்து மனக்கவலை தீர்ந்தோமென்று காளகண்டராகிய சோமசுந்தரக்

கடவுளைத் தியானித்து அறிவு மயமாகிய பேரின்பக்கடலில் முழுகின வராய் அரசன் சபைக்கு வந்தார். அப்படி வந்த வாதவூரரைச் சிவந்த கண்களிலே நெருப்புப்பொறி சிந்தக் கடுகடுத்துப் பார்த்துப் பாண்டியன் ஒய் வாதவூரரே! நீர் என்னுடைய பொருள்களெல்லாங் கொண்டுபோய் நல்லகுதிரைகள் வாங்கிவந்தீர். உமக்கே அழகாயிருக் கின்றதல்லவா? இராஜகாரியஞ் செய்து கீர்த்தியை நிலைநிறுத்தத் தக்கவர்களில் உம்மைப்போல் யாவர் இருக்கிறார்களென்று கோபித் துச் சீறும்போது, வாதவூரர் ஐயா! அந்தக் குதிரைகளுக்குக் குற்ற மென்னவென்று கேட்டார். அதற்குப் பாண்டியன் குற்றமேது அந்தக் குதிரைகள் இராத்திரி நரிகளாகி முன்னுள்ள குதிரைகளி னுடைய வுயிர்களை வாங்கி இரத்தமொழுக நிணங்கள் சிதறக் குடர் களைப் பிடுங்கித் தின்று முன்னே வந்தவர்களையும் கடித்துக் காயங்கள் பண்ணிக் காட்டுக்கு ஓடிப் போயின. நீ முன்னே எனக்குக் கண்ணுங் கவசமும்போல் என் காரியங்கள் செய்து வந்தது, சமயம் பார்த்து என் பொருள்களையெல்லாம் அபகரித்துக் கொள்ளுகிற தற்கோ? உன் மந்திரித்தனம் நன்றாயிருக்கின்றது; ஐயோ! பிரா மணர் குலத்தில் பிறந்து பரிசுத்தரென்று ஒரு பேருங் கொண்டீரே; நீர் பண்ணின காரியத்துக்கு வேறொரு சாதியானால் அதிகமாகத் தண் டிக்கப்படுவார்களே யென்று சினங்கொண்டு தண்டிக்கிற சேவகர் களைக் கூவி நீங்கள் இவரைக் கொண்டுபோய்த் தடுத்து மறித்து வாதை செய்து உபத்திரவத்தினாலே பயந்து கொடுக்க என் பொருள் முழுதும் வாங்குங்களென்று சொல்ல, அப்போது யமனாலும் தண்டித்துப் பொருள் வாங்கவல்ல வீரர்கள் சூரியனை யிருள் மறைத்தது போலக் கவிந்து வாதவூரடிகளைப் பிடித்துக்கொண்டுபோய் அடி கொதிக் கின்ற கொடிய வெயிலில் நிறுத்திச் சூரியனைப் பார்க்கச் சொல்லி இரண்டு கைகளிலும் நெற்றியிலும் கல்லேற்றித் தங்கள் கண்களிலே நெருப்புப்பொறி சிந்தத் தண்டிக்க அது பொறுக்க மாட்டாதவராய்ச் சூரியனையும் சந்திரனையும் அக்கினியையும் கண்களாகக்கொண்ட சோமசுந்தரக் கடவுளை நினைத்தழுது,

கொச்சகக் கலிப்பா

நாதவோ நாத முடிவிறந்த நாடகஞ்செய்
பாதவோ பாதகனை யென்னைப் பணிகொண்ட
வேதமோ வேத முடிவின் விளைந்த தனிப்
போதவோ போத நெறிகடந்த பூரணவோ.

ஐயவோ வென்னுடைய வன்பவோ வன்பர்க்கு
மெய்யவோ மெய்யில் வினையேன் றலைவைத்த
கையவோ செய்யமுகற் காலவோ காலனைக்காய்
செய்யவோ வேதப் பரியேறுஞ் சேவகவோ.

அத்தவோ கல்லாக் கடையேனை யாட்கொண்ட
பித்தவோ பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ்
சித்தவோ சித்தந் தெளிவித் தெனைத்தந்த
முத்தவோ மோன மயமான மூர்த்தியவோ:

என்று, இவ்விதமாக உயர்ந்த புகழையுடைய வாதவூரடிகள் துதிக்குங் குரல் சோமசுந்தரக் கடவுள் காதிலே போய்ப் புகுந்தவுடனே கடவுள் இனி வாதவூரடிகள் சிதம்பரத்துக்குப் போகவும், தம்முடைய தலை மேல் மண்சுமை யேறவும், பிட்டு விற்கிற கிழவி விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு சுவர்க்கலோகம் போகவும் எண்ணினவராய், கங்கா நீர் வடிவாகிய வைகையாற்றைப் பார்த்து நீ கடையுகத்தில் வரும்கடல் போலக் கண்டோரெல்லா மதிசயமடையப் பெருகிவரக் கடவை யென்ன, அப்படி தும்பைச் சடைமுடிக் கடவுள் ஒருசொல் சொல்லு முன்னே சங்குகளாகிய வளையலும் கருமணலாகிய கூந்தலும் உடைய பெண்வடிவான வைகையாருனது முற்காலத்தில் கச்சை நெருக்கி விம்முகின்ற தனங்களாலும் வரி வளையலாலும் தழும்புண்டாக அணைத்த பார்வதி தேவியாரின் தவங்குலைக்கும் பொருட்டு மிகுந்த கோபங்கொண்டு வந்த கம்பாநதிபோல வேகங்கொண்டு கரைக ளுடையவும் அங்குள்ள கமுகவிருக்ஷங்கள் குலைமுறிந்து பழங்கள் சிந்த வும் மோதி, விளைநிலங்களை அழித்தும் முத்துகளை வீசிக்கொண்டு வாழைத் தோட்டங்களை அடியோடு கீழே சாய்த்தும் விளைந்த நெற் களைப் பறித்துப் பல விருட்சங்களையும் வேரோடு பிடுங்கி வாரிக்கொண் டும் கடுகி அநேகமாயிரந் தாமரைகளைப் பரப்பிக்கொண்டும் இந்திரன் போலவும், செங்கழுநீர் முல்லை கரும்புகளைக் கொண்டு மன்மதன் போலவும், மணிகளையும், மலர்களையும் சிந்திக் காஞ்சியும், சங்கமு மொலிக்க, இரு பக்கங்களிலே வீசி முகமாகிய தாமரையிலே கண்ணீ ரொழுகப் பிணங்கின பெண்போல, மலைத்தேன் முதலியவைகளும் முல்லைநிலத்திலுள்ள நெய்-தயிர்-பால்களும்-மருதநிலத்துள்ள கரும்புங் கருப்பஞ்சாறுகளையும் வாரிக்கொண்டு மதுரைக்குள்ளிருக்கிற எழு கடலைக் காண வருகிறதைப் போலப் பெருகிக் கோட்டை வாசலுக் குள்ளே நுழைந்து சிறு வீடுகளை யெல்லாம் கீழே இடித்துத் தள்ளிக் கப்பல் தோணிபோல மிதக்க மதிலையும் இடித்துத் தள்ளிக்கொண்டு வீதிகளும், பல பொருள்களும் விற்கிற கடை வீதிகளும், மன்றங்களும் யானை-குதிரை-தேர்கள் செல்லுகிற வீதிகளும், பெருகிய அலைமோதி வெள்ளம் வருகிறதைக்கண்டு பட்டணத்து ஜனங்களெல்லாம் பயந்து பிள்ளைகளை எடுத்துக்கொண் டோடுகிறவர்களும் பிள்ளைகளைக் காணு மல் தேடி யழுகிறவர்களும், பெண்கள் கைகளைப் பற்றிக் கூட்டிக் கொண்டோடுகிறவர்களும், எங்கே போய் நிற்போமென்று தடுமாறி மயங்குகிறவர்களும், பொருள்கள் ஆபரணங்கள் முதலானவைகளை யெடுக்க நேரமில்லாமல் ஓடுகிறவர்களும், சில பொருள்களைக்கொண்டு சில பொருள்களை எடுக்க மற்றவர்களும் உயர்ந்து நீண்ட மாளிகை களின்மேல் ஏறுகிறவர்களும் ஆக இப்படி எல்லாரும் கலங்கி இந்த

மதுரைக்கு இப்படிப்பட்ட துன்பம் வருவதற்குக் காரணமென்ன வென்றாலோசிக்கிறவர்களாய் என்னே நேற்றுக் குதிரைகளெல்லாம் நரிகளாகி எங்கும் மிகுந்த வாதைப்படுத்தின. இன்று இப்படி வந்த வெள்ளப்பெருக்கம் முன் கடல்பெருகி வந்தாற்போல் வந்தது என்றனர். ஏதேனும் நம்முடைய பாண்டியராலே குற்றமுண்டோ அல்லது கடவுள் திருவிளையாடலோ அந்தக்கடவுளையல்லாமல் இந்த வெள்ளத்தைத் தடுக்க ஆயிரங் குண்டோதரர்கள் ஒன்றாய்க் கூடிவந்து குடித்தாலும் அடங்குமோ? ஆயிரமுகக் கங்கையஞ்சடைக் கடவுள் தமது சடையில் இடங்கொடுத்தாலும் இந்த வெள்ளத்தின் கோபம் அடங்குமோ என்று ஆகாசகங்கை ஆயிரமுகங்கொண்டு பெருகி வருவதைப் போல வருகிற வெள்ளம் அடங்காமை கண்டு வாதவூரரைத் தண்டிக்கிற வீரர்களும் பயந்து தங்கள் வீட்டிலுள்ள பொருள்களைப் பத்திரஞ் செய்யவேண்டி இவரை விட்டுவிட்டுப் போய்விட வாதவூரடிகள் மதுரேசர் திருக்கோயிலுக்குள் போய் அமுதிசைபாடுந் தொண்டிலசப் படும் திருவடிகளைப் போற்றித் தொழுது சேவித்து அறிவ மயமாய்ப் பேரானந்தக்கடலில் முழுகி எழுதின சித்திரம்போல அசையாமல் அங்கே எழுந்தருளி யிருந்தனர்.

பரிநரியாக்கிய படலம் முற்றிற்று.

---

அறுபத்தொராவது

## மண் சுமந்த படலம்

---

எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

*பண்சு மந்தமறை நாட ரும்பொருள் பதஞ்சு மந்தமுடி யார்மனம்*
*புண்சு மந்ததுயர் தீர வந்தபரி நரிக ளாயடவி போனபின்*
*விண்சு மந்தகர நதியெ னப்பெருகு வித்த வைகையிது விடையவன்*
*மண்சு மந்துதிரு மேனி மேலடி வடுச்சு மந்தகதை யோதுவாம்.*

**உரை :** உதாத்த முதலிய சுரபேதங்களைக் கொண்ட வேதங்களால் ஆய்ந்தறியக்கூடாத பரம்பொருளாகிய சோமசுந்தரக்கடவுள், தமது திருவடிகளைச் சிரசிலே தாங்கிய அன்பராகிய மாணிக்கவாசக சுவாமிகளுடைய மனத்திற் புண்ணுண்டாக நேர்ந்த துன்பமானது நீங்க, முன்னே கொண்டுவந்த குதிரைகள் பழையபடி நரிகளாகக் காட்டுக்குப் போய்விட்ட பின்பு ஆகாய கங்கையைப்போல வைகையைப் பெருகும்படிச் செய்த திருவிளையாடலிதுவாகும். இனி, விடைமேலழகராகிய சோமசுந்தரக் கடவுள் அந்த வைகையை யடைக்கும்பொருட்டு மண்சுமந்து அந்த மண்சுமந்த திருமேனிமீது பாண்டியனடித்த பிரம்படித் தழும்பையுந் தாங்கிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்,

ஆகாயமுகட்டை யளாவி யோடிவருகின்ற வைகையாற்று வெள்ளத்தில் மதுரையானது கருங்கடற் சுழலுக்குள்ளே கிடந்தலைகின்ற கப்பலைப்போலச் சுழன்று கலங்கப் பாண்டியன் கண்டு மந்திரிகளை யெல்லாம் கூப்பிட்டு நீங்கள்போய்க் கரையைக் கட்டி யொதுக்கிப் பெருகிவருகிற வெள்ளத்தின் வேகத்தை யடக்குங்களென்று உத்தரவு செய்ய உடனே மந்திரிகள் வணங்கிக்கொண்டு போய்த் தனித் தனியே குடிகளுக்கெல்லாம் பெயர் கண்டெழுதி இன்னார் இவ்வளவு கரை இன்னாரிவ்வளவு கரை கட்டவேண்டுமென்று கோல்போட்டளந்து அடையாளஞ்செய்து பங்குபிரித்துவிட்டு மதுரைப் பட்டணமெல்லாம் பறையடித்துக் கூவிச்சொல்லி அவர்கள் விடுகிற ஆள்களையெல்லாம் கும்புகூட்டிவிட்டு அவரவர்க்கு அளந்துவிட்டபடி வேலைசெய்து கரை கட்டுங்க ளென்றவுடனே மண்வெட்டி கூடையாள்கள் சிலர், மரங்களெடுத்து வருகிறவர்கள் சிலர், தழைகள் வைக்கோல்கள் இவைகளைக்கொண்டுவந்து ஆகாயத்தையளாவும்படி குவிக்கிறவர்கள்சிலர், தச்சர் கொத்தர்கள் சிலர் ஆக இப்படிக் கடலிலே நீர்முகக்க வருகிற மேகங்கள்போல ஆற்றங்கரையிலே வந்துகூடி நெருங்கி நின்று குதிரை மரங்கள் நிறுத்தி வைக்கோலாலே பாம்புபோலும் நீளமாகப் புரிகள் திரட்டி முறுக்கி அடியிலே அழுந்தக்கிடத்தி அதன்மேலே தழைகளையும் வைக்கோற்கட்டுகளையும் போட்டுநிரப்பிக் கூச்சலிட்டுப் பறைகள் முழக்கி மணல்வெட்டி, கூடைகள் தட்டுகளிலே நிரப்பி எடுத்துவிடுகிறவர்களும், அவைகளை எடுத்துக்கொண்டு விரைவிலே போக அதட்டுகின்றவர்களும், திடீரென்று உடைப்பிலே கொண்டு வந்து கொட்டுகிறவர்களும், அந்த மணலாலே கரை பரப்புகிறவர்களும், கரையெழுந்தவுடனே சந்தோஷித்துக் குரவை குழறுகிறவர்களும், கரைகட்டுகிறவர்களும், வெள்ளம்வந்து உடைத்துக்கொண்டு போக மனம் கலங்குகிறவர்களும், வைகைநதியைப் பார்த்து எங்கள் தாயே ஏனிவ்வளவு கோபம் தணிந்தருள் வேண்டுமென்று வேண்டுகிறவர்களும் மணல் கொட்டும்போது உடைப்படங்கி யடையக்கண்டு மகிழ்வடைகிறவர்களும் குரவையாடிக் குதிக்கிறவர்களும், எட்டுத் திசைகளுங் கேட்க முழங்கிப் பறைகளடிக்கிறவர்களுமாக இப்படி ஊரிலுள்ளவர்க ளெல்லோருக்குங் கூலியாள்கள் வந்து முன்னே அளந்துவிட்ட எல்லைகளிலே நின்று வேலைகள் தனித்தனியே செய்து கரைகட்ட, அப்போது அந்த மதுரைக்குத் தென்கீழ்த் திசையி லிருக்கிற ஒரு நரைத்த கிழவியாய் வெகுகாலங் கண்டவள், தாயிலார்க்குத் தாயையொப்பவள், அவள் பேர் வந்தி; அவள் தினம்தினம் சுடுகிற பிட்டுகளை யெல்லாம் இறைவனுக்கு வேள்வியி னவியையூட்டும் வேதியரைப்போல நான்கு தோள்களும் மூன்று கண்களும் கொண்டருளிய கடவுளாகிய திருவாலவாயி லமர்ந்த ஆனந்ததேவனுக்கு மனத்தால் நிவேதனம் செய்துப் பின்பு விற்கிறவள்,

அப்படித் தினந்தோறும் பிட்டுவிற்றுச் சீவனஞ் செய்கிற வந்தி யென்னும் கூனற் கிழவி பங்குக்கு அளந்துவிட்ட கரை யடைப்பதற்குக் கூலியாள் கிடையாமல் மிகவுந் துன்பப்பட்டு இனி யெப்படிப் பாண்டியன் தண்டித்தாலு மென்னசெய்வேனென்று மனந்தடுமாறிக் கூடல்நாயகராகிய சோமசுந்தரக் கடவுளை எள்ளளவாயினும துன்ப மென்பது தெரியாமல் சூரியன் எங்கே உதயமாகிறு னென்று நினையாம லிருந்த வெனக்கு இன்று பாண்டியன் உத்திரவினாலே துன்பம் வந்து நேரிட்டது. ஐயோ எனக்குத் துணையுமில்லை, மக்களுமில்லை, தமரு மில்லை, பந்துஜனப் பெருக்கமுமில்லை, ஆபத்து வேலைக்குதவத்தக்க அயலாருமில்லை. இந்தச் சமயத்தில் பற்றுக்கோடுபோ லுதவுவாரு மில்லாமல் துன்பத்திலே முழுகிவருந்திப் புலம்புகின்ற பாவியேனுகிய எனக்காக வொப்புச்சொல்லி வேலை செய்கிற ஆளுமில்லாமல் இப் படிப்பட்ட துன்பத்திலே நான் வருந்துவது உமக்குத் தருமமோ? தேவர்களுக்கும் அருமையான தெய்வமே! அடியார்க்கெளியரான கடவுளே! அரசனுடைய ஆக்கினையினாலே இராஜநீதிப்படி என்னைத் தண்டிக்குமுன்னே எனக்குப் பதிலாகப்போய்க் கூலியாளாய் வேலை செய்கிறவர்களொருவரையுங் கண்டிலேன். இனி மிகவும் ஏழையான நான் என்ன செய்வேன் என்று மிகுதியாகத் துக்கித்து ஆரேனும் கூலியாளாக வருவாருண்டோவென்று தன் மார்பின் மேலே மழைத்தாரைபோற் கண்ணீரொழுகச் சோர்ந்தழும்போது முன்ளே தம்மைக் குறித்து நிவேதனஞ் செய்கிற பிட்டையெல்லாம் ரஹஸ்யமாக வுண்டவர் இப்போ துலகமெல்லாங் காண அந்தப் பிட்டையுண்டு அவள் துன்பந் தீர்ப்பதற்குப் பார்வதி பாகத்தை மறைத்துக் கிருபா சொரூபியாய் முன்னே குண்டோதரன் தாகந் தீர்த்து வைகை யாருகப் பெருகின கங்காதேவியைப் பிரியமாட்டாத பேரன்பினாலே அவளைக் காணுதற்கு மீனாட்சியம்மையை வஞ்சித்து வடிவுமாறி வெளியே எழுந்தருளி வருகிறவர்போல வருகின்ற ஞானமே வடிவானவர், அழுக்குப்பிடித்த ஒரு பழந்துணியை இடுப்பிலே தரித்துக்கொண்டு சிறந்த அடியார் திருக்கூட்டங்கள் சாத்துகின்ற இண்டைமலர் மாலைபோலும் சும்மாட்டின்மேலே கூடையைக் கவிழ்த்து ஒப்பில்லாத ஒரு திருத்தோளின் மேலேமண்வெட்டியை மாட்டிக்கொண்டு திடசித்தரான முனிவர்கள் செய்தூட்டுகின்ற வேள்வி யமுதம், இடப்புறத்திலிருக்கின்ற தேவி சமைத்தூட்டுகின்ற அமுதும், நன்ருக உண்டும் அடங்காத பசியுடையராய்த் தாய் முலைப்பாலருந்த ஆசைகொண்டெழுகின்ற பசும்பிள்ளையைப்போல் புறப்பட்டு வேத முடியிலே படுகின்ற பாத தாமரை பூமியிலே பட நடந்து யாராயினும் கூலிக்கு வேலை கொள்வாருண்டோ வென்று வேதஒலிபோன்ற வாய்மொழிகள் சொல்லி அழுதகண்ணீருடனே துன்பக்கடலிலே முழுகிச் சோர்கிற பிட்டுவாணிச்சி யம்மையாரிருக்கின்ற தெருவுக்கு வரும்போது தாய்போலும் பரிவுடனே தந்தை தாய் முதலான ஒருவரு மில்லாத அநாதியாய் வருகின்ற கூலியாள் கூப்பிட்டுச் சொல்லிக்

கொண்டு வருகிற குரலைக்கேட்டு வந்தியென்பவள் மனத்திலுள்ள துன்பந்தீர்ந்து மலடிக்கு ஒரு நன்மகப்பேறு கிடைத்தாற்போலும் பெருமகிழ்வுகொண்டு வெளியேவந்து தாய்போலுந் தண்ணளி ததும்பித் தன்னிடத்தே வருகிற கூலியாளைக் கூப்பிட்டு, அப்பா! நீ எனக்கு அளந்துவிட்ட கரையை அடைத்துத் தருவையோவென்று கேட்க, அதற்குக் கூலியாளாக வந்த கூன்பிறைக் கடவுள், தாயே நான் போய் அடைக்கிறேன். அதற்கு கூலி என்ன கொடுக்கிறு யென்ன, கிழவி பிட்டுத் தருகிறேனென்று சொல்ல, கூலியாள் அதற்குச் சம்மதித்துத் தாயே! நானிப்போது அதிக பசியுள்ளவனாக இருக்கிறதினாலே உதிர்ந்த பிட்டெல்லாம் இப்போதுண்ணக் கொடுத்தால் அவற்றை உண்டிளைப்பாறின பின்பு போய் உன் பங்குக்குள்ள கரையை அடைத்து வருகிறேனென்றார் வேதங்களின் கரையைக் கடந்தவர்.

உடனே கிழவியுஞ் சம்மதித்துக் குழாய்க்குள்ளடைத்திருந்த சிக்கை உடைத்து உதிர்ந்த பிட்டுகளையெல்லாம் அள்ளிக்கொண்டு வந்து அப்பா தம்பி! இதையெல்லாம் சாப்பிடென்று கொடுத்தனள். அப்போது கூலியாளானவர் தமது இடுப்பிலே தரித்திருந்த பழந் துணியை அவிழ்த்து ஒரு புறத்து முன்தானையை விரித்துவாங்கி நன்றாயிருக்கிறதென்று அவளன்புடனே கூட்டி அமுதுசெய்து தாயே இந்தப் பிட்டுத் தாய் முலைப்பாலினும் நன்மையுள்ளதாக இருக்கின்றது. ஆகையால் இது அந்தத் (தென்னவனா யுலகாண்ட திருவாலவாயுடைய மன்னர்பிரரன் றனக்கேயாமென்றென்று வாய் மலர்ந்து) தீவாய் நஞ்சுண்ட கடவுள் தலையை அடிக்கடி அசைத்துக் கொண்டு அமுது செய்தருளி அம்மே! நீ தகப்பனுந் தாயுமில்லாமல் அநாதியாய்வந்த எனக்கொரு தாயாய்த் தயவுசெய்து தீராத இளைப்பைத் தீர்த்தாயே; இனி வேலைசெய்கிற இடத்துக்குப் போய் உன் மனது சந்தோஷிக்கும்படி வேலைசெய்யப் போகிறேனென்று சொல்லிக் கொண்டெழுந்து ஆனைக் கொம்பையு முறித்துக் கொண்டு வருகிற வைகையாற்றங் கரைக்கு வந்து நான் வந்தி யென்பவளுக்குக் கூலியாளென்று கணக்கிலே பதியவைத்து மனத்தாலும் வாக்காலும் வேதங்களாலும் அளவிட்டுரைக்கப்படாத சந்திரசேகரக் கடவுள் கரையடைக்கத் தொடங்கி முன்னேமண்ணைவெட்டி அந்த மண்ணைத் தலைமே லெடுத்துவைத்து அதிக கனமாயிருக்கிறதென்று கீழே முழுதும் விழக் கொட்டிவிட்டுப் பின்பு குறையவாரி எடுத்துக் கொண்டு போய்ச் சும்மாடுங் கீழேவிழ இறக்கிக் கொட்டித் தட்டிமறுபடியும் சும்மாடானது தலையிலே படியக்கட்டிக்கொண்டு முன்போலவே மண்ணை வெட்டி வாரிக்கொண்டுபோய்க் கரையாகக் கொட்டினர். இப்படியாக இவர் ஒருதரம் இரண்டுதரம் மண் சுமந்திளைத்துக் கைகளிலும் தலையிலும் வடுவாகி யழுந்த நீலவண்ணனாகிய விஷ்ணுவினாலுந் தேடிக் கண்டறியப்படாத பாதங்களிலே சிவந்து நீர் சுரக்க நடந்து ஒரு

தழைத்த மரத்தின் நிழலுக்குப்போய் மலைமகளான பார்வதியும் நீர் மகளான கங்கையுமறியாமல் பூமிதேவி தொட்டு மகிழும்படி வெறு நிலத்திலே தமது திருமேனியைக் கிடத்திச் சந்திரனை முடித்திருக்கிற திருமுடியைக் கூடையைக் கவிழ்த்து அதன்மேலே வைத்துக்கொண்டு சிவந்த மேருமலைபோலுந் திருமேனியையுடைய இறைவன் தனது அருள் வடிவை நினைந்து சற்றுநேரம் தூங்கி அந்த மரமே கல்லால விருக்ஷமாகவும், அலைகள் வீசிக்கொண்டு வருகிற வெள்ளத்தை யடைக்க வந்தவர்களெல்லாம் சனகாதி முழுதுணர்ந்த மெய்ஞ்ஞானிக ளாகக் கண்டுகளிக்க மெய்யுணர்ச்சியாகிய மோனமயச் சுத்தவுரு வைத் தெளிவிக்கிறவர்போலத் தெளிந்தெழுந்து, ஆடியும், சாமவேதம் போலத் தித்திக்கின்ற அமுதரசமான பாடல்கள் பாடியும், சிரித்தும், இவற்றை யாராகிலும் பார்த்தால் உடனே மிகவும் பயந்தவர்போல வேலை செய்தும், வேலை வாங்குகிறவர்கள் பராமுகமாயுலை அந்தக் கட்டுக்கரையிலுள்ள மணலைக் குவித்து அதன் மேலே குதித்துத் தூளெழும்பக் காலாலே பாய்ந்து ஓடியும், திரும்பிவந்தும் உன்மத்தங் கொண்டவர் போலப் பேசாமல் உட்கார்ந்திருந்து வேலை மிகவுஞ்செய் திளைத்து வருந்தினவரைப்போலே உடம்பெல்லாம் வேர்வையொழுகப் பெருமூச்சுவிட்டு வாயாலூதி காற்றுவரச் செய்துகொண்டு மிகவும் பசித்தவர்போலே தளர்ந்து அடியாளிடும் பிட்டின்மேலே நினைவு கொண்டு வந்தி வீட்டைக் குறித்துத் திரும்பி வந்து துன்பவெள் ளத்தை நீந்திக் கரையேறி இன்ப வெள்ளத்திலே முழுகி யிருக்கின்ற கொடும்புற முதியாளான கூனற்கிழவியைக் கண்டு, அம்மே! அளந்து விட்ட கோலளவுக் கதிகமாகவே விசாலமாகக் கரை கட்டப்பட்டு வரு கின்றது நான் மிகப் பசித்து வந்தேன், தாயே சீக்கிரம் பிட்டிடு நான் வேலை செய்யப் போகவேண்டுமென்ன, உடனே வந்தியும் அப்போது சுட்ட பிட்டைக் கொடுக்க, கூலியாளான கடவுள் இரண்டு கைகளையு மேந்தி வாங்கிக் கையுஞ்சுட வாயுஞ்சுட வாயிலே கொட்டிக்கொண்டு இரண்டு தாடைகளையும் பிடித்தொற்றிக்கொண்டு பதமாக்கி நீரைக் குடித்துத் தாம் கொண்டிருந்த பசி தீர்ந்து முன்போலவே கரை யடைக்க வந்து பிட்டை வாய் நிரம்பத் தின்று பலங்கொண்டவராக மண்ணை வெட்டி யெடுத்துக்கொண்டுபோய் வேற்றுப்பங்கிலே கொட்டி உடைப்படையக் கண்டு கெர்ச்சித்து தமது வலிய தோள்களைக் கொட் டிப் பக்கத்தி னிற்கின்றவர்களைத் தழுவி மிகவுஞ் சந்தோஷித்துப்பின்பு வெட்டியெடுத்த மண்ணைக் கூடையோடே தடுக்கி விழுந்து வழுக்கி ஆற்றுவெள்ளத்தோடே போய் நீந்திக்கொண்டு கூடையோடே வந்து கரைமேலேறிக் கூடையைக் கீழே அடித்தடித்து ஈரம் போகச் செய்து அந்தக் கூடையில் அவிழ்ந்த கட்டைப் பிரித்துக் கட்டிக்கொண்டு போய் மண்ணை வெட்டி ஒருகொட்டுமண்ணை எடுத்துக்கொண்டுபோய் கரையிலே கொட்டி ஒட்டின மண் போகக் கூடையை உடைப்பிலே விழும்படி தட்டி அது தவறிப்போக வெள்ளத்திலே விட்டுவிட்டு மறு படியும் அவற்றை எடுக்கிறவர் போலத் தாவி வெள்ளத்திலே விழுந்து

அலையிலே யோடவிட்டுத் தாமொரு மரத்தைத் தெப்பமாகப் பிடித்து மிதந்து பின்பு கெட்டிப்பட்ட கரையிலேவந்து மோதி மறுபடியுஞ் சுழியிலே சுழன்று அமுந்தித் தூரத்திலே போய்த் தலைதூக்கி யெழுந்து திரும்பிக் கரையேறி வந்து கைப்பிடியை விட்டுக் கொட்டுக் கழலச் செய்து மறுபடியும் அதிலே கோத்து ஆப்பு வைத்திறுக்கித் தட்டிக் கெட்டி செய்துக்கொண்டு பெருமூச்சுவிட்டுத் தளர்ந்து நின்று இளைப்பாறி இடையிலே தரித்த கச்சிலிருந்த பிட்டை அள்ளித்தின்று யாரும் வேலை செய்யாதபடி சிலருக்கு அந்தப் பிட்டை அள்ளிக்கொடுத்தும் வேலை செய்யவில்லையென்று மாறுகொண்டோங்கி அடிக்க வந்தவரைப் பார்த்து இரண்டு கைகளாலும் அந்த அடியைத் தாங்கிக் கொண்டு சிரித்தும், இப்படியாக இகபரத்தாசையும் மண்ணாசை பெண்ணாசை பொருளாசையும் அற்றுத் தம்மையும் விட்டுத் தத்துவந் தெரிந்த யோகிகள் ஞானக்கண்ணாலே யல்லது காணக்கூடாத பரஞ்சோதியான சோமசுந்தரக்கடவுள் உலகத்தார் ஊனக்கண் கொண்டும் பார்க்க அவர்களுடனே கூடி முன்னே தமதருளினாலே உலகங்களை யெல்லாம் சிருஷ்டித்தும் ரட்சித்தும் அழித்தும் இப்படிப் பெரிய விளையாடல் செய்கின்ற சந்திரசேகரக் கடவுள் இப்போதும் ஒரு கூலியாளாகித் திருவிளையாடல் செய்யும்போது அங்கே ஆளோட்டுகிற மாறுகோல் கைக்கொண்ட வீரர்கள் கூடவே நின்று வேலை வாங்குகிறவர்களாசையாலே அடை கரை பார்க்க வந்து அதிவேகமான நெடிய அலைகளோதுங்கி வெள்ளம் போகும்படி அவரவர்கள் தங்கள் தங்களுக் களந்துவிட்ட பங்குகளெல்லாம் மலைபோலக் கரைகளிட்டு வருவதை கரைமேல் வந்தவர்கள் ஒவ்வொரு பங்குஞ் சரிபார்த்து, கடவுளாகிய கூலி வேலையாளையும் கண்டு ஏடா தம்பியென்று ஆயிரம் பிறைகண்டு தொழுத வந்தியென்னும் கிழவி பங்கு மாத்திரம் அடைபடாமையால் எல்லார் பங்கும் அடைப்பட்டிருக்க நீயேன் இன்னும் அடையா திருக்கிறாயென்று கேட்டார்கள்.

அதற்குக் கடவுள் வேறொரு பேச்சும் பேசாமல் மன்மதன்போல் எதிரே நிற்க, அந்தத் தண்டவீரர்கள் இந்த அடைபடாத பங்கு யாருடையதென்று விசாரித்து வந்திக்குக் கூலியாளாய் வந்தவன் யார்? நீதானே யென்று கோபங்கொண்டு அடிக்கிறதற்குப் பிரம்பு கொண்டோங்கப் பயந்து மயங்கி நிற்க, அப்போது கடவுள் தம்மை உணர்ந்த ஞானிகளுக்குப் பெருமை தோன்றத் தாம் அந்த வேலை வாங்குகிற வீரரை அசட்டை பண்ணி இறுமாப்புடனே நிற்கும் போது வெள்ளம் அதிகரித்து வந்து வந்தியின் பங்குக் கரையுடனே அடுத்த கரையையும் கல்லிக் கரைத்துக் கொண்டுபோக கண்டவர்களெல்லாரிலும் சிலர் இவன் சித்தனோ வென்பார்கள். சிலர் அன்று பேய்பிடித்த பித்தனோ வென்பார்கள். அன்று வந்தியை ஏமாற்றிப் பிட்டுத் தின்னவந்த எத்தனோ வென்பார்கள். சிலர் இந்திரஜால வித்தை காட்டுஞ் சித்தன்றானோ வென்பார்கள். சிலர் ஐயோ இவனை

இன்னுனென்று தெளியக்கூடவில்லையே என்பார்கள். சிலர் பாடல் விஞ்சையனே வென்பார்கள். சிலர் பண்ணுடனே பாடலுக்குத் தக்கபடி ஆடும் விஞ்சையனே வென்பார்கள். சிலர் அன்று மக ஐஸ்வரியமான செல்வச் செருக்கிலே கிடந்து முழுகிப் பின்பு வறுமையாலிளைத்தவனே வென்பார்கள். அப்படியானுல் கீர்த்தி யுண்டாக வாழ்ந்த செல்வர்களில் யாருடைய மகனே இவனென்பார் கள். ஆனாலும் மன்மதனுங் கண்டு மோகிக்கத் தக்க இவ்வளவு கட்டழகுடையன் இவனென்பார்கள். சிலர் அப்படி எங்குமில்லாத அழகுள்ள இவன் கூலியாளாக வந்தது என்ன காரணமென்பார் கள். அன்று தாய் தந்தையில்லாமல் தனியாகப் போனவனே வென்பார்கள். இவன் ஒருநாளும் வேலை செய்தறியாதவனே என்று இவன் மேனியே சொல்லுகிற தென்பார்கள். அப்படியானுலென்ன வந்தியிடத்திலே கூலியும் வாங்கிக்கொண்டு கணக்கிலும் தன்பேர் பதிய வைக்கச்சொல்லி வேலையுஞ் செய்யாமல் ஒருவர் போய் நல்ல வார்த்தை சொன்னுலும் கேளாதவனுகக் கல்லிலடித்த முளைபோல எதுவுங் காதிலே நுழையாமல் அசட்டை பண்ணித் திரிகிருன். ஆகை யால் இந்தச் சேதியை நாம் போய் அரசனுக்குத் தெரிவிப்போ மென்று பாண்டியன் சபையிலே போய்க் கண்டு வணங்கி, ஐயா பாண்டியர் பெருமானே! இந்த வெள்ளத்துக்குள்ளான பட்டணத்து ஜனங்களெல்லாம் அளந்துவிட்ட பங்குகளை அவரவர்கள் ஒப்புக் கொண்டு மலைபோலே கரைகட்ட மண்சுமந்து வந்தடைத்தார்கள். இந்த வூரிலே பிட்டுவிற்கிற ஒரு கூனற்கிழவி பங்குமாத்திரம் அடை படாமலிருக்கின்றது. அவளுக்குக் கூலியாளாக மன்மதனை வென்ற மிகுந்த அழகனுெயொருவன் வந்து பேர் பதியவைத்துப் பின்பு எவ் வளவும் வேலை செய்யாமல் அரசர் பெற்ற செல்வக்குமாரன்போல் களிப்புக்கொண்டு பாடுகிருன், ஆடுகிருன் காலத்தை வீணே கழித்து வேலைசெய்ய வேண்டுமே யென்று மனதிலெவ்வளவு மெண்ணுமல் யாரையும் அசட்டை பண்ணுகிருன். நாங்கள் அவனழகைப் பார்த்து அடிக்கப் பயந்து மகாராஜனே உமக்குத் தெரிவிக்க வந்தோமென்ன, உடனே அதிக கோபங்கொண்டு மந்திரிகளுடனே பாண்டியன் விரைந்தெழுந்து நாம்போய் அடைபட்ட பங்குகளை யெல்லாம் பார்ப் போமென்று வைகையாற்றங்கரைக்கு வந்து கட்டின கரைகளை யெல் லாம் மனங்களிகூரப் பார்த்துக்கொண்டு வருகின்றவன் வந்தி பங்கை யடைப்பாரில்லாமையாலே அந்தப் பங்கையும் அதற்கடுத்த பங்குக் கரையையும் அலைகள் குத்தி யிடித்துக்கொண்டு போகின்ற வெள்ளப் பெருக்கையுங் கண்டு கோபங்கொண்டு இந்தப் பங்கடைக்கிற கூலி யாள் எங்கே போனுனென்று கேட்க, அப்போது பாண்டியராஜன் கோபிக்கிறதைக் கண்டு அடிக்குங்கோலைக் கையிலே கொண்டு நிற் கிற சேவகர்கள் பயந்து மீளாத கோபங்கொண்டு உள்ளும் புறம்பு மொளித்து நின்ற கள்வனுன கூலியாள் கையைப்பிடித் திழுத்துக் கொண்டுபோய் இவன்றான் வந்தியினுடைய கூலியாளென்று காட்டி

விட, பாண்டியன் கண்டு கோபித்துத் தன் கையிலே பொற்பிரம்பு கொண்டு அண்டங்களையும் அளவில்லாத உயிர்களையும் தனக்குச் சரீரமாகக் கொண்ட கடவுள் முதுகிலே ஓங்கி யடித்தான்,

அப்படி அடித்தவுடனே நிறைந்த சோதியான கடவுள் தாம் எடுத்துக்கொண்டுவந்த கூடையோடு மண்ணை ஆற்றின் உடைப்பில் கொட்டிவிட்டு மறைந்தருளினர். அப்படி எல்லாவுயிர்களுக்கும் ஞான வடிவான கடவுள் முதுகிலேபட்ட அடித்த தழும்பு பாண்டியன் முதுகிலும் அவன் பத்தினிகளுடம்பிலும் மந்திரிகளுடம்பிலும் ராஜகுமாரர்கள் மேலும் அங்குக் கூடி நிற்கிற வீரர்கள்மேலும் குதிரைகள்மேலும் யானைகளின்மேலும் பட்டதாக; பின்னும் அந்த மதுரேசன் மேலே பட்ட அடித்தழும்பு ஒன்பது கிரகங்கள் மேலும் பல நக்ஷத்திரங்களின் மேலும் ஐந்து பூதங்களின் மேலும் மேகங்கள் மேலும் வேதங்கள்மேலும் ஆறு சமய தேவர்களின்மேலும் மற்றைத் தேவர்களின் மேலும் இருஷிகளின் மேலும் அடியார்களான முனிவர்கள் மேலும் பட்டன. வானவரும் மனிதரும் நரகரும் பட்சிகளும் விலங்குகளும் பாம்பு கறையான் எறும்பு முதலான சரங்களின் மேலும், மலை-மரம்-கொடி-புல் மு:லாகிய அசரங்களின்மேலும் பட்டன. தாய் வயிற்றிலுள்ள பிள்ளையும் அப்போதடிபட்ட தழும்புடனே பின்பு பிறக்கலாயின. ச: சரங்களெல்லாம் தாமேயான கடவுளின்மேலே பட்ட அடித்தழும்பு உயிரில்லாத சித்திரங்கள் மேலும்பட்டு மற்ற எங்கும் படுதலால் திடுக்கென்று மாயோன் பாற்கடலிலே விழித்தான். தாமரையாசனத்தி லிருக்கிற பிரமதேவன் இது என்னவென்றதிசயித்தான். இந்திரன் பயந்தான். மற்றைத் தேவர்களெல்லாம் உடல் நடுங்கினர்கள். விஞ்சையர் - இயக்கர்-சித்தர் - சாரணர்களெல்லாம் உடம்பிலே அடித்தழும்பு கொண்டார்கள். அப்படிப் பட்ட தழும்பை ஒருவர்க்கொருவர் காட்டிப் பட்டவிதம் தெரியாமல் மயங்கினர்கள். அக்காலத்தில் ஒப்பில்லாதவராகிய சோமசுந்தரக் கடவுள் எல்லாவுயிர்களும் தாமேயென்பதும் அன்பினுக்கெளியோ ரென்பதும் தெரிவிக்கவேண்டி அடிபட்டு அங்கே ஒரு கூடைமண்ணைக்கொட்டி வெள்ளம் வற்றச்செய்து கரையை மிகுத்து உயர்த்தி உடனே வேலையை விட்டு மறைந்துபோனதைக் கண்டு ஆளோட்டும் வீரர்போய் கிழவியைத் தொடர்ந்து வாதிக்க அவள் இன்னும் அரசனாலே துன்பமுண்டோ முன்னே போன ஆள் என்ன செய்தான். இனி என்னாலே செய்து முடியுமோ வென்று தளர்ந்து எலும்புபோலே வெளுத்த தலையையுடைய கிழவி கூடற்கடவுளைப் பார்த்து நின்று அழுதாள். அப்படி அழும்போது அன்பே தேனாகக்கூட்டி உண்ணச் செய்த பிட்டை அமுதுசெய்தருளினவர் தமது பெருங்கருணையினாலே நந்தி முதலிய கணாதிபர்களுடனே ஆகாசத்திலே சூரியனைப் போலே விளங்குகின்ற திவ்ய விமானத்தைப் பூமியிலே இறங்கச்செய்து தாயே வருவாயாக வென்று அவளை விமானத்தின்மே லேற்றிக்கொண்டு

விரைவாகத் தேவர்கள் பூமழை பொழிய பண்ணோடு கூடின பாட்டும் வேதமும் ஐந்து துந்துபியும், ஆகாசத்திலே முழங்கச் சிவனருளைப் பெற்றவர்கள் வாழ்கின்ற சிவலோகம் போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு வெள்ளியம்பலவாணர் ஒரு கூடை மண்ணைக் கொட்டி விட்டு மறைந்ததும், அடைக்குங்கரை நீண்ட மலைபோலுயர்ந்ததும், தங்கள் மேலே பிரம்படிபட்டதும், பார்த்து அ்டி என்மேலும் பட்டது, என்மேலும் பட்டது, இது அது என்று மந்திரிகள் நின்று, சொல்லுகிறதும், மற்றை எல்லாரும் அப்படியே சொல்லிக் கொள் வதும் பாண்டியன் கண்டு மனத்திலே ஆசங்கை கொண்டு நிற்க மண்ணை உடைப்பிலே கொட்டிவிட்டு மறைந்தருளின கடவுள் ஆகா சத்திலே நின்று பாண்டியனையும் அவன் சேனைகளையும் பார்த்து அசரீரியாக ஓய் பாண்டியராஜனே! நீ சம்பாதித்த திரவியங்களெல் லாம் தரும நீதிப்படி வந்தனவாதலாலே அந்தப் பொருள்களெல்லாம் பரிசுத்தமாகவே எனக்கும் என்னடியார்களுக்குமே வாதவூரன் உத வும்படிச் செய்தான், நீ அவனைத் தெரிந்துகொள்ளாமல் துன்பப் படுத்தினதினாலே நரிகளைக் குதிரைகளாக்கிக் கொண்டுவந்து கொடுத் தோம், அவைகளெல்லாம் இராத்திரியிலே பழையபடி நரிகளேயாய்ப் போயின. அதுகண்டு நீ பின்னும் வாதவூரனை நெருக்கி வருத்தப் படுத்தினாய், நாம் அதுபொறாமல் வைகையாற்றைப் பெருகிவரச் செய் தோம். செய்தும் வந்திக்குக் கூலியாளாய் அவள் கொடுத்த பிட்டை வாங்கித் தின்று வந்து வேலையில் உன்னாலே பிரம்படியும் பட்டோம் உடனே வந்திபங்கு அடைபட வேண்டி நாமே மண்ணைக் கொட்டிக் கரையைச் சரிப்படுத்தி அங்கே அவளுக்கு வந்த துன்பத்தையுந் தீர்த்து அவள் நமது சிவலோகஞ் சேரவுஞ் செய்தோம். நாம் இவ்வள வெல்லாம் இந்த வாதவூரன் பொருட்டாகவே செய்தோம், நீ இந்த வைதிக சிரேஷ்டனுடைய பெருமைகளொன்றுந் தெரிந்து கொள்ள வில்லை. இந்த வாதவூரனே எம்மிடத்திலே அன்புகொண்டு உனக்கு இம்மைப்பயனும் மறுமைப்பயனும் தேடிக் கொடுத்த உத்தமன். சந்தன புஷ்பங்களாகிய புறப்பற்றுத் தீர்ந்தவன் ஆகையாலே இவன் மனநிறுத்தவல்ல யோகி யென்றுகொண்டு அவனிச்சைப்படியே போகவிட்டு நீ வேதவழியே நின்று நீதி செலுத்துகின்ற அரசருக்கு நியமித்த ஆயுள் குறையாமல் நீங்காத செல்வக்கடலிலே முழுகி வாழக் கடவையென்று சொன்ன வார்த்தையைப் பாண்டியன் இரண்டு காது களும் நிரம்பக் கேட்டுப் பயந்து சந்தோஷ மிழுக்க அதிசயக்கடலிலே முழுகி மறப்பில்லாத அன்புகொண்ட வாதவூரர் எங்கே யிருக்கிறு ரென்று வந்து தேடி விஷம் பொருந்திய சர்ப்பத்தை கோவணமாகத் தரித்த கூடற்கடவுள் திருக்கோயிலுக்கு வந்து தமதிச்சைப்படி இருக் கிற திருவாதவூரரைக் கண்டு விழுந்து வணங்கி, ஐயா! இந்தக் கடல் சூழ்ந்த உலகத்தைக்கண்டு கொதிக்கு நரகத்திலே முழுகவல்லவனான என் புத்திக் கேற்றபடியே செய்தேன். நீரே நான் செய்த அநேகம்

தவப்பலனாக எழுந்தருளி வந்து எனக்கு இகபரங்களுக்குக் காரணமாகி என்னுடைய துன்பப் பிறவியான நோய்க்கு அரிய மருந்தானீர். நான் உம்மைக் கோபித்து நினையாமல் செய்த இந்தக் குற்றங்களை யெல்லாம் மன்னித்தருளி. நீர் முன்பு போலவே உம்முடையதான பாண்டி நாடெல்லாம் ஆளுதல் கொண்டு துஷ்ட நிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்யக் கடவீரென்று வேண்டிக் கொள்ள அதற்கு மண்ணாசை நீங்கின வாதவூரடிகள் உள்ளே நகைகொண்டு பாண்டியனைப் பார்த்து, ஐயா பாண்டிய மகாராஜனே! அலைகள் வீசுகின்ற ஆற்றுநீர் ஊற்றுநீர் மேகநீர் கொண்ட சமுத்திரஞ் சூழ்ந்த நாட்டுக்கெல்லாம் இந்திரன்போல் அரசாட்சி செய்யக்கடவீர். இனி உங்கள் தெய்வம் அருளிச்செய்தபடியே விரும்பிச் செய்யக்கடவீர். பரிசுத்தமான உங்கள் குலதெய்வம் அவராகையாலே அவரே உங்களுடைய குலோத்தாரகராய் நடத்திவர வல்லார். நான் உம்மை யடுத்திருந்தபடியினாலே வைதிகதர்மமும் லௌகீகதர்மமும் நன்றாய்த் தெளியலாயினேன். இப்படித் தெளிந்து கொண்டபடியினாலே மெய்ம்மையாஞ் சித்தசுத்தி விளைந்தது. அது விளைந்தபடியினாலே பொய்க் கடவுளரிடத்து நின்று நீங்கி மெய்க்கடவுளான பரமசிவனுடைய பத்தி தோன்றிற்று. அப்படி வந்த பத்தியாலே மாயையின் விருத்தியான பந்தமாம் பிரபஞ்ச வாழ்க்கை விளைவினுட் பட்ட துன்பம் வெந்தது கருணையாகி மெய்யுணர்வு இன்பந் தன்னைத் தந்தது பாதஞ்சூட்டித் தன்மயமாக்கிற்றன்றே.

சச்சிதானந்தமாமத் தனிப்பரசிவனேதன்ன
நிச்சையாலகிலமெல்லாம் படைத்தளித்திருசெய்யும்
விச்சையானவரைத்தந்த மேலவன்பிறவித்துன்பத்
தச்சமுற்றடைந்தோர்க்கானு வின்பவிடளிக்குமன்னோன்.

மந்தரங்கயிலைமேருப் பருப்பதம்வாரணாசி
இந்தநல்லிடங்கடோறு மிகபரபோகம்பார்க்குந்
தந்தருள்செய்தெம்போல்வார் தம்மனம்புறம்போகாமற்
சிந்தனைத்திருத்திஞானத் திருவுருவாகிமன்னும்.

ஒப்புவர்மிக்கோர்வேறற் றொருவனுயெங்குந்தங்கும்
அப்பரஞ்சுடரேயிந்த ஆலவாயுறையுஞ்சோதி
கைப்படிகவிபோன்யேனுட் கண்ணுவனுதிப்போர்க்கு
மெய்ப்பொருள்விளங்கித்தோன்ற வேதத்தைவிருத்திசெய்தான்.

என்றிப்படித் துதித்து வேதப்பொருள் அருளிச்செய்த சோமசுந்தரக் கடவுள் அருளினாலே ஞானமயமான பொன்னம்பலத்தையுடைய தில்லைமூதூருக்குப் போகும்படி எனக்கு அனுக்கிரகஞ் செய்தருளினார். ஆகையினாலே, நீரும் நான் தில்லைமூதூருக்குப்போகும்படியாகவே இசைய வேண்டுமென்று திருவாலவாய்க் கடவுளை வணங்கி பலவிதமாகத் துதித்து விடை பெற்றுக்கொண்டு தமது பிறவிக் கட்டை அறுத்த நாதனுடைய பாதங்களிலே கட்டுண்டு போக, அவர் பின்னை

தொடர்ந்து பாண்டியன் போகப்போக, வாதவூரடிகள் நில்லு நில்லு மென்று சொல்லிக்கொண்டு போகுமளவில் பாண்டியன் கூப்பிடு தூரம் கூடப்போய் அவர் சமீபமாக வணங்கி விடைகொண்டு திரும்பி னன். இவ்விதம் பாண்டியனை விட்டுவிட்டு வாதவூரடிகள் போன பின்பு பட்டணத்துக்குள்ளே வந்து பாண்டியன் அறப்பெருஞ் செல்விபாகத் தண்ணலாகிய சோமசுந்தரக் கடவுளைத் திருக்கோயி லிலே வந்து தரிசித்துத் தான் பிரம்புகொண்டோங்க அதற்கு முதுகு காட்டி அடியுண்ட கிருபைக் கடவுளானவர் சந்தோஷிக்க வணங்கி மனத்திலே நிறைந்த மகிழ்வு அங்கே நிலைகொள்ளாமல் வாய்வழியே பெருகிவர எதிரே நின்று,

கொச்சகக் கலிப்பா

அடையாளம் படவொருவ னடித்தகொடுஞ் சிலைத்தழும்புந்
தொடையாக வொருதொண்டன் றெடுத்தெறிந்த கல்லும்போற்
கடையானேன் வெகுண்டடித்த கைப்பிரம்பு முலகமெல்லாம்
உடையானே பொறுத்ததோ வுன்னருமைத் திருமேனி-

கடியேறு மலர்மகன்மான் முதலாய கடவுளரும்
படியேழு மளவிறந்த பல்லுயிரு நீயேயோ
முடியேற மண்சுமந்தாய் முதுகுதனி லடிபட்ட
தடியேனும் பட்டேனின் றிருமேனி யானேனே.

கைக்குமருந் தின்சுவைபின் சாட்டுமா றெனவினைக்குப்
பொய்க்குமருங் கலஙகி மண்ணுண்டு புலைநரகந்
துய்க்குமருந் துயர்களைவான் மாறுய்நின் றுணையடிக்கே
உய்க்குமருந் தவரிவரென் றறியாமை யொறுத்தேனே.

பாதியுமை யுருவான பரமேட்டி யெனக்கிம்மை
ஊதியமும் பரகதியு முறுதியென வினைவிக்கும்
நீதியினுன் மத்திரியாய் நின்னருளா யவதரித்த
வேதியரை யறியாதே வெறுத்துநா னொறுத்தேனே.

மாயா விருத்தியினுன் மாழாழ்ந்து மாதவரை
யாயா தொறுத்தே னருநரகந் தாழ்ந்துநான்
வீயாம லின்றனையார் மெய்ம்மையெலாத் தேற்றியவென்
ருயானுய் தண்ணளிக்கென் றமியேன்செய் கைம்மாறே.

நின்னையுணர்ந் தவர்வேத நெறிவேள்வி செய்தூட்டும்
இன்னமுதிற் கழிசுவைத்தோ விவ்விடும்பிட் டெவ்வுயிர்க்கு
மன்னவனே செந்துவர்வாய் மலர்ந்தமுது செய்தனையால்
அன்னையிலா வுனக்கிவளோ ரன்னையாய் வந்தாளோ.

அன்றுசிறுத் தொண்டரிடும் பிள்ளைக் கறியமுது
மென்று சுவைதெரிந்த வேடனிட்ட வூனும்போ
னன்றுநரை யாட்டியிடு பிட்டு நயந்தருந்தி
என்று மடியார்க் கெளிவந்தா யெந்தாயே.

நரியாவும் பரியாக்கி நடத்தியுமம் பரமன்றித்
தரியாயான் றருதுகிலேத் திருமுடிமேற் றரித்துமறைக்
கரியாய்நீ யென்பாச மறுக்கவருந் திருமேனி
தெரியாதே பரியாசை தினேத்திறுமாந் திருந்தேனே.

விண்சுமக்கும் புள்ளாய் விலங்காய்ச் சுழன்றுமனம்
புண்சுமக்குஞ் சூழ்ச்சி வலியுடைய புத்தேளிர்
மண்சுமக்கு மள்ளராய் வந்திலரே வந்தக்காற்
பண்சுமக்குஞ் சொல்லிபங்கன் பாதமுடி காண்பாரே.

என்று பலவிதமாகத் துதித்து இக்கடவுள் தம்மை யடுத்தவர்க் கன்பர். இவரைத் தெளிந்தால் மிகவு நன்று, இகபர போக வீடு கள் எளிதாய்ப் பெறலாம் என்று பாண்டியன் அன்றைத்தினந் தொடங்கி திருப்பணி பூசை முதலானவெல்லாம் அதிகமாகப் பெருகச் செய்து அழகு பொருந்திய வெள்ளியம்பலவாணர் திருவடிக்கன்பும் உலகத் துயிர்களுக்கு அன்புங்கொண்டு நடந்து வாழுங்காலத்தில் முன்னே திருப்பெருந்துறைக் கடவுளுக்கும், அவரடியார்களுக்கும் தான் தரும நீதிப்படியே சமபாதித்து வாதவூரடிகளாலே கொடுத்த பொருட்கள்போய் அநேகமாய்த் தழைத்து வரும் பயனே போலவும், பௌர்ணமியில் சந்திரனைக்கண்ட கடல்போலவும், தினந்தோறும் பல விதமான செல்வங்களும் பெருக மகிழ்கின்ற பாண்டியன் சகநாத னென்றொரு புத்திரனைப் பெற்று அளவில்லாத இன்பத்திலே முழுகிப் பின்பு அக் குமாரனுக்கு முடிசூட்டி அரசனாகச்செய்து வாதவூரடிக ளுடைய சார்பால் மெய்யான வழி தோன்றி இருவினை யொப்புவமை யாலே பரமசிவனுடைய கிருபாதிருஷ்டியால் மும்மலக்கட்டும்விட்டுச் சிவானந்தக் கடலிலே முழுகி முக்கண்மூர்த்தியினுடைய சிவந்தமலர் போலும் பாதநிழலே யடைந்தான் அரிமருத்தன பாண்டியராஜன்.

* பின்பு வலிய சௌரியத்தையுடைய அந்தப் பாண்டிய ராஜன் இந்தவிதமாகச் சொன்னமாத்திரத்தில் திருவாதவூரர் தென்திசையை ரட்சிக்கின்ற நீதியையுடைய அவ்வரசனைப் பார்த்துப் பின்னே பிர காசிக்கின்ற சடையையுடைய கடவுள் நிலைபெற்றிருக்கின்ற திருப் பெருந்துறைக்குப் போகும்படி இன்று என்னை யனுப்புவதே எனக்கு இந்த வுலகத்தை யாளும்படிக்குக் கொடுப்பதென்றார். தென்றிசை மன்னனாகிய பாண்டியனும் அப்படி சொல்லக்கேட்டு மனத்திலே மிக வும் வருந்தி முன்னோனாகிய சிவனுடைய அடியாருக்கு ராஜசம்பத் திலே ஆசை யுண்டோவென்று சொல்லி மாணிக்கவாசகருடைய மிருதுவாகிய பாதத்திலே வணங்கி, ஐயரே! மனதுக்கு வேண்டுமாறு செய்யக் கடவீரென்று செலவு கொடுத்துத் தன்னுடைய கீர்த்தி மிகுந்த மதுராபுரியிற் புகுந்தான், பாண்டியராஜன் போனபின்பு பரமசிவனிடத்து அன்பு மிகுந்த மாணிக்கவாசகர் கடவுளுடைய பேரின்ப வாழ்வை விரும்பி அவ்வரனுக்காகக் கொண்டிருந்த

* இது முதல் திருவாதவூரர் புராணப்படி உரை எழுதப்பட்டது.

வேடத்தைக் குறைவென்று நீக்கி மேலாகிய தவவேடங்கொண்டு அத்தனுய் மதுரையிலிருக்குஞ் சொக்கலிங்கப் பெருமானை வணங்கி மேகங்கள் தவழுகின்ற பிரகாசமிகுந்த சோலைகள் சூழ்ந்த அந்த மதுரைமா நகரை விட்டுக் கடவுள் தம்மையாண்ட திருமேனியைக் கண்டு வணங்கவேண்டுமென்று திருப்பெருந்துறைக்குப் போக நினைத்துப் பித்தங் கொண்டவராய் அஞ்ஞான நீங்கத் திருவடியை வைத்த கடவுளுடைய திருப்பெருந்துறையை நோக்கிப் பிரயாணஞ் செய்யும் சமயத்தில் மனோவேகமும் வாயுவேகமும் தடைபெற் றிருக்கின்ற இளங்கன்றை நாடியோடுங் கபிலைப்பசுவும் நிறைந்து நின்று மடையை யுடைக்கும் நீரும்போல் கண்களாலும், நுழையப்படாத காடுகளும் ஊர்களும் சீக்கிரத்திலே நடந்துபோய் அழிவற்ற முனிவர்கள் வசிக்கின்ற அழகு பொருந்திய திருப்பெருந்துறைக்குப் போய் புண்ணியத்தையுடைய முனிவர்கள் சூழ, முன்போலிருந்த தேவர்களுக் கதிபனுகிய பரமசிவனுடைய திருவடியின்மேல் வீழ்ந்து வணங்கி முனனுலே சத்தபுரியில் விசேஷமாகிய ஸ்ரீ காஞ்சிமாநகரத்தில் கம்பை யாற்றில் காமாட்சியம்மையார் பூசை செய்யும்போது அந்தப் பூசையின் உறுதியைச் சோதிக்க அந்நதியிலே சர்வ தீர்த்தங்களையும் வரச் செய்து, அது ஆகாசமளாவி வருகிறபோது சிவபூசைக்கு விரோதமாய் வருகிறதென்று பயந்து தழுவிக் கொள்ளுதலால் ஒருவராலுந் தொடுதற்கரிய மார்பிலே அந்தக் காமாட்சி யம்மையாருடைய தனபாரங்களாலும் இங்கே ஒரு பிரம்பினுலும் அடைந்த தழும்பையுடையவனே போற்றி, வேண்டிய வடிவங் கொள்பவனுகி வெவ்விய குதிரையின்மே லேறிக்கொண்டு எங்களை யடிமைகொண்டு அருள் செய்யவந்த ஐயனே போற்றி போற்றி, என்று இந்த விதமாகத் துதித்த மாணிக்கவாசகரது சிரத்தின்மேலே களங்கரகிதராகிய கடவுளானவர், சிவந்த கையை வைத்து ஆசீர்வதித்து எழுந்திருவென்று சொல்ல, எழுந்தபின்பு விபூதியுந் தரித்து அறிவு நிறைந்த கிருபா நோக்கஞ் செய்து அன்பையுடைய அடியார்கள் கூட்டத்தில் விளங்கியிருந்து முடிவு முதலு மில்லாத அடியவர்களைக் குறித்துவந்த காரியமெல்லாம் முடித்தனம் மனமகிழ்ச்சியுண்டாக நம்முடைய ஒளியையுடைய திருவுருவைத் தரிசிக்க வேண்டுமென்று நல்ல கயிலாயகிரியி லிருக்கின்றவர்கள் நினைவு கொண்டார்கள். ஆகையால் சீக்கிரத்தில் அவ்விடத்திற்கு நாம் போகவேண்டும். நீங்களிங்கே இன்பமுடனே வாழ்ந்து கொண்டிருங்கள். நாம் செல்குவோமென்று சொல்ல, அப்போது அடியார்கள் வந்து சுற்றிக்கொண்டு அநேகந்துதிகள் சொல்லிவணங்கி, ஐயனே! இனி யாங்கள் தரிக்கிறது அருமையென்று பூமியில் வீழ்ந்து ஆயாசங்கொண்டு எங்களை விட்டுவிடுகின்றையோ வென்று அழுதார்கள்.

அப்படி அன்புகொண்டு அழுகின்ற அடியார்மேற் பரமசிவனும் அன்புவைத்து வருத்தப்படுவதை நீங்குங்கள். இந்த வாசனை பொருந்

திய குருந்த நிழலிலே பொருந்திய தெய்வ பீடமொன்று பிரகாசத்துடனே செய்து அதன்மேல் திருத்தமாகிய வேதங்களுந் தேடுகின்ற நம்முடைய திருவடிகளைச் செய்து தாங்குதற்கரிய துன்பம் நீங்கி நாமென்கிற தன்மையை யறிந்து நீங்குதற்கரிய பேரன்பினுலே நாள் தோறும் மகிழ்ந்து வணங்கி இவ்விடத்திலே கிருபை மிகுந்த மனத்தையுடைய அடியார்களெல்லாம் விரும்பி யிருங்கோள். அப்படி யிருக்கு நாளில் ஒருநாள் இந்தத் தீங்கில்லாத பொய்கையினிடத்திலே செழுமை பொருந்திய அக்கினி வந்து தோன்றும். அவ்வக்கினி எழுந்து விளைந்த மாத்திரத்திலே நீங்கள் எல்லாருந் தடாகத்தி னிடத்திலே விழுந்து பின்பு நம்மிடத்திலே வந்து உங்களுடைய கவலை விடுங்கோளென்று வணங்கத்தக்க தவத்தைச் செய்யும் அன்பர்கள் சூழ்ந்துகொண்டு பின்னே வர செழுமையுள்ள பிரகாசத்தையுடைய கயிலாசத்தை விரும்பி எழுந்தருளி நீங்குதற்கரிய அன்பர்களெவரும் நில்லுங்கோளென்று சொல்லி நடந்தார், இங்கே அடியார்கள் நின்றபின்னும் பெருமானுடைய பேரருளைப் பெற்றவராகி திருவாதவூரர் தமது சுற்றமெல்லாம் வாழும்படி குருமூர்த்தமா யெழுந்தருளி கடவுளுக்குப் பின்னே போனபோது உமாதேவியை இடப்பாகத்திலே யுடையவராகிய அக்கடவுள் அன்பு வைத்து இவர் வருதலைப் பார்த்தங்கே ஒரு கொன்றை விருக்ஷத்தின் நிழலிலே இருந்தபோது மெல்லிய திருவடிகளிலே வணங்கிக் கண்ணீர் விழவிழத் தொழுது நிற்கின்ற அன்பராகிய மாணிக்கவாசகரை யன்பினுலே பரமசிவன் பக்கத்திலே வைத்தருளி முன்னே நாமடைந்த திவ்விய க்ஷேத்திரமாகிய சிறப்புப் பொருந்திய இந்தக் குருந்த நிழலிலே, எந்த லோகத்திலும் எங்கு மிருந்தோமாயினும் இங்கே இருக்கின்றவர்களுடைய தீவினையை நீக்கி ஆளும்பொருட்டு இந்த ஸ்தலத்திலே வசிப்போம். மிகுந்த ஒளியையுடைய சுழுமுனை நாடியிடத்தில் சத்திக்கின்ற அடையாளமான மங்களகரத்தையுடைய சங்கவாத்திய மல்லாமல் மற்ற வாத்தியங்களெல்லாம் இந்த ஸ்தலத்திலே நமக்காகாவாம். அதென்னெனில்: சத்தநீங்கிய இடமாகையினுலும், நமது பக்கத்திலிருக்கும் பார்வதி காண நடனஞ் செய்யும் இடமாகையினுலும் ஒழுங்காக இந்தப் பிரகாரம் அறிந்து நல்ல குருந்த நிழலிலே செழுமையுள்ள தபோதனர் கூட்டத்துடனே நீயும் நம்முடைய பாதத்திற் சேவை செய்து எழுகின்ற அக்னியை மடுவிற் கண்டால் யாவரும் அதிற் போய் விழுந்தபோது நீ யுடனே விழாமல் இந்த விடத்தினின்று நீங்கித் திருவுத்தரகோசமங்கை யென்னும் நம்முடைய ஸ்தலத்துக்குப் போய் அஷ்டமாசித்திகளையும் அடைந்து தெய்வீகமாகிய லிங்க வடிவமா யிருக்கின்ற நம்முடைய ஸ்தலங்களிலே இந்த இந்த ஸ்தலங்களை வணங்கினுல் அங்கங்கும் இந்தப் பிரகாசமுள்ள வடிவே தரிசிப்பாய் அப்படியே காட்டுவோமென்று கட்டளையிட்டு பின்னும் உயர்ந்த திருக்கழுக்குன்றமென்னும் அந்த நெடிய ஸ்தலத்தையும் வணங்கி அவ்விடத்திலிருந்து இங்கே வந்து ஸ்ரீ சிதம்பரத்துக்குப் போய்

புத்தரை வாதில் வென்றபின்பு எம்முடைய பதவியான சாயுச்சியத்தைப் பெறுவா யென்றார்.

அவ்வாறு திருவாய்மலர்ந்த கடவுளை மாணிக்கவாசக சுவாமிகள் வணங்கி எம்பெருமானே! திருப்பெருந்துறையி லல்லாமல் புண்டரீகமென்னும் பெயரினையுடைய ஸ்ரீ சிதம்பரத்திற் பொருத்துதல் பரமுத்தியென்று அருளிச்செய்தது என்ன காரணமென்று விண்ணப்பஞ் செய்ய. திருத்தமாகிய தவத்தை யுடையவனே! நீ கேட்பாயாகவென்று சொல்லிப் புழுதன்னை யெடுத்தவிடத்தி லல்லாமல் கொண்டு போய் வைத்த விடத்திலே குளவி வடிவங்கொள்ளும். அதுபோல உன்னைக் கண்ட இந்த ஸ்தலத்திலே அன்பினாலே உண்மை யறிவை உபதேசம் பண்ணினோம். மேன்மை பொருந்திய சிவானுபூதியாகிய மோக்ஷம் ஸ்ரீ சிதம்பரத்திலுண்டாம். அன்றியும் விசாலமாகிய தேகத்திலே மூலாதாரத்தினின்றும் எழுந்த நல்ல சுழுமுனை நாடியுடனே நிறைந்த ஒளியாய் அந்த ஒளியிலே பஞ்சாட்சரமு மொன்றாய் நெடிய குழலோசையாய்ப் பிரகாசம் பொருந்திய அந்த ஓசை நீங்கி அடங்கியவிடமே நாம் ஆடுகின்ற ஸ்ரீ சிதம்பரமாகும். அன்றியும், எண்ணிக்கையைத் தருகின்ற பிருதிவி, அப்பு, தேயு, வாயு ஆகாயமென்று சொல்லப்பட்ட பூதகளைந்தும்; இடை-பிங்கலை - சுழுமுனை என்னும் நாடிகள் மூன்றும், அக்கினிமண்டலம் - ஆதித்தமண்டலம்- சந்திரமண்டலம் என்னும் மண்டலங்கள் மூன்றும் ஆகி நிலைபெற்ற சம்பத்தாலே பிண்டமும் அண்டமாகும். பிர்மா, விஷ்ணு, உருத்திரன், மகேசுரன், சதாசிவனென்று சொல்லுகின்ற ஐந்து வடிவமாகக் கண்டவர்கள் நின்ற விதமும் இவ்விரண்டு விதத்திலுங் காணலாம். ஆகையினாலே இவ்வண்டத்தில் அறிதற்கரிய பொருளாகிய ஒன்றுங் குற்றமில்லாத மூலத்தை நாடிப்பார்த்தால் பிரகாசியா நின்ற சிவலிங்கமேனியா யிருக்கும் மேலாகிய அந்த நாதவெளியின்மேல் ஒளியா யிருக்கின்றது சபை, அங்கே ஆசையால் உமாதேவி காண மனம்பொருந்தத் திருநடனம் செய்வோம். அந்த நடனம் ஏதென்றால் சிருஷ்டி - ஸ்திதி - சங்காரம் - திரோபவம் - அனுக்கிரகமென்று சொல்லப்பட்ட பஞ்சகிருத்தியத்தை நடத்துவதாகும் பாசத்தலையை யறுக்கின்ற இந்த வடிவமும் அதுவேயாகும் உலகத்திலே யிருக்கின்றவர்கள் யாவர் வந்து தரிசித்தாலும் பரமுத்தியைக் கொடுத்துக் கிருபையைத் தருகின்ற தெய்வஸ்தலமும் அந்த ஸ்ரீ சிதம்பரமேயாகும். தாவுதற்கரிய சங்கு சக்கரந் தரிப்பவராகிய மகாவிஷ்ணுவும், பிரமதேவனும் பதஞ்சலி வியாக்கிரபாதரும் திரிபுராதிகளும் தெய்வத்தன்மையுள்ள தில்லைமூவாயிரவரும், நாற்பத்தெண்ணாயிரம் முனிவரும் முப்பத்து முக்கோடி தேவர்களும் போற்றும் எல்லையையுடையதும், அந்தத் தில்லைமாநகரமாகும் இவைகளை யெல்லாந் தெளிவாகத் தெரிந்துகொள்வாயென்று வணங்கி நிற்கின்ற மாணிக்கவாசகருடைய நெற்றியிலே விபூதி தரித்து நில்லென்று கடவுளானவர் நீங்குதலும்

நில்லாதவராய்க் கொஞ்சதூரம் போனர். பரமசிவனுனவர் பின்னும் இவருடைய தன்மையைக் கண்டு நின்று மாணிக்கவாசகர் காணும்படி எதிரே மறைந்தார். அதுகண்டு திருவாதவூரர் அச்சங்கொண்டு இரக்கமுற்று வணங்கி கையை சிரசின்மேல் வைத்துக்கொண்டு பொருந்துதற்கரிய அடியார்களுடைய திருக்கூட்டத்தை யடைந்தார். அரிய தவத்தை நீங்காத மனத்தையுடைய அடியார்களும் மாணிக்க வாசகரும் அந்தத் திருத்தமாகிய குருந்த நிழலின் கீழே தெய்வத் தன்மையுடைய ஒரு பீடஞ்செய்து அதன்மேலே வரத்தைத் தருகின்ற சிவந்த தாமரை மலர்போன்ற திருவடிகள் செய்து வணங்கி அங்கிருந் தார்கள்.

அப்படி யிருக்குநாளில் தெள்ளிய மூன்றும் பிறையைத் தரித்த சடாபாரத்தையுடைய கடவுளானவர் அன்பில்லாதவர்களே யானு லும் தன்னைப் பாடினவர்களிடத்தில் இரக்கஞ் செய்தருளுவாரென்று நினைத்து எண்ணுதல் பெற,

நமச்சிவாய வாஅழ்க நாதன்றுள் வாழ்க
விமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றுள்வாழ்க
.........................................................
செல்வர்சிவபுரத்தினுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோருமேத்தப் பணிந்து.

எனச் சிவனதனுதிமுறைமையான பழமையைச் சொல்லி,

மையலா யிந்தமண்ணிடைவாழ் வெனுமாழியு ளகப்பட்டுத்
தையலா ரெனுஞ்சுழித்தலைப்பட்டு நான்தலை தடுமாறுமே
பொய்யெலாம் விடத்திருவருள் தந்துதன்பொன்னடி யிணைகாட்டி
மெய்யனுய் வெளிகாட்டிமுன்னின்ற தோரற்புதம்விளம்பேனே:

செறியுமிப் பிறப்பிறப்பிவை நினையாது செறிகுழலாற்செய்யும்
இறியுங்கீழ்மையுங்கெண்டையுங் கண்களுமுன்னியேகிடப்பேனை
யிறைவனெம்பிரானெல்லையில்லாத தன்னிணைமலர்க்கழல்காட்டி
யறிவுதந் தெனையாண்டுகொண்டருளிய 1 வற்புதமறியேனே.

என அனுபவ மாற்றுமையைச் சொல்லி,

வைப்புமாடென்று மாணிக்கத் தொளியென்றுமனத்திடையுருகாதே
செப்புநேர்முலைமட வரலியர்தங் கடிறத்திடைநைவேனை
யொப்பிலாதனவுவமனிலிறந்தன வொண்மலர்த்திருப்பாதத்
தப்பனுண்டுதன்னடியரிற் கூட்டியவதிசயங்கண்டாமே.

இருடிணிந்தெழுந்திட்டதோர் வல்வினைச்சிறுகுடிலிதுவித்தைப்
பொருளெனக்களித்தருநரகத்திடை விழப்புகுகின்றேனைத்
தெருளுமும்மதினெடிவரையிடி தரச்சினப்பதத்தொடுசெந்தீ
யருளுமெய்ந்நெறிபொய்ந்நெறிநீக்கிய 2 வதிசயங்கண்டாமே.

என முத்தியிலக்கணத்தைச் சொல்லி,

---

1 அற்புதம் - அதிசயம், 2 அதிசயம் - மிக்கபெருமை,

குழைத்தாற்பண்டைக்கொடுவினை நோய்காவாயுடையாய்கொடுவினையே
னுழைத்தாலுறுதியுண்டோதானுமையாள் கணவாயெனையாள்வாய்
பிழைத்தாற்பொறுக்கவேண்டாவோ பிறைசேர்சடையாய்முறையோவென்
றழைத்தாலருளாதொழிவதே வம்மானேயுன்னடியேற்கே.

அழகேபுரிந்திட்டடிநாயே னரற்றுகின்றேனுடையானே
திகழாநின்றதிருமேனி காட்டியென்னைப்பணிகொண்டாய்
புகழேபெரியபதமெனக்குப் புராணநீதந்தருளாதே
குழகாகோலமறையோனேசோனேயென்னைக் 1 குழைத்தாயே.

என ஆத்தும நிவேதனஞ் செய்து,

தேவதேவன்மெய்ச்சேவகன் றென்பெருந்துறைநாயகன்
மூவராலுமறியொணாமுதலாய வானந்தமூர்த்தியான்
யாவராயினுமன்பரன்றியறியொணா மலர்ச்சோதியான்
தூயமாமலர்ச்சேவடிக்கணஞ்சென்னி மன்னிச்சுடருமே.

முத்தனை முதற்சோதியை முக்கணப்பனை முதல்வித்தினைச்
சித்தனைச் சிவலோகனைத் திருநாமம்பாடித் திரிதரும்
பத்தர்கா ளிங்கேவம்மினிருங்கள் பாசத்திரப் பணிமினோ
சித்தமார்தருஞ் சேவடிக்கனஞ் 2 சென்னிமன்னித் திகழுமே.

எனச் சிவவிளைவு கூறி,

கருடக்கொடியோன்காணமாட்டாக் கழற்சேவடியென்னும்
பொருளைத்தந்திங்கென்னையாண்ட பொல்லாமணியேயோ
இருளைத்துரந்திட்டிங்கேவா வென்றங்கேகூவு
மருளைப்பெறுவானாசைப்பட்டேன் கண்டாயம்மானே.

வெஞ்சேலனையகண்ணார் தம்வெகுளிவலையிலகப்பட்டு
நைஞ்சேனாயேன் ஞானச்சுடரேநானோர் துணைகாணேன்
பஞ்சேரடியாள்பாகத்தொருவா பவளத்திருவாயா
லஞ்சேலென்ன 3 வாசைப்பட்டேன் கண்டாயம்மானே.

என ஆத்தும விலக்கணஞ் சொல்லி,

பாரொடுவிண்ணாய்ப்பரந்தவெம்பரனே பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
சீரொடுபொலிவாய்சிவபுரத்தரசேதிருப்பெருந்துறையுறைசிவனே
யாரொடுநோகேனார்க்கெடுத்துரைக்கேனாண்டநீயருளிலையானால்
வார்கடலுலகில்வாழ்கிலேன்கண்டாய்வருகவென்றருள்புரிவாயே.

பழுதிலாதொல்புகழாள்பங்கநீயல்லால்பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செழுமதியணிந்தாய்சிவபுரத்தரசே திருப்பெருந்துறையுறைசிவனே
தொழுவனோபிறரைத்துதிப்பனோவெனக்கோர் துணையென நினைவனோசொல்
மழவிடையானே 4 வாழ்கிலேன்கண்டாய்வருகவென்றருள்புரிவாயே. [லாய்

என முத்தியுபாயஞ் சொல்லி,

---

1 குழைத்தல் - குழையச்செய்தல். 2 சென்னி - தலை. 3 ஆசை - பேரவா.
4 வாழ்கிலேன் - இனிநிலை கொள்ளேன்.

செழுக்கமலத்திரளனநின்சேவடிசேர்ந்தமைந்த
பழுத்தமனத்தடியருடன்போயினர்யான்பாவியேன்
புழுக்கணுடைப்புன்குரம்பைப்பொல்லாக்கல்வினானமிலா
வழுக்குமனத்தடியேனுடையாயுன் னடைக்கலமே.

வழங்குகின்ருய்க்குன்னருளாரமுதத்தைவாரிக்கொண்டு
விழுங்குகின்றேன்விக்கினேன்வினையேயென்விதியின்மையாற்
றழங்கருந்தேனன்னதண்ணீர்பருகத்தந்துய்யக்கொள்ளா
யழுங்குகின்றேனுடையாயடியேனுன் 1 னடைக்கலமே.

எனப் பக்குவ நிண்ணயஞ் சொல்லி,

பொய்யனேனகநெகப்புகுந்தமுதூ றும்புதுமலர்க்கழலிணையடிபிரிந்துங்
கையனேனின்னுஞ் 2 செத்திலேனந்தோவிழித்திருந் துள்ளக்கருத்தினையிழந்
ணையனேயரசேயருட்பெருங்கடலேயத்தனேயயன்மாற்கறியொண்ணுச் [தே
செய்யமேனியனேசெய்வகையறியேன்றிருப்பெருந்துறைமேவியசிவனே.

அளித்துவந்தெனக்காலவென்றருளியச்சந்திர்த்தநின்னருட்பெருங்கடலிற்
றிளைத்துந்தேக்கியும்பருகியுமுருகேன்றிருப்பெருந்துறைமேலியசிவனே
வளைக்கையானெடுமலரவனறியாவானமாமலைமாதொருபாகா
களிப்பெலாமிகக்கலங்கிடுகின்றேன்கயிலைமாமலைமேலியகடலே.

எனச் சிவானந்த மளவறுக் கொணுமையாய்,

சுடற்பொற்குன்றைத்தோளா முத் தைலாளாதொழும்புகந்து
கடைப்பட்டேனையாண்டுகொண்டகருணாலயனைக்கருமால்பிரமன்
றடைப்பட்டின்னுஞ்சாரமாட்டாத்தன்னைத்தந்தவென்னாரமுதைப்
புடைப்பட்டிருப்பதென்றுகொல்லோபொல்லாவெண்மணிபைப்புணர்ந்தே.

காப்பாய்படைப்பாய்கரப்பாய்முழுதுங்கண்ணுவிசும்பின்விண்ணோர்க்கெல்
முப்பாய்மூவாமுதலாய்நின்றமுதல்வாமுன்னேயென்னையாண்ட [லா
பார்ப்பானேயெம்பரமாவென்றுபாடிப்பாடிப்பணிந்துபாதப்
பூப்போதணைவதென்றுசொல்லோவென் 3 பொல்லாமணியைப்புணர்ந்தே.

என அத்துவித விலக்கணஞ் சொல்லி,

சோதியேசுடரேசூழொளிவிளக்கேசுரிகுழற்பணைமுலைமடந்தை
பாதியேபரனேபால்கொள்வெண்ணீற்ருய்பங்கயத்தயனுமாலறியா
நீதியேசெல்வத்திருப்பெருந்துறையினிறைமலர்க்குருந்தமேவியசி
ராதியேயடியேனாதரித்தழைத்தாலதெந்துவேயென்றருள்வாயே.

திருந்துவார்பொழில்சூழ்திருப்பெருந்துறையிற்செழுமலர்க்குருந்தமேவியசீர்
இருந்தவாறெண்ணியேசஞ்நினைந்திட்டென்னுடையெம்பிரானென்றென்
றருந்தவாநினைந்தேயாதரித்தழைத்தாலலைகடலதனுளேநின்று
பொருந்தவாகயிலைபுகுநெறியிதுகாண்போதராயென்றருளாயே.

என மகாமாயாசுத்தி சொல்லி,

---

1 அடைக்கலம் - கையடை; 2 செத்திலே - இறந்திலேன்.
3 பொல்லா மணியைப் புணர்தல் - துவாரமிடாதமணியைக் கூடுதல்.

மாதிவர்பாகன்மறைபயின்றவாசகன்மாமலர்மேயசோதி
கோதில்பரங்கருணையடியார்குலாவுநீதிகுணமாகநல்கும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்புண்ணியன்மண்ணிடைவந்திழிந்
தாதிப்பிரமம்வெளிப்படுத்தவருளறிவாரெம்பிரானாவாரே,

அங்கணனெங்களமரர்பெம்மானடியார்க்கமுதனவனிவந்த
வெங்கள்பிரானிரும்பாசந்தீரவிகபரமாயதோரின்பமெய்தச்
சங்கங்கவர்ந்துவண்சாத்தினோடுஞ்சதுரன்பெருந்துறையாளியன்று
மங்கையர்மல்குமதுரைசேர்ந்தவகையறிவாரெம்பிரானாவாரே.

என அறிவித்தன்புறுத்தி,

பாருருவாயபிறப்பறவேண்டும்பத்திமையும்பெறவேண்டுஞ்
சீருருவாயசிவபெருமானேசெங்கமலமலர்போ
லாருருவாயவென்னாரமுதேயுன்னடியவர்தொகைநடுவே
யோருருவாய்நின்றிருவருள்காட்டியென்னையுமுய்யக்கொண்டருளே.

பாற்றிருநீற்றெம்பரமனைப்பரங்கருணையொடுமெதிர்ந்து
தோற்றிமெய்யடியார்க்கருட்டுறையளிக்குஞ்சோதியைநீதியிலேன்
போற்றியென்னமுதேநினைந்தேத்திப்புகழ்ந்தழைத்தலறியென்னுள்ளே
யாற்றுவனாகவுடையவனேயெனையாவவென்றருளாயே.

என ஒழியா வின்பத்துவகை தில்லையிலேகொண்டு,

வெய்யவினையிரண்டும்வெந்தகலமெய்யுருகிப்
பொய்யும்பொடியாகாதென்செய்கேன்—செய்ய
திருவார்பெருந்துறையான்றேனுந்துசெந்தீ
மருவாதிருந்தேன்மனத்து.

இன்பம்பெருக்கியிருளகற்றியெஞ்ஞான்றுந்
துன்பந்தொடர்வறுத்துச்சோதியா—யன்பமைத்துச்
சீரார்பெருந்துறையானென்னுடையசிந்தையே
யூராகக்கொண்டானுவந்து.

என அணைந்தோர் தன்மை கூறி,

பண்டாயநான்மறையும்பாலணுகாமாலயனுங்
கண்டாருமில்லைக்கடையேனைத்—தொண்டாகக்
கொண்டருளுங்கோகழியெங்கோமாற்குநெஞ்சமே
யுண்டாமோகைம்மாறுரை.

பேசும்பொருளுக்கிலக்கிதமாம்பேச்சிறந்த
மாசின்மணியின்மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையேயென்றுபிறப்பறுத்தேனல்ல
மருந்தினடியேன்மனத்தேவைத்து.

என அனுபவத்துக் கையமின்மையைச் சொல்லி,

போற்றியென்வாழ்முதலாகியபொருளே
புலர்ந்ததுபூங்கழற்கிணைதுணைமலர்கொண்
டேற்றிநின்திருமுகத்தெமக்கருண்மலரு
மெழிநகைகொண்டுநின்றிருவடிதொழுகோஞ்
சேற்றிதழ்க்கமலங்கண்மலருந்தண்வயல்சூழ்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
யேற்றுயர்கொடியுடையாயெனையுடையா
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

புவனியிற்போய்ப்பிறவாமையினாளும்
போக்குகின்றோமவமேயிந்தப்பூமி
சிவனுய்யக்கொள்கின்றவாறென்றுநோக்கித்
திருப்பெருந்துறையுறைவாய்திருமாலா
மவன்விருப்பெய்தவுமலரவனாசைப்
பட்வுநின்னலர்ந்தமெய்க்கருணைநீயு
மவனியிற்புகுந்தெமையாட்கொள்ளவல்லா
யாரமுதேபள்ளியெழுந்தருளாயே.

எனத் திரோதானசுத்தி சொல்லி,

இரும்புதருமனத்தேனையீர்த்தீர்த்தெனென்புருக்கிக்
கரும்புதருசுவையெனக்குக்காட்டினையுன்கழலிணைக
ளொருங்குதிரையுலவுசடையுடையானேநரிகளெல்லாம்
பெருங்குதிரையாக்கியவாறன்றேயுன்பேரருளே.

நானேயோதவஞ்செய்தேன்சிவாயநமவெனப்பெற்றேன்
தேனாயின்னமுதமுமாய்த்தித்திக்குஞ்சிவபெருமான்
றானேவந்தெனதுள்ளம்புகுந்தடியேற்கருள்செய்தா
னூனாருமுயிர்வாழ்க்கையொறுத்தன்றேவெறுத்திடவே.

எனச் சுட்டறிவொழித்து,

மின்னேரனையபூங்கழல்களடைந்தார்கடந்தார்வியனுலகம்
பொன்னேரனையமலர்கொண்டுபோற்றாநின்றாரமரரெல்லாம்
கன்னேரனையமனக்கடையாய்க்கழிப்புண்டவலக்கட்ல்வீழ்ந்த
வென்னேரனையேனினியுன்னைக்கூடும்வண்ணமியம்பாயே.

நரியைக்குதிரைப்பரியாக்கிஞாலமெல்லாநிகழ்வித்துப்
பெரியதென்னன்மதுரையெல்லாம்பிச்சதேற்றும்பெருந்துறையா
யரியபொருளேயவிநாசிப்பாண்டிவெள்ளமே.
தெரியவரியபரஞ்சோதிசெய்வதொன்றுமறியேனே.

என ஆனந்தமாலை யென்னும் சிவானுபவ விருப்பங்கொண்ட பாடல்கள் என தில்லையிற்பாடி,

பைந்நாப்படவரவேரல்குலுமைபாகமதாயென்
மெய்ந்நாடொறும்பிரியாவினைக்கேடாவிடைப்பாகா
செந்நாவலர்பரசும்புகழ்த்திருப்பெருந்துறையுறைவா
யெந்நாட்களித்தெந்நாளிறுமாக்கேனியானே,

வாண்பாவிய வுலகத்தவர் தவமேசெயவவமே
யூன்பாவியயுடலைச்சுமந்தடவிமரமானேன்
றேன்பாய்மலர்க்கொன்றைமன்னுதிருப்பெருந்துறையுறைவாய்
நான்பாவியனுனுனைநல்காயெனலாமே,

எனச் சிவானந்தமேவிடுதலைச் சொல்லி,

கலந்துநின்னடியாரோடன்றுவாளாக்ளித்திருந்தேன்
புலர்ந்துபோனகாலங்கள் புகுந்து நின்றதிடர்பின்ன
ளுலர்ந்துபோனேனுடையானேயுலவாவின்பச்சுடர்காண்பா
னலந்துபோனேனருள்செய்யாயார்வங்கூரவடியேற்கே.

கூடிக்கூடியுன்னடியார்குனிப்பார்சிரிப்பார்களிப்பாரா
வாடிவாடிவழியற்றேன்வற்றன்மரம்போனிற்பேனே
லூடியூடியுடையாயொடுகலந்துள்ளுருகிப்பெருகிநெக்
காடியாடியானந்தமதுவேயாகவருள்கலந்தே.

எனச் சதாமுத்திபாடி

பருவரைமங்கைதன்பங்கரைப்பாண்டியற்காரமுதா
மொருவரையொன்றுமிலாதவரைக் கழற்போதிறைஞ்சித்
தெருவரநின்றுருகிப்பரிமேற்கொண்டசேவகன
ரொருவரையன்றியுருவறியாதென்றனுள்ளமுதே.

கூற்றைவென்றுங்கைவர்கோக்களையும்வென்றிருந்தழகால்
வீற்றிருந்தான்பெருந்தேவியுந்தானுமோர்மீனவன்பா
லேற்றுவந்தாருயிருண்டதிறலொற்றைச்சேவகனே
தேற்றமிலாதவர்சேவடிசிக்கெனச்சேர்மின்களே.

எனச் சிவானந்த விளைவுசொல்லி,

(பாண்டியனுக்கென்று பாட்டில் வருகலாலே பாண்டி விருத்தமென்று இப்பதிகத்துக்குத் திருப்பெயராயிற்று.)

அங்ஙனந் தங்கியிருக்கப்பட்ட அடியார்களுடனே வாசஞ்செய்து சிலநாள் செல்ல அதற்கு முன்னே பரமசிவன் அனுக்க்கிரகித்தபடியே தடாகத்திலே அக்கினியைக்கண்டு நினைக்கத்தக்க அழகிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தைச் செபித்துக் காணும்படி பிரகாசம் பொருந்திய அக்கினியிலே கலந்திருக்கின்ற மிகுந்த அன்பையுடைய அடியார்களெல்லாம் போய் மூழ்கினர்கள். வீழ்ந்து மூழ்கினபோது உமாதேவியாருடனே கனகசபாபதியான கடவுள் இடபவாகனத்தின் மேலேறி உமாதேவியாருடனே முப்பத்து முக்கோடி தேவர்களும் சூழ்ந்துகொண்டு அழகிய பஞ்சதருக்களின் மலரைத் தூவித் தெரிசிக்க ஆகாயத்திலே எழுந்தருளிய மாத்திரத்தில் ஆழம் பொருந்திய தடாகத்தி லிருக்கின்ற அக்கினியில் மூழ்கிய அடியார்கள் தங்கள் துன்பமெல்லாம் நீங்கிச் சிவகண நாதர்களாய்த் திருவுருவங் கொண்டு பரமசிவ னெதிராக வந்து வணங்கினர்கள் துரியத்தின் முடிவில் விளங்கிய கடவுளும் வணங்கி யெழுகின்ற அடியார்களுடைய முகத்தைப்பார்த்து கொஞ்ச

நேரமாகிலும் நீங்காதவராகிய நீர் இங்கே நீங்கத் தனியே நாம் போனதும் திருக்குளத்தில் அக்கினியில் மூழ்குவீரென்று சொல்லியதும் என்னகாரணமெனில், உத்தமனென்கிற திருவாதவூரனை நிலைபெற்ற ஸ்ரீ சிதம்பரத்திலே புத்தரை வாதில் வெல்லும்படி நாம் இந்த பூமியின்மேல் வைத்தோம். நாம் நீங்கினால் மனம் வருந்தித் துன்பமடைவானென்பதுதெரிந்து உங்களையும் இந்த ஸ்தலத்திலே சில நாள் எம்முடன் வராதிருப்பீரென்று சொன்னோம். ஆணவம் கன்மம் மாயையென்னும் மலநீங்கினவர்களும் பூமியின்மேலே மானுடவடிவங் கொண்டு சில நாளாயினும் இருக்கின் மீண்டும் மலவாசனை சேருமென்று பலமலர்கள் தங்கிய தடாகத்திலே சொல்லுதற்கரிய ஞானாக்கினியைச் சேர்வித்துப் பொய்யாகத் தோன்றிய மாயாதேகத்தை வேகச்செய்து இந்தத் தேகத்தை இந்நாளிலே கொடுத்தருளினோமென்றார். இப்படியென்று அருளிச்செய்து கணநாதர்கள் எவ்விடத்திலும் நெருங்க, ஸ்ரீ சிதம்பரத்திலே கனகசபை விளங்கத் திருநடனஞ் செய்கின்ற நடராஜமூர்த்தியும் ஆகாயத்தில் மறைந்துவிட்டார். அப்போது நிறைந்த அறிவைத் தருகின்ற சிவநாமத்தையுடைய திருவாசகத் தமிழ் வேதத்தைச் சொல்வராகிய மாணிக்கவாசகர் வேறுகப் போய் செழுமையுள்ள ஒரு கொன்றைமர நிழலிலே பிரகாசத்துடனே சிவலோகஞ் சேர்ந்திருந்தார்.

அப்போது அடியார்கள் அக்கினியிலே புகுந்த விதமும் கடவுள் இட்ட வாகனத்தின்மேல் வந்தவிதமும் முன்னே நமக்கு வேண்டிய மெய்வங்கொண்டு கடவுளினுடைய திருவடியை வணங்கினவிதமும் இனிக் கனகசபையிலே தான் போயடைவதும் ஆகிய இவைகளெல்லாம் ஒரு காலத்திலே இன்பமிகுந்த உண்மை ஞானத்தைத் தருகின்ற சிவயோகத்திலே சுபாவத்துடனே மாணிக்கவாசகர் அறிந்துகொண்டு சிவந்த கையைக் குவித்துக் கண்களிலே ஆனந்த பாஷ்பங்களைச் சொரிந்து ஏகதேசமாகிய கடவுளே வந்து பின்னெங்கே யொளித்தீரென்று மயக்கமடைந்து பொய்கைக் கரைமீதில் வந்து கங்கையைத் தரித்த சடாமுடியையுடைய பரமசிவன் இடபவாகனத்திலேறிக் கண்ணெதிரே எழுந்தருளிய ஸ்தலமோ யென்று பூமியிலே விழுந்து அழுது ஐயோவென நொந்து தாய்க்குச் சமானமானவரே என்னை நீக்கி அன்பரைத் திருப்பொய்கையிலே அக்கினியை யுண்டாக்கி அதில் மூழ்கச்செய்து அவர்களை யாளலாமோ; பிரகாசிக்கின்ற வடிவுடையவரே! உமது கிருபையினாலே கூடுதல்செய்யாத தீவினையுடைய அடியேனுக்குத் துன்பத்தைக் கொடுத்து எங்கே யொளித்தீர் என நொந்து அந்த நிலையைத் தெளிந்து திருப்பொய்கையை விட்டு நீங்கி உயர்ந்த திருக்குருந்த நிழலிலே சொல்லுதற்கரிய நான்கு வேதங்களுந் தேடிக்காணாத திருவடிமலரைப்பற்றி வீழ்ந்து நிலைபெற்ற பூமியிலே யுள்ளவர்களுடைய தீவினைக்குக் காரணமாகிய பிறவி மாளும்படி இனிய அருளையுடைய திருச்சதகம்.

மெய்தானரும்பிவிதிர்விதிர்த்துன்விரையார்கழற்கென்
கைதான்தலைவைத்துக்கண்ணீர்ததும்பிவெதும்பியுள்ளம்
பொய்தான்தவிர்ந்துன்னைப்போற்றிசயசயபோற்றியென்னும்
கைதானெகிழவிடேனுடையாயென்னைக்கண்டுகொள்ளே.

பாடவேண்டுநான்போற்றிநின்னையேபாடிநைந்துநைந்துருகிநெக்குநெக்
காடவேண்டுநான்போற்றியம்பலத்தாடுநின்கழற்போதுநாயினேன்
கூடவேண்டுநான்போற்றியிப்புழுக்கூடுநீக்கெனைப்போற்றிபொய்யெலாம்
வீடவேண்டுநான்போற்றிவீடுதந்தருளுபோற்றிநின்மெய்யர்மெய்யனே.

இதில் பத்துவகைக் கருத்துக்கள் சொல்லி,

அங்கே புலம்பி நின்று இருக்குஞ்சமயத்தில் கடவு ளன்றருளிச் செய்ததையே மனதிலே நினைத்து பின்பு அந்த ஸ்தலத்தை வணங்கிக் கடவுளிடத்தில் விடை பெற்றுக்கொண்டு போய்த் திருவுத்தர கோச மங்கை யென்னும் ஸ்தலத்துக் கெழுந்தருளி அங்கு சடாபாரத்தை யுடைய பரமசிவனெழுந்தருளி யிருக்கின்ற திருக்கோயிலுக்குப் போய்த் தம்மைவந் தடிமை கொண்ட திருவுருவைக் காணுதவராய் மயக்கமடைந்து பெருமூச்சுவிட்டுக் கீழே விழுந்து என்னை விட்டுவிடுகின்ருயோ வென்று,

கடையவனேனைக்கருணையினுற்கவந்தாண்டுகொண்ட
விடையவனேவிட்டிடுதிகண்டாய்விறல்வேங்கையின்ருே
லுடையவனேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
சடையவனே தளர்ந்தேனெம்பிரானென்னைத்தாங்கிக்கொள்ளே,

ஏசினும்யானுன்னையேத்தினுமென்பிழைக்கேகுழைந்து
வேசறுவேனைவிடுதிகண்டாய்செம்பவளவெற்பிற்
றேசுடையாயென்னையாளுடையாய்சிற்றுயிர்க்கிரங்கிக்
காய்ச்சினவாலமுண்டாயமுதுண்ணக்கடையவனே.

அவ்வாறு தெரிவித்தால் விடாதே கொள்ளென்று பிரபஞ்ச வைராக்கியஞ் சொல்ல,

அப்போது கடவுள் தமது பழைய திருவடியைக் காண்பிக்க அங்கே கண்டுகொண்டு வணங்கிச் சிலநாளந்த ஸ்தலத்திலிருந்து தமது கடவுள் சொற்படியேபோய் நிகரற்ற அநேக தெய்வ ஸ்தலங்களை வணங்கி நீங்கிச் சோழநாட்டுக்குப் போய்த் திருவிடை மருதூரிற் சேர்ந்து அந்த ஸ்தலத்தை வணங்கின பின்பு அன்புடனே திருவாருருக்குப் போய்ச் சொல்லுதற்கரிய தியாகராஜருடைய திருவடித் தாமரைகளை வணங்கி,

பூங்கமலத்தயனெடுமாலறியாதநெறியானே
கோங்கலர்சேர்குவிமுலையாள்கூறுவெண்ணீறுடி
யோன்கெயில்சூழ்திருவாரூருடையானேயடியேனின்
பூங்கழல்களவையல்லாதெவையாதும்புகழேனே.

உற்றாரையான்வேண்டேனூர்வேண்டேன்பேர்வேண்டேன்
கற்றாரையான்வேண்டேன்கற்பனவுமினியமையுங்
குற்றாலத்தமர்ந்துறையுங்கூத்தாவுன்குரைகழற்கே
கற்றாவின்மனம்போலக்கசிந்துருகவேண்டுவனே.

என்று சிவானந்த முதிர்வு கொண்டு,

தமது இளைப்புநீங்க வணங்கிப் பரமசிவனால் அனுக்கிரகஞ் செய்யப்பட்ட ஸ்தலங்களெல்லாம் தப்பாமல் வணங்கி நீங்கி விசாலம் பொருந்திய மதில்சூழ்ந்த சீகாழியிற் சேர்ந்து மலையென்று சொல்லும்படி விளங்குகின்ற ஆலயத்தினுடைய திருக்கோபுர வாசலைக் கடந்து போய் அது ஸ்ரீ கயிலாசமாகிய செய்தியைக்கண்டு வணங்கும்பொழுது சிற்சபையிலே நிருத்தஞ் செய்த திருவடித் தாமரையைப் பிடித்துக் கொண்டு,

உம்பர்கட்கரசேயொழிவறநிறைந்தயோகமேயூற்றையேன்தனக்கு
வம்பெனப்பழுத்தென்குடிமுழுதாண்டுவாழ்வறவாழ்வித்தமருந்தே
செம்பொருட்டுணிவேசீருடைக்கழலேசெல்வமேசிவபெருமானே
யெம்பொருட்டுன்னைச்சிக்கெனப் 1 பிடித்தேனெங்கெழுந்தருளுவதினியே.

புன்புலால்யாக்கைபுரைகனியம்பொன்னெடுங்கோயிலாப்புகுந்தென்
னென்பெலாமுருக்கியெளியையாண்டவீசனேமாசிலாமணியே
துன்பமேபிறப்பேயிறப்பொடுமயக்காந்தொடக்கெலாமறுத்தாற்சோதீ
யின்பமேவுன்னைச்சிக்கெனப்பிடித்தேனெங்கெழுந்தருளுவதினியே,

என முத்திக் கலப்புரைத்து,

பின்புறத்திற் பிரகாசிக்கின்ற சடாபாரத்தையுடைய கடவுளின் திருமுன்னே பிடித்த பத்தென்பதை அருளிச்செய்தார். பழவினைப் பகையுள்ளவர்கள் வணங்கினால் யாவரும் யமனை வெல்வார்களென்று அந்த ஸ்தலத்திலே விருப்புடனே சில நாள் வாசஞ் செய்து பின்பு அந்த ஸ்தலத்தை விட்டு வளத்தையுடைய திருக்கழுக்குன்றத்தில் அன்பாய்ச் செல்வதற்குச் சம்மதித்துத் தில்லைநகரைத் திசைகுறித்து வணங்கிப் போய் நெடிய வடக்குத் திசையிலே வந்து பிரகாசங்குறையாத மணிமுத்தா நதி சூழ்ந்த விருத்தாசலத்தை வணங்கிப் பின்பு உயர்ந்த திருவருட்டுறையென்று பெரியோர்கள் நினைத்து வசிக்கின்ற திருவெண்ணெய் நல்லூரிற் சேர்ந்து அந்த ஸ்தலத்தை வணங்கிப் பின்பு அன்புடனே நீங்கி நல்ல வழியிலே போய் நடுநாட்டையும் உயர்ந்த காட்டையும் அச்சத்தைத் தருகின்றயானையுஞ் சிங்கமும் வாசஞ் செய்கின்ற மலைகளையுங் கடந்து நிலைபெற்ற திருவண்ணாமலைக்குச் சமீபத்தில் வந்து உப்பரிகைகளும், கோபுரங்களும், நிலைபெற்ற ரத்தினங்களும், முத்துக்களும் பதித்த மதில்களும், பெரிய தோரணங்களையுடைய முகப்பும், நீண்ட கமுகங் காடுகளும், நெருங்கி

1 பிடித்தல் - பற்றுதல்

யுள்ள குளிர்ந்தசோலைகளையுங்கண்டு மகிழ்ச்சியடைந்து அருணாசலத்தைக் கண்டு அன்று பிரம்மவிஷ்ணுக்கள் தேட, அக்கினிமலையாய் நின்ற வடிவமோ, அல்லது மனத்திலே நிறைந்த பெரிய வாழ்வோ வென்று வணங்கிக் கிருபை கொண்டு செழுமைபொருந்திய அருணை மாநகரத்திற் புகுந்து சந்நிதிவீதியிற்போய் மலர்மாலையும் மூன்றும் பிறையும் சர்ப்பமும் ஊமத்தைமலரும் திருமுடியின்மேல்வைத்த அண்ணுமலையாருடைய திருக்கோயிலை வணங்கித் தம்மை அன்று வந்தாண்ட திருவுருவைக் கண்டு மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் தேவர்களும் உனக்கடைக்கலமென்று முறையிடும்போதில் ஆலகாலமுண்டிருந்த கண்டத்தை யுடையவனே போற்றி, அதிகரிக்கின்ற பிறவிநோய் நீங்கத் தேவரும் மனிதரும் பசுப்பாலுடன் அல்லது உமாதேவி பாகத்துடனே கலந்து உட்கொள்கின்ற குளிர்ச்சியுள்ள மலைமருந்தே போற்றி, மகாவிஷ்ணு வராகமாய் நீண்ட பூமியைப் பிளந்துங்காணாத திருவடிகளை என்தலைமேல் வைத்த பெரிய கிருபைக்கடலே போற்றி, பூவுலகத்தை ரட்சிக்கின்ற உண்ணாமுலை யென்னும் பச்சை மேனியுடைய கொடியை இடது பாகத்திற்கொண்ட சிவந்த பொன்மலையே போற்றி போற்றி, வெல்லுதல்செய்த துர்க்கையானவள் மகிடாசூரனைக் கொன்ற பாவந்தீர நினைத்துப் போற்ற அருள் செய்தவனே போற்றி, அன்றெழுந்தருளி வந்து என்னையடிமை கொண்டாண்ட அணியண்ணாமலையானே போற்றி யென்று அன்பினாலே ஏத்தி வணங்கி அங்கே வசித்திருந்தார்.

அப்படி வசித்திருக்கும்போது அழகினைக் கொண்ட பேதை-பெதும்பை - மங்கை- மடந்தை அரிவை- தெரிவை - பேரிளம் பெண் என்னும் ஏழுவகைப்பருவ மங்கையர்களெல்லாம் மார்கழிமாதத்தில் திருவாதிரைக்குமுன்னே பத்துத் தினங்களிளெல்லாம் மேன்மை பொருந்திய வீடுகள்தோறும் போய் அழைத்துக்கொண்டு விடியற் காலத்தில் இவர்களெல்லாங்கூடித் தீர்த்தத்திலேபோய் ஸ்நானஞ் செய்வார்கள். அவர்களுடைய வியற்கையைக்கண்ட மாணிக்கவாசகர் மங்கையர்கள் சொன்னதாக நிலைபெற்ற,

ஆதியுமந்தமுமில்லா வரும்பெருஞ்
சோதியையாம்பாடக் கேட்டேயும்வாட்டடங்கண்
மாதேவளருதியோவன் செவியோநின்செவிதான்
மாதேவன்வார்கழல்கள் வாழ்த்தியவாழ்த்தொலிபோய்
வீதிவாய்க்கேட்டலுமே விம்மிவிம்மிமெய்ம்மறந்து
போதாரமளியின்மே னின்றும்புரண்டிங்ங
னேதேனுமாகாள் கிடந்தாளென்னேயென்னே
யீதேயெம்தோழி [1]பரிசேலோரெம்பாவாய்

---

1 ஏல்-ஏலுகின்ற, ஓர் -ஒப்பற்ற, பாவாய்-பாவைபோன்ற பெண் தெய்வமே என அக்கால விரத தெய்வததை நோக்கி ஈதே யெந்தோழி பரிசென அன்வயமாக்குக. இனி இவை போல்வன வெல்லாம் இன்ன.

போற்றியருளுகநின் னாதியாம்பாதமலர்
போற்றியருளுகநின் னந்தமாஞ்செந்தளிர்கள்
போற்றியெல்லாவுயிர்க்குந் தோற்றமாம்பொற்பாதம்
போற்றியெல்லாவுயிர்க்கும் போகமாப்பூங்கழல்கள்
போற்றியெல்லாவுயிர்க்கு மீறுமிணையடிகள்
போற்றிமாலுநான்முகனுங் காணாதபுண்டரிகம்
போற்றியாமுய்யவாட் கொண்டருளும்பொன்மலர்கள்
போற்றியாமார்கழிநீ ராடேலோரெம்பவாய்.

எனச் சத்தியை வியந்து,

திருவெம்பாவை சொன்னபின்பு மங்கையர்கள் பாடியாடுகின்ற அழகினைக்கொண்ட அம்மனையைக்க கண்ட மாணிக்கவாசகர் அவர்கள் சொன்ன பாடலாக,

செங்கணெடுமாலுஞ்சென்றிடந்துங்காண்பரிய
பொங்குமலர்ப்பாதம்பூதலத்தேபோந்தருளி
யெங்கள்பிறப்பறுத்திட்டெந்தரமுமாட்கொண்டு
தெங்குதிரள்சோலைத்தென்னன்பெருந்துறையா
னங்கணனந்தணனாயறைகூவிவீடருளு
மங்கருணைவார்கழலேபாடுதுங்காணம்மானாய்.

பெற்றிபிறர்க்கரியபெம்மான்பெருந்துறையான்
கொற்றக்குதிரையின்மேல்வந்தருளித்தன்னடியார்
குற்றங்களைந்துக்குணங்கொண்டுகோதாட்டிச்
சுற்றியசுற்றத்தொடர்வறுப்பன்றொல்புகழே
பற்றியிப்பாசத்தைப்பற்றறநாம்பற்றுவான்
பற்றியபேரானந்தம்பாடுதுங்கா 1 ணம்மானாய்.

என ஆனந்தக்களிப்புகொண்டு,

பின்பு மேன்மை பொருந்திய அந்த திருவண்ணாமலையை நீங்கி அன்புடனே ஸ்ரீ காஞ்சிமாநகரில் வந்து ஏகாம்பரத்தி லேகம்பரை வணங்கித் தெரிதற்கரிய திருக்காமக்கோட்டத்தில் காமாட்சியினுடைய சிறிய இரண்டு திருவடிகளையும் வணங்கி தேவர்கள் வரங்களைக் குறித்து வணங்குகின்ற தெய்வீகமுள்ள வளத்தையுடைய திருக்கழுக்குன்றத்துக் கெழுந்தருளி வேதகிரிநாதரை வணங்கி யான் கலங்காதபடி,

பிணக்கிலாதபெருந்துறைப்பெருமானுன்னாமங்கள்பேசுவார்க்
கிணக்கிலாததோரின்பமேவருந்துன்பமேதுடைத்தெம்பிரா
னுணக்கிலாததோர்வித்துமேல்விளையாமலேன்வினையொத்தபின்
கணக்கிலாத்திருக்கோலநீவந்துகாட்டினாய்க்கழுக்குன்றிலே.

---

1 அம்மனை - மகளிர் கைகளிற் கொண்டாடுவது.

இயக்குமாரறுபத்துநால்வரையெண்குணஞ்செய்தவீசனே
மயக்கமாயதொர்மும்மலப்பழவல்வினைக்குளழுந்தவுந்
துயக்கறுத்தெனையாண்டுகொண்டுநின்றாய்மலர்க்கழறந்தெனைக்
கயக்கவைத்தடியார்முனேவந்துகாட்டினாய்க்கழுக்குன்றிலே.

என்று திருக்கழுக்குன்றத்திலே குருதரிசனஞ் செய்துகொண்டு.

அங்கு சிலநாள் வசித்து வேதகிரிப் பெருமானைப் பணிந்து போற்றிப் பின்பு மத்தியப் பிரதேசத்திலே யிருந்துள்ள ஸ்தலங்களும் காடுகளும் கரிய விசாலமாகிய மலைகளும், சோலைகளும், தடாகங்களும், நதிகளும் கடந்து படத்தையுடைய வெய்ய சர்ப்பத்தோடு விளையாடி நரிகளை யெல்லாங் குதிரையாக்கிய சித்தராகிய கடவுள் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளுகின்ற அழகிய தில்லைமாநகர் மூன்றுகாதவழி யென்று சொல்ல எழுந்தருளினார்.

மாணிக்கவாசகர் புலியூராகிய ஸ்ரீ சிதம்பரத்தின் வழியாகச் சென்று உயர்வு பொருந்திய மதிலும் சிற்பத்தொழிலின் மிகுந்த கோபுர வரிசைகளும் சிவந்த கும்பங்கள் பிரகாசிக்கின்ற அநேக வுப்பரிகைகளும் பார்க்குந்தோறும் அழகினைச் செய்வது கண்டு அஞ்சலியஸ்தராய் புகழ்ச்சிசெய்து மகிழ்ச்சிகொண்டு அந்தத் தில்லைமா நகரத்தில் நெடிய வீதிகளைக் கடந்து மலைபோற் பொருந்திய உயர்ந்த கோபுரவாசலின் வழியாகப் புகுந்து சிற்சபையை எதிரே கண்டு பொன்னம்பலத்திலே நின்று திருக்கூத்தாடிய நடராஜப் பெருமானைத் தம்முடைய சிரசிலே அந்த நாளிலே திருவடிகளைச் சூடிய குருவுருவமாகக் கண்டு இந்தச் சகத்துக்கெல்லாம் அரசனே, உயிருக்கொப்பானவனே, சபாநாயகனே, உனக்கு அடைக்கலமென்று சொல்லிப் பலதரம் அன்புடனே தொழுது மிகவு மழுது இரண்டு கண்களும் ஆனந்தபாஷ்பம் பொழிய நமஸ்காரம் பண்ணித் திருவடிகளை முடியிற் சூட்டிக்கொண்டு பின்பு எழுந்து அன்புடனே குறைவில்லாத திருவருள் நிறைந்து வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவி பாகனாகிய கடவுளை,

இந்திரியவ்யமயங்கி யிறப்பதற்கேகாரணமா
யந்தரமேதிரிந்துபோ யருநரகில்வீழ்வேற்குச்
சிந்தைதனைத்தெளிவித்துச் சிவமாக்கியெனையாண்ட
வந்தமிலாவானந்த மணிக்கொடில்லைகண்டேனே.

பூதங்களைந்தாகிப் புலனாகிப்பொருளாகிப்
பேதங்களனைத்துமாய்ப் பேதமிலாபெருமையனைக்
கேதங்கள்கெடுத்தாண்ட கிளரொளியைமரகதத்தை
வேதங்கடொழுதேத்தும் விளங்குதில்லை 1 கண்டேனே.

என நிருத்ததரிசனஞ் செய்து,

குறைவில்லாத கிருபையுடைய திருமூல ஸ்தானத்தி லெழுந்தருளியிருக்கும் சிவலிங்கமாகிய சோதியும் பொற்சபையாகிய சிதாகாசத்

1 கண்டேன் - தரிசித்தேன்.

திலே மகிழ்ந்து நிருத்தஞ் செய்கின்ற சோதியும் ஒன்றென்று சொல்லும் அனுபூதியிலிருந்து ஒரு செயலு மில்லாதவராய் அசைவற்ற ஒரு சித்திரம் போலானுர்.

அப்போது மெய்காவற்காரர்கள் கருமைபொருந்திய கூந்தலையுடைய உமாதேவிபாகராகிய சபாநாயகரை வழிபடுவது மறந்து கையும் காலும் அசைவில்லாமலிருக்கின்றன கண்ணுங் கொஞ்சமாயினும் இமைக்கவில்லை செய்யுங்காரியம் என்னே; இது தெளியாத மயக்கமா யிருக்கிறதென்று மாணிக்கவாசகரை இனி அழகிய சபையை விட்டுப்போ மென்ருர்கள். மெய்காவற்காரர் சொன்னது கேட்டு தாண்டவம் புரிகின்ற அறிவின்மையினது பழைமையை நாடிக் காணத்தக்க துரியாதீதமாகிய மிகுந்த பரத்தினுடைய ஒளியிலே மூழ்கிப் பரவசப்பட்டு நீண்ட ஒரு ஸ்தம்பமாகி நெடுநாழிகை நின்ருர். அக்காலையில் மெய்காவற்காரர் இவர் போமென்ருல் போகார். ஒன்றும் பேசார் பயித்தியங்கொண்டவ ராகுமென்று பயந்து நின்று இரங்கும்போது இறந்த தேகத்திற்கு உயிர் வந்தடைந்த தன்மையைப்போல அஞ்சலி செய்த தாமரை மலர்போன்ற திருக்கரங்களை முடிமேற்கொண்டு சிவ சிவபோற்றி என்று ஆதியாகிய கடவுளுடைய பொன்னம்பலத்தை மூன்றுதரம் வலங்கொண்டு அங்கே தமக்கு நிகரில்லாத திருமூலஸ்தானக் கடவுளை வணங்கிப் பின்பு உமாதேவி திருவடிகளை அன்புடனே வணங்கி அந்தப் பொன்னொளியையுடைய கோயிற்கு மேற்பக்கத்தில் திருப்புலீச்சரத்தி லடைந்து அந்தக் கடவுளுடைய தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கி அதற்கருகே திருநாகேச்சரத்திலிருந்த பரமசிவனுடைய திருவடிகளை வணங்கி நீங்கித் திருத்தமாகிய தில்லை மூவாயிரவர் வாழுகின்ற ஸ்ரீ சிதம்பரத்தைச் சூழ்ந்து வீதியிற் போகும்போது அமிர்தமாகிய திருவாசகஞ் சொல்லத் தொடங்கி,

ஓடுங்கவந்தியுமேயுறவென் றிட்டுன்கசிந்து
தேடும்பொருளுஞ்சிவன் கழலேயெனத்தெளிந்து
கூடுமுயிருங்குமண்டை யிடக்குனித்தடியே
ளுடுங்குலாத்தில்லை யாண்டானைக்கொண்டன்றே.

கொம்மைவரிமுலைக் கொம்பனையாள்கூறனுக்குச்
செம்மைமனத்தாற் திருப்பணிகள்செய்வேனுக்
கெம்மைதரும்பயனித்தனையு மிங்கொழிக்கு
மம்மை 1 குலாத்தில்லை யாண்டானைக்கொண்டன்றே.

என அனுபவமிடையிடு படாமையாய்,

*மாறிநின்றென்னைமயக்கிடும் வஞ்சப்புலனைந்தின்வழியடைத்தமுதே*
*யூறிநின்றென்னுளெழுபரஞ்சோதி யுள்ளவாகாணவந்தருள்வாய்*
*தேறலின்தெளிவேசிவபெருமானே திருப்பெருந்துறையுறைசிவனே*
*யீறிலாப்பதங்களியாவையுங்கடந்த வின்பமேயென்னுடையன்பே.*

---

1 குலாத்தில்லை — கொண்டாடுந் தில்லை.

தந்ததுன்றன்னைக்கொண்டதென்றன்னைச் சங்கராவார்கொலோசதுர
ரந்தமொன்றில்லாவானந்தம்பெற்றே னியாதுநீபெற்றதொன்றென்பாற்
சிந்தையே 1 கோயில்கொண்டவெம்பெருமான் றிருப்பெருந்துறையுறைசிவனே
எந்தையே யீசாவுடலிடங்கொண்டா யானிதற்கிலனோர்கைம்மாறே.

என அனுபோகவிலக்கணஞ் சொல்லி,

உடையாளுன்றனடுவிருக்குமுடையாணடுவுணீயிருத்தி
யடியேளடுவுளிருவீருமிருப்பதாலைடியேனுன்
னடியார்நடுவுளிருக்கு மருளைப்புரியாய்பொன்னம்பலத்தெம்
முடியாமுதலேயென்கருத்துமுடியும்வண்ணமுன்னின்றே.

நல்காதொழியானமக்கென்றுன்னுமம்பிதற்றிநயனநீர்
மல்காவாழ்த்தாவாய்குழறுவணங்காமனத்தானினைந்துருகிப்
பல்காலுன்னைப்பாவித்துப்பரவிப்பொன்னம்பலமென்றே
யொல்காநிற்குமுயிர்க்கிரங்கியருளாயென்னையுடையானே.

என அநாதியாகிய சற்காரியங் கூறி,

தில்லைமூதூராடியதிருவடி
பல்லுயிரெல்லாம்பயின்றனனுகி
* * *
பொலிதருபுலியூர்ப்புக்கினிதருளின
னொலிதருகயிலையுயர்கிழவோனே.

என சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை கூறி,

2 அண்டப்பகுதியினுண்டைப்பிறக்க
மளப்பருந்தன்மைவளப்பெருங்காட்சி
* * *
அருளொடுபராவமுதாக்கினன்
பிரமன் மாலறியாப்பற்றியோனே.

எனச் சிவனது தூலசூக்குமத்தை வியந்து

நான்முகன்முதலானவானவர்தொழுதெழ
வீரடியாலேமூவுலகளந்து
* * *
3 போற்றிபோற்றிபுராணகாரண
போற்றிபோற்றிசயசயபோற்றி

எனச் சகத்தினுற்பத்தி கூறி,

இப்படி மூன்றகவலும் பாடியருளினர். அவ்விடத்தில் மாதர்க ளெல்லாம் கைகளிலே யிருக்கின்ற சங்கவளையல்கள் சத்திக்கச் செம் பொன்னுற்செய்த கிண்கிணிகள் சத்திக்க மயிற்சாந்து பூசிய கரிய கூந்தலின்மேல் வண்டுகள் மயங்கி இசையைப்பாடத் தேகத்திலே வியர்வையுண்டாக வெவ்விய போர் செய்கின்ற கண்ணுகிய கயல் களைப் புரட்டிப் பக்கங்களிலே இந்த வகையாக நின்று திருப்பொற்

1 கோயில் - ஸ்ரீ சிதம்பரம். 2 அண்டப்பகுதி – ஆகாயமாகியமுதல்.
3 போற்றி பல்லாண்டு.

சுண்ணம் இடித்தார்கள். மாணிக்கவாசகர் அந்த மாதர்களுடைய பாடல்களைக் கேட்டு அவர்கள் சொல்லியதாக மெய்ம்மையாகிய தமிழினால் நன்மை மிகுந்த,

முத்துநற்றாமம்பூமாலைதூக்கி முளைக்குடந்தூபநற்றீபம்வைம்மின்
சத்தியுஞ்சோமியும்பார்மகளுநாமகளோடுபல்லாண்டிசைமின்
சித்தியுங்கௌரியும்பார்ப்பதியுங் கங்கையும்வந்துகவரிகொண்மி
னத்தனையாறனம்மானைப்பாடியாடப் 1 பொற்கண்ணமிடித்துநாமே.

வேதமும்வேள்வியுமாயினார்க்கு மெய்ம்மையும்பொய்ம்மையுமாயினார்க்
சோதியுமாயிருளாயினார்க்குத்துன்ப முமாயின்பமுமாயினார்க்குப் [குச்
பாதியுமாய்முற்றுமாயினார்க்குப் பந்தமுமாய்வீடுமாயினருக்
காதியுமந்தமுமாயினருக்காடப் பொற்சுண்ணமிடித்துநாமே.

என ஆனந்தமனோலயங் கூறி,

மேகங்கள் பிரகாசிக்கின்ற சோலையினிடத்தே வருமளவில் அங்கே தங்கள் தங்களுக்குள்ளே விளையாடுகின்ற பெண் பிள்ளைகளைப் பார்த்து வீண் பேச்சுச் சிறிதுமில்லாமல் எமது கடவுளையே, சொல்லுங்கள் நீங்களென்று அவர்கள் சொல்லியதாக,

திருமாலும்பன்றியாய்ச்சென் றுணராத்திருவடியை
யுருநாமறியவோரந்தணனா யாண்டுகொண்டா
னொருநாமமோருருவமொன்று மில்லாற்காயிரந்
திருநாமம்பாடியாந் 2 தெள்ளேணங்கொட்டாமோ.

குலம்பாடிக்கொக்கிற கும்பாடிக்கோல்வளையா
ணலம்பாடிநஞ்சுண்டவா பாடிநாடோறு
மலம்பார்புனற்றில்லை யம்பலத்தேயாடுகின்ற
சிலம்பாடல்பாடிநாந் தெள்ளேணங்கொட்டாமோ.

எனச் சிவனோடடைவாய்,

வளைந்ததுவில்லுவிளைந்ததுபூச, லுளைந்தன முப்புரமுந்தீபற
வொருங்குடன் வெந்தவாறுந்தீபற
தேரைநிறுத்திமலையெடுத்தான்சிர, மீரைந்துமிற்றவா 3 றுந்தீபற
விருபதுமிற்றதென்றுந்தீபற.

என ஞானவெற்றிகொண்டு,

பூத்தாரும்பொய்கைப்புன லிதுவேயெனக்கருதிப்
பேய்த்தேர்முகக்குறும் பேதைகுணமாகாமே
தீர்த்தாய்நிகழ்தில்லையம் பலந்தேதிருநடஞ்செய்
கூத்தாவுன்சேவடிகூடும் வண்ணந்தோணோக்கம்.

---

1 பொற்சுண்ணம் - பொன்னிறமான மஞ்சட் பொடியிது; திருமஞ்சனப்பொடி.
2 தெள்ளேணம் தெள் - துள்ளாய்-துள்ளல் - அதிர்தல்-தெள்ளேணம் - அதிர் முரசு ஏணம்-மான்றோல்; அது கடமைத்தோலாற் கட்டியமுரசு. கடமை – எருமை போல்வது.
3 உந்தீபற யிகுமிதமுற - உந்திபறந்துவிளையாடல். உந்தல்-வாய்க்காற்று வெளியே செல்லவூதல்; இது இக்காலத்தே தும்பிபறத்தல் என மரீஇற்று.

உரைமாண்டவுள்ளொளி யுத்தமன்வந்துளம்புகலுங்
கரைமாண்டகாமப்பெருங் சுடலைக்கடத்தலுமே
யிரைமாண்டவிந்திரியப் பறவையிரிந்தோடத்
துரைமாண்டவாபாடி 1 தோணோக்கமாடாமோ.

எனப் பிரபஞ்சசுத்தி சொல்லி,

இணையார்திருவடியென்றலை மேல்வைத்தலுமே
துணையானசுற்றங்களத்தனையுந் துறந்தொழிந்தே
னணையார்புனற்றில்லையம் பலத்தேயாடுகின்ற
புனையானன்சீர்பாடிப் பூவல்லிகொய்யாமோ.

அத்தியுரித்துபோர்த்தருளும் பெருந்துறையான்
பித்தவடிவுகொண்டிவ் வுலகிற்பிள்ளையுமா
முத்திமுழுமுதலுத்தர கோசமங்கைவள்ளல்
புத்திபுகுந்தவா 2 பூவல்லிகொய்யாமோ.

என மாயாவிசய நீக்கி,

சீரார்பவளங்கான் முத்தங்கயிருக
வேராரும்பொற்பலகை யேறியினிதமர்ந்து
நாராயணனறியா நாண்மலர்த்தாளுயடியேற்
கூராகத்தந்தருளு முத்தரகோசமங்கை
யாராவமுதினருட்டாளிணைபாடிப்
போராற்வேற்கண்மடவீர் பொன்னூசலாடாமோ.

தெங்குலவுசோலைத்திருவுத்தரகோசமங்கை
தங்குலவுசோதித்தனியுருவம்வந்தருளி
யெங்கள்பிறப்பறுத்திட்டெந்தரமுமாட்கொள்வான்
பங்குலவுகோதையுந்தானும்பணிகொண்ட
கொங்குலவுகொன்றைச்சடையான்குணம்பரவிப்
பொங்குலவுபூண்முலையீர்பொன்னூசலாடமோ-

என அருட்சுத்தி சொல்லி,

அங்கே ஒருபெண் சிறந்த தனது தாயைப் பார்த்துச் சொல்லிய இசையை யுடைய சொல்லெனத்தக்க,

வேதமொழியர்வெண்ணீற்றர்செம்மேனியர்
நாதப்பறையினரன்னேயென்னும்
நாதப்பறையினர்நான்முகன்மாலுக்கு
நாதரிந்நாதனுரன்னேயென்னும்.

---

1 சுனையாடல் நீராடலென்றுற்போல். தேணோக்கமாடல் – ஐவகைப்புணர்சி சியுளொன்று.

2 பூவல்லிகொய்யாமோ- பூவை வல்லியிற்கொய்து விளை [illegible]டலாமோ; வல்லி கொடி, இது கொடிமுல்லை- கொடிமல்லிகை- தாமரைக்கொடி- அல்லிக்கொடி. என்றுலும் பத்திர புஷ்பங்களுக்கெல்லாம் உபலக்ஷணம்,

கொன்றைமதியமுங்கூவிளமத்தமுந்
துன்றியசென்னியரன்னேயென்னும்
துன்றியசென்னியின்மத்தமுன்மத்தமே
யின்றெனக்காணவா 1 றன்னேயென்னும்

என ஆத்துமபூரணஞ் சொல்லி,

பக்கங்களிற் பாடுகின்ற தும்பியை விரும்பிப் பார்த்துக் கடவுளுடைய திருவடியைத் துதிசெய்யென்று,

பூவேறுகோனும்புரந் தானும்பொற்பமைந்த
நாவேறுசெல்வியு நாரணனுநான்மறையு
மாவேறுசோதியும் வானவருந்தாமறியாற்
சேவேறுசேவடிக்கே சென்றூதாய் 2 கோத்தும்பீ.

பூமேலயனோடுமாலும் புகலரிதென்
றேமாறிநிற்கவடியேனிறுமாக்க
தாய்மேற்றவிசிட்டு நன்றுப்பொருட்படுத்த
தீமேனியானுக்கே சென்றூதாய்கோத்தும்பீ.

என சிவனோடைக்கியமாய்,

சோலையின் மத்தியிலே வாழ்கின்ற குயிலைப்பார்த்து அழகிய இளங்குயிலே இங்கே எமது கடவுளைக் கூவியழைப்பா யென்பதாகிய,

தேமினிய 3 குயிலேகேட்டியே லெங்கள்பெருமான்
பாதமிரண்டும்வினவிற் பாதாளமேழினுக்கப்பாற்
சோதிமணிமுடிசொல்லிற் சொல்லிறந்துநின்றதொன்மை
யாதிகுணமொன்றுமில் லான்றமிலான்வரக்கூவாய்.

கொத்தணவும்பொழிற்சோலைக் கூங்குயிலேயிதுகேணீ
யந்தணனாகிவந்திங்கே யழகியசேவடிகாட்டி
யெந்தமராயிரவனென்றிங் கென்னையுமாட்கொண்டருளுஞ்
செந்தழல்போற்றிருமேனித் தேவர்பிரான்வரக்கூவாய்.

என ஆத்துமவிரக்கஞ் சொல்லி,

கிளியைப்பார்த்துச் சந்திரனைத்தரித்த கடவுளைச் சொல்லென்று,

ஏராரிளங்கிளியேயெங்கள் பெருந்துறைக்கோன்
சீரார்திருநாமந்தேர்ந் துரையா—யாரூரன்
செம்பெருமான்வெண்மலரான் பாற்கடலான்செப்புவபோ
லெம்பெருமான்தேவர் பிரானென்று.

சோலைப்பசுங்கிளியே தூநீர்ப்பெருந்துறைக்கோன்
கோலம்பொலியுங் கொடிகூறாய்—சாலவு
மேதிலார்துண்ணென்னமேல் விளங்கியேர்காட்டுங்
கோதிலா வேறுங்கொடி.

என அடிமைகொண்ட முறைமை சொல்லி,

---

1 அன்னே - தாய். 2 கோத்தும்பீ-தெய்வலோக வண்டு. 3 குயில்-கோகிலம்

பூமியிலே தம்மை அடிமைகொண்ட கடவுளையல்லாமல் வேறொருவரைத் தெய்வமென்பதற்கு அஞ்சுகின்றேன் வினையை யுடையேனென்னும் சிறந்த பண்ணையுடைய,

புற்றில்வாளரவுமஞ்சேன் பொய்யர்தம்மெய்யுமஞ்சேன்
கற்றவார்சடையெம்மண்ணல் கண்ணுதல்பாதநண்ணி
மற்றுமோர்தெய்வந்தன்னை யுண்டெனநினைந்தெம்பெம்மாற்
கற்றிலாதவரைக்கண்டா லம்மநாமஞ்சுமாறே

கோணிலாவாளியஞ்சேன் கூற்றுவன்சீற்றமஞ்சே
வீணிலாவணியினானை நினைந்துநைந்துருகிநெக்கு
வாணிலாங்கண்கள்சோர வாழ்த்திநின்றேத்தமாட்டா
வாணலாதவரைக்கண்டா லம்மநாமஞ்சுமாறே.

என ஆனந்தமுற்று,

பின்பு அந்நகர்ப்புறத்திலே ஒரு பர்ணசாலைசெய்து அங்கிருந்தார். வேதாந்தப் பொருளாகிய இந்தத் திருவாசகத் தமிழைச் சொல்லிய மாணிக்கவாசகருடைய செய்தியனைத்தும் அரிய புகழுடைய தில்லையிலுள்ளவர் யாவருந் தங்கள் கூட்டங்கள் தோறுஞ் சொல்லிச் சொல்லி நல்ல மகிழ்ச்சி பெற்று அதிசயித்தார்கள். மாணிக்கவாசகர் தத்துவத்தின் முடிவிலே விளங்குகின்ற சபாநாயகரது திருநிருத்தத்தைத் தமக்குள்ளே கண்டு நித்தியம்போய் அந்தக்கடவுளைப் பத்தியினாலே சேவித்து இந்தவிதமாகத் தில்லைமாநகரத்து எல்லையிற் செய்த பர்ணசாலையி லெழுந்தருளி யிருந்தார்.

இதுநிற்க, தாழ்ந்து நீண்ட சடாபாரத்தையுடைய பரமசிவனுடைய இரண்டு திருவடிகளையும்விடாத ஒரு தபசியானவர் சமுத்திரஞ் சூழ்ந்த பூமியிலுள்ளவளத்தை ஆயத்தக்க இச்சையுள்ள மனமுடையவராய்ச் சோழதேசத்தை யடைந்து தில்லைமாநகரை வணங்கிப் பின்பு குற்றமில்லாத ஈழதேசத்தைப் பார்க்க வேண்டுமென்று நினைத்து அங்கே போயினார். அப்படிப்போன தபசியானவர் முதன்மைபெற்ற நன்மையைக் கொண்ட ஈழநாட்டரசனிருந்த ஊரைச்சேர்ந்து மிகுந்த உள்ளன்பினாலே தாமிருக்குமிடந்தோறுஞ் சிதம்பரம் அளவில்லாத காலம் வாழ்கவென்று சொல்லத் தொடங்கினார். தாம்போய்ச் சேருமிடங்கடோறுஞ் சிறக்கப்பெற்ற பொன்னம்பலம் வாழ்கவென்று சொல்லிக்கொண்டிருக்கு நாளில் அங்கே யிருக்கும் நன்மையில்லாத மூடராகிய புத்தர்கள் ஈழதேசத்து ராஜாவுக் கெதிரேபோய் நயப்புடன் வணங்கி அரசனே ஒன்றுகேள் குறையில்லாத திறமையுடையவனாகும் ஒருத்தன் இந்நகரிலே யிருக்கின்றான். அவனுக்காபரணம் ருத்திராட்சமாலிகை; அவன் நாள்தோறும் புசிப்பது பிக்ஷை; நின்றாலும் இருந்தாலும் பிரகாசத்தையுடைய பொன்னம்பலம் வாழ்கவென்றுஞ் சொல்லிச் சொல்லுகிறானென்றார்கள். அவ் வார்த்தையைக் கேட்ட அரசனானவன் அவனை இன்று இங்கே கொண்டு வாருங்களென்றான். உடனே அவரும் போய் அன்புடையவரை உம்மை அர

சன் அழைக்கின்றார் வாருமென்ன; அதற்கவர் சொல்லுவார்; நாள் தோறும் நன்மையுந் தீமையுமில்லாத பிக்ஷை யெடுத்து உண்பதல்லாமல் வேறொன்று நினையாதவர்களிடத்தும் அரசனுக்குக் காரியமுண்டோ வென்றார். அதற்கவர்கள் ஊரிலே பிக்ஷையெடுத் துண்டாலும் காரியம் ஒன்றுமில்லையானாலும் பூமியிலே யிருக்கின்றவர்களுடைய உயிரை இரட்சித்தல் அரசர்களுக்குப் பாரமாகும். ஆதலினால், பரிமளிக்கின்ற மாலையினையுடைய எங்கள் அரசனிடத்திலே வர வேண்டுமென்று சொல்ல, தீங்கொன்றுமில்லாத தவசியானவர் நல்லதென்று சிறப்பு விளங்கிய வேலையுடைய தூதருடனே போனார்.

அப்போது ஆதியாகிய பிடக நூன்மூன்றுமறிந்து நான்கு குற்றமும் நீங்கிச் சீலமைந்துந்தரித்துக் காமாதியாறும் பஞ்சேந்திரியங்களும் அடக்கப்பட்ட இயல்பை யுடையவனாய்ப் பஞ்சகந்தமுங் கெடுவது முத்தியென்று காட்டுகின்ற பௌத்தாசாரியன் தன்னுடனேயிருக்கச் சேனைகள் புடைசூழ அழகு சிறந்த புயத்தையுடைய புத்தராசனும் சபையின்கண் ணிருந்தான். அங்கு தபசியானவர் உடுக்கப்பட்ட ஒரு வெள்ளைக் கோவணமும் பிரகாசிக்கப்பட்ட கபாலமும், சதங்கை கட்டிய நெடிய பிரம்பும், திலதப் பொட்டணிந்த திருமுகமும், சிறிய புன்சிரிப்பும், அசைகின்ற சடையையும் பார்த்து அரசன் திடுக்கிட வந்து திருவம்பலமென்று சொல்லி அங்கே யிருந்தார். அப்படி யிருந்த தபோதனரைப் பார்த்து இப்போது நீர் திருவம்பலமென்று இங்கே சொல்லுந்தன்மை என்னவென்று வினவ, அவ்வரசனுக்கு அவர் சொல்லுவார் ; செல்வத்தை யதிகரிக்கச் செய்யுங் கீர்த்தியினாலே பிரகாசிக்கின்ற சோழராஜாவானவன் பிரியாத தன்னுடைய கிருபா நோக்கங்களாலே இரட்சிக்கின்ற சோழநாட்டிலே ஸ்ரீ சிதம்பரமென்றொரு ஸ்தலமுண்டு. அந்த ஸ்தலம் முன்னே தில்லைவனம்; அதுவோ திரிபுவனத்துக்கு முன்னே யுண்டாகிய தெய்வ ஸ்தலமாம். அதனால், மூலஸ்தானமென்று சொல்லலாம். இந்தப் பூமிக்கு நடுவாகப் பிரகாசிக்கின்ற அச் சிற்சபையில் சந்தனம் பூசப்பட்ட ஸ்தனத்தையுடைய உமாதேவி காணச் சபாநாயகர் நிருத்தஞ் செய்தார். நிலைபெற்ற திறலையுடைய மனுச்சக்கிரவர்த்தியின் புத்திரனாகிய இரணிய வன்மனுடைய தேகத்திலிருந்த குட்டநோயை நீக்கி நெடிய மகமேருவைப்போலுந் திவ்விய தேகத்தைக் கொடுத்த பரிசுத்தமாகிய சிவகங்கை யென்னும் ஒரு தடாகமும் அதிலுமுண்டு. முன்னே பூமியில் ஒருதவமுஞ் செய்யாதவரும் அதிலே மூழ்கிப் பஞ்சகிருத்தியத்திற்குக் காரணமாகிய திருநடனத்தைத் தரிசித்தால் அவர்கள் உலகத்திலே வந்து பிறவார்கள். பொருந்திய பிறவியை நீக்கி ஆத்மகோடிகளுக்கு நன்மையான மோட்சத்தைக் கொடுப்பதற்கு நினைக்கின்ற அநேக சமய தெய்வங்களில் யானே வல்லவனென்று திருவடிமேல் அழகு விளங்கிய பொன்னாற் செய்த வீரக்கழலையணிந்து வலிமைபொருந்திய கொடியுங்கட்டி அருட்சத்தியாகிய உமா

தேவிகாண இறைவன் திருநடனஞ் செய்தான். மலேயென்று சொல்லும் மிகுந்த நற்குணத்தையுடைய தபசியானவர் நிறையப் பெற்ற சடாமுடியையுடைய பரமசிவனுடைய இரண்டு பாதத்தை வணங்காத தீயமனமும், வாக்கும், செய்கையுமுடைய கொடியவர்களும் ஒருதரம் நிலேபெற்ற பொன்னம்பலமென்று சொன்னுல் செல்வத்தைத் தருகின்ற ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை இருபத்தோராயிரத் தறுநூறுதரம் நாவைக் கொண்டு சொல்வதற்கு நிகரல்லவென்ருர். விபூதி பஞ்சாக்ஷர மில்லாத அரசனே திருவம்பலமென்று நாம் சொல்வதற்குப் பொருள் இதுவாகுமென்ருர்.

அப்போது புத்தகுருவானவன் தேருகின்ற பிடகாகம மூன்றும் சொன்ன தலேவனுகிய புத்தனேயல்லாமல் வேறேயொரு தெய்வமுண்டோவென்று கோபித்துச் சொல்லி, அப்படியானுல் தில்லேமாநகருக்குப் போய் வாதுசெய்து அவரிருந்து நிருத்தஞ் செய்கின்ற பாதத்திடுகின்ற வீரக்கழலேயும் பிடிக்கின்ற கொடியையும் அறுத்துப் போடுவேன். புத்தனெருவனே தவிர வேறு தெய்வமில்லேயென்று அந்தச் சபையை அரசமர நிழலிலிருக்கு புத்தன் கோயிலென்று சொல்லும்படி வைப்பேன். இந்தக் காரித்தை மூன்று தினத்தில் யானே முடிப்பேனென்று அழகிய சிவிகையின்மேலேறிக்கொண்டு தன்னுடைய பாதத்தை வணங்குகின்ற பௌத்த கூட்டங்கள் சூழ மிகவும் பிரகாசிக்கின்ற அலேகளேயுடைய கடலும் நாடும் காடும் நீங்கிப் புத்தியிலே விசனங் கொண்டு சீகிரத்திலே ஸ்ரீ சிதம்பரத்திற்குப் போனுன். புத்தராஜனும் தன்னுடைய புத்திரிக்கு முன்னமே யுண்டான ஊமைத்தன்மை நீங்க ஸ்ரீ சிதம்பரத்துக்குப் போகவேண்டுமென்பதை நினேத்துத் தன்னுடைய சேனேகளே சூழ ஒப்பற்ற பெரிய சிவிகையிலேறிக்கொண்டு புத்திரியோடு சோழ நாட்டை யடைந்து தில்லேமாநகரம் வந்து சேர்ந்தான்.

இப்படி இந்தப் புத்தராஜன் வருவதற்கு முன்னே வந்த புத்த குருவானவன் அக்கினியைத் தரித்த சிவந்த கையையுடைய பரமசிவனது தில்லேமாநகரத்து எல்லேயின் முன் சிவிகையை விட்டிறங்கி மிகுந்த குளிர்ச்சி பொருந்திய கங்கையைத் தரித்த சடைமுடியையுடைய பரமசிவனது ஆலயத்திலே பொன்னுற் செய்த மண்டபத்தில் வந்து சேர்ந்தான். அங்கேயிருந்த புத்தகுருவைப் புத்தராஜன் வணங்கித் துதிசெய்து உயர்ந்த மகிழ்ச்சி யடைந்திருந்தபோது சர்ப்பத்தை முடித்த சடையையுடைய பரமசிவனது திருக்கோயிலிலே பணிவிடை செய்பவர்கள் இவர்கள் வருதலேக்கண்டு எல்லாரும் ஒன்ருய்ச் சேர்ந்து தங்கள் தங்கள் மனம் நொந்து அக்கினியைப்போற் கொதித்துக் கோபித்து அவர்கள் ஆயாசங்கொள்ளும்படி சில வார்த்தைகளேப் பேசிக் கடவுளிருக்கின்ற தில்லேமாநகரின் எல்லேயை விட்டுப் புத்தனே சீக்கிரத்தி லோடிப்போய்விடு. இது நாங்கள் பொறுக்க மாட்டோமென்று சொன்னுர்கள். புத்தகுருவானவன்

வெற்றிமாலையை யணிந்த சோழன்முன்னே உயர்ந்த தர்க்கம் பேசி நீங்கள் போற்றப்பட்ட சைவமார்க்கம் நிலையன்றென்று சொல்லிச் சிறப்புப் பொருந்திய புத்தனே உயர்ந்த தெய்வமென்று இப்போது சொல்வதுமல்லாமல் போவதில்லை யென்றான்.

இவ்வார்த்தையைச் சொன்ன பின்பு, அவர்கள் யாவருக்கும் இதைச் சொல்லுவோமென்று சீக்கிரத்திலே உண்மையாகிய தபோ தனர்களுக்கும் தில்லை மூவாயிரவர்களுக்கும் பரிகலத்தார்களுக்கும் அவரவர்கள் விடுகள்தோறும் போய்ச் சொன்னார்கள். அதைக்கேட்ட அவர்கள் புண்ணிலே வேல் நுழைந்ததுபோல வருத்தப்பட்டுச் சபா நாயகரெழுந்தருளி யிருக்கிற திருக்கோயிலிலே அழகிய ரத்தினம் பதித்த மண்டபத்திலிருக்கின்ற புத்தகுருவினுடைய நினைப்பென்ன வென்று கேட்போமென்று சீக்கிரத்திற் போனார்கள். தில்லைமூவா யிரவர்போக எதிர்கொண்டு வராத உண்மைஞானமில்லாத புத்தனைக் கோபித்துப் பல பேச்சுக்கள் பேசிப் பிழைக்கும் வகையறியாத நீ இங்கே அஞ்சுதலில்லாமல் மதியாம லிருந்த தன்மையென்ன வென்று கேட்டார்கள். அதற்குப் புத்தகுருவானவன் நான்குவேத மும் ஆறுசாஸ்திரமும் பதினெண் புராணமும் இருபத்தெட்டாகமும் ஆகிய இவைகளாலே உங்களுடைய தெய்வமே உண்மையான தெய் மென்று சொல்வீர்களானால் எங்கள் தெய்வமே உண்மையான தெய்வ மென்று யான் சொல்லுவேன். இங்கே என்னெதிரே சொல்லு மென்று சொன்னான். அதற்குத் தில்லை மூவாயிரவர் இன்று இழி வினையுடைய உன்னோடு பேசுகிறது நமக்குத் தகாத காரியம். ஆனா லும் சிறப்பொன்று மில்லாத உன்னை ஒரு சொல்லிலே செயிப் போம். ஆயினும் மிகுந்த திறலையுடைய அரசர்களும் மெய்யுணர்வினை யுடைய பெரியோர்களும் கூடியிருக்கின்ற சபையெதிரே நம்முடைய தர்க்க வார்த்தை சொன்னால் இது தக்கது இது தகாதென்று அவர்கள் சொல்லுவார்களானால் எந்தக் கலகமுமில்லை. இதுவே காரிய மாகுமென்று சொல்லிச் சோழ ராஜாவையும் பிராமணர்களையும் பெரிய தபோதனர்களையும் கலைக்கியான வல்லவரையும் நாளைச் சிதம் பரத்தைத் தரிசிக்க வரும்படி பல திருமுகங்கள் எழுதிவிட்டுப் புத்த குருவைப் பார்த்து இன்னொரு பொழுது மாத்திரம் நீ யிங்கிருப்பாய் நாளை உன்னுடைய தாழ்வை உலகத்திற்கு காட்டுவோமென்று சொல்லித் தங்கள் வீட்டிற்குப்போய் நல்லுணர்வையுண்டு அன்றிராத் திரி யாவரும் துயில்கொண்டனர். நித்திரை செய்யும்போது அழகு பொருந்திய பொன்னம்பலத்தில் திருநடனஞ் செய்கின்ற சபாநாயக ரானவர் கையிற் பிரம்பு கொண்டு தழைத்த சடைமுடியும் திருநீ ரணிந்த திருமேனியும் உடையவராய் எல்லாரும் விரும்புகின்ற திரு வுருவங்கொண்டு கனவிலே நீங்கள் வருந்துவதை யொழிபுங்கள்; நம் முடைய தில்லைமாநகரத் தெல்லையில் திருவாதவூரனாகிய மாணிக்க வாசகனிருக்கின்றான். இந்தச் செய்தியைக் கேட்டால் தர்க்க சாஸ்

திரத்தைக் கொண்டு புத்தரை வாதுசெய்து வெல்லுவான் ஆதலால் இப்பொழுதே அரிய தவத்தையுடைய நீங்கள்போய் அவனை யழையுங்க ளென்ருர்.

பின்பு அனைவரும் விழித்து எழுந்து தாங்கள் கண்ட கனவைக் குறித்து உசாவி அதிசயித்து மனவருத்தம் நீங்கி மெய்த் தவத்தையுடைய மாணிக்கவாசக ரெழுந்தருளி யிருக்கின்ற இடத்துக்குப் போவோமென்று உத்தமமாகிய அவரது பர்ணசாலையிற் சீக்கிரத்திற் போய்ச் சிறந்த கிருபாமாலையாகிய மாணிக்கவாசகரைக் கண்டார்கள். அப்போது அவர் பதுமாசனத்தின் மேலிருந்த யோகம் நீங்கி யிருப்பதைக் கண்டு சபா நாயகர் கனவிலே வந்து அனுக்கிரகஞ்செய் தவைகளை யெல்லாம் தில்லை மூவாயிரவர் அவருக்குச் சொன்னுர்கள். அந்தத் திருவார்த்தையானது மாணிக்கவாசகர் செவியினிடத்திலே சேர்ந்த மாத்திரத்திலே முன்னமே கடவுள் சொல்லியிருப்பதை நினைத்து வந்த தில்லை மூவாயிரவருடனே சீக்கிரம் போய் அழகிய சபா நாயகரை வணங்கித் திருவருள்பெற்று பௌத்தர்களிருந்த மண்டபத்திற்குப்போய் அவர்கள் தீமையுள்ள முகத்தைப் பார்த்தால் துன்பமுண்டாகுமென்று திரைபோட்டுக்கொண்டு ஆசனத்தி லெழுந்தருளி யிருந்தார். நிலைபெற்ற வேதப்பிராமணர்கள் பௌராணிகர் கலைஞானம் வல்லவர்கள் முதலிய பெரியோர்களுடனே சோழராஜா சீக்கிரத்தில் வந்து அழகிய சபா நாயகரைத் தரிசனஞ் செய்துகொண்டு பிரகாசம் பொருந்திய ரத்தினமிட்டிழைத்த மண்டபத்திற்கு வந்து கிருபைமிகுந்த மாணிக்கவாசகர் திருவடிவணங்கி அவருக்குப் பக்கத்திலே பூரணசந்திரன் போல் இடபபட்ட ஆசனத்தி லிருந்தான். அப்போது மாணிக்கவாசகர் மகிழ்ச்சியடைந்து புத்தனைப் பார்த்துத் திருட்டு வார்த்தை சொல்லப்பட்டவனே நீ வந்த காரணத்தைச்சொல் லென்றுகேட்க, அவ்வுரைகேட்ட புத்தனுனவன் நிலைபெற்ற எங்கள் தெய்வமல்லாமல் வேறே தெய்வமில்லையென்று இவ்வூரில் வந்து சொல்லி இங்கே எல்லாருங்காணப் பொன்னம்பலத்திலே எங்கள் புத்தரை வைக்க விரும்பி நேற்றே வந்திருக்கிறேன். இதல்லாமல் யான் நினைத்தது வேருென்று மில்லையென்ருன். இப்படி அவன் சொன்னபோது மாணிக்கவாசகர் புன்னகைக்கொண்டு முன்பிறப்பிலே தவமொன்று மில்லாதவனே முயல் யானை யாவதுண்டோ? நல்லது. அது நிற்க, உன்னுடைய நல்ல பெரிய தெய்வமும் ஆத்மாக்கள் அவனடியிற் சேருஞ் செயதியும் சொல்லென்று கேட்க அதற்குப் புத்த குருவானவர் கோபமடைந்து கண்ணில்லாதவனுக்குச் சூரியகிரணத்தி னொளியைக் காட்டக் கூடுமோ, அரிதாகிய எங்கள் புத்ததேவனுடைய நல்ல கீர்த்தியைச் சொல்ல வேண்டுமானுல் நல்ல நாவானவை பல்லாயிரம் வேண்டும். எமது கடவுள் தருமம் விளங்குகின்ற நல்லபிடகாகமஞ் சொல்லி அன்பையுடையவனுய்ப் பிரகாசிக்கின்ற அனேக யோனிகள்தோறும் பிறந்து

ஆத்ம கோடிகளுக்கு உறுதிசெய்து பொல்லாங்கைத் தருகின்ற கொலை களவு பொய் கள்ளுண்ணல் என்னும் நான்கு குற்றங்களை யும் நீக்கி மேன்மை சிறந்திருக்கின்ற அரசமர நிழலிலே எமது கட வுள் சேர்ந்திருப்பான். பொருந்திய கருப்பத்திற் சேருகின்ற உருவம்-வேதனை-குறிப்பு-பாவனை விஞ்ஞானம் ஆகிய பஞ்சகந்தங்களும்கூடி ஒழிவில்லாத அநேக வரிவுண்டாய் நீங்குவது பிறவித்துன்பமாம். அது நீங்கக் கேடாயழிவது மோட்சமென்றான்.

அப்போது மாணிக்கவாசகரும் சோழராஜாவினது களங்கமற்ற முகத்தைப் பார்த்துக் கிருபாநோக்கஞ் செய்து அறியாமையினால் மயக்கங்கொண்டு பயித்திய வார்த்தைசொல்லும் இந்தப் புத்தனுக்கு இன்று யாமென்ன சொல்வதென்று சொல்லிப் பின்பு இதனைச் சொல்லுகின்றார், தருமமுண்டென்று புத்தனானவன் பிடகநூல் சொன்னாயென்றாய். பொருந்திய அழிவு தோன்றி க்ஷணநேரத்தில் மறைந்துபோமென்றாய். சொல்லும் பொருளும் நீ தேடிச் சொல்லு முன்னே உணர்வுகெட்டால் அஞ்ஞானத்தைத் தருகின்ற உன்னால் சொல்வது எப்படி சொல்? ஆகையினாலே தருமசாஸ்திரமென்பது உனக்கில்லை, ஆத்மாக்களுக்காக அநேக யோனிகள்தோறும் உன் கடவுள் போய் பிறந்தானென்றாய். குற்றம் பொருந்திய ஒருவர் கொண்ட மயக்கத்தைத் தீர்க்க வந்தவர்களும் அதிக மயக்கத்தைக் கொண்டால் அந்த மயக்கம் போகுமோ. அன்றியும் எங்கள் கடவுள் கொல்ல நினையானென்று சொன்னாய். முன்னே அநேக யோனிகள் தோறும் பூமியின்மேல் பிறக்குங்காலத்தில் வெல்லுகின்ற புலிகளாக வும், நரிகளாகவும், பிறக்கும்போதுகொடிய பசிவந்தால் அரசமர நிழலி லிருக்கும் உன்னுடைய கடவுள் புல்லுந் தழையுந் தின்பானோ, பொய் யாகிய உன்னாகமத்தில் ஐந்து கந்தங்களுடனே கூடத்தேகமும் அழியு மென்று சொன்னாய், அப்போதுன் கடவுளுக்கு உருவெங்கே? அநேக யோனிகளில் ஆத்துமாக்களுக்கு அருள்செய்யும்பொருட்டு ஒருவடிவங் கொண்டு வந்தானென்பதென்ன? புத்தியில்லாதவனே காரண மாகிய ஆத்மாவோடே கூடுகின்ற காரியமாகிய வடிவில்லாதிருந்தால் உன்னுடைய சிறப்புப்பெற்ற தெய்வத்துக்கு வடிவில்லை. நிறைந்த அறிவில்லாதவனே பஞ்சகந்தமும்கெடுவது முத்தியென்றுசொல்லும் பேரறிவில்லாத உன் பிடகாகமத்தை யார் சொன்னார். இருபத் தொருவரென்றெனப்பட்ட உன்னுடைய புத்தர்களெல்லாம் பிறப் பது சிறப்புப்பெற்ற தாயார் வயிற்றைப் பீறி யென்று சொன்னாய்? அன்புடனே சுமந்து பெற்ற தாய்மாருடைய உயிர் நாசத்தையுடைய குற்றம்செய்து அரிய நரகத்திலே வீழ்வார்களோ தெய்வமாவார்கள். மறைபினையுடைய நான்கு பூதத்தினுடைய கலப்பிலே பேதமேயல் லாமல் தோன்றிய வடிவுக்கு உயிரென்று வேறில்லையென்பாய். நீ சொல்லிய அபத்த சாஸ்திரத்தில் இராத்திரியிலே நித்திரை செய் யும்போது உன்முகத்திலே ஏறிப்போகும் சர்ப்பத்தை இந்தப் பூதங்

கள் றிந்தனவோ? அறிவில்லாதவனே உருவும் உயிரும் ஒன்ருய்க் கூடும். அறிவு உனக்கில்லையென்ருய். இந்த வுருவம் நீங்கின காலத்தில் உயிரும் சீக்கிரத்தில் நீங்கிப்போகும். உருவமும் உயிரும் ஒன்ருய்க் கூடப்பிறக்குமாஞல் அதனல் உன்னுடைய உருவமும் உயிரும் வேருகுமென்று உன் வாயாற் சொல்வாய். ஆகாசமில்லை; அதனிடத்தே சத்தமுமில்லை; அந்த ஆகாசம் இவ்வாக்காமென்று சொன்னய். உன்னுகைமத்தில் பிருதிவி-அப்பு-தேயு-வாயு நான்கு பூதமும் இருப்பதற்கு இடம் ஆகாசமல்லவோ நீ சொல்லப்பட்ட சொல்லினேசை ஆகாசத்தி லுண்டாகியதென்று சொல்லுவாய். இடமிகுந்த திசையென்று சொல்வது இல்வழக்கென்று சொல்லுவாய். இப்படிச் சொல்லுகின்ற நீயே நெடிய வடதிசையிலே அரசமரமிருக்கிறதென்று வணக்கஞ் செய்வாய். பூமியிலே அறிவிலாதவர்களும் பயித்தியங் கொண்டவர்களும் பொய்வார்த்தை பேசுகிறவர்களும் இருக்கின்ற சபையிலே உன் சொல்லெல்லாம் பொருந்தும். மரங்கள் உயிரல்லவென்று சொல்வாய். நிலைபெற்ற பஞ்சபூதங்களுண்டாகிய தேகத்தையுடையவர்போல நல்லநீரையுண்கையினலே இலைகள் தளிர்த்துவளர்ந்திருக்கும் அஃதில்லாவிட்டால் சருகாகும். ஆகையினலே செனன பேதத்தில் கன்மங்களைப் புசிப்பிக்க எமது கடவுள் உயிர்களுக்கு அமைத்தவடிவாகுமென்றுசொல்வாய். ஒருவுயிரைக்கொல்வதுபழுது. பூமியிலே தானே செத்த மாமிசத்தைத் தின்பது நன்றென்று சொல்வாய். உன் பொய் ஆகமத்திலே தின்னென்று உனக்கு நல்ல உயிரைக் கொன்று மாமிசத்தை உண்பித்து உன் பசியைக் தணிப்பார்க்குப் பாபமடைவது உனக்கு நல்லதோ? காரணமிருக்க எப்போதும் காரியங் கெடுவதே மோட்சமென்று வேதங்கள் பரவுகின்ற எம்பெருமாஞகிய பரமசிவனுடைய ஆகமஞ் சொல்லப்பட்டவர்கள் சொல்லுவார்கள். போரால் வருந்தும் உயிருங்கூடக் கெடுவது முத்தியென்கிற பெரிய வருத்தங்கொண்ட நீயே பிரிவை யறியாமல் சொல்வாய், பஞ்சகந்தமும் அழிந்தால் முத்திபெற்றவர் யாவரென்று வினவும்போதில் அழிந்த அஞ்சிலும் உண்டான அறிவென்று சொன்ஞல், அப்போது பஞ்சகந்தமும் அழியவுமில்லை மோட்சமு மில்லையா மென்ருர்.

இவ்விதமாக மாணிக்கவாசகர் சொல்ல, அதைக்கேட்டு மிகுந்த கீர்த்தியானது மங்கியிருந்த புத்தனும் கோபித்து எங்களுக்குத் தெய்வமில்லை மோட்சமு மில்லையென்று சொன்னீர். உம்முடைய தெய்வமாவதெது? நீங்கள் அடையும் மோட்சமெது? என்று கேட்கச் சிவஞானத்தையறிந்த சைவராகிய மாணிக்கவாசகர் அழகிய கல்லால விருட்சத்தினீழலில் இருந்து தருமஞ் சொல்லுகின்றவடிவைக் கண்டு அநேகம்பேர் தரிசிக்கச் செய்வான் விபூதி தரித்த திருமேனியையுடையவன் உமாதேவியை ஒருபாகத்திலுடையவன் கிருபை யுடையவஞன இப்படிப்பட்ட எங்கள் கடவுளது பெருமையை சொல்வதற்கு

எளிதோ? தில்லைமாநகரில் அழகிய பொன்னம்பலத்தி லிருக்கிற சந்திரனை யணிந்த எமது கடவுளானவர் சொல்லுதற்கு ஒரு முடிவு உண்டானவரோ என்று சொன்னர். அப்படி சொல்லுமளவில் பல பேச்சுகள் பேச முயல வேண்டுவதில்லை, நில்லும் நான் கேட்டதைச் சொல்லுமென்று நீசனுகிய புத்தன், முன்னே கல்லாலின் கீழிருந்து தருமஞ் சொன்னன் எங்களுடைய கடவனென்று என்னெதிரே சொன்னீர். கையிலே நிலைபெற்ற செபமாலையைக் கொண்டிருப்பது வேறொரு நினைதற்கரிய நல்ல தெய்வமுண்டென்று நினைத்தோ! வளம் பொருந்திய உலகத்தார் வணங்கும்படிக்குச் சிதம்பரத்திலே நடனஞ் செய்வான் எமது கடவுளென்று சொன்னீர் நினைந்து போகப்பட்ட நல்லறிவையுடைய சிலர் பார்க்க ஆடுவதல்லது தமதிச்சையினலே ஆடுவாருமுண்டோ வென்ருன். உலகமெல்லாம் பிழைக்க அழகிய பொன்னம்பத்திலே நிருத்தஞ் செய்யும் எமது கடவுள் திருமேனி யிலே விபூதி தரித்திருக்கிருனென்று மேன்மை கொண்டு சொன்னீர். சிவந்த பிரகாசம் பொருந்திய திருமேனியிலே விபூதி பரிசுத்தமான தென்று உமது சடவுள் தரித்தார் என்றுய் உமாதேவியை ஒரு பாகத்திலே யுடையவனென்று பெருமைகொண்டு சொன்னீர். பாதி தேகம் பெண் வடிவாயிருப்பது பூமியிலே உண்டோ. அப்படி பாதி தேகம் பெண்ணுருவா யுமது கடவுளிருந்தால் நீர் துறவிலிருக்குந் தவமென்ன? என்ருன்.

இப்படியாக அந்தப் புத்தகுரு சொன்னதற்கு மாணிக்கவாசகர் இகழ்ந்து நகைசெய்து எமது கடவுளுடைய அடியார்கள் பெரிய வாழ்வைப் பெற வந்தவர்கள். நல்ல உபதேசமாகிய இதனை நல்ல தவ மொன்றில்லாத உன்னெதிரே சொல்வதல்ல வென்று சொல்லி, உயர்ந்த செபமாலிகையைக் கையிலே வைத்திருப்பது உலகத்தா ரெல்லாம் இங்கே யுயர்ந்த தவங்கள் செய்வதற்கென்று நினையாய். தாங்கப்பெற்ற ஆயுதத் தொழில்களைச் சார்தல் பழக்குகின்ற பக்குவ முள்ள ஆசிரியருடைய கையிலே கொள்ளும் ஆயுதம் போலாகும். தவப்பயனைச் சம்பாதியாதவர்களைப்போல ஊன்கண்ணை யுடைவ ராகிய உலகத்தார் காண எதிரே கூத்தாடுவானென்றுய். விறகிலே யிருக்கும் தீயைப்போலத் தேகத்திலே கலந்து உயிரை யெல்லாம் ஆட்டுவிக்கும் நட்டுவன் எமது கடவுளென்று எண்ணிக்கொள்வாய். உம்முடைய கடவுள் விபூதியை யணிந்தது என்னவென்று கேட்டாய் அது ஆத்மாக்களுக்குத் துன்பத்தைத் தணிப்பதென் றெண்ணிக் கொள்வாய். அது பிறந்திருக்கின்ற தம்முடைய பிள்ளைகள் அடைந்தநோயை நீக்கும்படி. தாய்மார் சாப்பிட்ட மருந்தாகும் புல் லறிவைக்கொண்டு அநேகம் வீண்வார்த்தைகள் பேசுகின்ற புத்தனே நிற்பாய். அவனை யல்லாமல் ஒருவர் நீற்றைத் தரிப்பதுண்டோ நல்ல திருநீற்றிலுள்ள சுகம் வேதஞ் சொல்லுவதல்லாமல் மற்றொருவராற் சொல்லுதற் கெளிதோ, ஒரு பாகத்திலே உமாதேவியை வைப்பது

குற்றமென்று சொன்னாய், உலகத்தாருக்குப் போகத்தைத் தரல் வேண்டுமென்று நினைத்து மேகத்தை யொத்த கூந்தலையுடைய பார்வதியை யொருபாகங் கொண்டிருந்தார். அல்லாமலும், உயிர்கட்கு யோகத்தைக்கொடுக்கும் பொருட்டு யோகவுருவங்கொண்டிருந்தார். குருடர் கையிலிருக்குந் தடியையல்லாமல், வேறொன்று மறியாத விதம் போல இந்தப் பேச்சு மாத்திரங் கற்றுயல்லாமல், வேறொன்று மறிய மாட்டாய். வலிமை பொருந்திய அழகிய இடபவாகனத்தையுடைய பரமசிவன் பூவிலிருக்கும் மணம்போல் ஆத்மாக்களிடத்தில் கலந்துநின்ற நிலைமையைப்பார்த்தாயில்லை. கண்ணில்லாதவனே ஆதியாகியும், சிவயோகியாகியும், மிகுந்த போகியாகியும், அருபியாகியும, சோதியாகியும், வெகுரூபியாகியும், இன்பக் கடலாகியும் இருக்கின்ற கடவுள் துன்பமில்லாத நீதி நிறைந்த கனகசபையிலே நின்றநிலையையல்லாமல் எது சிரசு எது பாதம் யார் அவரை யறிவார்கள் என்று சொல்லி, அளவற்றகலைகளில்வல்லவராகியமாணிக்கவாசகர் மைந்தர்கள் மங்கையர்கள் ஆகிய இவர்கள் வாக்கிலிருக்கின்ற சரஸ்வதி! நீயே பொய்வார்த்தை பேசுவ தென்ன காரணமென்று ஆதியாகிய கலைவாணியைக் கோபித்து நான்கு வேதங்களையுஞ் சொல்லிய நீதானே இந்தப் பொய்யைச் சொல்ல வேண்டியதென்ன? தக்கன் யாகத்தில் உன் மூக்கை யறுத்ததை மறந்துவிடலாமா? திரிநேத்திரத்தையுடைய பரமசிவனது திருவருளில்லை யென்று சொல்லும் மூடருடைய நாவைவிட்டு நீ சிவனுடைய ஆக்கினைப்படியே போவென்று சொல்ல, சரஸ்வதியும் பயந்து வஞ்சகருடைய நாவினின்றும் நீங்கினபின்பு அவர்களெல்லாம் விஷஞ் சாப்பிட்டவர்கள்போல் ஒடுங்கி நடுங்கி ஊமைகளானார்கள், ஈழ தேசத்து ராஜன் அதுகண்டு மனம் நொந்து சிவஞான நூல்களிற் குறைவில்லாத மாணிக்கவாசகர் திருவடிகளை வணங்கி நின்று சுவாமி! பேசத்தக்கவர் ஊமையாயினார்கள். பேச்சில்லாத ஊமையாகிய என் புத்திரிக்கு ஊமை நீங்கி நல்ல வார்த்தை பேசவந்தால் நானுமக்கு நல்ல அடியவனுவேனென்று சொல்ல, அதைக்கேட்ட மாணிக்கவாசகர் சீக்கிரத்தி லழைத்துக்கொண்டு வாவென்று சொல்ல, அவளும் உண்மை பொருந்திய அந்தச் சபைக்கு வந்தாள்.

அந்தச் சபையிலே வந்துநின்ற கன்னிகையை மாணிக்கவாசகர் பார்த்துக் கிருபாநோக்கஞ் செய்து பின்பு அழைத்து எதிரிலிருக்க வைத்து உள்ளம் நடுங்கி அங்கிருந்த புத்தன் சொல்லிய தர்க்கத்துக்கெல்லாம் குளிர்ந்த வாசனை பொருந்திய கூந்தலையுடைய பெண்ணே! நீ யுத்தரஞ் சொல்வாயாக வென்றார். பத்தியை நன்றுயறியாத புத்தரானவர் சொல்லிய தர்க்க வார்த்தைக் கெல்லாம் படித்தறிந்தவர்கள் போல் இந்தப் பெண்ணானவள் உத்தரஞ் சொன்னாள். அதை மாணிக்கவாசகர்,

பூசுவதும்வெண்ணிறுபூண்பதுவும்பொங்கரவம்
பேசுவதுந்திருவாயான்மறைபோலுங்காணேடி
பூசுவதும்பேசுவதும்பூண்பதுவுங்கொண்டென்னை
யீசனவனெவ்வுயிர்க்குமியல்பானன் 1 சாழலோ.

அருந்தவருக்காலின்கீழறமுதலாநான்கினையும்
மிருந்தவருக்கருளுமதுவெனக்கறியவியம்பேடீ
யருந்தவருக்கறமுதலன்கன்றருளிச்செய்திலனேற்
றிருந்தவருக்குலகியற்கைதெரியாகாண்சாழலோ.

எனச் சிவனுடைய காருண்யத்தை,

விளையாட்டாக மகிழ்ச்சியினலே அந்தப் பொருளை யெடுத்துப் பாடலாகச் சொன்னர். அதைக்கண்ட ஈழராசனும் அஞ்செழுத்துஞ் சொல்லி விபூதி தரித்த பின்பு தாழநின்று அடிமைத்திறத்திலே தவறில்லாத அடியனுயினன். அதைக்கண்ட சோழராஜனும் தில்லை மூவாயிரவரும் திருச்சிற்றம்பலம் வாழ்கவென்று துதித்து அழகிய மாணிக்கவாசகரை ஏத்தினர்கள். தக்கதாகிய சிறப்புள்ள ஈழராஜனும் மாணிக்கவாசகரெதிரே நின்று ருத்திராட்சமணிந்து விபூதி தரித்து அடிமைத்திறமுடை யவனுகவே, துக்கத்தைத்தருகின்ற சிவந்த சீவரவஸ்திரத்தால் மூடும் உடம்பையுடைய புத்தர் மிகுந்த ஊமைத் தன்மை தங்களுக்கு நீங்கவேண்டுமென்று வணங்கினர்கள். சோழராஜனும் தில்லை மூவாயிரவரும் மற்றவரும் வணங்கி, எமது கடவுளே இப்படி யருள் செய்வாயென்று சொல்ல, மாணிக்க வாசகர் மகிழ்ந்து கிருபாநோக்கஞ்செய்ய உடனே அவர்களெல்லாம் ஊமைத் தன்மைநீங்கி நமஸ்கரித்து களங்கரகிதமான மனமுள்ள பெரியவரே முன் பிறப்பிலே நிலைபெற்ற தீவினையைச் செய்தபடியால் குற்றமற்ற விபூதிதரித்து நல்ல ஸ்ரீ பஞ்சாட்சரத்தை உச்சரியாமலிருந்தோம் பூசுவதாகிய திருநீறும் தரிக்கப்பட்ட உருத்திராட்சமும், காவிவஸ்திரம் ஆகிய இவைகளெல்லாங் கொடுப்பீர். இந்தச் சிவப்பு வஸ்திரத்தைச் சுடுவீர் என்று வணங்கினர்கள்.

அழுக்காறில்லாத மனமுள்ள மாணிக்கவாசகர் புன்சிரிப்புடைய முகத்தினராய்ப் பூர்வஜன்மத்திலிவர்கள் தவஞ் செய்தவர்களென்று மனதிலே நினைத்துக் கெடுதலில்லாத விபூதி தரித்துப் பிரகாசங்கொண்ட ருத்திராட்சமும் அணிவித்து அவர்களுடைய சீவரமாகிய வஸ்திரங்களைக் காந்தியையுடைய நெருப்புக்கு இரையாக்கினர். பின்பு இழிவான வேடங்கள் நீங்கி விபூதி தரித்த புத்தர்களும் இராஜாவும் பழமையாயுள்ள திருவாதவூரராகிய மாணிக்கவாசகருடைய இரண்டு பாதங்களையும் வணங்கி நன்மையாகிய அழகிய திருச்சிற்றம்பலத்தை வணங்கி நயப்புடனே நெஞ்சிலே யிருக்கும் வஞ்சகம் நீங்கி, ஸ்ரீ சிதம்பரமே தங்களுக்கு நிலைபெற்ற பதியாக விருந்தார்கள். மற்றவர்கள்

1 சாழல் - குழல், ஒ - விந்து நாதம் ஆக இயல்பானனென்பதை மகளிர் விளையாட்டென்ப.

தங்கள் தங்கள் பகுதிக்குப் போய்ச் சேர்ந்தார்கள். பின்பு மாணிக்கவாசக சுவாமிகள் திருப்புலீச்சரத்தை யடைந்து,

1 பூவார்சென்னிமன்னனெம்புயங் கப்பெருமான்சிறியோமை
யோவாதுள்ளங்கலந்துணர்வா யுருக்கும்வெள்ளக்கருணையினு
லாவாவென்னப்பட்டன்பாயாட் பட்டீர்வந்தொருப்படுமின்
போவோங்காலம்வந்ததுகாண் பொய்விட்டுடையான்கழல்புகவே.

புரள்வார்தொழுவார் புகழ்வாராயின்றேவந்தாளாகாதீர்
மருள்வீர்பின்னைமதிப்பாரார் மதியுட்கலங்கிமயங்குவீர்
தெருள்வீராகிலிதுசெய்மின் சிவலோகக்கோன்றிருப்புயங்க
ளருளார்பெறுவாரகலிடத்தே யந்தோவந்தோவந்தோவே.

என அனுபவாதீதமுரைத்து,

ஞானவாளேந்துமையர் நாதப்பறையறைமின்
மானமாவேறுமையர் மதிவெண்குடைகவிமி
ஞனநீற்றுக்கவசமடையப் புகுமின்கள்
வானவூர்கொள்வோநாமாயப் படைவாராமே.

தொண்டர்காடுசிசெல்லீர் பத்தர்காள்சூழப்போகி
ரொண்டிறல்யோகிகளே பேரணியுந்தீர்க
டிண்டிறற்சித்தர்களே கடைக்கூழைசென்மின்க
ள்ண்டர்நாடாள்வோ நாமல்லற் 2 படைவாராமே.

எனப் பிரபஞ்சப்போர் கூறி,

கண்களிரண்டுமவன்கழல்கண்டு களிப்பனவாகாதே
காரிகையார்கடம்வாழ்வி லென்வாழ்வுகடைப்படுமாகாதே
மண்களில்வந்துபிறந்திடுமாறு மறந்திடுமாகாதே
மாலறியாமலர்ப்பாதமிரண்டும் வணங்குதுமாகாதே
பண்களிகூர்தருபாடலொடாடல் பயின்றிடுமாகாதே
பாண்டிநன்னுடையான் 3 படையாச்சிகள்பாடுதுமாகாதே
விண்களிகூர்வதோர்வேதகம் வந்துவெளிப்படுமாகாதே
மீன்வலைவீசியகானவன்வந்து வெளிப்படுமாயிடிலே.

சங்குதிரண்டுமுரன்றெழுமோசை தழைப்பனவாகாதே
சாதிவிடாதகுணங்கணம்மோடு சலித்திடுமாகாதே
யங்கிதுநன்றிதுநன்றெனுமாயை யடங்கிடுமாகாதே
யாசையெலாமடியாரடியோ மெனுமத்தனைமாகாதே
செங்கயலொண்கண்மடந்தையர் சிந்தைதிளைப்பனவாகாதே
சீரடியார்கள்சிவானுபவங்க டெரிந்திடுமாகாதே
யெங்குநிறைந்தமுதூறுபரஞ்சுட ரெய்துவதாகாதே
யீறறியாமறையோனெனையாள வெழுந்தருளப்பெறிலே.

எனச் சீவ உபாதியொழிந்து,

---

1 யாத்திரை - செய்கை.
2 படையெழுச்சி - வாள்பாறை குடைமுதலிய படைகளின் எழுவகை
3 படையாச்சி - மீன்வலைவீசிய கானவன்வந்து வெளிப்பட்டானுகை.

முத்திநெறியறியாத மூர்க்கரொடுமுயல்வேனை
பத்திநெறியறிவித்துப் பழவினைகள்பாரும்வண்ணஞ்
சித்தமலமறுவிததுச் சிவமாக்கியெனையாண்ட
வத்தனெனக்கருளியவாறுர்பெறுவா 1 ரச்சோவே.

செம்மைநலமறியாத சிதடரொடுந்திரிவேனை
மும்மைமலமறுவித்து முதலாயமுதல்வன்று
னம்மையுமோர்பொருளாக்கி நாய்சிவிகையேற்றுவித்த
வம்மையெனக்கருளியவாறுர் பெறுவாரச்சோவே.

என அனுபவவழி யறியாமையாய் அங்கு வசித்திருந்தார்.

அப்படி மாணிக்கவாசகர் அந்த ஸ்ரீ சிதம்பரத்தில் வசிக்கின்ற நாளிலே பொற்சபையில் திருநடஞ்செய்கின்ற நடராஜமூர்த்தி தமது கிருபையினுல் பிராமண வுருவங்கொண்டு பரிசுத்தமாகிய முப்புரிநூலணிந்த மார்பும் விளங்குகின்ற புத்தகமும் தெரியச் சிவந்த திருவடிகளும் நோவ எழுந்தருளி எதிராக நின்றுர். இப்படி எதிரேவந்து நின்ற வேதப்பிராமணரைப் பார்த்து இன்பம் பொருந்த மாணிக்கவாசகர் இருமென்று சொல்ல, அவரிருந்தபின்பு பெருமையுடைய வேதத்தில் மிகுந்தவரே நீரெங்கே யிருக்கின்றவர் சொல்லுமென்று கேட்க, விஃபெற்ற பெரியவளத்தையுடைய பாண்டியநாட்டிலே நாமிருக்கிற தென்றுர். பாண்டியநாடென்று சொன்னபின்பு அன்புடனே உபசரித்து இங்கே நீர் வருவதற்குக் காரணஞ் சொல்லுமென்ன, கடவுளது ஆக்கினையாகிய காரியம் உம்மைக் காணுவதேயென்று சொல்லிப் பூமியைப் பிளந்தும் ஆகாயத்திற் பறந்தும் முன்னே மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் தேடிக் காணுதற்கரிய கடவுளும் சிற்சபையில் நிருத்தஞ் செய்பவருமாகிய பரமசிவனைக் குதிரையேறச் செய்த உம்முடைய பெருமையினுலே பாண்டி நாடெல்லாம் வாழ்ந்தது. அழகிய திருப்பெருந்துறையி லெழுந்தருளி யிருக்கின்ற கடவுளுடைய திருவடியை வணங்கித் துன்பமொன்றுமில்லாமல் தடாகஞ்சூழ்ந்த திருக்கழுக்குன்றத்துக்குப் போய் பின்பு ஸ்ரீ சிதம்பரத்துக்கு வந்து புத்தரை வாதில் வென்றீர் என்பது கேள்விப்பட்டு யாவரும் மகிழ்ச்சி யடைந்தார்கள்.

ஆதியாகியும் சிற்சபையிலே திருநடனஞ்செய்கின்ற ஐயனுகியும் இருக்கின்ற கடவுளைப் பத்தியினுலே நீர் பாடிய தமிழ்ப்பாடல் முழுவதும் ஓதுவதற்கு நினைத்துத் துன்பம் நீங்க இங்கே வந்தேன். அது எழுதுதல் வேண்டும். பிராமணரில் உத்தமரே தெளிவாக இன்று சொல்ல வேண்டுமென்றுர். அதைக்கேட்டு மனதிலே மிகுந்த அன்பையுடையவராய் ஜடாமுடியையுடைய பரமசிவனை எண்ணுதற்கரிய தமிழ்ப்பாடலாற் சொல்லிய மாணிக்கவாசகர் அப்போது அகமலர்ந்து உண்மைஞானத்தைத் தருகின்ற திருவாசகத்தை மகிழ்ச்சியுடனே சொல்லியருளினுர். அவர் சொல்லிய பாடலெல்லாம்

1 அச்சோ ஐயோவென்னும் அதிசயக்குறிப்பு.

சிற்சபையிலாடும் ஆனந்த நடராஜன் தம்முடைய திருக்கரத்தில் ஏட்டைப் பிடித்துக்கொண்டு தெளிவாக எழுதியபின்பு மிகுந்த அருளை யுடைய உமாதேவி பாகராகிய சபாநாயகரைப் பாட்டுடைத் தலைவ ராகவுடைய ஒரு கோவை பாடல் வேண்டுமென்றார். நிலைபெற்ற தவத்திலே மிகுந்த மாணிக்கவாசகர் அதற்கு மனமகிழ்ந்து,

திருவளர்தாமரைசீர்வளர்காவிகளீசர்தில்லைக்
குருவளர்பூங்குமிழ்கோங்குபைங்காந்தள்கொண்டோங்குதெய்வ
மருவளர்மாலையோர்வல்லியினொல்கியனநடைவாய்ந்
துருவளர்காமன்றன்வென்றிக்கொடிபோன்றொளிர்கின்றதே.

காரணிகற்பகங்கற்றவர் நற்றுணைபாணரொக்கல்
சீரணிசிந்தாமணியணி தில்லைச்சிவனடிக்குத்
தாரணிகொன்றையன்றக்கோர் தஞ்சங்கநிதிவிதிசே
ரூருணியற்றவர்க்கூரன் மற்றியாவர்க்குமூதியமே.

என்று திருக்கோவையாரைப் பாடியருள,

பொன்போலும் பிரகாசிக்கின்ற சடையை யுடையவர் எதிரே யிருந்து திருக்கோவை யாரெழுதி முடிந்தபின்பு தம்முடைய புத்தகத் தைத் திருக்காப்புச் செய்துகொண்டு மின்னலைப்போல் மறைந்தார். அதுகண்டு மாணிக்கவாசகர் வருந்தி எழுந்தார்; எங்கும் ஓடித் தேடிப் பார்த்தார்; இஃதென்ன ஆச்சரியமென்று மனமகிழ்ந்தார்; ஸ்ரீ சிதம் பரத்திலே நிருத்தஞ் செய்கின்ற சபாபதி யென்றறிந்து பின்பு கண் களிலே ஆனந்த பாஷ்பம் பொழிந்தார். எங்கே போயினையென்று பூமியிலே விழுந்தார்: பரமானந்த சமுத்திரத்திலே அழுந்தினார்.

உயர்ந்த தமிழினிடத்திலே அன்பு மிகுந்து சபாநாயகர் புத்த கத்தை எடுத்துக்கொண்டு தமது கனகசபைக்கு எழுந்தருளித் தேவர் களையும் மகாவிஷ்ணுவையும் பிரமதேவனையும் பார்த்து நமக்கடிமை செய்து நயப்பினைப் பெற்ற மாணிக்கவாசகர் சொன்ன இந்த நல்ல பாடல்களைக் கேளுங்களென்று அவர்களுக் கனுக்கிரகஞ் செய்து மெய்ம்மை பொருந்திய நலத்தையுடைய மாணிக்கவாசகர் சொல்ல; எழுதப்பட்ட இந்தத் திருவாசகம் கனகசபையிலே நிருத்தஞ் செய் கின்ற அழகிய திருச்சிற்றம்பலமுடையார் திருவெழுத்தாமென்று மோக்ஷத்தைத் தருகின்ற திருக்கோவையார் முடிந்தவிடத்திலே காப்புஞ் செய்து வெள்ளிய மூன்றாம் பிறையைத்தரித்த ஜடாபாரத்தை யுடைய சபாநாயகர் உலகந்துக்கெல்லாம் சிநேகமுடைய மாணிக்க வாசகரது நல்ல தவத்தை யெல்லார்க்கும் அறிவிக்க நினைத்து எண் ணப்பெற்ற முனிவர்கள் தேவர்கள் வணங்குஞ் சிற்சபை வாசற்படி யிலே திருவாசகமாகிய திருமுறையை வைத்தார். அப்படி வைத்த பின்பு பூசை செய்யும் ஒரு பிராமணன் பார்த்து இப்புத்தகம் இங்கே யிருக்கும் புதுமை தெய்வீகமாமென்று மனமுருகி நின்று தில்லைமா

நகரத்தாருக்கு இதனைச் சொல்ல வேண்டுமென்று சபையை விட்டுப் போய் பழமையாகிய ஸ்ரீ சிதம்பரத்திலுள்ளவர்களிடத்து ஒரு புத்தகம் சபையின்படியிலே இருக்கின்றதென்று சொல்ல, பின்பு இது அதிசயமாமென்று ஓடிவந்து படியின்மேல் சபாநாயகர் வைத்த புத்தகத்தை எல்லாருந் தங்களுக்குள்ளே பார்த்து எமது கடவுளிருக்கின்ற சபையிலே தேவர்களும் அறிதற்குக்கூடாத தெய்வீக மிதுவென்று நினைத்தப் பெருமை பொருந்திய அன்பினாலே கடவுள் சொல்லிய சிவாசமமோ அல்லது தமிழ் நூலோவென்று பார்ப்பது தகுதியாமென்றார்கள்.

அருளும் அன்பும் நிறைந்த தில்லைமூவாயிரவர்கள் எல்லாரும் புகழ்ந்து சொல்லுகின்ற வாக்கில் வல்லவராகிய ஒருவர் போய் மலரைக்கொண்டு அருச்சித்து நமஸ்கரித்துப் பின்பு பரமசிவன் வைத்த புத்தகத்தை அவிழ்த்து ஏட்டை நீக்கிப் படித்தார். நீதியைக் கொண்ட அகவல் நான்கும் திருச்சதகம் முதலாகச் சிறப்புப் பொருந்திய தமிழ்ப் பாடல் அறுநூறும் விரித்துச் சொல்லப்பட்ட அகப்பொருட் கோவை நானூறு பாடலும் விளங்கப் படித்தார்கள். பின்பு அது முடிந்த விடத்திலே இது மாணிக்கவாசகர் சொல்ல, அழகிய திருச்சிற்றம்பல முடையார் கையெழுத்தென்று படித்தார்கள். இப்படி இந்தத் திருமுறையைப் படிக்கக் கேட்டவர்களெல்லாம் மெய்ப்புளகமும் குறுவியர்வு கொள்ளுதலும் ஆனந்தபாஷ்பம் கசிந்துருகும் மனமும் கொண்டவராய் உண்மையாகிய தவத்தையுடைய மாணிக்கவாசகர் சொல்லிய இந்தத் தமிழல்லாமல் மோக்ஷ வழிக்குச் சிவநூல் வேறுண்டோ வென்று சொல்லி இதன் பொருளாகிய தேனை இன்றறிவோமென்று நினைத்துச் சபையை விட்டுத் தில்லைமூவாயிரவரும் மாணிக்கவாசகர் முன்னேபோய் அவரெதிரே திருமுறையை வைத்து தேவர் பெருமானாகிய கடவுள் இன்று செய்த காரியம் இதுவென்று சொன்னார்கள். மாணிக்கவாசகர் அது கண்டு எல்லாரும் அற்பமாகிய என் பாடலை மனமகிழ்ந்து கொண்டருளப் பூமியிலே அன்று செய்த என் தவத்தை அறியமாட்டேன் என்று புலம்பினார். மாணிக்கவாசகர் இங்கே இப்படி புலம்பி யழுதபின்பு ஸ்ரீ சிதம்பரத்தி லிருக்கின்ற அளவற்ற அன்பையுடையவர்கள் இகத்துடனே அஞ்சலியஸ்தராய்ப் பண்ணையுடைய ஞானப்பாடலைக் கொள்ளும்படி உம்மிடத்திலே கடவுள் வந்து செய்த காரியமென்ன சொல்லுமென்று கேட்டார்கள். துன்பமென்னும் பிறப்பில்லாதவராகிய மாணிக்கவாசகர் செய்த செய்கையெல்லாஞ் சொன்னபின்பு தில்லைமூவாயிரவர் வணங்கி மனமகிழ்ச்சி கொண்டு எமது கடவுளைச் சொல்லிய இத்தமிழ்ப் பிரபந்தத்திற்கு அருமையாகிய நல்லபொருள் சொல்லவேண்டுமென்று கேட்க, மாணிக்கவாசகர் சிவஞானம் நிறைந்த மனத்துடனே களிப்பையடைந்து அழகிய கனகசபை எதிரேபோய் இதற்குப் பொருள் சொல்வே னென்று போக, அவர் முன்னே போனவர்கள் அன்

புடனே அவர் பின்னே போனார்கள். தில்லைமூவாயிரவர் அன்புடனே புடைசூழ்ந்துவர மாணிக்கவாசகர் கனகசபை யடைந்து இத் தமிழ்ப் பிரபந்தத்திற்கு பொருள் இவர்தாமென்று சபாநாயகரைக் காட்டிச் சபையிலே தில்லைமூவாயிரவர்கள் காணச் சீக்கிரத்திற்போய் மறைந்தருளினார். அதைக்கண்ட தில்லைமாநகரிலுள்ளார் சபாபதியை மாணிக்கவாசகர் அடைந்த விதத்தைக் கண்டு தேகம் புளகமடைந்து நடுக்கமுற்றுத் துதித்து மனமுருகிக் கண்ணீர்பொழிந்து திருமேனியெல்லாம் வியர்த்தார்கள்; மனமகிழ்ந்தார்கள்; சிவந்தகைகளைச் சிரசின்மேல் கூப்பிக் கொண்டார்கள்; பூதகணங்களெல்லாம் நிருத்தஞ் செய்தன; கணநாதர்கள் புகழ்ந்தனர்; தும்புருநாரதர் இசைபாடினார்கள்; வேதங்களும் அந்தர துந்துமிகளும் ஆகாசத்தில் முழங்கி எழுந்தன; முனிவரும் இந்திரரும் பஞ்சகற்பகத் தருக்களினுடைய மலரைத்தூவி வணங்கினார்கள்.

மண் சுமந்த படலம் முற்றிற்று.

அறுபத்திரண்டாவது

## பாண்டியன் சுரந்தீர்த்த படலம்

அறுசீர்க்கழி ஆசிரிய விருத்தம்

வான லமுத மதிமுடியோன் மதுரைப்பெருமான் மண்சுமந்து
தேன லமுத வாசகரைக் கதியில் விடுத்த திறனிதுமேற்
பாணன் மணிவாய்க் கவுணியனை விடுத்துச் சமணர் படிற்றொழுகுங்
கூனல் வழுதி சுரந் தணித்தாட் கொள்கை கூறுவாம்.

**உரை:** உயர்வாகிய அமுத கிரணங்களையுடைய சந்திரனை முடியின்மீது தரித்தருளிய மதுரைநாயகராகிய சோமசுந்தரக்கடவுள், தேனமுதம்போலும் (தமிழ் வேதமாகிய திருவாசகத்தை அருளிச் செய்ய வல்லவராகிய) மாணிக்கவாசக சுவாமிகளைச் சிதாகாசத்திலிரண்டறக்கலக்கச் செய்தருளிய திருவிளையாடலிதுவாகும். இனி, அச் சோமசுந்தரக் கடவுள் (உமாதேவியாரால் பொற்கிண்ணத்தில் கறந்தூட்டப்பட்ட சிவஞானப்)பாலையுண்டருளிய அழகியதிருவாயினையுடைய கவுணியர்குலத்தலைவராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையாரை எடுத்துச் சமணர்களுடைய பொய்ச்சமயத்தையே விரதமாகக் கொண்டொழுகிய கூன்பாண்டியனுடைய சுரநோயைத் தீர்த்து அப்பாண்டியனை யடிமைகொண்டருளிய திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்,

புஜபல பராக்கிரமனான சகநாதபாண்டியன் மகன் வீரவாகு, அவன் மகன் விக்கிரமவாகு, அவன் மகன் பராக்கிரமவாகு, அவன் மகன் சுந்தரபாண்டியன், அவன் மகன் வாகுவலபாண்டியன், அவன் மகன் குங்குமபாண்டியன், அவன் மகன் கருப்பூரபாண்டியன், அவன் மகன் காருணியபாண்டியன், அவன் மகன் புருஷோத்தமபாண்டி

யன் அவன் மகன் சத்ருசாதன பாண்டியன், அவன் மகன் கூன் பாண்டியன். இந்தப் பாண்டியன் புஜபலத்தாலும் கீர்த்தியாலும் மிகுந்தவன். ஆகையாலே தனது தோள்வலியினாலே சேரனையும் சோழனையும் எதிர்த்து முதுகிடச்செய்து தன் ஒரு குடை நிழலின் கீழே மூன்று லோகமும் ஒதுங்க அரசாண்டு செங்கோல் செலுத்தி இப்படி விஜயலட்சுமி கொண்டாட, வெற்றிமாலை யணிந்த வேலையுடைய இந்தக் கூன்பாண்டியன் அரசாட்சி செய்யுங்காலத்தில் பனைமாலை யணிந்த சேரனானவன் ஆகாயத்தை யளாவுகின்ற கையையுடைய யானைகளும் அநேக திரவியங்களும் அநேக ரத்தினங்களும் தோழிகளும் வரிசையாகத் தன் மகளைப் பாண்டியனுக்குக் கலியாணஞ் செய்து கொடுத்து அவன் காலிலே விழுந்து சமாதானஞ் சொல்லித் தன்னுடையதாய்ப் பாண்டியன் வசமாயிருக்கிற நாட்டை முன்போல் தனக்குச் சொந்தமாகப் பெற்றுக்கொண்டு போனான். பின்பு சோழனும், தான்பெற்ற பெண்ணாகிய சைவமணி விளக்குப்போலும் மங்கையர்க்கரசியாரைப் பாண்டியனுக்குக் கலியாணஞ் செய்து கொடுக்கத் தன்னுடைய நாட்டையும் பெற்றுக்கொண்ட பின்பு, கூன்பாண்டியனுக்குப் பாரியான மங்கையர்க்கரசியாருக்கு அளவற்ற திரவியங்களும் பொன் வஸ்திரங்களும் ரத்தினங்களும் தோழிக் கூட்டங்களும் இன்னும் வேண்டுமவைகளும் சோழன் மனமகிழக் கொடுத்துக் குற்றமற்ற நற்குணங்களாலே சிறந்த குலச்சிறையென்கிற மந்திரியையுங்கூட அனுப்பிவிட்டான். பின்பு கூன்பாண்டியன் அவன் கொடுத்த வரிசைகளுடனே செந்தாமரைக்கோயின் மங்கையைக் கலியாணஞ் செய்துகொண்டு வருகிறவன்போல மதுரைப் பதியை யடைந்து லட்சுமி விளங்கு மார்பினனாய்ச் சோழன் மகளுடனே வந்த மந்திரியான குலச்சிறை நாயகரைக் குணமும் சிறந்த கேள்வியும் மதிநுட்பமும் மேதகவும் ஆராய்ந்து பார்த்துத் தனக்கு நன்மையிற் சிறந்த மந்திரியாகவே கொண்டு உலகாண்டு வருங் காலத்தில், முன்செய்த பலமான தீவினைப்பயனாக உடம்பிலே கூன் கொண்டாற் போலவே கொல்லாத விரதிகளாய் வஞ்சகங் கொண்டு அலைந்து சூழ்ந்த பாசத்தைவெல்லுஞ்செய்கை தெரியாமல்நிருவாணி வேடங்கொண்டவர்களாகிய சமணர்கள் சொற்றுள் அகப்பட்டு நல்வினைப் பயனைப்பெறாமல் கூன்பாண்டியன் நான்கு வேதங்களிலுஞ் சொன்ன நல்வழியை விட்டுச் சமணர் புன்சமயமாகிய வழியைப் பற்றினவனாகவே, பாண்டிநாடெல்லாம் சமணமதமாகிய அஞ்ஞானக் கடலிலே முழுகிப் பூதசாதன நெறியாகிய சைவசமயமும் முத்திச் செல்வமான நெறியும் குறைவாக வேதநீதி மறைந்து போயிற்று. பறிக்கப்படுகிற தலையும் பாயாகிய உடையும் உறிகட்டிக் கொள்ளும் பாத்திரமும் அத்திநாத்தி யென்று சொல்லும் நாவும் புத்திகெட்ட மனம்போலவே கயிறில்லாத வெறுமையான அரையுங் கொண்டு நிலைகெடுவதான பிசாசுகள் சூழ்ந்தாற்போல எங்கும் சமணர் கூட்டங்களாக நிலைகொள்வதாயின.

அக்காலத்தில் அந்தக் கூன்பாண்டியனுக்கு நன்மையைச் செய்யும் மருந்திலும் சிறந்த கற்பினையுடைய மங்கையர்க்கரசியாரும் பெருந்தகை யமைச்சரான குலச்சிறை நாயனாரும் அனுஷ்டான காலத்தில் விபூதியைக் குழைத்துப் பூசுகிறதே யல்லது மற்றைக்காலங்களில் பாண்டியன் தெரிய விபூதி பூசிக்கொள்ளாமல் சிவனடிச் சார்பிலே நிற்க. அப்படி பொய்ந்நூலை மெய்ந்நூலாகச் செய்கின்ற புல்லறிவாளரான சமணராகிய களையைத்தோண்டி மெய்ந்நூலாகிய வேதநிதியான சைவப்பயிர் தலையெடுத்து வளரச்செய்ய வல்லவர் யாரென்று மனத்திலே கவலைகொண்டு வருந்துகின்றவர்களான அவ்விருவரும் கூடற்கடவுளை வணங்கவேண்டிப் போய்நின்று, தெரியாமல் மயங்கின முனிவர்களுக்கு அக்காலத்திலே வேதப்பொருளை விளங்கச் சொன்ன வேதப்பொருளே! இந்தச் சமணர்மதமாகிய வலைக்குள் அகப்பட்டு மெய்ஞ்ஞானவழியை விட்டு நீங்கின பாண்டியன் புத்தியைத் திருப்பி இந்த வேளையில் உம்முடைய திருவடிகளுக்கே எப்போதும் அடிமையாகக் கொள்ள வேண்டுமென்று திருவடிகளை வணங்கும்போது, ஒரு வேதியன் உருத்திராட்சமுந் தரித்து விபூதியும் பூசின தேகத்தையுடையவனாய் ஸ்ரீ சிதம்பரத்திலிருந்து வந்து கூடற்கடவுளை வணங்குவதற்கு வர, அவனை மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனாரும் கண்டு, ஓய் வைதிகரே! நீர் எங்கேயிருந்து இங்கே வந்தீரென்று கேட்க, அந்த வேதியன் சோழநாட்டிலிருந்து வந்தேனென்றான் அதுகேட்ட அவ்விருவரும் அந்தச் சோழநாட்டிலே என்ன புதுமையுண்டு? அதைச் சொல்லுமென்ன, அதற்கு அந்தச் சைவபிராமணன் புதுமையுண்டு கேளுங்கள்; ஏழிசை மறைவலாளராகிச் சீகாழியிலே சிவபாதவிருதயரென் றொருவருண்டு. அவர் சீர்காழிக் கடவுளை வேண்டிச் சமணராகிய இருளைப்போக்குஞ் சூரியன்போல எனக்கொரு பிள்ளை அருள வேண்டுமென்று தியானித்துத் தவஞ்செய்தனர். அப்படித் தவஞ்செய்த சிவபாதவிருதய ரிடத்தில் சிவனருளாலே இந்த உலகங்களெல்லாந் தெளிவுபெற இளஞ் சூரியன்போல ஒரு பிள்ளை திருவவதரித்தனர். அந்தப் பிள்ளை வளர்ந்து மூன்று வருஷமாகுங் காலத்தில் ஊழிக்காலத்துக் கடலிலே மிதந்த தோணிபுரத்திலெழுந்தருளிய கடவுள் தமது தேவியாருடனே விடைமேலெழுந்தருளிக் காட்சிகொடுத்தும், அந்தத் தேவி தாயேயாய்த் தமது திருமுலைப்பாலுடனே ஞானமுந் திரட்டிக் கலந்து செம்பொன்மணிக் கிண்ணத்தை யேந்திக் கொண்டுவந்து கொடுக்க, அந்தப் பாலன் வாங்கிக் குடித்து, அளவிறந்த வேதங்கள் ஆகமங்கள் இவற்றைச் சார்ந்த கலைஞானங்களெல்லாம் ஓதாமலுணர்ந்து சிவஞானமுந் தோன்றலாயிற்று.

ஆதலால் நமது பந்தத்தைப் போக்குபவனாகிய ஞான நாயகன் ஞானத்தோடு சம்பந்தஞ்செய்ய ஞானசம்பந்தனாகி நாவிலே மெய்ஞ்ஞான வாணியும் குடிகொண்டு நிற்க, அழகுபொருந்திய வேதங்களை

யெல்லாம் தமிழாலே பாடத்தொடங்கிக் கரும்பிலே சக்கையைப் போக்கி அதன் சாற்றைக் காய்ச்சின கற்கண்டுபோல அளவில்லாத வேதங்களிலே சிறந்த பொருள்களையெல்லாம் நன்ருகத் தெளிவு செய்து கொன்றைமாலை யணிந்த கடவுள் எழுந்தருளியிருக்கின்ற தலங்களெல்லாம சென்று சென்று எல்லாரும் விரும்பத்தக்க தென் மொழியிலே சிவமணங்கமழ்ந்த தமிழ்மாலை தொடுத்துச் சாத்தி, பருத்த முத்துமாலை யணிந்த கொங்கைகளையுடைய பார்வதி சமேத ராகிய சிவபெருமானுடைய திருவருளினுலே பசும்பொன்னுலை தாள மும், முத்துப்பல்லுக்கும் முத்துக்காளமும், முத்துப்பந்தலும் ஆகிய இவைகளெல்லாம் தக்கபடியே பெற்றும் பாலைநிலத்தை நெய்த நிலமா கச்செய்து அலைகளாலே முத்துகளை வீசுகின்ற நதிசூழ்ந்த திருவீழி மிழலையிலே பொன்னுலான படிக்காசு பெற்றும் வேதங்களாலே பூசிக்கலான திருமறைகாட்டுக் கோயிற்கதவை அடைக்கப்பாடியும், இன்னும் சிவஸ்தலங்களெல்லாம் போய்த்திருப்பதிகங்கள் பாடி வருவ ரென்று அந்தத் தெய்வப்பிராமணன் சொன்னவுடனே, கற்பகமலர் கொடிபோன்றவராகிய மங்கையர்க் கரசியாரும் பாண்டியனுக்குக் கண்போன்ற குலச்சிறை நாயனுரும் இருளுக்கொப்பான சமணராகிய பேய்களையோட்டி, அன்றே தங்கள் அரசன் மேனியிலே அழகாக விபூதி பூசக்கண்டு, பூதிசாதனத்திலே அடைவதான சிற்பரவீட்டைக் கண்ட மகிழ்ச்சியிலே முழுகினவராய்த் தங்கள் பெயரைக் கண் டெழுதி அந்தத் திருஞான சம்பந்தப்பிள்ளையாருக்குச் சொல்லுதற் காக அந்தப் பிராமணன் கையிலே ஓலைவிண்ணப்பம் கொடுத் தனுப்பிவிட்டு, அவ்விருவரும் மீனுட்சி சுந்தரேசரை வணங்கிக் கொண்டு தங்கள் வீட்டுக்குப் போயினுர்கள்.

பின்பு அந்த வைதிகப்பிராமணன் விரைவிலேபோய்த் திரு ஞானசம்பந்தமூர்த்திகளைக் கண்டு தலைகளெல்லாம் பறியுண்டு புண் ணுகத் திரிகின்ற வஞ்சகரரகிய சமணருக் குடன்படாமலிருக்கிற மங்கையர்க்கரசியாரும் குலச்சிறைநாயனுரும் கொடுத்த ஓலை விண் ணப்பத்தைக் காட்டி அதிலுள்ள செய்தியை வாசித்தான், அதாவது: வெங்குருவேந்தராகிய திருஞானசம்பந்த மூர்த்திகளுடைய திருவடி களை வணங்கி அடியேன் குலச்சிறை சொல்லிக்கொள்ளும் விண்ணப் பம்; தேவரீர் இங்கே யெழுந்தருளி சமணராகிய இருளை ஒதுக்கி எங்க ளரசனுக்கு விபூதிகொடுத்துத் தமிழ்நாட்டையெல்லாம் பூதிசாதன வழியே நிறுத்தி எங்களை இரட்சிக்கவேண்டும் என்றெழுதியிருக்க அந்தப் பாசுரங்களைக் கேட்டுக்கவுணியர் குலைத்தலைவரான திருஞான சம்பந்தப்பிள்ளையா ரெழுந்தருள, அப்போதங்கே கூடவிருக்கிற திரு நாவுக்கரசு சுவாமிகள், ஆ இது தகாது; நீரோ மிகவுஞ் சிறியவர்; அவர்களோ பழிபாவங்களுக் கஞ்சாதவர்கள்; நான் பலகாலமும் அவர்களோடு பழகினவன்; எனக்கு அவர்கள் செய்த வேதனைகளை அளந்து சொல்லி முடியாது; உமக்கு இப்போது கிரகங்கள் பலப்பட

வில்லை நீர் போவதை விடுகவென்ன, அதற்குத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் எந்தையெம் பெருமானுடைய திருவருளைப் பெருதவர் போல நீர் இப்படிச் சொல்வதென்ன காரணம்? அந்தச் சமணர்கள் பண்ணின மகாவேதனையில் வெந்து பிழைத்தவர் நீர்! நாள் - கோள் - விலங்கு - புள் - அவுணர் - பேய் - பூதம் ஆகிய இவைகளெல்லாம் அம்மையோடப்பனை கடவுள் ஏவலின்படியே நடப்பவைகள். அந்த அம்மையும் அப்பனும் நம்முடைய மனமே கோயிலாகக் கொண்டிருக் கிறதினலே அவைகள் நமக்கு யாதொரு தீங்கும் செய்யமாட்டாவென் றெழுந்தருளினர்.

அப்போது பெரிய முரசங்களொலிக்கவும், சங்கு காகள மூதவும், சாமரங்கள் வீசவும், முத்துப்பந்தலின் கீழே முத்துப்பல்லக்கின் மேற் கொண்டு சமணராகிய இருளைப் போக்குகின்ற சூரியன்போல வழிக் கொண்டு வழியிலுள்ள சிவஸ்தலங்களெல்லாம் போய்ச் சேவித்துத் திருப்பதிகங்கள் பாடி இப்படியாகச் சோழநாடெல்லாங் கடந்து பாண்டி நாட்டுக்குப்போய்க் கொடிய பாலைவனமும் முல்லைவனமுங் கடந்து, பாகத்திலே பார்வதியையுடைய கடவுள் எழுந்தருளியிருக் கின்ற மதுரைக்குப் புறம்பே போய்ச்சேர்ந்து, பரிசுத்தமாகிய விபூதி பூசிய அடியார்கள் திருக்கூட்டத்தினடுவே திருஞானசம்பந்தமூர்த்தி கள் திருப்பாற்கடலிலே பிறந்து மேலெழுந்து விளங்குகின்ற பூரணச் சந்திரன்போல முத்துப்பந்தலின் கீழே முத்துப்பல்லக்கின்மே லெழுந்தருளி வர, முன்னே செல்கின்ற பரிசனங்களில் முத்துச் சின்னம் ஊதுகிறவர்கள் சமணராகிய இருளோட உதயமான சூரியனென்னும்படி பரசமயகோளரி வந்தானென்று ஊதிக் கொண்டு வருகிற சத்தத்தைக்கேட்டு நின்றுண்டு திரியும் வஞ் சகரான சமணர்கள் எதிரேவந்து நீங்கள் கொன்றறஞ் சொன்ன உங்கள் தெய்வத்தைக் கும்பிட வந்தால் இந்த வெற்றிச்சின்ன மேதுக்கு, இப்படிப்பட்ட கருவமேதுக்கு, நீங்கள் யாரைச் செயித் தீர்கள் என்று பரமசிவனடியாரைத் தடுத்தார்கள்.

அப்போது, அதிகமாக மதமொழுகச் செல்லுகின்ற மிகுந்த பலத்தையுடைய மதயானையானது தாமரைநூலாலே கட்டினல் அதற் குத் தடைபட்டு நிற்குமோ? அதுபோல வெற்றிகொள்ள வந்த மன் மதனை யெரித்த கடவுள் குமாரர் அந்தக் கயவர்கள் தடையை விலக் கிக்கொண்டு பெரியமணி மாடங்கடளையுமை மதுரைக்குள்ளே புகுந்து பரமசிவனுடைய திருக்கோயிலுக் குள்ளேபோய் வெள்ளையானையினு டைய சாபத்தைத் தீர்த்த கிருபைக்கடலான கடவுளைவணங்கி மூன்று தரம் வலஞ்செய்து முகிழ்முலைப்பாலைச் செம்பொன் கிண்ணத்திலே கொண்டுவந்து கொடுத்த அங்கயற்கண்ணம்மையையும் வணங்கிக் கொண்டு வேதச்செல்வரான திருஞானசம்பந்தப் பிள்ளையார் உண் மையான ஆனந்தமயமான வெள்ளத்திலே முழுகி நின்று, சுவாமீ!

உம்மை வேதவழியாக நின்று வந்தித் தீடேறமாட்டாத புத்தி கெட்ட வஞ்சநெஞ்சரான சமணரை அவர்கள் மார்க்கமெல்லாம் கெடும்படி வாதுசெய்து வெல்ல அடியேனுக்குத் திருவுள்ளஞ் செய்தருளவேண்டும். (கூற்றைக்குறைபட வுதைத்தோய்) என்று திருப்பதிகம்பாடி வேண்டிக்கொண்டு அதனைப்பெற்றுத் திரும்பும்போது, திருஞான சம்பந்தரைக் கண்டு மூண்ட வைம்பொறியும் வென்ற வாகீசமுனிக ளென்ன ஆண்டு வுள்ளவரொருவர் முன்வந்து வேண்ட, அவர் திரு மடத்துக்கு அன்புபூண்டொழுகுகின்ற காதலோடு போயருளினார் புகலி வேந்தரான திருஞானசம்பந்தப் பிள்ளையார். அப்படி அந்த மடத்திலே எழுந்தருளி அன்றிரவு திருவமுது செய்தருளியிருக்க அன்றி ராத்திரியிலே செய்யப்போகிற நினைக்கவும்கூடாத செய்கையையும் தங்கள் நல்ல குலத்தில் வந்து பிறந்த மங்கையர்க்கரசியார் கொண்டிருக்கின்ற மனவருத்தத்தையும் பார்க்கப் பயந்து சூரியன்போய் மேலைக்கடல் வெள்ளத்திலே முழுகினான். அப்படிப் பகற்காலம் போகவே மாறுபாடுகொண்ட சமணர்கள் செய்யும் வஞ்சனைக்கு உதவியாக வேற்றுமையின்றிக் கலந்துறவாக வந்தாற்போல அந்தச் சமணர்கள் நிறம்போலிருண்டிருக்கிற ராத்திரியில் அந்த சமணர் தலையிலே மயிர்கள் பரியுண்டு அந்த மயிர்க்காலெல்லாம் கிளம்பின சிறு கொப்பளங்கள் போல எங்கும் நட்சத்திரங்கள் பூத்தன. இன்று இங்கே வைதிகத் தனியிளஞ் சிறுமடங்களான திருஞானசம்பந்தப் பிள்ளையார் வந்திருக்கிற செய்தியைத் தெரிந்து, வெவ்வேறே மலைகளிலே திரண்டிருக்கிற வஞ்சகரான எண்ணுயிரஞ் சமணமுனிக ளெல்லாம் ஒருமித்துக்கூடி முத்தமிழ் விரகரான திருஞானசம்பந்தர் மேலே ஒருமித்துக்கூடி ஒருவகை வேள்விசெய்து முழுப்பொய்யரான சமணர்கள் அந்த அக்கினியைக் கூப்பிட்டு நீ போய் எங்களுக்குப் பகைவரானவர்க ளிருக்குமிடத்தை அழித்து உண்டு வரக்கடவை யென்றேவிவிட, அதற்குமுன் ஒரு காலத்திலே தக்கன் யாகஞ்செய்த இடத்தில் கை அறுபட்ட அக்கினி கலங்கிப் போகப்பயந்து போகாமல் நின்றனன்.

அப்போதந்த ஈனரான சமணர்கள் வீட்டில் எரிகின்ற கொள்ளிக் கட்டைகளை எடுத்துக்கொண்டுபோய் ஞானபோதரான சம்பந்தப் பிள்ளையார் எழுந்தருளியிருக்கிற மடத்திலே செருகினார்கள். அந்தக் கொள்ளி அவியாமல் பற்றிக்கொண்டு வெந்து புகைவதை அங்குள்ள திருத்தொண்டர்கள் கண்டு வந்து வானநாயகன் மைந்தரான திருஞான சம்பந்தருக்கு விரைந்துசொல்ல, உடனே சிட்டரான அறிவாற் சிறந்த சம்பந்தப் பிள்ளையார் அங்கு மூள்கின்ற நெருப்பைப் பார்த்துத் தென்றமிழ்க்கூடல் அட்டமூர்த்தியைத் தியானித்து அங்கேயிருந்தபடியே அருமைப் பதிகமொன்று துட்டர் பொய்யுரை மேற்கொண்டு தொன்முறை துறந்துவிட்ட பாண்டியனைப் போய்ப் (பையப்) பற்றிக்கொள்ளென்று பாடியருளி அந்த நெருப்பையே

பாண்டியன்மேலேவி யருளினார். அந்தக் கணப்பொழுதிலே அந்த நெருப்புவந்து பாண்டியனைச் சுரநோயாகிப் பற்றிக்கொண்டது. அந்தப் பாண்டியன் அணிந்திருந்த ஆபரணங்களெல்லாம் நீருக வெந்து அவன் பூசின கலவைச் சந்தனமும் மாலையும் வெந்து கருக வும். விரித்துப் பரப்பின பாயலும் புலர்ந்து சருகாகவும், பாண்டி யன் பதைபதைத்தான். அப்போது மங்கையர்க்கரசியாரும் குலச் சிறை நாயனாரும் கண்டு தளர்ந்து நல்ல வைத்தியர்களை அழைத்து யாதொரு குற்றமில்லாத பல அவிழ்தங்களுங் கொடுத்துப் பார்த்ததி னாலும், அந்த வெஞ்சுரம் தணியாமல் அதிகமாகியது கண்டு சவலை யான விரதங்களில் வருந்தி, இகபரபோகத்தையும் அடையமாட்டாத புத்தியினராகிய சமணரை யழைத்துக் காட்டிப் பார்க்கச்சொல்ல அவ்வமணர்கள் தங்கள் தவப்பலத்தினாலும் பலவகை மருந்தினாலும் வெஞ்சுரம் தணிவு செய்துபார்க்க, அது தணியாமல் அதிகரிக்கக் கண்டு, என்ன செய்வோமென்று கவலை கொண்டிருக்கப் பொழு தும் விடிந்து வட்டவாழி யொன்றுடைய தேர்ப்பரிதியான சூரியன் தன் குலத்துச் சோழராஜன் வேண்டின மருமகனான கூன்பாண்டி யனைப்பற்றிய வெஞ்சுரத்தைக் கேட்டு அவனை மறையவளைத்த திரைச்சீலையைக் கையாலே தொட்டு எடுத்து மறைவு நீக்கிப் பார்க்க வந்தவன்போலச் சூரியன் கடல் முகட்டிலே தோன்றி விளங்கினான்.

அப்படிப் பகலானவுடனே, பரிசுத்தமான சைவமாகிய பயிரை வளர்க்க வேலிபோலமைந்த பாண்டிமாதேவியாரும் மந்திரியாகிய குலச்சிறை நாயனாரும் பாண்டியனைப் பார்த்து ஐயா மகாப்பிரபுவே! இந்த வெஞ்சுரம் மனது பாசத்தையும் சுடத்தக்கதாயிருக்கின்றது. இதைச் சீகாழி கௌணியர் தலைவரான திருஞான சம்பந்தப் பிள்ளை யார் வந்து பார்த்துத் தீர்த்தால் தீரலாம் அல்லது வேறொரு வகை யாலும் தீர்க்கப்படாதென்ன, அதற்குப் பொய்ச் சமயரான அமணர் கொள்கையை விடாத பாண்டியன் நீங்களிருவரும் சொன்ன அந்தச் சைவசமயத்தார் வந்து விபூதியிட்டுப் பார்க்கப்படுமோ வென்ன, அவ் விருவரும், சுவாமி! நீர் எந்த விதத்திலே யானாலும், பிணிதீர்ந்து நன்மையாக வேண்டாவோ, இந்தப் பிணி தீர்வதைவிட வேறே யென்ன வேண்டி யிருக்கின்றது என்று சொல்ல, அதற்குப் பாண்டி யன் சம்மதித்து ஆனால் அந்த திருஞானசம்பந்தரை இங்கேவர அழையுமென்ன, குலச்சிறைநாயனாரான மந்திரித்தலைவர் பட்டணங்க ளெல்லாம் மகிழ்வாக அலங்கரித்து முத்தமிழ் விரகரான திருஞான சம்பந்தப் பிள்ளையார் எழுந்தருளி யிருக்கின்ற திருமடத்துக்கு வந்து, முன்னொருநாள் வைதிகப் பிராமணன் சொல்லக் கேட்டுண்ட ஞானா மிர்தத்தை இப்போது கண்களாலே கண்டு, கண்கள் பெற்ற பயனைக் கொண்டுபோய் வணங்க, பூந்தராய் வேந்தரான திருஞானசம்பந்தர் கெட்ட அமணர் நடக்கையை வென்றுசென்ற மனமுடையவரே எழுந்திருமென்று சொல்லியருளி, நன்று சுகமே இருந்தனீரே என்ன

பாண்டிமாதேவியையும் கேட்க, அவ்விருவரும் எப்போதும் தேவரீருடைய திருவருளைப்பெற விருக்கின்ற எங்களுக்கு யாதொரு குறைவுமில்லை என்று உள்ளுறவுகொண்டு, சுவாமி! இனி உம்முடைய திருவருளினாலே எங்கள் அரசன் சுரம் தீரவேண்டும். அமணர் கூட்டம் மாளவேண்டும். ஆக இவ்விரண்டும் செய்தருள வேண்டுமென்று பாதத்திலே விழுந்து வணங்கி எழுந்தருள்வீராக வென்று வேண்ட, அப்படி வேண்டுமென்கிற அன்பரிருவருக்குமாக அப்படியே வருவோமென்று அனுக்கிரகித்து முத்துப் பல்லக்கின்மேல் சந்திரன் பாண்டியன் சுரந்தீர்க்கச் செல்வதுபோலச் சென்றருளப் பாண்டியன் கோயிலுக்குப் போகும்போது முன்னே மெய்வேதத்தை வாழச்செய்ய வருகிறவரென்று வாசலெல்லாம் தூபதீபங்களும் பூரண கலசங்களும், கொடிகளும், கந்தப்பொடிகளும் நெருங்கிப் பாண்டியன் காதுக்கின்பமாக, முத்துக்காகளமூத அமணருக்குக் கோளரிபோல கோவிலுக்குள் எழுந்தருள, பாண்டியன் அருகிலிட்ட செம்பொன் மணியாசனத்தில் எழுந்தருள, அவரைப் பாண்டியன் கண்டு தெளிந்து, செந்தாமரை மலர்போல முகமலர்ந்து, சுவாமி! பாவியேனுடைய சுர நோயைத் தீர்த்தருளி என்னையும் பணிகொண்டருள வேண்டுமென்று வேண்ட, சிரபுரத் தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் முன்னே அந்தச் சுரநோய் வருவதற்குக் காரணமான அமணர்கள் கேட்டு மனம் புழுங்கி ஓய் பாண்டிய மகாராஜனே! கலைஞானங்கள் எல்லாங் கற்று வல்ல உம்முடைய வலப்புறத்து வெம்மையை இங்கே இப்போது வந்தவர் தீர்ப்பாராக; நாங்கள் இடப்புறத்து நோயை முன்னே தீர்க்கிறோமென்று பாண்டியனைச் சம்மதப்படுத்தி அமணர் தங்கள் அசோகின் கீழிருக்கின்ற அருகக்கடவுளை நினைத்துக் கையிலிருக்கின்ற மயிற்றோகைகளாலே தடவித் தடுத்துக் கண்ணீர் சிந்தி அழுதும், அந்த இடப்புறத்து வெம்மை நெய்வார்த்த நெருப்புப்போற் கொதித்து அதிகரித்து தணியாதிருக்க அமணர் மானங்கெட்டு கர்வங் குலைந்து போசாதிருக்க, திருஞான சம்பந்தப் பிள்ளையார் தமது விபூதிப் பையில் விபூதியை அள்ளிக் கையில் வைத்துக்கொண்டு அந்தச் சுரநோய் தீரும்படி நினைத்தார்.

அப்போது மாயை செய்தழியும் அமணர் இது மாயநீறு தகாது என்று தடுத்தார்கள். அதற்கு எங்கள் கடவுள் திருக்கோயில் திருமடைப்பள்ளிச் சாம்பலை அள்ளிக்கொண்டு வாருங்கள் என்று அருமறைக் கௌணியர் சொல்ல, பாண்டியன் ஏவலாளர் கேட்டுத் திருக்கோயிலுக்குப் போய் அள்ளிக்கொண்டு வந்தார்கள். அதைப் பாண்டியன் சுரந் தீர்க்க வந்தருளிய கௌணியர் குலத்தலைவராகிய திருஞான சம்பந்தப்பிள்ளையார் தமது கையில் வாங்கி மருந்து - மந்திரம் - வேதப்பொருள் - இன்பவீடு - போகம் - பொருள் முதலான எல்லாம் திருவாலவாயான் திருநீறேயென்று திருப்பதிகம் பாடிப் பாண்டியனுடைய உடம்பிலே திருக்கோயிற் சாம்பலைப் பூசித் தடவினர்,

அப்படித் தடவினவுடனே, வலப்புறத்தில் உள்ள வெம்மை அமணர்கள் வெம்மைபோல அகன்று போயிற்று. அப்போது பாண்டியனுக்கு வலப்புறம் வாசங் கலந்த குளிர்ந்த பனிநீர்விட்டுக் குழைத்த சந்தனம் பூசின தன்மைபோ லிருந்தது. அப்படி ஒருபுறம் குளிர்ந்த பாண்டியனுக்கு இழிதொழிலையுடைய அமணர் கைதொட்ட இடப்புறம் கொதிக்கிறதும் கௌனியர் கைதொட்ட வலப்புறம் குளிர்ந்திருக்கிறதும் தீவினை நல்வினைப் பயன்போலாக, பாண்டியன் சுவாமி! வலப்புறங் குளிர்ந்தது; இடப்புறங் கொதிக்கின்றது; இனி என்னாலே பொறுத்து முடியாது. ஆனாலும் இந்த அமணர் குற்றத்தைவிட்டு என்னை ஈடேற்ற வேண்டியருளினால் இந்த இடப்புறத்து நோயையும் தேவரீரே தீர்த்தருளவேண்டுமென்று பாண்டியன் மிகவும் வேண்ட, அதற்குச் சிரபுரத்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் அவன் இடப்பறத்தையும் முன்போலவே விபூதி யள்ளித் தடவச் சுரமும் நீங்கிக் கூனும் நிமிர்ந்து பாண்டியன் சூரியன்போல் விளங்கினான். அதனாலே அன்று முதல் சௌந்தரிய பாண்டியனென்று பெயர் கொண்டு திருஞானசம்பந்தப் பிள்ளையார் கடாக்ஷத்தாலும், தொடப் பெற்றதனாலும், அவர் தெளிந்த திருவாக்கைக் கேட்டதினாலும், பாண்டியன் திருஞானசம்பந்தப் பிள்ளையாருடைவ திருவடிகளை வணங்கி ஸ்ரீ பஞ்சாட்சரோபதேசம் பெற்று அமணர் நெறியைவிட்டுப் பழைய வேத நெறியைக்கொண்டு பரிசுத்தனானான்.

பாண்டியன் சுரந்தீர்த்த படலம் முற்றிற்று.

---

அறுபத்துமூன்றாவது

## சமணரைக் கழுவேற்றிய படலம்

---

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

பஞ்சவ னடைந்த நோயைப் பாலரு வாயர் தீர்த்து
கஞ்சனி கண்டனீறு நல்கிய வண்ணஞ் சொன்னேம்
அஞ்சல ராகிப் பின்னும் வாதுசெய் தடக்கத் தோற்ற
வஞ்சரைக் கழுவே றிட்ட வண்ணமுஞ் சிறிது சொல்வாம்.

உரை : கூன்பாண்டியன் அடைந்திருந்த சுரநோயைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தீர்த்துக் காளகண்டராகிய பரமேசுவரது திருநீறளித்தருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இனி கொஞ்சமும் அஞ்சாதவர்களாய்ப் பின்னும் வாது செய்து தோற்ற வஞ்சகராகிய அச் சமணர்களை யெல்லாம், கழுவேறவிட்ட திருவிளையாடலையுஞ் சொல்லுகின்றோம்.

பின்பு பாண்டிமாதேவியான மங்கையர்க்கரசியாரும், மந்திரிகளிலே சிறந்த குலச்சிறைநாயனாரும் திருஞானசம்பந்தப் பிள்ளை

யார் திருவடியில் விழுந்து சேவித்து, எங்கள் அரசனுடைய சுர நோயும், கூனும், பாசவல்வினையும் தீர்த்த தேவரீர் தாமே இன்னமும் அடியேங்கள் வேண்டுகின்ற குறைதீர்க்க வேண்டும். அதாவது: இந்தக் கன்னிநாடு முழுதும் கறுத்த அமணராகிய காடு மூடு பட்டுக் கிடக்கின்றன. ஆதலால், இந்த அமண இருளை இப் போதே போக்கியருள வேண்டுகின்றேமென்று வேண்டுதல் செய்ய, அதற்குத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாலவாய்க்கடவுள் திருவுள்ளத்தைத் தெரிந்து கொண்டு வருகிறேனென்று அவ்விரு வருங் கூடவரவே, திருக்கோயிலுக்குப்போய் பொன்னிறத்தாமரை மலர்ந்த திருக்குளத்திலே ஸ்நானஞ்செய்து கொண்டு அங்கயற் கண்ணிபாகமாக மான்மழு வேந்திய திருக்கைகளையுடைய நாதனை வணங்கி நின்று சுவாமி! உடம்பை வெறுத்துக் காலமெல்லாம் வஞ்ச னையே அதிகமாகத் தவஞ்செய்கின்ற பேயராய் இம்மை மறுமைப் பயனை விட்டு, நீர் சொல்லியருளிய வேதவேள்விகளை நிற்கின்ற கொடிய சமணரைத் தண்டித்தருள வேண்டுமென்று வேண்டினார். அப்போது முன்னே யானைசெய்த கடவுள் ஆகாசவாக்காக என்னடி யார்களாகிய உங்களுக்கு வேண்டுவதே எனக்கும் வேண்டுவது இப் படி எனக்குச் சம்மதமானதினாலே நீங்களே வெல்வீர்கள். அவ்வமணர் தோற்பார்கள். அதற்கு இப்போது நாம் சொல்லுகிறபடியே நீங்கள் பாண்டியன் சபைக்குப்போய் அவ்வமணரோடு வாதுசெய்தால் அவர் களே தோற்றுப்போய்க் கழுவிலேறிச் சாவார்கள். இதற்கெவ்வள வும் அஞ்சவேண்டாமென்று சொல்ல அதனைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார்கேட்டு வணங்கிப் பின்பு தமது திருமடத்துக் கெழுந்தருளி னார். மற்றை இருவரும் திரும்பித் தங்கள் இடத்துக்குப் போனார்கள்.

அப்படி அன்றைப் பொழுதுபோக மறுநாள் பாண்டிமாதேவியும் மந்திரித்தலைவரும் திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமடத்துக்குப் போய் அந்தச் சமணரை வெல்லுதற்கு உபாயம் எப்படியென்று ஆலோசித்துக்கொண்டு திருஞானசம்பந்தப்பிள்ளையாருடனே மூவரு மாகத் தங்கள் பாண்டியன் சமுகத்திற்குப் போய், ஓ பாண்டிய மகா ராஜனே! இங்கே எங்கும் அமணர் கூட்டமே அதிகமாய் நெருங்கி யிருக்கிறதினாலே அவ்வமணரை வேரோடே களைந்தாலல்லவோ எங் கும் முன்போலவே சைவப்பயிர் தலையெடுக்குமென்று சொல்ல, அது கேட்டுப் பாண்டியனும் அப்படிச் செய்தத்தக்கதென்று ஆக்ஞாபிக்க, மூவரும் நாடெல்லாம் மெய்வழியே சென்று ஈடேறுங்காலம் வந்த தென்று பாம்பலங்காரப் பரன்புகழையே எங்கும் பரப்பவேண்டி மகிழ்ந்தார்கள். அந்தக்காலத்தில் இந்த அமணரை அவர்கள் பெண்டு களும் பிள்ளைகளும சீடர்களும்கூடிக் கண்களிலே நெருப்புப் பொறி சிந்தப் பார்த்து நீங்கள் இவ்வளவுகாலமாகத் தவவாசியுள்ளவர்களெ னப் பெயர்கொண்டு இப்போது பாண்டியனுக்கு வந்த சுரநோயைத் தீர்க்கமாட்டாமல் ஒருசைவனாகிய சிறுபிள்ளை தீர்க்கும்படியாய் நம்மு

டைய பகவான் பெருமைக்கு இழிவுண்டாக்கினீர்கள். இப்போது பாண்டியன் சாம்பல் பூசுகின்ற கடவுளாகிய பாம்பலங்காரனே பக வானென்று நம்பி உங்கள் விரதமார்க்கங்களெல்லாம் பழிப்பாக இகழ்ந்து விட்டான். இனி உங்களுக்கு நிலையேதிருக்கின்றதென்று அவர்களை வெறுத்து முதுகுகாட்டி நிற்க. அமணர்களெல்லாம் இனி யென்ன செய்யலாம்; அவனுடன் வாதுசெய்து பார்ப்போமென்று கூடியெழுந்திருக்க, அத்தனை பேர்களையும் அவனவன் பெண்டுகள் வந்து முன்னே நின்று தடுத்து நீங்களொருவரும் போகவேண்டாம். உங்களுக்கிது நல்லகாலமாகவில்லை, நாங்கள் கண்டகனவு வருந்தித் துன்பக்கடலில் முழுகுவதாயிற்று. அதாவது நம்முடைய கோயில்கள் வீடுகளெல்லாம் சடைமுடிகளும் தருப்பை பிடித்த கைகளும் சாம்பல் பூசின உடம்பும் கையிலே சூலாயுதங்களும் புலித்தோலாடையுமாகச் சிற்சிலர் வந்து உலாவவுங் கண்டோம். கலியாணமில்லாமல் துறந்த வர்களும், கணவனிருக்கும்போதே துறந்தவர்களும் ஆக மூவகை யான தவப்பெண்கள் இருக்கின்ற பள்ளிகளிலெல்லாம் ஒரு சிறிய கொம்பானைவந்து இடித்து அழிக்கவுங்கண்டோம். மொட்டைத்தலைவ ராகவும், குண்டிகைவைத்த உறிதூக்குகின்ற கையராகவும், கோவ ணங்கட்டிக் காய்கிற தடியைச் சாத்திக்கொண்ட பிடரியையுடையவ ராகவும், அந்தச் சடைமுடிச் சிவன்பெயரை நாவில் உச்சரித்துக் கொண்டு எங்கும் உலாவவுங் கண்டோம். இன்னும் கொதிக்கும்படி யான கோபம் கொண்டதாகி ஒரு யானைக்கன்று வந்து நம்முடைய குருக்கண்மார்களை துரத்திவிட்டுப் பூ இலைகளுதிரவுங் கிளைகள் முறிய வும் அசோகமரத்தை வேரோடே பெயர்த்துத்தள்ளவும் கண்டோம்; அப்படி அவர்கள் கொண்ட மூவிலைச்சூலத்திலுங் கூர்மையாகிய கழு விலே நீங்கள் எல்லாரும் ஏறவும், நாங்கள் கண்டு வருந்தி மார்புகள் சிவக்கக் கைகளா லடித்துக்கொண்டு கூந்தல்கள் அவிழ்ந்து விரியும் படி அழவுங்கண்டோம். ஆனால் ஒருவராலும் வெல்லப்படாத உங்க ளுடைய இந்திரசால மோக முதலான வித்தைகள் இந்தச் சமயத்தில் உங்களுக்கெவ்வளவு முதவியாகவில்லை. ஆனால், அந்த வித்தைகள் கள்ளராலே பறியுண்டு போயினவோ, நெருப்பிலே வெந்து போயி னவோ, வெள்ளங்கொண்டு போயினவோ, புதையிலே கிடக்கின்ற னவோ, முன்னே வேள்வியில் நெருப்பை வளர்த்து, யானை-பாம்பு-பசு இவைகளை யேவி நமமுடைய பெரியோர்கள் பட்டபாடு தெரிந் திலீர். இப்போது இந்த பாண்டியனுக்கு வந்த சுரநோயைத் தீர்க்க மாட்டாத நீங்கள் இனி அங்கேபோய் என்ன செய்து வெல்வீர்கள்? அதையும் ஆலோசித்துக்கொண்டு நின்று போகாமலிருங்களென்று சொன்னார்கள்.

அதற்குத் தருமத்தைக் கெடுத்தபாபிகளான அமணர் வலிந்து செல்ல, அவரவர்கள் பெண்டுகள் கையைப்பற்றி யிழுத்துத் தடுத் தாலும், பெண்டு வழிச்செல்லுதல் குற்றமென்று தீவினைவழிச்

செல்லுகின்ற அமணர்கள் அந்தப் பெண்டுகளுக்குத் தெரியாமல் போகத் தொடங்கினர்கள். அப்படி ஆயுள் முடிந்த அமணர்கள் போகும்போது, பெரிய பெண்டுகள் எங்கள் பேச்சைக் கேளாமல் போகிற நீங்கள் துன்பப்பட்டு வருந்தக்கடவீர்களென்று சபித்தார்கள், அதற்கும் அஞ்சாமல் பட்சிகள் முதலிய அவசகுனங்கள் போக வேண்டாமென்று தடைசெய்தாலும் துணிந்து போகின்றவர்கள் பெரிய கெண்டைகள் உலாவ தேனைக்கவிழ்த்து தாமரை முதலிய மலர்கள் மலர்கின்ற அகழ்சூழ்ந்த மதுரைக்கு வெளியே ஒருபுறத்திலே எல்லாச் சமணர்களுங்கூடி, நாணமும் பயமுங்கொண்டு ஆலோசனை எது செய்யாலாமென்று துணிந்து இனிப் பாண்டியனைப் போய்க் கண்டு இப்படியென்று தெரிவித்து அவன் சம்மதிமேல் வந்திருக்கிற வேறு புறச்சமயத்தானை வாதினலே வெல்லுவோமென்று ஒருமித்து மதுரைக்குள்ளே புகுந்து பாண்டியன் சபைக்கு வரும்போது, உதய காலத்தில் கவுணியர்குலப் பெருமாளான திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாலவாய்க் கடவுள் சேவடிகளை வணங்கித் தமது திருமடத்துக்குச் செல்ல, வந்த அமணர்கள் வழியிலே கண்டு சூரியனை இருள் வளைந்தாற்போல் வளைந்து தடுத்துப்பின்னேவர, திருஞானசம்பந்தப் பிள்ளையார் தடையுண்டு திருமடத்துக்குப் போகாமல் பாண்டியன் சபைக்கு வந்து அங்கு நியமித்திருக்கிற சிங்காசனத்தின் மேலேறி இளஞ்சூரியன்போ லெழுந்தருளி யிருக்க பறித்த சீத்தலைப் புலையர்களான அமணர்கள் பொருமற் பதைத்துநோக்கி, நீயோ இன்னமும் மழலைச்சொல் திருந்தாத சிறுபிள்ளை, கண்மணி ஒன்றுதானே இரு விழிகளிலும் சுழல்வதான காக்கையிருக்க பனங்கனி உதிர்ந்தாற் போல நீ கற்றுவந்த மந்திரபலத்தாலே பாண்டியனைப்பற்றின சுரந் தீர்த்தோமென்று கர்வங்கொள்ளலாகுமா? நந்து-நாகு-நீர்வண்டு இவைகள் சென்ற வழியும் ஒரெழுத்து வடிவாக அமைந்தாலும் அமையும். அப்படியாக உன் கையாலே சிந்தின சாம்பலும சிறுசொல்லுமே மருந்தும் மந்திரமுமாகப் பாண்டியன் சுரம் தணியக்கண்டாய். ஆகையாலே உங்கள் மந்திரத்தையும் ஒரேட்டிலெழுதி எங்கள் மந்திரத்தையும் ஒரேட்டிலெழுதி இரண்டேட்டையும் நெருப்பிலிடுவோம். வெந்தது தோற்றதாய், வேவாத ஏடு வென்றதாகக் கொள்வோம்; ஆனால் இது சிவன்கோயில் சார்ந்த இடங்களிலே செய்யக்கூடாது. செய்தால் அந்தச் சிவன் உங்களுக்குச்சார்பாய் எங்களுக்கு விக்கினஞ் செய்கின்ருன். ஆகையாலே வேறே பொதுவான ஒரு இடத்திலிருந்து வாதஞ் செய்வோம வாவென்று எந்தவேளையும் பேரிகைகள் சப்திக்கின்ற மதுரைக்கு வெளியே போய் வேப்பமாலை யணிந்த பாண்டியனுக்கு முன்னே நெருப்பை வளர்த்து அதிலிடுகிற ஏடு வேகாதிருக்கிறதும் வேகின்றதும் காண்போமென்று எழுந்து அமணர்களே மதுரைக்கு வெளியே ஒருபுறத்தில் வந்து கீழ்த்திசையிலே சிவந்த நெருப்புக்குழி ஒன்று தோண்டி அதில் மரங்களை வெட்டிப்போட்டு அதிகமாக நெருப்பை மூட்டிவிட்டுத் தங்கள் பெண்டுகள் வயிற்றிலும்

நெருப்புமூளச் செய்து சிவஞானப்பாலுண்ட சம்பந்தப் பிள்ளையாரை ஏன் அங்கு வராதிருக்கிரு னென்றிகழ்ந்து அந்த வஞ்ச அமணர்கள் நெருப்பைக் கட்டிக்கொண்டிருக்க. அப்போது பதினுயிரந் திருக் கூட்டத்துடனே எழுந்து திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் பாண்டிய னும் பாண்டிமாதேவியும் மந்திரித் தலைவரும் அவர்கள் நெருப்பு வளர்த்துக் கொண்டிருக்கிற இடத்துக்கு வந்து சபைகூடி யிருந்தார் கள். அங்கே மனங் கனிந்து முலைசுரந்து பாலொழுகுகின்றபோது குடிக்கின்ற கன்று குடியாமல் துள்ளிக் கொண்டோடினல் அக் கன்றைத் தொடர்ந்து பின்னே வருகிற பசுவைப்போல வெள்ளியம் பலத்துளாடும் வேதகீதரான கடவுள் தமது தேவியாருடனே தம் பிள்ளை போனவழியே தொடர்ந்தனர்.

அப்போது, எண்ணுயிரம் சமணரும் வெவ்வேறே தாங்கள் முயன்று கற்ற மந்திரங்களை ஓலையிலே தனித்தனி யெழுதிக்கொண்டு போய் எல்லாரும் ஆகாயத்தை யளாவக் கொதித்து நிமிர்ந்து எரிகிற நெருப்பிலிட்டார்கள். அப்படி அவர்கள் நெருப்பிலிட்ட ஏடுகளெல் லாம் அத்த க்ஷணத்திலே கரும்பிலே காய்ந்த கொழுந்தடைப்போலத் தீய்ந்து சாம்பலாய்ப் போனவற்றைக் கண்டு நீசரான அமணர்கள் மனங்கிடந்து கொதிக்கக் கண்டவர்களெல்லாம் சிரிக்கத் தொடங் கினர்கள். அந்த வேளையில் விரிந்த வேதநாதரான திருஞானசம்பந் தப் பிள்ளையார் தாம் பாடின மெய்யான வேதப்பொருளை எழுதின புத்தகத்தை அவிழ்த்து வகிர்ந்து பார்க்கும்போது தமக்கு ஞானப் பால் கொடுத்த அம்மை பெயரெழுதின ஏடகப்பட. அந்த ஏட்டை யெடுத்து எரிகிற நெருப்பிலிட்டருளினர். அப்படி இட்டபோது வேகப் பொருளை வெளியிட்ட நூலெழுதின ஏடு அனந்தகாலம் நீரிலே ஊறிக் கிடந்த ஏடுபோலப் பச்சென்று பசன்று தோன்ற பாண்டியனும் மாதேவியாரும் மந்திரியாரும் மற்றுமுள்ளவர்களுங் கண்டு பிராமண குலோத்தமரான திருஞானசம்பந்தப் பிள்ளையாரைக் கொண்டாடிப் புகழ்ந்து பேரின்பக்கட லிலே முழுகினர்கள்.

அப்போது கொடுமையால் வெந்த சிந்தையையுடைய அமணர் கள் வாதுசெய்து வெல்ல வேறே பொதுவிடந் தேடி ஒப்புக்கொண்ட பொதுவிடம் அன்றுமுதல் திருஞானசம்பந்தர் அமணரை வென்ற இடமாகையாலே இன்றும் அந்த இடம் திருஞானசம்பந்த ரென்றே பெயர்பெற்று விளங்குகின்றது. அப்படி வேகாமல் பச்சென்று தோன்றின ஏட்டை யெடுத்துப் புத்தகத்தோடு சேர்த்துக் கட்டிக் கொண்டு பின்பு சம்பந்தப்பிள்ளையார் பாண்டியனை பார்க்க, அவ் வேலையிலே தீவினையையும் பாயையுமுடுத்தின அமணர்கள் தாங்கள் சொன்னபடி சபதமுடிக்க வேண்டியிருக்கவும் பாண்டியன் சபையா ரெல்லாம் நகைக்கும்படி கத்தி திருஞானசம்பந்தப் பிள்ளையாரை நோக்கி, யேட நாங்களெழுதியிட்ட பச்சை யேடுகளெல்லாம் வெந்து போக, நீ எழுதியிட்ட வேடு வேகாதிருப்பது நீ அக்கினியை எரிக்க

வொட்டாமல் கட்டிக் கொண்டதல்லலல்லவோ; அது நிற்க உன் ஏட்டையும் எங்களேட்டையும் இன்னும் பொங்கிப் பெருகிவருகிற இந்த வைகையாற்றிலே போடுவோம் போட்டால் நீர்வழியே செல்லு மேடு தோற்றதாக நீரினெதிரே செல்லுமேடு வென்றதாகுக என்று பொறாமைகொண்டு பேசி, வென்றபேர்க்குத் தோற்றபேர் ஏவலடிமை யாகிறதே சபதமென்று சமணர்கள் சொல்லஅப்படிச் சொல்லிக் கொண்டு மலை போனிற்கிற அவர்களை நோக்கி மன்றுள்ளாடும் அடிகள் மைந்தரான திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவாய்மலர்ந்து இங்கே ஏவலடியார் பதினாயிரம் பேர்களுண்டு. வேறே வேண்டியதில்லை. சிவ நிந்தை பண்ணின பாபிகளான உங்களுக்கு அடிமைகளென்று கொள்ளுந் தண்டம் போதுமோ போதாது. இன்னமும் கொன்றை மதிமுடியாருளாலே உங்களை யாம் வெல்லுவோமாகில் சூலிலேவேல் வடிவால் நிறைந்த கழுமுனையி லிடுவோம், அதுவே வழக்கென்று சொல்ல, அதைக்கேட்ட அமணர்கள் அவர்கள் விதி வலியினாலே கழுவேறச் சம்மதித்து நிற்க, உடனே குலச்சிறைநாயனாரான மந்திரித் தலைவர் தச்சர்களைக் கூட்டி வயிரங்கொண்டு நீண்ட ஆலமரங்களிலே சூல வடிவாகக் கழுமுட்கள் செய்து தனித்தனி யொன்றி அந்த எண்ணாயிரம்பேருக்கும் வரிசையாக எண்ணாயிரம் கழுமரங்களைக் கொண்டுவந்து பாண்டியனுக்கு முன்னே பரப்ப, அப்போது தெளிவில்லாத சமணர்களைப் பார்த்துத் திருஞானசம்பந்தப் பிள்ளையார், ஓய் சமணர்களே! இனி நான் சொல்வதைக் கேளுங்கள்! என்னவென்றால்; நீங்கள் விபூதி உருத்திராட்சங்களை அணிந்து கொண்டு கடவுளுடைய ஸ்ரீ பஞ்சாட்சரோபதேசம் பெற்று உங்கள் பாசந் தீர்ந்தீடேறுங்களென்று நீதி நூலின்படி நினைத்துச் சொல்ல, அதற்குச் சமணர்கள் நெருப்புப்போலே கொதித்து நீ முன்னே நெருப்பிலே வென்றோமே, இனி நீரிலே எப்படியு முடியுமோ வென்றெண்ணி நயஞ்சொல்லிப் பயங்காட்டி எங்களை இணங்கி உடன்பாடாக நினைத்தாயே யல்லது வாதுசெய்து வெல்ல நினைத்தவனல்லை. நீயோ எலும்பு பூண்டவனடிக் கீழடைந்த புத்தியில்லாதவன்; உன் சொல்லுக்கு நாங்கள் உடன்படுவோமோ போவென்று தடுத்து, உடனே குரங்குகள் சஞ்சரிக்கின்ற ஆலமரங்களைப் பிடுங்கிக் கரையாக வொதுங்க வொதுக்கிக் கழுக மரங்களை முறித்து வேரைக்கிழித்து மலைகளைப் பறிக்கும் பக்கங்களிலே பரப்பி ஆகாயத்தைத் துழாவி விரைந்து வருகின்ற வைகையாற்று நீரை முன்போலவே மந்திரத்தினாலே அதன் வேகத்தை யடக்கித் தங்கள் மந்திரத்தை ஏட்டிலெழுதிக் காணாமல் விட்டார்கள். அதற்காகத் கடாகங்கள் சூழ்ந்த வேணுபுரத்தலைவராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் எல்லாருந் தெளியும்படி வேதமே மெய்யாகி அந்த வேதங்கள் துணிந்து சொல்லுகிற பொருள் சந்திரசேகரக் கடவுளென்பதுவும் மெய்யானால் இந்த ஏடு நீரினெதிரே செல்லக்கடவதென்று முறையே திருப்பதிகமெடுத்தெழுதிவிட் டருளினார்.

அங்கே முழங்கிவருகிற நீரிலே அப்படிக் கவுணியர் குலத் தலைவ ராகிய திருஞானசம்பந்தர்விட்ட ஏடானது மதுரேச ரருளென்னுங் கயிறுகட்டியிழுக்க, அந்த வையையாற்றி னெதிரேறிச் செல்லச் சமணர்களெண்ணுயிரவரும் விட்ட ஏடுகள் அழிவைச்செய்கின்ற ஐம் பொறி போனவழியே செல்லு மனம்போல அந்த ஆறுபோனவழியே போயின. இப்பால் சிங்கம்போலுந் திருஞானசம்பந்தப் பிள்ளையார் எழுதிவிட்ட ஏடு ஆற்றுக்கெதிரே செல்லுதலைக் கண்டு தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். முனிவர்கள் வஸ்திரங்களை வீசி யெறிந்து கொண்டாடினார்கள். சிவனடியார்கள் ஆனந்தக்கண்ணீர் வெள்ளத் திலே முழுகினார்கள். வெங்கண்ணரான சமணர்கள் நடுங்கி வியர் வைக்கடலி லாழ்ந்தினர்கள். இன்னும் வெந்துபோமென் றெண்ணுமல் வெல்வோமென்று சபதஞ்செய்து தாமே எழுதிவிட்ட ஏடுகள் வெந்து போகக்கண்டு, ஆற்றுக்கெதிரே ஏடுகள் செல்ல வெல்லுவோமென்று இட்ட ஏடுகள் கடல்போய்ச் சேர்ந்தன என்று தங்கள் மானமே தங்களைச்சுட தலைநிமிர்ந்து நின்றுலும் நாணத்துடனேயே நின்றார் கள். அப்போது மலையே வில்லாகக்கொண்டு திரிபுரத்தை வென்ற கடவுளே எல்லாத் தெய்வங்களுக்கும் விரும்பத்தக்க போகமும் வீடும் தருதற்குத் தக்க மேம்பாடுள்ள கடவுளென்று நான்கு கொம்புகளைக் கொண்ட வெள்ளையானைமே லேறுகின்ற இந்திரன் முடிதகர்த்த பாண்டியகுலத்தரசன் காணக் குருபதேசம்போல நெருப்பும் நீரும் தெளியச் செய்தன. பொய்யில்லாத வேதநெறி செல்லாத அமணருக் கும் புத்தருக்கும் இன்னும் வேதசாஸ்திரங்கள் தெரிந்தும் சிவனே பரம்பொருளென்று தெரியாமல் கையில் விளக்கிருந்தும் கிணற்றில் விழுகின்றவர் போன்ற அறிவீனர்களுக்கும் நெருப்பு நீருமல்லவோ சாட்சியாய் விளங்கச் செய்தனவென்று கொண்டு மதுரைபாண்டிய னும் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறைநாயனாரும் அடியார் கூட்டங் களும் சீகாழிச்சம்பந்தப்பிள்ளையாரை வணங்கித் துதிசெய்து முடியாத பே ரானந்தக் கடலிலே முழுகி அதிசயித்தார்கள்.

பின்பு நன்றிதெரியாத சமணர்கள் மானமழிந்து வெட்கங்கெட்டு திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு முன்னே நின்று இன்று நாங்கள் உமக்குத் தோற்றோம். நீரே வென்றீரென்று சொல்ல, அதைக் கேட்ட சம்பந்தப்பிள்ளையார் அவர்கள் பிழைக்கும் வழியைக் கண்டு இன்னும் உங்களுக்குத் தரும வழியாகவே சொல்லுகின்றோம்; நீங்க ளேன் வீணே இறந்து போகின்றீர்கள் எல்லாருக்கும் தாய்போற் சிறந்த எங்களிறைவனுக்கு அடிமையாய்ப் பிழையுங்கள் என்று சொல்ல, அதற்குச் சமணர்கள், ஏட சிறுபிள்ளாய்! நீ ஏன் தகாத மொழி சொல்லுகிறுயென்று மானங்கொண்டு தாங்களே கழுக்களி லேறத் துணிந்து கோபத்தினுலும் மானத்தினுலும் போய்க் கழுமரங் களி லேறி யிறந்தார்கள். அப்படிப்போ யேருத சமணர்களை யெல் லாம் சைவாசாரத்தைக் கொண்டவர்கள் ஒவ்வொருத்தராகப் பிடித்து

அந்த முத்தலைக் கழுமரங்களிலே ஏற்றி யிருத்திக் கொன்றார்கள். அந்தச் சமணர்களுக்குப் பாரம்பரியமாக அடியார்களானவர்கள் சாவப்பயந்து மனங்குலைந்து விபூதி பூசிக்கொண்டார்கள். அந்த விபூதி கிடையாமல் பசுவின் கோமயத்தை யெடுத்திட்டுக் கொண்டார்கள். அதுவும் கிடையாதே சிலர் பசுவின் கன்றைத் தோள் மேலே தூக்கிப் போட்டுக்கொண்டார்கள். விபூதி - கோமயம் - பசுவின் கன்று இந்த மூன்றுங் கிடையாத சிலர் விபூதி பூசின நெற்றியுடனே நெற்றியை மோதிப் பூசிக்கொள்ளக் கோமயத்திலு மப்படியே மோதியிட்டுக்கொண்டும் இப்படியாகத் தங்கள் பாசங்களை வென்று பிழைக்க எண்ணினவர்களைக் கொல்லாமல் விட்டுவிடக் கழுவிலேறி யிறந்தவர்களை யெல்லாம் பருந்து - காகம் - கழுகு - நாய் - நரிகள் முதலானவெல்லாந் தொடர்ந்து கௌவிப் பிடித்திழுத்துத் தின்னக் கழுவிலே கிடந்தார்கள்.

அப்போது பாண்டியன் திருஞானசம்பந்தப் பிள்ளையாரை வணங்கித் துதித்துக்கொண்டு, சுவாமி! இப்போது நீர் இட்ட ஏடு எல்லாருங் காண ஆற்றுக்கெதிரே சென்றதே அது எங்கேயென்றான். அதற்குத் திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாண்டியனே பார்ப்பாயாக; இப்போதே நாம் மதுரை வெள்ளி யம்பலவாண ரருளாலே வருவிக்கிறோமென்று சொல்லியருளி ஆற்றங்கரைமேலே மேற்றிசையை நோக்கிச் சென்றார். அப்படிச் செல்லுகின்ற திருஞானசம்பந்தர் காண இட்டஏடு காதவழி சென்று அப்புறம காணமல் மறையவே ஆச்சரியப்பட்டு, அங்கே கும்புகூடிக் கொல்லைகளிலே மாடுகள் மேய்த்து நிற்கிற சிலரைக் கண்டு நீங்கள் இந்த எல்லைக்குள்ளே ஏதேனும் விசேடமுண்டானால் சொல்லுங்களென்று கேட்க, அந்த இடைப்பிள்ளைகள் நாங்கள் ஒன்றுங் கண்டிலோமென்ன ; திருஞானசம்பந்தப்பிள்ளையார் எப்படியானாலும் இங்கே விசேடமுண்டாயிருக்க வேணுமென்று சமணராகிய பகைவரோடு வாதுசெய்யவிடையருளின விடைக்கொடி கடவுளை வேதவாக்காலே பாடியருளினார். அப்போதந்தப் பாட்டின்மேல் கருணைகொண்டவராய் அங்கே சுயம்புலிங்கமாகப் பருத்த அரையையுடைய வில்வ வனத்திலே தரிசனந்தர, எதிரே கண்டு வணங்கித் துதித்துச் சண்பை நாட்டுச் சம்பந்தப் பிள்ளையார் வலங்கொண்டு பின்னுந் துதித்து எதிரே நிற்க வேப்பமாலையையுடைய பாண்டியன் அந்தச்செய்திதெரிந்து அங்கேசேனைகளுடனே வந்துசேர்ந்தான். அப்போது அந்த மகாலிங்கத்திலிருந்து கடவுள் ஆயிரம்பிறை தொழுத ஒரு கிழப்பிராமணராகத் திருவுருவங் கொண்டு தோன்றி முத்தமிழ்விரகரைக் கண்டு நீ என் பிள்ளையே; பிள்ளையிலும் என்னுடைய இளையபிள்ளைபோல் வாழ்வாயென்று திருநீறுசாத்தி மனத்திலே மிகுந்த அன்புதோன்றத் திருவருள் சுரந்து நிற்க, அப்படி நிற்கின்ற பிராமணரை அக்காலத்தே தமக்கு ஞானானந்தக்கடவுளிவரே என்று வணங்கி, ஐயரே! இந்த ஆற்றுநீரிலே

யானிட்டஏடு எதிரேறிவந்ததைஎடுத்தவர் நீரே ஆகவேண்டும். ஆனல் அந்த ஏடு உம்முடைய மகனுக்குத் தக்கதென்று அதைக் கொடுத்தருள வேண்டுமென்று மிகவும் வேண்டிக் கொண்டார் ஆறுமுகக் கடவுள்போலுஞ் சம்பந்தப்பிள்ளையார். அதற்கு மாயாவேடங்கொண்டு நின்ற பிராமணர், சம்பந்தப்பிள்ளையாரைப் பார்த்து, நீர் இன்னமும் நம்முடைய ஆலயங்களெல்லாம் சென்று பாடிக் கெட்ட வழியிலே செல்கிறவர்களை நல்வழி போகச் செய்து, பின்பு நமது பரிசுத்தமான வீட்டைப் பெறக்கடவீரென்று ஆசீர்வதித்து அந்த ஏட்டைக் கொடுத்துவிட்டு மின்னல்தோன்றி மறைவதுபோல மறைந்தருளினர்.

அப்படித் தந்தையான கடவுள் பின்னும் தமக்குத்தந்த ஏட்டை வாங்கிக்கொண்டு சிவஞானப்பாலுண்ட திருஞானசம்பந்தர் பாண்டியனுக்குக் காட்டி இந்த ஏட்டை மதுரேசர் தாமே கொண்டுபோய் நான் மிகவும் வேண்டிக் கேட்கக் கொடுத்தனரென்று சொல்ல, பாண்டியன் பாம்பைக் கச்சாகக் கட்டின கருணைக்கடலினிடத்திலே தோன்றிய விச்சான ஞானப்பாலுண்டாக உம்முடைய பெருமையாலுண்டாவதைத் தெரியாமல் அடியேன் ராஜனென்கிற பலங்கொண்டு உம்மை இவ்வளவு சோதிக்கலானேன். ஆகையால் இனிமேல் இந்தப் புல்லறிவாண்மையாற் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று மிகவும் வணங்கி வேண்டிக்கொண்டான். அப்படி வேண்டிக் கொண்டு பின்பு, மேருமலையை வில்லாகக்கொண்ட கடவுளுக்குப் பொன்னுலே நெடிய சிகரத்தையுடைய கோயிலும் மண்டபமும் மேக மண்டலத்தைக் கிழித்துச்சென்று கடவுள்போலவே சந்திரனைச் சூடுகின்ற கோபுரங்களும், கல்லாலே மதில்களும், பிரகாரங்களும் எல்லாரும் கண்டுகளிக்கச் செய்தான். அன்றுமுதல் அந்தத் தலத்துக்குத் திருவேடகமென்று பெயருண்டாயிற்று. பின்பு பாண்டியன் அந்தத் திருவேடகத்தி லெழுந்தருளிய கடவுளைச் சமணரோடு கூடியிருந்த பாவங்களெல்லாம் போகப் பூசைசெய்து தனது பாசமுந் தீர்த்துக்கொண்டான். கிரேதாயுகத்திலே விஷ்ணுவும், திரேதாயுகத்திலே கருடனும், துவாபரயுகத்திலே நாகர்வேந்தனும் பூசைசெய்து திருவருள் பெற்ற நிராமயமான அந்த லிங்கத்தைக் கடையுகமான கலியுகத்திலே இந்தப் பாண்டியன் பூசைசெய்து அவ்விடத்திலே பெரிய ஊருமுண்டாக்கி அங்கேதானே திருஞானசம்பந்தப் பிள்ளையாருடனே சிலகாலம் ஸ்தாபவாசஞ்செய்து பின்பு மதுரைக்கு வந்து சேர்ந்திருக்கும் நாளிலே, விபூதிசாதனமாகிய செல்வம் எங்கும் பிரபலமாகச் சிலகாலம் மதுரையிலேயே வாசஞ்செய்து பின்பு திருஞானசம்பந்தர் வடதிசையிலே சிவ ஸ்தலங்களையுங் கண்டு வணங்கிப்பாட வேண்டுமென்றெழுந்து மதுரேசரையும் அங்கயற்கண்ணம்மையையும் வணங்கி வேண்டிய வரங்களெல்லாம் பெற்று விடையுங்கொண்டு தமிழ் நாடெல்லாம் கண்டு வணங்கிச் செல்வதற்குப் போயினவருடனே மங்கையர்க்கரசியாரும் குலச்சிறைநாயனரும் பாண்டியனும் திருஞான

சம்பந்தமூர்த்தியை பிரியமாட்டதவர்களாய் அன்புசெய்து அவரிடத்திலே நேசமான அன்று முதலுண்டான இன்பமெல்லாம் இப்போ துன்பமாகி முன்னே இழுத்துச்செல்ல சம்பந்தப்பிள்ளையாரும் அப்படியே அன்புசெய்து தமது பின்னேவருகிற நண்பினருக்கெல்லாம் இனி நம்மிடத்திலே நீங்கள் அன்புமறவாமல் பூதிசாதனவாழ்வு நிலை பெறவும் கடவுள் கீர்த்தி புலப்படவும் வாழுங்கள் இதை விடாமல் நில்லுங்களென்று சொல்லி விடைகொடுத்துச் செல்ல, அப்படியே தங்களை அடிமைகொண்ட சம்பந்தப்பிள்ளையார் அருள்வார்த்தையைத் தடுக்கப்பயந்து அவருடைய தாமரைமலர் போலுஞ் சேவடிகளை வணங்கி மீண்டு சேனைகளுடனே பாண்டியன் மதுரைக்கு வந்தான். தாமரை மாலையணிந்த சமணசிங்கமான திருஞானசம்பந்தர் சோழ நாட்டுக்கு வந்தார். இப்படி ஞானமாகிய மலஜலமொழுகத் திருஞான சம்பந்தரென்று மானமாயானை வந்து கடம்பவனத்திலே நெருங்கின இழிதொழிலாளரான சமணரென்னும் மரங்களை யெல்லாம் ஒடித்தெறிந்து திருவெண்ணீருன பெருமைகொண்ட தூளியை அள்ளி உலகமெல்லாம் நிரம்பத்தூற்றிவிட்டது. இப்படி முதலிலே பாண்டியன் சுரந்தணிக்க வேண்டி மதுரைத் திருக்கோயிலின் சாம்பலை யள்ளிக் கொண்டு வரச்சொல்லிக் கூனுஞ் சுரமும் தீர்ந்தபடியினுலே விபூதிகளெல்லாவற்றிலும் அந்தத் திருக்கோயிலின் மடைப்பள்ளி விபூதியே சிறந்ததாயிற்று.

சமணரைக் கழுவேற்றிய படலம் முற்றிற்று.

---

அறுபத்துநான்காவது

# வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த படலம்

---

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

*சென்னிவெண் டிங்கள் மிலைச்சிய மதுரைச் சிவனரு ளடைந்தசம் பந்தர்*
*துன்னிருஞ் சமணைக் கழுமுனை யேற்றித் துணித்தவா றிசைத்தனம் வணிகக்*
*கன்னிதன் மன்றற் கரியினை மாற்ருன் காணவக் கண்ணுத லருளால்*
*வன்னியுங் கிணறு மிலிங்கமு மாங்கு வந்தவா றெடுத்தினி யுரைப்பாம்.*

உரை: தம்முடைய சென்னியின்மீது வெண்மை பொருந்திய சந்திரனைத் தரித்தருளிய மதுரைநாயகராகிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளைப்பெற்ற திருஞான சம்பந்தப்பிள்ளையார் கொடுமை பொருந்திய சமணர்களைக் கழுமுனையிலேற்றிக் கொன்றருளிய திருவிளையாடலைச் சொன்னோம். இனி ஓர் வைசியப் பெண்ணுனவள் தனக்கு நடந்த கலியாணத்திலிருந்த சாட்சியைத் தன் மாற்ருள் காணும் படிக்கு அந்தச் சோமசுந்தரக் கடவுளின் திருவருளினுல் வன்னிமரத்

திணையும், கிணற்றினையும், சிவலிங்கத்தினையும் அந்த மதுராபுரியில் (சாட்சியாக) வருவித்த திருவிளையாடலைச் சொல்லுகின்றோம்.

பொன்னிறமான மலர்களையுடைய தாழைகள் வேலியாகச் சூழ்ந்த கடற்கரையோரத்தில் ஒரு பட்டணத்திலே யிருக்கிறவன்; அவனே மின்னுகின்ற ரத்தினாபரணங்களை யுடைய ஒரு குலவர்த்தகன். அவன் பலவகையான செல்வங்களிலே சிறந்தவன். தனக்குப் பிள்ளையில்லாமல் தனது கற்புடைய மனைவியுடனே கூடிப் பலவித தருமங்களையுஞ் செய்து பிரகாசம்பொருந்திய சந்திரன்போலும் முகத்தை யுடைய ஒரு பூங்கொம்புபோல ஒரு பெண்பிள்ளையைப் பெற்று வளர்த்து, தங்களுடைய தனவைசிய குலத்துக்குத்தக்க தம் மருமகனுக்குக் கொடுக்க எண்ணியிருந்தான். அம்மருமகன் முன்னே ஒருதாரம் கலியாணஞ் செய்துகொண்டவன்; அவன் முத்தமிழும் வழங்குகின்ற மதுராபுரியி லிருக்கின்றவன்; ஆனாலும் அவனுக்கே தன்னுடைய தவப்புத்திரியான ஒரே பெண்ணை கொடுப்பதாகத் தன் குலத்தாருக்கெல்லாம் விளங்கச் சொல்லிவைத்துப் பின்பு சில நாள் கழிய ஊழ்வினைவலியால் ஆருயிர் தீர்ந்தான். அவனுக்கு உடம்பு போன்ற கற்புடைய மனைவியானவள் தானும் தன் கணவனுடனே கூட இறந்துபோகிறதற்குத் துணிந்து உயிர்விட் டிறந்தாள். பின்பு அவ்விருவருக்கும் கடல்போற்கிடந்த சுற்றத்தார்கள் செய்யவேண்டிய கடன்களைச்செய்து முடித்த பின்பு அந்தச் செய்தி மதுரையிலிருக்கிற உரிமை மருமகனுக்குத் தெரியும்படியாக ஓலை எழுதியனுப்பினர்கள். அந்த ஓலை வந்துசேர வாங்கிவாசிக்க, அதில் தன்னுடைய தயவின் மிகுந்த மாமனும் அவனது கற்புடைய மனைவியும் இறந்தாராக, அவனுக்கு அளவில்லாத செல்வங்களுண்டு இன்னும் அவனுக்கு வெகு நாள் பிள்ளையில்லாதிருந்து அநேக தருமங்களைச்செய்து பெற்ற ஒரு பெண்ணும் வளர்ந்து பக்குவமாயிருக்கின்றது. அந்தப்பெண்ணை யுனக்கே கொடுப்பதாகப் பேசியிருந்தான்; ஆகையினாலே நீயே இவ்விடம்வந்து அந்தப்பெண்ணைக் கலியாணஞ்செய்துகொண்டு அவனுக்குள்ள செல்வங்களையும் ஒப்புக் கொள்ளத்தக்கதென் றெழுதியிருந்த சமாசாரங்களெல்லாந் தெரிந்துகொண்டு கீழே விழுந்து தரைமேற் புரண்டுபுரண்டழுது பெருமூச்சுவிட்டு கண்ணீர் வெள்ளத்திலே முழுகி விம்மி. அம்மவோவென்று பிரலாபித்துச் சோபிக்க, அப்போது அவன் பந்துக்கள் சிநேகர்கள் முதலான உறவின் முறையாரெல்லாரும் வந்து தழுவிக் கொள்ள, இவனும அவர்களைத் தழுவிக்கொண்டழுதான். பின்பு அங்கே வந்தவர்க ளெல்லாருந் தேற்றத் தெளிந்து, தன்னைச் சூழ்ந்த துன்பத்தை ஒருவகையாக விட்டுத் தன்னுடைய மாமனிருக்கும ஊருக்குப் போகத் துணிந்து அங்குள்ள உறவினர் சிலருடனேகூடி அந்த மதுரையைவிட்டு இந்தப் பட்டினத்துக்கு வந்து புகுகிறவன் வரவு தெரிந்து வந்து தன்னை விசாரிக்கிறவர்களைத் தழுவித்தழுவிக் கலந்து பேசி அவர்களை அனுப்பிவிட்டு

வந்த முல்லைமாலை யணிந்த வர்த்தகன் தன் மாமன் வீட்டிலே போயிருந்தான்,

சிலநாள் கழிந்த பின்பு, வர்த்தகரில் சிங்கம்போன்ற அவன் தனக்கென்று குறித்திருக்கிற பெண்ணை மதுரைக்குக் கூட்டிக் கொண்டுபோய்க் கலியாணஞ் செய்துகொள்கிறேனென்று அங்குள்ள உறவினருக்கெல்லாந் தெரியச்சொல்லிக்கொண்டு தன் மாமன் சம்பாதித்து வைத்திருந்த பொருள்களை யெல்லாம் தன் வசமாகப் பண்ணிக்கொண்டு மதுரையை நோக்கிப் புறப்படும்போது தன்கூட வழிபட வருகிறவர்களை நிற்கச்சொல்லிப் பின்பு மதுரைக்கு முன்னே போகவேண்டியவர்களை முன்னே போகும்படி அனுப்பிவிட்டுத் தானும் தன்னுடைய பரிஜனங்களும் தனக்குரிய பெண்ணுமாக நாளொன்றுக்கு அரைக்காத வழியாக வருகிறவன் ஒருநாள் சூரியன் அஸ்தமிக்கு முன்னே இங்கேயிருந்து நாளைக்குப் போவோமென்று திருப்புறம்பிய மூதூருக்குப்போய், அங்கே கடவுள் திருக்கோயில் கிணற்றிலே நீராடி ஒரு வன்னிமரத்தடியிலே சமையல் செய்து போஜனமான பின்பு மேருமலையை வில்லாகவுடைய கடவுள் கோயிற் புறத்தில் ஒரு படியின் மேலே தலையை வைத்துக்கொண்டு தூங்கும் போது விதிவலி வந்துகூட அங்கே வந்து கொல்லும் விஷத்தைக் கொண்ட வாயையுடைய ஒரு நாகமானது கடித்தது. அப்படிக்கடித்த வுடனே, அதிக விலைபெற்ற நல்ல ஆபரணங்களையுடைய அந்த மதுரை வர்த்தகன் நஞ்சு தலைக்கேறி இறந்துபோனான்.

அப்போது அங்கே கூடவிருந்த அவன் வேலைக்காரர்கள் ஐயோ வென்று கூச்சலிட்டு அழுது சுற்றிக்கொள்ள, வேலைக்காரிகள் மாரடித்துக்கொண்டு ஒப்பாரிவைத் தழும்போது, ஆந்த ஆண்சிங்கம் போன்ற வர்த்தகன் உடம்பைத் தீண்டாமல் கூடவே வந்த தாமரை மலரைப் பூத்த கொடிபோன்ற பட்டினத்து வர்த்தகன் பெண்ணான வள் எழுதின சித்திரம்போல் அசையாமல் ஒரு புறத்திலே நின்று அந்த ஆண்சிங்கம்போன்ற மதுரை வர்த்தகன் பாம்பு கடிக்கப்பட்டு உடனே இறந்ததும் வேல்போலுங் கண்களையுடைய பெண்களெல் லாம் கைகளை நெரித்துக்கொண்டழுகிறதும் கீழே விழுகிறதும் சுற்றிலும் உறவினர்கள் சூழ்ந்து அழுகிறதும் சோர்கிறதும் எல்லாங்கண்டு இனங்கிளிபோன்ற பேச்சுக்கள் தோன்ற வேடன் எய்த அம்புதைத்த மயில்போல் விழுந்து வருந்தி மயங்கிக் கூரியகண்கள் உள்ளேசெருகி உயிருமோய்ந்து அக்கினியிலே விழுந்த பூமாலைபோல் உடலுஞ் சோர்ந்து கைகளுஞ் சோர்ந்து கால்களுஞ் சோர்ந்து இளமைபொருந் திய பெண்ணன்னம்போன்ற அந்தப் பெண்ணானவள் இடி முன்னே விழக்கண்டாற்போற் கீழே கிடந்தாளல்லது வேறொன்றுமில்லை. மூர்ச்சையாய்ப் போயினாள். இறந்த வர்த்தகன்மேல் பூங்கொம்பு சாய்ந்தாற்போல் விழுந்தழுகின்ற வேலைக்காரிகள் பார்த்து, ஐயோ செட்டி உயிருடனே நமது தங்கை உயிரும் போயிற்றே வென்று

கைகளாலெடுத்து முதுகைத்தழுவி மடியிலே கிடத்திக்கொண்டு வஸ்திரத்தாலே முகத்திலேவீசி இளைப்பாற்றிக் கொஞ்சம் மூச்சுவரச் செய்தார்கள். அப்போது அந்தப் பெண் உடம்பை விட்டுப்போன உயிரானது திரும்பித் தன் உடம்பிலே வந்து புகுந்தாற்போலே மூக்கினிருபுறத்திலுஞ் சுவாசம்தோன்றகண்களும் குளங்களிலே நீலம் பூத்தாற்போல விழிக்க அவ்வேளையில் அந்தப்பெண்ணை நாணம்மடம் அச்சம் பயிர்ப்பு ஆகிய நான்கும் நான்கு திக்கிலும் வேலிபோல் வளைத்துகொள்ள, கைகளால் மோதிக்கொண்டு கூந்தல் அவிழ்ந்துவிழ உருக்கின நெய் துளிபோல கொங்கை முகட்டிலே கண்ணீர் சோர மெள்ள அழுவாள். சுற்றிலும் பார்த்து வெட்கமாகிய கட்டுக்குளடங்கிப் பேய்பிடித்த பெண்போற் குலைகுலைந்து தேம்பி விம்மி மேனி மழுங்கி குறையாத செல்வத்திலே பிறந்து ஒருநாளாவது துன்பமென்பதைச் சொப்பனத்திலும் தெரியாதவள் தனக்கு நாயகனவான் மேலே அன்பென்பதாகிய தோருருவாகி நிறையாகிய வரம்பழிந்து ஒரு பெண் தெய்வமிருந்து வாய்விட்டலறினாற்போலப் புலம்புகின்றாள்.

எப்படியென்றால், ஓ என்னையகனே! ஓ என்னிரண்டு கண் மணியே! ஓ என்னைப்பெற்ற தந்தைக்கு உயிர்போலும் அருமை மருமகனே! ஓ சட்டிளமையோனே! ஓ முல்லை மாலையணிந்த தலைவனே! ஓ வணிசர்கள் குலரத்தினமே! இப்போது விடப்பாம்பால் கடிக்கப் பட்டாயோ? ஆனால் உன்னுடைய உடம்பி னிழல்போன்ற என்னை இங்கேவிட்டு மறைந்துபோகலாமா? ஆனால் நீர்போனபோது சுவர்க்க லோகத்திலுள்ள பெண்களைக் கலியாணஞ் செய்துகொள்ளவோ, அல்லது நமது குலத்தானாகிய குபேரனுடைய அளகாபுரியிலுள்ள பெண்களைக் கலியாணஞ் செய்துகொள்ளவோ, அல்லது உன்னைக் கடித்த நாகலோகத்திலுள்ள பெண்களைத் தழுவவோ, ஓ! என் பிராண நாயகா! என்னை இந்த நாட்டிலே விட்டு வஞ்சகமாக நீர் மாத்திரம் தனியே போகிறதற்குக் காரணமென்ன? அல்லது தென்னுலகமாகிய யமலோகத்திற்குப் போனீரோ? அங்கே மாமன் மாமியைக் கண்ட போது உன் மாமன் தன்னிரண்டு கண்களுங் குளிரத் தழுவினனோ? நானும் உம்மோடனே வந்தால் அவ் விருவரையும் என் கண்கள் குளிரக் காணேனோ? அப்படிக்காகாமல் என்னை யிங்கே விட்டுவிட்டீர். என்னையல்லாமல் உம்முடைய பரிஜனங்களையும் கைவிட்டீர். நீர் தனியே போய் எவ்வளவு சுகங் கண்டீர்? ஐயையோ! உரிமை மருமகன் பாம்பு கடித்து இறக்கவும், யான் மயங்கின மனத்துடனே இங்கே யிருந்து இப்படித் துன்பப்படவும், என்னைத் தவஞ்செய்து பெற்றவர்களுக்கு நல்லபலன் சித்தித்ததல்லவோ, இந்தக் கண் கலக்கத்தை அவர்கள் முழுதும் காணாமல் முன்னே இறந்தல்லவோ சோக நிவர்த்தியானார்கள். கிடையாத பலன் அவர்கள் முன்னே இறந்து போனதே என் தாய் தகப்பனைப் போல ஒருவரும் இப்படிப்பட்ட பலனைப்பெறமாட்டார்கள். ஐயையோ

உமக்குப் பிரியமான மாமன் என்னைப் பெற்று வளர்த்து அக்காலத்திலே தானே உறவினர்களறிய உமக்காகவே என்னை நிச்சயித்துப் பின்பு தன் பிரியநாயகியுடனே இறந்துபோனார். நானும் அப்படியே என் உயிர்போக உடம்பு இங்கே கிடக்குமோ, இதோ கூடவே மடிகிறேனென்று தன் பிரியமான சேவலை யிழந்த அன்றிற்பேடுபோல ஒற்றைக்குரல் விட்டழுதாள்.

அப்படி அழுகிற சத்தங்கேட்டு, அந்தத் திருப்புறம்பிய மூதுரா ரெல்லாம் நித்திரை தெளிந்தெழுந்து துன்பங்கொண்டு வருந்தினர். அந்தவேளையில், திருஞானசம்பந்தப் பிள்ளையார் சிவஸ்தலங்களெல் லாம் போய்த் திருப்பதிகங்கள் பாடிக்கொண்டு அன்றைத்தினம் அந்தத் திருப்புறம்பிய மூதூருக்கு வந்து அங்கொரு சைவமடத்தி லிறங்கி யிருந்தவரும் இந்த அழுகைக்குரல் கேட்டு இது என்ன வென்று ஆள்விட்டு விசாரித்து உடனே தாமே திருக்கோயிலுக்கு வந்து கூடி, ஏடி பெண்ணே! நீயார்? நடந்த சங்கதிகளென்ன வென்ன, அந்தச் செட்டிப்பெண் வணங்கித் தன் குலமும் தன்னைப் பெற்றவன் மருமகனுக்கென்று தன்னை நிச்சயித்துவைத் திறந்து போனதும் பின்பு தனக்குரியவனை இவன் வந்து கூட்டிக்கொண்டு வந்து இங்கே இறங்கினபோது நடந்ததும் எல்லாம் தெரிய விண்ணப் பஞ் செய்துக்கொண்டாள் அது கேட்டவுடனே, திருஞானசம்பந்தப் பிள்ளையார் தனியே இருந்தழுது உயிர்விட எண்ணுகின்ற அந்தச் செட்டிப் பெண்ணுக்குத் தாமே தாயுந் தந்தையுமாகப் பாம்பு கடித் திறந்தவன் பக்கத்தில் வந்து அவன் உடம்பெல்லாம் அவிழ்தவடிவ மாக நினைவுகொண்டு கிருபாநோக்கம்வைக்க, அப்போதே தீவாய்ந்த நஞ்சு அந்தச் செட்டியை விட்டுப் பிரிந்துபோயிற்று. உடனேசெட்டி தூங்கி விழித்தவன்போல் எழுந்தான். அவனை எல்லாருங் கண்டு சந்தோஷித்து எல்லோராலும் வணங்கும் பெருமை பெற்ற திருஞான சம்பந்த மூர்த்தியைத் தொழுது தோத்திரஞ் செய்தார்கள். அப்படி அவர்கள் ஆனந்தக்கடலிலே முழுக, பெண்ணன்னம்போன்ற அந் தச் செட்டிப் பெண் தித்திப்பான தேனைப் பொழிந்துகொண்டு ஒரு புறத்திலே தாமரை மலரைப் பூத்ததாகிய ஒரு கொம்புபோனின்றாள். ஆனாலும், தனது நாயகனிறந்தபோதும் அவன் உயிர்பெற்றெழுந்த போதும் தான் அந்த மதுரை வர்த்தகனுக்கு மாமன் மகளாயிருந்தும், அவனைத் தொடாமல் நிற்கிற அன்பு நிலையும் கற்பின் குணமும் அதி சயமாகக் கண்டு, பார்வதி ஞானப்பாலுண்டருளிய பிள்ளையார் அந்தச் செட்டியைப் பார்த்து, வாரும் செட்டியாரே! நீரோ உம்மு டைய குலத்துக்கெல்லாம் ரத்தினம்போல் விளங்குகின்றீர். ஆனால் உம்முடைய மாமன் பெற்ற லட்சுமிபோல்பவளான இந்தப் பெண் இன்பமடையுங் காலத்தில் துன்பம்வந்து சேராமல் உம்முடைய உடம்பைத் தொடுவதெப்போது? இனிக் காலம் வீண்போகாமல் நீர் இந்தப் பெண்ணை இங்கேதானே திருக்கல்யாணஞ் செய்துகொண்டு

போகவேண்டுமென் றருளிச்செய்ய, சிவந்த கண்களையுடைய ஆண் சிங்கம்போன்ற செட்டியானவன் பிள்ளையார் திருவார்த்தையைத் தலைமேற்கொண்டு பிரமாவினாலே சிருஷ்டிக்கலான நான்கு சாதிகளையும் வழுவாமல் ரட்சிக்க வல்ல பேரருளாளராகிய சுவாமி இங்கே என் குலத்துச் செட்டிகளொருவரு மில்லாமல் சாட்சிகளுமில்லாமல் எப்படிக் கலியாணஞ் செய்து கொள்வதென்று வணங்கிக் கேட்க, அதற்குப் பிள்ளையார் உன்னுடைய மாமன் இந்தப் பெண்ணைப் பெற்றபோது உனக்கே இந்தப்பெண் உரியவளென்று நிச்சயித்து வைத்தது உறவினரெல்லாருந் தெரிவார்களல்லவோ? இதையல்லாமல், உமக்கு இந்த வன்னிமரமும் கிணறும் இலிங்கமுமே சாட்சியாக அமையும். ஆகையாலே ஓய் செட்டியாரே! இங்கேதானே என் சொல்லைக் கடவாமல் கலியாணஞ் செய்துகொள்ளுமென் றருளிச்செய்ய, மதுரைச் செட்டியான குற்றமற்ற மனதையுடையவன் சீகாழித் தலைவராகிய பிள்ளையாரை வணங்கிச் சுவாமி! தேவரீரே தாய்-தந்தை - குரு- தெய்வம்- சிநேகிதர் எல்லாமென்று பிள்ளையார் சொன்னபடியே அங்கே கலியாண வேள்வியை முறைப்படி செய்து கொண்டு அப்படித் தான் கலியாணஞ் செய்துகொண்ட மாமன் மகளுடனே வணங்கிப் பிள்ளையார் அருளுடன் விடைபெற்றுக் கொண்டு ஏவல் செய்கிற பெண்கள் புருடர்கள் எல்லாருங் கூடிவரத் தனது சுதேசமான மதுரை மூதூருக்குப் போய்த் தன் மாமன் மகளைக் கலியாணஞ் செய்துகொண்டு வந்ததை அங்குள்ள உறவினரெல்லாருங் கேட்டுச் சந்தோஷிக்கத் தானும் சந்தோஷித்து வாழ்ந்திருந்தான்.

பின்பு தன்னுடைய மிகுந்த திரவியங்களும் மாமன் சம்பாதித்து வைத்த திரவியங்களும் சேர்ந்து கூடிக் குறையாத செல்வனை குபேரன்போல் பெரிதான வர்த்தகங்கள் செய்து அந்தச் செட்டியானவன் தனக்கு இன்பக்கைக் தருகிற மனைவிமார்கள் இருவரும் பெற்ற பிரியமுள்ள பிள்ளைகள் மகிழ்வுசெய்யச் சுகமாய் வாழுங்காலத்தில், மூத்தவளுடைய பிள்ளைகள் மிகவும் மூர்க்கர்களாயிருக்க இளையவளுக் கொரே பிள்ளை யுண்டாகி இந்தப் பிள்ளையும் அந்த மூர்க்கப் பிள்ளைகளுடனே கூடி மிகுந்த செல்வஞ் சிறந்த மதுரை வீதியிலே போய் விளையாடும்போது, மூத்தவள் பிள்ளைகள் இளையவள் பிள்ளையைக் கோபித்தடித்தார்கள். அதற்கு அந்தப் பிள்ளையைப் பெற்ற இளையவள் மூத்தவள் பிள்ளைகளைத் திட்டி வைதாள். அதற்கு மூத்தவள் கோபங்கொண்டு இளையவளைப்பழித்து, நீ எந்தவூர், என்ன ஜாதியாருடைய மகள், யாவர் பார்க்க அக்கினி சாட்சியாக எனது நாயகன் கலியாணஞ் செய்துகொள்ள வந்தவளோ? நீயே வலிய என் புருஷனுக்கு ஆசைப்பட்டு வந்த காமக் கிழத்தியாகிய உனக்கு கற்புடைய மனைவியாகியஎன்னோடு பேசும் பெருமையும் வாயுமுண்டோ? அப்படி என்போலாக எனது நாயகன் அக்கினி சாட்சியாகக் கலி

யாணஞ் செய்துகொண்டதற்கு வேறே சாட்சிகளுண்டானுல் எல்லா ருக்கு முன்னே தெரியப்படுத்து பார்ப்போமென்ன, இளையவள் நெருப்பிலே விழுந்த கொடிபோல வாடிச்சோர்ந்து நாண மிகுந்து பாம்புகடித்த அந்தநாள் திருஞானசம்பந்தர் திருவருளாலே எனது நாயகன் திருப்புறம்பிய நாதனுகிய இலிங்கமும், வன்னிமரமும், கிணறுமே சாட்சிகளாக என்னைக் கலியாணஞ் செய்துகொண்டது' அந்த மூன்றும் சாட்சிகளா யிருக்கின்றனவென்ன, அதற்கு மூத்த வள் சிரித்து, நல்லது நல்லது; உன்னுடைய கலியாணத்துக்கு ஏற்ற சாட்சிகளே சொல்ல வந்தாய். அந்த மூன்று சாட்சிகளும் இங்கே வந்துருகச் சொல்லுமாகில் அதுவும் மெய்தானென்று சொல்ல, அதற்கு வேறுபடாத மயிற்சாயலையுடைய இளையவள் அதிக துன்பங் கொண்டு பெருமூச்சுவிட்டு இல்லிற்குள்ளே போய்க் கைவிரல்களை நெறித்துக்கொண்டு வயிற்றைப் பிசைந்து கண்ணீர்விட்டழுது கொவ் வைக்கனி போலும் வாய்துடித்து நாணம் மிஞ்சிக் கூசி ஐயையோ தெய்வமே! சிறியவளான நான் இனி என்ன செய்வேன்; தாயும் தந்தையும் இறந்துபோகத் தனியாய் இங்கே வந்த சிறியேனுக்கு இங்கே யாரிருக்கிருர்கள்? முற்காலத்திலே துன்புற்ற ஒரு செட்டி பிள்ளைக்கு அப்போது மாமனுகிய பங்காளி வழக்கைத் தீர்த்து, அவன் உரிமையை அவனுக்கே ஆகச்செய்த கடவுளே! எனக்கு மாற்ருளான வள் சொல்லுகின்ற குற்றங்களை நீக்கியருள வேண்டுமென்று அன்று ராத்திரி போசனமில்லாமல் நித்திரையுமில்லாமல் வருந்தி, மறுநாள் பொற்ருமரைத் தீர்த்தத்திலே நீராடி, ஆகாயத்திலிருந்து இறங்கின இந்திரவிமானக் கோயிலிலே எழுந்தருளி யிருக்கிற சொக்கநாதர் சந்நிதி முன்னே போய்த் திருவடிகளிலே சேவித்துத் தன் குறைக ளெல்லாம் சொல்லி வேண்டுகிறதாவது: சுவாமீ! அக்காலத்தே என்னை எனது நாயகன் கலியாணஞ் செய்துகொண்ட இடத்திலே அந்தக் கலியாணத்துக்குச் சாட்சியாக நின்ற வன்னிமரமும் கிணறும் இலிங்கவடிவான நீயும அப்படியே இங்கு இன்று வந்து எனது மாற் ருள் சிரித்திகழ்வதைப் போக்கி என்னை ரட்சியாமல் விட்டால் இறந்து போவேனெனறு பிரதிக்கினை பண்ணினுள். அவளோ கற்பினது நிலையாதபுகழை நிலைநிறுத்தவந்தவள், ஆகையாலே அவள் அப்படித் துன்புற்று வருந்தி நிற்க, அவள் துன்பத்தைக் கண்ட மதுரேசரான கிருபாமூர்த்தி தமது அளவில்லாத திருவருளினலே எல்லாருங் காணத் திருக்கோயிலுககு வடகீழ்த்திசையில் முன்னே சாட்சியா யிருந்த வனனி- கிணறு- இலிங்கம ஆகிய மூன்றும் விரைவில் அங்கே வந்திருநதன.

அப்போது அந்த மூன்றையும் இளையவள் கண்டு மூத்தவளைக் கூட்டிக்கொண்டு போய்த் திருவாலவாய்க் கடவுள் முன்னேவந்து வணங்கிக் கண்டுகொள்; இதுதான் ஆகாயத்தை அளாவின வன்னி மரம். இதுவே கிணறு. இதுவே இலிங்கம். இந்த மூன்றுந்தான்

என் கலியாணத்திற்குச் சாக்ஷியா யிருந்தவையென்ன, கண்ட மூத்த வளுங் குனிந்த தலையைத் தூக்கிநிற்க, அந்த இடத்திலுள்ள மூன்றும் அன்றுபோலவே இன்றும் சாக்ஷியாக இங்கே தோன்றின. இது என்ன அதிசயம்! ஒருவராலுந் தெளியக்கூடாத தெய்வமும் எளிதாக வந்து உள்ளங்கை நெல்லிக்கனிபோல இளையவள் கைவசமானுல் கற்புடைய பெண்களுக்கு அரிதாகிய பொருளொன்று மில்லையென்று இளையவள் கற்புநிலையும், சிவனிடத்திலே அவள் வைத்த அன்பையும், அந்தச் சிவன் அவளுக்குச் செய்த அருளையும் அதிசயித்துப் பார்த்து அந்த மதுரையிலுள்ளவர்கள் யாவரும் ஆனந்தித்து, முல்லையணிந்த வர்த்தகன்கொண்ட மூத்தவள் ஒருத்தியுந் துன்பங்கொள்ள, உள்ள செட்டிகளெல்லாம் மூத்தவளை நீ பொல்லாத கொடிய பாதகியென்று பழிக்க, நீபொய்சொல்லிக் குற்றமற்ற குணத்தையுடைய இளையவளைக் குடிப்பழுது சொன்னுய் ஆகையால், நீ எனக்கு மனைவியாகாயென்று கொண்ட கணவனும் அவளை நீக்கிவிட்டான்.

அப்போது இளையவள் புருஷன் காலிலே விழுந்து, ஐயா! என்னுடைய கற்பை நிலைநிறுத்தி வெளியிடடவள் எனக்கு மூத்தவளல்லவோ? இன்னும் தாயில்லாத எனக்குத் தாயாக நானு மிவளும் ஒருமித்து வாழக்கடவோம். நீர் கோபஞ் செய்ய வேண்டாமென்று வேண்டி அவளோடு உறவுகொண்டு உடம்பிரண்டாகவும் உயிரும் பொருளும் ஒன்ருகி மனத்துள்ள பொருமையைவிட்டுப் பிள்ளைகளும் ஒருமைப்படாத ஐந்தலைநாகம் விழுங்கும் இரைபோலத் தம்மில் நன்ருக அன்பும் இன்புங்கொண்டு இருவரும் சுகித்திருந்தார்கள். பின்பு அருந்ததிபோலும் கற்புள்ள இளையவள் நாயகனுக்கு ஆயுளும், நீங்காத செல்வமும், பொருள் மிகுதியும், கனமும், ஒழுக்கமும், பெருமையும், லாபமும், தவநெறியும், குறையாத தருமமும், புகழும் பெருக இந்த இளையவளும் லட்சுமிபோலக் கூடி வாழ்ந்திருந்தாள்.

ஆகையாலே, பொற்ருமரைத் தீர்த்தத்தோடு கூடிய திருவாலவாய்க்கடவுள் திருவிளையாடல்களை முடிவுகொண்டு யாராலே சொல்லி முடியும். ஆனுலும் இன்னம் அளவில்லாத திருவிளையாடல்களுண்டு என்று என்னுடைய குருநாதசுவாமி சொன்னபடியே அறுபத்து நாலு திருவிளையாடல் கதைகளையும் உங்களுக்குச் சொன்னேன் என்று பொதியமலையின்மேல் தவஞ்செய்துகொண்டிருந்த தவசிரேஷ்டராகிய அகஸ்திய முனிவர் தனக்குத் திருவருள் புரிந்த ஆசிரியராகிய குமாரக் கடவுளையும், அக்கடவுள் பூர்வத்தில் தனக்கு உபதேசித்தருளிய திருவிளையாடலாகிய வுபதேசத்தையும், அருளானது முதிர்ந்தொழுக உள்ளேயடக்கி அழகிய தமிழ்வளம் பொருந்திய திருவாலவா யென்னும் ஒப்பற்ற க்ஷேத்திரத்தைத் தன்னுடைய முடியின்மீது துவாதசாந்தத்தின்மேற் பொருந்தவைத்து, அங்கெழுந்தருளியிருக்கின்ற இமையா நாட்டத்தையுடைய அங்கயற்கண்ணம்மை சமேதராகிய சோமசுந்தரக் கடவுளைத் தியானித்துப் பரவசமடைந்து

வழிபறித்துண்ணுகின்ற பழிப்பாகிய ஐம்புலவேடர்களும் போயொளிப்ப, அஞ்ஞானமாகிய இருள்வெளி கடந்து திருவருள் வழியே சென்று அளவில்லாத சராசரங்களையும் குற்றம் நீங்க நினைந்து ஞாதுரு ஞானஞேயங்கள் புதைபட ஒப்பற்ற பரிபூரணமாய் உரையுணர்வற்றச் சச்சிதானந்தமாகிய பேருணர்வைத் தற்போதத்தாளனையாம னினைந்திருந்தார்.

வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த படலம் முற்றிற்று.

---

அறுபத்தைந்தாவது

# அருச்சனைப் படலம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

கன்னிதன் வதுவைக் கரிகளா யிலிங்கக் கடவுளுக் கவைக்கருங் கோட்டு
வன்னியும் படுநீர்க் கூவலும் வந்த வழியிது மதுரைநா யகனைச்
சென்னியில் வைத்த முனிவனைப் பூசைசெய்துமா தவரொருங் கெய்திப்
பன்னிற மலர்தூஉ யாலவர்யானைப் பறவிய பரிசது பகர்வாம்.

உரை: ஓர் வைசியப்பெண்ணின் கலியாணத்திற்குச் சாட்சிகளாக சிவலிங்கப்பெருமானும் கிளைகளாகிய கொம்புகளையுடைய வன்னிமரமும், ஆழமாகிய நீர்நிலையையுடைய கிணறும் வந்த திருவிளையாடல் இதுவாகும். இனி அந்த மதுராபுரிக்குத் தலைவராகிய சோமசுந்தரக்கடவுளைத் தம்முடைய சிரசில் துவாதசாந்தத்தின்மீது வைத்துத் தியானித்திருந்த அகஸ்திய மகாமுனிவரைப் பூசித்துப் பின்பு வசிஷ்டராதி தவசிரேஷ்டர்களெல்லாம் ஒன்றுகச் சேர்ந்து பலவிதமாகிய நல்ல நிறங்களையுடைய மலர்களைக்கொண்டு திருவாலவாயி லெழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளை அருச்சித்துத் துதித்தருளிய தன்மையைச் சொல்லுகின்றேம்.

ஒப்பில்லாத சச்சிதாநந்தக் கடலைக் குடிக்கும் மேகத்தை ஒப்பான அகஸ்திய மகாமுனிவரை உலோபாமுத்திரையுடனே வசிஷ்டர் முதலாகியரிஷிகளெல்லோரும்வணங்கிப் புஷ்பம்-சந்தானம்-கஸ்தூரி-தூபம் - தீபம் முதலான பொருள்களைக்கொண்டு மேலான சிறப்புடனே அருச்சனைசெய்து, பின்னும் ஒரு கேள்வி கேட்கிறுர்கள். எப்படியென்றுல், சுவாமி அகஸ்திய மகா முனிவரே! உம்முடைய கிருபையினுலே மேருமலையை வில்லாக வளைத்த மதுரேசருடைய திருவிளையாடல்களைக் கேட்டு நாங்கள் செவிகளைக்கொண்ட பலனை அடைந்தோம். இனி நாங்கள் கேட்டபடியே கண்களிக்க அந்த மதுரேசரைக் கண்டு புஷ்பங்களால் அருச்சனை செய்து வணங்க விரும்புகிறேம் என்று சொன்னுர்கள். அப்படிச் சொன்ன முனிவர்கள் முன்னே முகமலர்ந்து விந்தகிரியை அடக்கின அகஸ்திய மகா

முனிவர் நன்று சொன்னீர்கள் முனிவர்களே! நான் என் மனத்தில் எண்ணியபடியே நீங்கள் எல்லாரும் சம்மதியாகச் சொன்னீர்களென்று பின்னும் அதிசயித்துப் பிருதிவி முதலான தத்துவங்கள் முப்பத்தாறும் கடந்த ஒப்பில்லாத மகாரிஷிகளே! பண்ணோடு கூடிய நான்கு வேதாந்தங்களாலும் தெளியப்படாத பரமசிவனைச் சகல கலை ஞானங்களாலும் கண்டாலும் மனக்கண்ணால் காணாதவர்கள் வீட்டின்பத்தைக் காண்பார்களோ? ஆகையால், உங்கள்காதுகளில்சுவை யூறக் கேட்டபடியே திருவாலவாயில் விளங்குகிற ஐந்து முகங்களையுடைய பரஞ்சோதியினிடத்திலே போய் அருச்சனைசெய்து மன முருகத் தரிசித்து நினையாதபடி நினைந்து வஞ்சனையைச் செய்கின்ற வினைகளின் வேரைக் களைகிறதற்குப் போவோம் வாருங்களென்று நல்ல சுபதினத்தில் அங்கே ஆகாயத்திலிருந்திறங்கின கங்கா நதியிலே ஸ்நானஞ்செய்து, ஸ்ரீ காசிவிசுவநாதரைத் தரிசித்து, அங்குள்ள பெரியோர்கள் முன்னே சங்கற்பங்கள்செய்து, அவர்கள் அநுஞ்ஞைப் படியே ஆசீர்வதிக்கப் பெற்று மனமகிழ்ந்து ஐம்பொறிகளும் மதுரேசருடைய திருவடிகளிலே செலுத்தி, அந்த மதுரேசருடைய வடிவமாகிய ஐந்தெழுத்தையும் நாவினாலே ஜெபித்துக்கொண்டு கைகள் குவித்துத் தங்கள் பரிசுத்தமான சைவ தவமாகிய தெய்வத்தன்மை பொருந்திய தேரின்மேலேறிக்கொண்டு ஆகாசமார்க்கமாகச் சிவந்த சடைகளும் திருநீறு பூசிய தேகங்களும் தவவிரதங்களை அநுஷ்டித்து இளைத்த மேனிகளும் உள்ளும் புறம்பும் பரிசுத்தமாய் உருத்திராட்சங்கள் அணிந்துகொண்டு புலித்தோல் உடுத்தின இடைகளுடனே முனிவர்களெல்லாரும் தவத்துக்கணிந்த ஆபரணங்கள் போலப் போகும்போது வழியிலுள்ள மிகுந்த புண்ணியங்களைத்தருகின்ற தெய்வத்தலங்களையும் இந்திரிய நிக்கிரகம் பண்ணின முனிவர்களும்வாசஞ்செய்கிறவனங்களையும் தீர்த்தங்களையும் ஆறுகளையும் அங்கங்கே தவஞ்செய்கிற விதங்களையும் கண்டுகண்டு அகஸ்தியமுனிவர் காட்டத் தங்களிரண்டு கண்களும் களிப்பக்கண்டு கைகள் குவித்து வணங்கிக்கொண்டு போகிறபோது அகஸ்திய மகாமுனிவர் ரிஷிகளைப் பார்த்து, அடங்காதவனான இராவணனைக் கொன்றதற்காக இராமன் பூசைபண்ணி அந்தர கங்கையை முடித்த விருபாக்ஷனுடைய திருவருள்பெற்ற விருபாக்ஷம் இது பாருங்கள்; உயர ஏறிவிழுந்து இறந்தவர்கள் முன்னே நினைத்தது நினைத்தபடியே மறுபிறப்பில் தருவதாகிய திருப்பருப்பதம் இது பாருங்கள். பசுவினுடைய நீண்ட காதுபோல நீண்ட சோதிமயமான இலிங்கவடிவானவனுடைய சிவனிராத்திரியில் திருத்தேர் உற்சவம் நடப்பதான திருக்கோகர்னம் இந்த வூர் பாருங்கள் மேலைக்கடற்கரையில் கார்த்திகை மாதத்திலே திருத்தேர் உற்சவம் நடந்து திருக்கல்யாணமும் நடப்பதான கங்காதரனுடைய திருவஞ்சைக்களம் இந்த வூர் பாருங்கள். வில்லைக்கொண்ட நீண்ட கையையுடைய வேடராகிய கண்ணப்ப நாயனார் மென்று தின்று பார்த்துக் கொடுத்த ஊனை உண்டு மகிழ்ந்த கடவுளினுடைய அழகுபொருந்திய

காளத்திமலை யிது பாருங்கள். ஆகாசம் பொத்தலாக இடக்காலைநீட்டி ஞானவடிவான கடவுள் காளிதோற்க ஆடின திருவாலங்காடு இது பாருங்கள். மாமரத்தினிழலிலே மகா பதிவிரதையான உமாதேவி யார் இருந்து தவஞ்செய்கின்ற பிலத்துவாரம் பொருந்திய ஸ்ரீ காஞ்சி புரம் இது பாருங்கள். திருவையும் மறுவையும் மார்பிலே உடைய கடவுள் தனது காக்குந் தொழிலைப் பெறுவதற்காகப் பரமசிவனைப் பூசைபண்ணி இரண்டுகைகளையுங் குவித்துக்கொண்டு முன்னேறி நிற்பதாகிய திருமாற்பேறு இது பாருங்கள். வேதவாக்கியங்களின் வரம்பைக் கடந்த திருநேத்திரதாரியான கடவுள் அரிய வேதங்களை முனிவர்களுக்குச் சந்தைகூட்டிச் சொல்லி வைத்த திருவொத்தூர் இது பாருங்கள். பன்றியாலும் அன்னத்தாலும் அடிமுடியுங் காணப் படாமல் ஆகாசத்தைக் கிழித்துக்கொண்டு நீண்ட நெருப்பு மலையான திருவண்ணுமலை இது பாருங்கள். முள்ளும்போலும் வாயையுடைய பட்சி வடிவமாக இரண்டு முனிவர்கள் தவஞ்செய்கின்ற திருக்கழுக் குன்றம் இது பாருங்கள். அநேகமாக ஊழிக்காலங்கள் கழிய அந்த ஊழிக்காலங்களுக்கு முன்னும் பின்னும் இருப்பதான இந்த விருத்தா சலத்தைப் பாருங்கள். அசுரர்களிலே திருடனுன அந்தகனைக் கொன்று திரிலோகத்துக்கும் கவலைதீர்த்த பரிசுத்தனுன கடவுள் எழுந்தருளியிருக்கும் திருக்கோவலூர் இது பாருங்கள். ஆகாயத்திலே பறப்பதான புரங்கள் மூன்றின்மேலும் அக்கினி வடிவான நெற்றிக் கண்ணைச் சாத்திப் பிறப்பு அறுகின்ற மூவருடைய அன்பிற்குள்ளா னது திருவதிகை இது பாருங்கள். சத்தியஞானனந்த தத்துவமான கடவுள் அசைவற்று ஆடுகின்ற நித்திய பரமானந்தநிறை அருள்மன்ற மான ஸ்ரீ சிதம்பரம் இது பாருங்கள். பிறந்தவர்களுக்கு மோக்ஷத் தைத் தருவதான திருவாரூர் இது பாருங்கள். நான்கு வேதங்களும் பத்தியுடனே பூசைபண்ணித் துதிப்பதான திருமறைக்காடு இது பாருங்கள். பிரமன் விஷ்ணு முதலான தேவர்கள் பிரளய காலத் தில் இறவாதபடி கடவுளானவர் தோணியிலே ஏற்றிப் பன் னிரண்டு பேர்களைக்கொண்ட சீகாழி இது பாருங்கள். சடாயு சம் பாதிகள் பெரிதான பூசைசெய்ய வரங்களைக் கொடுத்து அவர்க ளுடைய இருண்ட நோயைத் தீர்க்கும் மருந்துபோலும் கடவுள் இருக் கின்ற திருப்புள்ளிருக்கு வேளூர் இது பாருங்கள். பார்வதிதேவி மயில்வடிவாய்ப் பூசைபண்ணித் துதிக்கும்படியான துலாக்காவேரி யாகிய மாயூரம் இது பாருங்கள். நம்மையொத்த மூன்றுகோடி ஞான முனிவர்கள் வந்து பூசைபண்ணுகிற திருக்கோடிக்கா இது பாருங்கள், தருமதேவதை பூசைபண்ணின திருத்தருமபுரம் இது பாருங்கள். நான்கு கொம்புகளையுடைய ஐராவதம் தாருகாசுரன் அறுவிட்ட கொம்பைப் பழையபடி குற்றமில்லாமல் தவஞ்செய்து பெற்ற திரு வெண்காடு இது பாருங்கள். மாலை சாத்துகின்ற தாடகையினுடைய மானங் காப்பதற்கு வளைந்து அழகிய கச்சுக்கொண்டு கட்டி இழுக் கின்ற பெருமை பெற்ற குங்கிலியக்கலைய நாயனுர் அன்புக்கு நிமிர்ந்

தருளின நமது கடவுளின் திருப்பனந்தாள் இது பாருங்கள். யானை முகாசுரனைக் கொன்றபின்பு யானைமுகக்கடவுள் பூசைபண்ணின திருச்செங்காட்டங்குடி இது பாருங்கள். தாருகாசுரனைக் கொன்று முருகக்கடவுள் சிவனைப் பூசை பண்ணினதும் ஆத்திமரத்தின் கீழே மணலாலே சிவலிங்கங் கண்டு பசுவின் பாலால் அபிஷேகஞ் செய்து சினைணிசின்ற மாலையைப் பெற்றுச் சூட்டிக்கொண்டவரான சண்டி கேஸ்வரர் பூசித்த திருச்சேய்ஞலூர் இது பாருங்கள். சினந்து விழு கின்ற யமனுடைய மார்பிலே சேவடிக் கமலத்தைச் சாத்தி அந்த மார்க்கண்டேயருக்கு ஆயுள்கொடுத்த கடவுள் வாசஞ்செய்கின்ற திருக்கடவூர் இது பாருங்கள். ஆனைத்தோலைப் போர்வையாகப் போர்த்துக்கொண்ட கடவுளாகிய திருவழுவூர் இது பாருங்கள். பிரமன் தலையைப் பலிபாத்திரமாகக் கொண்ட கடவுளின் திருக்கண்டியூர் இது பாருங்கள். ஆடலனங்களை யமுதுசெய்த செங்கணனிடமாகிய திருக்குறுக்கை இது பாருங்கள். ஆட்டுத்தலையை மாமனுக்குக் கொடுத்த மருமகனாகிய கடவுளின் திருப்பறியலூர் இது பாருங்கள். சலந்தராசுரனைக் காற்பெருவிரலாலே கோலிப்படைத்த சக்கரத் தாலே கொன்ற கடவுளின் திருவிற்குடி இது பாருங்கள். ஒரு செட்டிப்பெண் கலியாணத்துக்காக உலகமெல்லாம் அறியசாட்சியான வன்னிமரம் கிணறு இலிங்கம் இவைகளுள்ள திருப்புறம்பியம் இது பாருங்கள். நீலகண்டக் கடவுளை அருச்சனை பண்ணிப் பாண்டியன் பிரமஹத்தி தீர்த்துக் கொண்ட திருவிடைமருதூர் இது பாருங்கள். மாமகம் வரும்போதெல்லம் கங்கை வந்து தோன்றுதலாலே முழுகினவர்கள் பாபங்கள் தீர்ந்து போகங்களை அனுபவிக்கின்ற பரிசுத்த தீர்த்தத்தையுடைய ஸ்ரீ கும்பகோணம் இது பாருங்கள். தகப்பனுக்கு குருவாக உபதேசஞ் செய்த எங்கள் குருவான முருகக் கடவுளின் சுவாமிமலை இதுபாருங்கள். விஷ்ணு கண்ணிடந்துபூவாகச் சாத்த அவனுக்குச் சக்கரங் கொடுத்த திருவீழிமிழலை இது பாருங்கள். நந்திதேவர் தவஞ்செய்த திருவையாறு இது பாருங்கள். சிலந்தி யானை பார்வதி தாமரைக்கண்ணனாகிய விஷ்ணு இவர்கள் தவஞ் செய்த திருவானைக்கா இது பாருங்கள். திரிசிரன் பூசை பண்ணின திரிசிரபுரம் இது பாருங்கள். முழுகினவர்கள் பாபங்களை யெல்லாம் போக்குகின்ற காவிரிநதி இது பாருங்கள். இந்தக் காவிரியே வெண் முத்து மாலைபோலே விளங்குகின்ற சோழனாடு இதுவாகும்; அந்த ஆறு தமிழ்நிலை தெளிந்ததான வையைநதி சுவர்க்கலோகமே ஆகா யத்திலிருந்து வழுவி விழுந்து கிடக்கிறதுபோல் தோன்றுகின்றது தூரத்திலே அதுதான் பாண்டியநாடு பாருங்களென்று அகஸ்திய மகாமுனிவர் சொல்லப் புதல்கள்போலே சோலைகளும், சிறு வாய்க் கால்கள் போலே நதிகளும், குலங்கள் சிறிதே நீரூறுகின்ற குழிகள் போலவும், வயல்கள் கீரைப்பாத்திபோலவும், தாழைகள் சிறு புற்கள் போலவும், வாழைத்தோட்டங்கள் மஞ்சட்பாத்திகள் போலவும்,

தோன்ற முனிவர்கள் கண்டு பின்பு பல நிறங்களையுடைய மாடவரிசைகளும் உபரிகை நிரைகளும் செய்குன்றுகளும் அன்னம் - வெண்குருகு செம்போத்து - கிளி - மயில் இப்படிப்பட்ட பட்சிகள் வெவ்வேறே கும்புகூடி யிருப்பதுபோலவும், கொடியாடைகள் அந்தப் பட்சிகள் இறகுகள் விரிப்பதுபோலவுங் கண்டார்கள்.

அப்படி நாடு நகரங்களின் வளங்களைக் கண்டுகொண்டு நடந்து நடந்து கண்களுக்கு அதிசயந்தோன்ற ஆகாசத்திலே உலகத்தை வலமாக வருகிற முனிவர்கள் ஆகாயத்தையளாவுகின்ற திருக்கொடுங் குன்றும், திருத்தளிப்புத்தூரும், சோலைகளிலே வண்டுகள்பாட மயில்களாடுகின்ற திருவாடானை வளநகரும், மெய்யான வேதங்கள் துதிக்கின்ற திருப்புவனவாயினகரும், தவசித்தர் இரசவாதஞ் செய்து சிவனுருவங்கண்ட அழகிய திருப்பூவண நகரும், எல்லாவரத்தையுந் தருகின்றவனாகிச் சிவன் விளங்குகின்ற திருக்கானையார் கோயிலும், விரதயோக நெறியிலே நின்று பார்வதியைத் திருமணஞ் செய்துகொண்டவர் விளங்குகின்ற திருச்சுழியநகரும், இராவணனைக் கொன்ற பழியினாலே மயங்கி விஷ்ணு தனக்குச் சக்கரங் கொடுத்த கடவுளை அருச்சனை பண்ணிக்கொண்டு போன திருவிராமேச்சர நகரும், முத்தும் - வவடூரியமும் - பொன்னும் விளைகின்ற தாமிரபர்ணிக் கரையிலே பிறவாத கடவுள் மூங்கில் வயிற்றிலே பிறந்ததான பழைய திருநெல்வேலி நகரும், துளசி மாலையணிந்த கடவுளைக் கொன்றைமாலை யணிந்த கடவுளாகச் செய்த திருக்குற்றால நகரும், கோழிக் கொடியையுடைய சுப்பிரமணியக் கடவுள் தெய்வயானையைக் கலியாணஞ் செய்துகொண்ட திருப்பரங்குன்றமும், அருச்சுனன் விற்கழியாலே அடிக்க வடுவான முடியையுடைய கடவுளிருக்கிற திருவேடநகரும், மேகங்கள் படிகின்ற திருவாப்பனூரும் கண்டு வணங்கிக் குளிர்ந்த அலையாகிய கைகளுடனே வண்டுகள் படிகின்ற தாமரைமலரே முகமாகவுடைய வையையாகியதேவியை முன்னேவணங்கிக்கண்டுகொண்டு எட்டுத்திக்குகளையும் அண்டத்தையுங் கடந்து உலகத்தையுண்ட நெடிய மால்போல் உயர்ந்து நிற்கிற கோபுரத்தை முன்னே வணங்கி உள்ளே புகுந்து வீதிகளெல்லாம் பணிந்தெழுந்து பிரகாரங்களெல்லாஞ் சுற்றிக் கொண்டுபோய்ப் பொன்மயமான கோயிலுக்குள்ளே வந்து பொற்றாமரைத் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து அனுஷ்டானம் பண்ணிக் கொண்டு, நிலையாக ஐந்தெழுத்தையும் எண்ணி மதம் பொழிந்து கொண்டு நான்குதோள்களும் சிறிய கண்களும் ஐந்துகைகளுமுடைய சித்தி விநாயகக்கடவுளின் திருவடிகளை வணங்கி மூன்று லோகங்களும் நான்கு வேதங்களும் முறையே தோன்றச்செய்த அங்கயற் கண்ணம்மை பாதங்களைத் தலைகளால் வணங்கிக் கொண்டுபோய்

அன்பு கொடுத்து இனிதான அருளைக்கொண்டு வெயில் வீசுகின்ற மாணிக்கங்களாலும் சொர்னத்தாலும் அமைந்த இந்திர விமானத்திலே அமர்ந்திருக்கின்ற ஒப்பற்ற சோதியினுடைய சிவந்த பாததாமரைகள் சடையையுடைய தங்கள் தலைகள்மேல் மலர வணங்கித் துதித்து, அன்று இரண்டு காலமும் உணவில்லாமலிருந்து சூரியன் இராத்திரியை அறுப்பதான ஒரு வாளென்னும்படி உதயமாகு முன்னே, பொற்றாமரைத் தீர்த்தமாடிக் கால நியதிகளைச் செய்து கொண்டு இந்திரியங்களைந்தையும் வென்று, உள்ளத்திலே அன்பு நீர் பாய, அதனால் விளைகின்ற முழுதுக்குமுதலாகிய கடவுளை உலகத்திலே கடம்பமரத்தடியிலே மின்னலெல்லாங் கூடிநிற்பது போலான இந்திர விமானத்தின் மேலே தோன்றக்கண்டு வாசங்கலந்த திருமஞ்சனம் தேன் கரும்பு வாழைக்கனி குற்றமில்லாத பசுவின் பஞ்ச கௌவியம் வாசம் வீசுகின்ற குளிர்ந்த பனிநீர் வெள்ளம்-கஸ்தூரி-புனுகு-சவ்வாது-திவ்விய பரிமளமான மிருதுவாகிய புஷ்பங்கள்-வஸ்திரம்-அலங்காரமான ரத்தினாபரணங்கள்-நல்ல சுவையான திருவமுது ஆகிய இவைகளெல்லாங் கொண்டு சதவுருத்திர மந்திரத்தைச் சொல்லி அபிஷேகஞ் செய்து சந்தனம் பூமாலை சாத்தி ஆபரணங்கள் பூட்டி பாகமாக மந்திரஞ்சொல்லி, சமைத்தபாலது நிவேதனஞ்செய்து, இலவங்கம்-ஏலம்- கற்பூரம்- சாதிக்காய்- தக்கோலம் என்னும் ஐந்து வகை வாசங்கலந்த பாக்கு வெற்றிலை நிவேதித்து, சுகம் தோன்றுவதாகத் தூபதீபாதிகளெல்லாம் கொடுத்துச் சிவமயமான பஞ்சாக்கினியிலே துடுவை நிரம்ப நெய்யை மொண்டுவார்த்துப் பூசை முடித்து நான்கு வேதங்களுஞ் சொன்ன மெய்யான மந்திரமாகிய சகஸ்திர நாமத்தைச் சொல்லி மூவிலை வில்வமும் நீலமலருங்கொண்டு சாத்திக் கடவுளை மகிழச்செய்து வாசங்கலந்த திருமஞ்சன நீருடனே மந்திர புஷ்பங்களைக் கைக்கொண்டு அந்தச் சிவபூசை பலனை மூன்று கண்களையுடைய பரிசுத்தனது கையிற்கொடுத்து மனத்திலே அன்பு பெருகக் கண்கள் நிரம்ப நீர்பெருகியொழுகக் கடவுளை எல்லா முனிவரும் வணங்கி,

பழியொடு பாசமாறு கெடவாச வன்செய் பணிகொண்ட வண்ட சரணம்
வழிபடு தொண்டர் கொண்ட நிலைகண்டு வெள்ளி மணிமன்று ளாடி சரணஞ்
செழியன்வி ளிந்தி டாத படிமாறி யாட றெளிவித்த சோதி சரணம்
ஏழுகடல் கூவி மாமி யுடன்மாம னுட் விசைவித்த வாதி சரணம்.

வெங்கரி யாளி சோர நரசிங்க வாளி விடுவேட ரேறு சரணம்
புங்கவர் தேற வாதி மறையுட் கிடந்த பொருளோது போத சரணம்
வங்கம தேறி வேலை மகரம் பிடித்த வலையாண் மணாள சரணம்
கங்கண நாகம் வீசி நகரெல்லை கண்ட கறைகொண்ட கண்ட சரணம்.

மைந்தனி வாழி மேரு மகவா னகந்தை மடிவித்த நித்த சரணஞ்
சுந்தர நாம வாளி பணிகொண்டு கிள்ளி தொகைவென்ற வீர சரணம்
வெந்திறன் மாறன் முன்க லுருவான கன்னன் மிசைவித்த சித்த சரணம்
முந்திய கல்லின் மாதர் பெறவட்ட சித்தி முயல்வித்த யோகி சரணம்.

திருமணி மைந்தன் மைந்தன் முடிசூட விற்ற திருமல்குசெல்வ சரணம்
மருமக னென்று மாம னுருவாய் வழக்கு வலிபேசு மைந்த சரணம்
குருமொழி தந்து நாரை குருவிக்கு வீடு குடிதந்த வெந்தை சரணம்
வருபழி யஞ்சி வேட மகனுக் கிரங்கு மதுராபு ரேச சரணம்,

விருத்தகு மார பால லருள்மேனி கொண்டு விளையாடு மண்ணல் சரணம்
குரத்தியை நச்சு பாவி யுயிருண்டு சோரி குடைவாகை வேல சரணம்
கருத்திசை பாணனுளி னிசைபாடி மாறு கலைவதே கீத சரணம்
நரித்திரள் மாவை மீள நகரங் கலங்க நரிசெய்த நம்ப சரணம்.

முற்பக லாறி ரண்டு சிறுபன்றி யுண்ண முலைதந்த வன்னை சரணம்
பொற்புறு மாய வாவை யடலேறு கொண்டு பொருதட்ட சிட்ட சரணம்
பற்பல ஞால மெங்கு மடையப் பிரம்பு படுமட்டமூர்த்தி சரணம்
சுற்பினெ ருத்தி மன்ற லறிவிக்க மூன்று கரிதந்த வள்ளல் சரணம்.

அளவைக ளாதும் வேத முதனூல்க ளாலு மயன்மாய னூலு மளவாக்
களவையு னக்கு நாம குணசின்ன சாதி கதிசெய்தி யில்லை யவையும்
உளவென யால றிந்து துதிசெய்ய வேகொ ளுலகஞ்செ யன்பி னெளிதாய்
விளையருண் மேனி கொண்டிவ் வறுபத்து நாலு விளையாடல் செய்தபடியே.

என்று துதித்த வசிட்டர் முதலான இருடிகளையும் அகஸ்தியரையும் தேனைச் சிந்துகின்ற கடம்பவனத்திலே வாசஞ் செய்கின்ற சிவபெருமானவர் இலிங்கத்தினின்றும் ஒரு திவ்விய சொரூபங் கொண்டு வந்து நின்று பார்த்து, கோபத்தைப் போக்கி மனந்தெளிந்த முனிவர்களே! நீங்கள் பண்ணின பூசையும் தோத்திரமும் எல்லாத் தெய்வ ஸ்தலங்களுக்கும் எல்லா வுயிர்களுக்கும் நிறைவாகிய நமக்கும் பேரானந்த மாயிற்றென்று பெரிதான கிருபைகூர்ந்து அகஸ்தியரை வருக வென்று, அருகே அழைத்து தமது கையை அவர் தலை மேலே வைத்து முதுகைத்தடவி நம்மை ஒப்பானவன் நீயே; நம்முடைய தரும சொரூபமான பார்வதியை ஒப்பானவள் உனது கற்புடை மனைவியான லோபா முத்திரையே. ஆனபடியினாலே உன்னை ஒப்பவர் உலகத்திலே யாரிருக்கிறார், ஆனாலும் நிறைந்த தவத்தைச் செய்தவனும் அந்தத் தவத்தால் வலிமை பெற்றவனும் நீயே அல்லவோ. ஆகையாலே உனக்குக் கிடையாத வரங்கள் தருகிறதெப்படி? உனக்குக் கிடையாத பொருள்களொன்றுமில்லை என்றருள் செய்து, அந்த இலிங்கத்துக்குள்ளே புகுந்து தமதிச்சை வடிவா யமர்ந்தனராக. அப்போது அகஸ்தியர் அப்படித் தமக்கு வேண்டிய வரங்க

ளெல்லாங் கொடுக்குஞ் சிவலிங்கமொன்று தமது பெயராலே அகத்தீஸ்வர லிங்கமொன்று அங்கே பிரதிஷ்டை பண்ணினர். அப்படியே மற்றை வசிஷ்டர் முதலான முனிவர்களும் தங்கள் தங்கள் பெயராலே சிவலிங்கங்கள் நிலைபெறச் செய்தார்கள். அப்படி பிரதிஷ்டைசெய்து துதித்து அருச்சனை செய்து நினைவுக்கரியராய் அன்புக்கெளியவராய் அஷ்டமூர்த்தியான அங்கயற்கண்ணம்மைக்கு நாயகராகிய கடவுளை மூன்று காலமும் போய்த் தலையால் வணங்கிப் பேரின்பம் பெருகின மனத்தை யுடையவர்களாய்த் தேன்கூட்டை மொய்த்த வண்டுகள் போல அந்தப் பெரிதான மதுரை ஸ்தலத்திலே தானே வசிஷ்டர் முதலான முனிவர்களெல்லாம் தபோவனஞ் செய்து சொக்கலிங்கப் பெருமானைச் சேவித்திருந்தார்கள்.

அருச்சனைப் படலம் முற்றிற்று.

---

திருவாலவாய்க் காண்டம் முற்றிற்று.

---

திருவிளையாடற் புராணம்

முற்றிற்று.



திருமகள் அச்சகம் சென்னை-79. 1992.

**பெரிய புராணம் (வசன காவியம்) விலை. ரூ. 50—00**

திரு சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்த 'திருத்தொண்டர்கள் சரித்திர'மென்னும் இந்நூலில் 63-நாயன்மார்களின் சரித்திரங்களும் அவர்களின் திருவுருவப் படங்களுடன் அமைக்கப்பட்டுள்ளது. சிவாகமங்களில் உணர்த்தப்படும் சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு பாதங்களை அநுட்டித்து முத்திபெற்ற மெய்யடியார்களுடைய அடிமைத் திறத்தையும் சமயகுரவர்களான மூவர் தேவாரப் பதிகங்களின் வரலாற்றையும் விளக்குவதுடன் அநேக தேவாரப் பதிகங்களும் சேர்க்கப்பட்டுள்ளதால் அனைவரும் படித்துப் பயன்பெற வேண்டிய நூல்.

**வில்லி பாரத வசன காவியம்**
**(மகா பாரத வசன சங்கிரகம்) விலை ரூ. 50—00**

பாரதம் ஆதிமுதல் அந்தம் வரையில் இடையில் எவ்வித உபகதையும் விடாமற் சுருக்கி தெள்ளிய தமிழ் வசன நடையில் "கம்பநாடர்" ஆசிரியர் மோ. வே. கோவிந்தராஜ ஐயங்கார் அவர்களால் எழுதப்பட்டது. அநேக அழகிய ஆப்டோன் படங்கள் சேர்க்கப்பட்டு டபிள்கிரௌன் 1x16 அளவில் சுமார் 800-பக்கங்கள் கொண்ட சிறப்பு வாய்ந்த நூல்.

**பதினெண் சித்தர்கள் பெரிய ஞானக்கோவை விலை ரூ. 45—00**

வா. சரவணமுத்துப் பிள்ளை அவர்களால் ஞானவான்களுக்கு உபயோகமாகும் பொருட்டுச் சில ஏட்டுப்பிரதிகளிலிருந்தும் அச்சுப் பிரதிகளிலிருந்தும் 44-நூல்களைத் திரட்டியதை சுத்தப்பதிப்பாக' டபிள் கிரௌன் 1x16 அளவில் வெளியிட்டுள்ளோம். அனைவரும் படித்துப் பயன்பெறவேண்டிய சிறந்த நூல். 850-பக்கங்கள் கொண்டது.

**கந்தர் சஷ்டி கவசம் (மூலமும்-உரையும்) விலை ரூ. 7—00**

இந்தக் கந்தர் சஷ்டி கவசமானது யாவரும் முருகக்கடவுளைத் துதித்துப் பேய், பூதம், பில்லி, சூனியம், பிணி, பகை முதலியவற்றாலேற்படும் பல துன்பங்களினின்றும் நீங்கிச் செல்வம், புத்திரப்பேறு, தீர்க்காயுள், நற்பதவி முதலியவைகளையும், முருகக்கடவுளின் பேரருளையும் பெற்றுய்வதற்குதவியாயிருக்கும் பொருட்டுத் தேவராய சுவாமிகளால் திருவாய் மலர்ந்தருளப் பெற்றது. சிறந்த நூலாகிய இக்கந்தர் சஷ்டி கவசத்திற்கு சகலருக்கும் எளிதில் பொருள் விளங்கும்படியாக வித்துவான் ஈக்காடு - சபாபதி முதலியாரவர்களைக்கொண்டு விளக்கமான விருத்தியுரை எழுதப்பட்டிருக்கிறது.

**சிவமஹா மந்திரம் விலை ரூ. 4—50**

ஆயிரத்தெட்டு சிவாலயங்களின் பெயர்களும் ஆயிரத்தெட்டு சிவாகம அஷ்டோத்திரமும், அர்ச்சனையும், சிவபஞ்சாட்சர மூல மந்திரமும், வீடுகளிலும், வியாபார ஸ்தலங்களிலும் லக்ஷ்மீகரமுண்டாவதற்கு ஸ்தாபிக்கக் கூடிய ஸ்தூல பஞ்சாட்சர வசியச்சக்கரம், தேகத்திலணிவதற்குச் சூட்சும பஞ்சாட்சர சக்கரம் இவைகள் செய்முறையும், இதற்கு மந்திரம், உருவு பூசை இவைகளின் விபரமும், ஸ்ரீ மகா கணபதி மூலமந்திரம், அஷ்டோத்திரம், வசியச் சக்கரம் இவைகளும் அடங்கியுள்ளன.

---

கிடைக்குமிடம்:—B. இரத்தின நாயகர் அண்ட் சன்ஸ்,
நெ. 26, வெங்கட்ராம தெரு, கொண்டித்தோப்பு, சென்னை-79,

